




உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

தருமபுர ஆதீன முதல்வர்

ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

# குருபூஜை விழா மலர்

ஜயஸூ வைகாசிமீ க0உ

**23—5—1954**



தருமபுர ஆதீன குருமுதல்வர்,

ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்



தருமபுர ஆதீன குருமுதல்வர்,

ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

வெளியீடு எண் 817




உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

# திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்

அருளிச்செய்த

# தேவாரத் திருப் பதிகங்கள்

## இரண்டாவது திருமுறை

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்
இருபத்தைந்தாவது குருமகாசந்நிதானம்
**ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களது**
திருவருளாணையால் வெளியிடப்பெற்றது.



உரிமைப் பதிவு 1954 விலை ரூ. 5—0—0

பதிப்பாசிரியர்

வித்துவான்,

ஸ்ரீமத். சோமசுந்தரத்தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

தலைவர், தருமபுர ஆதீன சமயப்பிரசார நிலையம், சென்னை.

குறிப்புரையாசிரியர்

தருமபுர ஆதீனப் புலவர், சித்தாந்த ரத்நாகரம், மதுரகவி,
வித்துவான்,

திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள்

தருமபுர ஆதீனப் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர்.

பதிப்பகம்

ஞானசம்பந்தம் அச்சகம்,

தருமபுரம்.

# பொருளடக்கம்

உ

குருபாதம்

## முத்தி நிச்சயம்

உள்ள மலம்நீங்கி ஓங்கு சிவானந்த
வெள்ளம் திளைத்துஅதுவாய் மேவுதலே—கள்ளவிழ்பூங்
கொத்தார் விரிசடையார் கூறு சிவாகமத்தின்
சித்தாந்த முத்திஎனத் தேறு.

## சிவ போக சாரம்

ஆசையறாய் பாசம்விடாய் ஆனசிவ பூசைபண்ணாய்
நேசமுடன் ஐந்தெழுத்தை நீநினையாய்—சீசீ
சினமே தவிராய் திருமுறைகள் ஓதாய்
மனமே உனக்கென்ன வாய்.

(தருமைக் குருஞானசம்பந்தர்)

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

திருவாவடுதுறை ஆதீனம்

இருபத்தோராவது மகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்

அளித்த

# பாராட்டுரை

திருமுறை திருவருட்கடலில் முழுகி எடுக்கப்பெற்ற நன் முத்துக்கள். மக்கள் அனைவரும் பிறவிக்கடலைக் கடந்து திருவடிக் கரையை எய்துதற்குக் கிடைத்த இன்பத்தோணி. யாமெல்லாம் நுகர்ந்து உணர்வைப்பெருக்கி, உயிரை யீடேற்றிக்கொள்ளும் வண்ணம் கிடைத்த இசைத்தேன் கலந்த இனிய சிவ அமுதம். என்றென்றும் இன்ப நிலையில் இருத்தும் ஈடற்ற குளிகை. வாய்க் கொண்டாலும், செவிக்கொண்டாலும் சிந்தையிற் புகுந்து மும்மல நோயை முழுவதும் வாட்டி, இருமையும் இன்பளிக்கும் ஒரு மருந்து.

இத்தகைய திருமுறைகளில், திருஞானசம்பந்த சுவாமிகள் திருவாக்கு, திரிபுரையே நேரில் எழுந்தருளிச் சிவஞானத்தின்னமு தங்குழைத்து ஊட்ட உண்ட திருவாயிலிருந்து வழிந்தமையால் ஞானப் பால் மணம் மாருத நல்வாக்கு.

இதனை ஓதுங்கால், பொருள் தெரிந்து ஓதுதலும் இன்றியமை யாதது. சொல்லிய பாட்டின் பொருள் தெரிந்து ஓதுகின்றவர் களுக்கே இன்பவுலகு காணியாட்சி என்பது அருளாளர்களின் ஆணைமொழி. இதனையெண்ணித் தருமபுர ஆதீனம் 25-ஆவது மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் திருமுறைகள் எல்லாவற்றிற்கும் முறையே குறிப்புரை முதலியன எழுதுவித்து மிக அழகான பதிப் பாக வெளியிட்டு வருகின்ருர்கள்.

மக்கள் மனப் பண்பாடு அறிந்து – காலங்கருதிச் செய்யும் சிறந்த பணி இது. வழக்கம்போல் இப்போது இரண்டாம் திருமுறை வெளிவருகின்றது.

பதிகக் குறிப்புக்களும், தலவரலாறும், குறிப்புரையும் தேவைக்குத்தக, தெளிந்த நடையில் அமைந்துள்ளன.

இத்தகைய திருமுறைப் பணி மிக மிகப் பாராட்டற்குரியது. 'தோடு' என்று உள்நின்று உணர்த்தியும், 'உலகெலாம்' என்று ஞானகாயத்தினின்று உணர்த்தியும் திருமுறைகளைத் தோற்றுவித்தருளிய எல்லையில் கருணைத் தில்லையம்பலத்து, ஏத்தரும் புகழ்க் கூத்தநாயகன், உருகிநின்று உரைக்கும் அடியவர் திருவும் ஞானமும் சேர்ந்திடத் திருவருள் புரிவானாக.

மகாசந்நிதானம் உத்தரவுப்படி,

**ஒடுக்கம், சுப்பிரமணியத் தம்பிரான்.**



*தருமபுர ஆதீனம் 25-ஆவது மகாசந்நிதானம்*

**ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
திருஞானசம்பந்தசுவாமிகள் திருவடி துணை



# முன்னுரை

"யாரேஎம் போல அருளுடையார்? இன்கமலத்
தாரேயும் சென்னித் தமிழ்விரகன்—சீரேயும்
கொச்சை வயன்றன் குரைகழற்கே மெச்சி
அடிமைசெயப் பெற்றேன் அறிந்து"

(நம்பியாண்டார் நம்பிகள்)

திருமுறை என்னும் பெயரின் முதலிலுள்ள திரு என்பது சிவத்தையும் சிவனருளையும் அவ்வருளால் எய்தும் பேரின்பத்தையும் குறிக்கும். சிவமும் அருளும் பேரின்பமும் ஆன்மாக்கள் எய்தும் நெறிநிலையால் வேறுபடினும் பொருளால் ஒன்றே ஆகும். "திருவொளிகாணிய பேதுறுகின்ற திசைமுகனும் திசைமேல் அளந்த கருவரை ஏந்திய மாலும்" (1. 39. 9.) "திருவே என் செல்வமே தேனே வானோர் செழுஞ்சுடரே" (6. 47. 1.) எனச் சிவமுதலையும் "சென்றடையாத திருவுடையான்" (1. 98. 1.) எனச் சிவனருளையும் "சிவமேபெறும் திரு எய்திற்றிலேன்" (திருவாசகம்) எனச் சிவப்பேருகிய பேரின்பத்தையும் 'திரு' என்னுஞ் சொல்லால் குறித்தல் காண்க.

முறை என்பது நூலைக்குறிக்கும். "இறைநிலம் எழுதுமுன் இளைய பாலகன் முறை வரைவேன் என முயல்வது ஒக்கும்" என்னும் கந்தபுராணச் செய்யுட் பகுதியால் அது நன்கு புலப்படும். படவே, திருமுறை என்பதற்குச் சிவநூல், அருள்நூல், பேரின்பநூல் என்று பொருள் உரைத்தல் பொருந்தும்.

சிவநெறி, அருள்நெறி, இன்பநெறி எனப்படும் எல்லாம் ஒன்றே ஆகித் திருநெறி ஆதலின், அத்திருநெறியைக் காட்டும் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் தமிழ் திருநெறிய தமிழ்

என்னும் பெயர்பெற்றது. 'திருநெறிய தமிழ் வல்லவர் தொல்வினை தீர்தல் எளிது' என அப்பெருமானே அருளியதுணர்க.

திருநெறிய தமிழ் மூன்று திருமுறையாகப் பகுக்கப் பெற்றுளது. அவற்றுள் முதற்றிருமுறை சென்றயாண்டின் குருபூசைத் திருநாள் வெளியீடாகி விளங்குகின்றது. இரண்டாவது திருமுறையான இஃது, இக்குருபூசைத் திருநாள் வெளியீடாயிற்று. இதுவும் குறிப்புரை முதலியவற்றோடு திகழ்கின்றது.

இவ்வெளியீடு தருமபுர ஆதீனம் இருபத்தைந்தாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் திருவுள்ளத்தின் எழும் கருணைவடிவங்களுள் ஒன்றாகும். ஏனைய திருமுறைகளும் சித்தாந்தசாத்திரங்களும் முறையே நன்முறையில் வெளியிடுந் திருக்குறிப்பு அவர்களுக்கு உண்டு. ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமான் திருவருள் துணையால் எல்லாம் இனிது நிறைவுறும். அவ்வருள் அடியேன் சிற்றறிவில் நின்று தோற்றிய அளவில் இதற்குக் குறிப்புரை எழுதியுள்ளேன். திருமுறைக்குறிப்பு எங்கே? அடியேன் சிற்றறிவு எங்கே? இரண்டற்குமிடையே தருமைக் குருஞானசம்பந்தம் உண்டாகி இணைத்து வைத்த ஆக்கமே இத்திருமுறை வெளியீடு. இக்குறிப்புரையில், அடியேன் பல பிழை செய்திருக்கலாம். அவற்றைத் திருத்தும் கடன் அறிஞர்க்கும் அவ்வாறே திருந்தும் வேட்கை அடியேனுக்கும் உண்டு. இத்திருவருள் வழியில் அடியேனை ஒரு பொருட்படுத்தி, எல்லாவகையிலும் இன்புறுத்தி ஆட்கொண்டருளும் ஸ்ரீ ல ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுடைய திருவடிமலர்களை முப்பொறித் தூய்மையுடன் மறவாது போற்றுங் கடப்பாடு என்றும் உடையேன்.

வாழ்க திருநெறிய தமிழ்.

தருமபுர ஆதீனம்
23—5—54

அடியார்க்கு அடியன்
**முத்து. சு. மாணிக்கவாசகன்**

உ

சிவமயம்

தருமபுர ஆதீனம் 25-வது குருமகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்**

# திருவடி வணக்கம்

திருமுறையின் பெருமைஎங்கே? ஒருமுறையும் உணராதேன்
சிறுமை எங்கே?
கருமுறையில் வருமிறையைத் தவிர்நெறிதந் தருள்குருவின்
கருணை எய்தும்
பெருமுறையின் இதுபெரிதென் றுணரவிரண் டாவதற்குப்
பிறங்கும் உட்கோள்
தருமுறைமைக் கடியனேயாள் சுப்ரமண்ய பரமகுரு
சரணம் போற்றி.

சைவநெறி தழைத்தோங்கச் சகலகலை களும்வளரத்
தருமம் ஓங்கத்
தெய்வவழி பாடுமிகச் சிறந்தோங்கத் தமிழன்னை
செழிக்கத் தோன்றி
மெய்வளருந் தருமைமடத் திருபத்தைந்தாம் ஞான
வேந்த ராகிக்
கைவளருங் கொடைக்குருசுப் பிரமணிய தேசிகனார்
கழல்கள் போற்றி.

சுப்பிரம ணியபரமா சாரியசுவாமிகளின்
துணைத்தாள் வாழ்க
இப்பிரபஞ் சத்திருக்கும் திருக்கோயில் பலவும்உயர்ந்
தினிது வாழ்க
ஒப்பிரவி மதிகனலா வுறுவிழியோன் திருநீறு
டுருத்தி ராக்கம்
விப்பிரனுக் கிடும்பூசை ஐந்தெழுத்தும் வாழ்கஉயர்
வேதம் வாழ்க.

அடியார்க்கு அடியன்

**முத்து. சு. மாணிக்கவாசகன்**

உ
சிவமயம்

திருவாவடுதுறை ஆதீனம் 21-வது குருமகாசந்நிதானம்

## ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரியசுவாமிகள் அவர்கள்

## திருவடி வணக்கம்

மாவடுநேர் விழியொப்பி லாமுலையம் பிகையடிக்கு
வணக்கம் சீரோங்
காவடுதண் டுறைமாசி லாமணியா ஒளிர்சிவன்றன்
அடிகள் போற்றி
பூவடுதாள் என்றலைமேல் இருத்திமகிழ் வுறுத்தியருள்
புனிதன் மெய்யர்
நாவடுசீர்க் குருமணிசுப் பிரமணிய னைந்தெழுத்து
நாமன் போற்றி.

பிறைவாழ் செஞ்சடைமறைத்துங் கறைவாமுங் களமொளித்தும்
பிணிகொள் காயச்
சிறைவாழ்பல் லுயிர்க்கும் ஒளி நிறைவாக்குஞ் சிவஞானத்
திருவை ஆக்க
மறைவாழ்நல் ஆவடுதண் டுறைவாழும் குருசுப்ர
மண்ய மூர்த்தி
யிறைவாழ்செங் கமலபத நறைவாழ்க்கை எனதுதலைக்
கினிதே வாழ்க.

பாராட்டும் சீர்த்திப் பயனுதவும் செந்தமிழ்கற்
பாராட்டும் தெய்வப் பழமுறைக்குப்—பாராட்டும்
நல்லுரையை நல்கியருள் ஞானசுப்ர மண்யகுரு
*சொல்லுரைக்க யான்வலனே சொல்.

அடியார்க்கு அடியன்
முத்து. சு. மாணிக்கவாசகன்

---

*சொல் - புகழ்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# நன்றியறிதலுரை

இத் திருமுறைப் பாடல்களையும் அவற்றிற்கு அடியேன் எழுதிய குறிப்புரையையும் அச்சிடுங்கால், பிழைபார்த்தல் முதலிய பலதிறத்திலும் துணையாயிருந்த வித்துவான்களும் தருமபுர ஆதீனப் பல்கலைக்கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் களும் ஆகிய உயர்திருவாளர்கள் சா. குருசாமி தேசிகர், சொ. சிங்காரவேலனுர், கே.எம். கிருஷ்ணமூர்த்தி, (ஸ்ரீகுமரகுரு பரன் உயர்நிலைப்பள்ளி. ஆடுதுறை.) வை. திருஞானசம்பந்தம், நண்பர், திரு. ச. சீநிவாசப்பிள்ளை (தமிழாசிரியர், உயர்பள்ளி, முத்தியாலுப்பேட்டை, சென்னை.) திரு. ரா. வேலாயுத ஓதுவா மூர்த்திகள் (தேவார பாடசாலை ஆசிரியர்) முதலிய எல்லோ ருக்கும் ஸ்ரீசொக்கலிங்கப்பெருமான் திருவருளும் நம்குருவருளும் பெருகுக. தலங்களின் வரலாற்றுக் குறிப்புக்களும் கல்வெட்டுக் களின் குறிப்புக்களும் எழுதியுதவிய பேரறிஞர், உயர்திருவாளர், சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார் B.A., B.L., அவர்களுக்கும், அண்ணமலைப் பல்கலைக்கழகத்து ஆராய்ச்சிப் புலவருள் ஒருவ ரான வித்துவான், உயர்திருவாளர். வை. சுந்தரேச வாண்டையார் அவர்களுக்கும் என் உள்ளமார்ந்த நன்றி உரியது. இதற்கு ஓர் அணிந்துரை எழுதியவரும், அரசினர்கல்லூரியில் தமிழாசிரியரா யிருந்தவரும், இப்போது தருமபுரத்தில் தமிழ்த்தொண்டு செய்ப வரும், பெரும்புலவரும், சிவபூசாதுரந்தரரும் ஆகிய உயர்சைவத் திருவாளர். பண்டித. அ. கந்தசாமிப் பிள்ளை அவர்களுக்கு என் நெஞ்சுவந்த நன்றி உரியது. குறிப்புரை மாட்சி எழுதியதுகருதி, வித்துவான், திருவாளர். சொ. சிங்காரவேலனுர்க்கு நலம் பல நல்குக என்று ஸ்ரீ செந்தமிழ்ச் சொக்கேசனை மீண்டும் வேண்டு கின்றேன். இத்திருமுறை வெளியீடு சிறக்கும் வழியில் பெரிதும் உழைத்த "ஞானசம்பந்தம்" அச்சகத்திலுள்ள எல்லோர்க்கும் இறைவன் திருவருளால் இனிதே விளைக.

முத்து. சு. மாணிக்கவாசகன்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

# அணிந்துரை

உலகெல்லாமாகி வேருய் உடனுமாய் ஒளியாய் ஓங்கி அலகிலா உயிர்கள் கன்மத்து ஆணையின் அமர்ந்து செல்லத் தருதல் முதலிய ஐந்தொழிலையும், அவ்வுயிர்கள்மேல்வைத்த பெருங்கருணைத்திறத்தினுல் புரிந்து உய்யக்கொண்டருளும் பரமபதியாகிய சிவமே முழுமுதற் கடவுள். அவனை வழிபட்டு உய்தி கூடற்கு உரிய நெறிமுறையே சைவசமயம். அதுவே 'திருநெறி.' ('திருநெறிய தமிழ்வல்லவர் தொல்வினை தீர்தல் எளிதாமே' புகலியர்கோன்.) அந்நெறியில் நின்று எய்தும் முத்தியின்பமே திருநின்ற செம்மை எனப்படும்.

உலகில் வழங்கும் பல்வேறு சமயங்களும், இனித்தோன்றும் சமயங்கள் உளவேல் அவையும் தன்னுள் அடங்குமாறு, அவற்றுக்கெல்லாம் தலைமைத்தாய் விளங்குவது சுத்தாத்து விதம் என்னும் சைவசித்தாந்த சமயம். நடுநின்று தருக்க வாயிலாய் உணரவல்லார்க்கு இவ்வுண்மை புலப்படும்.

ஏனையவற்றை நோக்கச் சைவசமயம் எத்தகைய உயர் வுடையதென்பதனையும், ஏனையவற்றினும் இந்நெறியே எளிதில் கடைப்பிடித் தொழுகிப் பெரும்பயனடையத் தக்கதென்பத னையும் நமது ஆளுடைய அரசும் ஆளுடைய பிள்ளையாரும் அருளிய பாசுரங்களால் அறியலாகும். அவ்விரண்டும் முறையே

கூவலாமை குரை கடலாமையைக்
கூவலோடொக்குமோ கடலென்ப போற்
பாவகாரிகள் பார்ப்பரிது? என்பரால்
தேவதேவன் சிவன் பெருந்தன்மையே.

(ஆளுடைய அரசு)

ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்கவேண்டா சுடர் விட்டுளன் எங்கள்சோதி
மாதுக்கம் நீங்கலுறுவீர் மனம்பற்றி வாழ்மின்
சாதுக்கண்மிக்கீர் இறையே வந்து சார்மின்களே.

(ஆளுடையபிள்ளையார்)

என்பனவாம்.

இத்தகைய சிறப்புவாய்ந்த சைவசமயத் தத்துவங்கள், பதி பசு பாச இயல்புகள், சரியைமுதல் நாற்பாதங்கள் முதலிய எண்ணிறந்த இலக்கணங்களுக்கெல்லாம் இலக்கியமாய் நின்றன நம் தெய்வத்தமிழ்மறைகளாகிய சைவத் திருமுறைகள்.

உலகில் எந்தநாட்டிலும், எந்தமொழியினும் முதலில் இலக்கியமே தோன்றின. அதன்பின் சில நூற்றாண்டுகட்குப் பின்னரே அவற்றின் இலக்கணங்கள் தோன்றலாயின என்பது யாவரும் ஒப்ப முடிந்த ஒன்று. 'இலக்கியங் கண்டு அதற்கு இலக்கணம் இயம்பல்' என நன்னூலாரும் இக்கருத்தை உணர்த்தியது உணர்க. ஆதலின் நமது தெய்வத்திருமுறைகள் தோன்றிச் சில நூற்றாண்டுகட்குப் பின்னரே தமிழ்ச் சித்தாந்த சாத்திரங்கள் தோன்றுவன ஆயின. ஆகவே சித்தாந்த நூல்களின் கருவூலம் திருமுறைகளே என்பதும், அவற்றில் ஆங்காங்குக் காணப்படும் உண்மைக் கருத்துக்களைத் தொகுத்தும், வகுத்தும், விரித்தும், விளக்கியும் வெளிப்படுத்தினர் நமது சித்தாந்த நூலாசிரியர் என்பதும் பெறலாயின.

உதாரணமாக :- 'எல்லா உலகமும் ஆனாய் நீயே' என்பது நம் அப்பர்மூர்த்திகள் தேவாரம். இதனை, சித்தியாரில், பதியாகிய சிவபெருமான் விசுவரூபி (விசுவகாரணன், விசுவாந்தரியாமி, விசுவாதிகன்) எனக் கூறுமிடத்து 'உலகினை யிறந்து நின்றது அரனுரு. என்பதோரார் ...உலகமாய் நின்றதோரார்' என்பன முதலாக வகுத்தும் 'தேவரில் ஒருவனென்பார் ...அவன் உருவினைவும் ஓரார்' என்றும் அவன் ஆணுருவும் பெண்ணுருவும் கூடிய வடிவன் (அர்த்தநாரீசுவரன்) ஆகி நிற்றலால் உலகில் மரஞ்செடிகொடிகள் முதலிய ஓரறிவுயிரும் ஆணுருவும் பெண்ணுருவுமாய் நிற்கின்றன என்றும் உய்த்துணர விரித்தும் உரைதமை காண்க.

இன்னும்,

'' இமவான் மகட்குத் தன்னுடைக் கேள்வன் மகன் தகப்பன்
தமையனெம் மையன் ''

என்பது திருவாசகம். இதனைச் சித்தியாரில்,

சிவம் சத்தி தன்னையீன்றும் சத்திதான் சிவத்தையீன்றும்
உவந் திருவரும் புணர்ந்திங் குலகுயிரெல்லாம் ஈன்றும்
பவன் பிரமசாரியாகும் பான்மொழி கன்னியாகும்
தவந்தரு தன்மை யோர்க்கித் தன்மைதான் தெரியும் அன்றே.

என விளக்குவது அறிக.

துதி நூல்களாகிய இத்திருமுறைகள் முற்கூறியாங்குச் சாத்திரக் கருவூலமாய்த் திகழ்தல் மட்டுமோ?

தன்னை நோக்கித் தொழுதெழுவார்க்கெல்லாம்
பின்னை யென்னார் பெருமானடிகளே.

என இறைவனது அருள் திறங்களை எடுத்துரைக்கின்றன.

''அருளாதொழிந்தால் அடியேனை அஞ்சேல் என்பார் ஆர் இங்கு?

என இறைவனை அணுகி இரங்கிக் குறையிரப்பத் தூண்டுகின்றன.

இரப்பவர்க்கு ஈயவைத்தார் ஈபவர்க்கு அருளும் வைத்தார்
கரப்பவர் தங்கட்கு எல்லாம் கடுநரகங்கள் வைத்தார்''

என அறங்கூறுகின்றன.

இன்னும் முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள்களாம் அகப்பொருள் துறையும் புலப்படுத்துகின்றன. இவற்றையெல்லாம் அடக்கி ''ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய்த்'' திகழும் இத்தெய்வத் திருமுறைப் பனுவல்களைக்

கற்ருரும் கேட்டாரும் புலனென்றிக் கரணமும் அடங்கிச் சிவானந்தம் திளைத்தல் சுவாநுபூதிகம் ஆகும்.

இப்பெருஞ் சிறப்பினதாகிய நம் புகலியர் கோன் திருவாய் மலர்ந்தருளிய திருநெறிய தமிழின் இரண்டாவது திருமுறை, குறிப்புரை விசேட உரை, உரைநயங்களோடு வெளிவர வேண்டுமென்று திருவுள்ளங் கொண்டருளினுர்கள் கருணையங் கடலாகிய நம் குருமகாசந்நிதானம் அவர்கள்.

"இதனை இதனுன் இவன் முடிக்கும் என்று ஆய்ந்து அதனை அவன்கண் விடல்" என்றவாறு திருவுள்ளத்து எண்ணியருளிய படியே, இனிதின் இயற்றித்தர வல்லுநர் இவரேயென நமது ஆதீனப்புலவரும், ஆதீனப் பல்கலைக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவரும் ஆகிய புலவர், சித்தாந்த ரத்நாகரம், வித்துவான், திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்களுக்கு ஆணை யருளினுர்கள். அவ்வருளாணைப்படி இரண்டாவது திருமுறைக்கு அரும்பதவுரை முதலியவற்றை எழுதித்தந்து அரிய உழைப்பின் திறனைப் புலப்படுத்தி ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் கருணைக் கடாட்சத்திற்குப் பாத்திரமானுர்கள் நமது முதலியார் அவர்கள்.

அவ்வரும்பெறற் பெரியாரின் புலமையின் திட்ப நுட்ப ஒட்பம் முதலியவற்றை இத்திருமுறையின் ஒவ்வொரு பதிகத்திலும் காணலாம்.

தாலி புலாகப்படி ஒவ்வொன்று :-

## 1. இலக்கியநூற் பயிற்சிக்கு :-

*(பக்கம் 199. பதிகம் 44. திருவாமாத்தூர்)* "பிச்சை பிறர் பெய்யப் பின் சாரக் **கோசாரக்** கொச்சைப் புலானுறு மீருரிவை **போர்த்துகந்தான்**" என்பதன் உரையில். 'கோ - தலைமை, சார - தன்னையே பொருந்தும்படி, யானைத்தோலைப் போர்த்தும் சாவாமல் மகிழ்ச்சியோடிருந்தான் "யானையின் பசுந்தோல் பிறர் உடம்பிற்பட்டாற் கொல்லும் என்பர்" நச்சினுர்க்கினியர் சீவகசிந்தாமணி, 2787. என்பது.

2. இலக்கண நூலின் ஆழ்ந்த பயிற்சிக்கு :-

(பக்கம் 280, பதிகம் 62. திருமீயச்சூர்) "வேகமா நல்லி யானை வெருவவுரிபோர்த்து" என்பதில் நல்லியானை (நன்மை+ யானை) "...உயர்திணை அஃறிணை ஆயிருமருங்கின், ஐம்பாலறியும் பண்பு தொகும் மொழியும்...மருவின் பாத்திய, புணரியனிலையிடை உணரத்தோன்று" என்ற தொல்காப்பியப்படி (482) நல்லதாகிய யானையென விரித்துரைத்தற்பாலது நன்னூற் சூத்திரப்படிப் பண்புத்தொகையென்றல் குற்றமுடையதாகும்' என்பது.

3. திருமுறைப் பயிற்சிக்கு :-

(பக்கம் 190. பதிகம் 42. திருஆக்கூர்.) "...இன்மையாற் சென்றிரந்தார்க் கில்லையென்னாது ஈத்துவக்கும் தன்மையார் ஆக்கூரில் தான்றோன்றி மாடமே" இப்பாசுரப் பகுதியை அப்படியே சேக்கிழார் பெருமான் தமது நூலில் சிறப்புலி நாயனர் புராணத்தில் (செய்யுள் 1.) அமைத்திருத்தல் காண்க. என்பது.

4. தருக்கநூற் பயிற்சிக்கு :-

தொன்மையும் முதுமையும் வெவ்வேறு என்ற ஆராய்ச்சி, (பக்கம். 284-5.)

5 சித்தாந்த சாத்திரப் பயிற்சிக்கு :-

(பக்கம் 364. பதிகம் 78. திருவிளநகர்.) "துயர் கெடுகெனப் பூசுவெண்பொடி என்பதில் துயர் - பிறவித்துன்பம், துயர்க்கேடு - பாசநீக்கம், துயர்கெடுக என்றூர்க்கு இன்புறுக என்றலும் உட்கோளாம். அவ்வின்பமுத்தி பாசவீடும் சிவப்பேறுமென இருவகைப்படும் என்பது.

இன்னும் நுண்ணிதில் திறம் தெரிந்துரைப்பன பலவும் உண்டு. அவற்றுள் புள்ளிருக்கு வேளூர்ப் பதிகத்தில் முதற் பாசுரத்தில் இருவரும் வழிபட்டமையையும், 3, 5, 7 பாசுரத்தில் சம்பாதி வழிபட்டமையையும் ஏனைய பாசுரங்களில் சடாயு வழிபட்டமையையும் குறித்தனர் என்பது.

இவர்களது ஆழ்ந்து அகன்ற பன்னூற் புலமைத்திறனைப் பல இடங்களில் எழுதியுள்ள விரிவுரைச் செப்பத்தாலும் நன்கு அறியலாகும்.

இதுபோலவே நமது சித்தாந்த ரத்நாகரம் ஐயா அவர்கள் இன்னும் தம் ஆராய்ச்சியின் அரியபயன் விளக்கும் நூல்களை வெளியிட்டு உலகின் பேருபகாரிகளாகத் திகழ அவர்கட்கு நலன் எனைத்தும் இனிதின் அருள்க என எனது வழிபடு கடவுளாம் கூத்தப்பெருமானை நாளும் போற்றுகிற்பேன்.

இத்தகைய சீரிய உரைக்குறிப்பு, விசேடக் குறிப்புரைகளை உலகம் படித்துத் திருமுறைக் கருத்து உணர்ந்து இருமைப்பயன் களையும் அடைவதாகுக.

நம் பெருவாழ்வாகிய தருமையும் கமலையும் விரிதமிழ்க் கூடலும் உரிமையினுகந்த ஒப்பிலாமணியாய் விளங்கும் தருமபுர ஆதீனம் இருபத்தைந்தாவது குருமகாசந்நிதானம் **ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்** அவர்கள் என்றும் இன்பம் பெருகும் இயல்பினோடு நீடூழி வாழ்வார்களாகுக. அவர்களது திருவருளாணை எங்களை ஆள்க.

ஏனைய திருமுறைகளும் இவ்வியல்பில் சிறப்புற வெளி வருவன ஆகுக.

திருமுறை வெளியீட்டுச் சிவபுண்ணியத்தைச் செய்யத் தொடங்கி, முதல் திருமுறை வெளிவருமாறு கருணைகூர்ந்த நமது ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள், பதிப்பினும் குறிப்புரை முதலியவற்றினும் சிறப்புடையதாக இவ் இரண் டாவது திருமுறை இதில் குறித்த சீரியமுறையில் வெளிவரத் திருவருள் பாலித்தருளினார்கள். அதற்குக் கைம்மாறுண்டோ?

வாழ்க திருமுறை; வாழ்க உலகம்.

---




# குறிப்புரை மாட்சி

---

## உலகம் உய்ய :

திருமுறைகள் உலகுய்ய எழுந்தவை. உயிர்கள் கடைத்தேற உள்ளம்கொண்ட பெரியோர் திருமொழிகளே திருமுறைகள். இவை மனிதனது அகவாழ்வை முறைப்படுத்துவன. 'நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர் முறைவழிப்படூஉம் என்பது திறவோர்காட்சி' என்று புனிதமான முறையைப்பற்றிப் புறநானூறு சொல்லுகிறது. முறைவழிப்படூஉம் உயிரை முறை வழிச் செலுத்துவதே திருமுறை. வினையறுப்பதற்குச் சிறந்த மருந்து திருமுறை. 'திருநெறிய தமிழ் வல்லவர் தொல்வினை தீர்தல் எளிதாமே' என்று சிந்தையினிக்கப்பாடுகிறது சீகாழிக் குழந்தை. உலகம் உய்யத் திருமுறை எழுந்தது. 'மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்' என்று அருளாசியும் வழங்குகிறது. ஆகவே தமிழ்மண்ணிற் பிறந்த மக்களெல்லோரும் திருமுறை களைச் 'சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுதல்' இன்றியமையாக் கடமை.

## திருமுறைப் பெருமை :

தருமையை நிறுவிய எங்கள் தனிமுதல்வர் ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்தப்பெருமான். 'திருமுறைகள் ஓதாய்' என்று அருளினார்கள். திருமுறைப் பதிகங்கள் அற்புதச் செயல்கள் பலவற்றை நிகழ்த்தியிருக்கின்றன. தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும், முதலை உண்ட பாலனை அழைத்ததும் முதலான அற்புதங்கள் திருமுறைத் தெய்வப் பேரொளியால் நிகழ்ந்தவை. அக்காலத்திலும் திருமுறைகளுக்கு நல்ல பெருமை மக்களிடத்திலே மண்டிக்கிடந்தது. கல்வெட்டுக்களில் 'திருப் பதியம்' என்று சிறப்பாகக் குறிப்பிடும் பெருமை திருமுறைக்கு உண்டு. பத்து பாட்டுக் கொண்ட எவையும் பதிகமாம் எனினும், திரு என்ற அடையோடு ஆளப்படும் இந்தப் பதிகம் என்றசொல் தேவாரப்பதிகத்தையே குறித்ததெனின் இதன் சிறப்புக்கு வேறு என்னசான்று வேண்டும்? இன்னும் பல்லவர்

காலத்தும், சோழர்காலத்தும் தேவாரத் திருமுறைகளுக்கு நல்ல மதிப்பு இருந்தது. தேவாரம் பாடுவார்க்கு நிபந்தங்கள் விடுக்கப்பெற்றுள்ளன. எடுத்துக்காட்டாகத் தஞ்சைப் பெருவுடையார்கோயிற் கல்வெட்டு ஒன்று, ஆண்டுத் தேவாரம் விண்ணப்பித்த 49 பிடாரர்களை (ஓதுவார்களை)ப்பற்றிக் குறிப்பிடுகிறது. திருவாமாத்தூர்க் கல்வெட்டு ஒன்றில் குருடர்கள் திருப்பதிகம் விண்ணப்பம் செய்தமையும் அவர்களுக்குத் துணையாகக் கண் காட்டுவோர் இருந்து ஆலயம் அழைத்துச் சென்றமையும் கூறப்படுகின்றன. என்னே திருமுறைக்கிருந்த சீர்மை! மக்கள் மனமெல்லாம் அந்த அளவுக்கு மகிழும்படியாக அருளமுது வாரிவாரி வழங்கியது திருமுறை.

வேதம் பசு எனவும் ஆகமம் பால் எனவும் திருமுறை நெய் எனவும் கூறப்படும் பொருளுரையும் திருமுறைப் பெருமையைத் தெற்றெனக் காட்டும்.

## ஆசிரியர்கள் :

திருமுறைகளை உலகம் உய்ய மொழிந்தருளிய பெரியவர்கள் எளியவர்களா என்ன? அநுபவம் கைவந்த அருளாளர்கள்; சித்தமலம் அறுத்துச் சிவமானவர்கள்; காணும் பொருளெல்லாம் கண்ணுதலான் திருவுருவமாக்கண்ட கனிவுள்ளம் படைத்தவர்கள். தமிழ்நாட்டு வீதியெல்லாம் – ஆலயமெல்லாம் இசை கலந்து தேவார அமுதப்பாக்களை வாரிவாரி வழங்கினர்கள். கடவுளைப்பற்றிய கவிதையோ கனிந்த உள்ளத்தின் எழுச்சி. அதிலும் இசைவேறு கலந்துவிட்டால் ஒரே மெய்யுணர்வு தான்! மேம்பாடுதான்! இதனால்தான், 'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்' என்றார்கள் சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

திருவானைக்காப் பதிகத்துக் கடைக்காப்புச் செய்யுளில்,

"வெண்ணாவல் அமர்ந்துறை வேதியனைக்
கண்ணார் கமழ் காழியர் தந்தலைவன்
பண்ணோடு இவை பாடிய பத்தும்வல்லார்
விண்ணோர் அவர் ஏத்த விரும்புவரே".

என்றும்,

"பண்ணொன்ற இசைபாடும் அடியார்கள்".

"பண்ணின் பயனும் நல்லிசை".

என்றும் சம்பந்தமூர்த்தி சுவாமிகளே கூறியருளினார்கள்.

இன்னும் திருமறைக்காட்டுப் பதிகத்தில்,

"காழிந் நகரான் கலை ஞானசம்பந்தன்
வாழிம் மறைக்காடனை வாய்ந்தறிவித்த
ஏழின்னிசைமாலை யிரைந்திவை வல்லார்
வாழிவ் வுலகோர் தொழ வானடைவாரே".

என்றும் கூறியருளினார்கள். அப்பரடிகளோ தம் திருத்தாண்டகத்தில், "சலம்பூவொடு தூபம் மறந்தறியேன் தமிழோடிசை பாடல் மறந்தறியேன்" என்று அருளினார்கள். இவற்றால் நம் திருமுறை ஆசிரியர்கள் திருமுறைகளை இசை வடிவிலே – பண் உருவிலே அமைத்துப் பாடிவந்த பண்பாளர்கள் என்பது இனிது விளங்கும். ஒவ்வொரு நாட்டையே சைவத்திருநாடாக்கிய சான்றோர்கள். சம்பந்தமூர்த்திசுவாமிகள் பாண்டியத் திருநாட்டைத் தெய்வ ஒளியாக்கியருளினார்கள். அப்பரடிகள் பல்லவ நாட்டைப் பண்பாடுபெறச் செய்தருளினார்கள். இவ்வாறு நாட்டையும், மக்களையும் மொழியாலும் இசையாலும் பிணித்து அதன்மூலம் தெய்வச் சைவத்தை வளர்த்துப் பாதுகாத்தார்கள் திருமுறை ஆசிரியர்கள்.

## உரை உண்டா?

இத்தகைய தமிழ்த் தெய்வக் கருவூலங்களாகிய திருமுறைகளுக்கு இதுகாறும் உரைகள் தோன்றவில்லை. திருமுறைகளுக்கு உரை எழுதக்கூடாது; உரை காணவும் கூடாது என்ற ஒரு வரம்பு நாட்டில் இருந்துவந்தது. என்ன வியப்பு! படித்தவரேயன்றிப் பாமரரும் திருமுறைகளை உணர்ந்துகொள்ளுதல் அரிதாயிற்று. சமுதாயத்தில் கற்றவர் கூட்டமே திருமுறை உணர்ந்து ஓதியது; மற்றவர் அறிந்திலர். இந்த நிலையை மாற்றத் திருவுள்ளம் கொண்டார்கள் தருமையிலே இன்று தவப்பேரரசுநடாத்தும் இருபத்தைந்தாவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள், எங்களையெல்லாம் ஆட்கொண்ட ஞான வள்ளல். 'உலகம் உய்யவந்த ஒப்பற்ற நிருநெறிய தெய்வத் தமிழை' உலகம் உணரவேண்டாமா? அவ்வாறு உணர உரை ஒன்று தேவையல்லவா? ஒவ்வொரு திருமுறைக்கும் குறிப்புரை எழுதி வெளியிடுதலால் உலகம் பயன்படும் அல்லவா? என்று சிந்தித்தார்கள். செந்தமிழ்ச்சொக்கர் திருவருள் சிந்தனைக்குள் நின்று செந்தேனுகத் தித்தித்தது.

## அருளாணை பிறந்தது :

'கற்றுரேயன்றி மற்றுரும், பண்டிதரேயன்றிப் பாமரரும், உணர்ந்து வாழத் தொடங்கட்டும்; திருமுறைகள் மனிதவாழ் வின் நெறிமுறைகளல்லவா? 'மனிதர்காள் இங்கேவம் ஒன்று சொல்லுகேன்' என்று மனித சமுதாயத்துக்கு அறைகூவல் விடுத்து அரன்திருவடி மறவாதீர்கள்' என்று வற்புறுத்தும் வாய்மை விளக்கல்லவா? அதற்கு உரைப்பணி மிகமிக இன்றி யமையாதது. அப்பணியை நம் ஆதீனப் புலவர்கள் செய்து முடித்தலே செந்தமிழ்ச்சொக்கர் திருவுள்ளம்' இப்படி அருளாணை பிறந்தது எங்கள் குருமகாசந்நிதானத்திலிருந்து. 1953 ஆம் ஆண்டு குருபூசைத்திருநாள் வெளியீடாக முதல் திருமுறை ஆதீனப் பல்கலைக் கல்லூரித் துணைத்தலைவராயிருந்த வித்துவான், திருவாளர். ச. தண்டபாணி தேசிகர் அவர்களால் குறிப்புரை எழுதப்பட்டு வெளிவந்தது. அடுத்து இவ்வாண்டுக் குருபூசைத் திருநாள் வெளியீடாக இரண்டாம் திருமுறைக் குறிப்புரை வெளிவருகிறது.

## இரண்டாம் திருமுறை :

இரண்டாம் திருமுறை திருஞானசம்பந்தசுவாமிகள் திருவாய் மலர்ந்த தெய்வத் தமிழ்த் திருமறையில் நடுவணதாக நின்று நனிபேரின்பம் பயப்பது. நூற்றிருபத்திரண்டு திருப் பதிகங்களை உடையது. ஆதியும் அந்தமும் 'பீடுடைய பிரமாபுர மாகவே' பிறங்குவது, திருப்பூந்தராய் என்ற தெய்வப் பெயரோடு தோணிபுரத்தண்ணலைத் தோத்திரித்துத் திருப் புகலி என்ற தீந்தமிழ்ப் பெயரோடு பிரமாபுரமேவிய பெருமா னின் பெருமைகளைப் பேசிமுடிப்பது, திருவருட் பெருக்கால்

உலகெலாம் என்று தொடங்கி உலகெலாம் என்று நிறைந்த தொண்டர்சீர் புராணத்தை எண்ணச்செய்வது இத்திருமுறை.

## திருவருள் வளம் :

எச்செயலும் ஈசன் துணையின்றி முடியாது, ஈண்டும் அவ்வாறே. திருவருள் வளமாக இருந்தது. அதனை எவ்வாறு உரைத்தல் இயலும்? செந்தமிழ்ச்சொக்கர் மணிவாசகரோடு மிகமிகத் தொடர்புகொண்டவர். மணிவாசகருக்காகப் பிட்டு உண்டார்; மண் சுமந்தார்; அடிவடுச் சுமந்தார். அவ்வாறு தொடர்புகொண்ட செந்தமிழ்ச்சொக்கர் இன்றும் இந்த மணிவாசகரோடு தொடர்புகொண்டு இலங்குகிறார். இரண்டாந் திருமுறைக்கு எழுதப்பட்ட இனிய – நயம் செறிந்த – அழகிய – வளமிக்க குறிப்புரை மாலையைச் சூடிக்கொண்டு அருள்மழை பொழிகின்றார்; அம்மட்டோ? குருஞானசம்பந்தரே அருளாணை யிட மணிவாசகர் குறிப்புரை மாலை தொகுக்கிறார். என்னே திருவருள் வளம்! குருஞானசம்பந்தரும், மணிவாசகரும் இரண்டுக்கும் மேலாகச் செந்தமிழ்ச்சொக்கர் சுப்பிரமணியர் திருவருளுமாக நான்கும் சேர்ந்து முழுமதிபோல நிறைவுற்று விளங்குகிறது இக்குறிப்புரை.

## குறிப்புரை ஆசிரியர் :

இரண்டாம் திருமுறைக்குக் குறிப்புரை எழுதுதலை மேற் கொண்டவர்கள் நல்ல அறிஞர். சைவசித்தாந்த சாத்திரங் களில் நுண்ணிய புலமைமிக்கோர். திருமுறைகளில் ஆழ்ந்த அநுபவம் உள்ளோர். சிவபூஜாதுரந்தரர். தருமையாதீனப் பல்கலைக் கல்லூரியின் தமிழ்ப்பேராசிரியராக விளங்குகின்ற புலவர். திருவாளர். முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள். திருமுறையாசிரியப் பெருந்தகையார்களாகிய சமயா சாரியர்களிடத்தில் மிக்க ஈடுபாடும், இடையறாப் பேரன்பும் உள்ளவர். இன்னோரை உரையெழுதுமாறு பணித்த எங்கள் குருமகாசந்நிதானம் அவர்களின் குலவுபெருங் கருணைக்குக் குவலயமும் ஈடாமோ?

அம்மட்டுமோ! பழைய இலக்கண இலக்கியங்களை ஆராய்ந்து எம்போன்றோர் மன இருள்போக்கி மாண்பொருள் முழுவதும்

முனிவற அருளிய நல்லாசிரியர்; சைவசித்தாந்த ரத்நாகரமாய் விளங்கும் நல்லோர்; எழுத்தாற்றலும், பேச்சுத் திறமையும் மிக்கு யாவருள்ளங்களையும் எளிதின் ஈர்க்கும் பெரியோர். இத் தகையோரது குறிப்புரை, ஆராய்ச்சி பூர்வமான திருமுறைக் குறிப்புரை, தெய்வீகத் தமிழ் உலகத்துக்குத் தேவை! தேவை! இதனை எழுதிய சான்றோருக்கும் அருள்வளம் ஈந்து அழகுற முற்றுவித்த ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுக்கும் மிக மிகக் கடமைப்பட்டிருக்கிறோம்.

## குறிப்புரை நலங்கள்:

குறிப்புரையின் நலங்களை நடுவுநிலைமையோடு ஈண்டு ஆராய்ந்து காணுதல் அறிவுலகத்துக்குப் பெரிதும் பொருந்துமாதலின், என்னுடைய சிற்றறிவுக்கெட்டியவகையில் அதனைப் பற்றிய மாட்சிகளை ஈண்டுத் தொகுக்க எண்ணுகின்றேன்.

## 1. சொல் ஆராய்ச்சி தோன்ற உரையெழுதுதல்:

ஆசிரியர் திருமுறைக்கு உரையெழுதப் புகுங்கால் சொல் லாராய்வுணர்வோடு அழகுற எழுதுகின்றார். சொல்லின் பழைய உருவமும் அதுமருவிய திறமும் மாண்புறக் காட்டுகின்றார். அவ்விடங்கள் அறிஞர்க்குப் பெருவிருந்தாவன. அவற்றுட் சில வற்றை ஈண்டு உணரலாம்.

1. 'பின்னு செஞ்சடையிற் பிறைபாம்புடன் வைத்ததே' என்ற 137ஆம் பதிக முதற்றிருப்பாடலின் உரையில், 'பாண்பு என்பது பாம்பு என்று திரிந்தது' பாண் - பாட்டு; பாட்டைக் கேட்கும் இயல்புடையது பாண்பு என்று எழுதியுள்ளார். இது ஒரு அருமையான சொல்லாராய்ச்சி. பு விகுதி உடைமைப் பொருளிலேயே தமிழில்வரும். பொற்பு - பொன்னின் தன்மை உடையது என்றவிடத்துக் காணலாம்.

2. 'உடையாய்தகுமோ இவள்உண் மெலிவே' (154. 1.) 'உரையுலாம் பொருளாய் உலகுஆள் உடையீர், உடை யானை யல்லாதுள்கா தெனதுள்ளமே' (பதி, 148. பா. 5.) (பதிகம். 140.) என்பனபோன்று உடையீர் என்றுவரும் இடங் களிலெல்லாம் ஆசிரியர் 'சுவாமீ' என்று உரையெழுதியுள்ள

தன் நயம் உணரற்பாலது; வடசொற் பொருளறிந்து 'சுவாமி என்பதற்கு உடையவன் என்பது பொருள்' என்று நம்மனோர்க் குக்காட்டும் ஆசிரியர் அறிவுநலனை என்னென்பது?

3. 'கானயங்கிய தண்கழி' (பதி. 140. பா. 3.) என்ற விடத்து அயங்குதல் அசங்குதல் என்றதன் மரூஉவாகக் கொண்டுரைத்தலுமாம் என்றும்,

4. 'விண்ணினிற் பிறைசெஞ்சடைவைத்த வியப்பதே' (பதி. 140. பா. 5.) என்றவிடத்துப் 'பிறை - பிறத்தலுடையது' என்றும்,

5. இப்பிறை என்றதன் காரணத்தையே 'விண்ணினு லான பிறை' (பதி. 143. பா. 7.) என்றவிடத்து நினைவூட்டியும்,

6. 'தெங்குதுங்கப் பொழிற்செல்வம் மல்கும் திருச்சிக் கலுள்' (பதி. 144. பா. 5.) என்றவிடத்து. 'தெங்கு - தென்கு- தென்னை என்பதால் அதன் தொல்லுரு விளங்கும்' என்றும்.

7. இப்பதிகத்தேயே பா. 10-ல் 'கட்டமண் கழுக்கள் சொல்லினைக் கருதாது' என்றவிடத்து, 'அமண் - சமண்; க்ஷமண் என்பதன் திரிபு' என்றும்,

8. மழபாடி மழுவாடி என்பதன் மரூஉஎன்றும் (பதி. 145. பா. 1. உரை.)

9. 'பெம்மானைப் பேயுடன் ஆடல் புரிந்தானை' (பதி. 14. பா. 2.) என்றவிடத்து, 'மருமகன் - மருமான் என்றானது போலப் பெருமகன் பெருமான் என மருவிற்று' என்றும்,

10. 'இனிதனை ஏத்துவர் ஏதமிலாதாரே' (பதி. 150. பா. 3.) என்றவிடத்து, 'இனிது+அன்+ஐ இன்புருவானவனை' என்றும்,

11. 'தாரானே தாமரைமேல் அயன்றான் தொழும்' (பதி. 151. பா. 1.) என்றவிடத்து 'அயன் - அஜன்; தோன்றா தவன் என்பது அடிச் சொற்பொருள்' என்றும்,

12. 'அழுமாறு வல்லார் அழுந்தை மறையோர்' (பதி. 156. பா. 1.) என்றவிடத்து, 'அழுந்தை என்பது அழுந்தூர் என்பதன் மரூஉ. இது புலவர் செய்துகொள்ளும் மரூஉச் சொற்களுள் ஒன்று. புலியூர் - புலிசை, மறைக்காடு - மறைசை, தொட்டிக்கலை - கலைசை, மறையூர் (திருவோத்தூர்) மறைசை என்பவை வழங்கி மருவாதன ஆயினும் புலவர் வழக்கில் உள' என்றும்,

13. 'ஓடும் நதியும் மதியோடு உரகம்' (பதி. 158. பா. 2.) என்றவிடத்து, 'உரகம் - பாம்பு, மார்பால் ஊர்வது' என்றும், (உரம் - மார்பு; கம் - ஊர்வது.)

14. 'நல்குரவும் இன்பமும் நலங்களவையாகி' (பதி. 165. பா. 7.) என்றவிடத்து 'நல்கூர்தல் - நல்க+ஊர்தல் என்னும் தொடர் நல்கூர்தல் என மருவிற்று' என்றும், (புரவலர் நல்குமிடந்தோறும் அதனைப் பெறுதற்காக இரவலர் ஊர்ந்து செல்லுதலின் நல்க ஊர்தல் என்றனர் உரையாசிரியர்.)

15. மேற்பதிகத்தேயே பா. 3-ல் 'நாவணவும் அந்தணன்' என்றவிடத்து 'அம்+தண்+அன் - அழகும் குளிர்ச்சியும் உடையவன். அந்தத்தை அணவுதலை உடையவன் என்றுருமுளர்' என்றும்,

16 'சொற்றமறியாதவர்கள் சொன்ன சொலைவிட்டு' (பதி 167 பா 10.) என்றவிடத்துச் 'சொற்றம் - சொல்லும்சொற்கள் சொல்+து+ அம்' என்றும்,

17 'ஏடுமலி கொன்றை அரவிந்து விளவன்னி' (பதி 169 பா 1.) என்றவிடத்து, ஏடு - இதழ் (இளை+து. எளை+து. ஏள்+து. ஏடு என்றும், (சிந்தாமணி 1552 - உரையை ஒட்டி இவ்வாறு ஏடு என்ற சொல்லின் நுண் பொருள் கொண்டு அதனைப் பிரித்துக் காட்டிப் புணர்த்தியிருப்பது பெரிதும் போற்றற் குரியதன்றோ?)

18 'வேளாளர்' என்றவர்கள் வள்ளன்மையின் மிக்கிருக்கும் தாளாளர் ஆக்கூரிற்றான்றோன்றி மாடமே' (பதி 178.

பா. 3.) என்றவிடத்துக் தாளாளர்' வேளாளர் என்ற சொற்களை ஆராய்ச்சி உணர்வோடு பிரித்துப் பொருள் கூறி 'வேள் மண் என்றுகொண்டு உழுவர் எனலுமாம்' என்றும்,

19 'அத்தன் அடி நினைவார்க்கு அல்லல் அடையாவே, (பதி 182. பா 8.) என்றவிடத்து, 'அத்தன்-அத்தை, ஆத்தான்-ஆத்தாள் என்பவை தந்தை தாயரைக் குறித்த பழையவழக்கு. அத்தை என்பது தாயைக் குறித்து இன்றும் வழங்குகிறது' என்றும்,

21. 'பஞ்சின் மெல்லடி மாதராடவர்' (பதி. 188. பா. 6) என்றவிடத்து 'பஞ்சு - பன் + து என்றதன் மரூஉ, பனுவல் என்பதற்கும் அதுவே பகுதி, பஞ்சினைப் பன்னுதல் இன்றும் உண்டு' என்றும், 'மஞ்சன் மைந்தன் என்பதன் மரூஉ என்றும்

22. 'பரிதி இயங்கும் பாரிற் சீரார் பணியாலே' (பதி. 195. பா. 5) என்ற இடத்துப் 'பரிதி-இதைப் பருதி என்றெழுதுவது குரிசில் என்பதைக் குருசில் என்றெழுதுவது போலும் பிழை' என்றும்,

23. 'பேரும் பொழுதும் பெயரும் பொழுதும்' (பதி 196. பா. 2. ) என்ற இடத்துப் 'பெயர்தல் - மீண்டும் வருதல் பேர்தல் முதன்முதலாக இடம்விட்டு அசைதல்' என்றும்,

24. 'துன்னுங் கடல் நஞ்சிருள் தோய்கண்டர் தொன்மூதூர்' (பதி. 199. பா. 1.) என்றவிடத்து, 'நெடுங்காலமாக உள்ள வெற்றிடத்தையும் அங்குத் தோன்றி நெடுங்காலமாக இருக்கும் ஒன்றனையும் காட்டித் தொன்மைக்கும் முதுமைக்கும் உள்ள வேறுபாட்டை உணர்த்தியும்.

25. இப்பதிகத்தேயே பத்தாம் திருப்பாடலில், 'கையார் சோறு கவர்குண்டர்களும்' என்றவிடத்து, 'சோறு - சொல்+து சொல் - நெல்......சோறு என்பதன் பொருள் சொல்லால் ஆனது என்றும்,

26. பதிகம் 208 பா. 1. ன் உரையில், 'அருமகன் என்பதன் மரூஉ அம்மான், அம்மஹாங் என்பதன் திரிபெனல் பிழை என்றும்,

27. பதிகம் 220. பா. 6 ல் 'பொன்னி என்றது நீரின் செம்மையும் மணலின் பொன்மையும் பற்றி வழங்கிய காரணப் பெயர் என்றும்,

28. 'போரிடையன்று மூன்று மதிலெய்த ஞான்று' (பதி. 222. பா. 3) என்றவிடத்து 'ஞான்று - நாளன்று என்பதன் மரூஉ; இது கல்வெட்டுக்களில் பயின்றுள்ளது' என்றும்,

29. பதிகம் 226. பா. 1 ல் 'அரத்துறை - அறத்துறை என்பதன் மரூஉ. அரன் துறை என்பது சிறவாது என்றும்

30. 'கேழல்பூழ்தி கிளைக்கமணி சிந்தும் கேதாரமே' (பதி. 250. பா 5) என்ற இடத்துப் 'புழுதியின் மரூஉ பூழ்தி; பொழுது - போழ்து என்புழிப்போல என்றும்,

31. குரோதி என்பதன் திரிபு கோதி என்றும் (பதி. 162. பா. 7). எழுதியுள்ளார்கள். இவ்விடங்கள் ஆசிரியரின் சொல் லாராய்ச்சிப் புலமையையும், தமிழ் இலக்கியப் பயிற்சியையும் நன்கு விளக்கும்.

## 2 சித்தாந்த சாத்திரப்பயிற்சி:

ஆசிரியரின் சித்தாந்த சாத்திரப்பயிற்சியும் திறமும், இன்றி யமையாத இடங்களில் இவர் எழுதும் எடுத்துக் காட்டுகளால் புலனுகின்றன. அவற்றைக் கீழே காணலாம்.

1. பதிகம் 137. பா. 3-ன் உரையில், யானையை 'உரித்தது ஆணவமல நாசம் என்பர். மங்கைபங்கு; போகியாயிருந்து உயிர்க்குப் போகத்தைப் புரிதல்பற்றியும், உயிர்க்கு இச்சா ஞானக் கிரியா பலத்தை மிக விளைத்தல்பற்றியும் ஆயிற்று' என்று எழுதுதலும்,

2. பதிகம் 143. பா. 3-ன் உரையில் 'ஒன்றுமுதல் எட்டு ஈருகிய எண்ணுப்பெயர் அமைந்த அழகு உணரத்தக்கது என்றுரைத்து, சிவஞான சித்தியார் 245-ம்' விருத்தத்தையும் சிவஞானமாபாடிய 6-ம் சூத்திர வசனமும், சிவஞான சித்தியார் 85, 66, 83 விருத்தப்பாக்களின் உரையையும்கொண்டு விளக்கி எழுதுதலும்,

3. 'ஞானமாக நினைவார் வினையாயின நையுமே' (144-1) என்புழி, ஞானமாக நினைவார் 'பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத்தாலே நேசமொடும் உள்ளத்தே நாடிப் பாத நீழற்கீழ் நீங்காதே நினைந்து நிற்பவர், என்று சித்தியார் 292-ம் விருத்தப் பாவை வசனமாக எழுதுதலும்,

4. 'ஆளும் ஆதிப்பிரான் அடிகள்' (146. பா. 7) என்புழி 'அடிகள் - பாசநீக்கமும் சிவப்பேறுமாகிய இரண்டு திருவடிகள். யான் எனது என்னும் இருசெருக்கும் அறுதலுமாகிய இரண்டெனலும் சாத்திர சம்மதம், 'பரை உயிரில் யான் எனதென்றற நின்றதடியாம்' என்று உண்மைநெறி விளக்கத்தை அடியாகக்கொண்டு உரை எழுதுதலும்,

5. இன்னும் (147. பா. 1-இல்) துகளறுபோதக் கருத்தையும்,

6. (152. பா. 9-ல்) திருவருட்பயன் கருத்தையும்,

7. (155. பா. 6-ல்) சிவஞானசித்தியார் 296, 323 கருத்துக்களையும்,

8. (157. பா. 7-ல்) சிவஞானபோதச் சிற்றுரைப் பகுதியையும் 304, 291 விருத்தக் கருத்தையும்,

9. (224. பா. 4-ல்) சிவதருமோத்தரக் கருத்துக்களையும்,

10. (24. பா. 3-ல்) திருவுந்தியார் 7-ம் செய்யுளின் கருத்தையும் உள்ளடக்கி எழுதுதலும், ஆசிரியரின் பரந்துபட்ட சித்தாந்தப் பேரறிவையும், சித்தாந்த ரத்நாகரம் என்ற சிறப்புப்பெயரின் வாய்மையையும் நன்கு விளக்கி நிற்கின்றன.

## 3 இலக்கணநூற்புலமை:

ஆசிரியரின் இலக்கணநூற் புலமை, உரையில் காட்டும் இலக்கண நுண்கருத்துக்களாலும், நூற்பாக்களாலும் இனிது புலனாகும்.

1. 'கறுப்பும் சிவப்பும் வெகுளிப்பொருள' (பதி. 137. பா. 4. உரை)

2. 'முந்நிலைக்காலமும் தோன்றும் இயற்கை எம்முறைச் சொல்லும் நிகழுங்காலத்து மெய்நிலைப் பொதுச்சொற் கிளத் தல் வேண்டும்' (பதி 147 பா. 6. உரை)

3. 'நம்பும்மேவும் நசையாகும்மே' (பதி. 147. 8. உரை) (பதி, 163. 3. உரை)

4. 'தொல் மரபியல் ஆ 37, 38. (பதி. 160. பா. 6 உரை)

5. 'கன்னமும் கோசமும் கையும் என்னும் இன்னமுத் தானத்து இழிவன மும்மதம்' இது பொருட்டொகை நிகண்டு (பதி. 154. பா. உரை.)

6. 'ஐம்பாலறியும் பண்பு தொகுமொழியும் புணரியல் நிலையிடை உணரத்தோன்று' (258. பா. 3.)

7. இல்லென்கிளவி இன்மை செப்பின் வல்லெழுத்து மிகுதலும் ஐயிடைவருதலும் தொல்லை இயற்கை நிலையலும் உரித்தே' (பதி. 195. பா. 9.)

இவ்வாறு இன்றியமையாத இடங்களில் தொல்காப்பியச் சூத்திரங்களையும் அவற்றின் உரைப் பகுதிகளையும் நினை வுறுத்தி உரையெழுதிச் செல்லுதல் அறிவாளர்க்குப் பெரு விருந்தாம். ஆண்டாண்டுப் பாடலில் வரும் சொற்களுக்கு இலக் கணக் குறிப்பு எழுதிச் செல்லுதலும் இவரது இலக்கணப் புலமையை எடுத்துக்காட்டும், எடுத்துக்காட்டாக, பதிக எண்கள் முறையே 137, 140, 142, 161, 173, 176. 204, என்னு மிவற்றிலும் பிறபதிகங்களிலும் ஆசிரியரது இலக்கணக் குறிப்புக்களைக் காணலாம்.

## அணிநூல் :

அணி இலக்கணத்தில் ஆசிரியர்க்குள்ள புலமையைத் தண்டியலங்கார உரைப்பாடலாகிய,

"சீலத்தால் ஞானத்தால் தோற்றத்தால் சென்றகன்ற
காலத்தால் ஆராத காதலால்—ஞாலத்தார்
இச்சிக்கச் சாலச் சிறந்து அடியேற் கினிதாம்
கச்சிக்கச் சாலைக் கனி"

என்பதனை 177 - ம் பதிக 9 - ம் பாடல் உரையில் எடுத்தாளுவ தாலும், இன்னும் உரிய இடங்களில் பாடலில் உள்ள அணி விசேடங்களை விளக்கிச் செல்வதனாலும் புலனாம்.

## 4 வடநூலறிவும் வடசொல்லாட்சியும் :

ஆசிரியரின் வடநூலறிவு ஆகமசாரமாகிய திருமுறைக் குறிப்புரையின் இடையிடையே தெற்றெனப் புலனாகின்றது. 152 - ம் பதிகத்து 6ம் பாடல் உரையில்,

"மொழியானை முன்னொருநான் மறையா றங்கம்
பழியாமைப் பண்ணிசையான பகர்வானை"

என்ற இடத்து, பிருகதாரணியோப நிஷதத்து 4, 4, 10, 6, 5, 11ம் சூத்திரக் கருத்துக்களை விளக்குவதனாலும், 190 -ம் பதிகத்து 8 -ம் பாடல் உரையில் உருவவழிபாட்டின் சிறப்பைச் சர்வ சுரோத சங்கிரகத்துச் சுலோகமொன்றால் விளக்குவதனாலும் (183. 4)

"பரந்தோங்கு பல்புகழ்சேர் அரக்கர்கோனை வரைக்கீழிட்டு
உரந்தோன்றும் பாடல்கேட்டு உவகையளித்தீர்"

என்ற இடத்து, உரந்தோன்று பாடல் என்றது சாமவேதமே என்பதனை விளக்க வான்மீக ராமாயணத்து வாக்கியங்களை எடுத்தாளுவதனாலும், 250 ம் பதிகம். பா. 4 - ன் உரையில் 'உள்ளமிக்கார் குதிரை முகத்தார், என்பதன் உரையில் குதிரை முகத்தார் கின்னரர்கள் என்பதனைவிளக்க அமரகோசம் என்ற வடநூலின் முதற்காண்டத்து 74ம் சுலோகம் காட்டி விளக்கிச் செல்வதனாலும், 248 ம் பதிகம் 5ம் பாடல் உரையில் "கையணிம்மலரால் வணங்கிட வெய்யவல் வினை வீடுமே" என்புழிக் கைநிறையப் பூத்தூவி வழிபடுதலை வடமொழிச் சான்று காட்டித் தெளிவுறுத்துவதனாலும், இன்னோரன்ன பிற வற்றாலும் ஆசிரியரின் வடநூலறிவு ஒருவாறு புலனாம்.

இவர்தம் உரையில் செந்தமிழ்ச் சொற்களே நிறைந் திருக்கும். இருப்பினும் ஆண்டாண்டு வடசொல்லாட்சியும் உண்டு. உடையாய் என்பதனைச் சுவாமி என்றும், அரவணியன் என்பதனைச் சர்ப்பாபரணன் என்றும், வினையைக் கர்மம் என்றும், முக்கண்ணினன் என்பதனைச் சோம சூரியாக்கினி நேத்திரங்களை உடையவன் என்றும், மருந்து என்பதனை பவரோக வைத்யநாதன் என்றும், அரவா என்பதனை ஹர! வா என்றும், நயன் என்பதனை நீதி சொரூபன் என்றும் பொருப்பின் மங்கை என்பதற்கு இமாசலகுமாரி என்றும், அறவன் என்பதற்குத் தருமரூபி என்றும், வாய்மையர் என்ப தற்குச் சத்தியரூபர் என்றும், தக்கன் என்பதற்குத் தக்ஷன் என்றும் உரையில் பல இடங்களிலும் தமிழ்ச் சொற்களுக்குப் பொருள் காணுமிடத்து வடசொல்லாட்சியையும் சிறுபான்மை கையாண்டுள்ளார். இது இவர் வடமொழியின்பால் தமிழோ டொத்த பெருமதிப்பு வைத்துள்ளவர் என்பதனைத் தெளிவுற விளக்குவதாகும்.

## 5 சோதிடநூற்புலமை:

சோதிடம் நம்நாட்டின் தொன்றுதொட்ட கலை. வானத்து விண்மீன்களைக்கொண்டு காலத்தை - வாழ்வைக் கணக்கிட்ட கலை இது.

> "மைம்மீன் புகையினும் தூமம் தோன்றினும்
> தென் திசை மருங்கின் வெள்ளி ஓடினும்"

என்கிறது புறநானூறு. (117.) மைம்மீன் என்பது சனியை. சனி புகைதலாவது இடபம், சிங்கம், மீனம் இவற்றோடு மாறு படுதல். இந்தமூன்றனுள் சனியின் பகைவீடாகிய சிங்கராசியில் சனிபுகின் உலகிற்கே பெருந் தீங்குவிளையும் என்பது சோதிட நூற் கொள்கை. இதனைத் தமிழ்முன்னோர் தெரிந்திருந்தனர்.

> "கரியவன் புகையினும் தூமம் தோன்றினும்
> விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்"

என்று இசைக்கிறது சிலம்பு. (10-102. 103.) எனவே சோதிட நூல் அறிவு தமிழர்க்கு மிக்கிருந்தது என்றறியலாம்.

நம் உரையாசிரியரும் தமிழர்க்குரிய இப்பழங் கலையில் சிறந்த புலமைமிக்குள்ளவர் என்பதனைக் குறிப்புரை கூறு கின்றது. 221-ம் பதிகமாகிய 'வேயுறு தோளிபங்கன்' எனத் தொடங்கும் பதிகத்துரை நன்குகாட்டும். திருமறைக்காட்டில் பாலறுவாயர் இருந்த காலத்துப் பாண்டியன் மாதேவியார் வேண்டுகோளுக்கிசைந்து ஆண்டெழுந்தருளுதற்குத் தூண்டிய மனத்தினராய்ப் புறப்படுங்கால் நாவரசப் பெருந்தகையார், அமணர் கொடியர்; உறுகோள் தாமும் கொடியஎன உணர்த்தப், பரசுவது நம் பெருமான் கழல்கள் என்றால் பழுதணையாது என்று கூறியருளிப் பின்னர்த் திருவாய் மலர்ந்தது இத்திருப் பதிகம். இதனுள் 2-ம் திருப்பாடலில்,

" ஒன்பதொடு ஒன்றொடுஏழு பதினெட்டொடாறும்
உடனாய நாள்கள் அவைதாம்
அன்பொடு நல்லநல்ல அவை நல்லநல்ல
அடியாரவர்க்கு மிகவே "

எனவரும் வரிகட்குள்ள ஆசிரியர் உரை சீரியதாகும்.

'ஆயில்யம், மகம். விசாகம், கேட்டை, திருவாதிரை, பரணி, கார்த்திகை, பூரம், சித்திரை, சுவாதி, பூராடம், பூரட்டாதி என்ற ஆகாத விண்மீன்களும், இன்னும் ஆகாத திதிகளும் கிழமைகளும் அடியார்க்கு நல்லனவே' என்று ஆசிரியர் எழுதுதலும்.

"ஆதிரை, பரணி, ஆரல் ஆயில்யமுப்பூரம் கேட்டை" என்ற சோதிடநூற் பாட்டை உதாரணமாகக் காட்டி விளக்கு தலும், இப்பதிகத்து இறுதித் திருப்பாடலில் கோள், நாள் என்பவற்றின் பொருளைத் தெளிவுபடுத்தியிருத்தலும் ஆசிரி யரது இத்துறைப் புலமையை நன்கு விளக்கும்.

## 6 புதியனபொருள்கள் :

1. 'நாடி ஞானசம்பந்தன் செந்தமிழ் கொண்டிசை
   பாடும் ஞானம் வல்லார் அடிசேர்வது ஞானமே'

(138. 11) என்பதன் உரையில், சைவமும் தமிழும் தழைத்தினிது ஓங்குக என்ற தொடரில் தமிழ் என்பது திருமுறைகளையே குறிக்கும் என்று தெளிந்து எழுதுதலும்

2. செந்து என்பது ஒரு பெரும்பண் என்று எழுதுதலும் (139. 10)

3. இசை - வேதாகம முழக்கம்; புகழ் எனல் பொருந்தாது (140. 10) என்று வரைதலும்,

4. கலிகடந்த கையான் என்றது திருஞானசம்பந்தர் எரி ஓம்பும் திருக்கையால் அளவற்றோரது வறுமை நீக்கிய உண்மையை உணர்த்தி நின்றது என்று எழுதுதலும் (142. 12)

5. காலகாலர் என்பதற்கு இயமனுக்கும் கால முடிவைச் செய்பவர் என்று எழுதுதலும் (143. 2.)

6. மேற்கண்ட பாடலிலேயே ஞாலம் என்பது 'தொங்குவது' என்ற காரணப் பொருளதாய் முன்னோரது பூகோள ககோள ஞானத்தை உணர்த்துவது அறிக என எழுதுதலும்,

7. பிறை - பிறத்தலுடையது எனப்பொருள் காண்டலும் (143. 7.)

8. ஆனைந்துள் பால், தயிர், நெய், என்ற மூன்றே சைவாசாரியர் கொண்டாடியன என நுண்பொருள் காணுதலும் (146. 5.)

9. ஏத்தல் - இறைவன் புகழை எடுத்தோதுதல். எடுத்தலோசையே தோத்திரங்களுக்கு உரியது என்று எழுதுதலும் (146. 7.)

10. மாந்தர் மனிதரிற் சிறந்தார் எனப் பொருள் கோடலும் (147. 6.)

11. 'கந்தண்பூங் காழியூரான் கலிக்கோவையால் சந்தமே பாடவல்ல' (148. 11.) என்ற இடத்துக் கலிக்கோவை என்பதற்கு ஒலிமாலை எனவும், 'ஒண்கலியைப் பொன்றும் கவுணியன்

அருளிய கோவையாகலின் கலியைத் தீர்க்கும் கோவை எனலு மாம் எனவும், கலியுகத்துக்கோவை கலிவிருத்தக்கோவை எனல் பொருந்துமேற்கொள்க எனவும் அழகுற எழுதுதலும்.

*12.* 'இமையோர் தொழும் வேதனை' (*149. 3.*) என்புழி இமையோர் தேவர் என்று பொருள் கூறல் சைவ நூல்களுக்குப் பொருந்தாது. கண்ணிமைத்துக் காணுத யோகியர், விழித்தகண் குருடாத்திரிவீரர் என்பதே உண்மைப் பொருள் என்று தெளிவுறுத்தலும்,

*13.* 'கண்ணனும் நான்முகனுங் காணு விண்ணினை என்புழி (*150. 9.*) 'விண் திருச்சிற்றம்பலம் என்று எழுது தலும்,

*14.* மரியார் - திருவடி வழிபாட்டால் பிறவி நீங்கியவர் (ஜீவன்முக்தர்) என்று எழுதுதலும் (*154. 9.*)

*15.* 'தடுமாறு, வல்லாய் தலைவா! மதியம்' (*157. 7.*) என்ற இடத்துத் 'தடுமாறு வல்லாய் உயிர்கள் உன்னை உணர் வதில் தடுமாறுதலைச் செய்யவல்லவனே என்றும், இச்சொல்லைத் தட்டுமாறுதல் என்பதன் மரூஉவாகக்கொண்டு அஃது ஈண்டுத் திருக்கூத்தைக்குறித்து நின்றது எனலுமாம்' எனப்புத்துரை காண்டலும்,

*16.* 'வண்டிரைமதிச்சடை' என்புழி (*165. 2.*) புனலில் உள்ள வளம் பற்றியதாகவும், அலையின் வளம் பற்றியதாகவும் ஈருரை காண்டலும்,

*17.* 'புடங்கருள் செய்தொன்றினை புறம்பயம் அமர்ந்தோய்' என்புழி (*166. 9.*) புடம் + கருள் + செய்து எனப்பிரித்து இருள் மறைக்கப்பட்டாற்போல அறியாமையால் மறைக்கப் பட்டு என்றும் புள் + தங்க + அருள்செய்து என்று பிரித்தும் இரு புதுப்பொருள் காண்டலும்,

*18.* 'பருத்துருவதாகி விண் அடைந்தவன்' என்புழி (*159. 9.*) பிரமன் ஒரு கற்பத்தில் கழுகாகி முடி தேடினுன் என்ற திருமுறைப் பேருண்மையைச் செவ்விய முறைநின்று ஆதாரம் காட்டித் தெளிவுறுத்தலும்,

19. 'நல்லார்பயில்காழி' என்புழி (171. 11) நல்லார் ஞானியர் என்றுரைத்தலும்,

20. 'இது நன்கு இறைவைத்து அருள்செய்க' என்புழி, (173. பா. 1.) 'பின்வருவன வினாக்களாதலின் அவற்றிற்குச் 'செவ்வனிறையோ இறைபயத்தலோ செய்க' என்றருளினர் என்று புத்துரை காண்டலும் ('இதற்குப் பிறர் இயையாது பொருள் உரைத்தார் என்பதும் இப்பொருள் மிக்க மகிழ்ச்சி விளைவிப்பதும் ஈண்டு உணரத்தக்கன.)

21. தேங்கனி அரியதொரு சொல்வழக்கு என்றலும் (174. 3.)

22. 'ஏழைபங்காளன்' என்பதற்கு உமையொருபாகன் என்பதே பொருள் என்றும், வறியர் பங்கை ஆள்பவன் என்று கூறுதல் மாபாதகம் என்று எழுதுதலும்,

23. 'தள்ளாய சம்பாதி' என்புழி (179. 1.) தாழ்ந்த பறவைகள் எனக்கருதித் தள்ளிவிடத்தகாத என்றும், தள்ளுதல் ஆன எனப் பொருள் எழுதுதலும். (இங்கு யகரத்தை ஆன்மா வாகக்கொண்டு கூறிய பொருள் அச்சுப்பிழையால் விளங்காது போயிற்று. பக்கம் 194. பா. 9-இன் குறிப்பில் உண்மைப் பொருள் கூறியது காண்க.)

24. 'பிச்சை பிறர் பெய்யப் பின்சாரக் கோசாரக்' என்புழி (180-10.) கோசார - தலைமை தன்னைப் பொருந்த என்றும், யானைசார என்றும் பொருளெழுதுதலும்,

25. 'பெருஞ்சாந்தி காணாதே போதியோ பூம்பாவாய்' (183-10.) என்புழிப் பெருஞ்சாந்தி என்பது பவித்திரோற் சவமே; கும்பாபிடேகம் அன்று என்று புதுப்பொருள் உரைத் தலும்,

26. 'கொழுநற் றொழுதெழுவாள்' என்புழி (188-5.) படுக்கையின் நின்று தொழுதுகொண்டே எழுதல் செய்வாள் என்று பொருள் காணலும்,

27. 'துன்னும் கடல் நஞ்சு இருள் தோய்கண்டர் தொன் மூதூர் என்புழி (199-1.) தொன்மை முதுமை என்ற இரு சொற்களின் தன்மையைவிளக்கி அழகுற உரையெழுதுதலும்,

28. 'தமிழ்க்காழி' (209 5) என்றதால் ஸ்ரீ காளிபுரம் என்றதன் திரிபு சீகாழி என்ற கூற்று ஆராயத்தக்கது' என்று குறிப்பாக அது பொருந்தாது என்றுரைத்தலும்,

29. 'மதிலெய்த ஞான்று' என்பதற்கு மதிலெய்த நாளன்று என்று நுண்ணிதின் பொருள்காண்டலும் (222-3.)

30. 'சொன்னவாறு அறிவார்' என்பதன் கருத்தை விளக்கியதிறனும் (234. 1.) பகலில் துருத்திவாசமும் இரவில் வேள்விக்குடி வாசமும் பரம்பொருளுக்கு உண்டு என்று எழுதுதலும் (234-4.)

31. 'கலங்கொள் கடலோதம் உலாவு கரைமேல் வலங்கொள்பவர் வாழ்த்திசைக்கும் மறைக்காடா, என்புழி. திருமறைக்காட்டில் வழிபடும் முறைமை ஏனையதலங்களினின்று வலம் வருதலின் வேறுபட்டது. திருக்கோயிலை வலம் வரல் ஏனையதலங்களில். திருமறைக்காட்டையே வலம் வருதல் இத்தலச்சிறப்பு என்று பொருள்கண்டுள்ளதும் முதலிய இடங்களைச் சிந்தித்துப்பார்த்தால் ஆசிரியருடைய நுண்ணறிவும், உரைநலனும், புதிய பொருள் வகுக்கும் புலமையும், பிறவும் இனிதுவிளங்கும்.

## 7. தருக்கநூற்புலமை.

வடமொழியிலும் தமிழிலும் உள்ள தருக்கநூல்களை ஒருசேரக்கற்றநம் ஆசிரியர். பொருள் எழுதுங்கால், அவற்றைப் பற்றியஐயங்களைத் தாமே எழுப்பிக்கொண்டு அதனைத் தெளிவாக்கிச்செல்வர்; குறிப்புரையின் பல பகுதிகளில் ஆசிரியரதுஇவ்வழக்கத்தைக் காணலாம்.

எடுத்துக்காட்டாகத் திருவலஞ்சுழிப் பதிகத்து 138. இறுதியில், 'சைவமும் தமிழும் தழைத்தினி தோங்குக' என்ற தொடரில் 'தமிழ்' என்றது திருமுறைகளையே குறிக்கும். பழந்தமிழ்நூல்களையும், தமிழ் மொழியையும் குறித்ததன்று என்று

கூறி. அதற்குரிய காரணத்தையும் தாமே விளக்கி ஐயத்தைத் தெளிவித்துவிடுகின்றார். 1. 'அவை வேறுபல சமயக் குறிப்புக் களையும் கொண்டிருத்தலாலும், 2. சைவத்தோடு நெருங்கிய தொடர்பில்லாமையாலும், 3. தமிழில் பிறசமய நூல்கள் பல உள்ளமையாலும் அவற்றை ஈண்டுச் சைவத்தோடுசேர்த்து வாழ்த்தினர் என்றல் பொருந்தாது.' சைவமும் சைவத்தைச் சார்ந்த தமிழும் தழைத்து இனிது ஓங்கவேண்டும் என்று பொருள்காணல் எத்துணை அழகாக உள்ளது! திருவான்மியூர்ப் பதிகத்துத் 'தோனயங்கமராடையினீர்' என்பதற்கு (140. 3) உரைகாணுங்கால் அத்தொடருக்குள்ள பொருளை அறிதலில் உள்ள இன்னல்களைத் தருக்க நூன்முறையில் ஆசிரியர் வரைவது கழிபேருவகை பயப்பதாகும்;

'தோனயங்கமரா டையினீர்' என்பதற்குச் செம்பொருள் கொள்ளல் எளிதன்று. தோல் ஆடை இரண்டற்கும் இடையில் உள்ளதைப் பிரித்தல் எவ்வாறு? நயம் கமர் என்னின் கமர் என்பதன் பொருள் யாது? நயங்கு அமர் என்னின் நயங்கு என்பது தமிழில் இல்லை. தோன் எனப்பிரித்தல் ஒவ்வாது?

திருச்சிக்கற் பதிகத்துத் 'தெற்றலாகிய தென்னிலங்கைக் கிறைவன்' என்ற தொடர்க்கு (144-8.) உரைகாணுங்கால், தெற்றல் - அறிவில் தெள்ளியவன் என எழுதி, அதற்கு இலக்கிய மேற்கோளுண்டோ என்ற வினாவைத் தம்முள் எழுப்பிக்கொண்டு அதற்குச் சான்று பகர்வார்போன்று 'நடை கற்ற தெற்றல்' என்ற திருவாய்மொழி வரியை எடுத்துக் காட்டி, பிறர்கூறும் புதுப்பொருளாகிய மாறுபாடுடையவன் என்பது ஆதாரமில்லாத பொருள் என்று ஆணித்தரமாக முடிவு காட்டியிருப்பது அறிவாளர்க்கோர் பெருவிருந்தாம். இன்னும் அவ்விடத்தே ஆசிரியர் வற்புறுத்தும் கருத்து மிக மிகப் போற்றத்தகுந்தது. அச்சிரிய வரியினைக் காண்க :-

'இராவணன் ஒழுக்கத்திற் பிழைத்தவனேயாயினும் அறிவிற் சிறந்தவன்'.

திருக்கோழம்பப் பதிகத்து 'ஏதனை ஏதமிலா இமையோர் தொழும் வேதனை' என்றவிடத்து (149-3.) உரை கொள்ளுங் கால், 'இமையோர் என்பதற்குத் தேவர் என்று பொருள்

கூறுவர், இது சைவநூல்கட்கு ஒவ்வாது' என்று முன்னர்க் கூறி, பின்னர் அவ்வாறு பிறர் பொருள் கூறுவதன் காரணத்தை விளக்குவாராய் 'இமைத்தலில்லாதவர் என்னும் சாமான்யம் பற்றி இவ்வாறு கூறுவர்' என்று தெளிவுறுத்திப் பின் தாங் கொண்ட பொருளை நிறுவுவாராய், 'இமையவர்க்கு அன்பன் திருப்பாதிரிப்புலியூர்த் தோன்றாத் துணையாயிருந்தனன், என்பதில் தேவர்க்கு அன்பன் எனல் பொருந்துமோ? கண் இமைத்துக்காணாத யோகியர், 'விழித்தகண் குருடாத்திரி வீரர் என்பதே உண்மைப்பொருள்' என்று இறுதியில் உறுதி யாக இயம்பியுள்ளமை எண்ணுந்தோறும் உரைகாரர் உலகுக்கு இறும்பூது பயக்கும் இடமாம்.

திருவாக்கூர்த் தான்றோன்றிமாடப் பதிகத்துக் 'காரார்பூங் கொன்றையினான் காதலித்த தொல்கோயில்' (178-2.) என்ற விடத்துச் சிறந்தமுறையிலே ஆசிரியர் உரைகண்டுள்ளார். வேண்டுதல் வேண்டாமை (விருப்பு வெறுப்பு) அற்ற கடவு ளுக்கு இவ்வாறு காதல் உண்டென்ற குற்றம் தோன்றும் என்று தாமே தடை எழுப்பிக்கொண்டு, பின் அது பொருந்தா வாற்றையும் தாமே, 'அன்பர்க்கு அன்பன், அல்லாதார்க்கு அல்லன் என்புழிப் பக்குவ அபக்குவங்களைக் காரணமாகக் கொள்ளல்போற் கொள்க. ஆண்டவனுக்கு வேறுபாடில்லை; என்று நிறுவியிருக்கும் அறிவின் திறத்தை என்னெனப் போற்றுவது! 'கொன்றையான் காதலித்த கோயில்' என்ற தொடரில் ஆசிரியர் தம்முடைய நுண்ணறிவால் தடையை எழுப்பி விடைகாண்கின்ற இந்த இடம், தொல்காப்பிய மரபியல் 'வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன் கண்டது முதனூலாகும்' (649) என்ற சூத்திரத்தில், பேராசிரியர் 'வினையின் என்ற வேற்றுமை, நிற்பதன் நிலையும் நீங்குவதன் நீக்கமும் கூறுமாகலின் ஒரு காலத்து வினையின்கண் நின்று ஒருகாலத்து நீங்கினான் போலக் கூறியது என்னையெனின்' என்று தம் நுண்ணறிவுத் திறத்தால் எழுப்பும் அழகிய தடைப்பகுதி அமைந்த உரைப்போக்கை நினைப்பூட்டுகிற தன்றோ? இதுபோன்று தருக்கநூல் முறையில் உரை எழுதுதலே தமிழர் கண்ட உரைநெறியாம்.

திருப்பாண்டிக் கொடுமுடிப் பதிகத்துத்

'தனைக் கணிமாமலர் கொண்டு தாள்தொழுவாரவர் தங்கள் வினைப் பகையாயின தீர்க்கும் விண்ணவர்'

(205-2.) என்புழி, விண்ணவர் என்பதற்கேற்ப முதலில் 'தமை' என்று இருத்தல்வேண்டும்; என்றுகூறி, ஆசிரியர் திருவாக்கில் அமைதிகாண்பாராய், ஒருமைக்கும் பன்மைக்குமுரிய கடவுளைக் கூறலின் குற்றமாகாது? என்று அழகுபெறக் கூறியுள்ள இடம் நெஞ்சை அள்ளும் தீஞ்சுவை மிக்கது.

## 8 மாறுபாடுநீக்கும் மாண்பு :

மாறுபாடு தெரிந்து கொள்ளவேண்டிய சொல்வழக்குகள் ஆங்காங்கு ஆளப்படும்போது, அவற்றைத் தெளிவாக்கி ஐயம் போக்குவதும் ஆசிரியர் வழக்கமாகும். உதாரணமாக, உணவும், இரையும் வெவ்வேறு என்பதனை (137-5) யும், 'ஈசன் இந்திர நீலபர்ப்பதம். கூசி வாழ்த்துதும் குணமதாகவே' என்ற சம்பந்தர் திருவாக்கிலுள்ள கூசுதலும், 'நேசம் தன்பால் இல்லாத நெஞ்சத்து ஈசர்தம்மைக் கூசன் காண் கூசாதார் நெஞ்சுதஞ்சே' என்ற அப்பர் திருவாக்கிலுள்ள கூசுதலும் வேறு வேறானவை என்பதனை (163-4,) யும், குழையும் தோடும் வெவ்வேறானவை என்பதனை (164-2.) யும், மறை எனப்படுவதும் வேதம் எனப் படுவதும் வெவ்வேறாக விளங்குபவை என்பதனை (170-9.) யும், தேய்ந்து மலியும் பிறையும் சிவபெருமான் திருமுடிமேற் பிறையும் வேறானவை என்பதனை (181-5.) யும், ஆர்திரையான் என்பதும், ஆதிரையான் என்பதும் ஒருபொருளவே என்பதனை (183-4 ) யும், உவகை என்பதே உகவை எனப் புள்ளி மாறி நின்றது என்பதனை (196-7,) யும், தொன்மையும் முதுமையும் வெவ்வேறு தொல்பொருள் உடையன என்பதனை (199-1.) யும், ஆசிரியர் அழகுபெற விளக்கிச் சிந்தனையில் 'அதுவோ இதுவோ' எனத்தோன்றும் ஐயங்களை அறுத்து, மாறுபாடு நீக்கியுள்ள மாண்பு சொல்லுந் தரத்ததன்று.

## 9 பதசாரம் எழுதுதல் :

பழைய இலக்கியங்களுக்கு உரைகண்ட அறிஞர்கள் பதசாரங் காண்பதனை ஒன்றாகக் கொண்டிருந்தனர். சொல்லின் சாரத்தைப் பிழிந்து வடித்துப் பயில்வோர்க்குத் தரப்படுவதே பதசாரம். நம் ஆசிரியரும் தம் குறிப்புரையில் ஆங்காங்குத் தேவைப்படும் இடங்களில் அழகாகப் பதசாரம் தந்துள்ளார்.

எடுத்துக் காட்டாகச் சில இடங்களை ஈண்டுக் குறிப்போம்;

'திரிகரணங்களாலும் ஆகும் வினைகளை அத்திரிகரணங் களாலும் தீர்க்கும் வழிகள் தியானம், தோத்திரம், நமஸ்காரம் பூஜை முதலியவை. அவற்றுள் தியானமே உத்தமமாகலின் 'உள்க வல்லார் வினையும்'' என்று அருளினர். (150-5.)

'வெள்ளத்தில் மிதந்த வரலாறுபற்றிக் "கடலார் வேணு புரம்'' என்ருர். (153-1.)

'காவிரிநீர் நாட்டு வளத்திற்கே பெரிதும் பயன்பட்டுக் கடலிற் சேர்வது மிகச் சிறிதேயாகலின் பாயும் என்னுது "மேவும்" என்ருர். (174-1.)

இன்னோரன்ன பல இடங்களில் ஆசிரியரது பதசாரம் எழுதும் மாண்பு நமக்குப் புலனுகிறது. இதன்மூலம், தேவாரத் தைப் பாடியருளிய சமயாசாரியரது திருவுள்ளம் எப்படியிருந் திருக்கும் என்ற நல்ல சிந்தனைக்குரிய நல்லெண்ணம் உருவாகிற தன்ருே?

## 10. இலக்கியப்பயிற்சி:

உரையாசிரியரின் இலக்கியப் பயிற்சியை அவர் உரையில் கையாளும் இலக்கியப் பகுதிகளாலும், இலக்கியப் பகுதிகளை உரை நடையாக எழுதிக் காட்டிச் செல்லும் இடங்களாலும் அறியலாம். சங்க இலக்கியங்களில் புறம், அகம், கலி, குறுந் தொகை, பரிபாடல் முதலியவையும், சித்தாந்த சாத்திரங்களில் சித்தியாரும், முத்தி நிச்சயமும், சோமசம்புபத்ததி, சிவதரு மோத்தரம், சிவஞானபோதச்சிற்றுரை முதலியவையும். திரு முறைகளில் ஏனைய திருமுறைகளிலிருந்து எடுத்தாளப்படும் ஒப்புமைப் பகுதிகள் முதலியனவும் ஆசிரியரின் இலக்கியப் பயிற்சியைக் காட்டும் ஆதாரங்களாகும்.

உரை காண்பது என்பது ஒரு கலை, ஆழ்கடலிலே மூழ்கி அழகு முத்தை எடுத்து அவனிக்கு முன்னே அணிபெற வைப் பது போன்ற அருங்கலை அது. பரந்து ஆழ்ந்த இலக்கியப்பயிற் சியும், இலக்கணப் புலமையும், நுண்மாண்நுழை புலமும் உடையார்க்கன்றிப் பிறர்க்கு அது வாய்க்காது என்பதனைத் தெளிவாக்குகிறது ஆசிரியரின் அழகுபொதிந்த குறிப்புரை.

## 11. நன்றிமறவா நன்னயம்:

செய்ந்நன்றி மறவாமை செந்தமிழ்நாட்டின் விழுமியபண்பு. நன்றிமறக்கும் மூடத்தெங்குகளை நம் நாட்டில் எங்கும் காண

இயலாது, அதனாலன்றோ வள்ளுவரும் இதனை ஒரு அதிகாரப் பொருளாக்கினார்! கம்பன் தன்னையாதரித்த சடையப்பரைத் தன் கவிதையில் வைத்து வாழ்த்திசைத்தான்! சங்ககாலக் கவிஞர்கள் தம்மை ஆதரித்த பெருமன்னரை-அவர்தம் நாட்டை உவமையின் வாயிலாகவும், பிறவாறாகவும் எடுத்துப் பலபட ஏத்தித் தம் நன்றிமறவா நன்னயத்தை நன்கு புலப்படுத்தினர்! இந்தக் கவிஞர் மரபிலே - பொய்யடிமை இல்லாப் புலவர் குழுவிலே திகழும் நம் உரையாசிரியரும் தம்நன்றி மறவா நன்னயத்தை நன்கு புலப்படுத்தியுள்ளார்.

திருமுறைக்கு உரை எழுத ஆதரவுதந்த தருமையின் 25-ஆவது குருஞானசம்பந்தரை-தமிழ்நாட்டின் ஞானவிளக்கை-தவநெறிக்குன்றை - தமிழ்வளர்க்கும் ஆரமுதை - செந்தமிழ்க் குருமணியைத் தக்க இடத்தில் போற்றிப் புகழ்ந்துள்ளார்; திருக்கடவூர் மயானத்துப்,

'பாசமான களைவார் பரிவார்க்கமுதமனையார்
ஆசைதீரக் கொடுப்பார் அலங்கல்விடைமேல்வருவார், (216.7.)

என்றவிடத்து, ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானமவர்கள் இப்பாடலுக்குக் கூறியருளிய விளக்கத்தையும், ஆசை தீரக்கொடுப்பார் என்ற தொடர்க்குக் கூறியருளிய நயத்தையும் போற்றிப் புகழ்ந்துள்ளார். இஃது ஆசிரியர் திரு. முத்து. சு. மாணிக்க வாசக முதலியார் அவர்கள் குருமகாசந்நிதானம் அவர்களது திருவருள் வளத்தில் தோய்ந்திருக்கும் மாண்பும் பணிவோடு கூடிய நன்றிமறவாப் பாங்கும் கொண்டவர்கள் என்பதனைத் தெளிவுறுத்தும்.

## வாழிய வையகம்:

குறிப்புரை மாட்சிகளை ஒவ்வொன்றாக எடுத்து விளக்கிக் கொண்டே போவோமானால் காலமும் கருத்தும் விரியும். 'உரைப்போர் உள்ளக் கருத்தினளவே பெருமை' என்பது வல்லார் வாய்மொழி. எனவே விரிவஞ்சி இவ்வளவில் நிறுத்துகிறேன். இன்னோரன்னமாட்சிகள் பலவும் செறிந்த மாற்றுயர்ந்த பசும்பொன்னை வார்த்து நல்லணி ஆக்கினாற் போன்ற-அழகு பொங்கிப் புது நலம் துளிர்க்கும் குறிப்புரையைத் தக்க தமிழ்ப்பேராசிரியரின் வாயிலாகத் தமிழ்நாட்டுக்குக் கொடுத்தருளிய எங்கள் குருமகாசந்நிதானமவர்கள் பெருங்கருணைத் திறத்தை என்னெனப் பேசுவது! 'குறிப்புரையால் குவலயம் குறிக்கோளை உணர்ந்து தெய்விக உணர்வு கொள்ளட்டும்,

என்ற அவர்கள் திருவுள்ளக்குறிப்புக்குத் தமிழ்நாடு என்றென்றும் கடமைப்பட்டுள்ளது.

தருமைத் திருமடம் இன்று திருமுறை வளர்ச்சிக்குப் பெருகிய தொண்டு செய்து பேணுமாபோல், பண்டும் 'மிகு சைவத்துறை விளங்கத்' திருமுறைப் பணியும் செய்துளதென் பதனை அறிவுலகம் அறியும். இற்றைக்குச் சற்றேறக்குறைய அறுபதாண்டுகளுக்கு முன்னே விசய ஆண்டு சித்திரைத் திங்களில், தருமையாதீனத்துத் தவப்பெருந் தலைவராக வீற்றிருந்தருளிய ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிகமூர்த்திகள் அருளாணைப்படி செந்தில்வேலு முதலியாரால் தலமுறைப்படி அடங்கன் முறையைத் தமிழ்த்திருநாடு தவமெனப் பெற்றது. தருமைத்திருமடத்தின் ஞானபுத்திரமடமாகிய திருப்பனந்தாட் காசிவாசி இராமலிங்கசுவாமிகளின் அருள்பெற்று விஷு ஆண்டு மார்கழித்திங்களில், மற்றொரு அடங்கன்முறைப் பதிப்பு ஞானசம்பந்தப்பிள்ளையால் செந்தமிழ்த் திருநாட்டுக்குக் கிடைத்தது. பல்லாண்டுகட்குப்பின் இன்றும் திருமுறைப் பணியைத் தொடர்ந்து புரிகிறது நம் திருமடம். இப்பணி

> 'நிலத்திலும் பெரிதே வானினும் உயர்ந்தன்று;
> நீரினும் ஆரளவின்று'

என்று பாராட்டுவதல்லால் கைம்மாறு வேறு யாது?

இக்குறிப்புரை இரண்டாம் திருமுறையின் பொருள் உணர்ச்சி என்ற பூங்காவுக்கோர் புனித முகப்பு. வாழும் தமிழின் வளமான பாதைக்கோர் வழிகாட்டி. காழியர் தவமாகிய ஆளுடையபிள்ளையாரின் திருவுள்ளத்தைத் தெள்ளிதின் காட்டும் கண்ணாடி. சைவர் அகந்தோறும் சான்றாண்மை பரப்ப முற்பட்டிருக்கும் தெய்வத் தென்றல். தமிழ்நாடு தவம் செய்தநாடு. ஆம், தருமைத்திருமடமும், தமிழ் வெளியீடுகளும் ஒருமுகமாகப் பெற்றுச் சிவானந்தப் பெருங்கடலில் திளைப்பது செந்தமிழ்த் திருநாடுதானே!

வாழிய வையகம்! வாழிய சைவம்! வாழிய எம்தருமையாதீனத் திருமடம்! வாழிய எங்கள் முதல்வர் திருவடி!

> வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்!
> வீழ்க தண்புனல்! வேந்தனும் ஓங்குக!
> ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
> சூழ்க! வையகமும் துயர்தீர்கவே!

---

## திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிய இரண்டாவது திருமுறையின் குறிப்புரையுள்

## மேற்கோளாக உள்ள நூல்களும் பக்கமும்

---

*முதல் ஏழு திருமுறையுள்ளும் எடுத்தாண்ட பகுதிகளைக் குறிக்கும் இடங்களில் 1, 2, 3 என்பதுபோல எண்கள் குறிக்கப்பட்டிருக்கின்றன. அம் மூன்றெண்களுள், முதலாவது திருமுறையையும் இரண்டாவது திருப்பதிகத்தையும் மூன்றுவது திருப்பாடலையும் குறிப்பன ஆகும். சுந்தரமூர்த்திசுவாமிகள் திருப்பாட்டிலிருந்து எடுத்தாண்ட இடங்களில் தொடரெண்ணும் காட்டப்பட்டிருக்கின்றது.

---

உ

சிவமயம்

# படங்களின் அட்டவணை

# அட்டவணை

## தலமும் பதிகமும் வரலாறும்

| தொடர் எண் | தலமும் பதிகத் தொடக்கமும் | பதிக எண் | பதிகப் பக்கம் | வரலாற்றுப் பக்கம் |
|---|---|---|---|---|
| 36 | திருக் கோடிகா | | | |
| | இன்றுநன்று | 99 | 466 | 78 |
| 37 | திருக் கோட்டாறு | | | |
| | கருந்தடங்கண்ணின் | 52 | 231 | 82<br>165 |
| 38 | திருக் கோட்டூர் | | | |
| | நீலமார்தரு | 109 | 509 | 82 |
| 39 | திருக் கோவலூர்விரட்டம் | | | |
| | படைகொள் | 100 | 469 | 85<br>166 |
| 40 | திருக் கோழம்பம் | | | |
| | நீற்றுனை | 13 | 62 | 86 |
| 41 | திருச் சாய்க்காடு | | | |
| | 1. நித்தலுக் | 38 | 167 | 87 |
| | 2. மண்புகார் | 41 | 182 | |
| 42 | திருச் சிக்கல் | | | |
| | வானுலாவு | 8 | 37 | 89 |
| 43 | திருத் தலைச்சங்காடு | | | |
| | நலச்சங்க | 55 | 245 | 91 |
| 44 | திருத் நிலைத்தப்பதி | | | |
| | பொடிகள் | 118 | 543 | 92 |
| 45 | திருத் துருத்தி (குற்றாலம்) | | | |
| | வரைத்தலை | 98 | 461 | 93 |
| 46 | திருத் தெங்கூர் | | | |
| | புரைசெய் | 93 | 440 | 95<br>167 |
| 47 | திருத் தெளிச்சேரி | | | |
| | பூவலர்ந்தன | 3 | 12 | 96 |
| 48 | திருத் தேவூர் | | | |
| | பண்ணிலாவிய | 82 | 387 | 97<br>168 |
| 49 | திரு நணா (பவானிமுக்கூடல்) | | | |
| | பந்தார்விரல் | 72 | 334 | 98 |
| 50 | திரு நல்லூர் | | | |
| | பெண்ணமருந் | 57 | 253 | 99 |
| 51 | திரு நள்ளாறு | | | |
| | ஏடுமலிகொ | 33 | 145 | 101 |


GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS LIBRARY
18 OCT 1957
MADRAS



'தொல்பரவை சுமந்தோங்கும் செம்மைத் தோணிபுரம்'



'பால்நறுங் குதலைச் செய்ய பவளவாய்ப் பிள்ளையார்'

உ

குருபாதம்

# இரண்டாவது திருமுறையில் உள்ள
# தலங்களின் வரலாற்றுக் குறிப்பு

## 1. திரு அகத்தியான்பள்ளி

திருக்கயிலையில் வீற்றிருக்கும் அருட்கடலாகிய சிவபெருமானது திருமணக்கோலக் காட்சியைக் காணும்பொருட்டு அகத்தியர் தங்கித் தவஞ்செய்த பதியாதலின் அகத்தியான்பள்ளி என்னும் பெயர்பெற்றது என்பர்.

திருமறைக்காடு (வேதாரண்யம்) ரயில்வே நிலையத்திற்குத் தெற்கே இரண்டுமைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவிரித் தென்கரைத் தலங்களுள் 126 ஆவது ஆகும்.

இறைவர் திருப்பெயர்: அகத்தீசுவரர். இறைவி திருப்பெயர்: பாகம்பிரியாள்நாயகி. சுவாமி கிழக்கு சந்நிதி. அம்மன் தெற்கு சந்நிதி. அகத்தியர்கோயில் மூலத்தானத்திற்கு மேற்கில் உள்ளது. பழையவேலை செங்கல்லால். புதிய வேலை கருங்கல்லால். அம்மன் உருவம் சிறியது. கோயில் இருபது ஆண்டுகளுக்குமுன் புதுப்பிக்கப்பட்டது.

1. அகத்தியதீர்த்தம். இது அகத்தீசுவரர் திருக்கோயிலுக்கு அண்மையில் மேல்புறத்துள்ளது. 2. அக்நிதீர்த்தம். இது அகத்தீசுவரர்சந்நிதிக்குக் கிழக்கே சுமார் ஒருமைல் தூரத்திலுள்ள சமுத்திரதீர்த்தம். 3. அக்நிபுட்கரிணி. இது அகத்தீசுவரர் சந்நிதியில் உள்ள தீர்த்தம். 4. எமதருமதீர்த்தம். இது அக்நிபுட்கரிணிக்கு வடக்கேயுள்ளது. வன்னி தலவிருட்சம்.

---

இக்குறிப்புக்கள் கோயம்புத்தூர், திரு. சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார் B.A., B.L., அவர்களும், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் புலவர், திரு. வை. சுந்தரேச வாண்டையார் அவர்களும் எழுதியுதவியது.

அகத்தியர் பூசித்தது. சிவபெருமானின் திருமணக்கோலத்தை, அண்மையிலுள்ள திருமறைக்காட்டில் காட்ட, கண்டு வணங்கியது. படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழில்களையும் இயற்றும் பிரமன், திருமால், உருத்திரன் என்னும் மூவரையும் தமக்குப் புதல்வராகப் பெறுதற்குத் தவம் இயற்றி அவ்வாறே பெற்றது. எமதருமராசன் சீவன்முத்தி பெற்றது.

இத்தலத்தை வழிபட்டாலும் நினைத்தாலும் தீவினை நீங்கும் பெருமைவாய்ந்தது. திருஞானசம்பந்தர் திருவாய்மலர்ந்தருளிய ஒரு பதிகத்தை உடையது.

கல்வெட்டு: இத்திருக்கோயிலில் சோழமன்னரில் திரிபுவன சக்கிரவர்த்தி இராசராசதேவரது இரண்டாம் ஆட்சியாண்டில் (29-1-1218) பொறிக்கப்பெற்ற கல்வெட்டு ஒன்றும் பிற்காலப் பாண்டியர்களில் (Later Pandiyas) மாறவர்மன் திரிபுவன சக்கிரவர்த்தி குலசேகரதேவரின் ஐந்து, முப்பத்தொன்று இவ்வாட்சி யாண்டுகளில் பொறிக்கப்பெற்ற இரண்டு கல்வெட்டுக்களும், மாறவர்மன், திரிபுவன சக்கிரவர்த்தி வீரபாண்டிய தேவரின் பதினைந்தாம் ஆட்சி ஆண்டில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டு ஒன்றும் ஆக நான்கு கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இவைகள் நுந்தா விளக்குகளுக்கும் நித்திய வழிபாட்டிற்கும் நிலங்கள் அளிக்கப்பெற்ற செய்திகளைக் குறிப்பிடுகின்றன. இராசராசன் ஒரு விளக்கிற்காக 1500 காசுகளும், மாறவர்மன் குலசேகரன் ஐந்தாமாண்டில் பொன் தானமும், முப்பத்தொன்றுமாண்டில் விழா நடத்த நிலதானமும் அளித்தனன்.

See the Annual reports on South Indian Epigraphy for the year 1904. Numbers 504—507.

(Tanjore Dt. Tiruthuraipoondi Taluk.)

## 2. திரு அம்பர்மாகாளம்

அம்பன், அம்பாசுரன் என்ற இரண்டு அரக்கர்களைக் கொன்ற பாவம் நீங்கக் காளி பூசித்த பதியாதலின் இப்பெயர் பெற்றது. இது கோயில்மாகாளம் எனவும் வழங்கப்பெறும்.

இது பேரளம் ரயில்வே நிலையத்திற்குத் தென்கிழக்கே சுமார் நான்குமைல் தூரத்தில் இருக்கிறது. பூந்தோட்டம் ரயில்வேநிலையத்திலிருந்தும் செல்லலாம். அங்கிருந்து கிழக்கே ஒன்றரைமைலில் இருக்கின்றது. இது காவிரியின் தென்கரைத் தலங்களுள் ஐம்பத்தைந்தாவது ஆகும். கோயில் ஊர்நடுவில் இருக்கின்றது. இவ்வூரில் நல்லஸ்தபதிகளுண்டு. சோழர் திருப்பணி. ஆனல் பூர்த்தியாகவில்லை.

இறைவரின் திருப்பெயர் காளகண்டேசுவரர். இறைவியின் திருப்பெயர் பட்சநாயகி. கிழக்கு சந்நிதி. அம்மன் சுவாமிக்கு வலப்புறம் தியாகராச சந்நிதிக்கு எதிர்ப்புறம் சுந்தரரும் பரவையாரும் உள்ளனர். தீர்த்தம் மாகாளதீர்த்தம்.

காளியால் பூசிக்கப்பெற்றது. இச்செய்தியை, "காளி ஏத்தும் அழகனுர் அரிவையோடிருப்பிடம் அம்பர் மாகாளந் தானே" என்னும் இத்தலத்துத் தேவாரப் பகுதியால் அறியலாம். இங்குக் காளிக்குத் தனிக்கோயில் தெற்குத் திருச்சுற்றுலையில் (பிராகாரத்தில்) இருக்கின்றது. மாகாள இருடியரும் பூசித்துப் பேறுபெற்றனர். இத்தலத்து இறைவரைப் புதிய மலர், சந்தனம், புகை இவைகளைக்கொண்டு வழிபடுவோர் தாம் எண்ணிய பொருளைப் பெறுவர். இத்தலத்திற்குத் திருஞான சம்பந்தர் திருப்பதிகங்கள் மூன்று உள்ளன.

ஆண்டுதோறும் வைகாசிமாதத்தில் ஆயில்யநாளில் சோமாசிமாற நாயனர் யாகவிழா மிக்க சிறப்புடன் நடைபெறும். அம்பருக்கும், அம்பர்மாகாளத்திற்கும் இடையில் சோமாசிமாற நாயனர் யாகம் செய்த மண்டபம் இருக்கின்றது. சோமாசிமாற நாயனர் அவருடைய மனைவியார் இவர்களின் பிரதிமங்கள் கோயிலில் இருக்கின்றன. அதிகாரநந்தி மானிட உருவம். முன்நந்தி இடம் மாறி இருக்கிறது. நந்திக்கு அருகில் நாயனருக்கு இறைவனும் இறைவியும் காட்சி தரும்வண்ணம் எழுந்தருளியிருக்கிருர்கள். அருகில் நாகநாதர் என்ற பெயரில் மற்ருெரு சிவலிங்கம் இருக்கின்றது.

கல்வெட்டு: 'பூமாது புணர புவிமாது வளர'—என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியை உடைய முதற் குலோத்துங்க சோழதேவரின் மூன்ருm ஆண்டின் கல்வெட்டு, இவ்வூரை

உய்யக்கொண்டார் வளநாட்டு, அம்பர்நாட்டு அம்பர் என்றும் திருக்கோயிலை அம்பரில் உடையார் திருமாகாளம் உடையார் கோயில் என்றும் குறிப்பிடுகின்றது.

விக்கிரமசோழன் காலத்தில், இத்திருக்கோயிலில் ஆளுடைய நாயகரையும் அம்மையாரையும் எழுந்தருளுவித்தவன், க்ஷத்திரிய சிகாமணி வளநாட்டுச் சிறுவேளூரான் அமுதன் திருச்சிற்றம்பலமுடையான் உதயமார்த்தாண்ட மூவேந்த வேளான் ஆவான். இக்கோயிலில் இருக்கும் திருச்சுற்றுமாளிகை விக்கிரமசோழனால் கட்டப்பட்டதாகும். இச்செய்தி "ஸ்வஸ்திஸ்ரீ இத்திருமாளிகை விக்கிரசோழன்" என்னும் கல்வெட்டால் அறியலாகும். இறைவர் திருமாகாளம் உடையார், திருமாகாளத்து மகாதேவர் என்னும் பெயர்களால் வழங்கப்படுகின்றார். இத்திருக்கோயிலுக்கு, புரவுவரி வளாகம், வேதத்தூர், எயினிகுடி என்னும் ஊர்கள் தேவதானமாக வழங்கப்பட்டுள்ளன. இத்திருக்கோயிலில் உமாமகேசுவரிக்குத் தனிக்கோயிலை எடுப்பித்தவன் விக்கிரமசோழ மன்னனாவன்.

See the Annual reports on South Indian Epigraphy for the year 1910—93-117 240-249.

(Tanjore Dt. Nannilam Taluk)

## 3. திரு அரசிலி

அரசமரத்தை இறைவன் இல்லாக உடைமையின் இப்பெயர் பெற்றது என்பர். இது இக்காலம் ஒழிந்தியாப்பட்டு என்று மக்களால் வழங்கப்பெறுகின்றது.

புதுச்சேரி ரயில்வேநிலையத்திற்கு வடகிழக்கே ஐந்து மைல் தூரத்திலுள்ள திருவிரும்பைமாகாளத்திற்கு மேற்கே இரண்டுமைல் தூரத்தில் இருக்கின்றது. இது தொண்டை நாட்டுப் பதியாகும்.

இறைவரின் திருப்பெயர் அரசிலிநாதர். இறைவியாரின் திருப்பெயர் பெரியநாயகி. இறைவன் திருப்பெயர் திருஅரசிலி ஆளுடையார் ஆலாலசுந்தரர் என்றும், திருஅரசிலி ஆளுடையார்

என்றும் குறிக்கப்பெற்றுள்ளது. இவ்வூர்க் கல்வெட்டுக்கள் அனைத்தும், சந்திவிளக்குகளுக்கும் திருநுந்தா விளக்குகளுக்கும் ஆடுகள் விடப்பட்ட செய்திகளை உணர்த்துகின்றன.

வாமதேவ முனிவர் பூசித்துப் பேறுபெற்றது. இத்தலத்திற்குத் திருஞானசம்பந்தர் பாடிய பதிகம் ஒன்று உள்ளது. இங்குள்ள தீர்த்தம் அரசடி தீர்த்தம். குளம் பெரியது.

கல்வெட்டு: இத்திருக்கோயிலில் உள்ள ஐந்து கல்வெட்டுக்கள் அரசியலாரால் படியெடுக்கப்பட்டுள்ளன. இவற்றுள் விக்கிரம சோழதேவர், குலோத்துங்க சோழதேவர் ஆகிய இருவர்களும் குறிப்பிடப்பட்டுள்ளனர். விக்கிரம சோழ தேவரின் ஆருவது ஆண்டு காலத்தில் இவ்வூர் ஜயங்கொண்ட சோழமண்டலத்து ஒய்மானுட்டான விஜயராஜேந்திர சோழவள நாட்டுப் பெருவேம்பூர் நாட்டுத் தேவதானம் திருவரைசிலி என்றும், பன்னிரண்டாவது ஆட்சியாண்டில் ஒய்மானுட்டுத் திருவரசிலி என்றும், பதினுருவது ஆட்சியாண்டில் ஜயங்கொண்ட சோழமண்டலத்து ஒய்மானுடான விஜயராஜேந்திர சோழவளநாட்டுப் பெருவேம்பூர் நாட்டுத் திருவரசிலி என்றும் குறிக்கப்பெற்றுள்ளமையால், முன் இருந்த பெயர் மாற்றப்பட்டு, பின்னும் அதேபெயர் இட்டமை, யாது காரணத்தாலோ அறியக்கூடவில்லை. ஒரே கல்வெட்டுடைய குலோத்துங்கனது ஐந்தாவது ஆட்சியாண்டில் ஜயங்கொண்ட சோழமண்டலத்து ஒய்மானுடான விஜயராஜேந்திர சோழவளநாட்டுத் தனியூர் தேவதானம் திருவரசிலி எனவும் குறிக்கப்பெற்றுள்ளது.

திருவிரும்பை உடையார் திருமாகாளமுடைய நாயனர் கோயிலில் உள்ள கோமாறபன்மரான திரிபுவன சக்கிரவர்த்தி ஸ்ரீ விக்கிரமபாண்டிய தேவரின் இரண்டாவது ஆட்சியர்ண்டில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டில், இவ்வூர் (அரசிலி) "ஜயங்கொண்ட சோழமண்டலத்து மாத்தூர்நாட்டு ஒழுகறையான குலோத்துங்க சோழநல்லூர் திருஅரசிலி உடையார் ஆலால சுந்தரனுர் எனக் குறிக்கப்பெற்றுள்ளது. ஒழுகறை என்னும் பெயரே பிற்காலத்தில் ஒழிந்தியாப்பட்டு என்று வழங்கலாயிற்று என்பர்.

பெருங்கொடை வள்ளலும், பத்துப் பாட்டினுள் மூன்ருவதாகிய சிறுபாணுற்றுப் படைத் தலைவனுமாகிய நல்லியக்

கோடன்; ஓய்மானாட்டினன் ஆவன். அரசிலி ஓய்மானாட்டைச் சேர்ந்தது' அது தென்னாற்காடு ஜில்லா திண்டிவனம் தாலூக்காவில் இருக்கின்றதால் அப்பிரதேசம் ஓய்மானாடாகும்.

See the Annual reports on South Indian Epigraphy for the year 1902. Numbers 194–198.

South Indian Inscription Volume VII No. 821 to 825.

## 4. திரு அரிசிற்கரைப்புத்தூர்

சுவாமி: பழங்காசுவைத்தபரமர். தேவி: சிவாம்பிகை, அழகம்பிகை. இந்தவூரை அழகார்புத்தூர் திருப்புத்தூர் என்று அழைப்பதும் வழக்கம், அரிசில் நதி ஓடுகிறது. கோச்செங்கட்சோழன் திருப்பணி. சொர்ணபுரேசுவரசுவாமி மேற்கு பார்த்த சந்நிதி. சந்நிதித்தெரு அழகாகத் தென்னைமரங்களின் வரிசைகொண்டது. கும்பகோணம் தாலூகா கருவாயிக் கரைப் புத்தூரும் 2-மைலில் உள்ளது.

கல்வெட்டு: ஏழு கல்வெட்டுக்கள் கிடைத்திருக்கின்றன. அவை எல்லாம் சோழர் காலத்தவை.

1. இராசராசன் 7-ம் ஆண்டில் திருப்புத்தூர் உடையார் பரமசுவாமிக்கு 1300 குழி நிலம் வழிபாட்டிற்காக விட்டான். அப்போது மூலகிருகம் கல்லால் படைக்கப்பட்டது. ஊர்ப் பெயர் திருநாரையூர் நாட்டுப் பரமதேயமான பரதாயகுடி என்று கண்டிருக்கிறது.

2. அதே அரசனால் தனது 22-ம் ஆண்டில் ஒரு விளக்குக்காக 3 மா. நிலம் கொடுக்கப்பட்டது.

3. அதே அரசனால் தனது 28-ம் ஆண்டில் விளக்குத் தானம் செய்யப்பட்டது.

4. இராசராசன் காலத்தில் மேல்வேம்பாநாட்டு நல்லார் குடியினன் ஒருவன் சூரியதேவன் கோயில் கட்டினான் என்றும், அதற்கு வழிபாடு நடத்த முப்பது காசு தந்து அதற்கு 6 மா. நிலமும் விடப்பட்டது என்றும் தெரிவிக்கிறது.

5. முதற்குலோத்துங்கன் காலத்தில் வழிபாட்டிற்காக நிலம் தரப்பட்டது.

6. விக்கிரமசோழன் (1125) காலத்தில் திருப்புத்தூர் அழகிய தேவருக்கு ஒருவிளக்குக்காகப் பணம் தரப்பட்டது.

7. கோச்செங்கட்சோழன் : ஒருகல்வெட்டில் குலோத் துங்கச் சோழவளநாட்டு அழகார் திருப்புத்தூர் என்று ஊர்ப் பெயர் குறிக்கப்பட்டுள்ளது.

## 5. திரு அழுந்தூர்

அகத்திய முனிவர் ஈண்டு இறைவரைப் பூசித்திருந்ததை அறியாது ஊர்த்துவ ரதன் என்னும் அரசன் ஆகாயத்தில் செலுத்திய தேர் செல்லாது அழுந்தியதால் இப்பெயர் பெற்றது என்பர். இது இக்காலம் தேரழுந்தூர் என்று வழங்கப்பெறு கின்ற பெயர்க்கே இவ்வரலாறு தோற்றப்பெற்றது போலும், கம்பன் மேடு உள்ள இடம்.

மாயூரம் – கும்பகோணம் போகும் ரயில் பாதையில் தேரழுந்தூர் ரயில் நிலையத்திற்குத் தெற்கே இரண்டுமைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவிரியின் தென்கரைத் தலங் களுள் முப்பத்தெட்டாவது ஆகும்.

இறைவரின் திருப்பெயர் வேதபுரீசுவரர். இறைவியாரின் திருப்பெயர் சௌந்தரியாம்பிகை.

வேததீர்த்தம். இது சந்நிதிக்குத் தென்பால் இருக்கின்றது.

வேதங்கள், தேவர்கள், திக்குப்பாலகர்கள், முனிவர்கள் இவர்கள் பூசித்துப் பேறு எய்தினர். இது திருஞானசம்பந்த ருடைய ஒரேபதிகத்தைப் பெற்றது. "மாமடம்" எனப்படும் சிறப்பு இவ்வூர்த் தேவாரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

இவ்வூர் அழுந்தை என்று மரூஉ மொழியாக வழங்கப் பெறுவதுண்டு. இவ்வழக்கம் திருஞானசம்பந்தப்பெருந்தகையார் காலத்தே வழக்கில் இருந்தது என்பது அவர் தேவாரத்தால்

அறியக்கிடக்கின்றது. இவ்வூர் மறையோர் இறைவனைத் தொழுது வழிபடுதலில் வல்லவர்.

கல்வெட்டு: இத்திருக்கோயிலில் ஆறு கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இவையனைத்தும் மூன்றாங் குலோத்துங்க சோழன் காலத்தனவாகும். இவைகளில் இம்மன்னன் 'திரிபுவன சக்கிரவர்த்திகள் மதுரையும், ஈழமும், கருவூரும் பாண்டியன் முடித்தலையுங்கொண்டு வீராபிஷேகமும் விஜயாபிஷேகமும் பண்ணியருளின திரிபுவன வீரதேவன் எனவும், மதுரையும், கருவூரும், ஈழமும் பாண்டியன் முடித்தலையுங் கொண்டருளிய ஸ்ரீ சோழ கேரளதேவன் எனவும் போற்றப்பட்டுள்ளனன்.

இவ்வூரைத் தன்னகத்துக் கொண்டுள்ள நாடு ஜெயங் கொண்ட சோழவளநாட்டுத் திருவழுந்தூர் நாட்டுத் திருவழுந் தூர் என்று குறிக்கப்பெற்றுள்ளது. சிவபெருமானின் திருப் பெயர் திருவழுந்தூர் உடையார் திருமடமுடைய நாயனார் என்பதாகும்.

இக்கல்வெட்டுக்கள் திருமடமுடைய நாயனார்க்குக் காவிரி ஆற்றினின்று நித்தம் திருமஞ்சனம் கொண்டுவந்து திருமஞ்சன சாலையில் ஒடுக்கித் திருமஞ்சனம் பண்ணுவிக்கக் கடவதற்கு நிவந்தங்கள் அளித்த செய்திகளைப் புலப்படுத்துகின்றன.

N. B:- இக்கல்வெட்டுக்கள் படித்து எழுதப்பட்டன.

(Tanjore Dt, Mayuram Taluk.)

## 6. திரு அறையணிநல்லூர்

பாறையின்மீது அழகாகக்கட்டப்பெற்ற கோயிலை உடைய ஊர் என்று பொருள்படும். பாண்டவர் வனவாச காலத்தில் தாம்கண்ட ஐந்து அறைகள் அந்த நல்லூர்க்கு அலங்காரஞ் செய்யும் காரணத்தால் இப்பெயரெய்தியது என்றும் கூறுவர்.

திருக்கோவலூர் ரயில்வே நிலையத்திற்குத் தென்கிழக்கே அண்மையில் உள்ளது. இது நடுநாட்டுத் தலங்களுள் ஒன்று. இக்காலத்தில் அறகண்டநல்லூர் என்று வழங்குகிறது.

இறைவரின் திருப்பெயர் அறையணிநாதேசுவரர். இறைவி யாரின் திருப்பெயர் அருள்நாயகி. பாறையில் பல்லவர் குடைமண்டபம் இருக்கிறது. வழிசரியாக இல்லை. முருகன் கோயில் திரௌபதியம்மன் கோயிலாக மாற்றப்பெற்றதாகும். கங்கையம்மன் கோயில் ஒன்று புதிதாகக் கட்டியிருக்கிறார்கள்.

தீர்த்தம் பெண்ணையாறு.

பிரசண்ட முனிவர் பூசித்துப் பேறுபெற்றார். இது திரு ஞானசம்பந்தரது ஒரே பதிகத்தைப் பெற்றது.

கல்வெட்டு: இத்திருக்கோயிலில், பிற்காலச் சோழமன்னர் களில் முதலாம் இராசராசசோழன், முதற் குலோத்துங்கன், விக்கிரமசோழன், இரண்டாம் குலோத்துங்கன், இரண்டாம் இராசாதிராசன், மூன்றாங் குலோத்துங்கன், மூன்றாம் இராச ராசன், மூன்றாம் இராசேந்திரசோழன் இவர்கள் காலங்களிலும் பிற்காலப் பாண்டியர்களில் மாறவர்மன் திரிபுவன சக்கிர வர்த்தி சுந்தரபாண்டியன், மாறவர்மன் திரிபுவன சக்ரவர்த்தி விக்கிரமபாண்டியன் இவர்கள் காலங்களிலும், பல்லவர்களுள் கோப்பெருஞ்சிங்கன் காலத்திலும்; விஜயநகர அரசர்களில் சதாசிவ மகாராயர், கிருஷ்ணதேவ மகாராயர், கம்பப்பண்ண உடையார் இவர்கள் காலங்களிலும், சம்புவராயருள் சகலலோக சக்கிரவர்த்தி இராசநாராயண சம்புவராயர் காலத்திலும் பொறிக்கப்பெற்றுள்ள 96 கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

'வீரமே துணையாக' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியை உடைய இராசகேசரி வர்மன் திரிபுவன சக்கிரவர்த்தி குலோத் துங்கசோழ தேவரின் 46 ஆவது ஆட்சியாண்டில் கிளியூர் மலையமான் நானூற்றுவன் மலையமானாகிய இராசேந்திர சோழ சேதுராயன், இத்திருக்கோயிலில் தட்சிணாமூர்த்தியை எழுந் தருளுவித்து, அத்தேவர்க்கு நித்திய வழிபாட்டிற்கும் விளக்கி னுக்கும் வீரசோழநல்லூர் நிலங்களின் வரிகளைக் கொடுத் துள்ளான்.

இத்திருக்கோயிலில் உள்ள, நிருத்தமண்டபம் கிளியூர் மலையமான் பெரிய உடையான் இறையூரானால் கட்டப்பட்டது. இக்கோயிலினுள் இருக்கும் பொன்னனையார் அம்மை (goddess)

கோயில், திரிபுவனவீர தேவர் எனப்படும் மூன்றுங் குலோத் துங்க சோழதேவரின் முப்பதாம் ஆட்சியாண்டில் கருங்கல்லால் கட்டப்பட்டது. இம்மன்னர் காலத்தில் பாண்டி மண்டலத் துப் பட்டண சாமி என்பவரால் இக்கோயிலின் சில பகுதிகள் பழுது பார்க்கப்பட்டன.

முதற் குலோத்துங்கன் தன் ஆட்சியின் முப்பத்தாறும் ஆண்டில் காஞ்சியில் இருந்தான். அதுபொழுது வாண கோவரையன் சுத்தமல்லன் முடிகொண்டான் வேண்டுகோளின் படி, பெண்ணையாற்றின் வடகரையிலுள்ள இராசேந்திர சிங்க வள்நாட்டுக்காரரிடம் புத்தூரில் உள்ள நிலங்களை வீரசோழ நல்லூர் என்னும் பெயரால் ஒப்பில்லாதநாயனுர் கோயிலுக்குத் தேவதானமாகக் கொடுத்துள்ளான். திரிபுவன சக்கிரவர்த்தி இராசாதிராச தேவரின் ஆறும் ஆண்டில் மலையமான் பெரிய உடையான் இறையூரன் தளர்ந்தபின் இராசராச சேதிராயன் திருவாதிரைத் திருநாளைக்கு நிவந்தங்கள் அளித்துள்ளான். குருக்காடு, அத்தி, திருவண்ணுமலை உடையானுகிய இருங் கோளன் பொன் அணையார் அம்மைகோயிலுக்கு, பெருநிலையார் நல்லூரின் வரிகளை நித்தியவழிபாட்டிற்குக் கொடுத்துள்ளான்.

பாண்டிமண்டலத்துக் கேரளசிங்க வளநாட்டுத் திருக் கோட்டியூர் ஆழ்வான் கூத்தன் ஜெயசிங்கதேவன், தன் அரச னுகிய விக்கிரமபாண்டியன் திருப்பெயரால், இக்கோயிலிலுள்ள திருவரங்கைக் கட்டியுள்ளான். திருமடைப்பள்ளிக்கு வடபா லுள்ள திருநடமாளிகையும் இவனுல் கட்டப்பட்டது. இந்தக் கோயிலின் கிழக்குத்தாழ்வாரமும் இவனுல் கட்டப்பட்டதாகும். இத்தாழ்வாரத் தூண்கள் ஒவ்வொன்றிலும் விக்கிரமபாண்டி யன் என்னும் பெயர் செதுக்கப்பட்டுள்ளது. இந்நிகழ்ச்சிகள் திரிபுவன சக்கிரவர்த்தி விக்கிரமபாண்டியதேவனது நான்காம் ஆண்டில் வெட்டப்பட்ட கல்வெட்டால் அறியக்கிடக்கின்றன.

இக்கோயில் வெளிப்பிராகாரத்தில் உள்ள மண்டபம் நீண்டகாலமாகக்கட்டி முடியப்பெருமல் குறைவுள்ளதாகவே இருந்தது. இம்மண்டப வேலை பூர்த்தியாகுல், இக்கோயில் தேவரடியாள் பொன்னுண்டையின் மகன் இளவெண்மதி சூடினுன், தன் உயிரை மாய்த்துக்கொள்வதாகச் சொல்லி அம் மண்டப வேலை முடிவுபெற்றதும், தன் உயிரை மாய்த்துக்

கொண்டான். அவனுடைய வீரச்செயலைப் பாராட்டி அவன் சந்ததியார்க்கு ஆயிரங்குழி நிலம் உதிரப்பட்டியாகக் கோயிலா ரால் கொடுக்கப்பட்டுள்ளது. இச்செய்தி மாறவர்மன் திரிபுவன சக்கிரவர்த்தி, சுந்தரபாண்டியதேவனது பத்தாம் ஆண்டுக் கல்வெட்டால் விளங்குகின்றது. இளவெண்மதிசூடினுன் தன் தலையை வெட்டிக்கொள்வதுபோல் உருவம் ஒன்று செதுக்கப் பட்டுக் கோயிலுக்கருகில் தெருவில் வைக்கப்பட்டிருக்கிறது.

கோப்பெருஞ்சிங்கன்காலத்தில், பேரெயிலில் உள்ள சோழ துங்கபல்லவர் அரையன்பெண்ணைத் தென்கரையில் மெய்குன்ற நாட்டிலுள்ள செம்பியன்மாதேவி என்னும் ஊரை, ஒப்பிலாத நாயனுர்க்கு நித்தியவழிபாட்டிற்கும் நுந்தாவிளக்கினுக்கும் கொடுத்துள்ளான். இம்மன்னன் காலத்திலே திருக்கோவலூர் வணிகன் ஒருவன் கோயில் நிலங்களைச் சாகுபடிக்கு உபயோக மாகுமாறு செய்து, கோயில்தானத்தாரிடமிருந்து இரண்டா யிரம் குழி நிலங்களைப் பெற்றுன்.

ஒப்பில்லாத நாயனுர் கோயிலில் திருக்கோபுரம், கோபு நாயக்கன், வாளுநாயக்கன், பாபுநாயக்கன் நாகம்மநாய்க்க ராயன் இவர்களால் கட்டப்பட்டது. கொள்ளியூர், பாலூர், புத்தூர் இவைகளுக்கு நீர்பாயக்கூடிய வாய்க்காலை, கிழையூர் ராஜராஜசேதிராயர் தம் தாயார் பூமாழ்வார் பெயரால் வெட்டுவித்தார். விக்கிரமசோழதேவரின் 13 ஆம் ஆட்சியாண்டில், இப்பக்கங்களில் பஞ்சம் ஒன்று எற்பட்டது.

இவைபோன்ற பல செய்திகளை இவ்வூர்க் கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன. மலைய மன்னர்களைப்பற்றி ஆராய்வார்க்கு இக்கோயிற் கல்வெட்டுக்கள் பெரிதும் பயன்படும்.

See the Annual reports on South Indian Epigraphy for the year. 386–391 of 1902, 26 of 1905, 111–199 of 1935.

South Arcot Dt, Tirukovilur Taluk.

## 7. திரு அநேகதங்காவதம்

இது வடநாட்டுத் தேவாரம்பெற்ற தலங்களுள் ஒன்று. இறைவி கௌரி என்னும் திருநாமத்தோடு தவஞ்செய்த பதியா

தலின் கௌரிகுண்டம் என்றும் கூறப்பெறும். இதில் சந்திர சூரியர் வழிபட்டுப் பேறுபெற்றனர். இதற்குத் திருஞான சம்பந்தரது பதிகம் ஒன்று உள்ளது.

இறைவரின் திருப்பெயர் அநேகதங்காவதநாதர். இறைவியாரின் திருப்பெயர் மனோன்மணி.

## 8. திரு ஆக்கூர்

இது மாயூரம் தரங்கம்பாடி ரயில்வேபாதையில், ஆக்கூர் ரயில் நிலையத்திற்கு வடபால் சுமார் முக்கால்மைல்தூரத்தில் இருக்கின்றது.

ஊரின் பெயர் ஆக்கூர் ஆயினும் அங்குள்ள கோயிலுக்குத் தானதோன்றிமாடம் என்று பெயர். அதாவது தான்தோன்றியப்பர் (சுயம்புமூர்த்தியாகிய இறைவர்) எழுந்தருளியிருக்கும் மாடக்கோயில் என்று பொருள்படும். மாடக்கோயில் என்பது யானை ஏறமுடியாதபடி படிக்கட்டுகள்வைத்துக் கட்டப்பெற்றதாகும். இத்தகைய கோயில்கள் கோச்செங்கணான் என்னும் சோழமன்னனால் கட்டப்பெற்றன என்பர்.

இறைவரின் திருப்பெயர் தான்தோன்றியப்பர். வடமொழியில் சுயம்புநாதர் என்பர். இறைவியாரின் திருப்பெயர் வாணெடுங்கண்ணியம்மை. வடமொழியில் கட்கநேத்திரி.

அறுபான்மும்மை நாயன்மார்களுள் ஒருவராகிய சிறப்புலி நாயனார் வாழ்ந்த பதி. இத்தலத்து வேளாளர்களைத் திருஞான சம்பந்தப்பெருந்தகையார் இவ்வூர்ப் பதிகத்தில்,

"வேளாள ரென்றவர்கள் வள்ளன்மையால் மிக்கிருக்கும்
தாளாள ராக்கூரிற் றான்றோன்றி மாடமே"

எனச் சிறப்பித்திருப்பது பெருமகிழ்ச்சியைத் தருவதாகும்.

கல்வெட்டு: இத்திருக்கோயிலில், சோழ மன்னர்களில் இரண்டாம் இராசாதிராசன், திரிபுவன சக்கிரவர்த்தி இராச ராசதேவன், இவர்கள் காலங்களிலும், பல்லவமன்னருள்,

கோப்பெருஞ்சிங்கன்காலத்திலும், விசயநகர பரம்பரையில் வீர கிருஷ்ணதேவராயர் காலத்திலும் பொறிக்கப்பெற்ற ஆறு கல் வெட்டுக்கள் இருக்கின்றன. இவைகளுள் சிவபெருமான், திருத் தான்தோன்றி மாடமுடையார் என்னும் பெயரால் வழங்கப் படுகின்றனர். ஆக்கூர், இராசேந்திரசோழ சதுர்வேதி மங்கலத் திற்கு உட்பட்டிருந்தது. ஊர் அலுவல்களைப் பெருங்குடி மக்கள் கவனித்து வந்தனர். இவர்கள் கூட்டப் பெருமக்கள் எனவும் திரிபுவன சக்கிரவர்த்தி இராசராச தேவரின் பதினெட்டாம் ஆண்டுக் கல்வெட்டில் கூறப்படுகின்றனர்.

இத்திருக்கோயிலில் வைகாசி மாதத்தில் திருவிழா நடந்து வந்தது. விழாமுடிவில் பெருமான் தீர்த்தமாடுதற்குக் காவிரிக்கு எழுந்தருளுவது உண்டு. இங்ஙனம் எழுந்தருளுவதற்குப் பெரு வழி (Road) இன்மையால் அதைப் புதிதாக அமைக்க வேண்டு மென்று கும்பஞாயிறு முதல் ஊர்க்காரியங்களைக் கவனிக்கும் கூட்டப் பெருமக்கள் ஏற்பாடுசெய்ததை ஒரு கல்வெட்டு உணர்த்துகின்றது.

அழகிய பல்லவர் அரையராகிய வீரப்பிரதாபர், ஹொய் சலர்களைச் சிறையிலடைத்தும், பாண்டிய மன்னரிடம் கப்பம் வாங்கியும், சோழநாட்டிற் புகுந்து காவிரித் தென்கரை வழி யாகக் கிழக்கேசென்று, பாடல்பெற்ற தலங்களை வணங்கி அவைகளுக்கு இறையிலி நிலங்கள் அளித்தும், பழுதுற்ற கோயில்களைப் புதுப்பித்தும், வந்தார். அவர் ஜெயங்கொண்ட சோழவளநாட்டில் ஓர் ஊரில் தங்கியிருந்தபோது, ஆக்கூர் முதலான ஊர்களில் அதிக வரிகளால், குடிகள் நிலத்தைப் பயிரிடாமல் இருந்தார்கள். சிலர் வெளியேறிவிட்டனர். இவர் களை எல்லாம் அழைத்து, வரிகளைக் குறைத்து நிலத்தை உழச் செய்தார். இதை ஒரு கல்வெட்டு உணர்த்துகிறது.

See the Annual reports on South Indian Epigraphy for the year ending 31-st March. 224 to 229 1925.

N. B:- 230–231, பெருமாள் கோயிலைப் பற்றியதாகும்.

# 9. திருவாடானை

ஆட்டுத் தலையும் யானை உடலுமாகச் சபிக்கப்பெற்ற பிருகு முனிவர், அவ்வுருவத்துடன் வந்து வழிபட்டுச் சாபம் நீங்கப்பெற்ற தலமாதலின் இப்பெயர் பெற்றது.

தேவகோட்டை ரஸ்தா ரயில் நிலையத்திற்குத் தென் கிழக்கே இருபத்துமூன்றுவதுமைல் தூரத்தில் இருக்கின்றது. காளையார்கோயிலில் (திருக்கானப்பேர்) இருந்தும் போகலாம். அங்கிருந்து கிழக்கே இருபத்தொருமைலில் உள்ளது. இது பாண்டிநாட்டுப் பாடல்பெற்ற பதிகளுள் ஒன்று.

தலவிருட்சம் வில்வம்.

இறைவரின் திருப்பெயர் ஆதிரத்தினேசுவரர். ஆடானை நாதர் என்ற வேறுபெயரும் உண்டு. இறைவியாரின் திருப் பெயர் அம்பாயிரவல்லி. திருக்கோயிலையொட்டி நான்கு மாட வீதிகள் இருக்கின்றன.

சூரியதீர்த்தம். திருக்கோயிலின் வடகிழக்கிலுள்ளது.

நீலமணியைச் சிவலிங்கமாகத்தாபித்து, சூரியன் வழிபா டாற்றிப் பேறுபெற்றான். இதற்குத் திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கிறது.

கமலைஞானப்பிரகாச தேசிகர் மாணுக்கர் சுவாமிநாத தேசிகரால் இயற்றப்பெற்ற தலபுராணம் அச்சில் வெளிவந் துள்ளது. தாணுகுடி குருசுப்பிரமணியக் குருக்கள் பண்டாரம் அவர்களால் இயற்றப்பெற்ற பதிகமும் அச்சில் உள்ளது.

கல்வெட்டு: இத்திருக்கோயிலில் திரிபுவன சக்கிரவர்த்தி கோனேரின்மைகொண்டானின் பதினேழாம் ஆட்சியாண்டி லும், மாறவர்மன் சுந்தரபாண்டியனின் பதினாறும் ஆட்சி யாண்டிலும், பொறிக்கப்பெற்ற இரண்டு கல்வெட்டுக்களும், சகம் 1557 இல் பொறிக்கப்பெற்ற ஒரு கல்வெட்டும், ஆண்டு குறிக்காத மற்றொரு கல்வெட்டுமாக நான்கு கல்வெட்டுக்கள்

இருக்கின்றன. இவைகளுள் இறைவன்பெயர் ஆடானைநாயனர் என்று குறிக்கப்பெற்றுள்ளது. இவைகள் இறைவனுக்கு நிலம் கொடுத்துள்ள செய்திகளைக் குறிப்பிடுகின்றன.

See the Annual reports on South Indian Epigraphy for the year 1914. Numbers 433—436.

(Ramanad Dt. Adani Taluk.)

## 10. திரு ஆமாத்தூர்

பசுக்களுக்குத் தாயாக இறைவன் அருளும் தலம் என்பர். ஈண்டுப் பசு என்றது உயிர்த்தொகுதியை. ஆமாத்தூர் என்று கொண்டது பொருந்துமோ?

விழுப்புரம் ரயில்வே நிலையத்திற்கு வடமேற்கில் நான்கு மைல் தூரத்தில் பம்பையாற்றின் வடகரையிலுள்ளது. இது நடுநாட்டுத் தலங்களுள் ஒன்று.

இறைவரின் திருப்பெயர் அழகர். இத்திருப்பெயரைத் திருக்குறுந்தொகையில் அப்பர்பெருமான் எடுத்து ஆண்டிருப்பது மகிழ்தற்கு உரியதாகும். இறைவியாரின் திருப்பெயர் முத்தைவென்ற முறுவலாள். முத்தார்நகை அழகுடையார் என்பர் அருணகிரிநாதர்.

தீர்த்தம் பம்பைஆறு.

தலவிருட்சம் வன்னிமரம்.

பிருங்கி முனிவர் சிவபெருமானையே வழிபடுபவர். அம்மையாரை வழிபடாதவர். அம்மையார் ஒருபாகத்தைப் பெற்ற போதும் வண்டு உரு எடுத்துத் துளைத்துச் சிவனையே வழிபட்டார். அதனால் அவரை அம்மையார் வன்னிமரம் ஆகுமாறு சபித்தார். பின்னர் முனிவர் அம்மையாரை வழிபட்டு அவர் அருளால் சாபநீக்கம் பெற்றனர். மூவராலும் பாடப்பெற்றது. திருக்கோயில் பாதைக்கு இருபுறமாகக் கட்டப்பட்டுள்ளது. மேல்புறம் சுவாமி கீழ்புறம் அம்மன் சந்நிதிகள் அமைந்திருக்

கின்றன. ஒன்றை ஒன்று எதிர்நோக்கி இருக்கின்றன. சுவாமியின் முன்கோபுரம் பூர்த்தியாகவில்லை. சுவாமிகோயிலுக்கு ஓர் வழியில்லை. தெற்குவாயில்வழிச் சென்று பிறகு மேற்கே திரும்பவேண்டும். எதிரில் இராமர்கோயில் இருக்கின்றது. இராமன் வழிபட்டதினால் அபிராமேசர் என்று பெயர்வந்தது.

அர்த்தமண்டபத்தில் நிலவறை உண்டு. அச்சுதராயர் உருவம் செதுக்கப்பட்டிருக்கிறது. அவன் திருப்பணிசெய்தானும். அம்மன்கோயில் உயர்க்கப்பட்டிருக்கின்றது. அதற்குத்தான் பிராகாரமும் கோபுரமும் உண்டு.

இரட்டைப் புலவர்கள் இவ்வூர் இறைவன்மீது கலம்பகம் பாடியுள்ளனர். புலவர் புராணம் பாடின தண்டபாணி சுவாமிகள் இவ்வூரினர். அவருடைய சமாதி ஊரின்புறத்தே இருக்கின்றது. இவ்வூர்க்கு சம்பந்தர் பதிகங்கள் இரண்டு. அப்பர் பதிகங்கள் இரண்டு. சுந்தரர் பதிகம் ஒன்று ஆக ஐந்து பதிகங்கள் இருக்கின்றன.

கல்வெட்டு: இத்திருக்கோவிலில் கோப்பரகேசரிவர்மன் (முதல் பராந்தகன்) முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திர சோழன் (கங்கைகொண்ட சோழன்), வீர ராசேந்திரன், முதற் குலோத்துங்கன்,

" பூமேவுவளர் திருப்பொன் மார்வுபுணர
நாமேவு கலைமகள் நலம் பெரிது சிறப்ப "

என்னும் தொடக்கமுள்ள மெய்க்கீர்த்தியை உடைய இராசகேசரி திரிபுவன சக்கிரவர்த்தி குலோத்துங்க சோழதேவன் முதலானோர் காலங்களின் கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இக்கல்வெட்டுக்களில் இறைவர், திருவாமாத்தூர் உடைய பெருமானடிகள், திருவாமாத்தூர் ஆள்வார், திருவாமாத்தூர் ஆளுடையார் அழகியதேவர், திருவாமாத்தூர் உடைய பரமசுவாமி என்னும் பெயர்களால் குறிக்கப்படுகின்றனர்.

இத்திருக்கோயில், கோப்பரகேசரி வர்மனது ஆட்சியாண்டில் கற்றளியாகக் கட்டப்பட்டது. இத்தளியைச் செய்தவன் அருகூர்தச்சன் நாராயணன் வேற்கந்தனாகிய திருவாமாத்தூர் ஆசாரியன் ஆவன். திருச்சுற்று மண்டபத்தைக்

கட்டியவன் செம்பியன் காத்திமானடிகள் ஆவன். கோப்பர கேசரி வர்மன் கல்வெட்டில் இவ்வூர், அருவாநாட்டு மீய்வழி வாவலூர் நாட்டுத் தேவதானம் திருவாமாத்தூர் எனவும், கோப்பரகேசரி வன்மரான் இராசேந்திர சோழதேவன் அல்லது கங்கைகொண்ட சோழன் கல்வெட்டில், ஜயங்கொண்ட சோழ மண்டலத்துப் பனையூர்நாட்டு, வாவலூர் நாட்டுத் தேவதானம் திருவாமாத்தூர் எனவும், முதற் குலோத்துங்கசோழன் காலத் தில் கங்கைகொண்ட சோழவளநாட்டுப் பனையூர்நாட்டுத் தேவ தானம் திருவாமாத்தூர் எனவும், "பூமேவுவளர் திருப்பொன் மார்வுபுணர" என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியையுடைய இராசகேசரி, திரிபுவனசக்கிரவர்த்தி குலோத்துங்க சோழதேவர் காலத்தில் இராஜராஜ வளநாட்டுப் பனையூர்நாட்டு வாவலூர் நாட்டுத் தேவதானம் திருவாமாத்தூர் எனவும், வழங்கப்பட் டிருந்தது. இக்கல்வெட்டுக்களினால் திருநுந்தாவிளக்கு எரிப்ப தற்குத் துலைநிறை செம்பொன், ஆடுகள் இவைகளையும் திருச் சந்திக்குத் திருச்சந்தனம், சீதாரி இவைகளுக்குப் பொன்னும், திருப்பதிகம் பாடுவதற்கு நிலநிவந்தமும் அளிக்கப்பெற்ற செய்திகள் புலப்படுகின்றன.

இத்திருக்கோயிலில், மூன்று சந்திகளிலும், திருப்பதிகம் பாடி வருவதற்குக் குருடர்கள் பதினாறுபேர்களும் அவர்களுக்குக் கண்காட்டுவார் இருவரும் ஆகப் பதினெண்மர்கள் நியமிக்கப் பட்டிருந்தனர். அவர்களுக்குத் தலைக்கு நெல் பதக்காக நாளொன்றுக்கு முக்கலமாக நாள் 360-க்கு நெல் ஆயிரத்து எண்பதின்கலமும், புடைவை முதலுக்குப் பேரால் காசு ஒன்றாக காசு பதினெட்டுக்கு காசு ஒன்றுக்கு நெல் இருபதின் கலமாகவும் வந்தநெல் 1440 கலத்துக்கு, வேலி ஒன்றுக்கு நெல் நூற்று இருபது கலமாக ஆமாத்தூர் இறைவர் தேவதானம் கடுவனூரில் பன்னிரண்டுவேலி நிலம் காணியாகக் கொடுக்கப்பட்டுவந்தது. இந்நிலையில், 'பூமேவு வளர் திருப்பொன் மார்வுபுணர" என்னும் தொடக்கமுள்ள மெய்க்கீர்த்தியை உடைய இராச கேசரி திரிபுவன சக்கிரவர்த்தி, குலோத்துங்கசோழன், தன் ஆட்சியின் இரண்டாம் ஆண்டில், தன் தேவாரத்துத் திருப் பதியம்பாடிய பொய்யாதசேவடி தேவகணநாதனான இராச ராசப் பிச்சனையும் அவன் வர்க்கத்தாரையும் இத்திருக்கோயிலில் திருப்பதியம் பாடுவித்துக்கொண்டு, முன்பில் ஆண்டுகள்

குருடர்களுக்கு விட்டுவரும் நிவந்தப்படி இவர்களுக்கும் கொடுக்குமாறு கட்டளையிட்டுள்ளான்.

தென் இந்தியக் கல்வெட்டுத்தொகுதி எட்டு. எண் 749
A. R. No. of *433* of *1903*.

இக்கல்வெட்டு, குருடர்களைக் கவலையின்றிக் கடவுள் பக்தியில் செலுத்துவதற்கு ஒரு வழிகாட்டியாகும்.

See the Annual reports on South Indian Epigraphy for the year 1903 Numbers 402—435.
1922 ,, 1—71.

South Indian Inscriptions Volume VIII Numbers 718—751.

(South Arcot District, Villupuram Taluk)

## 11. திரு ஆரூர்

இது மாயூரம் – அறந்தாங்கி ரயில்பாதையில், திருவாரூர் ரயில்நிலையத்திற்கு வடக்கே சுமார் ஒருமைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவிரித் தென்கரைத் தலங்களுள் எண்பத்தேழாவது ஆகும்.

இவ்வூர் மிகப் பழமைவாய்ந்தது. இச்செய்தியை "திருவினை சேர்தற்கு முன்னோ பின்னோ திருவாரூர்க் கோயிலாக் கொண்டநாளே" என்னும் அப்பர் சுவாமிகள் தேவாரப் பகுதியால் அறியலாம்.

இவ்வூரில் பூங்கோயில், அறநெறி, பரவையுண்மண்டளி என்னும் மூன்று பாடல்பெற்ற கோயில்கள் இருக்கின்றன. இவற்றுள் புற்றிடங்கொண்டார் (வன்மீகநாதர்) எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலே பூங்கோயில் எனப் பெயர்பெறும். இதுவே திருமூலட்டானம் எனவும் வழங்கப்பெறும். இதற்கு முப்பத்துநான்கு பதிகங்கள் இருக்கின்றன.

நமிநந்தி அடிகள் நாயனர் தண்ணீரால் திருவிளக்கேற்றி வைத்து வழிபட்ட திருக்கோயிலாகும். இச்செய்தியைத் திருநாவுக்கரசு பெருந்தகையார் இவ்வூர்த் திருவிருத்தத்தில் "நம்பி நந்தி நீரால் திருவிளக்கிட்டமை நீணாடறியுமன்றே" எனச்சிறப்பித்துள்ளனர். இது, கோயில் திருவிசைப்பாப் பதிகம் பாடிய கண்டராதித்த சோழதேவரது மனைவியாராகிய செம்பியன்மாதேவியாரால் கட்டப்பெற்ற கற்றளியை உடையது. இதற்கு அப்பர் அருளிய பதிகங்கள் இரண்டு. இக்கோயில் இரண்டாம் பிராகாரத்தில் மேற்குமுகமாக இருக்கின்றது.

பரவைநாச்சியார் தமது மாளிகையில் ஒரு பகுதியில் மண்ணால் சிறுகோயில் கட்டி, அதில் இறைவனை எழுந்தருளுவித்து நாளும் வழிபட்ட கோயிலாகும். இது சுந்தரமூர்த்தி சுவாமிகளால் பாடப்பெற்ற சிறப்புடையது. இது தெற்குக் கோபுரத்திற்கு அண்மையில் இருக்கின்றது. (ஒருகாலத்து வருணன் இந்நகர்மீது அனுப்பிய கடலை உண்டமைபற்றி இத்தலத்துக்குப் பரவையுண்மண்டளி என்னும் பெயரெய்தியது என்றும் கூறுவர்). இதற்குச் சுந்தரர் அருளியபதிகம் ஒன்று இருக்கின்றது.

இத்தலத்திற்கு முப்பத்தேழுபதிகங்களும், வேறு திருமுறைகளில் பல பாடல்களும் இருக்கின்றன. இத்தலத்தின் தேரும், திருவிழாவும், திருக்கோயிலும், திருக்குளமும் இவ்வூர்த் தேவாரங்களில் வைத்துப் பாடப்பெற்றுள்ளன. திருக்குளமும் திருக்கோயிலும், செங்கழுநீர் ஓடையும் தனித்தனி ஐந்துவேலிகள் பரப்புடையன. பிறக்க முத்திதருவது. தியாகேசர் எழுந்தருளிய ஏழுவிடங்கத் தலங்களுள் முதன்மைபெற்றது. பஞ்சபூத தலங்களில் பிருதிவி தலமாயுள்ளது. திருமகளால் பூசிக்கப் பெற்றது. இங்குள்ள தேவாசிரிய மண்டபத்திலிருந்துதான் சுந்தரமூர்த்திநாயனர் திருத்தொண்டத்தொகையை அருளினர். அவர் விருத்தாசலத்தில் மணிமுத்தாநதியில் இட்ட பொன்னை மிகப்பெரியகமலாலயம் என்னும் திருக்குளத்திலிருந்து எடுத்துப் பரவையார்க்குக் கொடுத்த பழம்பதி இதுவேயாகும். அவர் பொருட்டுப் பரவைநாச்சியாரிடம் சிவபெருமான் இருமுறை நள்ளிரவில் தூது நடந்து சென்ற திருவீதியை உடையது. இச்செய்தியை "அடியேற்கு எளிவந்த தூதனை" என்னும் அவரது தேவாரப் பகுதி உறுதிப்படுத்தும். காஞ்சிபுரத்தில்

ஒருகண் பெற்ற அவர் "மீளா அடிமை" என்று தொடங்கும் திருப்பதிகத்தைப் பாடி மற்ஞெரு கண்பார்வையும் பெற்றது இத்தலத்தில்தான். நமிநந்தி அடிகள், செருத்துணை நாயனர், தண்டியடிகள் நாயனர், கழற்சிங்க நாயனர், விறன்மிண்ட நாயனர் இவர்கள் முத்திபெற்றதும் இப்பதியிலேதான். இத் தலம் சோழமன்னர்கள் முடிசூட்டிக்கொள்ளும் தலங்கள் ஐந்தனுள் ஒன்ருகும். ஒருகுலத்துக்கு ஒருமகன் உள்ளான் என்பதையும் ஓராது ஓரான்கன்றுக்காகத் தன் மகனது உயிரைப் போக்கிய மனுநீதிச் சோழன் ஆண்டதும் இப்பதியே தான். "திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்" என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளியிருப்ப தால் இப்பதியின் பெருமையை அளவிடுவார் யார்? இதை விரிப்பின் அகலும். தொகுப்பின் எஞ்சும். பெரியபுராணத் திலுள்ள திருவாரூர்ச் சிறப்பு என்னும் பகுதி படித்து இன் புறுதற்குரியதாகும்.

திருவாதிரைத் திருவிழா: பழங்காலத்தில் இவ்விழா பெருஞ்சிறப்புடன் கொண்டாடப்பட்டுவந்தது. அவ்விழாவை அப்பர் சுவாமிகள் கண்டு வணங்கி, அதன் சிறப்பை "முத்து விதானம்" என்று தொடங்கும் ஒரு தனித் திருப்பதிகத்தினல் ஞானசம்பந்தப் பெருந்தகையார்க்குக் கூறியருளியிருக்கிருர்கள்.

பங்குனி உத்தரத் திருவிழா: இது மாசிமாதம் அத்த நட்சத்திரத்தில் கொடியேற்றி, பங்குனி உத்தர நட்சத்திரத்தில் தீர்த்தம் நடைபெறும், திருவிழாவாகும். இவ்விழா நினைவிற்கு வரவே ஒற்றியூரிலிருந்த சுந்தரமூர்த்தி நாயனர் சூளுறவையும் மறந்து, திருவாரூர்க்குப் புறப்பட்டார் என்று பெரியபுராணம் செப்புகின்றது. செப்பவே இவ்விருவிழாக்களும் பழங்காலமுதல் நடந்துவரும் சிறப்புடையனவாகும்.

பூங்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவரின் திருப் பெயர் வன்மீகநாதர் அல்லது புற்றிடங்கொண்டார்; திருமூலட் டானநாதர். இறைவியாரின் திருப்பெயர் அல்லியம்பூங்கோதை அம்மை; கமலாம்பிகை.

இத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் தியாகராசர் முதலில் திருமாலால் திருப்பாற்கடலில் வழிபடப்பெற்றவர். பிறகு

அவரால் இந்திரனுக்கும், பிறகு அவரால் முசுகுந்த சக்கிர வர்த்திக்கும் அளிக்கப்பெற்று, அந்த முசுகுந்த சக்கிரவர்த்தி யால் இவ்வூரில் பிரதிட்டை செய்யப்பெற்றவர். மார்கழித் திருவாதிரையும் பங்குனி உத்திரமும் இவரை வழிபடற்குரிய சிறந்த நாள்கள் என்று அறிஞர்கள் உரைத்துள்ளனர். இவர் எழுந்தருளியிருக்கும் இடம் தேவசபை என்றும், இவருக்குத் தென்றல்காற்றுவரும் கல்சன்னல் திருச்சாலகம் என்றும், இவருக்குரிய கொடி தியாகக்கொடி என்றும், இவருடைய தேருக்கு ஆழித்தேர் என்றும், இவரை எழுந்தருளப்பண்ணும் திருவாடுதண்டு மாணிக்கத்தண்டு என்றும் பெயர் பெற் றுள்ளன. இவர் சந்நிதியில் நந்திதேவர் நின்ற திருக்கோலத்தர் இறைவருடைய வழிபாட்டுக் காலங்களுள் திருவந்திக்காப்பு மிக்க விசேடமுடையது. இவருடைய நடனம் அஜபாநடனம், புய்ங்கநடனம் எனப் பாராட்டப்படும்.

தலவிநாயகர் வாதாபிவிநாயகர்.

1. திருவாரூர் மும்மணிக்கோவை :— இது அறுபான் மும்மை நாயன்மார்களுள் ஒருவராகிய சேரமான்பெருமாள் நாயனுரால் இயற்றப்பெற்றது. பதினேராந் திருமுறையில் உள்ள நூல்களுள் ஒன்ருய் விளங்கும் சிறப்புடையது.

2. கமலாலயச் சிறப்பு :— இது சிதம்பரம் மறைஞான சம்பந்தரால் இயற்றப்பெற்றது.

3. திருவாரூர்ப் புராணம் :— நிரம்ப அழகியதேசிக ருடைய மாணுக்கராகிய அளகைச் சம்பந்தர் என்பவரால் செய்யப்பெற்றது.

4. திருவாரூர் உலா :— அந்தகக்கவி வீரராகவ முதலியா ரால் இயற்றப்பெற்றது.

5. தியாகராச லீலை :— திரிசிரபுரம் மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்களால் இயற்றப்பெற்றது. இது முற்றுப்பெருத நிலையில் உள்ளது.

6. திருவாரூர் நான்மணிமாலை:— இதை அருளியவர் குமரகுருபர சுவாமிகள்.

7. தியாகராசப்பள்ளு :— இதை ஆக்கியோர் பதினாறும் நூற்றாண்டில் விளங்கியிருந்த கமலைஞானப்பிரகாசர் ஆவர்.

8. திருவாரூர்ப் பன்மணிமாலை :— இலக்கண விளக்கம் இயற்றிய திருவாரூர் வைத்தியநாததேசிகரால் ஆக்கப்பெற்றது.

9. திருவாரூர் ஒரு துறைக்கோவை :— இது வெறிவிலக்கு என்னும் ஒரு துறையை வைத்துக்கொண்டு நானூறு பாடல்களால் ஆக்கப்பெற்றதொரு நூல். இதன் ஆசிரியர் கீழ்வேளூர்க் குருசாமி தேசிகர் என்பவர்.

10. திருவாரூர்க் கோவை :— இது எல்லப்ப நயினார் என்னும் புலவரால் பாடப்பெற்ற சொற்சுவை பொருட்சுவை நிரம்பிய நூல்.

11. கமலாம்பிகை பிள்ளைத்தமிழ் :— தருமை ஆதீனத்து அடியார் கூட்டங்களில் ஒருவராய் விளங்கியிருந்த சிதம்பர முனிவரால் இயற்றப்பெற்றது.

இவைகளன்றித் திருவாரூர் மாலை, கமலாம்பிகை மாலை முதலான நூல்களும், காளமேகப்புலவர் முதலானோர் தனிப் பாடல்களும் இருக்கின்றன.

கமலாலயத்தின் வடகிழக்கு மூலையில் மாற்றுரைத்த பிள்ளையாரின் திருக்கோயில் இருக்கின்றது. "திருவாரூர்த் தேரழகு" என்னும் உலக வழக்கு இவ்வூர்த் தேரின் சிறப்பைத் தெரிவிப்பதாகும்.

தலப்பெருமையை விளக்கும் புராணப்பாடல் ஒன்று பின் வருமாறு :—

திருமகள் தவஞ்செய் செல்வத் திருவாரூர் பணிவ னென்று
ஒருவனே ழடிந டந்து மீண்டிடின் ஒப்பில் காசி
விரிபுனற் கங்கை யாடி மீண்டவ னவ னென்றால்
இருடிகாள் ஆரூர் மேன்மை பிரமற்கு மியம்ப வற்றோ.

—திருவாரூர்ப்புராணம் தலமகிமைச் சுருக்கம்.

கல்வெட்டு: இத்திருக்கோயிலில், பிற்காலச் சோழ மன்னர்களுள், முதலாம் பராந்தகன், முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திரன் (அ) கங்கைகொண்ட சோழன், முதலாம் இராசாதிராசன், முதலாம் குலோத்துங்கன், விக்கிரமசோழன், இரண்டாம் இராசாதிராசன், மூன்றுங் குலோத்துங்கன் மூன்றும் இராசராசன், மூன்றும் இராசேந்திரன், இவர்கள் காலங்களிலும், பிற்காலப் பாண்டியர்களுள் மாறவர்மன் குலசேகரதேவன், மாறவர்மன் ஸ்ரீவல்லபன் இவர்கள் காலங்களிலும், விசயநகர வேந்தர்களுள் கேசவப்பநாயக்கர் மகனார், அச்சுதப்பநாயக்கர் முதலானோர் காலங்களிலும் பொறிக்கப் பெற்ற அறுபத்தைந்து கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

இக்கல்வெட்டுக்களுள் வன்மீகநாதரின் பெயர் புற்றிடங் கொண்டார் என்றும், தியாகராசரின் பெயர் வீதிவிடங்கர், திருவாரூர் உடையார் வீதிவிடங்க மாதேவர் எனவும், அம்மையார் திருக்காமக் கோட்டமுடைய நாச்சியார் என்றும், அரநெறிக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவர், திரு அரநெறி உடையார் என்றும், பரவையுண் மண்டளியில் எழுந்தருளியிருக்கும் இறைவர் திருமண்டளியுடைய மகாதேவர் என்றும் குறிக்கப்பட்டனர்.

அரநெறிக்கோயில்: இக்கோயிலைக் கற்றளியால் கட்டியவர், கோயில் திருவிசைப்பா (பதிகம்) பாடிய கண்டராதித்த சோழ தேவரது மனைவியாராகிய செம்பியன் மாதேவியார் ஆவர். இத்திருக்கோயில் அரநெறி உடையார்க்குத் திருநொந்தா 'விளக்கு இரண்டினுக்குக் குருகாலன் திருமூலட்டானத் தொண்டர் மேன்மங்கலத்தில் மூன்றுவேலி நிலத்தை முதல் இராசராச தேவரின் ஆட்சியாண்டு இருபது, நாள் இருநூற்று ஏழில் கொடுத்துள்ளார். முதலாம் இராசாதிராசரின் இருபத்தேழாம் ஆண்டில் அரநெறி உடையார்க்கு அணுக்கியார் பரவை நங்கையார் தீபங்குடி மேல்மங்கலம் கிராமத்தில் வழிபாட்டிற்காக நிலம் கொடுத்திருந்தனர்.

ஏனைய கோயில் கல்வெட்டுக்களில் கண்ட செய்திகள்:-

கோனேரின்மைகொண்டான் திருவாரூர் மூலத்தான முடையார்க்குத் திருப்போனகத்திற்கும் தான் பிறந்த நாளில்

விழா எடுப்பதற்கும் நிலம் விட்டிருந்தான். கங்கைகொண்ட சோழனது மகனாகிய முதலாம் இராசாதிராசன் காலத்தில் பூண்டிக்கூத்தன் செம்பியன் மூவேந்தவேளான், வீதிவிடங்க தேவர்க்கு அணிகலன்கள் அளித்திருந்தான். அவன்மீது நான்கு பாடல்கள் பாடப்பெற்றுள்ளன. வீதிவிடங்கப் பெருமானின் கர்ப்பகிருகம், அர்த்தமண்டபம் இவைகளைப் பொன்வேயுமாறு, கங்கைகொண்ட சோழனது இரண்டாவது மகனாகிய விசய ராசேந்திரன், வேளாக்கூத்தனாகிய செம்பியன் மூவேந்த வேளானுக்குக் கட்டளையிட்டிருந்தனன். தன்மகன் வீரசோழ அணுக்கன்மீது வீர அணுக்கவிஜயம் என்னும் நூலை எழுதிய பூங்கோயில் நம்பிக்கு, இவ்வேந்தன் நிலம் அளித்திருந்தான். இவ்வேந்தன் காலத்தில் உய்யக்கொண்டார் வளநாட்டு அம்பர் நாட்டுப் புறக்குடி உடையான் சுற்றி ஆதித்தனான சோழ விச்சாதர விழுப்பரையன் இசைபாடுவோர்க்கும், கோயிலுக்கு எண்ணெய்க்கும் ஆகப் பொன் கொடுத்திருந்தான்.

குலோத்துங்கன் கல்வெட்டு ஊர்ச்சபையார் தேவாசிரியன் மண்டபத்தில்கூடிக் கோயில் காரியங்களைக் கவனித்துவந்ததைக் குறிப்பிட்டுள்ளது.

மூன்றாங் குலோத்துங்கனுடைய கல்வெட்டு, புதுநீர்வரு வழியிலுள்ள விநாயகர் ஆலயத்தைத் திருப்பணி செய்வித்து, நாள் வழிபாட்டிற்கு நிலம் அளித்திருந்த செய்தியைக் குறிப்பிட்டுள்ளது. மூன்றாம் இராசேந்திரன் திருக்கோயிலுக்கு முன்புள்ள திருமாளிகை விநாயகப்பிள்ளையார் கோயிலை எடுப்பித்தான். இங்ஙனம் சோழமன்னர்களே யன்றிப் பிற்காலப் பாண்டியர்கள் முதலானோர்களும் நிலம் முதலியவற்றை உதவியுள்ளனர்.

இசைஞானியார்:- சிவநெறிக்குரவர் நால்வருள் ஒருவராகிய சுந்தரமூர்த்திநாயனாரின் அரும்பெறல் தாயார் இசைஞானியார் என்பதையும், அவ்வம்மையார் கௌதம கோத்திரத்தைச் சேர்ந்த ஞான சிவாசாரியாருடைய மகளார் என்பதையும் அவர் திருவாரூர்ப் பதியினர் என்பதையும் ஒரு கல்வெட்டு உணர்த்துகிறது.

இச்செய்தி சேக்கிழார் பெரியபுராணத்தில் இசைஞானியார் புராணத்தில் காணப்பெறாததாகும்.

மனுநீதிச்சோழன்:- விக்கிரம சோழதேவரின் ஐந்தாம் ஆண்டில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டு, பெரியபுராணத்தில் கூறப்பெற்றுள்ள மனுநீதிச்சோழனின் செயலை உறுதிப் படுத்துவதோடு, அம்மனுநீதிச்சோழனின் மந்திரியாயிருந்தவன் உபயகுலாமலன் என்பதையும், அவன் சோழமண்டலத்தில் இங்கணாட்டுப் பாலையூரினன் என்பதையும் அம்மந்திரியின் வழியில்வந்த பாலையூர் உடையான் சந்திரசேகரனுதி வீதி விடங்கனான குலோத்துங்கசோழ மாபலிவாணராயன் என்பவன் விக்கிரமசோழன் காலத்தவன் என்பதையும், அவன் வேண்டு கோளின்படி, அவன் வம்சாதியாக வருகிற மாளிகை மனையில், நாள்தோறும் அடியார்க்கு அமுது இடப்பெற வேண்டுமென்று மந்திரியாகிய குலோத்துங்க சோழ மாவலிவாணராயன் அரச னிடம் விண்ணப்பித்துக்கொள்ள, அரசனும் (விக்கிரம சோழனும்) அதற்கு இசைந்தருளியதை உணர்த்துவதாகும்.

நம் ஏவலால் பூலோக ராஜ்யம் செய்கிற சூரியபுத்திரன் மநு தன் புத்திரன் ஏறிவருகிற தேரில் பசுவின்கன்றகப்பட்டு, வருத்தமுற, அதன் மாதாவான சுரபி கண்டு துக்கித்து மநுவின் வாசலின் மணியை எறிய, அதுகேட்டு மநு தன் மந்திரி இங்கணாட்டுப் பாலையூருடையான் உபயகுலாமலனைப் பார்த்து நீசென்று இதனை அறிந்து.........வாயிற்புறத்து ஒரு பசு மணி எறியாநின்றது என்று சொல்ல அதுகேட்டு மநு புறப்பட்டுப் பசுவையும் பட்டுக்கிடந்த......படி வினவித் தன் புத்திரன் பிரிய விருத்தனைத் தேரிலே ஊர்ந்து குறுக்கவென்று உபயகுலா மலனுக்குச் சொல்ல அவன் சந்தாயத்தோடும் புறப்பட்டுத் தன் செவிகளைத் தரையிலே குடைந்துகொண்டு துக்கித்தனாய், மநு தானே புறப்பட்டுத் தன் புத்திரனைத் தானே தேரிலே ஊர்ந்து குறுக்க, அப்போதே நாம் அவனை அநுக்கிரகித்து, கன்றுக்கும் மந்திரிக்கும், மநு புத்திரனுக்கும் ஜீவன்கொடுக்க, அதுகண்டு மநு சந்தோஷித்துக் கன்றினை எடுத்துக்கொண்டு பசுவுக்குக் காட்டி, குடு......அபிஷேகம்பண்ணி'' எனத் தொடர்கின்றது.

திருவாரூரைத் தன்னகத்துக் கொண்டுள்ள நாடு:- முதல் இராசராசன் காலத்தில் இவ்வூர் க்ஷத்திரிய சிகாமணி வளநாட் டுத் திருவாரூர்க் கூற்றத்துத் திருவாரூர் எனவும், முதலாம் இராசாதிராசன் காலத்தில், அதிராஜேந்திர வளநாட்டுத்

திருவாரூர்க் கூற்றத்துத் திருவாரூர் எனவும், முதற் குலோத்துங்கசோழன் காலத்தில் செயமாணிக்க வளநாட்டுத் திருவாரூர்க் கூற்றத்துத் திருவாரூர் எனவும் வழங்கப்பட்டு வந்தது.

வீதிகளுக்குப் பெயர்கள்:- இவ்வூர் வீதிகளுக்கு ஆன்றோர்களால் இடப்பெற்றிருந்த பெயர்கள் கல்வெட்டுக்களில் குறிக்கப்பெற்றுள்ளன. அவைகளாவன:- திருவடிப்போது நாறிய திருவீதி, ராஜராஜன் திருவீதி, குலோத்துங்கன் திருவீதி என்பனவாகும்.

See the South Indian Inscription Volume IV page 119. Number 397.

See the Annual reports on South Indian Epigraphy for the years.

| | | |
|---|---|---|
| 1890 | Numbers | 73—74 |
| 1894 | ,, | 164 |
| 1901 | ,, | 269 |
| 1904 | ,, | 533—579 |
| 1918 | ,, | 553 |
| 1919 | , | 669—681 |

South Indian Inscriptions Vol. IV No. 397.

## 12 திரு ஆலவாய்

இது மதுரைக்கு உரிய வேறு பெயராகும். வம்மிசசேகர பாண்டியன் ஆட்சிசெய்து வருங்காலத்தில் மக்கள் வசிப்பதற்கு இடம் காணாமையால், ஆதியில் இந்நகரத்திற்கு ஏற்பட்ட எல்லையைக் காட்டியருளுமாறு அவன் சிவபெருமானை வேண்டினன். பெருமானும் தனது திருக்கையில் கங்கணமாயுள்ள பாம்பை அளந்துகாட்டுமாறு பணிக்க, அது வாலும் வாயும் ஒன்றுபடும்படி வட்டமாக வளைத்துக் காட்டியமையால் இப்பெயர்பெற்றது.

இதற்குரிய வேறுபெயர்கள் நான்மாடக்கூடல், மதுரை, கடம்பவனம், பூலோககயிலாயம், சிவராசதானி, துவாதசாந்தத்தலம் என்பன.

மதுரை என்னும் ரயில் நிலையத்திற்குக் கிழக்கே அரை மைல் தூரத்தில், வையையாற்றின் தென்கரையில் இருக்கிறது. இது பாண்டியநாட்டுத் தேவாரம் பெற்ற தலங்கள் பதினுன்கில் முதன்மைபெற்றது.

இறைவரின் திருப்பெயர் சொக்கலிங்கப்பெருமான். இறைவியாரின் திருப்பெயர் அங்கயற்கண்ணி. இத்திருப்பெயரை இவ்வூர்ப் பதிகத்தில் திருஞானசம்பந்தப் பெருந்தகையார் "அங்கயற் கண்ணி தன்ெனுடு மமர்ந்த வாலவாயாவது மிதுவே" என எடுத்தாண்டிருப்பது மகிழ்தற்குரியது. வடமொழியில் மீனுட்சிதேவி என்பர்.

தலவிருட்சம் கடம்பு.

தீர்த்தம் பொற்ருமரை, வையை ஆறு, எழுகடல்.

'பாண்டிநாடே பழம்பதி' என்று சிறப்பித்து ஓதப்பெறும் பாண்டிநாட்டில் பாண்டிய மன்னர்களுக்குத் தலைநகராயது. நலமிகு புலமைமிக்க புலவர் பெருமக்கள் பலர் இருந்து தமிழ் மொழியை ஆராய்ச்சிசெய்ய நிலைக்களமானது. சங்கப்பனுவலாகிய பரிபாடலில், மதுரைக்கும் வையைக்கும் முப்பது பாடல்களைக்காணலாம். இங்குச் சிவபெருமான் செய்தருளிய அறுபத்துநான்கு திருவிளையாடல்களைப்போல் வேறு எங்கும் நிகழ்ந்திலது. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் இவர்களுடைய பதினெருபதிகங்களைக்கொண்டது. திருஞானசம்பந்தப் பெருந்தகையார் அனல்வாதம் புனல்வாதம் செய்து சைவத்தைப் பாண்டிநாட்டில் நிலைபெறச்செய்த பதி. முத்திதரும் தலங்கள் ஏழனுள் ஒன்ருய் விளங்குவது. ஐந்து சபைகளுள் வெள்ளியம்பலத்தைக் கொண்டது. மூர்த்தி நாயனுர் அவதரித்த திருப்பதி. மாணிக்கவாசகரது பெருமையை அரிமர்த்தன பாண்டியனுக்கு அறிவுறுத்தி அவனை உய்விக்கச் செய்வதற்காக, நரி பரி பரியாக்கியது முதலான திருவிளையாடல்களைச் செய்தருளிய தலம்.

1. திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்: இது வேம்பத்தூரார் திருவிளையாடல் எனவும், பழைய திருவிளையாடல் எனவும் வழங்கப்பெறும். இது ஆராய்ச்சிக்குச் சிறந்த நூல். இதை ஆக்கியோர் செல்லிநகர்ப் பெரும்பற்றப்புலியூர் நம்பியாவர்.

2. கடம்பவன புராணம்: இது தொண்டைநாட்டிலுள்ள இலம்பூரிலிருந்த வீமநாத பண்டிதரால் இயற்றப்பெற்றது.

3. சுந்தரபாண்டியம்: இது தொண்டைநாட்டிலுள்ள வாயிற்பதியிலிருந்த அனதாரியப்பரால் எழுதப்பெற்றது.

4. திருவிளையாடற் புராணம்: இது திருமறைக்காட்டிலிருந்த பரஞ்சோதி முனிவரால் இயற்றப்பெற்றது. இது சமய வளர்ச்சிக்கும் தமிழ்வளர்ச்சிக்கும் பெரிதும் பயன்படுவது. இது தோன்றிய பின்னர், இத்தலத்திற்குரிய வேறு புராணங்களை மக்கள் விரும்பிப் படிக்காததே இதன் பெருமையை உணர்த்துவதாகும். சங்கநூல் அறிவுசான்ற திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் இதற்குச் சிறந்த உரையெழுதியுள்ளார்கள்.

5. திருவிளையாடல் போற்றிக்கலி வெண்பா: 6. மதுரைப் பதிற்றுப்பத்தந்தாதி: இவ்விரு நூல்களும் மேற்குறித்த பரஞ்சோதி முனிவரால் இயற்றப்பெற்றனவாகும்.

7. மதுரைக் கலம்பகம்: 8. மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்: இவ்விரு நூல்களும் குமரகுருபர அடிகளாரால் இயற்றியருளப்பெற்றன. இவைகளன்றி மதுரைக் கோவை, மதுரைச் சொக்கநாதர் உலா, தமிழ்விடுதூது முதலிய பல பிரபந்தங்களும் இறையனார் அருளிய களவியலும் (அகப்பொருள் இலக்கணம்) இத்தலத்தின் சிறப்பிற்கு உரியன.

திருஞானசம்பந்தப் பெருந்தகையார் அம்பிகை சிவஞானம் குழைத்து அருளிய இன்னமுதை உண்டவர். அவர் கடவுளைத் தவிர வேறு யாரையும் பாடாதவர். அவர், இப்பதியில் மங்கையர்க்கரசியாரை நோக்கி, "உமைக் காண வந்தனம்" என்றதோடு அவரைத் திருமுன்வைத்துப் பாடியருளியுள்ளார்கள். ஆதலால், மங்கையர்க்கரசியார் பெருஞ்சிறப்புவாய்ந்தவர் என்று பெறப்படுகின்றது. மங்கையர்க்கரசியாரையும், குலச்சிறையாரையும் பதிகத்தில் வைத்துப் பாடும்பொழுது, மங்கையர்க்கரசியாரைக் குறிக்குங்கால் சிவன், உமை இவர்களோடு தொடர்புபடுத்திக் கூறியுள்ளார். குலச்சிறையாரைக் குறிக்கும்பொழுது சிவபெருமானோடுமாத்திரம் தொடர்புபடுத்திக் கூறியுள்ளார். இவற்றால் மங்கையர்க்கரசியார் தம்கணவரோடு

வாழவேண்டுமென்று, ஞானசம்பந்தரின் திருவுளங்கொண்டதாகத் தோன்றுகின்றது. இக்கருத்தைத்தான் "பையவேசென்று பாண்டியற்காகவே" என்ற அவரது தேவாரப் பகுதியும் தெரிவிக்கின்றது.

மங்கையர்க்கரசியார் திருநீறு அணிந்திருந்த செய்தி "முத்தின் றாழ்வடமுஞ் சந்தனக்குழம்பு நீறுந்தன் மார்பினின் முயங்கப் பத்தியார்கின்ற பாண்டிமாதேவி" என்னும் ஞானசம்பந்தரது தேவாரப்பகுதியால் அறியக்கிடக்கின்றது.

நுணுகி ஆராயின் இவைபோன்ற பல உயரிய செய்திகளை இத்தலத்துத் தேவாரப் பதிகங்களால் அறியலாம்.

## 13 திரு ஆனைக்கா

யானை பூசித்துப் பேறு எய்தியதால் இப்பெயர் பெற்றது.

திருவரங்கம் ரயில்வே நிலையத்திற்குக் கிழக்கே அரைமைல் தூரத்தில் இருக்கின்றது.

இறைவரின் திருப்பெயர்: நீர்த்திரள்நாதர். இத்திருப் பெயரை இவ்வூர்த் திருத்தாண்டகத்தில் அப்பர்பெருந்தகையார் "செழுநீர்த் திரளைச் சென்று ஆடினேனே" என எடுத்து ஆண்டுள்ளனர். இதுவன்றி ஜம்புகேசுவரர் என்ற வேறு திருப் பெயரும் உண்டு. வெண்ணாவல் மரத்தின் அருகில் எழுந்தருளி யிருப்பதால் இப்பெயர் பெற்றார். (ஜம்பு - நாவல்.) இறை வியாரின் திருப்பெயர்: அகிலாண்டநாயகி.

தலவிருட்சம் வெண்ணாவல்.

தீர்த்தங்கள் காவிரி, இந்திரதீர்த்தம், சந்திரதீர்த்தம் என்பன.

கோயில் ஐந்துபிராகாரம்கொண்ட பெரியகோயில், ஆயிரங் கால் மண்டபம் உண்டு. முதல் மண்டபம் மிகச் சிறந்தது. சுவாமிசந்நிதி மேற்கு. அம்மன்சந்நிதி கிழக்கு. சுவாமி பிராகார மண்டபத்தில் கிழக்கு நோக்கியபடி ஜ்யேஷ்டாதேவி உருவம் இருக் கிறது. இதனை, சனீஸ்வரர் என்று தப்பாய் எழுதி இருந்தார்கள்.

நான்காவது மதில் திருநீற்றுமதில் மிகப்பெரியது. இது பஞ்சபூத தலங்களுள் அப்புத்தலம் ஆகும். (அப்பு - தண்ணீர்) சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் இடத்தில் நீர் ஊறிவருவது இன்றும் காணத்தக்கது. முற்பிறப்பில் *சிலந்தியாயிருந்து சிவபெருமானை வழிபட்ட புண்ணியத்தின்பயனாய் அரசனாய்ப் பிறந்த கோச்செங்கட் சோழனால் கட்டப்பெற்ற கற்றளியை உடையது. வெளிப்புறத்து மதிலுக்குத் திருநீறு இட்டான் திருமதில் என்று பெயர். இறைவர் சித்தராய் எழுந்தருளித் திருநீற்றைக் கூலியாகக் கொடுத்து எடுப்பித்த காரணத்தால் அம்மதில் அப்பெயர்பெற்றது. திருக்கயிலையிலிருந்து எழுந்தருளி இறைவி இங்குத் தவஞ்செய்து ஞானோபதேசம் பெற்ற காரணத்தால் ஞானஸ்தலம் எனவும் இது வழங்கப்படும்.

உறையூர்ச்சோழர் மணியாரம்தரித்துக்கொண்டு காவிரியில் நீராடினார். அது ஆற்றில் விழுந்துவிட்டது. உடனேஅவர் "சிவபெருமானே கொண்டருளும்" என வேண்டினர். அந்த மணியாரம் திருமஞ்சனக்குடத்தில் புக, அதனை இறைவர் அவ்வழியே தனக்கு ஆரமாக ஏற்றுக்கொண்டு சோழனுக்கு அருள்புரிந்ததும் இப்பதியேயாகும். இச்செய்தியை, சுந்தரமூர்த்தி நாயனார் இவ்வூர்ப்பதிகத்தில்,

> தாரமாகிய பொன்னித் தண்டுறையாடி விழுத்து
> நீரினின்றடி போற்றி நின்மலா கொள்ளென வாங்கே
> ஆரங்கொண்ட வெம்மானைக் காவுடையாதியை நாளும்

எனவும் திருஞானசம்பந்தப்பெருமான்,

> "ஆர நீரோ டேந்திள ஞானைக்காவு சேர்மினே."

எனவும் சேக்கிழார்பெருமான், ஏயர்கோன் கலிக்காமநாயனார் புராணத்தில்,

> வளவர் பெருமான் திருவாரஞ் சாத்திக்கொண்டு வரும்பொன்னிக்
> கிளருந் திரைநீர் மூழ்குதலும் வழுவிப் போகக் கேதமுற
> அளவில் திருமஞ் சனக்குடத்தி லதுபுக் காட்ட வணிந்தருளி
> தளரு மவனுக் கருள்புரிந்த தன்மை சிறக்கச் சாற்றினர்.

எனவும் போற்றுவாராயினர்.

---

*இச்செய்தியை அப்பர்பெருமானுடைய, திருக்குறுக்கைப் பதிகம் திருநேரிசை 4-ஆவது பாடல் வலியுறுத்துகின்றது.

தலத்தைப்பற்றிய நூல்கள்: கச்சியப்பமுனிவர் இத்தலபுராணத்தையும் மகாவித்வான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை அகிலாண்டநாயகி மாலையையும் பாடியுள்ளனர். இவைகள் இரண்டும் அச்சேறி வெளிவந்துள்ளன.

தலத்தின்பெருமையை உணர்த்தும். புராணபாடல் ஒன்று பின்வருமாறு:-

மேதகைய பயன்விழைவோர் ஞானதலத் துறைகுவது மேவாதாயின்
ஓதுக அத்தலப்பெயரை யாங்கதுவு முற்றாதே லுரைப்பக்கேட்க
காதலொடு கேட்டவரு மூவகைய பாதகமுங் கடந்துமேலாம்
போதமுணர்ந் தெமதடியிற் புக்கிருப்ப ரிஃதுண்மை பொலங்கொம்
[பன்னாய்.

திருவானைக்காப் புராணம் - தலவிசேடப் படலம்.

கல்வெட்டு: இக்கோயிலில் பிற்காலத்துச் சோழமன்னர்கள், பாண்டியர்கள், ஹொய்சலர்கள், விஜயநகர அரசர்கள், மதுரை நாயக்கர்கள் இவர்கள் காலங்களில் பொறிக்கப்பெற்ற நூற்று ஐம்பத்து நான்கு கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இவைகளெல்லாம் சரித்திர சம்பந்தமான உயரிய செய்திகளைத் தெரிவிக்கின்றன.

இக்கோயில் சிவபெருமான் திருவானைக்கா உடையார், திருவானைக்கா உடைய நாயனார், மகாதேவபட்டர் என்னும் திருப்பெயர்களாலும், அம்மன் அகிலாண்டநாயகி என்னும் பெயராலும் குறிக்கப்பெற்றுள்ளனர். இக்கோயில் முதற் பிராகாரத்துத் துவாரபாலகர் (The Door keepers) இருவரையும் எழுந்தருளுவித்தவர் இருங்கொளப்பாடி வளநாட்டுக் கருப்பூரில் இருந்த இளையநயினார் மகனார் தெய்வங்கள் பெருமாள் ஆவர். இச்செய்தி அத்துவார பாலகர்களின் அடிப்பீடங்களில் பொறிக்கப்பட்டிருக்கின்றது.

நான்காம் பிராகாரத்தில் அகிலாண்டநாயகி அம்மன் கோயிலின்முன் உள்ள பசுபதீசுவரம் உடையாரை எழுந்தருளுவித்தவர் நீலகண்ட நாயக்கராவர். இச்செய்தி ஹொய்சால வம்சத்தைச்சேர்ந்த வீர ராமநாததேவரின் பதினான்காவதாண்டுக் கல்வெட்டால் தெரியவருகின்றது. இக்கோயிலின்

உற்சவ மண்டபத்தைக் கட்டியவர் சதாசிவ வரஜப்பைய யாஜி தீட்சிதராயர் ஆவர். இவரே அமாவாசை, பொங்கல் புதுநாள் இவைகளின் சிறப்புப் பூசனைக்கு நிவந்தமும் அளித்துள்ளனர். முதற் பிராகாரத்தின் வடகிழக்கு மூலையிலுள்ள எடுத்தருளிய ஸ்ரீபாதீஸ்வரம் உடைய நாயனுர் கோயிலைக் கட்டியவர், திரு ஞானசம்பந்தர் என்னும் பெயரினர் ஆவர். நான்காவது பிராகா ரத்திலுள்ள மேலக்கோபுரம் ஆதித்யதேவனது மகனுன சந்த பேந்திரனுல் சகம் 1357. அதாவது கி. பி. 1435-இல் கட்டப் பெற்றதாகும். வலம்புரி விநாயகரையும், சுப்பிரமணியரையும் மும்முடி திம்மரசர் என்பார் எழுந்தருளுவித்துள்ளார். விபூதி பிராகாரத்து மதிற்சுவரைத் திருநீற்றுச் சுந்தரபாண்டியன் கட்டியுள்ளான்.

ஹொய்சல அரசனுன வீரசோமீசுவரன் (சோழநாட்டில்) திருவரங்கத்துக்கு வடக்கே ஐந்துமைல் தூரத்தில் உள்ள கண்ணனூர்க் கொப்பத்தைத் தலைநகராக்கொண்டு ஆண்டான். இவன் சிறந்த சிவபத்தன் ஆதலின், திருவானைக்கா கோவிலின் கிழக்குக்கோபுரமான எழுநிலைக் கோபுரத்தைக் கட்டுவித்தான். வீரசோமீசுவரன் திருநாள் என்று தன் பெயரால் இத்திருக் கோயிலில் ஒரு விழா நடத்திவந்தான். வட திருவானைக்காவில் தன் பாட்டனுகிய பாலாலன் II என்பவன் பெயரால் வாலால ஈசுவரத்தையும், தன் பாட்டியாராகிய பத்மலா தேவியின் பெயரால் பதுமலீசுவரத்தையும் எடுப்பித்துள்ளான். இந்த வீர சோமீசுவரனது தாயார் கல்லலா தேவியார் ஆவார். இவரது மேன்மையின் பொருட்டுக் கண்ணனூரிலுள்ள பாலிஸ் வரம் உடையார்க்கு இந்த அரசன் நிபந்தம் அளித்துள்ளான். இக்கோயிலும் இவனுல் எடுப்பிக்கப் பெற்றதாகும். இந்த வீர சோமீசுவரனது இருபத்திரண்டாவது ஆட்சியாண்டில் திரு வானைக்கா கோவில் மூன்றுவது பிராகாரத்தின் வடபக்கத்தில், கல்வாக்கூர் தியாகப்பெருமாள், தியாகவிநோதீசுவரம் என்னும் கோயிலைக் கட்டியுள்ளனர். இவைபோன்று ஹொய்சல அரசர் களின் வரலாறுகள் பலவற்றை அறிதற்கு இக்கோயில் ஒரு சிறந்த பொக்கிஷமாக விளங்குகின்றது.

மாறவர்மன் சுந்தரபாண்டியன் பிறந்த நாள் ஆவணி மாதத்து அவிட்டமாகும். ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் I பிறந்தநாள் சித்திரை மாதத்து மூலநட்சத்திரமாகும். இச்

செய்திகளை இவர்கள் இத்திருவானைக்கா கோயிலுக்கு அளித்துள்ள நிபந்தங்களை அறிவுறுத்துகின்றன.

சோழமன்னர்கள் இக்கோயிலைப்பெரிதும் போற்றிவந்தனர். திரிபுவன சக்ரவர்த்தி இராசேந்திர சோழதேவன் (இவனே இக் கல்வெட்டில் கோனரின்மை கொண்டான்) என்பவன் நித்த விநோத வளநாட்டு வில்லவநல்லூரில் இருபத்தைந்துவேலி நிலத் தைத் தன் அத்தையாகிய திருப்பெரிய தேவியார் பேரால் திருவானைக்காவுடைய சிவபெருமானுக்குத் திருநாமத்துக் காணியாக இறையிலிசெய்து கொடுத்துள்ளான். திரிபுவன சக்ரவர்த்தி இராசராசதேவரின் இருபதாம் ஆண்டுக் கல்வெட் டினுல் இக்கோவிலுக்கு இருபது காவலாளிகள் இருந்தனர் என அறிகின்ருேம். இக்கல்வெட்டில் பிணைத்திட்டு (ஜாமீன்) என்ற பெயர் உளது.

மகாதேவ தீட்சிதர் மகன் சதாசிவ மகின் (தீட்சிதர்) காவை நூல்கள் எனப் பல எழுதினர். திருவானைக் காவிலுள்ள நஞ்சை நிலங்களை அளந்தகோல் சிவநாமத்திரேயம் என்னும் பெயர்பூண்டதாய் நான்குஅடி நீளமுள்ளதாய் இருந்தது. அகிலாண்ட ஈஸ்வரி கோயில், ஜம்புநாதர் கோயில் இவைகளின் தளவரிசைகளைச் செய்தவர் பாஸ்கரராயபாரதி தீட்சிதர் ஆவர். தோப்பு ஒன்றிற்குச் சிலந்தியைச் சோழனுக்கினன் என்னும் பெயரும் பட்டன் ஒருவனுக்கு என்னுனைக் கன்று என்ற பெயரும் வைக்கப்பெற்றிருந்தன. என்னுனைக் கன்று என்னும் பெயர் இவ்வூர்த் திருத்தாண்டகத்திலும் கூறப் பெற்றுள்ளது.

விஜயரங்க சொக்கநாத நாயகருடைய நாடகசாலை ஆசிரியர் வைத்தியப்ப ஐயா, ஜம்புதீர்த்த மண்டபத்திற்குப் படித் துறைகள் கட்டியுள்ளனர்.

சங்கரமகா தேவர்க்கு இவ்வூரில் மடம் இருந்தது. நாற்பத் தெண்ணுயிரவர் என்னும் பெயருள்ள மற்ருெரு மடமும் இருந்தது. அதில் துறவிகட்கு அன்னம் அளிக்கப்பட்டுவந்தது.

See the Annual reports on south Indian Epigraphy for the years.

| | | |
|---|---|---|
| 1891 | Numbers | 18— 32 |
| 1903 | ,, | 61— 67 |
| 1905 | ,, | 499—508 |
| 1908 | ,, | 480—487 |
| 1910 | ,, | 92 |
| 1937 | ,, | 103—136 |
| 1938 | ,, | 1— 79 |

South Indian Inscription Volume IV Numbers 419—430
,, ,, III ,, 76

திருவானைக்கா—திருவாவடுதுறை ஆதீன வெளியீடு.

## 14 திரு இடைமருதூர்

மருதமரத்தைத் தலவிருட்சமாகக்கொண்ட பாடல்பெற்ற பதிகள் மூன்றுகும். அவை வடநாட்டிலுள்ள மல்லிகார்ச்சுனம் என்ற ஸ்ரீபர்ப்பதம், பாண்டிநாட்டில் உள்ள திருப்புடைமருதூர் சோழநாட்டிலுள்ள திருவிடைமருதூர் ஆகும். இவற்றுள் ஸ்ரீபர்ப்பதத்துக்கும் திருப்புடைமருதூர்க்கும் இடையில் மருத மரத்தைத் தலவிருட்சமாகக் கொண்டிருப்பதால் இது திரு இடைமருதூர் என்னும் பெயர்பெற்றது.

மாயூரம் கும்பகோணம் ரயில் பாதையில், திருவிடை மருதூர் ரயில்வே நிலயத்திற்கு அருகில் இருக்கின்றது. இது காவிரிக்குத் தென்கரையிலுள்ள 30 ஆவது தலமாகும்.

இறைவரின் திருப்பெயர்: மருதவாணர், மகாலிங்கேசுவரர் இப்பதியைச்சுற்றி இருக்கும் சிவதலங்களின் அமைப்பை ஒட்டி நடேசர் சந்நிதி—தில்லையாகவும், தட்சிணுமூர்த்தி சந்நிதி—ஆலங்குடியாகவும், நவக்கிரகக்கோயில்—சூரியனர் கோயிலாகவும் விநாயகர் சந்நிதி—திருவலஞ்சுழியாகவும் முருகர் சந்நிதி—சாமி மலையாகவும், வைரவர் சந்நிதி—சீகாழியாகவும், சண்டேசுவரர் சந்நிதி—திருச்சேய்ஞலூராகவும் விளங்குகின்றன. ஆதலால், இது மகாலிங்கத்தலம் என்றும் இறைவர்க்கு மகாலிங்கேசுவரர் என்றும் திருப்பெயர்கள் ஏற்பட்டன. இறைவியாரின் திருப் பெயர்: நன்முலைநாயகி.

தீர்த்தம்: காவிரி அயிராவணத்துறை. பூசநாளில் இத் துறையில் இறைவர் தீர்த்தம் கொடுத்தருளுவர். இப்பூசநாளில் நீராடலைப்பற்றி அப்பர் பெருந்தகையார், இத்தலத்துத் திருக் குறுந்தொகையில்,

"ஈச னெம்பெரு மானிடை மருதினில்
பூச நாம்புகு தும்புன லாடவே"

எனவும், திருஞானசம்பந்தப் பெருந்தகையார்,

"பூசம் புகுந்தாடிப் பொலிந்தழகாய
ஈச னுறைகின்ற விடைமருதீதோ"

எனவும் சிறப்பித்து அருளினர்.

உமாதேவியார், உருத்திரர், மூத்தபிள்ளையார், முருகர், பிரமன், விஷ்ணு முதலியோர் பூசித்துப்பேறுபெற்றனர். பெரிய அன்பினையுடைய வரகுணபாண்டியதேவரின் கொலைப்பழியைப் போக்கியருளிய தலம் இதுவாகும். பத்திரகிரியார், பட்டினத் துப்பிள்ளையார் இவர்கள் இப்பதியில் பலநாட்கள் தங்கித் தவம்புரிந்து அருள்பெற்றனர். இவர்களுள் பட்டினத்தடிகளார் பிரதிமை கீழைக்கோபுர வாசலிலும், பத்திரகிரியார் பிரதிமை மேலைக்கோபுர வாசலிலும் இருக்கின்றன. வரகுணதேவரைப் பிடித்து நீங்கிய பிரமகத்தியின் உருவம் கீழைக்கோபுர வாசலில் உள்ளது.

"பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளை யைப்போல் ஆரும் துறக்கை அரிது அரிது" என்று தாயுமா னுரால் பெரிதும் பாராட்டப்பெற்ற பட்டினத்தடிகளார் இத் தலத்திற்கு மும்மணிக்கோவை ஒன்றை இயற்றியருளியுள்ளார். அது பதினொராந் திருமுறையில் சேர்க்கப்பெற்றுள்ளது. கோடீச்சுரக்கோவையைப்பாடிய கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் இத்தலத்திற்குப் புராணம் பாடியுள்ளார். மகா வித்வான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை உலாவைப் பாடியுள்ளார். இவைகள் அச்சிடப்பெற்றுள்ளன. இவைகளேயன்றி, மகா மகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் இத்தல மான்மியத்தை உரைநடையில் எழுதியிருக்கின்றார்கள்.

"திருவிடைமருதூர்த் தெருவழகு" என்னும் உலகவழக்கு இவ்வூர்த் திருவீதிகளின் சிறப்பைப் புலப்படுத்துவதாகும். இப் பதிக்குத் திருஞானசம்பந்தரது பதிகங்கள் ஆறும், திருநாவுக்கரசரது பதிகங்கள் ஐந்தும், சுந்தரமூர்த்தி நாயனரது பதிகம் ஒன்றும் ஆகப் பன்னிரண்டு பதிகங்கள் இருக்கின்றன.

## 15 திரு இந்திரநீலபருப்பதம்

இந்திரன் பூசித்த காரணத்தால் இப்பெயர்பெற்றது. "மேகங்கள் மேலே கவிழ்ந்து சூழ்ந்திருப்பதால் நீலபர்ப்பதம் எனப் பெற்றதுபோலும்" என்பர் திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்கள். இது வடநாட்டுப்பதிகள் ஐந்தனுள் ஒன்று. இந்திரன் பூசித்த செய்தி இவ்வூர்த் திருஞானசம்பந்தர் தேவாரத்தின் திருக்கடைக்காப்பிலுள்ள "இந்திரன் தொழு நீல பர்ப்பதம்" என்னும் பகுதியால் அறியக்கிடக்கின்றது. இதற்குத் திருஞானசம்பந்தரது பதிகம் ஒன்றுள்ளது.

இது நார்க்கட்டியகன்ஜ்—பிக்னதோரி (B. N. W. Ry.) இருப்புப்பாதையில் பிக்னதோரி ரயில்நிலயத்தினின்று நூற்று முப்பது நாழிகையளவில் உள்ளது.

இறைவரின் திருப்பெயர் நீலாசலநாதர். இறைவியாரின் திருப்பெயர் நீலாம்பிகை.

## 16 திரு இரும்பூளை

பூளை என்ற செடியைத் தலத்துக்குறியாக உடைமையால் இது இப்பெயர்பெற்றது. இது இப்பொழுது ஆலங்குடி என்று வழங்கப்பெறுகின்றது.

இது தஞ்சாவூர்—திருவாரூர் ரயில்பாதையில், நீடாமங்கலம் ரயில்வேநிலயத்திற்கு வடமேற்கே கும்பகோணம் போகும் வழியில் நான்குமைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவிரியின் தென்கரையில் உள்ள தொண்ணூற்றெட்டாவது பதி.

இறைவரின் திருப்பெயர் காசியாரணியர்; வடமொழியில் ஆபத்சகாயர். இறைவியாரின் திருப்பெயர் ஏலவார்குழலி.

விசுவாமித்திரர் பூசித்துப் பேறுபெற்றபதி. இதற்குத் திருஞானசம்பந்தரால்பாடப்பெற்ற பதிகம் ஒன்று இருக்கிறது. கோயிலில் தெற்குக் கோபுரம் பெரியது. கிழக்குக் கோபுரம் சிறியது. மூப்புறமும் அகழிபோன்ற திருக்குளம் சூழ்ந்திருக்கின்றது.வெகு அழகாக இருக்கிறது. தட்சிணாமூர்த்தி விழா சிறப்பானது. அவருக்கு உற்சவரும் மூலவரும் உண்டு. அம்மன் கோயில் தனி. இரண்டிற்கும் இடையில் ஒரு மண்டபம் உண்டு. புராணம் உண்டு.

கல்வெட்டு : ஐந்து கல்வெட்டு படி எடுக்கப்பட்டுள்ளன.

1. குலோத்துங்கன் I காலத்து 45-ம் ஆண்டு (இதில் கி. பி. 1111ல்) அரசன் கலிங்கத்தின்மீது படையெடுத்தசெய்தி கூறப்பட்டுள்ளது. இந்தப் போர் இரண்டாவது போராக இருக்கவேண்டும் என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றார்கள். கலிங்கப்போர் 1055 ல் நடந்தது. ஆகவே இந்தப்போர் வட கலிங்கத்தின்மீது அநந்தவர்மன்பொருட்டு ஏற்பட்டதாம்.

2. விக்கிரமசோழன் (1118–1135) காலத்து கல்வெட்டு. அரசனது ஆணைமுழுவதும் பெரிதாக வெளிவந்திருக்கின்றது. (S. I. Vil. V.)

3. இராஜராஜன் II (1171–1180) கல்வெட்டில் புது நிலத் தீர்வை போடப்பட்டமை கூறப்படுகிறது.

4. இராஜராஜன் II காலத்திலே 14—2—1152 தேதியில் ஏற்படுத்தப்பட்டது.

இக்கல்வெட்டுகளில் சுத்தமலிவளநாடு முடிச்சோணாடு திரு இரும்பூளை என்கின்ற ஜனநாத சதுர்வேதிமங்கலம் என்ற பிரமதேயமாக இவ்வூர் கூறப்படுகிறது. விளக்குக்காக நிலம், பணம் முதலிய தானங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இராசராசன் காலத்தில் குளத்தைச்சுற்றி மாடவீதிகள், சட்டம், திட்டம் ஏற்படுத்தப்பட்டன. வறட்சிக்காலத்தில் நிலத்தைப் பழுதுபார்க்கக் கடன் கொடுக்கத் திட்டம் வகுக்கப்பட்டது.

# 17 திரு இரும்பைமாகாளம்

மாகாளர் பூசித்த காரணத்தால் இது மாகாளம் எனப் பெயர்பெற்றது. இரும்பைப்பதியிலுள்ள மாகாளம் என்னும் கோயில் என்பது இத்தொடரின் பொருளாகும்.

இது புதுச்சேரி ரயில்வே நிலையத்திற்கு வடமேற்கே ஐந்து மைல் தூரத்திலுள்ளது. இது தொண்டைநாட்டுத் தலங்களுள் ஒன்றாகும்.

இறைவரின் திருப்பெயர் மாகாளேசுவரர். இறைவியாரின் திருப்பெயர் குயில்மொழிநாயகி.

மாகாளர் பூசித்துப் பேறுபெற்றார். இதற்குத் திருஞான சம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கின்றது. கோயில்முன் பெரிய இலுப்பைத்தோப்பு இருக்கிறது. கோயில் ஒழுங்காகக் கட்டப் படவில்லை. மூலத்தானத்திற்குப் பின்னது முருகன் கோயில். மூலத்தானம் கற்பணி. மற்றவை செங்கல்வேலை. ஊர் சிறியது.

கல்வெட்டு: இக்கோயிலில் 4 கல்வெட்டுக்கள் படி எடுக்கப்பட்டிருக்கின்றன.

1. குலோத்துங்கசோழன் VI கி. பி. 1207-ல் கோயிலுக்கு நிலம் 25 வேலி கொல்லைநிலம் 50 வேலி முதலியன தரப்பட்டன.

2. விக்கிரமபாண்டியன் 2 ஆம் ஆண்டு கி. பி. 1285. இக் கோயிலுக்கும் அரசலிகோயிலுக்குமாக நிலம் விடப்பட்டது. மற்றொன்று அதுபோல நிலவரிகளுடன் தரப்பட்டது.

3. இராசராசராயர் சம்புவராயன் என்ற சிற்றரசனது 10 ஆம் ஆண்டில் (190/22–193/02) பலவித வரிகளின் பெயர்களைக் குறிப்பிட்டு இரண்டு கோயில்களுக்கும் நிலதானம் செய்யப்பட்டது. இக்கல்வெட்டுக்களின்படி இந்நாடு ஜயங்கொண்ட சோழமண்டலத்து மாத்தூர்நாடு என்றும், ஊர் இரும்பைமாகாளம் என்றும், இறைவன் பெயர் திருமாகாளமுடையார் என்றும் தெரிகின்றன. இவ்வூர் சோழருக்குப் பிறகு பாண்டியனுக்கும், பிறகு சம்புவராயனுக்கும் 13 ஆம் நூற்றாண்டில் அடங்கியிருந்தது அறியத்தக்கது.

# 18 திரு ஐயாறு

காவிரி கி.பி. ஏழாம் நூற்ருண்டு முதல் ஒன்பதாம் நூற்ருண்டின் இடைப்பகுதி முடியத் திருவையாற்றிலிருந்து கண்டியூர்வரை பரவியிருந்தது. கண்டியூர், திருச்சோற்றுத்துறை இவைகளைப் பாடிய தேவார ஆசிரியர்கள் இவ்விரு பதிகளையும் காவிரிக்கரையிலுள்ள பதிகளாகவே குறிப்பிட்டுள்ளனர்.

திருவையாற்றுக்கும் கண்டியூர்க்கும் இடையிலுள்ள குடமுருட்டியாறு அக்காலத்தில் இல்லை. அது காவிரியிலிருந்து கும்பகோணத்திற்குக் கிழக்கே பிரிந்துசென்றது. கடுவாய் என்பது குடமுருட்டியாறுகும், இக்கடுவாய்க்கரையிலுள்ள புத்தூரை, கடுவாய்க்கரைபுத்தூர் என்று சிவநெறிகாட்டியருளிய குரவர்கள் குறிப்பிட்டுள்ளதுபோல, அக்காலத்தில் குடமுருட்டியாகிய கடுவாயாறு கண்டியூர்ப்பக்கமாக ஓடியிருக்குமானல் அதைக் கடுவாய்க்கரைக் கண்டியூர் என்றே கூறியிருக்கவேண்டுமே! அங்ஙனம் குறிப்பிடாததன் காரணத்தையும் உணரவேண்டும். இதற்குப் பிற்காலத்தேதான், திருக்காட்டுப்பள்ளியைத் தலைப்பாகக்கொண்டு, குடமுருட்டியாற்றை வெட்டி, கும்பகோணத்திற்குக் கிழக்கிலிருந்து செல்லும் கடுவாயாற்ருேடு சேர்த்து, காவிரியாற்றைக் குறுக்கி, மக்கள் வாழ்வுக்கும் சாகுபடிக்கும் பயன்படுத்தியிருக்கவேண்டும். இதனல் ஒரே நதியெனல்பொருந்தும் என்பர் சிலர். தஞ்சாவூர் முதல் திருவையாறு முடிய இருக்கும் வடவாறு, விண்ணுறு, வெட்டாறு, குடமுருட்டி, காவிரி என்னும் ஐந்து ஆறுகளை உடையது ஆகையால், ஐயாறு என்று பெயர்பெற்றது என்பர் சிற்சிலர். சூரியபுட்கரிணி, சந்திரபுட்கரிணி, கங்கை, பாலாறு, நந்திவாய்நுரை, நந்திதீர்த்தம் என்னும் ஐந்து தெய்விகநதிகள் தம்முட் கலப்பதால் ஐயாறு என்றுபெயர்பெற்றது என்பர் சிற்சிலர். பஞ்சநதம் என்பது, ஐயாறு என்னுந் தமிழுக்கு ஒத்த வடசொல். இக்கோயில் தருமபுர ஆதீன மடாலயத்து மேற்பார்வையில் உள்ளது.

தஞ்சாவூருக்கு வடக்கே ஏழுமைல் தூரத்தில் இருக்கிறது. இறைவரின் திருப்பெயர் ஐயாறப்பர்; வடமொழியில் பஞ்சநதீசுவரர்; பிரணதார்த்திஹரர் என்பர். இறைவியாரின் திருப்பெயர் அறம்வளர்த்தநாயகி; வடமொழியில் தர்மசம்வர்த்தனி என்பர்.

தீர்த்தம் காவிரி, சூரியபுட்கரிணி என்பன.

இது சமயகுரவர்கள் நால்வராலும் பாடப்பெற்றது. "நந்தி அருள்பெற்ற நன்னகர்" என்று சேக்கிழார் இப்பதியைச் சிறப்பித்துள்ளார். சிலாதமுனிவர்க்குத் திருமகனாய் அவதரித்த திருநந்திதேவர், சுயசாதேவியை மணந்து, ஐயாறப்பரைப் பூசித்துச் சிவசாரூபம் பெற்றமையை உட்கொண்டு சேக்கிழார் இவ்வாறு கூறலானார். கடலரசன் இங்குவந்து ஐயாறப்பரைப் பூசித்துப் பேறுபெற்றான். "ஆழிவலவனின் றேத்தும்" என்னும் இவ்வூர்த் தேவாரப்பகுதி இதற்குச் சான்றாகும். இலக்குமியால் பூசிக்கப்பெற்றது. இலக்குமிக்கு இரண்டாம் பிராகாரத்தில் தனிக்கோயில் இருக்கின்றது. வெள்ளிக்கிழமைதோறும் இலக்குமி புறப்பாடு இத்தலத்தில் நடைபெற்றுவருகின்றது. வடகயிலையில் சிவபெருமான் வீற்றிருக்கும் திருக்கோலத்தை அப்பர்பெருமானுக்குக் காட்டியருளிய காட்சியையுடையது. இக்காட்சியையுணர்த்தும் அழகிய வேலைப்பாடுடன்கூடிய கற்கோயில், பெரியபுறத் திருச்சுற்றாலையின் தென்பால் (மூன்றாம் தெற்குப் பிராகாரத்தில்) இருக்கின்றது. அங்கு இறைவர் மணவாளக்கோலத்தோடு அதாவது சத்தியும் சிவமுமாக வீற்றிருந்து அருளுகின்றார். அப்பர் பெருமானின் அழகுதிகழும் பிரதிமையும் அங்கு இருக்கின்றது.

சுந்தரமூர்த்தி நாயனாரும் சேரமான்பெருமாள் நாயனாரும் கண்டியூரை வணங்கியபோது எதிரே தோன்றிய திருவையாற்றையும் வணங்க விரும்பினர். அப்பொழுது காவிரியில் வெள்ளப்பெருக்கு மிகுதியாக இருந்தமையால் அக்கரையிலிருந்த சுந்தரமூர்த்தி நாயனார் "ஐயாறுடைய அடிகளோ" என்று திருப்பதிகம் பாடிய அளவில், வந்து மீளுமளவும் காவிரியை வழிவிடச்செய்த பெருமையையுடையது இத்தலம். தம்மை வழிபட்டுவந்த ஒரு அந்தணச் சிறுவனைத் தொடர்ந்து வந்த யமனைத் தண்டித்து, அச்சிறுவனைச் சோதிவடிவாக ஆட்கொண்ட காரணம்பற்றி ஆட்கொண்டார் என்னும் பெயருடையாரது திருமேனி தெற்குக்கோபுரவாயிலின் மேல்பால் இருக்கின்றது. அவருக்கு அருகில் தென்மேற்குமூலையில் இருப்பவர் ஓலம் இட்ட பிள்ளையார் ஆவர். ஆட்கொண்டார்க்கு எதிரில் குங்கிலியக்குழி ஒன்று இருக்கிறது. அதில் மக்கள் குங்கிலியத்தை இட்டு வழிபடுகின்றனர். இத்தலத்தே இந்திரன்

வாலி முதலியோர் வழிபட்டுப் பேறுபெற்றுர்கள். இச்செய்தியை "எண்ணிலி தேவர்கள் இந்திரன் வழிபட" எனச் சம்பந்தரும், "வாலியார் வணங்கி ஏத்தும் திருவையாறு அமர்ந்த தேன்" என அப்பர்பெருந்தகையும் அருளிச்செய்துள்ள இத்தலத்துத் தேவாரப்பகுதிகளால் அறியலாம்.

இறைவரைப் பூசித்த சைவர் ஒருவர் காசிக்குச் சென்று, குறிப்பிட்டகாலத்தில் வாராமையால் பூசைமுறை தவறியது. அதுபொழுது இறைவர் அச்சைவருடைய வடிவோடு இருந்து தம்மைத்தாமே பூசித்த சிறப்புடையது. இதைத்தான் "ஐயா றதனில் சைவனுகியும்" என்பர் திருவாசகத்தில். இப்பதிக்குப் பதினெட்டுத் தேவாரப்பதிகங்கள் இருக்கின்றன. திருவடிப் பெருமைகளை அப்பர்பெருமான் இருபது திருப்பாடல்களால் இத்தலத்தில் உணர்த்தியதுபோல் வேறு எப்பதியிலும் உணர்த் தாத அவ்வளவு பெருமையை உடையது.

இத்தலத்தில் நிகழும் விழாக்களுள் நந்திதேவர் திருமணத் திருவிழா. சித்திரைப்பெருந்திருவிழா இவைகள் மிகச் சிறந்தன வாகும். இவைகளுள் நந்திதேவர் திருமணத் திருவிழா, பங்குனி மாதத்தில் நிகழ்வதாகும். அதுபொழுது அம்மையப்பர் ஒரு தனி வெட்டிவேர் பல்லக்கிலும், நந்திதேவர் வேறு ஒரு வெட்டிவேர் பல்லக்கிலும் எழுந்தருளி, திருமழபாடிக்குச்செல்வர். அங்கே நந்திதேவர்க்குத் திருமணத்தை முடித்துக்கொண்டு அன்று இரவே ஐயாற்றுக்கு எழுந்தருளும் விழாவாகும்.

சித்திரைப்பெருந் திருவிழா: இது சித்திரைமாதத்தில் நிகழ்வதாகும். இதைப் பிரமோற்சவம் என்றும் வழங்குவர். இதில் ஐந்தாம்நாள் விழாவே தன்னைத்தான்பூசிப்பதாகும். இவ் விழாவின் முடிவில் ஐயாறப்பர் அறம்வளர்த்தநாயகியாருடன் நன்கு அலங்கரிக்கப்பட்ட கண்ணாடிப்பல்லக்கிலும், நந்திதேவர் தனியொரு வெட்டிவேர்ப்பல்லக்கிலும் இருந்து திருப்பழனம், திருச்சோற்றுத்துறை, திருவேதிகுடி, திருக்கண்டியூர், திருப் பூந்துருத்தி, திருநெய்த்தானம் இவ்வூர்களுக்கெல்லாம் எழுந் தருள, அந்தந்த ஊர்களின் இறைவரும் தனித்தனி வெட்டிவேர்ப் பல்லக்குகளில் எதிர்கொண்டு அழைத்து உடன் தொடர மறுநாட்காலை ஐயாற்றுக்கு எழுந்தருளுவர். இதை ஏழூர் விழா அல்லது சப்தஸ்தானத் திருவிழா என்பர். தென்னுட்டில்

இதைப்போன்றதொரு விழாவைக் காணமுடியாது. இவ்விழா வில் பல லட்சக்கணக்கான மக்கள் குழுமி ஏழ் ஊர்களையும் சுற்றிவரும் காட்சி போற்றத்தக்கதாகும்.

இத்திருக்கோயில் திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமானது. இப்பொழுது ஆதீனத்தில் இருபத்தைந்தாவது பட்டத்தில் எழுந்தருளி அருளாட்சி நடத்தி வரும் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள், பழங்காலத்துச் சோழமன்னர்களுடைய ஆட்சிக்காலங்களில் நடைபெற்ற சிறப் புக்களைப்போலவே இத்திருக்கோயிலின் நித்தியநைமித்திகங் கள் எல்லாவற்றையும் மிக்க சிறப்புறச் செய்வித்தருளுகின் றார்கள்.

இத்திருக்கோயிலின் மூன்றும்பிராகாரம் பெரியபுறத் திருச் சுற்றுமலை என்று கல்வெட்டுகளில் கூறப்பெற்றுள்ளது. இப் பிராகாரத்தின் வடபால் ஒலோகமாதேவீச்சரம் என்னும் பெய ருள்ள ஒருகற்கோயில் இருக்கின்றது. அது முதலாம் இராசராச சோழனுடைய மனைவியாராகிய ஒலோகமாதேவியால் கட்டப் பெற்றதாகும். அம்மன்கோயில் புதியதிருப்பணியை உடையது. புலவர்கள் செய்யுளை அலங்கரிப்பதுபோல், தேவகோட்டை உ. ராம. சுப. சேவு. மெய்யப்பச் செட்டியார் அவர்கள் அழகு பெறத் திருப்பணி செய்திருக்கின்றனர்.

ஆடி அமாவாசை நாள் அப்பருக்குக் காட்சிகொடுத்த நாளாகும். அன்றும் திரளான மக்கள் வந்து கூடுவர்.

ஐயடிகள்காடவர்கோன் நாயனர் ஒரு வெண்பாவால் திருவையாற்றைப் பாடியுள்ளார்கள். அது சேத்திரத் திரு வெண்பாவில் சேர்க்கப்பெற்றுள்ளது. அப்பாடல் வருமாறு:—

"குந்தி நடந்து குனிந்தொருகைக் கோலூன்றி
நொந்திருமி ஏங்கி நுரைத்தேறி—வந்துந்தி
ஐயாறு வாயாறு பாயாமுன் நெஞ்சமே
ஐயாறு வாயால் அழை."

இத்தலத்திற்குப் புராணம் ஒன்று தமிழில் இருக்கின்றது. இது ஞானக்கூத்தரால் இயற்றப்பெற்றது. இதைத் தருமபுர ஆதீனத்தார் அச்சிட்டுள்ளனர்.

இத்திருக்கோயிலுள் ஐயாறப்பர்கோயில், தென்கயிலைக் கோயில், ஒலோகமாதேவீச்சரம் ஆக மூன்றுகோயில்களில் கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அவைகளின் சுருக்கங்களை ஈண்டுக் கொடுக்கப்பட்டுள்ளன.

கல்வெட்டு: இதில் பிற்காலத்துச் சோழமன்னர்களில் முதலாம் ஆதித்தன், முதலாம் பராந்தகன், இரண்டாம் ஆதித்த கரிகாலன், முதலாம் இராசராசன், விக்கிரமசோழன், மூன்றுங் குலோத்துங்கன் இவர்கள் காலங்களின் கல்வெட்டுக்களும், பிற்காலத்துப் பாண்டியர்களுள் கோச்சடையபன்மரான திரிபுவனச்சக்கிரவர்த்திகள் சுந்தரபாண்டியதேவர் காலத்துக் கல்வெட்டும், வீரமுக்கண் உடையார் மகனுர் வீரசரவண உடையார் காலத்துக் கல்வெட்டும், தஞ்சாவூரையாண்ட அச்சுதப்பநாயக்கர் காலத்துக் கல்வெட்டுக்களும் இருக்கின்றன. இவைகளெல்லாம் ஐயாறுடைய அடிகளுக்குத் திருநுந்தா விளக்குகளுக்கும், நித்தியநைமித்திகங்களுக்கும் நிபந்தங்கள் அளிக்கப்பெற்ற செய்திகளை உணர்த்துகின்றன. எனினும் எல்லாக் கல்வெட்டுக்களும் பல அரிய வரலாற்று உண்மைகளை அறிவிப்பவைகளாய் இருக்கின்றன.

ஐயாறப்பர் எழுந்தருளியிருக்கும் திருக்கோயில் பல்லவ மன்னர் ஒருவரால் செய்விக்கப்பெற்ற கற்றளியை உடைய தாகும். மூன்றும் (பிராகாரத்தின்) திருச்சுற்றுலையின் கிழக்குக் கோபுரம் விக்கிரமசோழனல் கட்டப்பெற்றதாகும். இச்செய்தி "ஸ்வஸ்திஸ்ரீ இத் திருக்கோபுரம் விக்கிரமசோழனது" என்னும் கல்வெட்டால் அறியக்கிடக்கின்றது. மேலக்கோபுரவாசலிலுள்ள அச்சுதப்பநாயக்கர் காலத்துக் கல்வெட்டு ஐயாறப்பர் கோயிலின் மேலக்கோபுரமும், முதல் பிராகாரமும், திருநட மாளிகைப் பத்தியும், ஐந்தாம் பிராகாரத்தின் தெற்குவாசலில் சூரியபுட்கரிணியான திருக்குளமும், மூன்றும் பிராகாரத்தில் தெற்குக்கோபுரமும் ஆனையப்பப்பிள்ளை, அவர் தம்பி வைத்திய நாதர் இவர்களால் எடுப்பிக்கப்பெற்றனவாகும்.

இத்திருப்பணிகளைப்புரிந்த ஆனையப்பப்பிள்ளையும் அவர் தம்பியும் மருதூர் என்னும் ஊரைப் பிறப்பகமாகக் கொண்டவர்கள். தஞ்சாவூர் ஐயன்வாசல் அருகில் இருந்தவர்கள்.

இவர்கள் இருவர்களின் உருவங்களோடு இவர்களுடைய பெற்ரோர்களின் உருவங்களும் முதல் பிராகாரத்து மேற்குத் திருச்சுற்று மாளிகையில் இருந்துள்ளன. ஆனால் அவைகள் முற்றிலும் சிதைக்கப்பட்டுவிட்டன. அந்தந்த உருவங்களின் மேலே பொறிக்கப்பெற்ற பெயர்கள் இன்றும் உள்ளன. மேலக் கோபுரக் கல்வெட்டில் குறிப்பிடப்பெற்ற செய்தியை இம் முதல் பிராகாரத்தின் மேற்குத் திருச்சுற்று மாளிகையின் உள்சுவரில் பொறிக்கப்பெற்றிருக்கும் "ஈசுவரஸு ஆவணிமீ இந்தப் பிராகாரம் மருதுடையகத்தீச நயினர் புத்திரர் ஆனையப்பப்பிள்ளை, வயித்தியநாத அண்ணன்கள் புண்ணியம்" என்னும் கல்வெட்டு உறுதிப்படுத்துகின்றது.

அச்சுதப்ப நாயக்கர் திருவரங்கம் பெரியகோயிலுக்குப் பல நிவந்தங்கள் அளித்துள்ளனர். இரண்யகர்ப்பம் புகுந்தனர். உடைப்பெடுத்துச்சென்ற காவிரிக்கு அணைகட்டுவித்தனர். திருவையாற்றில் பூசப்படித்துறைக்குப் படிகள் அமைத்து அதற்குக் கல்யாணஸிந்து என்று பெயரிட்டுள்ளனர் என்னும் செய்திகள் பூசப்படித்துறை மண்டபத்துக் கல்வெட்டால் அறியக்கிடக்கின்றன.

இறைவன் திருவையாறுடைய மகாதேவர், இறைவியார் உலகுடைய நாச்சியார் என்னும் பெயர்களுடன் கல்வெட்டுக்களில் குறிக்கப்பட்டுள்ளனர். (திருக்காமக்கோட்டத்தை இடித்துப் புதிதாகத் தேவகோட்டைத் திருப்பணிச்செல்வர் உயர்திரு. மெய்யப்பச் செட்டியாரால் கட்டப்பெறுவதற்குமுன் இருந்த கல்வெட்டை அரசியலார் ஆண்டு அறிக்கையில் வெளியிட்டிருக்கின்றனர். அதில் இறைவியாரின் திருப்பெயர் உலகுடைய நாச்சியார் என்றே குறிக்கப்பெற்றுள்ளது. இப்பெயர் மறைந்துபோய், இக்காலம் அறம்வளர்த்தநாயகி என்னும் பெயர் வழங்கிவருகின்றது).

அச்சுதப்ப நாயக்கர், அவருடைய மனைவியார் இவர்களின் உருவங்கள் மேலக்கோபுரவாசலில் முற்றிலும் சிதைந்துள்ள நிலையில் இருக்கின்றன. எனினும் அவர்கள் இருவர்களின் திருவுருவங்கள் முதல் பிராகாரத்தின் மேற்குத் திருச்சுற்று மாளிகையின் உள்பக்கத்தில் நல்லகல்லில் செதுக்கப்பட்டு நல்ல நிலையில் இருக்கின்றன. பச்சையப்ப முதலியார், அவருடைய

இருமனைவியார் இவர்களின் உருவங்கள் பச்சையப்பன் மண்டபத்தூண்களில் செதுக்கப்பட்டு நல்லநிலையில் இருக்கின்றன.

சோமாஸ்கந்தர் திருக்கோயில் சோழமன்னருடைய திருப்பணியை உடையது. இக்கோயில் கொடுங்கைவேலைகள் போற்றற்குரியன.

வீரசரவண உடையார் காலத்தில் அதாவது சகாப்தம் 1303 இல் (கி. பி. 1381) பாண்டிகுலாசனி வளநாட்டுச் செந்தலை—கருப்பூர் கச்சிவீரப்பெருமான் மகன் இத்திருக்கோயில் திருமண்டபத்தின் மதில் நேர்குலைந்து இற்றுப்போயிருந்ததைக் கட்டியுள்ளான்.

திரிபுவனச் சக்கிரவர்த்திகள் கோனேரின்மைகொண்டான் நூற்றெட்டுவேலி நிலத்தைக் கொடுத்துள்ளான். கோச்சடையபன்மரான திரிபுவனச் சக்கிரவர்த்திகள் சுந்தரபாண்டியதேவர் காலத்தில் திருவையாறுடைய நாயனுர்க்குச் சுத்தமல்லி வளநாட்டுப் பாம்புணிக்கூற்றத்துப் பாம்புணிகிழான் மல்லாண்டனுன சேரகோன் ஆறேமாக்காணிசொச்சம் நிலத்தைத் திருநாமத்துக் காணியாகக் கொடுத்துள்ளான்.

இவ்வூர் முதலாம் இராசராசன் காலத்தில் ராசேந்திரசிங்க வளநாட்டுப்பொய்கைநாட்டுத் திருவையாறு என்றும் மூன்ருங் குலோத்துங்க சோழன் காலத்தில் திரிபுவனமுழுதுடைய வளநாட்டுப் பொய்கைநாட்டுத் திருவையாறு என்றும், சுந்தரபாண்டியன் காலத்துக் கல்வெட்டில் ராஜராஜ வளநாட்டுப் பொய்கைநாட்டுத் திருவையாறு என்றும் வழங்கப்பெற்று வந்துள்ளது. பொய்கைநாடு என்பது திருவையாற்றிலிருந்து கிழப்பழூவூருக்குப் போகும் பெருவழிக்கு மேற்கும் காவிரிக்கு வடக்குமாகிய பிரதேசமாகும். இப்பொய்கைநாடு கிழவன் ஆதித்தன் சூரியனுன தென்னவன் மூவேந்தவேளானே ஸ்ரீராசராசேச்சரம் உடையார்க்கு ஸ்ரீகாரியம் செய்தவன் ஆவன். அக்கோயிலில் நம்பி ஆரூரனுர், நங்கை பரவையார் முதலானேர் பிரதிமங்களை எழுந்தருளி வித்தவனும் இவனேயாவன். பொய்கைநாட்டுத்தலைநகராகிய பொய்கை எது என்று அறிந்து கோடற்கு இல்லை. இப்பொய்கை ஒரு வைப்புத்தலம் என்பதை

திருநாவுக்கரசுப் பெருமானுடைய க்ஷேத்திரக்கோவைத் திருத் தாண்டகத்தின் இறுதிப்பாட்டுப் புலப்படுத்துகின்றது. திருப் பழனம் சிவன்கோயிலில் உள்ள "ஸ்வஸ்திஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு எ ஆவது ராஜராஜவளநாட்டு பொய்கைநாட்டுத் திருவாமியூர் உடையார் திருப்புகலீசுவர முடையார்க்கு" எனத் தொடங்கும் கல்வெட்டுப் பகுதியால் இப்பொய்கைநாடு தென்பொய்கைநாடு வடபொய்கைநாடு என்னும் இருபிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது என்றும், திருவாமியூர்—திருப்புலீஸ்வரம் இப்பொய்கைநாட்டிற்குட்பட்ட தென்றும் பெறப்படுகின்றன.

தென்கயிலைக்கோயில்: இத்திருக்கோயிலில் உள்ள ஏழு கல்வெட்டுக்களுள் ஒன்று கிருஷ்ணராஜ உடையாரைப்பற்றி யது. ஏனையவைகளெல்லாம் சோழநாட்டை ஆண்ட பிற்கா லத்துச் சோழமன்னர்கள் காலத்தனவாகும். இத்தச் சோழ மன்னர்கள் கல்வெட்டுக்களிலும், கருப்பஇல்லின் கிழக்குப்புறச் சுவரில் உள்ள "திருமன்னி வளர இருநிலமடந்தையும்" எனத் தொடங்கப்பெறும் கோப்பரகேசரி ராசேந்திரசோழதேவரின் (கங்கைகொண்டசோழன்) முப்பத்தொன்றும் ஆண்டில் பொறிக்கப்பெற்றதே பழமையானதாகும். அக்கல்வெட்டி லுள்ள "வடகரை ராஜேந்திரசிங்க வளநாட்டுப் பொய்கை நாட்டுத் திருவையாற்று நம்பிராட்டியார் பஞ்சவன்மாதேவி ............யாற்று எடுப்பித்தருளுகின்ற திருக்கற்றளி தென் கயிலாயமுடையார் கோயில்" என்னும் பகுதியால், முதலாம் ராசேந்திரசோழதேவரின் மனைவியாராகிய பஞ்சவன்மாதேவி யாரால் இக்கோயில் கட்டப்பெற்றதென்று தெரிகின்றது. அம்முதல் ராசேந்திரசோழதேவர் கி. பி. 1014 முதல் 1042 வரை ஆண்டவராவர். அவரது ஆட்சியாண்டு முப்பத்தொன்றில் இக்கோயில் கட்டப்பெற்றதென்று பெறப்படுகின்றமையால் இக்கற்றளி எடுப்பிக்கப்பெற்று இற்றைக்கு 909 ஆண்டுகள் ஆகின்றன.

இறைவன் திருப்பெயர் பஞ்சநதிவாணன் என்றும் இறைவி திருப்பெயர் அஞ்சலை என்றும் பெறப்படுகின்றன. இச்செய் தியை அர்த்தமண்டபத்தின் கிழக்குப்புறச் சுவரிலுள்ள ஒரு கல்வெட்டுப்பாடல் அறிவிக்கின்றது.

முதலாம் இராஜேந்திரசோழதேவரின் இரண்டாம்மகனுகிய விசயராசேந்திரன்கல்வெட்டால், அம்மன்னனது மனைவியாரின் திருப்பெயர் திரைலோக்கியமுடையார் என்பதும், இக்கோயிலில் ஆடவல்லார் இவர்தம் பிராட்டியார் இவர்களுடைய திருமேனிகள் இருந்தன என்பதும், ஆடவல்லார்க்குத் திருக்கழுத்து, திருக்கை, திருவடி இவைகளுக்குச் சாத்தியருளப்பெற்ற அணிகலன்கள் முறையே சண்பங்காறை, திருக்கைக்காறை, திருவடிக்காறை என்ற பெயர்களுடன் வழங்கிவந்தன என்பதும், இவர்தம் பிராட்டியார்க்கு இக்காலம்போல் அல்லாமல் ஒற்றைத் தாலியே சாத்தியருளப்பெற்றுவந்ததென்பதும், அவர்தம் திருக்காதணியின்பெயர் காறைகண்டி என்பதும், அக்காலம் பொன், மாணிக்கம், வயிரம் இவைகள் குடிஞைக்கல் என்னும் அளவையால் நிறுக்கப்பெற்றுவந்தன என்பதும் வெளியாகின்றன.

மகாமண்டபத்தின் மேற்குப்புறச்சுவரில் மிகவும் சிதைந்த நிலையில் உள்ள திரிபுவனச்சக்கிரவர்த்தி ராசராசதேவர், திரிபுவனச்சக்கிரவர்த்தி குலோத்துங்கசோழதேவர் இவர்களின் கல்வெட்டுக்கள் கோயிலில் நுந்தாவிளக்குகளும் சந்திவிளக்குகளும் வைப்பதற்குக் கொடுக்கப்பட்ட நிபந்தங்களைத் தெரிவிக்கின்றன.

இத்திருக்கோயிலின் திருச்சுற்றுமாளிகை கிருஷ்ணராஜ உடையாரால் எடுப்பிக்கப்பெற்றதாகும். இச்செய்தி இறைத் திருச்சுற்றுமாளிகையில் தென்பாலுள்ள கடைசித் தூணுக்கு அடுத்த வடபாலுள்ள தூணில் செதுக்கப்பட்டுள்ள "ஸ்வஸ்திஸ்ரீ இத்தன்மம் கிருஷ்ணராஜ உடையார்" என்னும் கல்வெட்டால் புலப்படுகின்றது.

**ஒலோகமாதேவீச்சரம்:** இத் திருக்கோயிலைக் கட்டியவர் இஞ்சிசூழ்தஞ்சையைத் தலைநகராகக்கொண்டு சோழமண்டலத்தைக் கி. பி. 985 முதல் கி. பி. 1014 வரை ஆண்ட முதல் இராசராசமன்னனுடைய முதல் மனைவியாராகிய ஒலோகமாதேவியாராவர். இவ்வம்மையாரால் கட்டப்பெற்றமையின் இது ஒலோகமாதேவீச்சரம் என்று பெயர்பெற்றது. இச்செய்தி "ஸ்ரீராசராசதேவர் நம்பிராட்டியார் தந்திசத்திவிடங்கியாரான ஒலோகமாதேவியார் வடகரை ராசேந்திரஸிம்ஹ வளநாட்டுத் தேவதான திருவையாற்றுப்பால் எடுப்பித்த திருக்கற்றளி

ஓலோகமாதேவீச்சரமுடையார்க்கு" என்னும் இக்கோயிற் கல்வெட்டுப்பகுதியால் அறியக்கிடக்கின்றது.

இக்கோயிலில் முதல் ராசராசன், அவன் மகனுகிய முதல் இராசேந்திரன், அவன் மகனுகிய முதல் இராசாதிராசன் என்னும் மூன்று சோழமன்னர்கள் காலத்துக் கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இவற்றுள் முதலாம் இராசராசன் அரியணையேறிய இருபத்தொன்றும் ஆண்டுக் கல்வெட்டே பழமையானது. அதில் தான் ஓலோகமாதேவியார் இத்திருக்கோயிலைக் கட்டிய செய்தி குறிக்கப்பெற்றுள்ளது. அந்த முதலாம் இராசராசசோழன் கி. பி. 985 இல் பட்டம் எய்தியவன் ஆவன். அவன் ஆட்சி ஆண்டாகிய கி. பி. 985 உடன் இருபத்தொன்றைக் கூட்ட கி. பி. 1006 ஆகும். எனவே இற்றைக்கு (1954–1006) 948 ஆண்டுகளுக்குமுன் இத்திருக்கோயில் கட்டப்பெற்றதாகும்.

இத்திருக்கோயிலில் இவ்வம்மையார் ஓலோகமாதேவீச்சரமுடையார், ஓலோகவிடங்கதேவர், அவர் தம்பிராட்டியார், பிள்ளையார், முருகர், ஆடவல்லார், சண்டேசுவரர் இவர்களின் திருமேனிகளை எழுந்தருளுவித்துள்ளார். இவர்களுள் ஓலோகமாதேவீச்சரமுடையார் என்பது கருப்ப இல்லில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானின் திருப்பெயராகும். ஓலோகவிடங்கதேவர், ஆடவல்லார் என்பன முறையே தியாகராசப்பெருமான், நடராசப்பெருமான் இவர்களுடைய திருப்பெயர்களாகும்.

இக்கோயிற் சிவபெருமானுக்கு நான்குகால பூசைகள் நடைபெற்றுவந்தன. நெய்கொண்டு நொந்தாவிளக்குகளும் சந்திவிளக்குகளும் பல ஏற்றப்பட்டுவந்தன. பருப்பமுது, கறியமுது, போனகம், பொறிகறியமுது, தயிரமுது, சர்க்கரையமுது, அப்பமுது இவைகள்கொண்டு திருவமுது செய்விக்கப்பட்டன.

இவ்வம்மையார் தம் கணவன் பிறந்த நாளாகிய சதயத் திருவிழாப் பன்னிரண்டும், சித்திரைப்பெருந் திருவிழா ஒன்றும் ஆகப் பதின்மூன்று திருவிழாக்களையும் இத்தலத்து நடத்துவித்தார்.

இவ்வம்மையாரும் இவர் குடும்பத்தார்களும் கொடுத்துள்ள பொன்னுற்செய்து மணிகள் பதித்த அணிகலன்களுக்கும்

வெள்ளியாற்செய்த பரிகலங்களுக்கும் அளவில்லை. அணிகலன் களையும் பரிகலங்களையும் எவரும் மாற்றிவிடாவண்ணம் நிறை யெடுத்து, அவற்றில் மணிகள் சேர்க்கப்பெற்றிருப்பின் அவை இத்துணை என்று உரைத்திருப்பது மகிழ்தற்குரியதாகும்.

இக்காலத்தில் வழக்கத்தில் இல்லாத பல அணிகலன்களின் பெயர்கள் இக்கல்வெட்டுக்களால் தெரியவருகின்றன. அவைகள் கோளகை, தாழ்கூட்டுக்கம்பி, திருச்சன்னவடம், முத்தின் காரை, இடுக்குவளையல் முதலியன.

இக்கோயிலில் வழிபாடு நடக்குங்கால் உடுக்கை, உவச்சன் தலைப்பறை, கண்டை, திமிலை, மத்தளம், வீணை, கரடிகை முதலியவைகள் ஒலிக்கப்பெற்றுவந்தன.

இக்கோயிலில் ஆடல் பாடல் முதலிய பணிகளைச் செய்வ தற்குப் பதியிலார் முப்பத்திருவர் இருந்தனர். அவர்கள் தலைக் கோற்பட்டம் பெற்றவர்கள். தலைக்கோல் என்பது ஆடல் பாடல்களில் சிறந்த பதியிலார்கள் அரசனுல் கொடுக்கப்பெற்ற பட்டமாகும்.

இக்கோயிலுக்கு ஒலோகமாதேவியார் இராசேந்திரசிங்க வளநாட்டு, மிறைக்கூற்றத்துக் கலவாய்த்தலை என்ற ஊரில் வீரநாராயண சதுர்வேதிமங்கலத்தார்க்கு நீர்போகும் குஞ்சர மல்லிவாய்க்காலுக்கு வடபால் சற்றேறக்குறைய நூற்றிரண்டு வேலி நிலத்தை நிவந்தமாக விட்டிருந்தார். இவைபோன்ற பல அரிய செய்திகள் இக்கல்வெட்டுக்களால் விளங்குகின்றன.

See the Annual reports on south Indian Epigraphy for the years. 1894 Numbers 213-256; 1918 Numbers 135-157; 1924-48. South Indian Inscription Volume V. Nos 512-555. and செந்தமிழ், செந்தமிழ்ச்செல்வி, ஞானசம்பந்தம் ஆருவது ஆண்டு மலர்.

## 19 திருக் கச்சிஏகம்பம்

மாமரத்தைத் தலமரமாகக் கொண்டுள்ளமையால் இப் பெயர்பெற்றது.

ஆம்ரம் என்பது வடசொல், அது தமிழில் வழங்கும்போது, தமிழ் இலக்கணத்திற்கு ஒத்தவாறு மகரத்துக்கு இனமாகிய பகரத்தைப்பெற்று ஆம்பரம் என்று ஆயிற்று. மகரத்தின் பின் ரகரம் தமிழில் மயங்காது. ஆம்ரம் என்பது ஏகமென்னும் சொல்லொடு புணர்ந்து ஏகாம்பரம் என்று (வடமொழி விதிப் படி) ஆயிற்று. ஏகாம்பரம் என்பது ஏகம்பம் என்றும், கம்பம் என்றும் மருவிற்று. கள்ளக்கம்பனை, நல்லகம்பனை என்பவை களில் காண்க.

இருக்கும் இடம்: காஞ்சிபுரம் ரயில் நிலயத்திற்கு மேற்கே சுமார் 1½ மைல் தூரத்தில் இருக்கின்றது.

இறைவரின் திருப்பெயர்: தழுவக்குழைந்தநாதர். உலகம் உய்ய ஆகமவழியின்படி இறைவரைப் பூசிக்க இறைவியார் கயிலையினின்று காஞ்சிபுரத்திற்கு எழுந்தருளினர். அங்கே கம்பையாற்றின் கரையில் திருவருளால் முளைத்து எழுந்த சிவலிங்கத் திருவுருவைக்கண்டு பூசித்தார். அதுபொழுது பம்பை மாநதி பெருக்கெடுத்து வந்தது. அம்மையார் பயந்து பெருமானை இறுகத் தழுவிக்கொண்டார். அதுபொழுது இறைவர் திருமேனி குழைந்து வளைத்தழும்பும் முலைத்தழும்பும் தோன்றக் காட்சி யருளினர். அதுகாரணம்பற்றித் தழுவக்குழைந்தநாதர் என்னும் பெயர் உண்டாயிற்று. திருவேகம்பர் என்ற வேறு பெயரும் உண்டு. இறைவியாரின் திருப்பெயர்: ஏலவார்குழலி, காமாட்சி யம்மை. விநாயகர்பெயர்: விகடசக்கர விநாயகர். இவர் தெற்குத் திருவாசலில், ஆயிரக்கால் மண்டபத்தின் முன் புறத்தில் எழுந்தருளியிருக்கின்றார்.

தீர்த்தம்: கம்பைமாநதி; சிவகங்கை என்பன.

தலப்பெருமை: இது முத்திதரும் தலங்கள் ஏழனுள் முதன்மைபெற்றது. சூளுறவு பிழைத்ததின் காரணமாகத் திருவொற்றியூர் எல்லையைத் தாண்டிய அளவில் இருகண் பார்வைகளும் மறையப்பெற்ற சுந்தரமூர்த்தி நாயனார்க்கு இடக்கண் பார்வையை இறைவர் கொடுத்தருளிய தலம். க்ஷேத்திர வெண்பாக்களைப் பாடின ஐயடிகள் காடவர்கோன் நாயனார், திருக்குறிப்புத்தொண்ட நாயனார், சாக்கியநாயனார்

இவர்கள் அருள்பெற்ற பதி. இதில் பிர்மா, விஷ்ணு, உருத்திரர் என்னும் மூவரும் பூசித்த இலிங்கங்கள் இருக்கின்றன. அவைகள் முறையே வெள்ளைக்கம்பம், கள்ளக்கம்பம், நல்ல கம்பம் என்னும் பெயர்களுடன் விளங்குகின்றன. இக்கச்சி ஏகம்பத்திற்கு மாத்திரம் பன்னிரண்டு பதிகங்கள் இருக்கின்றன. இவை மூவராலும் பாடப்பெற்றவை.

இவ்வூரில் (காஞ்சிபுரத்தில்) கச்சியேகம்பத்துடன் கச்சிமேற்றளி, கச்சிஓணகாந்தன்றளி, கச்சிநெறிக்காரைக்காடு, கச்சியநேகதங்காவதம் என்னும் தேவாரம் பெற்ற கோயில்களும் கச்சிமயானம் என்னும் ஒரு வைப்புத்தலமும் ஆக ஆறுகோயில்கள் இருக்கின்றன. இவைகளுள் கச்சிமயானம், திருக்கச்சி ஏகம்பத்தினுள் கொடிமரத்தின் முன்னுள்ளது.

இக்கோயிலின் வெளிமதில் 1799இல் ஹாச்ஸன் என்பரால் புதுப்பிக்கப்பட்டது. அதில் புத்தர் மகாநிர்வாணம் முதலிய உருவங்கள் எல்லாம் சேர்ந்துவிட்டன. இச்சிலையில் சில பகுதியில் மகேந்திரன் காலத்து எழுத்துக்கள் சில இருக்கின்றன. சில இடங்களில் விஜயநகரச் சின்னங்கள் (வராகமும் கட்கமும்) இருக்கின்றன. முன்மண்டபத்தில் இருக்கும் ஒரு சிலை கரிகாலன் உருவம் என்பர். அதற்குத் தாடி இருக்கிறது. சுவாமிசந்நிதி கிழக்கு. ஆனால், கோபுரவாயில் தெற்கே இருக்கின்றது.

திருவாவடுதுறை ஆதீனத்து மாதவச்சிவஞானயோகிகள் அருளிய காஞ்சிப்புராணமும், கச்சியப்பமுனிவர் அருளியதும், அதனுடைய இரண்டாங்காண்டமென்று சொல்லப்படுவதுமாகிய காஞ்சிப்புராணமும், கச்சியப்பமுனிவர் இயற்றிய கச்சி ஆனந்தருத்திரேசர் வண்டுவிடுதூதும், இரட்டையர்கள் பாடிய ஏகாம்பரநாதர் உலாவும், பட்டினத்துப்பிள்ளையார் அருளிய திருவேகம்பமுடையார் திருவந்தாதியும், மாதவச்சிவஞான யோகிகள் அருளிய கச்சி ஆனந்தருத்திரேசர் பதிகம், திருவேகம்பர் ஆனந்தக்களிப்பு, திருஏகம்பர் (யமக) அந்தாதி ஆகிய இவைகளும் இத்தலத்தைப்பற்றிய நூல்களாகும்.

கல்வெட்டு: 1. திருக்கோயிலுள் முன்னால் இருப்பதும் மேற்குப்பார்வையுள்ளதும் மயானேசுவரர் ஆலயம். அதில்

மட்டும் பதினைந்துகல்வெட்டுக்கள் படி எடுக்கப்பட்டன. அவைகளில் காகதீயகணபதி (கி. பி. 1250) சோழர்களில் உத்தமன், இராசராசன், இராசாதிராசன், குலோத்துங்கன், இராசராசன் II பிறரில் விஜயகண்டகோபாலன், விஜயநகரசதாசிவன் முதலியோர்களின் கல்வெட்டுக்கள் இருக்கின்றன. உத்தம சோழன் கல்வெட்டில் வீரராணியார் அவன் தேவி எனக் கூறுகிறது.

2. நடராசர் மண்டபத்தில் புக்கராயன் (கி. பி. 1406) கல்வெட்டு மூன்று இருக்கின்றன.

3. ஆயிரக்கால் மண்டபத்தில் வடமொழி சுலோகம் ஒன்று செதுக்கப்பட்டிருக்கிறது.

4. சபாநாயகர் கோயிலில் உள்ள கல்வெட்டு, பாண்டிய புவனேஸ்வரன் சமரகோலாகலன் (கி. பி. 1469) ஏகம்பர் காமாட்சியம்மன் ஆலயங்களுக்குப் பாண்டிநாட்டு ஊர்கள் இரண்டு கொடுத்தான் எனத் தெரிவிக்கிறது. காகதீயகணபதி (கி. பி. 1250) காலத்தில் அவர் மந்திரி சாமந்தபோஜன் ஓர் ஊரைத் தானம் செய்தான். மற்றும் விஜயகண்டகோபாலனது கல்வெட்டு ஒன்றில் அவன் அரசுபெற்றது கி. பி. 1250 எனத் தெரிகிறது.

5. ராயர்மண்டபத்தில் கம்பண உடையார் ஆனந்த ஆண்டுக் கல்வெட்டு இருக்கிறது.

6. காமாட்சி அம்மன் கோயிலில் அச்சுதராயன் (1534) படையெடுத்து வெற்றியடைந்து கோயிலுக்கு எட்டு ஊர்கள் கொடுத்த செய்தி கண்டிருக்கிறது.

7. கோபுரம்:- விஜயநகரமல்லிகார்ச்சுனனுடைய (கி. பி. 1456) கல்வெட்டு இருக்கிறது.

கல்வெட்டு: ஏகாம்பரநாதருக்கும், நாச்சியார் காமாட்சிக்கும் தேவைகாவலன், திருவீணகாவலன், வேதியர்காவலன், வீரகஞ்சுகன், புவனேகவீரன், சமரகோலாகலன் சகாப்தம் 1391 இல் தன்பெயரால் புவனேகவீரன் சந்தியாக ஒருசந்தி பூசைக்கும், மாதம் பிறந்த நட்சத்திரத்திற்கும் விசேட பூசை

நடக்கும்படிக்கு அமுதுபடி, கறியமுது, இலையமுது, அடைக்கா யமுது, திருப்பரிவட்டம், சாத்துப்படி திருவிளக்கு உட்பட வேண்டும் நிவந்தங்களுக்குப் பாண்டிமண்டலத்து வீரநாராயண வளநாட்டுப் புவனேகவீரநல்லூரையும் சமரகோலாகல நல்லூ ரையும் விட்டுள்ளான்.

சகர்யாண்டு 1187 இல் திருஏகம்பமுடையார் திருமுன்பு திருநொந்தாவிளக்கு ஒன்றைச் சந்திர சூரியர் உள்ளவரை எரிப்பதற்குப் புலியூர்க்கோட்டத்து வல்லங்கிழான் பள்ளி கொண்டான் கோயிற் பிள்ளைவைத்துள்ளான். சகர்யாண்டு 1172 இல் காஞ்சிபுரத்து உடையார் திருஏகம்பமுடைய நாயனார்க்கு ஜயங்கொண்டசோழமண்டலத்துத் தாமர்க்கோட் டத்துக்களத்தூரைத் திருவிடையாட்டம்நீக்கி, ஊர்அடங்கலும் கணபதிதேவன் சந்திக்குத் திருவமுதுபடி கறியமுது உள்ளிட்ட வியஞ்சனங்களுக்கும் சாத்தியருளத் திருப்பரிவட்டங்களுக்கும் திருமேற்பூச்சு கற்பூரம் பனிநீர் உள்ளிட்டவற்றிற்கும் இச்சந்தி பூசிக்கும் நம்பிமார்க்கும், திருப்பரிசாரகர்க்கும், திருமஞ்சனம் எடுப்பார்க்கும், திருப்பள்ளித்தாமம் தொடுப்பார்க்கும் மற்றும் இச்சந்திக்கு வேண்டும் நிவந்தங்களுக்குக் கொடுக்கப்பட்ட செய்தியை ஒரு கல்வெட்டு அறிவிக்கின்றது. ராசராசதேவர்க்கு யாண்டு இரண்டாவதில் சளுக்கியநாராயணன் மனுமசித்த ரசன் திருஏகம்பமுடையார்க்குத் தேவதானமாக மாற்பட மடுவில் பொன்மேந்தகம்பன்வளாகம் என்னும் பெயருள்ள ஆயிரம்குழி நிலத்தை இட்டுள்ளான். ராசராசதேவர்க்கு யாண்டு பதினேந்தில் ஏகம்பமுடையார்க்குத் திருநுந்தாவிளக் குக்குப் பால்பசு பத்து, சினைப்பசுப் பன்னிரண்டு, வறள்பசு ஆறு, கிடாரி நான்கு, ரிஷபம் ஒன்று ஆக உருக்கள் முப்பத்து மூன்று விடப்பட்டுள்ளன. மூன்றுங்குலோத்துங்கசோழனின் இருபத்தேழாம் ஆட்சியாண்டில் சயங்கொண்டசோழமண்ட லத்து ஸ்ரீமத் குவளாலபுர பரமேஸ்வரன், கங்ககுலோற்பவன், சியகங்கன் அமராபரணனை திருஏகம்பமுடையான் ஏகம்ப முடையார்க்கு நொந்தாவிளக்கு ஒன்றினுக்கு முப்பத்திரண்டு பசுவைக் கொடுத்துள்ளான்.

South Indian Inscription Volume IV.

# 20 திருக்கடம்பூர்

ஊரின்பெயர் கடம்பூர் ஆயினும் இங்குள்ள கோயிலுக்குக் கரக்கோயில் என்று பெயர். இது "தென்கடம்பைத் திருக்கரக் கோயிலான்' என்னும் இவ்வூர்த் தேவாரப் பகுதியால் அறியக் கிடக்கின்றது.

இதன் உண்மைக்காரணத்தை ஆராய்ச்சியாளர் இன்னும் ஆராய்ந்துகொண்டிருக்கின்றார்கள். புலப்படவில்லை. "இத் தலத்தை வணங்கிய இந்திரன் இதனைத் தன் உலகத்திற்குக் கொண்டுபோக நினைத்துப் பாதாளம்வரை தோண்டியும் அஃது அப்பாலும் ஊடுருவிப்போனதுகண்டு அஞ்சி, முன்போல அமைத்துப் பூசித்து அமிர்தம் உண்டாகும்படி வரம்பெற்றனன் என்ற வரலாறுகருதிக் கரக்கோயில் எனப்படும் என்பர் என்று திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் தாம் அருமை யாக எழுதிய பெரியபுராண உரையில் குறித்திருக்கின்றார்கள். (திருத்தொண்டர் புராணம் நான்காம் பகுதி. பக்கம் 287.)

இருக்குமிடம்: சிதம்பரம் தாலுகா காட்டுமன்னார்கோயி லுக்கு மூன்றுமைல் தூரத்தில் இருக்கிறது. இது காவிரி வடகரைத் தலங்களுள் முப்பத்துநான்காவது ஆகும்.

இறைவர் திருப்பெயர் அமிர்தகடேசர். இறைவியார் திருப்பெயர் சோதிமின்னம்மை.

தேவேந்திரன் பூசித்துப் பேறுபெற்றான். இத்தலத்திற்கு திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்று, திருநாவுக்கரசர் பதிகம் இரண்டு ஆக மூன்று பதிகங்கள் இருக்கின்றன.

கோயில் கர்ப்ப இல்லின் (Central Shrine) அடிப்பாகம் இரதவடிவில் குதிரைகள் பூட்டிய நிலையில் இருக்கின்றது. இக்கடம்பூர்க்குக் கிழக்கே ஒருமைல் தூரத்தில் கடம்பூர் இளங் கோயில் இருக்கிறது. இது முற்றிலும் இடிந்துபோய் உள்ளது.




## 21 திருக்கடவூர் மயானம்

எமவாதனையைக் கடத்தற்குரிய ஊர் ஆதலின் இப்பெயர் பெற்றது என்பர். (இவ்வூரில் திருக்கடவூர்—வீரட்டானம், திருக்கடவூர்—மயானம் என்னும் இரு(தேவாரம் பெற்ற) தலங்கள் இருக்கின்றன. அவற்றுள் திருக்கடவூர்—மயானம் என்பது பற்றியது ஈண்டுத் தரப்பட்டுள்ளது).

சிவபெருமான் ஒரு கல்பத்தில் பிரமதேவரை எரித்து, நீருக்கி அவரை மீளவும் உயிர்ப்பித்துப் படைப்புத்தொழிலை அருளிய தலமாதலின் மயானம் என்னும் பெயர் எய்திற்று என்பர். இதை இக்காலம் மெய்ஞ்ஞானம் என்று மக்கள் வழங்குகின்றனர்.

இது திருக்கடவூருக்குக் கிழக்கே ஒருமைல் தூரத்தில் இருக்கிறது. இது காவிரித் தென்கரைத் தலங்களுள் நாற்பத்தெட்டாவது ஆகும்.

இறைவரது திருப்பெயர் பெரியபெருமான் அடிகள்; பிரமபுரீசர். இறைவியாரது திருப்பெயர் மலர்க்குழல் மின்னம்மை.

காசித்தீர்த்தம். இதிலிருந்துதான் திருக்கடவூர் வீரட்டானேசுவரருக்கு நாளும் திருமஞ்சனம் கொண்டுவரப்படுகிறது. பங்குனிமாதம் சுக்கிலபட்சம் அசுவதி நட்சத்திரத்திலே இத்தீர்த்தத்தில் மக்கள் மிகுதியாகவந்து நீராடுகின்றனர்.

பிர்மதேவர் பூசித்தது. இது மூவர்களாலும் பாடப்பெற்றது. இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று, அப்பர் பதிகம் ஒன்று, சுந்தரர் பதிகம் ஒன்று ஆக மூன்று பதிகங்கள் இருக்கின்றன.

கல்வெட்டு: இவ்வூரில் பதினாறுகல்வெட்டுக்கள் இருக்கின்றன. பதினைந்து, சோழர்களுடையனவும், ஒன்று, பாண்டியனுடையதுமாம். சோழர்கள் பிற்காலச் சோழர்களே. (12, 13 நூற்றாண்டினர்). வீணை வாசிக்க, வேதம் ஓத, ஸ்ரீ ருத்திரம் சொல்லத் திட்டம் செய்யப்பட்டது. சுங்கம் தவிர்த்த குலோத்துங்கன் I பதினாரும் நூற்றாண்டில் நிலம் அளக்கப்பட்டது.

தீர்வை விதிக்கப்பட்டது. நந்தவனம் வைப்பதற்குத் தோட்டத்திற்கு ஆள் நியமனம் செய்யப்பட்டது. ஊர்: ஜெயங்கொண்ட சோழவளநாடு, ஆக்கூர்நாடு, திருக்கடவூர் என்று குறிக்கப்பட்டது. இக்காட்டில் திருத்தொண்டத்தொகைமங்கலம், சிவபாதசேகரமங்கலம், திருநீற்றுச்சோழமங்கலம் என்ற ஊர்கள் கூறப்பட்டுள்ளன. சுவாமிபெயர் திருமயானமுடைய பெருமான் என்று கூறப்பட்டுள்ளது.

## 22 திருக்கடிக்குளம்

இது கற்பகனூர்குளம் எனவும் வழங்கப்பெறும். கற்பக விநாயகர் சிவபெருமானைப் பூசித்து மாம்பழம் பெற்ற வரலாறு பற்றி இப்பெயர் எய்திற்று என்பர்.

திருத்துறைப்பூண்டி ரயில்வே நிலையத்திற்குத் தென் மேற்கே பத்தரைமைல் தூரத்திலுள்ளது.

இறைவரது திருப்பெயர் கற்பகநாயகர். இறைவியாரது திருப்பெயர் சௌந்தரநாயகி.

தீர்த்தம் விநாயகதீர்த்தம்.

ஞானசம்பந்தரால் பாடப்பெற்ற பதிகம் ஒன்று இருக்கிறது. தற்போது இக்கோயிலுக்குத் திருப்பணிசெய்யப்பட்டது. கும்பாபிஷேகமும் நடைபெற்றது. கரையங்காடு என்பது இவ்வூரைச் சார்ந்ததாகும். இங்கு இரண்டாயிரம் மக்கள் வசிக்கிறார்கள். இங்கிருந்து மேற்கே ஒருகல்லில் இடும்பாவனம் என்ற கோயில் இருக்கிறது. இக்கோயிலின் பரப்பு 11-52 ஏகராகும். இதில் சிவாலயம், மற்றைய மூர்த்திகள், கற்பக விநாயகர் கோயில், திருக்குளம் முதலியன அமைந்துள்ளன. ஐதீகப்படி கார்த்திகார்ச்சுனன் என்ற அசுரன் கற்பக லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தானாம். சுவாமிக்கும் விநாயகருக்கும் இடையில் கோதண்டராமன் சந்நிதி கட்டப்பட்டுள்ளது. தீர்த்தத்தின் பெயரே கடிக்குளம் என்பது. இக்கோயிலின் தலமரம் பலா. இக்கோயிலுக்குக் கரையங்காடு என்ற ஊர் தஞ்சை மன்னரால் தரப்பட்டது. இதற்கு இன்னும் பல கிராமங்களில் நிலங்கள் உண்டு.

## 23 திருக்கருப்பறியலூர்

இது வைத்தீசுவரன்கோயில் ரயில் நிலையத்திற்கு வடமேற்கே ஐந்துமைல் தூரத்திலிருக்கிறது.

ஊரின்பெயர் கருப்பறியலூராக இருப்பினும், கோயிலுக்குக் கொகுடிக்கோயில் என்று பெயர். முல்லைக்கொடியைத் தலக்கொடியாக உடைமையால் இப்பெயர்பெற்றது என்பர் ஒருசிலர். கோயில் அமைப்புப்பற்றி இப்பெயர்பெற்றது என்பர் வேறுசிலர்.

இறைவரது திருப்பெயர் குற்றம்பொறுத்தநாதர். ஒரு காலத்தில் இந்திரன் இறுமாப்புடன் கயிலைக்குச் சென்றான். அப்பொழுது இறைவர் பூதவடிவாய் அவன்முன் தோன்றினார். அவன் அதை அறிந்துகொள்ளாது வச்சிராயுதத்தை அவர்மேல் எறிந்தான். அதன்பின் இறைவர் என்று அறிந்து தன்பிழையைப் பொறுத்தருளுமாறு வேண்டினான். அதைப்பொறுத்த காரணம்பற்றி இப்பெயர்பெற்றார். இறைவியாரது திருப்பெயர் கோல்வளைநாயகி.

தீர்த்தம் இந்திரதீர்த்தம்.

இக்கோயில் தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமானது. இவ்வூர் அந்தணர்களை இவ்வூர்த் தேவாரத்தில்,

"பொய்யாத வாய்மையாற் பொடிப்பூசிப்
போற்றிசைத்துப் பூசைசெய்து
கையினா லெரியோம்பி மறைவளர்க்கு
மந்தணர்தங் கருப்பறியலூர்"

எனச் சிறப்பித்துக் கூறியுள்ளது. அம்பலவாணர் இயற்றிய புராணம் அச்சில் வெளிவந்துள்ளது.

## 24 திருக்கருவூர்த்திருவானிலை

ஊரின்பெயர் கருவூராயினும் இங்குள்ள கோயிலுக்குத் திருவானிலை என்று பெயர். காமதேனு பூசித்த காரணம்பற்றி இப்பெயர்பெற்றது.

திருச்சிராப்பள்ளிக்கு மேற்கே நாற்பத்தைந்துமைல் தூரத்தில் இருக்கிறது. கருவூர் ரயில்வே நிலயத்தில் இறங்க வேண்டும். இது கொங்குநாட்டுத் தலங்கள் ஏழனுள் ஒன்று.

இறைவரின் திருப்பெயர் பசுபதீசுவரர். இறைவியாரின் திருப்பெயர் கிருபாநாயகி.

தீர்த்தம் ஆம்பிராவதி ஆறு.

இது சோழமன்னர் முடிசூட்டிக்கொள்ளும் பதிகள் ஐந்தனுள் ஒன்று. புகழ்ச்சோழர் ஆட்சிசெலுத்திய இடம். எறிபத்த நாயனர் சிவகாமியாண்டார் இவர்கள் இருந்தபதி. திருவிசைப் பாக்களைப் பாடிய கருவூர்த்தேவரும் இவ்வூரினரே. இது ஞானசம்பந்தரால் பாடப்பெற்றது. அவருடைய ஒரே பதிகத் தைப்பெற்றது. இருபத்தொரு சருக்கங்களையும் ஆயிரத்துநூற் றிருபத்தொன்பது திருவிருத்தங்களையும் கொண்ட புராணம் ஒன்று உள்ளது. அதை ஆக்கியோர் இன்னுரென்று புலப்பட வில்லை. கோயமுத்தூர், வித்துவான், திரு. கந்தசாமி முதலியார் அவர்கள் பல ஆண்டுகளுக்குமுன் அச்சிட்டு வெளியிட்டனர்.

கல்வெட்டு: இக்கோயிலில் பதினேழு கல்வெட்டுகள் உள்ளன. இவற்றில் ஆறு படி எடுக்கப்பட்டன. அவைகளில் ஒன்றுதவிர மற்றவை 11, 12, 13 ஆம் நூற்றாண்டுச் சோழர் களின் கல்வெட்டுக்களேயாம். இவை மெய்க்கீர்த்திகள், அரச ருடைய பெயர்கள் இவற்றைக் காட்டுகின்றன. இறை, புறவு, சிற்றாயம், எலவை, உடமை, தெண்டகுற்றம் முதலிய அக் காலத்து வரிப்பெயர்களைக் காட்டுகின்றன. அரசரின் ஆணைகள் எழுதும் விபரம் அரசனுடைய அலுவலாளர்களின் பெயர்கள் முதலியன காணலாம். நன்மை தீமைகளுக்கு இரட்டைச்சங்கு ஊதி, பேரிகைகொட்டி, பாதரட்சையிட்டு, வீடுகளுக்குச் சாந்து பூசிக்கொள்ள அரசன் ஆணைகொடுக்கப்பட்டது.

## 25 திருக்கழிப்பாலை

இது முன்பு கொள்ளிடப் பேராற்றின் வடகரையில் காரைமேடு என்னும் இடத்தில் இருந்தது. அங்கு இருந்த

பொழுது கொள்ளிடத்தின் வெள்ளப்பெருக்கு, திருக்கோயிலை முற்றிலும் பாழ்படுத்திவிட்டது. படுகைமுதலியார் குடும்பத்தில் திரு. பழனியப்ப முதலியார் என்பவர் சிவபுரிக்குத் தெற்கில் கோயில்கட்டி அதில் கழிப்பாலை இறைவரையும், இறைவியாரையும், ஏனைய பரிவார தேவதைகளையும் எழுந்தருளிவித்துள்ளார்.

இது சிதம்பரத்திற்குத் தென்கிழக்கே சுமார் மூன்றுமைல் தூரத்தில் இருக்கிறது. இது சோழநாட்டு வடகரைத் தலங்களுள் நான்காவது ஆகும்.

வான்மீகி முனிவர் பூசித்துப் பேறு எய்தினர். இத்தலத்திற்கு ஞானசம்பந்தரது பதிகங்கள் இரண்டு, திருநாவுக்கரசரது பதிகங்கள் ஐந்து, சுந்தரரது பதிகம் ஒன்று ஆக எட்டுத் திருப்பதிகங்கள் இருக்கின்றன. இவற்றுள் திருநாவுக்கரசர் திருவாய் மலர்ந்துள்ள "வனபவள வாய்திறந்து" என்று தொடங்கும் அகப்பொருள்துறைகள் அமைந்த பாடல்கள் படித்து இன்புறத்தக்கன.

சுவாமியின்பெயர் பால்வண்ணநாதர். தேவியின்பெயர் வேதநாயகி.

கல்வெட்டு: இக்கோயில் நான்குசோழரது கல்வெட்டுகள் படி எடுக்கப்பட்டுள்ளன. முதலாம் இராசராசன் ஒரு நுந்தா விளக்கு எரிக்க, திருக்கழிப்பாலை மகாதேவனுக்குப் பத்துக் காசுகள் தானம்செய்தான். கங்கைகொண்டசோழன் காலத்தில் கங்கைகொண்டசோழபுரத்துப் பணிப்பெண் ஒருத்தி இக்கோயிலுக்குப் பொன் அளித்துள்ளாள். முதலாம் ராசராசசோழனது கல்வெட்டின் ஒருபகுதியில் பகல்பூசைக்குத் திட்டம்செய்ததைப் பற்றியும், மற்றொரு பகுதியில் மாதேவிப்பேரங்காடி வியாபாரி ஒருவன் கூத்தன் அழகன் என்பானின் பெயர் எழுதப்பட்டுள்ளது. கோயிலுக்கு நாள் ஒன்றுக்கு ஒருநாழி தும்பை மலர் அளிக்க வடுகன்கல்லூரடிகள் என்ற விக்கிரமசோழ பிரமமாராயன் ஐந்து காசுகள் கொடுத்தான்.

## 26 திருக்களர்

களர் நிலத்தில் அமைந்த கோயிலை உடைய ஊராதலின் திருக்களர் என்னும் பெயர் எய்திற்று.

திருத்துறைப்பூண்டி ரயில் நிலையத்திலிருந்து மேற்கே களப்பாள் என்னும் ஊர்க்குப்போகும் பெருவழியில் (Road) ஐந்தாவதுமைலில் இருக்கின்றது. இது காவிரிக்கு வடகரையிலுள்ள நூற்றைந்தாவது தலமாகும்.

இறைவரின் திருப்பெயர் களர்முளைநாதர்; அடைந்தார்க்கு அருள்நாதர். இறைவியாரின் திருப்பெயர் கொம்பன்னாள்.

தலவிருட்சம் பாரிசாதம்.

தீர்த்தம் தூர்வாசதீர்த்தம்.

தூர்வாச முனிவர்க்கு இறைவர் திருக்கூத்துக் காட்டியருளினார். பராசரர் முதலிய முனிவர்களும் வழிபட்டுப் பேறு எய்தினர். இதற்குத் திருஞானசம்பந்தரது பதிகம் ஒன்று உண்டு.

இதற்கு ஆதியப்பனாரால் எழுதப்பெற்ற புராணம் ஒன்று உண்டு. அஃது அச்சில் வெளிவந்துள்ளது.

கல்வெட்டு: இக்கோயிலில் பதினான்கு கல்வெட்டுக்கள் படி எடுக்கப்பட்டிருக்கின்றன. மேலும் ஐந்து செப்பேடுகள் கிடைத்திருக்கின்றன. அவைகளுள் சோழர்களது எட்டும், பாண்டியர்களது இரண்டும், விஜயநகரத்தாரது மூன்றுமாக உள்ளன. விளக்கு எரிப்பதற்கு பொன்தானம், வரிதானம், நிலதானம் ஆகியவைபற்றி அக்கல்வெட்டுக்கள் குறிக்கின்றன. செப்பேடுகளில் ஒன்று இராசராசசோழனது பதினெட்டாம் (ஆட்சி) ஆண்டினது. மற்றொன்று அவனது மூப்பத்தொன்றாம் ஆண்டினது. மூன்றாவது மூன்றாம் குலோத்துங்க சோழனது இருபத்தாறாம் (ஆட்சி) ஆண்டினது. மற்ற இரண்டும் குலோத்துங்கன் இருபத்தெட்டாம் ஆண்டினதும், இராசராசன் III பதினெட்டாம் ஆண்டினதுமாகும். இவை சென்னைக்கண்காட்சி சாலையில் வைக்கப்பட்டிருக்கின்றன.



அலைபுனல் சூழ் பிரமபுரத்து அருமணியின் பெருங்கோயில்.



ஆழியில் தோணிமேல் காழிவாழ் ஒருவர்

# 27 திருக் காழி

காளி, சிதம்பரத்தில் நடராசப்பெருமானோடு வாதாடிய குற்றம் நீங்க இத்தலத்தில் இலிங்கமொன்றை எழுந்தருளுவித்து வழிபட்டுப் பேறுபெற்றமையால் இது காளிபுரம் என்னும் பெயர் எய்திற்று. ஸ்ரீகாளி என்னும் பெயரே சீகாழி என மருவியது. ஸ்ரீபாதம் - சீபாதம்; ஸ்ரீமாந் - சீமான்.

சென்னைப்பட்டினம், மயிலாப்பூர், திருவல்லிக்கேணி, திருவேட்டீசுவரன்பேட்டை, இராயப்பேட்டை, கோமளேசுவரன் பேட்டை, இராயபுரம், எழும்பூர் முதலான பல ஊர்களையும் சேர்த்து இக்காலம் சென்னை (Madras) என வழங்குவதுபோல, பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, காழி, கொச்சைவயம், கழுமலம் என்னும் பன்னிரண்டு திருப்பெயர்களைத் தனித்தனி கொண்ட பன்னிரண்டு தலங்களும் வெவ்வேறாய் இருந்து வழங்கிவரப்பெற்ற பதிகளைச் சீகாழி என ஒரு தலத்தின் பெயரைச் சொல்லுதலாலே ஏனைப் பதினொன்றையும் உணர்த்தும் வழக்கம் நேர்ந்தது. இரண்டாவது திருமுறையுள் காழி, கொச்சைவயம், சிரபுரம், பிரமபுரம், புகலி, பூந்தராய் என்னும் ஆறுமட்டும் உள்ளன. இவற்றுள் பிரமபுரம் என்பது (பிரமாவால் பூசிக்கப்பெற்றது). இது சீகாழி பெரியகோயிலுள் பிரமேசர் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலை உடைய பகுதியாகும். தோணிபுரம் என்பது பிரளயகாலத்தில் தோணி போல மிதந்த காரணம்பற்றியதாகும். இது சீகாழி பெரிய கோயிலில் தோணியப்பர் பெரியநாயகியுடன் எழுந்தருளியிருக்கும் தோணிவடிவமாய் அமைந்த திருக்கோயில் உள்ள பகுதியாகும்.

மாயூரம்—சிதம்பரம் ரயில்பாதையில் சீகாழி ரயில் நிலையத்திற்குக் கிழக்கே சுமார் ஒருமைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவிரிக்கு வடகரையில் பதினான்காவது தலமாகும்.

பிரமபுரத்தில்: இறைவரது திருப்பெயர் பிரமபுரீசுவரர். இறைவியாரது திருப்பெயர் திருநிலைநாயகி.

தோணிபுரத்தில்: இறைவரது திருப்பெயர் தோணியப்பர். இறைவியாரது திருப்பெயர் பெரியநாயகி.

தீர்த்தம் பிரமதீர்த்தம். இது வடக்குக்கோபுரவாயிலுக்குத் தென்கிழக்கில், திருநிலை அம்மையார் திருமுன்புள்ளது. திருஞானசம்பந்தப் பெருந்தகையார்க்கு ஞானப்பால் ஊட்டப் பெற்றது இத்தீர்த்தக்கரையில்தான். இதுவன்றி, சூலதீர்த்தம், ஆநந்ததீர்த்தம், காளிதீர்த்தம், வைணவதீர்த்தம், இராகு தீர்த்தம், ஆழிதீர்த்தம், சங்கதீர்த்தம், சுக்கிரதீர்த்தம், பராசர தீர்த்தம், அகத்தியதீர்த்தம், கௌதமதீர்த்தம், வன்னிதீர்த்தம், குமாரதீர்த்தம், சூரியதீர்த்தம், சந்திரதீர்த்தம், கேதுதீர்த்தம், அண்டதீர்த்தம், பதினெண்புராணதீர்த்தம், புறவநதி, கழுமல நதி, விநாயகநதி என்னும் தீர்த்தங்கள் இருக்கின்றன.

திருஞானசம்பந்தப் பெருந்தகையார் திருஅவதாரஞ்செய் தருளப்பெற்ற பதி இது. அவர் மூன்றும் ஆண்டில் நீராடச் சென்ற தந்தையாருடன் சென்று, பிரமதீர்த்தக்கரையில் பசித் திருக்க அம்மையப்பரால் ஞானப்பால் ஊட்டப்பெற்ற பெருமை வாய்ந்தது. ஞானசம்பந்தப் பெருந்தகையாருடைய பெருமை யைக் கேள்வியுற்ற திருநாவுக்கரசு நாயனர் சீகாழிக்கு எழுந் தருளிவந்து அவரை வணங்கி அவருடைய நட்பைப் பெற்ற தோடு அவரால் அப்பர் என்னும் திருநாமத்தைப் பெற்ற சிறப்புடைய பதி இது. சுந்தரமூர்த்தி நாயனர் சீகாழிக்கு எழுந்தருளியபோது, இது ஞானசம்பந்தப் பெருந்தகையார் அவதரித்த திருப்பதி என்று மிதித்தற்கு அஞ்சி நகர்ப்புறத்து நின்று பாட இறைவர் அங்குக் காட்சி தரக்கண்ட பெருமை வாய்ந்தது. திருநீலகண்டயாழ்ப்பாணர் எழுந்தருளி ஆளுடைய பிள்ளையாரை வணங்கி அவருடைய பதிகங்களை யாழிலிட்டு வாசித்து அவருடன் இருக்கும் பெருமைபெற்றது. கணநாத நாயனர் அவதரித்த திருப்பதியும் இதுவே.

இத்தலத்தில் திருத்தோணியப்பர் பக்குவ ஆன்மாக்களுக்கு உபதேசம் புரிந்து சிவஞானச்செல்வத்தை அளிப்பதற்குக் குருவடிவமாய் அமைந்திருக்கின்றார். பஞ்சகிருத்தியங்களைச் செய்தருளுதற்குப் பிரமபுரீசுவரர் மூலலிங்கமாய் எழுந்தருளி யிருக்கிறார். திருத்தோணிக்குத்தென்பால் சட்டைநாதர் பேரின்ப சித்திகளை அருளுதற்பொருட்டுச் சங்கமவடிவாய் விளங்கு கின்றார். ஆதலால் இது குருலிங்கசங்கம பதியாய்ச் சிறந்து விளங்கும் பெற்றிவாய்ந்தது. சந்திரன், முருகவேள், ஆதிசேடன் முதலானவர்களும் பூசித்துப் பேறுபெற்ற சிறப்பினையுடையது.

மூவர் முதலிகள் பாடிய எழுபத்தொரு பதிகங்களை உடைய தனிச்சிறப்பு இப்பதிக்கு உரியதாகும்.

இக்காழியில் முக்கியதெய்வமாகவிளங்குகிறவர் சட்டைநாத சுவாமி. இவரது மூர்த்தம் சிவமூர்த்தங்களுள் ஒன்று. இரணியனைக் கொன்ற நரசிங்கத்தைத் தடிந்து அதன் தோலைச் சட்டையாகப் போர்த்துக்கொண்ட காரணத்தால் இவர் இப்பெயர்பெற்றார். ஒவ்வொரு வெள்ளிக்கிழமைதோறும் அர்த்த சாமத்தில் இவருக்குச் சிறந்த வழிபாடு நடைபெற்றுவருகிறது.

இங்கு வடுகநாதருக்கு நித்தியபூசையும், வெள்ளிக்கிழமை தோறும் நைமித்திகபூசையும், சித்திரைமாதத்துப் பரணியில் விசேடபூசைகளும் நடைபெற்றுவருகின்றன.

சிவபெருமான் உமாதேவியாரோடு எழுந்தருளி, திருஞான சம்பந்தப்பெருந்தகையார்க்குக்காட்சிதந்தருளிய அருள்வெளிக்கு ஞாயிறுகாணி என்றுபெயர். இங்குள்ள நந்தவனத்திற்கு இந்திர நந்தவனம் என்னும் பெயர் இன்றும் வழக்கில் இருக்கிறது. இது சிவபூசைக்காக முற்காலத்தில் இந்திரன் அமைத்ததாகும். வலம்புரி மண்டபத்தில் பல சித்திரங்கள் பழங்காலத்தில் எழுதப்பெற்றிருக்கின்றன. அவற்றுள் கிள்ளிவளவனைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன.

பட்டினத்து அடிகள் இத்தலத்திற்கு மும்மணிக்கோவை இயற்றியுள்ளார்கள். அது திருக்கழுமல மும்மணிக்கோவை என்னும் பெயருடையது. இது பதினொன்றாந் திருமுறையில் சேர்க்கப்பெற்றுள்ளது. இத்தலபுராணம் சீகாழி அருணாசலக் கவிராயரால் எழுதப்பெற்றது. திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை சீகாழிக்கோவை என்னும் நூலை இயற்றியுள்ளார்கள். அது வலம்புரிமண்டபத்தில் அரங்கேற்றப் பெற்றது. இப்புராணமும் கோவையும் அச்சில் வெளிவந்துள்ளன. 1937 இல் வெளிவந்துள்ள சீகாழித் தலபுராணத்தில் வசனமும் எழுதிச் சேர்க்கப்பட்டுள்ளது. அதை எழுதியவர் வித்துவசிகாமணி, திரு. ப. அ. முத்துத்தாண்டவராயப் பிள்ளை ஆவர்.

இத்தலம் தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமானது. கோயில் மிகத் தூய்மையாக இருக்கின்றது. இருபத்தைந்தாம் பட்டத்து

எழுந்தருளியிருக்கும் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் பிற்காலத்துச் சோழமன்னர்கள் செய்ததுபோலத் திடீரென்று ஆலயத்திற்கு எழுந்தருளி நித்தியநைமித்திகங்கள் எல்லாம் குறைவற நடக்கின்றனவா எனக் கவனித்தருளுகின்றார்கள். இங்குச் சித்திரையில் நடைபெறும் பிரமோற்சவத்தின் இரண்டாம்நாள் விழாவே திருமுலைப்பால் விழாவாகும். இவ்விழாநாட்களில் கூடும் பெருந்திரளான மக்கள் பயனுறும் பொருட்டுத் திருமுறை மாநாடுகளை ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் ஆண்டுதோறும் கூட்டுவித்தருளுகின்றார்கள்.

கல்வெட்டு: இத்திருக்கோயிலில் பிற்காலத்துச் சோழமன்னர்களுள் பரகேசரிவர்மன், இராசகேசரிவர்மன் முதலான சோழமன்னர் காலங்களிலும், பல்லவ அரசனாகிய கோப்பெருஞ்சிங்கன் காலத்திலும், விசயநகரவேந்தர்களுள் வீரவிருப்பண்ண உடையார் வீரப்பிரதாபகிருஷ்ணதேவமகாராயர் வேங்கடதேவ மகாராயர் இவர்கள் காலங்களிலும் பொறிக்கப்பெற்ற நாற்பத்தாறு கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இவற்றுள் திருக்கழுமலத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவர் திருத்தோணிபுரம் உடையார். இறைவியார் பெரியநாய்ச்சியார். திருஞானசம்பந்தர் ஆளுடையபிள்ளையார் என்னும் திருப்பெயர்களால் கூறப்பட்டுள்ளனர். இக்கல்வெட்டுக்கள் பெரும்பாலும் இறைவருக்குத் திருநந்தவனம், திருநுந்தாவிளக்குகள், அடைக்காயமுது, இலையமுது முதலியவைகளுக்கு நிபந்தங்கள் அளிக்கப்பெற்ற செய்திகளை உணர்த்துவதோடு, இவ்வூரைத் தன்னகத்துக்கொண்டுள்ளநாடு இராசாதிராச வளநாடு என்னும் பெயர்பெற்றிருந்தது என்பதையும் தெரிவிக்கின்றன.

இக்கோயிலில் ஆளுடையபிள்ளையாரை எழுந்தருளுவித்தவர் உய்யவந்தாள் இராசவிச்சாதிரி என்னும் அம்மையார் ஆவர். இவர் திரிபுவனச் சக்கிரவர்த்தி கோனேரின்மைகொண்டானின் அடுக்களைப் பெண்டுகளில் மூப்புவாய்ந்தவர் ஆவர். அடுக்களைப் பெண்டிர் என்பவர் அரசனது அரண்மனையில் சமையல் செய்பவர். விச்சாதிரி (வித்யாதிரி) எனப் பட்டம் பெற்றிருப்பதால் இவர் இசைபாடுதலில் வல்லவர் என்றும் பெறப்படுகின்றது. ஆளுடையபிள்ளையார் எழுந்தருளியிருக்கும் திருக்கோயில் முதல் பிராகாரத்துத் திருமதில் திருப்பணியைப்

புரிந்தவர் கங்கைகொண்டசோழபுரத்துக் கங்கைகொண்ட சோழன் திருமதிளுக்குள் வடகூரில் உத்தமசோழப் பெருந் தெருவிலிருந்த வானமாளிகை உடையான் வேம்பன் வைசியார் மகன் நுரம்பூண்டான் ஆவன்.

ஆளுடையபிள்ளையார்க்கு அர்ச்சனைகளுக்காக உய்யக் கொண்டார் வளநாட்டு அம்பர்நாட்டு மாத்தூரில் மாத்தூ ருடையான் கோவன்நம்பி காணி நிலத்தில் நாலுவேலி நிலத்தை அர்ச்சனபோக இறையிலியாக, திரிபுவன சக்கிரவர்த்தி கோனேரின்மைகொண்டான் அவன் ஆட்சியின் ஆறும் ஆண்டு நாள் நூற்றுத்தொண்ணூற்றுமூன்றில் அளித்துள்ளான். இந்த நிபந்தத்தை அரசன் திருக்காளத்திக்குச் சென்றிருந்த பொழுது அங்கிருந்தே விட்டுள்ளான்.

சோழவளநாட்டு ஆக்கூர்நாட்டுத் தலைச்சங்காட்டுச் சபை யார் தங்கள் ஊரில் மும்முடிச்சோழன் பேரம்பலத்தில் கூடி யிருந்து கழுமலத்து ஆளுடையபிள்ளையார்க்குத் திருப்பாற் போனகம் அமுது செய்தருளுகைக்குத் திருமடைப்பள்ளிப் புறமாகத் தலைச்சங்காட்டைச் சேர்ந்த சிற்றூராகிய சோழ பாண்டிய நல்லூரில் கண்ணாறு என்று பெயரிட்டு அழைக்கப் பெற்ற விளைநிலமும் குளமும், திடலும் ஆகக் குழி பதினாயிர முள்ள ஐந்துவேலி நிலத்தைக் கொடுத்துள்ளனர்.

வீரஹரிஹரராயர் குமாரர் ஸ்ரீ வீரவிருப்பண உடையார் கி. பி. 1393 இல் தில்லைவிடங்கனல்லூரில் நூற்றுநாற்பதுமா நிலத்தை ஆளுடையபிள்ளையார்க்குச் சர்வமான்யமாகக் கொடுத்துள்ளார். வெண்மணிகிழான் ஆட்கொண்டநாயகன் திருநட்டப்பெருமான் ஆளுடையபிள்ளையார்க்கு நாள் அமுதுக் கும், சிறப்புத் திருநாள்களுக்கும், ஆண்டுத் திருநாள்களுக்கும் கறியமுதாக அமுதுசெய்தருளுதற்குத் திருக்கழுமலத்தில் முக்காணி அரைக்காணிக்கீழ் ஒருமா நிலத்தை விட்டுள்ளான்.

நடராசப்பெருமானைப்பற்றியது: சோழநாட்டில் சுத்தமலி வளநாட்டு வெண்ணிக்கூற்றத்து குணநாடான உடையான் அரையன் தேவும் திருவும் உடையானை பொத்தப்பிச்சோழன் வீரபாண்டியனை வென்று பாண்டிநாட்டிலிருந்து கூத்தாடுந் தேவரையும் (நடராஜரையும்) அவர்தம் நாய்ச்சியாரையும்

கொண்டுவந்து திருத்தோணிபுரமுடையார்கோயிலில் திருநடைமாளிகையில் எழுந்தருளுவித்து அவர் பூசைக்கு வேண்டும் நிவந்தங்களுக்கு ஆக்கூரில் இரண்டுவேலி நிலத்தை அளித்துள்ளான். இது நிகழ்ந்தது இராசாதிராசதேவரின் பதினென்ருாம் ஆட்சியாண்டாகும்.

இத்திருக்கோயிலில் திருக்கைகொட்டியில் திருமுறைகள் எழுந்தருளுவிக்கப்பெற்றிருந்தன. அவைகள் பழுதடையும் போது புதுப்பிப்பதற்கும், அவைகளைப் பூசித்து இருக்கைக்கும் கிராமகாரியஞ் செய்கிற பெருமக்கள் நிலம் அளித்துள்ளனர். ஆளுடையபிள்ளையார் கோயில் மங்கையர்க்கரசிநாய்ச்சியாரை முன்னரே எழுந்தருளுவிக்கப்பெற்றிருந்தனர். அவ்வம்மையார்க்கு அமுதிசைந்தருளுகைக்குத் திருமடைப்பள்ளிப் புறமாகத் திருக்கழுமலநாட்டு வீரசோழநல்லூரிலிருந்த சுவாமி சந்தோஷப் பல்லவ அரையர் முதலானோர் திரிபுவனசக்கரவர்த்திகள் ராஜராஜதேவரின் பன்னிரண்டாம் ஆட்சியாண்டில் நிலம் அளித்திருந்தனர்.

இவ்வூரில் திருநெறிமாளிகை மடம் என்று ஒன்று இருந்தது. இதை இவ்வூரில் உள்ள வீரவிருப்பண உடையார் கல்வெட்டுத் தெரிவிக்கின்றது.

## 28 திருக் காறாயில்

திருவாரூர்க்குத் தெற்கே சுமார் எட்டுமைல் தூரத்தில் இருக்கிறது. இது காவிரித் தென்கரைத் தலங்களுள் நூற்றுபத்தொன்பதாவது ஆகும்.

இறைவரது திருப்பெயர் கண்ணாயிரநாதர். இறைவியாரது திருப்பெயர் கைலாசநாயகி.

தீர்த்தம் இந்திரதீர்த்தம். இது கோயிலுக்கு வடபுறத்தில் இருக்கிறது.

இத்தீர்த்தத்தின் வடகரையில் கடுக்காய்ப்பிள்ளையார் கோயில் இருக்கின்றது. ஒரு வியாபாரி ஜாதிக்காய் மூட்டைகளைக் கடுக்காய் மூட்டைகள் எனக் கூற, இப்பிள்ளையாருடைய திருவிளையாடலால் அவைகள் கடுக்காய் மூட்டைகள்

ஆயின. பின் வணிகனின் வேண்டுகோளின்படி அவைகள் முன்போலவே ஜாதிக்காய்கள் ஆயின. ஆதலால் அப்பிள்ளை யார்க்கு அப்பெயர்வந்தது என்பர்.

இதுமுசுகுந்த சக்கிரவர்த்தி தேவேந்திரனிடம் பெற்றுக் கொண்டு வந்த தியாகேசர் திருமேனிகள் ஏழுனுள் ஒன்றை எழுந்தருளுவித்த பதியாகும். தேவேந்திரன், முசுகுந்தசக்கிர வர்த்தி என்பவர்கள் பூசித்த பதி. புரட்டாசி மாதம் பௌர் ணமியே தேவேந்திரன் பூசித்த நாளாகும் என்பர். அன்று அப்பூசையை மக்கள் நடத்தி வருகின்றனர். இது ஞான சம்பந்தரால் பாடப்பெற்றது. அவருடைய பதிகம் ஒன்றை உடையது.

இக்கோயிலின் அருகே வெள்ளையாறு ஓடுகிறது. கோயிலின் பரப்பளவு 115'—172' ஆகும். பெரும்பாதை ஒன்று கோயி லுக்குப் பின்புறம் செல்லுகிறது. இராசராசனது 3-வது ஆட்சி ஆண்டில் (988) இறைவனுக்காக 35 மா நிலம் ஊர்ச் சபையாரால் வாங்கப்பட்டது. இராசேந்திரன் 3-ம் ஆட்சி ஆண்டில் (1012) ஆராதனைக்காக ஒரு நிலம் கோயிலுக்கு வாங்கித்தரப்பட்டது. இரண்டாம் இராசராசன் காலத்தில் (22—7—1943) இக்கோயிலின் திருக்கைக் கொட்டி மண்ட பத்தில் திருமுறைகள் வாசிக்கும் ஓதுவார்களின் உணவிற்காக நிலம் தரப்பட்டது. ''திருமகள்போல'', ''திருமன்னிவளர'' என்ற மெய்க்கீர்த்திகள் உள்ளன.

கல்வெட்டு: இத்திருக்கோயிலில் இராசகேசரிவர்மன் இராசராச தேவரின் 27-ஆம் ஆண்டு, பரகேசரிவர்மன் இரா சேந்திரசோழதேவரின் மூன்றும் ஆண்டு, திரிபுவனசக்கிர வர்த்தி இராசராச தேவரின் இருபத்தெட்டாம் ஆண்டு ஆகிய இக்காலங்களில் பொறிக்கப்பெற்ற நான்கு கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இக்கல்வெட்டுக்கள் ஒரு தோப்பில் உள்ள மூன்று தூண்களிலும், மற்றொரு கல்வெட்டுக் கோயிலுக்குப் பக்கத்திலும் உள்ளன. இக் கல்வெட்டுக்களில் இறைவர் திருக்காறாயில் மகாதேவர் என்னும் பெயரால் கூறப்பெற் றுள்ளனர். இக்கோயில், திருவோலக்கத் திருமண்டபம் முதலாம் இராசராச சோழனின் இருபத்தேழாம் ஆண்டில்

கட்டப்பெற்றது என்றும், இவ்வூர் அருண்மொழித்தேவ வள நாட்டுப் புலியூர்நாட்டைச் சேர்ந்தது என்றும், இக்கல்வெட்டுக் கள் அறிவிக்கின்றன. திரிபுவன சக்கரவர்த்தி ராஜராஜ தேவரின் இருபத்தெட்டாம் ஆண்டுக் கல்வெட்டு இக்கோயில் திருக்கை கொட்டியிலிருந்து, "திருமுறை பாடுவார்க்கு" நிவந்தம் அளிக்கப்பெற்ற செய்தியை அறிவிக்கின்றது. தேவாரங் களுக்குத் திருமுறை என்ற பெயர் இக்கல்வெட்டில் குறிக்கப் பெற்றிருப்பது கவனிக்கத்தக்கதாகும்.

See the Annual reports on South Indian Epigraphy for the year 1909—Numbers 451—454 Page 49.

## 29 திருக் கீழ்வேளூர்

வேள் (முருகப்பெருமான்) வழிபட்ட காரணத்தால் இப் பெயர் பெற்றது.

கீழ்வேளூர் ரயில்வேஸ்டேயத்திற்கு வடக்கே ஒருமைல் தூரத்தில் இருக்கிறது. இது காவிரித் தென்கரைத் தலங்களுள் எண்பத்துநான்காவது ஆகும்.

இறைவரது திருப்பெயர் கேடிலியப்பர். இப்பெயர் இவ் வூர்த் திருத்தாண்டகத்துள் எடுத்தாளப்பட்டுள்ளது. இறை வியாரது திருப்பெயர் வனமுலைநாயகி.

இத்திருப்பெயரை ஞானசம்பந்தப் பெருந்தகையார் இவ் வூர்ப்பதிகம் இரண்டாம் திருப்பாட்டில் "வாருலாவிய வனமுலை யவளொடு" என்று எடுத்து ஏத்தியிருப்பது பெருமகிழ்ச்சிக்கு உரியதாகும்.

தீர்த்தம் சரவணப்பொய்கை.

முருகவேள் பூசித்துப் பேறு பெற்றபதி. அவருடைய பூசைக்கும் தவத்துக்கும் கெடுதியுண்டாகாதவாறு இறைவியார் துர்க்கையின் அம்சமாகக் காவல்பூண்டிருந்தார். அவர்க்கு அஞ்சு வட்ட அம்மை என்றுபெயர். அவருடைய திருக்கோயில் முதல் பிராகாரத்தில் வடபக்கத்தில் இருக்கின்றது. இச்செய்தி,

" மண்டுபே ரொளியான் கேடிலியை
யர்ச்சித்த வள்ளிநாயகன் வருகவே
மாகாளிகாத்த கீழ்வேளூரில் மாதவம்
வளர்த்த வேலவன் வருகவே "

என்னும் இத்தலத்தைப்பற்றிய க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத் தமிழால் அறியலாம். அகத்தியர், கூத்தப்பெருமானது வலத் திருவடியைக்கண்டு தரிசித்த பதியும் இதுவேயாகும். குபேர னுக்குத் தனியாகக் கோயில் உள்ளமையால் அவனும் பூசித்துப் பேறுபெற்றிருக்கவேண்டும். இதற்குச் சம்பந்தர் பதிகம் ஒன்று, அப்பர் பதிகம் ஒன்று ஆக இரண்டு திருப்பதிகங்கள் இருக் கின்றன.

இத்திருக்கோயிலைப் பெருந்திருக்கோயில் என்று இவ்வூர்ப் பதிகத்தில் ஞானசம்பந்தப் பெருந்தகையார் கூறியுள்ளார். எனவே, கோயில் இறைவனுர் இறைவியார் திருப்பெயர்கள் இவைகள் எல்லாம் தேவாரத்தில் போற்றப்பட்ட சிறப்புடை யனவாகும்.

கல்வெட்டு: இந்தக்கோயிலில் மூன்றே கல்வெட்டுக்கள் படியெடுக்கப்பட்டன. இரண்டு கல்வெட்டு சோழர்களினவும் ஒன்று தஞ்சை மராட்டிய மன்னனதுமாகும். மூன்றும் இராச ராசன் தனது 18 ஆம் ஆட்சி ஆண்டில் (22—12—1233) இக் கோயிலுக்குப் பூதானம் செய்துள்ளான். அம்மன் கோயிலிலே அவருடைய பத்தாம் ஆண்டுக் கல்வெட்டு இருக்கிறது. தஞ்சை துரைராஜ மகாராஜர் (1763-87) இக்கோயிலின் பிராகார மதிலைக் கட்டினர்.

இத்திருக்கோயிலில் சோழமன்னர்களில் திரிபுவன சக்கிர வர்த்தி இராசராசதேவரின் பத்து, பதினெட்டு இவ்வாண்டு களில் பொறிக்கப்பெற்ற இரண்டு கல்வெட்டுக்களும் மகாராட் டிரமன்னரில் தஞ்சாவூர் துளசிராஜிராஜாவின் சகம் 1697 அதாவது கி. பி. 1775 இல் செதுக்கப்பட்ட கல்வெட்டு ஒன்றும் ஆக மூன்று கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இவற்றுள் துளசி ராஜிராஜா கல்வெட்டு இக்கோயில் பிராகாரத்தின் சுவர்கள் அம்மன்னனல் கட்டப்பட்டதையும் ஏனைய இருகல்வெட்டுக்கள்

நாள்வழிபாட்டிற்கு நிலம் அளித்த செய்தியையும் தெரிவிக்கின்றன.

See the Annual reports on South Indian Epigraphy for the year 1904. Numbers 515-517.

## 30 திருக் குடவாயில்

'திருணபிந்து முனிவர்க்குச் சிவபெருமான் குடத்தின் வாயில்வெளிப்பட்டுக் குட்டநோய் தீர்த்தருளிய காரணம்பற்றி, இப்பெயர்பெற்றது என்பர்'.

கும்பகோணத்திலிருந்து தென்கிழக்கில் பத்து மைல் தூரத்தில் இருக்கின்றது. தஞ்சாவூர்—திருவாரூர் ரயில் பாதையிலுள்ள கொரடாச்சேரி ரயில் நிலையத்திலிருந்து வடக்கே ஆறுமைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவிரித் தென்கரையில் தொண்ணூற்றுநாலாவது தலமாகும்.

இறைவரது திருப்பெயர் கோணேசுவரர். இறைவியாரது திருப்பெயர் பெரியநாயகி.

திருணபிந்து முனிவர் பூசித்துப் பேறுபெற்றூர். கருடன் பூசித்து அமுதம்பெற்றுத் தானும் தன்தாயும் சாபம் நீங்கப்பெற்ற தலம். அது காரணமாகவே திருமதிலின்மேல் கருடன் உருவங்கள் வைக்கப்பெற்றுள்ளன. இத்தலத்தை ஞானசம்பந்தர் மாத்திரம் பாடியுள்ளனர். அவர் பதிகங்கள் இரண்டாகும்.

இங்குள்ள கோயில் பெருங்கோயில் அமைப்பு உடையது.

"மகிழும் பெருமான் குடவாயின் மன்னி
நிகழும் பெருங் கோயி னிலாயவனே"

என்னும் இவ்வூர்த் தேவாரப்பகுதியால் அறியலாம்.

கல்வெட்டு: இக்கோயிலில் அம்மன்கோயில் நிலமட்டத்தில் இருக்கிறது. முன் கோபுரம் பூர்த்தியாகவில்லை. கோயிலில்

முன்னால் ஒரு குளம் இருக்கிறது. கோயிலின் அளவு 325'x172' யாகும். திருக்கோயிலின் மதில் மண்டபம் கருடன்போல் இருக்கிறதென்பர். கோச்செங்கணன் இக்கோயிலை மாடக் கோயிலாக்கினன்.

ராஜ கோபுரத்திலும், இரண்டாம் கோபுரத்திலும் மூன்று கல்வெட்டுக்கள் இருக்கின்றன. படி எடுக்கவில்லை. குடவாயிலில் நல்லாதனார், கீரத்தனார் என இருவர் சங்கப் புலவர் வாழ்ந்திருந்தவர். நல்லாதனார் திரிகடுகம் பாடியவர். புறம் 74-ல் சேரமான் கணைக்கால் இரும்பொறை சோழன், செங்கண்ணனோடு போர்புரிந்து குடவாயில் கோட்டத்தில் சிறைகிடந்த செய்தி கிடைக்கிறது. ஆகவே சோழர்களுக்கு இவ்வூர் சிறைக்கோட்டமாக இருந்ததெனலாம். இவ்வூர்ப் புராணம் உரைநடையில் உள்ளது. செய்யுள் நூல் அச்சாக வில்லை.

## 31 திருத் தென்குரங்காடுதுறை

மாயூரம்—கும்பகோணம் ரயில் பாதையில், ஆடுதுறை ரயில்வே நிலயத்திற்கு வடக்கே அரைமைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவிரித் தென்கரைத் தலங்களில் முப்பத் தோராவது ஆகும்.

இறைவரது திருப்பெயர் ஆபத்சகாயர், (ஆபத்சகாயேசர்) இறைவியாரது திருப்பெயர் (பவளக்கொடியம்மை) வண்டார் கருமென்குழல்மங்கை. இப்பெயரை இவ்வூர்ப் பதிகத்தின் இரண்டாம் திருப்பாட்டில் திருஞானசம்பந்தப் பெருந்தகையார் எடுத்துரைக்கின்றார்கள்.

வாலி அநுமான் இவர்களால் பூசிக்கப்பெற்றது.

திருவையாற்றிற்குக் கிழக்கே ஆறுமைல் தூரத்தில் காவிரியின் வடகரையில் குரங்காடுதுறை என்னும் ஊர் ஒன்று இருக்கிறது. அது வட குரங்காடுதுறையாகும். இது காவிரிக்குத் தென்கரையில் இருப்பதால் தென் குரங்காடுதுறை என்னும் பெயர்பெற்றது. இவ்வூரை மக்கள் ஆடுதுறை என்றே அழைக்கின்றனர். இது உத்தமசோழ தேவரது தாயாராகிய செம்பியன் மாதேவியாரால் கட்டப்பெற்ற கற்றளியை உடையது.

**கல்வெட்டு :** 15 கல்வெட்டுக்கள் படியெடுக்கப்பட்டுள்ளன அவற்றில் இரண்டு பாண்டியருடையன. பிற சோழர்களது எழுத்துக்கள். பாண்டியர்களில் மாறன் சடையன் 6-ஆம் 8-ஆம் ஆண்டுகள் கொண்டவை. இக்கல்வெட்டுக்கள் அழிந்திருக்கின்றன. இவன் 8-ம் நூற்றுண்டில் (770) ஆனை மலைக் கல்வெட்டைச் செதுக்கிய சடாவர்மனுக இருக்கலாம். (வேள்விக்குடிச் சாசனம் காண்க.) சோழர் கல்வெட்டுக்களில் உத்தம சோழன் (970—86) இராசராசன் I (985—1013) குலோத்துங்கன் I வீரராசேந்திரன், ராசராசன் II காலத்துக் கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இக்கல்வெட்டுக்களின்படி சிலசெய்திகள் கிடைக்கின்றன. கண்டராதித்தியர் தேவியார் செம்பியன் மாதேவியார் இக்கோவிலைக் கற்றளியாக்கினுர். (986) பிறகு கோயிலுக்கு (994)ல் 8 மா நிலம் தந்தார். குலோத்துங்கன் I நாளில் விளக்குக்காகத் தானம் செய்யப்பட்டது. சுங்கம் தவிர்த்தசோழப் பேராறு என்று அரசன்பெயரில் ஓர் ஆற்றுக்குப் பேர் இடப்பட்டது.

நாடு:- பூபாலகுலவல்லி வளநாடு. திரைமூர்நாடு திருக்குரங்காடுதுறை என்று பெயர்கள் இருக்கின்றன.

இத்திருக்கோயிலில் சோழமன்னர்களில் பரகேசரி வர்மனுகிய உத்தமசோழர், ராஜ ராஜகேசரி வர்மர், திரிபுவன சக்கிரவர்த்தி குலோத்துங்க சோழதேவர், திரிபுவன சக்கிரவர்த்தி. இராஜராஜதேவர். திரிபுவன சக்கிரவர்த்தி வீரராஜேந்திரதேவர் இவர்கள்காலங்களில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்களும், பாண்டியன் மாறன் சடையன் காலத்துக் கல்வெட்டும் இருக்கின்றன.

இத்திருக்கோயிலைக் கற்றளியால் கட்டியவர், உத்தமசோழ தேவரைத் திருவயிறு வாய்த்த, உடைய பிராட்டியார் பராந்தகன் மாதேவடிகளாரான செம்பியன் மாதேவியார் ஆவர். இறைவர் திருக்குரங்காடுதுறை மகாதேவர் என்னும் பெயரால் அழைக்கப்பட்டுள்ளனர். இவ்வூர், முதலாம் இராசராசன் காலத்தில் தென்கரைத் திரைமூர்நாட்டுத் திருக்குரங்காடுதுறை என்றும், திரிபுவன சக்கிரவர்த்தி குலோத்துங்க சோழதேவன் காலத்தில் பூபாலகுலவல்லி வளநாட்டு. திரைமூர்நாட்டுத் திருக்குரங்காடுதுறை என்றும் கூறப்பெற்றுள்ளது. இக்கல்வெட்டுக்களில் சுங்கந்தவிர்த்த சோழப்பேராறு குறிக்கப்பெற்றுள்ளது.

இவ்வூர்க்கு அண்மையிலுள்ள மருத்துவக்குடி என்னும் ஊரின் பெயரும் காணப்படுகிறது. இம்மருத்துவக்குடியே திரு இடைக் குளம் என்னும் வைப்புத்தலமாகும். இச்செய்தி அம்மருத்து வக்குடி கோயிலில் செதுக்கப்பெற்றுள்ள திரிபுவன சக்கிர வர்த்தி கோனேரின்மை கொண்டானின் 21 ஆம் ஆண்டுக் கல்வெட்டுத் தெரிவிக்கின்றது.

See the Annual reports on South Indian Epigraphy for the year ending 1907 Numbers 356—370.

## 32 திருக் குற்ருலம்

இது குற்ருலம் என்னும் ஒருவகை ஆலமரத்தைத் தல விருட்சமாக உடைமையால் இப்பெயர் பெற்றது. "உயிர் கொண்டு போம்பொழுது குற்ருலத்துறை கூத்தன் அல்லால் நமக்கு உற்ருர் யாருளரோ" என்னும் திருவங்கமாலைப் பகு தியும், 'குற்ருலத்து அமர்ந்துறையுங் கூத்தா வுன் குரைகழற்கே கற்ருவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே' என்னும் திருவாசகப் பகுதியும் இத்தலச் சிறப்புணர்த்துனவாகும். இங் குள்ள இறைவர்க்குக் கூத்தர் என்றும், இறைவியார்க்குச் சிவகாமி அம்மையார் என்றும் பெயர்கள் வழங்குகின்றன. இக்கோயிலைச் சம்பந்தர், முதல் திருமுறையில் பாடியிருக் கின்ருர். 'இக்குற்ருலத்திலே குறும்பலா என்ற கோயில் இருக்கின்றது. இதைத்தான் சம்பந்தமூர்த்தி சுவாமிகள் இரண்டாம் திருமுறையில் பாடியிருக்கின்ருர்கள். இதைப் பற்றித்தான் இங்கு எழுதியுள்ளது.

திருக்குறும்பலா: இது திருக்குற்ருலத்தில் அருவியை அடுத்து வடகரையில் இருக்கின்றது. குறும்பலா என்னும் ஒருவகை மரத்தைத் தலவிருட்சமாக உடைமையால் அம்மரத் தாலேயே இக்கோயில் குறும்பலா என்னும் பெயர் எய்திற்று.

இறைவரது திருப்பெயர் குறும்பலாநாதர். இறைவியாரது திருப்பெயர் குழல்வாய்மொழி யம்மை.

இது முதலில் விஷ்ணுதலமாய் இருந்தது. அவ்வூர் வைணவப் பெருமக்கள் சிவநிந்தையும், சிவனடியார் நிந்தையும்

செய்ததோடு அகத்தியரையும் அவ்வூரில் அணுகவொட்டாது தடுத்தமையால், அவ்வைணவர்களது அகந்தை அடக்கும் பொருட்டு, அகத்தியர் வைணவ அடியார் வேடம் பூண்டு, கோயிலுக்குள் சென்று திருமாலின் திருத்தலையில் தம் கை வைத்துச் சிவலிங்க வடிவாக்கினர் என்றும் அன்றுமுதல் இது சிவன்கோயிலாயிற்று என்றும் பழைய வரலாறு உண்டு. இத்தலம் ஞானசம்பந்தரால் மாத்திரம் பாடப்பெற்றது. இதற்கு அவருடைய பதிகம் ஒன்று இருக்கின்றது.

திரிகூடராசப்பக் கவிராயர் திருக்குற்றாலப் புராணத்தை எழுதியுள்ளார். அஃது அச்சில் வெளிவந்துள்ளது. அவரே இத்தலத்திற்குக் குறவஞ்சி ஒன்றை எழுதியுள்ளனர். இவ்விரு நூல்களும் புலவர் பெருமக்களால் பெரிதும் பாராட்டப்பட்டு வருகின்றன.

இத்திருக்குற்றாலப் புராணத்தில் ஒரு பாடல் பின்வருமாறு

புந்தியுற நினைந்தார்க்கே அருணகிரி தரிசனைக்கே
  புலியூர் பேறு
நந்துதவழ் திருவாரூர் பிறந்தார்க்கே யிறந்தார்க்கு
  நல்குங் காசி
எந்தையார் திருவருளாற் பிறந்தார்க்கு மிறந்தார்க்கு
  மெதிர்கண் டார்க்குஞ்
சிந்தையுற நினைந்தார்க்கு மழியாத கதிகொடுக்குந்
  திருக்குற் றாலம்.

(தலமகிமை செய்யுள் 18)

கல்வெட்டு: இவ்வூர் தென்காசி ரயிலடிக்கு 3½ கல் தொலைவில் அமைந்திருக்கிறது. இவ்வூர் கடல் மட்டத்திற்கு மேல் 550′ உயரத்தில் உள்ளது. இங்குள்ள அதிக உயரமுள்ள மேல்சிகரம் 5135 அடி உயரமுள்ளது. அது பஞ்சந்தாங்கி என்ற பெயரில் வழங்குகிறது. குற்றாலமலை மூன்றுசிகரங்களைக் கொண்டுள்ளதால் இதற்குத் திரிகூடமலை என்று பெயர். இம் மலையிலிருந்து விழும் முதலருவி, தேனருவி என்பது 100 அடி வீழ்ச்சிகொண்டது. பிறகு செண்பகதேவி என்ற இடத்தில் இரண்டாம் வீழ்ச்சியாக 30 அடி உயரத்திலிருந்து விழுகிறது. இறுதியில் குற்றால அருவி 200 அடி உயரத்திலிருந்து விழுகிறது. இடையில் ஒரு துறைக்குப் பொங்குமாகடல் என்று

பெயர். இதைத் தவிர ஐந்தருவிபோன்ற சிற்றருவிகள் பல வுண்டு. திருக்கோயில் சங்குவடிவமாக அமைந்துள்ளது. இக்கோயிலின் பரப்பளவு 376′ × 407′ யாகும். இதன் சார்புக் கோயில்கள் :- 1. செண்பகதேவி, 2. சித்திரச்பை, 3. குற்ருலநங்கை, 4. கூத்தர் கோயில், 5. மாடசாமி, 6. சம்பந்தப் பிள்ளையார் கோயில் முதலியன.

இக்கோயிலில் 89 கல்வெட்டுக்கள் படியெடுக்கப்பட்டன. அவைகளில் பதினன்கு சோழருடையன. ஏனைய பாண்டியருடையன. அவை 10 ம் நூற்ருண்டிலிருந்து 16-ம் நூற்ருண்டுவரை படர்ந்திருக்கின்றன. முதலாம் இராசராசன் காலத்தில் (980 - 1013) இக்கோயில் பழுதுபார்க்கப்பட்டது. பாண்டியரில் சடையன், மாறன் காலத்தில் 'பாசுபதப் பெருமக்கள் சபை' என்று இருந்தது. பிறகு மாறவர்மன் சுந்தர பாண்டியன் காலத்தில் (1216 - 1235) ஐந்நூற்றுமூவர் என்ற சபை ஒன்று இருந்தது. நீட்டலளவை சுந்தரபாண்டியன் கோலால் அளக்கப்பட்டது. 1249 ல் மாறவர்மன் விக்கிரமன் காலத்தில் சுந்தரபாண்டியபுரத்தில் இவருக்கு நிலம் தரப்பட்டது. 1334 ல் பராக்கிரம பாண்டியன் பூசாரிகளுக்கு இனும் நிலம் வழங்கினன். 1408 ல் கோயில் கட்டிய குலசேகரன் வேத பாராயணத்திற்கு 11 பேருக்கு நிலம் தந்தான்.

## 33 திருக் கேதாரம்

இது வடநாட்டுத் தேவாரம் பெற்ற தலங்களுள் ஒன்று. பிருங்கி முனிவரின் பொருட்டு இறைவியார் இறைவரைப் பூசித்து இடப்பாகம் பெற்ற தலமாகும். இத்தலத்தில் ஆறுமாதம் தேவர்களாலும், ஆறுமாதம் மனிதராலும் பூசைகள் செய்யப்படுகின்றன. இத்தலத்தில் தேவபூசை ஐப்பசி பௌர்ணமியில் தொடங்குகிறது. அப்பொழுது பனிக்காலமாதலால் அங்கு மனிதர்களே இருக்கமுடியாது. அர்ச்சகர் முதலானோர் மலையைவிட்டு வந்து விடுவர். பனிக்காலமாகிய ஆறுமாதம் கழித்துப் பூசைக்குச் செல்வர். திருஞானசம்பந்தரும், சுந்தரமூர்த்தி நாயனரும், திருக்காளத்தியிலிருந்தே இத்தலத்தைப் பாடியுள்ளனர். இத்தலத்திற்கு இரண்டு பதிகங்கள் இருக்கின்றன.

இறைவரின் திருப்பெயர்:- கேதார நாதர். இறைவி யாரின் திருப்பெயர்:- கேதாரகௌரியம்மை.

## 34 திருக் கேதீச்சுரம்

மாதோட்டம். இது "மாவின் கனிதூங்கும் பொழின் மாதோட்ட நன்னகரில், பாவம் வினையறுப்பார் பயில்பாலாவி யின் கரைமேல், தேவன் எனை யாள்வான் திருக்கேதீச்சரத் தானே" என்னும் இக்கோயிலுக்குரிய, சுந்தரமூர்த்திநாயனாரின் தேவாரப்பகுதியால் அறியக்கிடக்கின்றது. சம்பந்த மூர்த்தி நாயனாரும் இக்கோயில் பதிகத்தில் இதைக் கூறியுள்ளார்கள்.

இஃது ஈழநாட்டுத் தலங்களுள் ஒன்று, இலங்கை கவர்ன் மெண்ட் ரயில் நிலையமாகிய தலைநகருக்குக் கிழக்கே ஐந்து மைலில் பாலாவி ஆற்றின் கரைமேல் உள்ளது.

இறைவர் திருப்பெயர்:- கேதீசுவரர். இறைவியாரது திருப்பெயர்:- கௌரியம்மை.

தீர்த்தம்:- பாலாவி ஆறு.

துவட்டா என்னும் முனிவர் தவஞ்செய்து பேறுபெற்றது. சம்பந்தர் பதிகம் ஒன்று சுந்தரர் பதிகம் ஒன்று ஆக இரண்டு பதிகங்கள் இருக்கின்றன.

## 35 திருக் கைச்சினம்

இந்திரன் இங்கு மணலால் சிவலிங்கத்திருமேனியை எழுந் தருளுவித்துப் பூசித்தான். முடிவில் அதைக் கையினால் எடுக்க முயன்றபோது அது எடுக்கவாராமல் அவனது கை அடையா ளம் அவரது திருமேனியில் பதிந்துவிட்டது. ஆதலின் இப் பெயர் பெற்றது என்பர், (சின்னம்—அடையாளம். கைச் சின்னம்—என்பது கைச்சினம் என்று ஆயிற்று).

திருவாரூர்க்குத் தெற்கிலுள்ள திருநெல்லிக்கா என்னும் ரயில் நிலையத்திற்குக் கிழக்கே இரண்டு மைல் தூரத்தி லுள்ளது. இது காவிரிக்குத் தென்கரைத் தலங்களுள் 122 ஆவது ஆகும்.

இறைவரது திருப்பெயர்:- கைச்சினநாதர். இறைவியாரது திருப்பெயர்:- வெள்ளைநாயகி.

தீர்த்தம்:- இந்திரதீர்த்தம்; வச்சிரதீர்த்தம் என்பன.

தலமரம்:- கோங்கிலவு.

தேவேந்திரன், திருணபிந்து இவர்கள் பூசித்துப் பேறு பெற்றனர். இது ஞானசம்பந்தப்பெருந்தகையாரால் பாடப் பெற்றது. அவருடைய பதிகம் ஒன்று இருக்கின்றது,

கல்வெட்டு:- இக்கோயிலில் 11 கல்வெட்டுக்கள் உள்ளன. சோழருடையது எட்டும், பாண்டியரது ஒன்றும், விஜயநகரத் தரசனது இரண்டுமாக மொத்தம் பதினொன்றாகும், இராசேந்திரன் தனது 30-ம் ஆண்டில், அதிகாலையில் இரண்டு விளக்குகள் எரிக்கவும், மார்கழி. வைகாசி மாதங்களில் விழாக்கள் நடத்தவும் திருக்கச்சின முடையாருக்குப் பாண்டிய மண்டலத்தில் பூதானம் செய்தான். இராஜராசன் காலத்தில் அரங்கன் ஆட்கொண்டான். கொடுத்த 50 காசுக்காக 3 பட்டர்கள் நுந்தாவிளக்கு வைப்பதாக ஒப்புக்கொண்டார்கள். குலோத்துங்கன் காலத்தில் அன்னதான நங்கை அதுபோலப் பணம் கொடுத்தாள். இராசாதிராசன் காலத்தில் 100 காசுகள் பெற்றுக்கொண்டு விளக்கு வைக்கப்பட்டது. அதுபோலவே குலோத்துங்கன் நாளிலும் செய்யப்பட்டது.

பாண்டியரில் சுந்தரபாண்டியன் தனது பத்தாம் ஆண்டில் வைகாசி வசந்தோற்சவத்திற்காகப் பூதானம் செய்தான். விஜயநகரத்தாரில் சகம் 1307ல் கச்சினப்பற்றில் முத்தரசர் பெயரில் உள்ள ஊரின் நிலங்களில் சதுர்வேதிப் பட்டர்களின் வரி தள்ளுபடி செய்யப்பட்டது.

இத் திருக்கோயிலில் சோழ மன்னர்களில் திரிபுவன சக்கிரவர்த்தி விக்கிரம சோழதேவர், திரிபுவன சக்கிரவர்த்தி ராஜராஜ தேவர், திரிபுவன சக்கிரவர்த்தி குலோத்துங்க சோழதேவர், திரிபுவன சக்கிரவர்த்தி இரண்டாம் ராஜாதிராஜ தேவர், மூன்றாங் குலோத்துங்கசோழதேவர் இவர்கள் காலங்களிலும், பாண்டியரில் ஜடாவர்மன் திரிபுவன சக்கிரவர்த்தி சுந்தரபாண்டியர்காலத்திலும், விஜயநகரபரம்பரையில்,

வீரபூபதி வீரப்பண்ண உடையார் காலத்திலும் பொறிக்கப் பெற்றுள்ள பதினொரு கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

இவ்வூர், இரண்டாம் இராசாதிராசன் கல்வெட்டில் இராசேந்திரசோழ வளநாட்டு ஆர்வலக்கூற்றத்துக் கச்சினம் எனவும், விசயநகரபரம்பரை வீரப்பண்ண உடையார் கல் வெட்டில், இராசேந்திர சோழ வளநாட்டு வடகால் வெண் டாழை வேளூர்க்கூற்றத்துக் கச்சினப்பற்று எனவும் குறிக்கப் பெற்றுள்ளது. இக் கோயிலுக்குரிய நிலங்கள் முதலாம் குலோத்துங்க சோழ தேவரின் 40ஆம் ஆட்சி யாண்டில் கல்லில் வெட்டப்பட்டுள்ளன. இச்செய்தியை விக்கிரமசோழ தேவ ரின் 12-ஆம் ஆண்டுக்கல்வெட்டுக் குறிப்பிட்டுள்ளது. (இக் கல்வெட்டில் பெரியதேவர் குலோத்துங்கசோழதேவர் என்பது முதற் குலோத்துங்க சோழராகும்).

ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் சிறுகீழூரான முடிமான் தம்பிரான் சோழ சதுர்வேதி மங்கலத்துச் சோமதேவ பட்டன் மகன் கேசவப்பட்டன் இக்கோயில் வைகாசி வசந்த விழாவிற்கு நிலம் கொடுத்திருந்தான்.

பாண்டிநாட்டு, சோழபாண்டிய மண்டலத்து, மதுரோதய வளநாட்டு, பாலைக்குறிச்சி, ஆரியன் திருமறைக்காடு உடை யான் மார்கழி, வைகாசி விழாக்களுக்கும் காலைசந்திகளுக்கும், நுந்தாவிளக்குகளுக்கும் இராசேந்திர சோழதேவன் காலத்தில் நிலம் அளித்திருந்தான்.

See the Annual reports on South Indian Epigraphy for the year 1925 Numbers 152—162 Page 49.

## 36 திருக் கோடிகா

பெயர்க்காரணம் புலப்படவில்லை. "இது திரிகோடி அதாவது மூன்றுகோடி ரிஷிகள் பூசித்த காரணத்தால் இப் பெயர்பெற்றது என்பர்" அது பொருந்துமாறு இல்லை.

மாயூரம் கும்பகோணம் ரயில்பாதையில் நரசிங்கன்பேட்டை ரயில்நிலையத்திற்கு வடக்கே ஒருமைல் தூரத்தில் இருக்கிறது. இது காவிரி வடகரைத் தலங்களுள் முப்பத்தேழாவது ஆகும்.

இறைவரது திருப்பெயர் கோடிகாசசுவரர். இறைவியாரது திருப்பெயர் வடிவம்மை.

தீர்த்தம் சிருங்கதீர்த்தம். இது கோயிலுக்கு வடபால் உள்ளது.

இவ்வூர்க்கு சம்பந்தர்பதிகம் ஒன்று, அப்பர்பதிகம் மூன்று மாக நான்கு பதிகங்கள் இருக்கின்றன.

**கல்வெட்டு:** இத்திருக்கோயிலில் முற்காலத்துப் பல்லவர் களில் (The Early Pallavas) நந்திபோத்தரையன் விஜய நிருப துங்க விக்கிரமவர்மன் என்பவர்களுடைய கல்வெட்டுக்களும், பிற்காலப் பல்லவரில் (The Later Pallavas) கோப்பெருஞ்சிங்க தேவர் காலத்துக் கல்வெட்டுக்களும். முத்தரையர்களில் இளங் கோமுத்தரையர் காலத்துக் கல்வெட்டும், பாண்டியர்களில் மாறன்சடையன் காலத்துக் கல்வெட்டும், சோழமன்னர்களில் மதுரைகொண்ட கோப்பரகேசரிவர்மன் முதலாம் ராசராச சோழன் முதற்குலோத்துங்கன் விக்கிரமசோழன் மூன்றுங் குலோத்துங்கன் என்பவர்களுடைய கல்வெட்டுக்களும் ஆக ஐம்பது கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

இத்திருக்கோயில் கோயில் திருவிசைப்பாப் பதிகம் பாடிய கண்டராதித்தசோழதேவரது மனைவியாராகிய செம்பியன்மா தேவியாரால் கற்றளியால் ஆக்கப்பெற்ற பெருஞ்சிறப்புடை யது. இவ்வம்மையார் இக்கோயிலைக் கட்டுவதற்கு முன்பு இங்கிருந்த இருபத்தாறு கல்வெட்டுக்களைப் பெரிதும் பாது காத்து அவைகளை எல்லாம் தாம் கட்டிய கோயிலில் செதுக்கி வைக்கச் செய்தனர். கல்வெட்டில் இவ்வம்மையார் வைத்திருந்த பற்று பாராட்டற்குரியது. இத்திருக்கோயிலில் எழுந்தருளி யிருக்கும் இறைவர் திருக்கோடிகாவல்பெருமாள். திருக்கோடி காவில் மகாதேவர், திருக்கோடிகாவுடையார் என்னும் பெயர் களால் கூறப்பெற்றுள்ளனர். இக்கோயில் திருச்சுற்றுமாளிகை விக்கிரமசோழதேவரால் கட்டப்பெற்றதாகும். அதில் விக்கிரம சோழதேவரால் கட்டப்பெற்றதாகும். அதில் விக்கிரமசோழன் திருமாளிகை என எழுதப்பெற்றுள்ளது. சண்டேசுவரநாயனர் கோயில் உத்தரத்தில் தியாக சமுத்திரம் என்று செதுக்கப் பெற்றுள்ளது. அதனல் அக்கோயில் தியாக சமுத்திரம்

என்னும் சிறப்புப் பெயருடைய சோழமன்னனால் கட்டப் பெற்றது என்று அறியக்கிடக்கின்றது. இத்திருக்கோயில் திருப்பெருந்துறை ஆளுடையாரைக் கோப்பெருஞ்சிங்கதேவரை எழுந்தருளுவித்தவர் கங்கைகொண்டசோழபுரத்து மணலூ ருடையார் வரந்தரும் கூத்தப்பெருமாள் ஆவர்.

இவ்வூர் முதலாம் ராசராசன் காலத்தில் (ஐந்தாம் ஆண்டுக் கல்வெட்டு) வடகரை நல்லாற்றூர் நாட்டுத் திருக்கோடிகாவல் எனவும், கோப்பெருஞ்சிங்கன் காலத்தில் விருதராசபயங்கர வளநாட்டு நல்லாற்றூர்நாட்டுத் திருக்கோடிகா எனவும் கூறப் பெற்றுள்ளது.

நந்திபோத்தரையர் என்னும் முற்காலப் பல்லவர் கல்வெட் டினால் இக்கோயிலினுள் சிறுநங்கை ஈச்சரம் என்னும் பெய ருள்ள கோயில் ஒன்று கூறப்பெற்றுள்ளது. திருக்கோடிகா விற்குக் கண்ணமங்கலம் என்னும் வேறுபெயருண்மையை 'திருக்கோடிகாவாகிய கண்ணமங்கலத்து' என்னும் கல்வெட் டுப் பகுதி அறிவிக்கின்றது.

சிறுநங்கை ஈஸ்வரகாரத்து மகாதேவர்க்குத் திருவிளக்கி னுக்கு ஆழிசிறியன் என்பவன் நூறுகலம் நெல்கொடுத்து அதன் வட்டிகொண்டு நாள்வாய் (நாள்தோறும்) உழக்கு நெய்யால் அவ்விளக்கை எரிப்பதற்கு நிவந்தம் அளித்துள்ளான். இது நந்தி போத்தரையன் 19 ஆம் ஆண்டுக் கல்வெட்டால் புலப்படுகின்றது. விசைய நிருபதுங்க விக்கிரமவர்மனின் இருபத்துநான்காம் ஆண்டில், கொண்டநாடுடைய வெட்டுவதி அரையனுன மல்லன் வேங்கடவன், பதினைந்துகழஞ்சு பொன்னை அளித்து, அதன் வட்டிகொண்டு நொந்தாவிளக்கு ஒன்றைத் திருக்கோடிகா மகாதேவர் கோயிலில் எரிப்பதற்காக நாணக்கச் சதுர்வேதிமங்கலத்துச் சபையாரிடம் ஏற்பாடு செய்திருந்தான். நிருபதுங்க மகாராஜர் தேவியார் வீரமகாதேவியார், இரணிய கர்ப்பமும் துலாபாரமும் புகுந்த பொன்னில் திருக்கோடிகா மகாதேவர்க்கு ஐம்பதின் கழஞ்சுப் பொன்னை அளித்து, அவற்றில் இருபத்தைந்து கழஞ்சு பொன்னுக்கு வரும் வட்டி கொண்டு நாடோறும் இருநாழி அரிசியும் ஒருபிடி நெய்யும் திருவமுதுக்கும், நாடோறும் உழக்கு நெய்கொண்டு ஒரு நுந்தா விளக்கு எரிப்பதற்கும் ஏற்பாடுசெய்திருந்தார். மெழுக்குப்

புறத்துக்கு நிலம் விடப்பட்டிருந்தது. வடகரை நல்லாற்றூர் நாட்டு, ஆரூர் உடையான் அருளாக்கி சேந்தன் இந்நாட்டுக் கண்ணமங்கலத்துப் புதுவாய்க்காலின் வடக்கே மூன்றுமாவும், வடகரை அரைமாவும் ஆக மும்மாவரை நிலத்தை, பெண்ணடியார்கள் உண்பதற்கும், ஒருகூறு ஆணடியார்கள் உண்பதற்கும் ஆக ஏற்பாடுசெய்திருந்தான். மல்லிநாட்டுக் கிழந்தி பெரும் பிடுகுவிஞ்சவயனுன நக்கன் நந்தவனத்துக்கும், நந்தவனம் இறைப்பார்க்கும் ஆக இரண்டுமா நிலத்தை விலைக்கு வாங்கிக் கொடுத்துள்ளான். நந்தவனம் திருக்கோவிலுக்கு வடபாலுள்ள இடமாகும்.

பழையாற்று நந்திபுரத்து வியாபாரி குமரன் கணபதி என்பான் திருக்கோடி மகாதேவர்க்குத் திருவிளக்கினுக்கும், திருவமிர்தினுக்கும் ஆக எழுபதின் கழஞ்சு பொன் கொடுத்துள்ளான்.

மார்கழித் திருவாதிரைச் சிறப்புக்குக் கூத்தாடும் நாயனூர்க்கு உதையஞ்சடையன் உடையான் தில்லையம்பல விழுப்பரையன் மூன்ருங் குலோத்துங்கன் காலத்தில் நிவந்தம் அளித்துள்ளான். பரகேசரி விக்கிரமசோழன் காலத்தில் தென்கரை உய்யக்கொண்டார் வளநாட்டுத் திரைமூர்நாட்டுத் திருவாவடுதுறை கோயிலில் பத்து தபசிகள் உண்பதற்கு ஒருவேலியும், வைத்திய விருத்திக்காக அரைவேலியும் திருக்கோடிகாவில் கொடுக்கப்பெற்றிருந்தது.

அமாவாசையில் இறைவரை எழுந்தருளச்செய்வதற்கு விக்கிரமசோழதேவரின் நான்காம் ஆண்டில் நிவந்தம் கொடுக்கப்பெற்றுள்ளது. வரகுணமகாராஜபாண்டியன் சரஸ்வதி, கணபதி இவர்கள் கோயில்களில் விளக்கு எரிக்க நிபந்தம் அளித்துள்ளான்.

கோபுரத்தின்வாசல் இடதுபக்கத்தில் புதுவைபுரி பிள்ளைப் பெருமாள் மகனூர் சடையரைப்பற்றிய பாடல்கள் இருக்கின்றன.

See the Annual report on south Indian Epigraphy for the year 1931. Inscription Numbers 9—58.

South Indian Inscription Vol 13. Inscription general Numbers 55, 74, 78, 136, 222.

## 37 திருக் கோட்டாறு

பேரளம்—காரைக்கால் ரயில் பாதையில் அம்பகரத்தூர் ரயில்வே நிலயத்திற்கு வடகிழக்கே ஒன்றரைமைல் தூரத்தில் இருக்கின்றது. இஃது இக்காலம் கோட்டாரம் என்று வழங்கப் பெறுகின்றது. இது காவிரித் தென்கரைத் தலங்களுள் 53 ஆவது ஆகும்.

இறைவரின் திருப்பெயர்:- ஐராவதேசுவரர். இறைவி யாரின் திருப்பெயர் :- வண்டமர் பூங்குழலி.

வெள்ளையானை பூசித்துப் பேறுபெற்றது. இச்செய்தி,

"நின்று மேய்ந்து நினைந்து மாகரி நீரொடும் மலர்
வேண்டிவான் மழை
குன்றினேர்ந்து குத்திப்பணிசெய்யுங் கோட்டாற்றுள்"

என்னும் இவ்வூர் ஞானசம்பந்தர் தேவாரப்பகுதியால் (பண் சீகாமரம்—பாடல் 2.) அறியக்கிடக்கின்றது. இதற்கு ஞான சம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கின்றது.

## 38 திருக் கோட்டூர்

திருத்தருப்பூண்டி ரயில்வே நிலயத்திற்கு வடமேற்கே ஒன்பது மைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவிரித் தென்கரைத் தலங்களுள் 111 ஆவது ஆகும்.

இறைவரின் திருப்பெயர்:- கொழுந்துநாதர். இச்செய்தி, "கொந்துலாமலர் விரிபொழிற் கோட்டூர் நற்கொழுந்தினை" என்னும் இக்கோயிலுக்குரிய திருஞானசம்பந்தரது தேவாரப் பகுதியால் விளங்குகின்றது. இறைவியாரின் திருப்பெயர் :- தேன்மொழிப்பாவை.

தலவிருட்சம் வன்னி.

தேவர்களும், குச்சர இருடிகளும் பூசித்துப் பேறுஎய்தினர், இச்செய்திகள் இவ்வூர்த்தேவாரத்திலும் குறிப்பிடப் பெற் றுள்ளன.

கோட்டூரில் மேற்கிலுள்ளதே இப்பாடல்பெற்ற தலமாகும். இவ்வூருக்குக் கிழக்கில் ஒரு கோயில் இருக்கிறது. இது கீழ்க் கோட்டூர் மணியம்பலமாகும். அது கருவூர்த் தேவர் திருவிசைப் பாப்பெற்றது. இது திருஞானசம்பந்தப் பெருமானரால் பாடப் பெற்றது. அவருடைய பதிகம் ஒன்று இருக்கின்றது.

கல்வெட்டு: இக்கோயிலில் 23 கல்வெட்டுக்கள் படி யெடுக்கப்பட்டுள்ளன. பெரும்பாலும் சோழர்களுடையன. இவைகளுள் விளக்குத்தானம், விளக்குப்பணதானம், கோயி லுக்கு நிலதானம், முதலியவைபற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளன. மூன்றும் குலோத்துங்கன் கல்வெட்டு ஒன்றில் குலோத்துங்க சோழ வளநாட்டுக் குன்றத்தூரில் சேக்கிழான் பாலறுவாயன் களப்பாளராயன் என்ற ஒரு பெருமகனர் பெயர் குறிக்கப் பட்டுள்ளது. இதில் சேக்கிழார் தம்பியாரது பெயர் வருதல் காண்க. திருத்தருப்பூண்டி மடாதிபதி திருமாளிகைப் பிச்சர் பெயர் காணப்படுகிறது.

இத்திருக்கோயிலில் பெயர் குறிப்பிடப்பெருத பரகேசரி வர்மன் காலத்தது ஒன்று, முதலாம் இராசராச சோழன் காலத்தது ஒன்று, முதற்குலோத்துங்கசோழன் காலத்தன நான்கு, இரண்டாம் இராசாதிராசன் காலத்தன ஐந்து, மூன்றுங் குலோத்துங்கன் காலத்தன நான்கு, மூன்றும் இராசராசன் காலத்தன நான்கு. ஆக, சோழமன்னர்களின் கல்வெட்டுக்கள் பத்தொன்பதும், ஒருவயலில் நட்டுவைத் துள்ள தஞ்சை மராட்டிய மன்னருடைய கல்வெட்டு ஒன்றும், மற்றொருவயலில் நட்டு வைத்துள்ள தளவாய் அனந்தராயர் சாஹேப் கல்வெட்டு ஒன்றும், ஒரு தோப்பில் நட்டு வைத்துள்ள தஞ்சை ரகுநாத நாயக்கர் காலத்தது ஒன்றும், மற்றொரு தோப்பில் நட்டு வைக்கப்பெற்ற கல்வெட்டு ஒன்றும் ஆக மொத்தத்தில் இருபத்து மூன்று கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவர், இரண்டாம் இராசாதிராசன் கல்வெட்டில், கொழுந்தாண்டார் என்றும் மூன்றும் இராசராசதேவன் காலத்தில் மூலஸ்தானம் உடையார் என்றும், தஞ்சை மராட்டிய மன்னர் (மகாராஜா சாஹேப்) கல்வெட்டில் கொழுந்தீசுவர சுவாமி என்றும் கூறப்பெற்றுள்ளனர்.

முதலாம் இராசராச சோழதேவர் காலத்தில் இவ்வூர், அருண்மொழித் தேவவளநாட்டு நென்மலிநாட்டிலுள்ள கோட்டூர் எனவும் முதல் குலோத்துங்கன் கல்வெட்டில் ராசேந்திரசோழவளநாட்டு நென்மலிநாட்டிலுள்ள கோட்டூர் எனவும் குறிக்கப்பெற்றுள்ளது. எனவே அருண்மொழித்தேவ வளநாடு என்றும் பெயர் பெற்றசெய்தி புலனாகின்றது. மேலும் இக்கோயிலிலுள்ள முதற் குலோத்துங்க சோழ மன்னனது 27-ஆம் ஆண்டுக்கல்வெட்டு, இவ்வூர், அருமொழித்தேவவளநாட்டிற்கு உட்பட்டிருந்ததையும், அம்மன்னனது 50ஆம் ஆண்டில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டு இவ்வூர் இராஜேந்திர சோழவளநாட்டுக்கு உட்பட்டிருந்ததையும் உணர்த்துவதால் இராசேந்திரசோழ வளநாடு என்னும் பெயர் முதற்குலோத்துங்க சோழனது ஆட்சியின் பிற்பகுதியில் ஏற்பட்டது என்பது உறுதியாகும். (இராசேந்திர சோழன் என்பது முதற்குலோத்துங்கனுடைய பெயர்களுள் ஒன்றாகும்.)

மூன்றாங் குலோத்துங்க சோழதேவரின் இரண்டாம் ஆண்டில் குலோத்துங்க சோழ வளநாட்டுக் குன்றத்தூர்ச் சேக்கிழான் பல்லவ அரையன் களப்பாளராயர் ஒரு நுந்தாவிளக்கினுக்குப் பணம் உதவியுள்ளனர். இரகுநாத நாயக்கர் பத்துவேலி நிலத்தைக் கொடுத்துள்ளனர்.

இத்திருக்கோயிலில் திருஞானம் பெற்ற பிள்ளையாரை எழுந்தருளுவித்தவர் நாகமங்கலமுடையான் அம்பலங் கோயில்கொண்டவர் ஆவர். இச்செய்தி மூன்றும் இராசராச சோழ தேவரின் ஒன்பதாம் ஆட்சி யாண்டில் நிகழ்ந்ததாகும். இவ்வம்பலங் கோவில் கொண்டவர், இம்மன்னனது 18ஆம் ஆண்டில் இப்பிள்ளையார்க்குத் திருவமுது உள்ளிட்டவைகளுக்கு நிலம் அளித்துள்ளார். அதில் இப்பிள்ளையார், திருஞானம் பெற்ற ஆளுடைய பிள்ளையார் எனக் குறிக்கப் பெற்றுள்ளனர்.

இராசேந்திரசோழ வளநாட்டு வெண்டாழை வேளிர்க் கூற்றத்துத் திருத்தருப்பூண்டியில், திருமாளிகைப் பிச்சர் என்ற மடபதியைப்பற்றி மூன்றாங் குலோத்துங்கசோழதேவரது மூன்றாம் ஆண்டுக் கல்வெட்டில் காணப்பெற்றுள்ளது.

See the Annual reports on south Indian Epigraphy for the year 1913 Page 52. 54 Inscription No 443—465.

# 39 திருக்கோவலூர்வீரட்டம்

கோவலூர் என்பது ஊரின் பெயராகவும், வீரட்டம் என்பது கோயிலின் பெயராகவும் அமைந்துள்ளன. வீரட்டம் என்ருல் வீரத்தைக் காட்டிய இடம். இச்செய்தி "கோவலூர் தனுள் -வீரட்டானஞ் சேர்துமே" என்னும் இக்கோயிலுக்குரிய திருஞானசம்பந்தர் தேவாரப் பகுதியால் அறியக்கிடக்கின்றது. இத்தகைய தலங்கள் எட்டாகும். அவைகளுள் இது ஒன்று. இது அந்தகாசுரனைக் காய்ந்த இடம். இச் செய்தியை,

அவுணரிற் கள்வ னை அந்தகற் காய்ந்து மூன்று
புவனமும் கவலை தீர்த்த புண்ணியன் புரமீ தாகும்

என்னும் பரஞ்சோதியார் திருவிளையாடற் புராணத்தின் அர்ச்சனைப் படலமும் வலியுறுத்தும்.

இறைவரது திருப்பெயர்:- வீரட்டநாதர். இறைவியாரது திருப்பெயர்:- சிவாநந்தவல்லி.

தீர்த்தம் பெண்ணையாறு. இது பெண்ணையாற்றின் தென் கரையில் இருக்கிறது, (திருக்கோவலூர் என்னும் ரயில் நிலையத்திலிருந்து வடக்கே கால்மைல் தூரத்திலுள்ள திரு அறையணி நல்லூரை அடைந்து, அங்கிருந்து பெண்ணை யாற்றைக் கடந்து தென்கரையிலுள்ள இத்தலத்தை அடையலாம்.) இது நடுநாட்டுத் தலங்கள் இருபத்திரண்டில் பதினென்ருவது ஆகும். மலாடர் கோமானுகிய மெய்ப்பொருள் நாயனுர், தம்மோடு பலமுறை போர்புரிந்து, தோற்ற முத்த நாதனல், வஞ்சனையால் உயிர்க்கு இறுதி நேர்ந்த இடத்தும் "மெய்த்தவ வேடமே மெய்ப்பொருள் என்று கொண்டு, அவனைக் காத்துக் கூத்தப்பெருமான் திருவடி நீழல் அடைந்த பதி இது வாகும். இத் திருக்கோயிலுக்குச் சம்பந்தர் பதிகம் ஒன்று அப்பர் பதிகம் ஒன்று ஆக இரு பதிகங்கள் இருக்கின்றன.

கல்வெட்டு: இக்கோயிலில் 79 கல்வெட்டுக்களின் படிகள் எடுக்கப்பட்டிருக்கின்றன. அவைகள் சோழர்களது காலத்தவை. அவையாவன:- பரகேசரி 1, இராசகேசரி 1. இராசராசன் 10, இராசேந்திரன் 8, ராசாதிராசன் 1, ராசேந்திரதேவன் 1, வீரராசேந்திரன் 1, அதிராசேந்திரன் 1, குலோத்துங்கன் 6,

விக்கிரமன் 1, குலோத்துங்கன்-II 1, இராசாதிராசன் 2, குலோத்துங்கன்-III 3, இராசராசன்-III 3, நிச்சயிக்கப் படாதது குலோத்துங்கன் 4, இவைகள் தவிர பல்லவர்கள் 3, இராஷ்டிரகூடன், கன்னரதேவன் 3, பராந்தகன் 2.

இக்கல்வெட்டுக்களால் இக்கோயிலானது சோழர்களது முழுக்காலத்திலும் நன்குபுகழ்ப்பெற்றிருந்தது என அறிகிறோம். இக்கல்வெட்டுக்களை வரிசைப்படுத்தி ஆராய்ந்தால் ஒரு சிறந்த சரிதப் பகுதியே கிடைக்கக்கூடும். இவ்வூரைச் சயங்கொண்ட சோழமண்டலத்து மலாடான ஜநநாத வளநாட்டுக் குறுக்கைக் கூற்றத்துத் திருக்கோவலூர் என்று கூறியிருக்கிறது. சுவாமி திரு வீரட்டானமுடையார் தேவர் என்றே கண்டிருக்கிறது. விளக்குத் தானங்கள் நிரம்பச் செய்யப்பட்டுள்ளன. அதற்காகவும் வழிபாட்டிற்காகவும் நிலங்கள் கொடுக்கப்பட்டன. இராசராசன் காலத்துப் பெரிய கல்வெட்டு ஒன்று, நீண்ட அகவற்பாவால் எழுதப்பட்டு இறுதியில் இரண்டு வெண்பாக்களும் ஒரு விருத்தமும் கூறி முடிக்கப்பட்டுள்ளது. அதில் பண்டைய வழக்கங்கள் பல கூறப்பட்டுள்ளன.

## 40 திருக் கோழம்பம்

இது மாயூரம்—கும்பகோணம் ரயில் பாதையில், நரசிங்கன் பேட்டை ரயில் நிலையத்திற்குத் தென்கிழக்கே ஒருமைல் தூரத்தில் இருக்கின்றது. திருவாவடுதுறையிலிருந்தும் செல்லலாம். அங்கிருந்து தெற்கே சுமார் ஒன்றரைமைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவிரித் தென்கரைத் தலங்களுள் முப்பத்தைந்தாவது ஆகும்.

இறைவரது திருப்பெயர்:- கோகிலேசுவரர், இறைவியாரது திருப்பெயர்:- சௌந்தரநாயகி.

இந்திரனால் குயிலுருவமாகுமாறு சபிக்கப்பெற்ற சந்தன் என்னும் வித்தியாதரன் இங்குவந்து இறைவனை வழிபட்டுப் பழைய உருவம் எய்தினன். இது திருஞானசம்பந்தராலும் திருநாவுக்கரசராலும் பாடப்பெற்ற பெருமை வாய்ந்தது. இதற்கு இரண்டு பதிகங்கள் இருக்கின்றன.

# 41 திருச் *சாய்க்காடு

ஆதிசேடனது நாகமணி ஒளி வீசியதால் இப்பெயர் பெற்றது என்பர். இப்பொருட்குச் சாய் ஒளி என்பர். இது ச்ாயாவனம் எனவும் வழங்கப்பெறும்.

இது சீகாழிக்குத் தென்கிழக்கே 9 மைல் தூரத்தில் இருக்கிறது இது காவிரி வடகரைத்தலங்களுள் ஒன்பதாவது ஆகும்.

இறைவரது திருப்பெயர்:- அமுதேசுவரர், சாயவனேசுவரர். இறைவியாரது திருப்பெயர்:- குயிலினும் நன்மொழியம்மை.

தீர்த்தம் காவிரி: ஐராவததீர்த்தம். இது கோயிலுக்கு எதிரில் இருக்கின்றது.

உபமன்னியு முனிவர் பூசித்துப் பேறுபெற்றனர். இந்திரனது தாயார் நாளும்வந்து இத்தலத்தைப் பூசித்துவந்தனர். அவரது கஷ்டத்தைப்போக்க, இந்திரன் சிவலிங்கத் திருமேனியைத் தேவ உலகிற்குக் கொண்டுபோக எண்ணித் தோண்டிப் பார்த்தான். பாதால லோகம்வரை அவருடைய திருமேனி சென்றிருந்தமையால் அவரை மீளவும் அங்கேயே எழுந்தருளச் செய்வித்தான் என்பர். இதற்குச் சம்பந்தர் பதிகங்கள் இரண்டு அப்பர் பதிகங்கள் இரண்டு ஆக நான்கு இருக்கின்றன.

இத்தலத்தை ஐயடிகள் காடவர்கோன் நாயனர் பாடியுள்ளனர். அப்பாடல் பின்வருமாறு :-

அஞ்சனஞ்சேர் கண்ணர் அருவருக்கும் அப்பமதாய்க்
குஞ்சி வெளுத்துடலங் கோடாமுன்—நெஞ்சமே
போய்க்காடு கூடப் புலம்பாது பூம்புகார்ச்
சாய்க்காடு கைதொழுநீ சார்ந்து.

கல்வெட்டு : இங்கே 13 கல்வெட்டுக்கள் எடுக்கப்பட்டன. அவைகளில் 10 சோழர்களுடையன. 3 பாண்டியர்களுடையன.

---

*சாய் என்பதற்குத் தமிழில் கோரை என்று பொருள். கோரைக் காடு செறிந்த இப்பகுதி சாய்க்காடு என்று பெயர்பெற்றது. சாய் என்னும் வழக்கு கோரை என்ற பொருளில் பழந்தமிழ் நூல்களில் உளது "அயத்து வளர் பஞ்சாய்" என்பது காண்க. (அகம் 62.)

சோழர் எழுத்துக்கள் பிற்காலச் சோழர்களுடையவைதான். நாடு ராஜாதிராஜ வளநாடு நாங்கூர்நாடு ஊர் காவிரிப்பூம் பட்டினத்துத் திருவாய்க்காடு என்பது.

குலோத்துங்கன் III காலத்தில் சேகரித்த நெல் வழிபாட்டிற்கும், பழுது பார்ப்பதற்கும் பயனுயிற்று. மற்ற நாயக்கர்கள் விளக்குக்காக நிலதானம், கோயிலுக்கு மிளகு தருவதற்கு நிலக் குத்தகை, அந்தணர்க்கு அமுது அளிக்க நிலதானம், 50 பிராமணர்களுக்கு உணவளிக்க நிலம் அவர்களுக்கு இருக்க மடம்கட்டியது முதலியன. வரிகொடாத நிலத்தார் கோயிலுக்கு நிலத்தைக் கொடுக்கும்படி ஆணையிடப்பட்டார்கள். குணகரன் கோயிலுக்கு நிலதானம்செய்த செய்தி ஒரு செய்யுளால் கூறப்பட்டுள்ளது. மாறவர்மன் சுந்தரபாண்டியன் கல்வெட்டு ஒன்று நிலதானம் கூறுகிறது. சகம் 1679 (1757) கல்வெட்டு ஒன்றில் இராயராவுத்த பிண்டன் என்பவன் வழிபாடு, விழாக்கள், பழுதுபார்த்தல் இவைகளுக்காகப் பூதானம்செய்தான்.

இத்திருக்கோவிலில் விக்கிரம சோழதேவன், கோனேரின்மைகொண்டான், மூன்ருங் குலோத்துங்க சோழன், திரிபுவன சக்கிரவர்த்தி இராஜராஜதேவன், திரிபுவன சக்கிரவர்த்தி விரராஜேந்திர சோழதேவன், மாறவர்மன் திரிபுவன சக்கிரவர்த்தி சுந்தரபாண்டிய தேவன் ஆகிய இவர்கள் காலங்களில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இவ்வூர், ராஜாதிராஜ வளநாட்டு, நாங்கூர் நாட்டு, காவிரிப்பூம் பட்டினத்துத் திருச்சாய்க்காடு எனக் குறிக்கப்பெற்றுள்ளது. இக்கோயில் நிலங்கள் வேறு சிலரால் அநுபவிக்கப்பெற்றிருந்தன. அவைகளைக் கோனேரின்மைகொண்டான் திரும்பப் பெற்று, அவைகளில், ராஜராஜன் திருநந்தவனம் எனத் தன் பெயரால் நந்தவனத்தை ஏற்படுத்தினுன். பிள்ளை அம்பர் உடையார் காலிங்கராயர் உத்தரவின்படி இறைவர்க்குத் திருவமுது உள்ளிட்டவைகளுக்கும், திருக்கோயிலைப் பழுதுபார்ப்பதற்கும், நிலவருவாயில் இவ்வளவு இவ்வளவு நெல், ஒதுக்கப்பட வேண்டுமென்று திட்டம் வகுக்கப்பெற்றது. இது நிகழ்ந்தது மூன்ருங் குலோத்துங்க சோழதேவரின் முப்பத்தைந்தாம் ஆண்டாகும். ராஜாதிராஜ வளநாட்டு, திருவிந்தளூர்நாட்டு, மருதமங்கலத்து மலைமேல் மருந்தான வானவன் விழுப்பரையன் முன்னரே இத்திருக்கோயிலில் ஒன்றரைவிளக்கு (?) எரியும்படி

ஏற்பாடு செய்திருந்தான். திரிபுவன சக்கிரவர்த்தி ராஜராஜ தேவரின் ஐந்தாம் ஆண்டில் இன்னும் அரைவிளக்கு எரிப்ப தற்கு நிலநிவந்தம் அளித்துள்ளான், சோழமன்னரது மந்திரி திருச்சிற்றம்பலவன் ஒரு மடம் ஒன்றைக்கட்டி, அதில் ஐம்பது பிராமணர்கள் உண்பதற்கு நிலம் அளித்திருந்தான் திருச்சாய்க் காட்டூர் சீமைக், காவிரிப்பூம்பட்டின மாகாணத்து காவிரிப் பூம்பட்டினத்தில் பல்லவனேச்சரக் கோயிலுக்குத் திருவிழா விற்கும், பழுதுபார்ப்பதற்கும், நாயராவுத்த முண்டன் முதலா லானவர்களால் நிலம் கொடுக்கப்பட்டுள்ளது. இது சகம் 1679 கலியுகம் 4775 ஆகும்.

See the Annual reports on South Indian Epigraphy for the year 1912, Numbers 261—273 pages 21 and 22.

## 42 திருச் சிக்கல்

வசிட்டர், காமதேனுவின் வெண்ணெயினால் சிவலிங்கத் திருமேனியை எழுந்தருளுவித்துப் பூசித்தார். பூசைமுடிவில் அதை எடுக்க முயன்றபோது, எடுக்கக் கூடாமல் சிக்கிய காரணத்தால் இப்பெயர் பெற்றது.

நாகப்பட்டினத்திற்கு மேற்கே மூன்றுமைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவிரித் தென்கரைத் தலங்களுள் 83ஆவது தலமாகும்.

இறைவரின் திருப்பெயர் வெண்ணெய்ப்பிரான். இறைவி யாரின் திருப்பெயர் வேல்நெடுங்கண்ணி.

"சிக்கலுள் வேலவொண் கண்ணியினாளை யோர் பாகன் வெண்ணெய்ப் பிரான் பாலவண்ணன் கழலேத்த நம் பாவம் பறையுமே" என இவ்வூர்ப்பதிகத்தில் திருஞானசம்பந்தப் பெருந்தகையார் அம்மை, அப்பர் திருப்பெயர்களை எடுத்து ஆண்டிருப்பது பெருமகிழ்ச்சிக்கு உரியதாகும்

தீர்த்தம் க்ஷீரபுஷ்கரிணி.

தலவிருட்சம் மல்லிகை.

திருக்கோயில் கட்டுமலையின்மேல் இருக்கின்றது. இங்கு எழுந்தருளியிருக்கும் முருகப்பெருமானுக்குச் சிங்காரவேலவர் என்று பெயர். இங்குச் சூரசம்ஹார விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகின்றது. இதற்குப் பதிகம் ஒன்றுகும்.

கல்வெட்டு: மொத்தம் எட்டு எடுக்கப்பட்டுள்ளன. கோயில் அஸ்திவாரத்தில் ஸ்கந்தபுராணத்தில் கோயிலைப் பற்றிய மகாத்மியம் கூறப்பட்டுள்ளது. பிறகு இக்கோயிலில் வழிபட்ட ரிஷிகள், திருமரம் இவைகளைப்பற்றி விவரித்தும், அவர்களின் உருவங்களை அடியில் வரைந்தும் இருக்கிறது. சதாசிவராயன் காலத்து (சகம் 1482) கல்வெட்டில் ராமராசையர்மகன் கிருஷ்ணமாராசையன் திருவாரூர்ஞானப்பிரகாசப் பண்டாரத்தை கோயில் மேல்பார்வைக்கு நியமித்தான். அச்சுததேவராயன் காலத்தில் குமாரசாமியின் உற்சவங்களுக்கு நிலதானம் செய்யப்பட்டது. மற்றென்றில் அரங்கப்பராசன் கந்தசாமிப்பேட்டையைக் கோயிலுக்குக் கொடுத்தான்.

இத்திருக்கோயிலில் ஜடாவர்மன், திரிபுவனச்சக்கிரவர்த்தி வீரபாண்டியன் காலத்தில் செதுக்கப்பட்ட கல்வெட்டு ஒன்றும் விஜயநகர பரம்பரையைச் சேர்ந்த மகாமண்டலேசுவரர் சதாசிவமகாராயர் காலத்தில் பொறிக்கப்பெற்றது ஒன்றும், வீரபூபதி அச்சுததேவ மகாராயர் காலத்து ஒன்றும், கிரந்தத்தில் உள்ள கல்வெட்டு ஒன்றும், விஜய வருஷத்தில் ஏற்பட்ட கல்வெட்டு ஒன்றும் ஆக ஏழு கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இவைகளுள், வீரபாண்டியன் கல்வெட்டு, பால்வெண்ணெய் நாயனாருக்கு வழிபாட்டிற்குப் பணம்கொடுத்ததையும்; சதாசிவ மகாராயர் கல்வெட்டு (சகம் 1482 ரௌத்திரி ஆண்டில் ஏற்பட்டது) திருவாரூர் ஞானப்பிரகாச பண்டாரம் கிருஷ்ண மாராசையன் கட்டளைப்படி சிக்கல் வடக்குடி வேடச்சேரி முதலியவைகளுக்கு மேற்பார்வையாளராக நியமிக்கப்பட்டிருந்ததையும், அச்சுததேவ மகாராயர் கல்வெட்டு, பால்வெண்ணெய் நாதர் கோவிலில் உள்ள குமாரசாமிக்கு, விளக்குகளுக்கும் விழாக்களுக்கும் நில நிவந்தம் செய்துகொடுத்ததையும், விஜய வருஷம் கல்வெட்டு, கந்தசாமிப்பேட்டை என்ற ஊரை அரங்கப்பராசர் கொடுத்ததையும் கிரந்தத்திலுள்ள கல்வெட்டு ஸ்கந்தபுராணத்தில் குறிப்பிடப்பெற்றுள்ள சிக்கல் மகாத்மியத்தைப்பற்றியதையும், தமிழிலும் கிரந்தத்திலும் உள்ள

கல்வெட்டு, இத்தலத்தின் திருக்குளம் தலமரம், வழிபட்ட ரிஷிகள் இவர்களைப் பற்றியதையும் குறிப்பிடுகின்றன.

See the Annual reports on South Indian Epigraphy for the year 1911, Numbers 102 to 107.

## 43 திருத் தலைச்சங்காடு

இவ்வூர் சிலப்பதிகாரத்தில் கூறப்பட்டிருப்பதால் மிகப் பழமைவாய்ந்ததாகும். இவ்வூர் தலைசை என மரூஉமொழியாக வழங்கப்பெறும்.

மாயூரம் தரங்கம்பாடி ரயில்பாதையில், ஆக்கூர் ரயில் நிலயத்திற்கு வடகிழக்கே சுமார் மூன்றுமைல் தூரத்திலுள்ளது. காவிரித் தென்கரையில் உள்ள தலங்களுள் நாற்பத்தைந்தாவது ஆகும்.

இறைவரது திருப்பெயர் சங்கருணாதேசுவரர். இறைவியாரது திருப்பெயர் சௌந்தரநாயகி.

தீர்த்தம் காவிரியாறு.

திருமால் சிவபெருமானைப் பூசித்துப் பாஞ்சசந்யம் என்னும் சங்கைப் பெற்ற தலம். இதற்கு ஞானசம்பந்தரால் பாடப்பெற்ற பதிகம் ஒன்று உண்டு.

கல்வெட்டு: இக்கோயிலில் பத்துக் கல்வெட்டுக்கள் படி எடுக்கப்பட்டன. எல்லாம் சோழர்காலக் கல்வெட்டுக்களே. உத்தமச்சோழன் தாயார் செம்பியன்மாதேவியார் இவ்வூர்ப் பெருங்கோயிலுக்கு வெள்ளிப்பாத்திரங்கள் வழங்கியிருக்கிறார்கள். இவ்வூர் திருவேள்விக்குடி மகாதேவர்க்குப் பூதானம் செய்யப்பட்டது. செயங்கொண்டநல்லூர்ச் சபையார் மூன்று சிவாலயங்களுக்கு மூன்றுவேலி விளைநிலங்கள் நிபந்தனைமீது தந்தார்கள். காப்பாளர்களுக்கு வீடுகட்ட நான்குவேலி நிலம் கொடுக்கப்பட்டது. அது விற்கக்கூடாது. வெகுகாலமாகத் தீர்வை செலுத்தாத தேவதான நிலத்தைத் திருநாமத்துக் காணியாக மாற்றப்பட்டது. கோயில் நிர்வாகிகள் நிரந்தர

மில்லாது ஆண்டுத் திட்டத்திற்கு மாற்றப்பட்டனர். பழைய ஆலயங்கள் கெட்டுப்போக அனுபவபாத்தியங்கொண்டு நிலங்கள் திரப்படுத்தப்பட்டன.

## 44 திருத் திலதைப்பதி

இராம இலக்குமணர்கள், தசரத சக்கிரவர்த்திக்கு எள்ளும் புனலும் இறைத்த (திலதர்ப்பணஞ்செய்த) பதியாதலின் இப்பெயர்பெற்றது என்பர்.

பேரளம் ரயில்வே நிலையத்திற்குத் தென்மேற்கே, 3¼ மைல் தூரத்தில் (பூந்தோட்டத்திற்குத் தெற்கே ஒரு கல் தூரத்தில், அரிசிலாற்றின் தென்கரையில் இருக்கின்றது. சிதலைப்பதி என வழங்கும் ஊருக்கு முக்கால் மைல் தூரத்தில் இருக்கின்றது. காவிரித் தென்கரைத் தலங்களுள் 58-ஆவது ஆகும்.

ஊரின் பெயர் திலதைப்பதி என்னும் பெயர் உடையது ஆயினும், இங்குள்ள கோயிலின் பெயர் மதிமுத்தம் என்பதாகும்.

இறைவரின் திருப்பெயர் மதிமுத்தர். முத்தீசர் இத் திருப்பெயர், இவ்வூர்ப்பதிகத்தின் இறுதிப்பாட்டில் "நிலதை மதிமுத்தர்மேல்" என்னும் தேவாரப்பகுதியால் அறியக்கிடக்கின்றது. இறைவியாரின் திருப்பெயர் பொற்கொடிநாயகி பொற்கொடியம்மை.

தலவிருட்சம் மந்தாரம்.

தீர்த்தம் சந்திரதீர்த்தம்.

"புரவியேழும் மணிபூண்டியங்குங் கொடித்தேரினன்
பரவி நின்று வழிபாடு செய்யும் பரமேட்டியூர்"

என்னும் இவ்வூர்த் தேவாரப்பகுதி சூரியன் பூசித்துப் பேறு பெற்றதை உணர்த்துகின்றது. இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கின்றது.

குத்தாலம்



"வண்டினம் துத்தம் நின்றுபண் செயும்
சூழ் பொழில் துருத்தி"

குத்தாலம்



"வெயிற்கு எதிர்ந்து இடங்கொடாது அகம்குளிர்ந்த பைம்பொழில்
துயிற்கு எதிர்ந்த புள்ளினங்கள் மல்கு தண் துருத்தி"

இத்தலத்திற்குப் புராணம் இருக்கிறது. அது நாகலிங்கம் பிள்ளையால் இயற்றப்பெற்றது. அச்சில் வெளிவந்துள்ளது.

## 45 திருத் துருத்தி

துருத்தி என்பதற்கு ஆற்றிடைக்குறை என்பது பொருள். இவ்வூர். கி. பி. ஏழாம் நூற்றாண்டில் காவிரியின் நடுவுள் இருந்தது. இச்செய்தி "பொன்னியின் நடுவுதன்னுள் பூம் புனல் பொலிந்து தோன்றும் துன்னிய துருத்தியானை" என்னும் இவ்வூர்த் தேவாரப் பகுதியால் அறியக் கிடக்கின்றது.

குத்தாலம் என்னும் ஒருவகை ஆத்தி மரத்தைத் தல விருட்சமாகக் கொண்டுள்ளமையால் இது மரத்தின் பெயரால் குத்தாலம் என்று வழங்கப்பெறுகின்றது. இதைக் குற்றாலம் என்றும் வழங்குவர். குத்தாலம் என்பது மருவிக் குற்றாலம் என்று வழங்கப்பெறுவதாகும். திருநெல்வேலி ஜில்லா குற்றாலம்வேறு. இது வேறு ஆகும்.

இது மாயூரம் — கும்பகோணம் ரயில்பாதையில், குற்றாலம் ரயில் நிலையத்திற்கு அரைமைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவரிக்குத் தென்கரையில் உள்ள 37-ஆவது பதியாகும்.

இறைவரின் திருப்பெயர் சொன்னவாறு அறிவார்; வீங்குநீர் துருத்தி உடையார்; கற்றளிமகாதேவர் என்பன. வடமொழியில் உத்தர வேதீசுவரர் என்பர். இறைவியாரின் திருப்பெயர் அரும்பன்னவனமுலை அம்மை. வடமொழியாளர் மிருது முகிழாம்பிகை என்பர். திருவேள்விக்குடி பதிகத்தில் சம்பந்தர் இவ்வூர் அம்மன் பெயரை "அரும்பனவனமுலை யரிவையோடொருபக லமர்ந்தபிரான்" என்று அருளியிருக்கின்றனர்.

தீர்த்தம் காவிரி, வடகுளம் என்பன.

இவற்றுள் வடகுளம் என்பது. கோயிலினுள் வடபால் இருக்கின்றது,

சுந்தரமூர்த்தி சுவாமிகள் இத்தலத்திற்கு எழுந்தருளி தம்மேல் உற்ற பிணி வருத்தத்தைத் தீர்த்தருளுமாறு சிவ பெருமானை வேண்டினார். "வடகுளத்துக்குளி" என்று சிவ பெருமான் மொழிந்தருள, சுவாமிகளும் வேதமெல்லாம் தொக்க வடிவாய் இருந்த துருத்தியாரைத் தொழுது, அக்குளத்தில் மூழ்கினார். அக்கணமே புதிய பிணிநீங்கி, மணியொளிசேர் திருமேனி ஆயினார். இச்செய்தியைச் சேக்கிழார் குறிப்பிட் டுள்ளார். சுவாமிகளும் இவ்வூர்ப்பதிகத்தில் "என் உடம் படும் பிணியிடர் கெடுத்தானை" எனக் குறிப்பிட்டுள்ளார்கள்.

அக்கி வருணன் முதலானோர் பூசித்துப் பேறு பெற்றனர். தலத்தைப்பற்றிய நூல் திரிசிரபுரம் மகாவித்துவான். மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் இத்தலத்திற்குப் புராணம் எழுதி யுள்ளார்கள். இது அச்சில் வெளிவந்துள்ளது. மூவர்களும் இதைப் பாடியுள்ளனர். மூன்று பதிகங்கள் இருக்கின்றன.

இத்தலம் தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமானது. இவ் வூரில் விக்கிரமசோழீச்சுரம், ஓங்காரேச்சரம், மன்மதேச்சரம் என்னும் கோயில்கள் இருக்கின்றன. அவைகள் பாடல் பெறாதவைகள். இத்தலத்தைப்பற்றி ஐயடிகள் காடவர்கோன் நாயனார் அருளிய வெண்பா பின்வருமாறு:-

வஞ்சியன நுண்ணிடையார் வாள்தடங்கண் நீர்சோரக்
குஞ்சி குறங்கின்மேற் கொண்டிருந்து — கஞ்சி
அருத்தொருத்தி கொண்டுவா என்னாமுன் நெஞ்சே
திருத்துருத்தி யான்பாதஞ் சேர்.

கல்வெட்டு: சோழர் விஜயநகரத்தார் கல்வெட்டுக்கள் இருக்கின்றன. தங்களின் நோக்கங்கள் :- இறையிலியாக நிலங் கள் விட்டது, விலைக்கு வாங்கப்பட்டது, வரிவசூல் உரிமை கோயிலுக்குக் கொடுக்கப்பட்டது முதலியவை. "வீங்குநீர்த் திருத்துருத்தி" என்று இத்தலம் கூறப்பட்டுள்ளது. கல்யாண லயம் என்றும் சொல்லப்படுகிறது.

ராஜேந்திர சோழன் ஐந்தாம் ஆண்டில் திருவழுந்தூர் நாட்டு வீங்குநீர்த்திருத்துருத்தி சொன்னவாறறிவார் கோயிலில் அரசனுடைய படைகளுக்கு வெற்றிதருவதற்காக, சைவ

அன்பர்களுக்கு உணவளிக்கப் பணம் தரப்பட்டது. விக்கிரம தேவன் 6-ஆம் ஆண்டில் (19—8—1123) ஒரு கல்வெட்டு எழுதிப்பட்டது. மகாராசா வேண்டியபடி கிருஷ்ணதேவராயர் சொன்னவாறறிவார் கோயிலுக்கு 90 பொன் வரக்கூடிய வரிகளைத்தந்தார் அது மாமாங்கத்தின்போது அளிக்கப்பட்டது. இராசேந்திர சோழன் 15-ஆம் ஆண்டில் ஒரு மடம் கட்ட நிலம்விற்கப்பட்டது.

## 46 திருத் தெங்கூர்

ஊரின் பெயர் தெங்கூர் என்றே சம்பந்தர் தேவாரத்தில் காணப்படுகிறது. சுந்தரர் ஊர்த்தொகையில் தேங்கூர் என்று குறிப்பிட்டுள்ளார். (நாங்கூருறைவாய் தேங்கூர் நகராய் நல்லூர் நம்பானே'' என்பன அவர் வாக்கு.

இறைவரின் திருப்பெயர் வெள்ளிமலை நாதர். இவ்வூர்த் திருப்பதிகத்தில் ஒவ்வொரு திருப்பாடலிலும் "வெள்ளியங்குன் றமர்ந்தாரே'' என்று இறைவர் திருப்பெயரைக் குறிப்பிட் டுள்ளார் சம்பந்தர். இறைவியாரின் திருப்பெயர் பெரிய நாயகி.

இது காவிரித் தென்கரைத் தலங்களுள் 116-ஆவது ஆகும். இது திருநெல்லிக்காவிற்குத் தென்மேற்கில் சுமார் இரண்டு மைல் தூரத்தில் இருக்கின்றது.

திருமகளும். நவக்கோள்களும் பூசித்துப் பேறு எய்தினர். திருமகள் வழிபட்ட இலிங்கம், அத்திருமகள் சந்நிதிக்கு எதிரில் இருக்கின்றது. இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று உள்ளது.

நவக்கிரகங்கள் பூசித்த லிங்கங்கள் உண்டு. அம்மன் கோயில் தனியாயுளது. அக்கோயில் தெற்குப்பார்த்தது. சுவாமி கோயிலுக்குத் தென்கிழக்குத் திக்கில் உள்ளது. அம்மன் உருவம் சிறியது. நவக்கிரகங்கள் பூசித்தன என்பதற்குப் பிரகாரத்தில் 9 லிங்கங்கள் இருக்கின்றன.

கல்வெட்டு: இவ்வூரில் ஐந்து கல்வெட்டுக்கள் படியெடுக்கப்பட்டன. அவற்றில் சோழர்கட்கு 4ம், பாண்டியருக்கு 1ம் ஆகும். ராஜராஜன் III குலோத்துங்கன் III ராஜேந்திரன் III ஆகவே எல்லாம் பிற்காலச் சோழருடையன. 12—13 நூற்றாண்டு.

விளக்கிற்காக 4000 காசு தானம். கோயில் விளக்கிற்கு எண்ணெய் தருவோர்க்குப் பூதானம் செய்யப்பட்டது. பாண்டியர் கல்வெட்டு மாறவர்மன் குலசேகரனுடையது. (1268-1308) நரசிங்க தேவர் மகன் மாவை சக்கிரவர்த்தியின் பொருட்டு மாளவ சந்தி நடத்த ஏற்பாடு செய்யப்பட்டது. கல்வெட்டின்படி சுவாமி பெயர் திருவெள்ளியங்குன்றமுடையார் என்பதே.

## 47 திருத் தெளிச்சேரி

இது கோயில்பத்து என்று வழங்கப்பெறுகின்றது. பொறையாறு ரயில்வே நிலயத்திலிருந்து வடமேற்கே அரைமைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவிரிக்குத் தென்கரையில் உள்ள ஐம்பதாவது தலமாகும்.

இறைவரின் திருப்பெயர் பார்வதீசுவரர். இறைவியாரின் திருப்பெயர் சத்தியம்மை.

பங்குனி மாதத்தில் 13உ முதல் (7 நாள்) பத்து நாட்களுக்குச் சூரியபூசை நிகழ்வது. ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று உள்ளது

இவ்வூருக்கு அணிமையில் போதிமங்கை என்னும் ஊர் இருக்கின்றது. அவ்வூர், பௌத்தர்கள் வசிக்கப்பெற்றது. அதன்வழியாக ஞானசம்பந்தரது அடியார் திருக்கூட்டம் பரசமய கோளரிவந்தார் என்று முத்துச் சின்னங்களை ஊதிச் சென்றது. அதைப்பொறுத பௌத்தர்கள் தடுத்தனர். அப்பொழுது தேவாரத் திருமுறையெழுதும் சம்பந்த சரணாலயர் "புத்தர் சமண்கழுக்கையர்" என்று தொடங்கும் பஞ்சாட்சரப் பதிகத் திருப்பாட்டை ஓத, பௌத்தர்கள் தலைவனை

புத்தநந்தி தலையில் இடிவிழுந்தது. உடனே அவன் இறந்து போனான். மீளவும் பௌத்தர்கள் சாரிபுத்தனைத் தலைவனாகக் கொண்டு வாதுவந்தனர். சம்பந்தசரணாலயர் ஞானசம்பந்தர் முன்னிலையில் அவர்களை வாதில்வென்று சைவர் ஆக்கினார். கோயில் மேற்குச்சந்நிதி. கோயில்முழுதும் செட்டிமார்களால் புதுப்பிக்கப்பட்டது.

## 48 திருத் தேவூர்

தேவர்கள் பூசித்துப் பேறுபெற்ற தலமாதலால் இப்பெயர் பெற்றது.

இது கீழ்வேளூர் ரயில் நிலையத்திற்குத் தெற்கே இரண்டரைமைல் தூரத்தில் இருக்கின்றது. காவிரித் தென்கரையில் உள்ள எண்பத்தைந்தாவது தலமாகும்.

இறைவரது திருப்பெயர் தேவகுரு. இறைவியாரது திருப்பெயர் மதுரபாடணியம்மை.

தீர்த்தம் தேவதீர்த்தம்.

தலமரம் வாழை.

இந்திரன், குபேரன், வியாழன் முதலியோர் பூசித்த தலம். கௌதம முனிவரும் பூசித்தார். மாடக்கோயில் அமைப்புடையது. இதற்கு ஞானசம்பந்தர் பதிகங்கள் இரண்டு இருக்கின்றன.

கல்வெட்டு : இரண்டு கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன. ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் காலத்து (27—10—1287) கோயிலுக்கு பூதானம் செய்யப்பட்டது. அருமொழி சோழ வளநாட்டுத் தேவூர்நாட்டு தேவூர் ஆதித்தீசுவரமுடையார் என்று சொல்லியிருக்கிறது. விஜயநகர அரசன் தேவராயன் II 1347 சகம் (4425) தேதியிட்ட கல்வெட்டு அரைகுறையாக இருக்கிறது.

# 49 திரு நணா

வழிபடுவோருக்கு யாதொருதீங்கும் நண்ணுதை பதியாதலின் நணா என்னும் பெயர்பெற்றது. திரு அடைமொழி. இது பவானி என்றும், காவிரியும் பவானியும் கூடுதலால் பவானிகூடல் என்றும் கூறப்படும்.

கொங்குநாட்டுத் தேவாரம் பெற்ற பதிகளில் ஒன்று. இது ஈரோடு ரயில் நிலையத்திற்கு வடமேற்கே ஒன்பதுமைல் தூரத்தில் இருக்கின்றது.

இறைவரது திருப்பெயர் சங்கமுகநாதர். இறைவியாரது திருப்பெயர் வேதநாயகி.

குபேரன், விசுவாமித்திர முனிவர், பராசர முனிவர் வழிபட்டுப் பேறுபெற்றார்கள். இது பவானிமுக்கூடல் என்னும் தீர்த்தச்சிறப்புடையது. பவானி, காவிரி, அமுதநதி இவை ஆலயத்திற்குக் கிழக்கே கூடுகின்றன. இவ்வாலயத்தில் தனியே ஒரு திருமால் கோயில் இருக்கின்றது. அவர் வழிபட்ட குறிப்பு "பூமியளந்தானும் போற்றமன்னி" என்னும் இக்கோயிலுக்குரிய ஞானசம்பந்தர் பதிகம் ஒன்பதாம் பாடல் பகுதியால் புலப்படுகின்றது. இது ஞானசம்பந்தரது பதிகம் ஒன்றைப் பெற்றுள்ளது.

கல்வெட்டு: திருக்கோயிலுள் பொன்னுரமளியம்மன் கோயிலை பார்த்திப ஆண்டில் இம்மடி கெட்டி முதலியார் கட்டினார் என்று ஒரு கல்வெட்டு கூறுகின்றது. 1735-65 ஆண்ட கிருஷ்ணராஜ உடையார் மந்திரி தளவாய் தேவராயன் ஒரு மண்டபம் கட்டினான். மகாமண்டபத்துக் கல்வெட்டு ஒன்றில் இம்மடி கெட்டி முதலியார் கோயிலில் சில திருப்பணிகள் செய்தார் என்று கூறப்பட்டிருக்கிறது. உமாமகேசுவரர் கோயில்முன் உள்ள ஒரு கல்வெட்டின்படி ஒரு நாராயண கவுண்டன் அர்த்தமண்டபத்தையும் விமானத்தையும் விஜய ஆண்டில் கட்டினான். பள்ளியறையில் ஒரு தந்தப்பல்லக்கு உள்ளது. கலெக்டர் காரோ என்ற ஆங்கிலேயன் அதனைக் கோயிலுக்கு உதவினான்

# 50 திரு நல்லூர்

கும்பகோணம்-தஞ்சை ரயில்பாதையில், சுந்தரப்பெருமாள் கோயில்ரயில் நிலையத்திற்குத்தெற்கே இரண்டுமைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவிரிக்குத் தென்கரையிலுள்ள இருபதாவது தலமாகும்.

இறைவர் திருப்பெயர் கல்யாணசுந்தரேசுவரர். இறைவி திருப்பெயர் கல்யாணசுந்தரி.

தீர்த்தம் சப்தசாகரதீர்த்தம். இது கோயிலுக்கு எதிரில் இருக்கின்றது.

திருச்சத்தி முற்றத்தில் எழுந்தருளியிருக்கும் சிவக்கொழுந்தை அப்பர்பெருமான் வழிபட்டு, அவரது திருவடியைத் தன் தலைமேல் வைத்தருள வேண்டுமென்று வேண்ட, அவர் "நல்லூருக்கு வா ஆங்கே நின் நினைப்பதனை முடிக்கின்றோம்" என்று கூறியருள அவ்வாறே அப்பர்பெருமான் அங்குவர, நல்லூர்ப்பெருமான் தன் திருவடியை அப்பர் தலைமேல்வைத்துத் திருவடி தீட்சைசெய்த பதியாகும் இது.

இச்செய்தி, "நல்லருளாற் றிருவடியென் றலைமேல் வைத்தார் நல்லூரெம் பெருமானார் நல்லவாறே" (திருத்தாண்டகம் திருப்பாடல் 4) என்னும் தேவாரப் பகுதியால் அறியலாகும்.

சிவனடியார்களுக்குக் கந்தை, கீளுடை கோவணம் இவைகளைக் கருத்தறிந்து உதவிவந்த அமர்நீதி நாயனார்க்கும் அவரது குடும்பத்தார்க்கும் முத்தியளித்த தலம். இச்செய்தியைத் திருநாவுக்கரசுநாயனார், இவ்வூர்த் திருவிருத்தம் ஏழாம் திருப்பாட்டில்,

"நாட்கொண்ட தாமரைப் பூந்தடஞ் சூழ்ந்தநல் லூரகத்தே
கீட்கொண்ட கோவணங் காவென்று சொல்லிக் கிறிபடந்தான்
வாட்கொண்ட நோக்கி மனைவி யொடுமங்கோர் வாணிகனை
யாட்கொண்ட வார்த்தை யுரைக்குமன் றோவிவ் வகலிடமே"

எனச் சிறப்பித்துப் பாடியுள்ளனர்.

அகத்திய முனிவருக்குக் கல்யாண கோலத்தை இப்பதியில் சிவபெருமான் காட்டியருளினர். இவ்வூர்க்கு ஞானசம்பந்தர் பதிகங்கள் மூன்று. திருநாவுக்கரசுநாயனர் பதிகங்கள் இரண்டு ஆக ஐந்து பதிகங்கள் இருக்கின்றன.

இக்கோயில் மாடக்கோயில் அமைப்பு வாய்ந்தது. இத் தலத்தில் வைகாசி மாதத்தில் ஏழூர் விழா நடந்துவருகின்றது. இலிங்கத் திருமேனியில் துவாரங்கள் காணப்படுகின்றன.

அமர்நீதி நாயனர், அவருடைய மனைவியார் இவர்களின் பிரதிமங்கள் கற்சிலையிலும் செப்புச்சிலையிலும் இருக்கின்றன.

கல்வெட்டு: இங்கே இருபத்துமூன்று கல்வெட்டுக்கள் படியெடுக்கப்பட்டுள்ளன. அவற்றில் இருபத்திரண்டு சோழர் களது. ஒன்று முஹாய்சரர் கல்வெட்டு இளங்கோயில் மகா தேவருக்கு விளக்குத் தானம் செய்யப்பட்டது. இளங்கோயில் என்றால் பாலாலயம் ஆகும். உத்தமசோழன் காலத்தில் மானக் குற்றை வீரநாராயணனுர் ஸ்ரீ காரியமாக நியமிக்கப்பட்டார். இராசராசன் I காலத்தில் காலத்தில் நாராயணன் ஏகவீரன் ஒரு மண்டபம் கட்டினன். நல்லூருக்கு அப்போது பஞ்சவன் மாதேவி சதுர்வேதி மங்கலம் என்ற பேர் இருந்தது. வீர ராம நாதன் காலத்தில் அகோரவீரன் கோயிலுக்கு ஒரு பூதானம் செய்தான். விக்கிரம சிங்கதேவன் கோவிலுக்கு ஒரு நிலம் விற்றான். வாணகோவரையன் ஒரு விளக்குத் தானம்செய்தான்.

ராஜராஜன் III நாளில் கல்வெட்டில் கோவிலுக்குச் சேர்ந்த நிலங்களின் வரிசை கூறப்பட்டுள்ளது. அக்காலக் கல்வெட்டு ஒன்றில் தத்தனுடையார் ஈசானதேவர் என்ற ஆசிரியருக்கு அவர் மாணவி தன் கணவர் சொல்படி ஒரு மடம் மானம் செய்தது குறிக்கப்பட்டுள்ளது. இரண்டு விளக்கு களுக்காக 200 காசு தரப்பட்டது. அகம்படி விநாயக பிள்ளை யாருக்கு வீட்டு நிலமும் தோட்டமும் கொடுக்கப்பட்டன. அகம்படியார் கட்டின வீடும் 8 தென்னைமரங்களும் கோயிலுக்கு கொடுக்கப்பட்டன.

# 51 திரு நள்ளாறு

இது நளன் பூசித்த காரணத்தால் இப்பெயர்பெற்றது என்பர்.

பேரளம்—காரைக்கால் ரயில் பாதையில் திருநள்ளாறு (திருணலார்) ரயில் நிலயத்திற்கு அருகில் இருக்கின்றது. இது காவிரிக்குத் தென்கரையில் உள்ள ஐம்பத்திரண்டாவது திருத் தலமாகும்.

இறைவரின் திருப்பெயர் தர்ப்பாரண்யேசுரர். இறைவியாரின் திருப்பெயர் போகாமார்த்த பூண்முலையாள். இத் திருப்பெயரை இவ்வூர்ப் பதிகத்தில் ஞானசம்பந்தர் எடுத்து ஆண்டுள்ளார்.

தீர்த்தம் நளதீர்த்தம்; சிவகங்கை முதலியன.

தலவிருக்ஷம் தர்ப்பை.

நளன் பூசித்துக் கலி நீங்கப்பெற்றான். இத்தலத்தே திருமால், பிரமதேவர், திக்குப்பாலகர், வசுக்கள், அகத்தியர், அர்ச்சுனன் போசன் முதலியோரும் வழிபட்டனர். முசுகுந்தச் சோழர் எழுந்தருளுவித்த விடங்கர் தலங்கள் ஏழனுள் இது ஒன்று. திருஞானசம்பந்தர், மதுரையில் சமணர்களோடு அனல்வாதம் நடத்தியபோது, அனலில் இடுவதற்குத் தாம் பாடிய பதிகங்களில் கயிறு சார்த்தியபோது, 'போகமார்த்த பூண்முலையாள்' என்று தொடங்கும் இப்பதிக்குரிய பதிகம் கிடைத்தது. அதை அனலில் இட அது வேவாது இருந்து சைவ சமயத்தின் பெருமையை நிலைநாட்டியது. இதைப் பச்சைத் திருப்பதிகம் என்றும் கூறுவர். இத்தலத்திற்கு ஞானசம்பந்தர் பதிகங்கள் நான்கு, அப்பர் பதிகம் இரண்டு, சுந்தரர் பதிகம் ஒன்று ஆக ஏழு பதிகங்கள் இருக்கின்றன.

நளன் பூசித்து வழிபட்ட செய்தி,

"வளங்கெழுவு தீபமொடு தூபமலர் தூவி
நளன்கெழுவி நாளும்வழி பாடுசெய் நள்ளாறே"

என்னும் இவ்வூர் ஞானசம்பந்தர் தேவாரப் பகுதியால் உறுதி எய்துகின்றது. இத்தலத்தில் சனிபகவான் சந்நிதி மிகவும்

சிறப்புப்பெற்றது. சனிப்பெயர்ச்சி விழாக்களில் பல்லாயிர மக்கள் நளதீர்த்தத்தில் எண்ணெய்முழுக்காடி எள்மூட்டை கட்டி எண்ணெய்விளக்கேற்றி சனிபகவானை வழிபடுவர். வெள்ளிக் காக்கை வாகன விழா நடைபெறும். இவ்வூர்க்குக் கிழக்கே ஒருமைல் தூரத்தில் தக்களூர் என்னும் வைப்புத்தலம் இருக்கிறது. இதற்குத் தலபுராணம் ஒன்று இருக்கிறது. இது சுப்பிரமணியக் கவிராயரால் எழுதப்பெற்றதாகும். அச்சில் வெளிவந்துள்ளது. இத்திருக்கோயில் தருமபுர ஆதீனத்திற்கு உட்பட்டது.

கல்வெட்டு : இக்கோயிலில் இரண்டு கல்வெட்டுக்கள் படியெடுக்கப்பட்டன. *(394, 395/02)* 12-ம் நூற்றாண்டு பிற்பகுதி ராஜாதிராசன் 13 (கி. பி. *15—8—1173*) ல் திருக்கோயில் 30 வட்டத்துக் காணியுடைய சிவப்பிராமணர்கள் 17 பேர் உடைய நம்பியான தொண்டைமானிடம் உபயம்கொண்டு பணிசெய்ய நம்பிக்கொண்டார்கள். (முழுதுமில்லை) இதில் சிவப்பிராமணர்களின் பெயர்கள் உண்மைசொன்னான். நாற்பத்தெண்ணாயிரவர் சான்றருளிச் செய்தவற்றுள் கற்றளிப்பிள்ளை முதலிய பெயர்களின் அமைப்பை அறிக. குலோத்துங்கன் III 17 *(2—1—1195)* கல்வெட்டில் சந்தியா விளக்கிற்கு நெய் அளக்க ஆடு பத்து விடப்பட்டது. இவ்விரண்டு கல்வெட்டுக்களின்படி நாடு உய்யக்கொண்டார் வளநாட்டு முழையூர் நாடு என்றும் ஊர் நள்ளாறு என்றும் இறைவன் நள்ளாறுடையார் என்றும் அறியக்கிடக்கிறது.

இராசாதிராசர் கல்வெட்டு "கடல்சூழ்ந்த பார்மாதரும் கலைமாதரும் அடல்சூழ்ந்த போர்மாதரும் சீர்மாதரும் அமர்ந்து வாழ" என்ற தொடக்கம் கொண்டது.

## 52 திரு நறையூர்ச்சித்தீச்சரம்

சித்தர்களால் பூசிக்கப்பெற்ற கோயில் என்று பொருள்படும். ஊரின்பெயர் திருநறையூர். கோயிலின்பெயர் சித்தீச்சரம்.

இது கும்பகோணத்திற்குத் தென்கிழக்கே ஐந்தரைமைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவிரித் தென்கரையில் உள்ள அறுபத்தைந்தாவது தலமாகும்.

இறைவர் பெயர் சித்தநாதர். இறைவிபெயர் அழகம்மை.

தீர்த்தம் பிரமதீர்த்தம். இது கோயிலுக்கு வடபால் இருக்கின்றது.

சித்தர்கள் பூசித்துப் பேறுபெற்றனர். இதற்குத் ஞான சம்பந்தர் தேவாரம் மூன்று, சுந்தரர் தேவாரம் ஒன்று ஆக நான்கு பதிகங்கள் இருக்கின்றன.

கல்வெட்டு : 25 கல்வெட்டுக்கள் படி எடுக்கப்பட்டுள்ளன. எல்லாம் சோழர்களுடையவைகளே. திருநறையூர்—நறையூர் நாட்டுத் தலைநகர். அதில் இறைவன் பெயர் சித்தேசுரம் உடைய மகாதேவர், ஊருக்கு மஞ்சவன்மாதேவி சதுர்வேதி மங்கலம் என்ற பெயரும் இருந்தது. உடைய பிராட்டியார் செம்பியன் மாதேவியார் ஆன பிராந்தகன் மகாதொழகரன் கோயிலுக்கு வெள்ளி பாத்திரங்கள் பொன்சவுரி தந்துதவினர். உத்தம சோழபுறந் தந்தவரும் கண்டராதித்தர் தேவியுமான செம்பியன்மாதேவியார் ஏனைய ஆலயங்களுக்குத் தானங்கள் செய்ததுபோல இக்கோயிலுக்கும் நிரம்பச் செய்திருக்கிறுர்கள்.

இக்கோயில் தானங்களில் விளக்குதானம் வழிபாட்டிற்கு நிலதானம் கங்காள தேவர்க்கு 30 காசு தானம், ஆடு தானம் மாகேசுரபூசைக்கு நிலதானம், பிடாரி கோயிலுக்கு நிலதானம், முதலியவை காணலாம், அத்தானங்களை தொண்டைநாடு போன்ற பிறநாட்டாரும் செய்திருக்கிறுர்கள். கங்காளதேவர் வழிபாட்டிற்கு 60 கலம் நெல் திட்டம் இடப்பட்டது.

12-ம் நூற்றுண்டுத் தானங்கள் ஆண்டு, மாதம் தேதி முதலிய விவரங்களோடு காணப்படுகின்றன. உதாரணம் *10—9—1183; 6—3—1169; 28—2—1180* போன்றவை. அக்கால மக்களுடைய சரிதஞானம் மிக்கிருந்தது எனலாம்.

## 53 திரு நனிபள்ளி

இது திருஞானசம்பந்த சுவாமிகளுடைய அருமைத் தாயாரின் பிறப்பகம். இது இக்காலம் புஞ்சை என்று வழங்கப்பெறுகின்றது.

இது மாயூரம்—தரங்கம்பாடி ரயில்பாதையில், செம்பொன்னார்கோயில் (திருச்செம்பொன்பள்ளி) ரயில் நிலையத்திற்கு வடக்கே சுமார் இரண்டு மைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவிரிக்குத் தென்கரையில் உள்ள 43-ஆவது தலமாகும்.

இறைவரின் திருப்பெயர் நற்றுணையப்பர். இறைவியாரின் திருப்பெயர் மலையான்மடந்தை.

இத்தலம் முன் பாலைநிலமாய் இருந்தது. ஞானசம்பந்தப் பெருந்தகையார் இதை நெய்தல்நிலமாகுமாறு பாடினார். பின்னர் இதையே கானகமும் வயலுமாக ஆக்கினர். இச்செய்தி,

> "நாதன் நனிபள்ளி சூழ்நகர் கானக மாக்கியஃதே
> போதின் மலிவயல் ஆக்கிய கோன்"

என்னும் பதினொராந் திருமுறையிலுள்ள ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதியில் (செய்யுள் 17) கூறப்பெற்றுள்ளது.

ஞானசம்பந்தர் பாலையை நெய்தலாகப்பாடியதை "பாலை நெய்தல் பாடியதும்" என்னும் திருக்களிற்றுப்படியார் பாடலாலும் அறியலாம்.

இப்பதிக்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று, அப்பர் பதிகம் ஒன்று, சுந்தரர் பதிகம் ஒன்று ஆக மூன்று பதிகங்கள் இருக்கின்றன.

இக்கோயிலுக்குத் திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்று, திருநாவுக்கரசு நாயனார் பதிகம் ஒன்று, சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம் ஒன்று, ஆக மூன்று பதிகங்கள் இருக்கின்றன. திருநாவுக்கரசு நாயனார் இக்கோயில் பதிகம் ஐந்தாம் திருப்பாட்டில் சமணர்கள், தமக்கு நஞ்சு கலந்த சோற்றைக் கொடுத்ததை,

> "வஞ்சனைப்பாற் சோறாக்கி வழக்கிலாவமணர் தந்த
> நஞ்சமுதாக்கு வித்தார் நனிபள்ளியடிகளாரே"

எனக் குறித்துள்ளார்கள்.

கல்வெட்டு: 18 கல்வெட்டுக்கள் படி எடுக்கப்பட்டன. விஜயநகர அரசரைத்தவிர மற்றவை 17-ஆம் சோழர்களுடையனவே, இராசராசன் முதல் குலோத்துங்கன் வரலாறு

இருக்கின்றன. விஜய நகரத்து கிருஷ்ணதேவராயன் (1439 சகம்) உத்தரவாடும் அவன் மெய்க்கீர்த்திகளைக் கூறி சில கிராம கோயில்களின் வரி தள்ளுபடி செய்யப்பட்டது. இக் கோயில் உள்ள கிராமம் கிடாரம் கொண்டான் என்ற பெயரில் ஏற்பட்டதால் I ராஜேந்திரனின் வீரத்தைக் குறிக்கும். ஆகவே சோழர் பெருமை இங்கு நன்கு விளங்குகிறது. இவ்வூர் ஜயங்கொண்ட வளநாட்டு ஆக்கூர் நாட்டுப் பிரம தேசம் ஆகிய திருநனிபள்ளி ஆகும். தலைச்சங்காட்டு மூன்று பெருமாள் கோயில்களுக்கு முன் சேர்ந்த 10 வேலி நிலமும் அர்ச்சனபோகமாகத் திருஞானசம்பந்தநல்லூர் என்ற பெயரில் உடைய பிள்ளையாருக்குத் தரப்பட்டது. (குலோத்துங்கன் காலத்தில்) விக்கிரமசோழன் காலத்தில் மும்முடிச்சோழன் காலத்தில் மும்முடிச்சோழன் பேரம்பலத்தில் தலைச்சங்காட்டு மூலபுருஷர் கூடிட இளவரசி சொற்படி வெற்றிலை முளைக்கவும் இன்றி ஆனை வைக்கவும் இராசராச நல்லூரில் பூதானம் செய்யப்பட்டது. ராஜேந்திரன் காலத்தில் ரிஷபவாகன தேவர்க்குத் திருவிழா நடத்துவதற்காக இறையிலிசெய்ய ஒப்பந் தம் செய்யப்பட்டது.

இவைகளைப்போல ஆடவல்லான் முதலிய மூர்த்திகளுக்கும் தானங்கள் செய்யப்பட்டன. வைகாசியில் பிராமண போஜனத் திற்குத் தானங்கள் செய்து நிலந்தகராறில் தீப்புகுந்த நான்கு குடிகள்போல உருவங்கள் செய்துவைக்க 200 காசு கொடுக்கப் பட்டது. கொல்லர் முதலிய அறு நாமாதகார்களுக்கு சில உரிமைகள் தரப்பட்டன. திருவம்பலமுடையார் சேவைக்காக 80 காசு தரப்பட்டது. திருவாளங்குளமுடையருக்கு அவிர் பலிக்காக 2½ வேலி தரப்பட்டது. பொற்பிரவாவி தீர்த்தத்து நீர் நற்றுணையாண்டார் நந்தவனத்திற்கன்றி வேறு நீர்ப் பாய்ச்சலுக்கு உதவக்கூடாது.

## 54 திரு நாகேச்சுரம்

ஐந்தலை அரவால் பூசிக்கப்பெற்ற கோயிலை உடையது ஆதலின் இப்பெயர்பெற்றது. இச்செய்தி, இக்கோயிலுக்குரிய நாவுக்கரசரது திருக்குறுந்தொகையிலுள்ள (திருப்பாட்டு 4)

" ஐந்தலை யரவின் பணிகொண்டருள்
மைந்தர் போன்மணி நாகேச் சுவரரே "

தேவாரப் பகுதியால் அறியலாகும்.

மாயூரம்—கும்பகோணம் ரயில் பாதையில், திருநாகேசுவரம் ரயில் நிலையத்திலிருந்து தெற்கே சுமார் ஒன்றரைமைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவிரிக்குத் தென்கரையிலுள்ள இருபத்தொன்பதாவது தலமாகும்.

இறைவர் திருப்பெயர் சண்பகாரணியர். இறைவி திருப்பெயர் குன்றமுலைநாயகி.

தீர்த்தம் சூர்யபுஷ்கரிணி.

ஐந்தலை நாகமன்றி, சந்திர சூரியர்களால் பூசிக்கப்பெற்றது. தெய்வப் பாக்கிழாராகிய சேக்கிழார் பெருமானுக்கு மிக்க விருப்பமுள்ள தலம். சேக்கிழார் தமது ஊராகிய குன்றத்தூரில் ஒருகோயில் எடுப்பித்து அதற்குத் திருநாகேச்சுரம் என்று பெயர் வைத்துள்ளமை இதை நன்கு புலப்படுத்தும். திருஞானசம்பந்தர் பதிகம் இரண்டு, திருநாவுக்கரசுநாயனரது பதிகம் மூன்று, சுந்தரமூர்த்தி நாயனரது பதிகம் ஒன்று ஆக ஆறு பதிகங்களைப்பெற்ற பெருமையுடையது. நாளும் வணங்குவார் பிணிதீர்க்கும் பெற்றியுடையது.

" நாளு நாதனமர் கின்ற நாகேச்சுர நண்ணுவார்
கோளு நாளுந் தீயவேனு நன்காங் குறிக்கொண்மினே "

என்னும், இக்கோயில் சம்பந்தர் தேவாரப்பகுதி சிந்திக்கற்பாலது.

கல்வெட்டு : 16 கல்வெட்டுக்கள் படி எடுக்கப்பட்டன. கண்டராதித்தியர், இராசராசன், இராசேந்திரன் காலத்தவை ஆதலின் பழைய கல்வெட்டுக்களேயாகும். 10, 11 நூற்றுண்டில் ஊர் உய்யக்கொண்டான் வளநாடு திரைமூர்நாடு திருவிண்ணகர் திருநாகேச்சுரம் என்று கண்டிருக்கிறது. அரசருடைய சேனையில் இளங்குஞ்சரமல்லரில் ஒருவனுன அடிகள் அச்சான்தந்த நிலத்தின் வருமானத்திலிருந்து இறைவனுக்கு மணியும் முத்தும் கொண்ட ஒரு திருவாபரணம் செய்யப்பட்டது.

தன்மகளின் நலத்திற்காகத் திரன் சத்திவிடங்கி என்ற அரண்மனைப் பெண்டாட்டி ஒரு விளக்கிற்காக 48 ஆடுகள் தானம் செய்தாள். ஒரு கல்வெட்டில் கோயில் பொன் வெள்ளி நகைகள் முதலியன கூறப்பட்டுள்ளன. மற்றொன்றின்படி விக்கிரமசிங்க பல்லவராயன் 100 காசு தந்து காவேரி வெள்ளத்தினால் அழிந்தகால்வாய்களைச் செம்மைப்படுத்தினான். வட்டியில் மீதியானது கோயில் வழிபாட்டிற்கும், சிவதருமம் கூறுவதற்கும் பயன்படுத்தப்பட்டது. அர்த்தநாரீசர் திருவுருவம் தாபிக்கப்பட்டது. கண்டராதித்தியர் இக்கோயில் திருப்பணி செய்திருக்கிறார். வேறொரு கல்வெட்டின்படி மிலாடுடையார் பள்ளியில் குமாரமார்த்தாண்டன் என்ற திருச்சுற்றுலை கட்டப்பட்டதாம். இதைப்பற்றிப் பல ஆராய்ச்சிகள் கிளம்பியிருக்கின்றன.

## 55 திரு நாகைக்காரோணம்

நாகராசனாகிய ஆதிசேடனால் பூசிக்கப்பெற்றமையின் நாகை என்னும் பெயர்பெற்றது. புண்டரீக முனிவரைக் காயத்தோடு ஆரோகணம் செய்துகொண்டமையால் காயாரோகணம் என்னும் பெயர் எய்திற்று. அதுவே காரோணம் என்று மருவிற்று.

இது நாகப்பட்டினம் ரயில்வே நிலையத்திற்கு வடமேற்கே சுமார் ஒருமைல் தூரத்திலிருக்கிறது. இது காவிரிக்குத் தென்கரையிலுள்ள எண்பத்திரண்டாவது தலமாகும்.

இறைவரின் திருப்பெயர் காயாரோகணேசுவரர். இறைவியாரின் திருப்பெயர் நீலாயதாட்சி

தீர்த்தம் தேவதீர்த்தம். புண்டரீக தீர்த்தம். இவை முறையே கோயிலுக்குத்தெற்கிலும் வடக்கிலும் இருக்கின்றன.

அதிபத்தநாயனார் திருவவதாரஞ் செய்த திருப்பதி. சுந்தரமூர்த்தி நாயனார் காற்றனைய வேகத்தையுடைய குதிரை, ஒளியுள்ள முத்துமாலை, சிறந்தபட்டு, முதலானவைகளை வேண்டிப் பெற்றார். விடங்கர் தலங்கள் ஏழனுள் ஒன்று.

திருக்கோயிலில் முதலில் இருக்கும் விநாயகருக்கு நாகாபரண விநாயகர் என்று பெயர். உள்ளேயிருக்கும் பிள்ளையாருக்கு மாவடிப்பிள்ளை எனப் பெயர். இத்தலத்து அம்மன் மிகச் சிறப்புடையவர். இத்தலத்தைப்பற்றி "கஞ்சி காமாட்சி மதுரை மீனாட்சி, காசி விசாலாட்சி, நாகை நீலாயதாட்சி" என்னும் பழமொழி வழங்குகின்றது.

இக்கோயிலுக்குத் திருஞானசம்பந்தர் பதிகம் இரண்டு, திருநாவுக்கரசு நாயனர் பதிகம் நான்கு, சுந்தரர் பதிகம் ஒன்று ஆக ஏழு பதிகங்களிருக்கின்றன. சுந்தரமூர்த்திநாயனர் பதிகத்தின் இறுதிப்பாட்டை வெள்ளிப்பாடல் என்பர். வெள்ளிப் பாடல் என்பது பின்னால் யாரோ ஒருவரால் எழுதிச் சேர்க்கப் பெற்றதாகும். அவர்கள் அங்ஙனங் கூறுதற்குக் காரணம் ஐந்தாம் திருப்பாடலில் "சுந்தரனே கந்தமுதலாடை யாபரணம் பண்டாரத்தே யெனக்குப் பணித்தருள வேண்டும்" என்றிருப்பதாலும், 11-ஆம் திருப்பாட்டில் "ஒளிமுத்தம் பூணாரமொண் பட்டும் பூவுங் கண்மயத்த கத்தூரி கமழ்சாந்தும் வேண்டும்" என்றிருப்பதாலும், முதலில் கூறியவற்றுள் சில இரண்டாவது கூறியவற்றுள் காணப்படுதலால் கூறியது கூறல் என்னும் குற்றத்தின் பாற்படுத்தி, இதை வெள்ளிப்பாட்டு என்பர்.

திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அத்தலபுராணத்தை எழுதியுள்ளார்கள். அது அச்சில் வெளி வந்துள்ளது. அது புலவர் பெருமக்களால் பெரிதும் பாராட்டப் படும் பெருஞ் சிறப்புவாய்ந்தது.

"கற்றோர் பயில் கடல் நாகைக் காரோணம்" என்று ஞான சம்பந்தர் கூறியிருத்தலாலும், பாக்கு விளையாடிக்கொண்டிருந்த பாலகர்களை நோக்கிப் பசியினால் காளமேகப்புலவர் சோறு எங்கு விக்கும் என்று கேட்டதற்கு, அப்பாலகர்கள் தொண்டையில் விக்கும் என்று பதில் கூறினார்கள். (விற்கும் – என்பதைப் பேச்சுவழக்கில் விக்கும் எனக் கூறதலுண்டு). உடனே புலவர் கோபித்து அவர்கள்மீது வசைபாடும்பொருட்டு "பாக்குத் தறித்து விளையாடும் பாலகர்க்கு" என்பதுவரை சுவரில் எழுதி விட்டு, பசி தீர்ந்தபிறகு எஞ்சிய பகுதியைப் பாடி முடிவு செய்வதாக வைத்துவிட்டுப் பசியாற்றிக்கொண்டு அவ்விடம் வந்தபொழுது, அவர் எழுதியதற்குமேல் "நாக்குத் தமிழுரைக்கும் நன்னாகை" என்று அவ்விளஞ்சிறார் எழுதியதைப்பார்த்து

மதிமயங்கிச் சென்றதாகத் தனிப்பாடல் ஒன்று இருக்கின்றது. இவைகளால் இவ்வூர் மக்களின் கல்வித்திறம் புலப்படும். இவ்வூரில் இருந்த காத்தான் சத்திரத்தைப் பற்றிய காளமேகப் புலவர் பாடலொன்றும் உண்டு.

இந்த ஊர் ஒரு துறைமுகம், வாணிகத்தலம். கீழ்த் திசையின் தலைநகரம். இவ்வூரில் மங்களாசாசனம்பெற்ற திருமால் கோயில் சௌந்தரராஜப்பெருமாள் என்ற பெயரால் விளங்குகிறது. மேலும் மேலைக்கயா என்ற சட்டநாதர் கோயில் ஒன்று இருக்கிறது. மற்றும் காவல் தெய்வமாகிய கோதண்ட ஐயனார் கோயில், அமர்ந்தீசர் கோயில், மலைச்சுரம் கோயில் (கயிலாயநாதர்) இது ஒரு கட்டுமலை, குமரர்கோயில் நடுவண் நாதர் கோயில், அழகியநாதர் கோயில் முதலிய பல கோயில்கள் இருக்கின்றன.

திருக்கோயில் 586—250 அடிகள் கொண்டது. இராய கோபுரம் முற்றுப்பெறவில்லை. உட்கோபுரம் 3 அடுக்குக் கொண்ட சோழன்கோபுரம் மணப்பள்ளிக்கெதிரில் அதிபத்தர் நிற்கிறார். மாமரம் தலமரம். அதனடியில் மாவடிப்பிள்ளையார் இருக்கிறார். இராசதானிமண்டபத்தில் தியாகராசர் இருக்கிறார். சுந்தரவிடங்கர் காரோணர் என்பது காயாரோகணர் என் பதின் மருஉ. புண்டரீகரிஷியை சரீரத்தோடு ஏற்றுக்கொண்ட தனால் காயாரோகணர் என்று வந்ததாகப் புராணம் கூறும். நீலாயதாட்சி என்ற வடமொழிப்பெயர் கருந்தடங்கண்ணி எனத் தமிழில் வழங்கும். இது சக்தி பீடங்கள் அறுபத்து நான்கில் ஒன்று. மடங்களில் சிற்பவேலை அழகாக இருக்கிறது. இவ்வூர்த்தேர் கண்ணாடி ரதம் அல்லது பீங்கான் ரதம் என வழங்கும்.

**கல்வெட்டு:** ஏழு கல்வெட்டுக்கள் வெளியிடப்பட்டுள்ளன. கயிலாச நாதர் கோயில் சுவரில் 1777 கி. பி. யில் ஒரு கனவான் இறந்ததாக டச்சு மொழியில் எழுதப்பட்டுள்ளது.

சீனா கோபுரத்தில் கிடைத்த ஒரு வெண்கலச்சிலையில் 12 நூற்றாண்டு எழுத்து இருந்தது. ஒரு சிறு கோயிலில் 1777-ல் கவர்னர் ரெய்னர்வான் விலிசிங்கன் அதனைக் கட்டினதாக எழுதப்பட்டுள்ளது. ஒரு பெரிய முரசின் பேரில் ஒரு சிறு

எழுத்து உண்டு. ஒரு வெள்ளி ஏட்டில் தஞ்சை அரசன் விஜயராகவன் நாகப்பட்டினத்தை டச்சுக்காரருக்குக் கொடுத்ததாக எழுதியிருக்கிறது தெலுங்கு லிபியில்.

மற்றொரு வெள்ளி ஏட்டில் தமிழில் அதனையே மராட்டியர் கோறி 1676.ல் உறுதிப்படுத்தி எழுதியிருக்கிறது. 1774-ல் டச்சு தேவாலயம் கட்டப்பட்டது.

## 56 திரு நாரையூர்

நாரை பூசித்துப் பேறுபெற்றதால் இப்பெயர் பெற்றது. சிதம்பரத்திலிருந்து காட்டுமன்னார் கோயிலுக்குப் போகும் பெருவழியில் (Rood) பத்துமைல் தூரத்தில் இருக்கின்றது. காவிரிக்கு வடகரையிலுள்ள 33-ஆவது தலமாகும். இறைவரின் திருப்பெயர் சௌந்தரேசுவரர். இறைவியாரின் திருப்பெயர் திரிபுரசுந்தரி.

திருத்தொண்டர் திருவந்தாதியைப்பாடிய நம்பியாண்டார் நம்பிகள் அவதரித்த திருப்பதி இது. தேவாரத் திருமுறைகள் கனகசபையின் மேல்பாலுள்ள ஒரு அறையில் இருந்ததை நம்பியாண்டார்நம்பி மூலமாய் வெளிப்படுத்திய பொல்லாப் பிள்ளையார் எழுந்தருளி யிருக்கும் தலமும் இதுவேயாகும். பொள்ளாஎன்பது பொல்லாஎன்று வந்துள்ளது. பொள்ளாதது என்பது உளி முதலியவற்றால் செய்யப்படாதது. எனவேசுயம்பு மூர்த்தியாகும். இத்தலத்திற்கு ஞானசம்பந்தர் பதிகம் 3, அப்பர் பதிகம் 2. ஆக ஐந்து பதிகங்கள் இருக்கின்றன.

பொல்லாப்பிள்ளையார் தனிமண்டபம், மகாமண்டபத்தில் ஆறுமுகனுடைய உருவம் கல்லில் செதுக்கப்பட்டது. அருகில் சித்தலபுரம் இருக்கிறது. நம்பியாண்டார்நம்பி இராசராச சோழன் உருவங்கள் மகாமண்டபத்தில் இருக்கின்றன. கோயில் விமானம் அர்த்தசந்திர விமானம். விமானத்தின் உச்சியில் இரண்டு கலசங்கள் உண்டு. பிரகாரம் 204×370 மதில் உயரம் 9 அடி, அம்பிகை தெற்குமுகம் 1895 கும்பாபிஷேகம் செயும் திருப்பணி அபயகுல ராசராசர் திருமுறை வகுக்கும்படி சொன்ன இடம். நம்பியாண்டார்நம்பி வகுத்தது. இருவர் விக்கிரகங்களும் உண்டு. திருமுறை கண்டபுராணம் காண்க.

கல்வெட்டு:- கல்வெட்டுக்கள் 4-கிடைத்தன. 11ஆம் நூற்றுண்டுக்குப் பிற்பட்டவை. திருநாரையூர் - தனியூரான் வீரநாராயண சலம் சேர்ந்த ஒருபிடாகை. தனியூர் ஆய ஆட்சி குலோத்துங்கசோழன் சந்தி விளக்குக்காக ஊர்ஒன்று தந்தான். கைலாசமுடையார்க்கு நித்திய நிபந்தத்திற்காகப் பொருள் இல்லாமையினுல் ஆண்டு ஒன்றுக்கு 540 கலம் நெல் தரக்கூடிய நிலதானம் விக்கிரம சோழனுல் தரப்பட்டது. குற்றம் தீர்த்த தீர்ப்புகள் கூறப்பட்டுள்ளன. பசு திருடியதைச் சபையோர் விசாரித்து அவனிடம் அப்பசுவும் கன்றுகளும் மீட்கப்பட்டன. கோப்பெருஞ்சிங்கன் 1250இல் 60 மா நிலம் விற்கப்பட்டது.

## 57 திரு நாலூர்மயானம்

கும்பகோணத்திற்குத் தென்கிழக்கே பத்தரை மைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவிரிக்குத் தென்கரையில் தொண்ணூற்றுருவது தலம்.

இறைவர் திருப்பெயர் பலாசவனநாதர். இறைவி திருப் பெயர் பெரியநாயகி.

இது நான்கு வேதங்களும் வணங்கிய பதி. ஆபத்தம்ப இருடியால் பூசிக்கப்பெற்றது. இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கின்றது.

இவ்வூரார் அடிக்கடி சிவபெருமான் திருமேனிமேல் பாம்பு ஊர்வதாகக் கூறி, அதற்குப் "பாலூருமலைப்பாம்பும்பனிமதியு மத்தமும் மேலூரும் செஞ்சடையான்" என்னும் இவ்வூர்த் தேவாரப் பகுதியைக் காட்டுவர்.

கல்வெட்டு: இக்கோவிலில் 23 கல்வெட்டுக்கள் எடுக்கப் பட்டுள்ளன. எல்லாம் சோழர்களுடைய எழுத்துக்களே. 10, 11, 12, 13 நூற்றுண்டுகளில் நாலூர் என்பது செற்றூர்க் கூற்றத்துப் பிரமதேயம். சுவாமிபெயர் திருமயானத்துப் பரம சுவாமி, மூலத்தானத்து மகாதேவர், பிரமீசுரத்து மகாதேவர், என்று உள்ளன. மேலும் கோயிலில் அகத்தீசுவரரை உடையர் கோயில் இருக்கிறது. அதற்குத் தனியாக ஆதாரங்கள் செய்யப் பட்டன. நாலூரை வானவர்மாதேவி சதுர்வேதிமங்கலம் என்ற

பெயரும் பெற்றிருந்தது. நாலூரில் திருக்கச்சபீசுரத்துப் பெருமாள் காமபரமேசுரத்துப் பெருமாள் திருநாராயண விண்ணகரம் முதலிய தளிகளும் இருந்தன. நாலூரில் ஊர்ச் சபை இருந்தது.

காவிரியின் தென்கரையில் செம்பியன்மாதேவி சதுர்வேதி மங்கலம் என்ற ஒரு ஊர் இருந்தது. கடைத்தெருவில் அங்காடிக் கூலி என்ற ஒரு வரி வசூலித்துக் கோயிலுக்குக் கொடுக்கப் பட்டது. கோயிலுக்கு முன்னால் இராசராசன் என்ற பெயரில் ஒரு பெரிய மண்டபம் இருந்தது. அதில் ஊர்ச்சபையார் கூடித் தீர்மானங்கள் செய்தனர். நாலூர் வியாபாரி நாரணன் சோழ மகன் ஆன திருநாறக்காயன் 12 விளக்குகளுக்காக 12 ஈழக்காசு தந்தான் செம்பியன் குடவாயில் என்ற ஆலப்பொழில் பெண் ஒருத்தி இக்கோயிலுக்கு 2 விளக்குகளைத் தந்தாள். நாலூரில் ஒரு புளியமரத்தின்கீழ் ஊரார் கூடிக் கோயிலுக்கு விரோதமாக இருக்கும் ஆட்கள் கிராமத் துரோகிகள் ஆகி சிவனைத் தொட மாட்டார் ஆவார்கள் என்று தீர்மானம்செய்தார்கள். (இராச ராசன் III காலம்.)

## 58 திரு நெல்லிக்கா

நெல்லிமரத்தைத் தலமரமாக உடைமையால் இப்பெயர் பெற்றது. நெல்லிமரம் பிராகாரத்தில் இருக்கின்றது.

திருநெல்லிக்கா ரயில் நிலையத்திலிருந்து மேற்கே கால் மைல் தூரத்தில் இருக்கிறது. இது காவிரிக்குத் தென்கரையில் உள்ள நூற்றுப்பதினேழாவது தலமாகும்.

இறைவர் திருப்பெயர் நெல்லிவனநாதர். இறைவி திருப் பெயர் மங்களநாயகி.

தீர்த்தம் பிரமதீர்த்தம், சூரியதீர்த்தம் என்பன.

தலமரம் நெல்லி.

ஞாயிறும் பிரமனும் வழிபட்ட தலம். ஐப்பசி கிருஷ்ண பட்ச சதுர்த்தசி முதல் ஏழுநாளும், மாசிமாதம் 18உ ஏழு நாளும் அஸ்தமன சமயத்தில் சூரியனுடைய கிரணங்கள்

இறைவனது திருமேனியில் விழுகின்றன. இத்தலத்திற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று உள்ளது.

கல்வெட்டு: கோயிலில் எட்டுக்கல்வெட்டுகள் படி எடுக்கப் பட்டிருக்கின்றன. அவைகளுள் ஏழு II இராசராசனுடையன வும் ஒன்று வீரராசேந்திரனுடையதும் ஆகும். கல்வெட்டுக்களில் ரொக்கம், நிலதானம், விளக்குக்காக நிலதானம் என்பவைகளே குறிக்கப்பெற்றுள்ளன. கடவுள் பெயர் திருநெல்லிக்கா வுடையார். கூற்றம் - ஆர்வலக்கூற்றம் நாடு - இராசேந்திர சோழவளநாடு என்பதாம். வேறு செய்திகள் தெரியவில்லை. பண்டைக்காலத்தில் இவ்விடம் நெல்லிமரக் காடாக இருந்தது எனப் பெயரே விளக்குகின்றது.

## 59 திரு நெல்வாயில்அரத்துறை

விழுப்புரம்—திருச்சி (Chord line) இருப்புப்பாதையில், திருப்பெண்ணாகடத்திற்குத் தென்மேற்கே நான்குமைல் தூரத் தில் உள்ளது. இது நடுநாட்டுத் தலங்களுள் ஒன்று.

இறைவர் திருப்பெயர் அரத்துறைநாதர். இறைவி திருப் பெயர் ஆனந்தநாயகி என்பர். சுந்தரமூர்த்தி நாயனார் இவ்வூர்ப் பதிகம் மூன்றும் திருப்பாட்டில் வண்டார் குழலாள் என்று கூறியுள்ளார். "வண்டார் குழலாள் மங்கை பங்கினனே" என்பது அவரது தேவாரப்பகுதி. அரத்துறை என்பது ஆலயத்தின் பெயர்.

திருஞானசம்பந்தப் பெருந்தகையார்க்கு முத்துச் சிவிகை, முத்துக்குடை, முத்துச்சின்னம் இவைகளை அருளிய தலம். மூவர்களுடைய பாடலும் பெற்றது. திருப்புகழும் பெற்றது.

இத்தலம் நிவாநதியின் கரையின்மேல் இருப்பதாக ஞான சம்பந்தர் இக்கோயில் பதிகத்துள் குறிப்பித்துள்ளார். "கடும் புனல் நிவாமல்கு கரைமேல் அந்தண்சோலை நெல்வாயி லரத் துறையடிகள் தம்மருளே" என்பது அவர் தேவாரப் பகுதி யாகும். இங்கே நிவா என்றது வடவெள்ளாறு ஆகும். சுந்தர மூர்த்தி சுவாமிகள், திருக்குறள், நாலடியார் இவைகளிலுள்ள

கருத்து, அடி இவைகளை இவ்வூர் ஏழாம் திருப்பாடலில் எடுத்து ஆளுகின்றார். இத்தலத்துக்குத் திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்று, திருநாவுக்கரசர் பதிகம் ஒன்று, சுந்தரர் பதிகம் ஒன்று ஆக மூன்று பதிகங்கள் இருக்கின்றன.

கோயிலுக்கு முன்னால் மூன்று சிறு உருவங்கள் இருக்கின்றன. அவை சேர சோழ பாண்டிய லிங்கங்களாம். சம்பந்தருக்கு முத்துச்சிவிகை, முத்துக்குடை, முத்துச்சின்னம் அளிக்கப்பட்ட ஊராம். அருணகிரிநாதரும் இதனைக் கூறுகிறார்.

## 60 திருப்பழுவூர்

ஆலமரத்தைத் தலமரமாக உடைமையால் இது இப்பெயர் பெற்றது. பழு - ஆலமரம். பழுவூர் மேலப்பழுவூர், கீழப் பழுவூர் என்னும் இரு பகுதிகளாக இருக்கின்றது. இவற்றுள் மேலப்பழுவூர் மறவனீச்சரம் என்னும் கோயிலைத் தன்னகத்துக் கொண்டு விளங்குவதாகும். கீழப்பழுவூரே தேவாரம் பெற்ற தலமாகும்.

திருவையாற்றிலிருந்து அரியலூருக்குப் போகும் பெரு வழியில் பத்தாவது மைலில் இருக்கின்றது. காவிரிக்கு வடகரையில் ஐம்பத்தைந்தாவது தலம்.

இறைவர் திருப்பெயர் வடமூலநாதர். இறைவி திருப்பெயர் அருந்தவநாயகி.

இதற்குத் திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கின்றது. பரசுராமர் தம் தாயைக்கொன்ற பழி நீங்கப் பூசித்த தலம்.

சோழ சம்பந்திகளாகிய சேரர் கிளையினரைப்பற்றிய கல்வெட்டுக்கள் மேலப்பழுவூரில் காணக்கிடைக்கின்றன. அவர்கள் இங்குவந்த காலத்திலேயே இக்கோயில் பூசனைக்கு மலையாள அந்தணர்களை உடன் கொண்டுவந்துள்ளார்கள்' அதுகாரணம்பற்றியே,

> "அந்தணர்களான மலையாளரவரேத்தும்
> பந்த மலிகின்ற பழுவூரரனை"

என ஞானசம்பந்தர் குறிப்பிட்டிருக்கவேண்டும்.

கல்வெட்டு : இக்கோயிலில் 23 கல்வெட்டுக்கள் படியெடுக்கப்பட்டன. எல்லாம் சோழர்களுடையன. இரண்டுநாழி அரிசிக்கு இரண்டுமா நிலம் தரப்பட்டது. திருமஞ்சனத்திற்கு 50 காசு தானம் நிலக்கிரயம், விளக்குத்தானம், பொன்னுபரண தானம், செப்புப்பாத்திர தானம், விளக்குக்காக இரண்டுகழஞ்சு தானம், நித்தியபடித்தானம், இரண்டு நாழி அரிசிக்கு $3\frac{1}{2}$மா தானம் முதலியன இக்கோயிலுக்கு அளிக்கப்பட்டுள்ளன.

சோழர்வம்சம் முழுவதும் இக்கல்வெட்டுக்களில் எழுதியிருக்கிறபடியால் இந்தக்கோயில் சிறந்து விளங்கியிருக்கவேண்டும். இக்கல்வெட்டுக்களால் பல அரசியல் செய்திகளை அறியமுடிகிறது. இக்கோயிலுக்குப் பலர் விளக்குவைப்பதற்காக ஆடுகள் கொடுத்திருக்கிறார்கள். அவர்களுள் ஆடவரும் பெண்டிரும் உளர்.

விஜயநகரத்தார் நாளில் மல்லிகார்ச்சுனராயன் காலத்தில் மூன்று ஊர்களில் முப்பது பொன்வரி தள்ளுபடி செய்யப்பட்டது. மல்லரச தண்ட நாயக்கர், ஆராதனைக்காக ஒரு ஊரை சர்வமானியமாகக் கொடுத்தார். இரவிமணியன் என்பான் இக்கோயிலுக்கு ஒருமண்டபங்கட்டிக் கொடுத்துள்ளான்.

## 61 திருப் பாசூர்

பசுமை + ஊர் = பாசூர். நீர்வளத்தால் நிலம் பசுமையாய் விளங்குவதால் இப்பெயர்பெற்றதாதல் வேண்டும். தலமரம் மூங்கில் ஆதலாலும், இறைவர் மூங்கிலடியில் முளைத்தவர் ஆதலாலும் இப்பெயர்பெற்றனர் என்பர். (பாசு = மூங்கில்).

இது திருவள்ளூர்க்கு வடக்கில் இரண்டுமைல் தூரத்தில் இருக்கின்றது.

இறைவர் திருப்பெயர் பாசூர்நாதர். இறைவி திருப்பெயர் பசுபதிநாயகி.

குறும்பர் அரசனுக்குச் சார்பாகச் சமணர்கள் கரிகால் சோழன் மீது ஏவிய பாம்பைச் சிவபெருமான் எழுந்தருளித் தடுத்து ஆட்டினார் என்பது தலமான்மியம். இச்செய்தி "படவர

வொன்றது ஆட்டிப் பாசூர்மேய பரஞ்சுடரைக் கண்டடியே னுய்ந்தவாறே" என்னும் இத்தலத்துக்குரிய திருத்தாண்டகப் பகுதியாலும் உறுதி எய்துகின்றது. சந்திரன் பூசித்துப் பேறு பெற்றான்.

இத்தலத்திற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று, நாவுக்கரசர் பதிகங்கள் இரண்டு ஆக மூன்று பதிகங்கள் இருக்கின்றன. இது தொண்டைநாட்டுத் தலங்களுள் ஒன்றாகும்.

கல்வெட்டு: இங்குள்ள கோயிலில் பதினாறு கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. தொண்டைமண்டலம், ஈக்காடு கோட்டம், காக்கலூர்நாட்டுத் திருப்பாசூர் என்று கண்டிருக்கின்றது.

இராசராசன் நாளில் பூசைக்காகப் பட்டமாருக்கு நாற்பத்தேழுகாசு தரப்பட்டது. அதேகாலத்தில் விளக்கிற்காக முப்பத்திரண்டு பசுவும், முரசிற்காக ஒரு இடபமும் தரப்பட்டன. குலோத்துங்கன் நாளில் நாற்பத்தெண்ணாயிரனது மகள் ஒரு திருவாபரணத்திற்காக முப்பதுகாசும், நாள் ஒன்றிற்கு இரண்டுபடி அரிசியும் தந்தாள். ஒரு காலிங்கராயன் பத்து விளக்குகளுக்காக எழுபத்தெட்டுக்காசு கொடுத்துள்ளான். வீரகம்பணன் நாளில் ஒருவன் ஒரு தோட்டத்தைக் கொடுத்துள்ளான்.

## 62 திருப் பாண்டிக்கொடுமுடி

இது கொடுமுடி ரயில் நிலயத்திற்கு வடக்கே அரைமைல் தூரத்தில் இருக்கின்றது. இது கொங்குநாட்டுத் தலங்களுள் ஒன்றாகும்.

இறைவர் திருப்பெயர் கொடுமுடிநாதர். இறைவி திருப்பெயர் பண்மொழிநாயகி.

தலவிருட்சம் வன்னி.

தீர்த்தம் காவிரி.

மூவர்களாலும் பாடப்பெற்ற பெருமை வாய்ந்தது. இத் தலத்திற்கு மூன்று பதிகங்கள் இருக்கின்றன, இத்தலத்துச் சுந்தரமூர்த்தி நாயனரது திருப்பதிகம் நெஞ்சை உருக்கும் தன்மை வாய்ந்தது.

கோயமுத்தூர் வித்துவான், கந்தசாமி முதலியாராலும், வேங்கடரமண தாசர் என்பவராலும் இயற்றப்பெற்ற தல புராணம் அச்சில் வெளிவந்துள்ளது.

கல்வெட்டு: இவ்வூர்க் கோயிலில் எட்டுக் கல்வெட்டுக்கள் முன்னமே படி எடுக்கப்பட்டிருந்தன, அவைகளின் சாரம் பின்வருமாறு:-

1. திருப்பாண்டிக் கொடுமுடியுடையாருக்கும், பெரிய திருவடி நாயனுருக்கும் மாசி மகத்து விழா, வழிபாடு, கோயில் திருப்பணி முதலியவற்றிற்காக விதரி என்ற திருச்சிற்றம்பல நல்லூர், எழுநூற்றுவர் சதுர்வேதி மங்கலம், திருவூஞ்சலூர், வள்ளிபுரம், வடிவுடைய மங்கை ஐயகரம், திருக்காட்டுத்துறை என்ற ஊர்கள் இறையிலியாகக் கொடுக்கப்பட்டன. காலம் முதலிய விவரங்கள் தெரியவில்லை.

அம்மன் கோயில் அர்த்தமண்டபத்தில் உள்ள கல்வெட்டின்படி கோனேரின்மை கொண்டான் மூன்ரும் ஆண்டில் பாண்டி மண்டலத்து மயிலூர் உடையான் என்னும் போத முதியான் என்பவன் பாண்டிக் கொடுமுடி ஆளுடையார் கோயிலில் இளைய பிள்ளையாரையும், பள்ளிகொண்ட பெருமாள் கோயிலில் கருடாழ்வாரையும் எழுந்தருளுவித்து அரசன் நன்மையின்பொருட்டு இருகூருக ஐந்து பொன் தந்தான்.

அம்மன் கருவறைச்சுவரில் உள்ளதன்படி விதரி என்ற திருச்சிற்றம்பல நல்லூரில் இருபது மா நிலத்தை இறையிலியாக மேல்கரை அறையூர்நாட்டார்க்கு விட்ட நான்குமா போக மற்றவைகள் திருப்பாண்டிக் கொடுமுடியுடையார்க்கும், விதரி திருச்சிற்றம்பலமுடையாருக்கும் கொடுக்கப்பட்டன.

வீர நாராயணன் ரவிவர்மன் இருபத்தேழாம் ஆண்டில் திருக்கொடுமுடி மகாதேவர்க்கு வழிபாட்டிற்காகவும், மாசி

மகத்திற்காகவும் மேல்கரை, அறையூர்நாட்டு ஊஞ்சலூரை இறையிலியாகக் கொடுத்துள்ளான்.

சுந்தரபாண்டிய தேவர் இரண்டாவது ஆண்டில் பூந்துறை நாட்டார்கள் திருப்பாண்டிக் கொடுமுடி நாயனுருக்கு வேம்புரியான கண்டியதேவ நல்லூரைத் தேவதானமாகக் கொடுத்துள்ளார்கள்.

## 63 திருப் பாதிரிப்புலியூர்

பாதிரி மரத்தைத் தலத்துக்குரிய மரமாகக் கொண்டமையாலும், புலிக்கால் முனிவரால் (வியாக்கிரபாதரால்) பூசிக்கப் பெற்றமையாலும் இது இப்பெயர்பெற்றது. திரு - அடைமொழி.

இது திருப்பாதிரிப்புலியூர் என்னும் ரயில் நிலையத்திற்கு அருகில் இருக்கிறது. இது நடுநாட்டுத்தலங்களுள் ஒன்ருகும்.

இறைவர் திருப்பெயர் தோன்ருத்துணைநாதர். "திருப்பாதிரிப்புலியூர்த் தோன்ருத் துணையாயிருந்தனன் றன்னடியோங்களுக்கே" என்ற இத்தலத்து முதற்பதிகத்திலுள்ள அப்பர் பெருமானின் திருவாக்கு இதற்குச் சான்ருகும். இறைவியார் திருப்பெயர் பெரியநாயகி அம்மை.

தலவிருட்சம் பாதிரி. இதை வடமொழியில் பாடலம் என்பர்.

தீர்த்தம் கெடிலநதி. இது தென்திசைக் கங்கை என்று பாராட்டப்பெற்றுள்ளது

திருநாவுக்கரசர் பெருமானைச் சமணர்கள் கல்லில் கட்டிக் கடலில் தள்ள, அப்பொழுது அவர் "சொற்றுணை வேதியன்" எனத் தொடங்கும் நமச்சிவாயப் பதிகத்தை ஓதிக் கரையேறப்பெற்றதால், அவ்வூர் இப்பொழுது கரையேறவிட்ட குப்பம் என்று வழங்கப்பெறுகின்றது. சுவாமிகள் கரையேறி இப்பதிக்கு முதலில் வந்தபோது "ஈன்ருளுமாய்"

எனத் தொடங்கும் பதிகம் பாடப்பெற்றது. மங்கண முனிவர் என்பவர் முடங்கிய காலுடைய முயல் வடிவமாகச் சாப மிடப்பெற்றூர். அவர் இத்தலத்து இறைவரைப் பூசித்துச் சாபநீக்கம் பெற்றூர். இச்செய்தி "முன்னநின்ற முடக்கான் முயற்கருள் செய்து" என்னும் இக்கோயிலுக்குரிய திருஞான சம்பந்தப் பெருந்தகையாரின் திருவாக்கால் புலப்படுகின்றது. இத்தலத்திற்குத் திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்று, திருநாவுக் கரசர் பதிகம் ஒன்று ஆக இரண்டு பதிகங்கள் இருக்கின்றன.

சிதம்பரநாத முனிவர் இயற்றிய தலபுராணமும், தொல் காப்பியர் இயற்றிய கலம்பகமும் இருக்கின்றன. இவைகள் அச்சில் வெளிவந்துள்ளன.

"சிவாய நமவென்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீ பாதிரிப் புலியூ ரரனே"

என்னும் அப்பர் பெருமானுடைய திருவாக்கு, 'சிவாயநம' என்று சொல்லித் திருநீற்றை அணிந்து கொள்ளவேண்டும் என்பதைத் தெரிவிக்கின்றது. "திருந்தா வமணர்தந் தீநெறிப் பட்டுத் திகைத்து முத்திதரும் தாளிணைக்கே சரணம் புகுந்தேன்" என்னும் அவருடைய திருவாக்கு, அவர் சமண சமயத்திலிருந்த தற்கு அகச்சான்ருய் உள்ளது.

இவ்வூரில் திருக்கோவலூர் ஆதீனத்தைச்சேர்ந்த ஒரு மடாலயம் இருக்கின்றது. அது வீர சைவ மடமாகும்.

கல்வெட்டு: இந்தக் கோயிலில் 21 கல்வெட்டுக்கள் படி யெடுக்கப்பட்டுள்ளன, கோயில் புதுப்பிக்கப்பட்டபோது அவை அகற்றப்பட்டுச் சிதறிக்கிடக்கின்றன. கல்வெட்டுக்கள் இரண் டைத்தவிர மற்றவையெல்லாம் சோழர்களுடையனவே. இவை பத்தாம் நூற்ருண்டிலிருந்து பதிமூன்ரும் நூற்ருண்டுவரையில் வெட்டுவிக்கப்பட்டவையாம். கோப்பரகேசரி வர்மன் காலத்தில் 969-ல் சோமாசியார் 5 பிராமணர்களுக்குக் குடியிருக்க நிலம் தந்ததும், 923-ல் தாமோதக்கன் ஒற்றியூரான் ஒரு கமுகந் தோட்டம் கொடுத்ததும். நாராயணன் சேந்தன் திருவமிர்தத் திற்காக வேண்டும் முதல் கொடுத்ததும் கண்டிருக்கின்றன. பிறகு இராசகேசரி காலத்தில் (959) ஒரு நந்தா விளக்கிற்காக 96 ஆடுகள் கொடுக்கப்பட்டன. வீரராசேந்திரன் காலத்தில்

(1057) மும்முடிச்சோழப்பேரியான் நுந்தாவிளக்குவைத்ததும், கூடன்தேவன் 80 கலம் நெல் தந்ததும் காண்கின்றன. குலோத் துங்கன் காலத்தில் 1076-ல் இராமேச்சரமுடையான் நுந்தா விளக்கிற்காக 20 காசு தந்ததும் இதில் கண்டிருக்கிறது. விக்கிரமசோழன் காலத்தில் (1118, 1124, 25) மூவேந்த வேளாளன் ஒரு விளக்கிற்காக 18 காசும் உலகளந்த மூவேந்த வேளான் 18 காசும் கொடுத்துள்ளார்கள். மூன்றும் குலோத் துங்கன் 1213 காலத்தில் தேவதானத்தில் எல்லை குறிக்கப் பட்டுள்ளது.

## 64 திருப் புகலூர்

சிவபிரானிடத்திற் புகலடைந்த காரணம் பற்றிய பெயர் என்பர். திருஞானசம்பந்தர் அருளிய பதிகமாகிய க்ஷேத்திரக் கோவையில் "துலைபுகலூ ரகலா திவை காதலித்தா னவன் சேர்பதியே" என்று அருளியிருப்பதால், ஏதோ வரலாற்றை உட்கொண்டு அவ்வாறு கூறியிருக்கவேண்டும். துலைபுகல் என்பது துலாபாரம் புகுதல் என்று பொருள்படும்.

இது மாயூரம் — பேரளம் ரயில் பாதையில் உள்ள நன்னிலம் ரயில் நிலையத்திலிருந்து கிழக்கே நான்கு மைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவிரிக்குத் தென்கரைத் தலமாகும்.

இறைவரின் திருப்பெயர் அக்நீசர்; இது அக்நி பூசித்த காரணத்தால் ஏற்பட்ட பெயராகும். இதுவன்றிப் புகலூர் நாதர், சரண்யபுரீசர், புன்னாக நாதர், கோணப்பிரான் என்னும் பெயர்களும் வழங்குகின்றன. இறைவியாரின் திருப்பெயர் கருந்தாழ்குழலி. இத்திருப்பெயரை, அப்பர்சுவாமிகள் இவ்வூர்ப்பதிகம் (பண்—இந்தளம்) மூன்றும் திருப்பாடலில்,

> பொருந்தாழ் சடைமுடி மேற்பிறை சூடிக்
> கருந்தாழ் குழலியுந் தாமுங் கலந்து
> திருந்தா மனமுடை யார்திறத் தென்றும்
> பொருந்தார் புகலூர்ப் புரிசடை யாரே.

என எடுத்தாண்டுள்ளனர்,

தலவிருட்சம் புன்னை.

தீர்த்தம் அக்நிதீர்த்தம்; பாணதீர்த்தம் என்பன. அக்நி தீர்த்தம் கோயிலைச்சுற்றிலும் அகழிபோல் சூழ்ந்திருக்கின்றது.

இது முருகநாயனார் அவதாரஞ்செய்த திருப்பதி. முருகநாயனார் திருமடத்தில் திருஞானசம்பந்தர் எழுந்தருளியிருந்தபொழுது, அப்பர் திருவாரூரை வழிபட்டுப் புகலூர்க்கு எழுந்தருளி ஞானசம்பந்தரைக் கண்டு அளவளாவியிருந்ததோடு, திருவாரூர்ச் சிறப்பை "முத்து விதானம்" என்று தொடங்கும் பதிகத்தால் ஓதியருளியதும் இப்பதியாகும். திருப்பூந்துருத்தியிலிருந்து அப்பர் பெருமான் எழுந்தருளி இங்குத் தங்கி, கைத்தொண்டும் பாடுந்தொண்டும் செய்து, ஒரு சித்திரைச் சதய நாளில் சிவானந்த ஞானவடிவான தலமும் இதுவேயாகும். பங்குனி உத்திரத் திருநாளுக்குப் பரவையார்க்குப் பொன் வேண்டி, சுந்தரர் இங்கு எழுந்தருளி, இறைவனை வணங்கித் திருப்பணிக்காக வைத்திருந்த செங்கற்களைத் தலையணையாகக் கொண்டு தூங்கி, விழித்தெழுந்தபொழுது, அக்கற்கள் பொன்னாயிருந்தவாறு கண்டு வியந்து "தம்மையே புகழ்ந்து இச்சை பேசினும்" என்று தொடங்கும் பதிகத்தைப் பாடியது இத்தலத்திலாகும்.

திருப்புகலூர் அந்தாதியை இயற்றியவர் பக்தர் நெற்குன்றவாணர். இது அச்சில் வெளிவந்துள்ளது. தருமபுர ஆதீனம் புலவர், திரு. முத்து. சு. மாணிக்கவாசகமுதலியார் அவர்களாலும் ஒரு புதிய பதிப்பு வெளியிடப்பெற்றுள்ளது. வடமொழியில் தலபுராணம் இருக்கின்றது. அச்சாகவில்லை. இவ்வந்தாதியின் அமைப்பும், சொற்பொருளின்பமும், பிற திரிபந்தாதிகளுக்கு வாய்க்காத எளிமையும், அஃது அமைந்த அருமையும், பெரும் புலவர்களுக்கும் விருந்தாயிருக்கும். புகழுரு எய்திய உ. வே. சாமிநாத அய்யர் அவர்கள் எழுதிய மகாவித்துவான் சரித்திரத்தில் இதன் சிறப்பை அறியலாம்.

இக்கோயிலின் முன்கோபுரம் தொண்ணூறு அடி உயரம் உடையது. மதில்களின் நீளம் 325 அடி. அகலம் 225 அடி. சுற்றிலும் நந்தவனம் உள்ளது. அதைச்சுற்றி 130 அடி அகலம் கொண்ட அகழி உள்ளது. உள்ளே இரண்டு பிராகாரங்கள் உள்ளன.

கல்வெட்டு: இக்கோயிலில் 67 கல்வெட்டுக்கள் எடுக்கப்பட்டுள்ளன. அவைகளில் ராஜராஜன் 14ம். இராசேந்திரன் I-3ம், முதற் குலோத்துங்கன் 12ம், மூன்றும் குலோத்துங்கன் 10ம், பிறவும் உள. அவை பத்துமுதல் பதின்மூன்றும் நூற்றுண்டு வரையில் எழுதப்பட்டவையாம். இராசராசனுக்கு முந்திய கல்வெட்டுக்கள் கிடைக்காமையால் அவன் காலத்தில்தான் இக்கோயில் செங்கல்லாக இருந்தது கருங்கல்லாக மாறியிருக்க வேண்டும். இக்கோயிலின் அர்த்த மண்டபத்தை இறையூருடையான் அரையன் கங்கைகொண்டானன சோழவிச்சாதரப் பல்லவரையன் கட்டியுள்ளான். தெற்குத் திருவாயிலுக்கு ராஜராஜன்வாயில் என்று பெயர். நீராழி மண்டபத்தைச் செய்தவன் ஆர்க்காடு கிழான் சேதிராயன். நூற்றுக்கால் மண்டபம் கட்டியவன் நவலோகவீரன். கி.பி. 1659ல் வேளாக்குறிச்சி அருணசலத் தம்பிரானல் இக்கோயிலின் திருமதில் திருப்பணி நடத்தப்பட்டுள்ளது. மூன்றும் குலோத்துங்கன் காலத்திலேயே இக்கோயிலின் அகழி தோண்டப்பட்டிருக்கிறது. முருகநாயனர் திருமடம் ஒன்றும் இங்கு இருந்தது. இங்கே அருகில் ஓடும் ஆறு, முடிகொண்ட சோழப் பேராறு என வழங்கப்பட்டது. சேரமான் சோழன் குகை ஒன்று இருந்தது. திருப்புகலூர் அந்தாதி பாடிய நெற்குன்றவாணருக்கு நிலம் விடப்பட்டது. இது திருப்புகலூர் ஆதீனத்துக்குட்பட்டது.

## 65 திருப் புகலூர்வர்த்தமானேச்சுரம்

இறைவன் பெயர் வர்த்தமானேச்சுரர். இறைவியார் பெயர் கருந்தாழ்குழலியம்மை.

திருப்புகலூர் ஆலயத்திற்குள் வடபக்கத்தில் திருப்புகலூர் வர்த்தமானேச்சரம் உள்ளது. இது ஆண்டவன் பெயரைக் குறிக்கின்றது. இங்கே அக்கினீசுவரர் உருவமும், அதற்கடுத்து வடபக்கத்தில் வர்த்தமானேசுவரர் சந்நிதியும் முருக நாயனர் திருவுருவமும் அமைந்துள்ளன.

## 66 திருப் புள்ளிருக்குவேளூர்

சம்பாதி, சடாயு என்ற கழுகரசர் இருவர்களும், வேதங்களும், முருகக்கடவுளும் பூசித்துப் பேறுகளைப் பெற்ற தல

மாதலால் இப்பெயர் பெற்றது. இது வைத்தீசுவரன்கோயில் என்று வழங்கப்பெறுகின்றது.

இது மாயூரம் — சிதம்பரம் ரயில்பாதையில், வைத்தீசுவரன் கோயில் ரயில் நிலேயத்திற்குக் கிழக்கே அரைமைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவிரியின் வடகரைத் தலங்களுள் ஒன்று.

இறைவரின் திருப்பெயர் வைத்தியநாதர். இறைவியாரின் திருப்பெயர் தையல்நாயகி.

தீர்த்தம் சித்தாமிர்தத் தீர்த்தம். இது திருக்கோயிலின் உள்ளே இருக்கின்றது. இது மிகப்பெருமைவாய்ந்தது. இதில் நீராடியவர்நோய் நீங்கப்பெறுவார்.

சூரியன், செவ்வாய், இராமலக்குமணர், அநுமார் முதலானோர் வழிபட்டுப் பேறு எய்தினர். இங்கு எழுந்தருளியிருக்கும் முருகக்கடவுள் முத்துக்குமாரசுவாமி என்னும் திருப்பெயருடன் விளங்கி, அன்பர்களுக்கு வேண்டும்வரங்களே அளித்துவருகிறார். இத்தலத்திற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று. நாவுக்கரசர் பதிகம் இரண்டு ஆக மூன்றுபதிகங்கள் இருக்கின்றன.

வடுகநாத தேசிகர் எழுதிய தலபுராணமும், குமரகுருபரர் அருளிய முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழும் அச்சில் வெளிவந்துள்ளன. இவைகளன்றி மூவர் அம்மானை முதலான பல நூல்களில் இத்தலத்துச் சிவபெருமானைப்பற்றிய புகழ்ப் பாக்கள் இருக்கின்றன.

சடாயு, சம்பாதி இவர்கள் வழிபட்ட செய்தி.

"தள்ளாய சம்பாதி சடாயென்பார் தாமிருவர்
புள்ளானார்க் கரையனிடம் புள்ளிருக்கு வேளூரே"

என்னும் ஞானசம்பந்தரின் தேவாரப்பகுதியால் அறியக் கிடக்கின்றது.

சம்பாதி, புள்ளிருக்கு வேளூர் இறைவனே வழிபடற்குக் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து நாளும் பூக்கொண்டுவந்தசெய்தி

"யோசனைபோய்ப் பூக்கொணர்ந்தங் கொருநாளுமொழியாமே
பூசனை செய்தினிதிருந்தான் புள்ளிருக்கு வேளூரே"

என்னும் அவரது தேவாரப்பகுதியில் குறிக்கப்பட்டுள்ளது. இச்சம்பாதி வனம் மணிமேகலையுள்ளும் கூறப்பட்டுள்ளது.

சீதையைக் கவர்ந்து சென்ற இராவணனோடு பொருது, சடாயு உயிரிழந்த செய்தி,

"மெய்சொல்லா விராவணனை மேலோடி யீடழித்துப்
பொய்சொல்லா துயிர்போனான் புள்ளிருக்கு வேளூரே"

என்னும் அவரது தேவாரப் பகுதியிலும் சொல்லப்பட்டு உள்ளது. "மந்திரமும் தந்திரமும் மருந்துமாகித் தீராநோய் தீர்த்தருள வல்லான்" என்னும் அப்பர்பெருமானின் தேவாரப் பகுதி, இறைவன் வைத்திய நாதர் என்னும் பெயர் பூண்ட காரணத்தைப் புலப்படுத்துவதாகும். இங்ஙனம், இவ்வூர்த் தேவாரப்பகுதிகளில் பல சரித்திர சம்பந்தமான உயர்ந்த செய்திகள் காணப்படுகின்றன.

இக்கோயில், திருக்கயிலாய பரம்பரைத் திருத் தருமபுர ஆதினத்திற்குச் சொந்தமானது. இதுபொழுது இருபத் தைந்தாம் பட்டத்தில், தருமை ஆதினத்தில் அருளாட்சி நடத்தி வரும் மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் ஒவ்வொரு வாரத்தில் செவ்வாய்க்கிழமையிலும், ஒவ்வொருமாதத்தில் கிருத்திகை நாளிலும் வைத்தீசுவரன் கோயிலுக்கு எழுந்தருளி வழிபாடு செய்தருளுகின்றார்கள், இக்காலங்களிலன்றி, நிர்வாகத்துறை யில், திடீரென்று எழுந்தருளி நித்திய நைமித்திகங்கள் உரிய காலங்களில் நன்கு நடைபெறுகின்றனவா எனவும் கவனித் தருளுகின்றார்கள்.

கல்வெட்டு: சகம் *1814 (1892)* நகரத்தாரால் திருப் பணியும் குடமுழுக்கும் செய்யப்பட்டன. சகம் *1689 (1767)* ராஜாமகாராசர் காலத்தில் முத்துக்குமாரசாமித் தம்பிரானால் திருப்பணி செய்யப்பட்டது. சகம் *1682 (1770)*-து ராஜமகா ராசர் காலத்தில் கருங்கல் திருப்பணி செய்யப்பட்டது. சகம் *1802 (1880)* கொடிக்கம்பம் தங்கமயம் ஆக்கப்பட்டது.

## 67 திருப் புறம்பயம்

பக்கத்தே தண்ணீரையுடையது என்று பொருள்படும். இதற்கு ஏற்ப திருக்கோயிலின் மேல்புறத்தில் மதிலை ஒட்டி நீர்நிலை இன்றும் இருக்கின்றது. ஒரு காலத்தில் பிரளயம் வந்தபொழுது அது ஊரினுள் புகாதவாறு தடைப்பட்டு புறத்தே நின்றமையால் இப்பெயர்பெற்றது என்பர். அதற்கு ஏற்ப இவ்வூர்த் தல விநாயகர்க்குப் பிரளயங்காத்த விநாயகர் என்று பெயர் இருக்கின்றது.

கும்பகோணத்திற்கு வடமேற்கே ஐந்தரைமைல் தூரத்தில் மண்ணியாற்றின் வடகரையில் இருக்கின்றது.

இறைவரது திருப்பெயர் புறம்பயநாதர்; சாட்சிநாதர். ஒரு வணிகப்பெண்ணின் நிமித்தம் இவ்வூர்ச்சிவபெருமான் மதுரை சென்று சாட்சி கூறினமையால் சாட்சிநாதர் எனப் பெயர் பெற்றார். இறைவியாரது திருப்பெயர் கரும்படுசொல்லி. இத் திருப்பெயரை, இவ்வூர்த் தேவாரத்தில் (பாடல்5) ஞான சம்பந்தப் பெருந்தகையார். "ஓர்பாகம் கரும்பொடு படு சொலின் மடந்தையை மகிழ்ந்தோய்" என்று எடுத்தாண்டுள்ளது பெருமகிழ்ச்சியைத் தருவதாகும். கரும்படு சொல்லி என்பதற்குக் கரும்பை வென்ற சொல்லை உடையவள் என்பது பொருள்.

தீர்த்தம், பிரமதீர்த்தம். இது இராஜகோபுரத்திற்கு வடகிழக்கில் இருக்கின்றது.

சத்தசாகரதீர்த்தம்: இது பிரமதீர்த்தத்திற்குக் கிழக்கில் நந்தவனத்தில் இருக்கிறது. பிரளயகாலத்தில் அழிக்கவந்த ஏழுகடல்களும் இதனுள் அடங்கி, இருக்கின்றன என்று புராணம் கூறுகின்றது.

மண்ணியாறு: இது ஊரின் கிழக்கே இருக்கிறது.

கொள்ளிடப்பேராறு: இது ஊருக்கு வடபால் ஒருமைல் தூரத்தில் இருக்கிறது.

தலவிருட்சம் புன்னை. இது முதல் பிரகாரத்தில் வட மேற்கில் இருக்கின்றது.

சனகர் முதலிய நால்வர்களுக்குச் சிவபெருமான் இத் தலத்தில் அறத்தை உணர்த்தினர். இச்செய்தியை, இவ்வூர்ப் பதிகத்திலுள்ள, "நால்வர்க் கறம்பயனுரைத்தனை புறம்பய மமர்ந்தோய்" (திருப்பாட்டு 1) என்னும் ஞானசம்பந்தர் தேவாரப் பகுதியால் காணலாம். இத்தலத்தில், தன் தங்கை மகளுடன் வந்தடைந்த காவிரிப்பூம்பட்டினத்து வணிகன் அரவு கடித்து இறந்துபோக, சிவபெருமான் அவனுக்கு உயிர் அளித்ததோடு அவனுக்கு அப்பெண்ணைத் திருமணம் புரி வித்தார். அப்பெண் மதுரையில், அவளது கணவனின் முதல் மனைவியால் பழிக்கப்பெற்றபோது வன்னி, கிணறு, மடைப் பள்ளி இவைகளோடு சென்று சாட்சி பகர்ந்தார். திருக் கோயிலுக்கு நாளும் விறகுகொண்டுவந்த ஒரு ஆதிதிராவிடற்கு வீடுபேற்றை அருளினர். துரோணர் இறைவரை வழிபட்டு அசுவத்தாமா என்ற புதல்வனைப் பெற்ருர். விசுவாமித்திரர், சுக்ரீவர் இவர்கள் வழிபட்டும் பேறுபெற்ருர்கள்.

இத்தலத்திற்குத் தமிழில் ஒரு புராணம் இருக்கின்றது. அது இதுவரை அச்சிடப்பெறவில்லை. அதை ஆக்கியோரும் இன்னாரென்று புலப்படவில்லை. இத்தலத்திற்கு உலா ஒன்று இருந்தது. அதில் சில கண்ணிகள்தான் கிடைத்துள்ளன. எஞ்சியவைகளும் கிடைத்தில. இத்தலத்திற்குப் புறம்பயமாலை என்ற நூலும் உண்டு. அதில் பத்துப் பாடல்களே கிடைத் துள்ளன. அவைகளைத் திருவையாறு, வித்துவான், திரு. வை. சுந்தரேச வாண்டையார் அவர்கள் அச்சிட்டுள்ளார்.

இத்தல விநாயகர்க்குப் பிரளயங்காத்த விநாயகர் என்று பெயர். இவருடைய திருமேனி கடல்படு பொருள்களாகிய இப்பி, சங்கு இவைகளால் ஆக்கப்பெற்றுள்ளது. இவர்க்கு ஆண்டுதோறும் ஆவணி மாதத்துச் சதுர்த்தியில் ஒரு ஆடம் தேன் அபிடேகம் நடைபெற்று வருகின்றது. அவ்வளவு தேனும் அவர் திருமேனியில் சுவறிவிடுகின்றது.

இங்குத் தட்சிணாமூர்த்திக்குத் தனிக்கோயில் சந்நிதியில் இருக்கிறது. வணிகப் பெண்ணின் பொருட்டுச் சிவபெருமான் மதுரை சென்று சாட்சி பகர்ந்ததை உணர்த்தும் நாடகம் ஒன்று இவ்வூரில் வைகாசிமாதத்தில் நடைபெறுகின்றது. அதை மக்கள் வன்னி நாடகம் என்று கூறுகின்றனர்.

இக்கோயில் பணிமகளாராகிய ஒரு அம்மையார் ஆதனூரில் உள்ள தம் காதல் கிழவனிடம் ஒருநாள் மாலைப்பொழுதில் செல்லும்பொழுது மண்ணியாற்றில் ஓடம் விட்டவன், யாரும் இல்லாத நிலையை உணர்ந்து, அவ்வம்மையாருடைய அணிகலன்கள், கூறைகள் முதலியவைகளைப் பறித்துக்கொண்டு அவளைக்கொன்று ஆற்றில் தள்ளிவிட்டான். ஆற்றைக் கடப்பதற்குள் அவனும் தவறி ஆற்றில்விழுந்து இறந்துவிட்டான். இவ்வரலாற்றை உட்கொண்டுதான், நிறைமொழி மாந்தராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள், இவ்வூர்ப் பதிகத்தில்

''குற்றொருவரைக் கூறைகொண்டு கொலைகள் சூழ்ந்த களவெலாஞ்
செற்றொருவரைச் செய்த தீமைகளிம்மை யேவருந்திண்ணமே''

என அருளியுள்ளார்கள் என்பார்கள்.

இவ்வூர்ச் சிவபெருமான், மதுரை சென்று சாட்சிபகர்ந்த வரலாற்றுக் குறிப்பு, சிலப்பதிகாரத்தில்

'' வன்னிமரமும் மடைப்பளியும் சான்றாக
முன்னிறுத்துக் காட்டிய மொய்குழலாள் ''

எனக் குறிக்கப்பட்டுள்ளது.

இவ்வூர்க்குத் திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்று, திருநாவுக்கரசர் பதிகம் ஒன்று, சுந்தரமூர்த்தி சுவாமிகள் பதிகம் ஒன்று ஆக மூன்று பதிகங்கள் இருக்கின்றன. மாணிக்கவாசகர், ''புறம்பயமதனில் அறம்பல அருளியும்'' என இவ்வூரைப் பாடியுள்ளனர். இக்கோயில் மதுரைத் திருஞான சம்பந்த சுவாமிகள் ஆதீனத்திற்கு உட்பட்டது.

கல்வெட்டு: இந்தக் கோயிலிலே 11 கல்வெட்டுக்கள் படி எடுக்கப்பட்டன. எல்லாம் சோழர் கல்வெட்டுக்களே. இராசகேசரிவர்மன்முதல், குலோத்துங்கன்வரை. அதாவது (கி. பி. 10—11) நிலதானங்கள் விளக்குகளுக்காக நிலதானம் பொன்தானம், விளக்குத்தானம், விளக்குக்காகப் பசுதானம் ஆடுதானம் முதலியன கூறப்பெற்றுள்ளன.

இராசகேசரிவர்மன் காலத்தில் ஆலய பண்டாரத்தில் பெற்ற மிச்சப் பொருளினால் பொன்னாபரணங்கள், வெள்ளிப்

பாத்திரங்கள் செய்யப்பட்டன. இராசேந்திரன் காலத்தில் திருப் புறம்பயத்து ஆதித்தேசுவரருக்கு 10 விளக்குகளுக்காகப் பொன்தானம் செய்யப்பட்டது என்று கூறும் கல்வெட்டினுல் இக்கோயிலின் மூர்த்தியின்பெயர் ஆதித்தேசுவரர் என்றும் இக்கோயிலை ஆதித்த சோழன் கட்டியிருக்கலாம் என்றும் ஊகிக்கலாம், உதயேந்திரச் செப்பேட்டின்படி கங்க அரசன் பிருதிவிபதிக்கும் வரகுண பாண்டியனுக்கும் நடந்த போரில் கங்க அரசன் உயிர்நீத்தான். (South Indian Vol II 381).

இந்நாட்டின் பெயர் ராஜேந்திரசிம்ம வளநாட்டு அண்டாற்றுக் கூற்றம் என்றும் காணக்கிடக்கிறது.

இத்திருக்கோயிலில் முதலாம் பராந்தகன், இரண்டாம் ஆதித்தன், முதலாம் இராசராச சோழன், முதற் குலோத்துங்க சோழன், விக்கிரமசோழன், மூன்ரும் இராசராசசோழன், மூன்ரும் இராசேந்திர சோழன் என்னும் பிற்காலச் சோழ மன்னர்களின் காலங்களில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் அறுபத்திரண்டும், விசயநகர வேந்தனுகிய விரூபாட்சிராயன் காலத்தது ஒன்றும் ஆக அறுபத்துமூன்று கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

இவைகளுள் முதற் பராந்தகசோழன் காலத்துக் கல்வெட்டு, இக்கோயிலுக்கு ஆதித்தேச்சுரம் என்னும் பெயர் உண்மையைப் புலப்படுத்துகின்றது. கோயில் திருவிசைப்பாப் பதிகம் பாடிய முதல் கண்டராதித்த சோழதேவரது மனைவியாராகிய செம்பியன்மாதேவியார் புறம்பயத்து இறைவர் நீராடியருளுவதற்கு வெள்ளிக் கலசம் ஒன்றை அளித்துள்ளனர். இரண்டாம் ஆதித்தசோழன் காலத்தில் இருமடிசோழப் பெரும்படையினர் நந்தவனத்தின்பொருட்டு ஆறுமா நிலம் விட்டுள்ளனர். வானவன் மூவேந்த வேளான் என்பான் இத் திருக்கோயிலில் அஷ்டபரிவார தேவர்களை எழுந்தருளுவித்து அவர்களுக்கு நாள்வழிபாட்டிற்கு நிபந்தங்கள் அளித்துள்ளான். பங்குனித் திருநாளுக்கும், திருவேட்டை விழாவிற்கும் திருவெள்ளறை நல்லூர் என்னும் ஊரில் முதற் குலோத்துங்கன் நிலம் அளித்துள்ளான். முடிகொண்ட சோழப் பல்லவரையன் முத்திறத்து அடிகளுக்கும் நாள் வழிபாட்டிற்கு நிபந்தம் அளித்துள்ளான். மூன்ருங்குலோத்துங்கசோழன் காலத்தில்

ஆலங்குடையான் அடிகள் புறம்பயனும், திருச்சிற்றம்பல முடையானும்? ஆளுடைய நாயகர் கூத்தாடுந் தேவர், அவர்தம் பிராட்டியார், பிள்ளையார் முத்துமுளைக்கன்று. அறம்பயந்த பிள்ளையார் இவர்களுக்கு அமாவாசைதோறும் திருமஞ்சனம் ஆடி அருளுவதற்கும் திருவமுதுக்கும் நிலம்கொடுத்துள்ளதோடு இவ்வேந்தன் காலத்தில் வீதிவிடங்க விழுப்பரையனும் அவன் தம்பி அகிலநாயக விழுப்பரையனும் மூன்றும் பிராகாரத்தில் முதல்கோபுர வாசலடியில் அறம் உரைத்த நாயனாரையும், முதற்பிராகாரத்தில் திருவலஞ்சுழி இறைவனையும், புற்றிடங் கொண்டாரையும் எழுந்தருளுவித்து, நாள்வழிபாட்டிற்கு நிலங் களையும் அளித்த செய்தியும் அறியலாம். மூன்றும் இராசராச சோழன் காலத்தில் குந்தவை நல்லூர்ச்சபையார் புறம்பயத்து இறைவனுக்கு நிபந்தம் அளித்துள்ளனர். விஜயநகர வேந்தன் கல்வெட்டு மகவிழாவைப்பற்றிக் குறிப்பிடுகின்றது. இவ்வூரில் ஆண்டார்கடியாபரணர் மடம் ஒன்று இருந்தது. தாமோதர விண்ணகரம் என்ற பெருமாள்கோயில் ஒன்று இருந்தது. இவை போன்ற பல செய்திகள் இவ்வூர்க் கல்வெட்டுக்களில் காணலாம்.

See the Annul reports on south Indian Epigraphy for the years 1897 — Numbers 323 - 357; 1932 — Numbers 146 - 151 South Indian Inscriptions Volume VI 18 - 32; and தமிழ்ப்பொழில்.

## 68 திருப் புறவார்பனங்காட்டூர்

பனைமரத்தைத் தலவிருட்சமாக உடைமையால் பனங் காட்டூர் என்றும், புறுவின்பொருட்டுத் தன் தசையை அரிந் திட்ட சிபிச்சக்கிரவர்த்திக்கு அருள்செய்த பதியாதலின் புறவார் பனங்காட்டூர் என்னும் பெயர்பெற்றது என்றும் கூறுவர். புறவு என்பதுபற்றிய புனைந்துரையோ ?

விழுப்புரம் ரயில் நிலையத்திற்கு வடக்கேயுள்ள முண்டியம் பாக்கம் ரயில் நிலையத்திற்கு வடகிழக்கே ஒருமைல் தூரத்தி லுள்ளது. இது நடுநாட்டுத் தலங்களுள் ஒன்று.

இறைவரது திருப்பெயர் பனங்காட்டீசுவரர். இறைவியார் திருப்பெயர் புறவம்மை.

தருவிருட்சம் பனை.

சூரியன் பூசித்துப் பேறுபெற்றான். இத்தலத்தில் சித்திரை முதல் தேதி முதல் ஏழாந்தேதிவரை ஒவ்வொருநாளும் சூரியன் தோன்றும்பொழுது, சுவாமிமேலும் அம்மன்மேலும் கிரணங்கள் விழுகின்றன.

கல்வெட்டு : இக்கோயிலில் மூன்று கல்வெட்டுக்கள் கிடைத்திருக்கின்றன. குலோத்துங்க சோழன் I தனது எட்டாம் ஆண்டில் ஒரு விளக்கிற்காகப் பணம் கொடுத்துள்ளான். இறைவன்பெயர் திருப் பனங்காடுடைய மகாதேவர் என்று குறிக்கப்பட்டுள்ளது. கோனேரின்மைகொண்டான் (பட்டப்பெயர்) காலத்தில் இக்கோயில், திருப்புறவார் பனங்காடுடையார் கோயில் என வழங்கப்பட்டது. அரசன் நலத்தின் பொருட்டுக் கோதண்டராமன் சந்தி என்ற விழா நடத்துவதற்காக நிலதானம் செய்யப்பட்டது.

பரகேசரி ஆதி ராஜேந்திர தேவன் மூன்றாம் ஆண்டில் நிலதானம் செய்யப்பட்டது.

## 69 திருப் பெரும்புலியூர்

புலிக்கால் முனிவரால் பூசிக்கப்பெற்றமையால் இப்பெயர் பெற்றது. சிதம்பரம் பெரும்பற்றப்புலியூர் என்று பெயர் பெறும். அதனின்று இது வேறு ஆகும்.

திருவையாற்றிற்கு வடமேற்கே சுமார் இரண்டுமைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவிரி வடகரைத் தலங்களுள் ஒன்றாகும்.

இறைவரது திருப்பெயர் வியாக்ரபுரீசுவரர். இறைவியாரது திருப்பெயர் சௌந்தரியநாயகி.

இதற்கு ஞானசம்பந்தர் அருளிய பதிகம் ஒன்று இருக்கிறது.

# 70 திருமங்கலக்குடி

இது மாயூரம் கும்பகோணம் ரயில்பாதையில், ஆடுதுறை ரயில் நிலையத்திற்கு வடக்கே சுமார் மூன்றுமைல் தூரத்தில் உள்ளது. காவிரி வடகரைத் தலங்களுள் ஒன்று.

இறைவரது திருப்பெயர் புராணேசுரர். இத்திருப்பெயர், இவ்வூர்ப் பதிகம் முதல் திருப்பாட்டில்,

> "நீரின் மாமுநி வன்னெடுங் கைகொடு நீர்தனைப்
> பூரித் தாட்டி யர்ச்சிக்க விருந்த புராணனே"

என ஞானசம்பந்தரால் எடுத்தாளப்பட்டுள்ளது. இதிலுள்ள வரலாறு குறிப்புரையில் உணர்த்தப்பட்டது. இறைவியாரது திருப்பெயர் மங்களநாயகி.

தீர்த்தம் காவிரி.

காளி, சூரியன், திருமால், பிரமன், அகத்தியர் இவர்களால் அர்ச்சிக்கப்பெற்றது. இச்செய்தி,

> "மங்க லக்குடி யீசனை மாகாளி
> வெங்கதிர்ச் செல்வன் விண்ணொடு மண்ணுநேர்
> சங்கு சக்கிர தாரி சதுமுக
> னங்க கத்திய னும்மர்ச்சித் தாரன்றே"

என்னும் இவ்வூர்க்கு உரிய அப்பர்பெருமானின் குறுந்தொகைப் பாடலால் தெரிகின்றது. இத்தலத்திற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று அப்பர் பதிகம் ஒன்று ஆக இரண்டு பதிகங்கள் இருக்கின்றன.

கல்வெட்டு: இக்கோயிலில் 6 கல்வெட்டுக்கள் படியெடுக்கப்பட்டுள்ளன. அவையாவன சோழர் 1, பல்லவர் 1, விஜயநகரத்தரசன் 1, மற்றையவற்றிற்குப் பெயரில்லை.

சோழர்களில் ராஜராஜன் 24 ஆம் ஆண்டுக் கல்வெட்டில் முந்திய ஆண்டில் பஞ்சம் ஏற்பட்டதால் கோயில் சொத்தைச் சூறையாடிய சிலரை நீதிபதிகள் பரிகாரங் கேட்டதை அறிகிறோம்.

பல்லவன் கோப்பெருஞ்சிங்கன் 25ம் ஆண்டில் இக் கோயிலுக்கு பெருமங்கலம் தொண்டைமான் நிலம் வாங்கித் தருமம் செய்தான். கிருஷ்ணதேவராயர் 1439 சகம் ஆண்டில் கோயில்களுக்கு வரி தள்ளுபடிசெய்தான். சுங்கந்தவிர்த்த குலோத்துங்கன் தனது 16 ஆம் ஆண்டில் கோயிலுக்குச் சில வரிகள் விதித்து அவைகளை அளித்தான்.

## 71 திரு மணஞ்சேரி

மாயூரம் கும்பகோணம் ரயில்பாதையில், குத்தாலம் ரயில் நிலையத்திற்கு வடகிழக்கே சுமார் மூன்றரைமைல் தூரத்தில் இருக்கிறது. இது காவிரியின் வடகரைத்தலங்களுள் ஒன்று. இறைவர் திருப்பெயர் அருள்வள்ளல்நாதர். இறைவியார் திருப் பெயர் யாழினும்மென்மொழியம்மை.

மன்மதன் பூசித்துப் பேறுபெற்றான். ஆமை பூசித்து மனித உருப்பெற்றது. இதற்கு ஞானசம்பந்தர் அருளிய பதிகம் ஒன்று. அப்பர் அருளிய பதிகம் ஒன்று ஆக இருபதிகங்கள் இருக்கின்றன.

கல்வெட்டு: இவ்வூரில் 28 கல்வெட்டுகள் படியெடுக்கப் பட்டிருக்கின்றன. அனைத்தும் சோழர்களுடைய கல்வெட்டுக் களே. (கி. பி. 11—12) நாடு - விருதராசபயங்கரநாடு, குறுக்கை நாடு, ஊர் திருமணஞ்சேரி, சுவாமிபெயர் திருக்கற்றளிமாதேவர் பரமசுவாமி என்பன. மற்ற ஊர்கள் கங்கைகொண்ட சோழ சதுர்வேதிமங்கலம், விடேல் விடுகுதேவிமங்கலம், கரிகாலசோழ சதுர்வேதிமங்கலம், திரு எதிர்கொள்பாடி என்பன.

விளக்குக்காகப் பணதானம் 1000, சில யோகிகள் தவசிகள் ஆண்டுக்கொருமுறை பங்குனிமாதத்தில் உணவுக்காக நில தானம், கோயிலுக்கு நிலதானம் (4—5—1045) சபையார் நில தானம், (7—2—1123) திருமந்திர ஓலை சொற்படி நிலதானம், விளக்குக்காக 96 ஆடு தானம், கோயிலுக்குப் பொன்கிரீடம், உடைய பிராட்டியார் சொற்படி சந்தனம், துணி, எண்ணெய், திருவிளக்குக்காக 16 கழஞ்சு பொன் தானம், கோயிலில் தினப்படி பூசைக்குத் திட்டம், விளக்குக்கும் அதன் பீடத் திற்கும், எண்ணெய்க்குமாக 96 ஆடு தானம், விளக்குப்பீடம்

இவைகளுக்கு 45 காசு தானம், முழவு, விளக்கு, மணி, மூர்த்தி இவைகள் தானம், கல்தானம், இரவு விளக்குத் தானம், குகை கட்டப் பணமும் நிலமும் தானம் முதலியன.

இங்கிருந்த திருமாலைக் கரிகால்சோழ விண்ணகராழ்வான் என்பர். கோயில் பெயர் மணவாளப்பெருமாள். அதன் அதிகாரியின் பெயர் கந்தாடைநம்பி திருமணஞ்சேரி பிச்சன் என்பான் திருப்பணிசெய்தான். கல்வெட்ட ஒரு கல்லும் கொடுக்கப் பட்டது. கோயிலில் குடமுழா வாசிப்பவர் பெயர் கூறப்பட்டுள்ளது. உடைய பிராட்டி செம்பியன் மாதேவியார் கோயில் செலவு திட்டங்களை ஏற்படுத்தினர். நல்லமநாயக்கர் கோபுரம் கட்டினர். ஒரு கல்வெட்டில் அக்கினிபுராண சுலோகங்கள் தீட்டப்பட்டுள்ளன. ஆதித்ததேவன் நாய்ச்சியம்மன் கோயில் கட்டுவதற்கும் ஆலாலசுந்தரம் குகை கட்டுவதற்கும் பணமும் நிலமும் கொடுத்தார்.

## 72 திரு மயிலாப்பூர்

உமாதேவியார் மயில் உருவமாய் இறைவனைப் பூசித்த காரணம்பற்றி இப்பெயர்பெற்றது. இது மயிலாப்பு என்றும் தேவாரத்தில் கூறப்பெற்றுள்ளது. மயிலார்ப்பூரோ? மயில் யாப்பூரோ?

சென்னைக்குத் தெற்கே நான்குமைல் தூரத்தில் இருக்கின்றது.

இறைவரது திருப்பெயர் கபாலீசுவரர். இறைவியார் திருப்பெயர் கற்பகவல்லியம்மை.

தலவிருட்சம் புன்னைமரம். வடக்குப் பிராகாரத்தில் இருக்கிறது.

இது வாயிலார் நாயனர் அவதாரஞ்செய்த திருப்பதி. சிவநேசச் செட்டியாருடைய மகளாகிய பூம்பாவை அரவு கடித்து இறந்தபோது, அவர் தந்தையார், அம்மையாரது உடலை எரித்து எலும்பையும் சாம்பலையும் புது மட்பாண்டத்தில் வைத்திருந்தார். அங்கு எழுந்தருளிய திருஞானசம்பந்தர் "மட்டிட்ட புன்னையங்கானல்" என்று தொடங்கும் பதிகம்

பாடி, அவரது எலும்பைப் பெண்ணுருவாக்கியருளினார். இராம பிரான் வழிபட்டு, ஐப்பசி ஓணநாளில் பிரமோற்சவம் நடத்து வித்தார்.

பங்குனிமாதத்தில் அறுபான்மும்மை நாயன்மார்களுடைய திருவிழா, சிறப்பாக நடைபெற்றுவருகின்றது. ஊரின் பெயர் மயிலாப்பூர் ஆயினும் அங்குள்ள கோயிலுக்குக் கபாலீச்சரம் என்று பெயர். மயிலாப்பூர், மயிலாப்பு என்று வழங்கப்பெற் றிருப்பது, அப்பர் சுவாமிகளது திருஒற்றியூர்த் திருத்தாண் டகம் ஆறாம் திருப்பாட்டில் கூறப்பட்டுள்ளது. அப்பகுதி

"வடிவுடைய மங்கையுந் தாமுமெல்லாம்
வருவாரை யெதிர்கண்டோம் மயிலாப்புள்ளே"

என்பதாகும். இதையே

"மங்குல் மதிதவழும் மாடவீதி
மயிலாப்பி லுள்ளார் மருகலுளார்"

எனக் கோயில்புக்க திருத்தாண்டகத்திலும் காணலாம்.

## 73 திரு மருகல்

இது மருகல் என்னும் ஒருவகை வாழையைத் தலமரமாகக் கொண்டுள்ளமையால் இப்பெயர் பெற்றது.

மாயூரம்—பேரளம் ரயில் பாதையில், நன்னிலம் ரயில் நிலயத்திற்குக் கிழக்கே ஏழுமைல் தூரத்தில் இருக்கின்றது.

இறைவரின் திருப்பெயர் மாணிக்கவண்ணர். இறைவி யாரின் திருப்பெயர் வண்டுவார்குழலி.

தலவிருட்சம் வாழை.

திருமருகலுக்கு அருகிலுள்ள வைப்பூர் என்னும் ஊரில் தாமன் என்னும் வணிகன் ஒருவன் இருந்தான். அவனுக்கு ஏழு பெண்கள் இருந்தார்கள். அவர்களுள் மூத்த மகளை அவ்வணிகன் தன் மருமகனுக்குக் கொடுப்பதாக வாக்களித்துக்

கொடாமல், பணம்பெற்று வேறு ஒருவனுக்குக் கொடுத்து விட்டான். இங்ஙனமே ஏனைய ஐந்து பெண்களையும் மணஞ் செய்து கொடுத்துவிட்டான். ஏழாவது பெண் உளம் தளர்ந்து தாய் தந்தையர்க்குத் தெரியாமல் மருமகனோடு உடன் வந்து விட்டாள். வந்தவர்கள் மருகல் பெருமான் கோயிலின் பக்கத்தில் ஒரு மடத்தில் தூங்கினார்கள். அதுபொழுது அம்மருமகன் அரவு தீண்டப்பெற்று ஆவி நீங்கும் தன்மையைக் கண்ட அப்பெண் அயர்ந்து சிவனருளையே சிந்தித்துப் புலம்பினாள். அப் புலம்பலைக் கேட்டு அங்கு முன்னரே எழுந்தருளியிருந்த ஞான சம்பந்தப் பெருந்தகையார் செய்தியை அறிந்து "சடையா யெனுமால்" என்று தொடங்கும் பதிகம்பாடி அம்மருமகனை உயிர்ப்பித்து அவ்விருவர்க்கும் மணத்தை முடித்துவைத்தருளினார். இத்தலத்திற்குத் திருஞானசம்பந்தர் பதிகம் இரண்டு, திருநாவுக்கரசு நாயனார் பதிகம் ஒன்று ஆக மூன்று பதிகங்கள் இருக்கின்றன. இப்பதிக்குரிய ஞானசம்பந்தர் பதிகங்கள் இரண்டனுள் "அங்கமும் வேதமும்" என்று தொடங்கும் பதிகம் திருமருகலையும் திருச்செங்காட்டங்குடியையும்சேர்த்துப் பாடியதாகும்.

கல்வெட்டு: இக்கோயிலின் கீழைக்கோபுரம் 5 நிலைகளும் 68 அடி உயரமும் உள்ளது. இக்கோயில் 252×182 அடி அளவுள்ள அறையினைக் கொண்டது. முன்னிலையில் 160×176 அடி அளவுள்ள தெப்பக்குளம் ஒன்றுள்ளது. இக்கோயிலின் கீழைக்கோபுரத்தில் ஒரு கல்வெட்டு இருக்கிறது. அது புதியது. சகம் 1617ல் தஞ்சை மராட்டிய மன்னர் காலத்தில் வினைதீர்த்த முதலியார் சபையில் அபிஷேகக்கட்டளையும், அகோர சிவ பண்டார சுவாமிக்கு இரண்டு வகையில் 400 பொன் வழங்கிய தாகக் கண்டிருக்கிறது.

## 74 திரு மழபாடி

சேரர் கிளையினராகிய மழவர் பாடி செய்து கொண்டிருந்தமையால் இப்பெயர் பெற்றது. பாடி = தங்குமிடம். பாடி எனினும் பாசறை எனினும் ஒக்கும். மழுநிர்த்தஞ்செய்த தலமாதலால் மழுவாடி ஆயிற்று என்பர்.

இது திருவையாற்றிற்கு வடமேற்கே சுமார் நான்குமைல் தூரத்தில் கொள்ளிடப்பேராற்றின் வடகரையில் இருக்கின்றது. (காவிரி வடகரைத் தலங்களுள் ஒன்று).

இறைவரின் திருப்பெயர் வயிரத்தூண்நாதர். இத் திருப்பெயரை, இவ்வூர்த் திருத்தாண்டகத்தில் அப்பர் பெருமான், "மலையடுத்த மழபாடி வயிரத்தூணே", "மறைகலந்த மழபாடி வயிரத்தூணே" முதலான தொடர்களில் எடுத்து ஆண்டுள்ளனர். இதை வடமொழியில் வஜ்ரஸ்தம்பேசுவரர் என்று கூறுவர். பிரமனுலகத்திருந்த சிவலிங்கத்தைப் புருஷாமிருகம் இங்குக் கொண்டுவந்து எழுந்தருளுவித்தது அதை மீளவும் கொண்டுபோக, பிரமதேவர் அதைப்பெயர்த்து எடுக்க முயன்றார். அதை எடுக்க முடியாமை கண்டு 'இது வயிரத் தூணோ' என்று பிரமதேவன் வியந்தமையால் இப்பெயர் பெற்றது. இறைவியாரின் திருப்பெயர் அழகம்மை.

தீர்த்தம் கொள்ளிடப்பேராறு.

தலவிருட்சம் பனை.

இந்திரன், திருமால் இவர்கள் வழிபட்டுப் பேறு எய்தினர். திருநந்திதேவர் திருவையாற்றிலிருந்து எழுந்தருளி – சுயசை அம்மையாரை மணஞ்செய்துகொண்ட தலம். சுந்தரமூர்த்தி நாயனார், திருவாலம்பொழிலில் எழுந்தருளியிருக்க, மழபாடி இறைவன், அவரது கனவில் தோன்றி, 'மழபாடிக்கு வர மறந்தனையோ' என்றுகூற, உடனே சுந்தரர் "பொன்னார்மேனியனே" என்று தொடங்கும் பதிகம்பாடி வழிபட்ட பதி. திருஞானசம்பந்தர் பதிகம் மூன்று, திருநாவுக்கரசுநாயனார் திருத்தாண்டகப் பதிகம் இரண்டு, சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம் ஒன்று ஆக ஆறு பதிகங்களைக்கொண்ட பெருமையுடையது.

இத்தலத்திற்கு ஸ்ரீ கமலை ஞானப்பிரகாச தேசிகர் அவர்களால் இயற்றப்பட்ட தலபுராணம் ஒன்று இருக்கின்றது. அது இனிய எளிய தமிழ் நூல். அச்சில் வெளிவந்துள்ளது.

நந்தியம்பெருமானின் திருமணத்திருவிழா ஒவ்வொரு ஆண்டிலும் பங்குனி மாதத்தில் நடைபெறுகின்றது.

கல்வெட்டு: இக்கோயிலில் சோழர், பாண்டியர், ஹொய்சளர் ஆகியோரது 30 கல்வெட்டுக்கள் படி எடுக்கப்பட்டுள்ளன. ஹொய்சாளர்கள் கண்ணனூரைத் தலைநகரமாகக்கொண்டிருந்ததால் இந்த ஊரில் அவர்களின் கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அவைகளில் சிங்கண தண்டநாயகன் முதலிய படைத்தலைவர்களின் பெயர்கள் இக்கல்வெட்டுகளில் வருகின்றன. அவர்களுக்கு முன் பாண்டியர்கள் வந்திருக்கின்றனர். ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் 19—7—1261, 29—10—1253, 19—4—1253 ஆகிய நாட்களில் கல்வெட்டு வைத்துள்ளான். இங்கு இராசராசன், இராசேந்திரன், இராசாதிஇராசன், முதலாம் குலோத்துங்கன் 2-ஆம் 3-ஆம் குலோத்துங்கன் ஆகியோரது கல்வெட்டுக்கள் இருக்கின்றன. சோழர்களில் ஒரு அரசன் இருக்கும்போதே மற்றவன் ஆளத்தொடங்கியதை அறிகிறோம். இராசேந்திரன் காலத்திலேயே இராசாதிராசன் பட்டம் எய்தினன் என ஒரு கல்வெட்டால் தெரிகிறது. இராசேந்திரன், இரண்டாம் கிருஷ்ணன் ஆகியோர் கோயிலுக்குப் பொன், வெள்ளிப் பாத்திரங்கள் அளித்துள்ளார்கள். இக் கோயிலுக்குப் பல அரசிகளும் தானஞ்செய்திருக்கிறார்கள். ஹொய்சள அரசன் நரசிம்மன் காலத்தில் ஒருவன் ஒருகோயிலைக் கட்டிய செய்தி இங்குள்ள கல்வெட்டில் அறிகிறோம்.

## 75 திரு மறைக்காடு

மறைகள் பூசித்த காரணம்பற்றி இப்பெயர்பெற்றது. இச்செய்தி "சதுரம் மறைதான்றுதிசெய்து வணங்கு, மதுரம் பொழில் சூழ் மறைக்காட்டுறைமைந்தா" என்னும் திருஞானசம்பந்தரது இவ்வூர்த் தேவாரப்பகுதியால் (பண்—இந்தளம். திருப்பாட்டு 1) விளங்குகின்றது.

திருத்துறைப்பூண்டி, வேதாரணியம் ரயில்பாதையில் வேதாரணியம் ரயில் நிலையத்திற்கு மேற்கே அரைமைல் தூரத்தில் இருக்கின்றது.

இறைவரின் திருப்பெயர் மறைக்காட்டுமணாளர். இத் திருப்பெயர், இவ்வூர்க்குரிய அப்பர்பெருமானின் "மறைக்காட்டுறையுமணாளன்றானே" என்னும் திருத்தாண்டகத்தால்

அறியக்கிடக்கிறது. வேதாரண்யேசுவரர் என்னும் வேறுபெயர் உண்டு. இறைவியாரின் திருப்பெயர் யாழைப்பழித்தமொழி யம்மை. இத்திருப்பெயரைச் சுந்தரமூர்த்திநாயனுர், இவ்வூர்ப் பதிகத்தில் முதலாம் திருப்பாட்டில் "யாழைப்பழித்தன்ன மொழிமங்கை யொரு பங்கன்" என எடுத்தாண்டுள்ளார்

தீர்த்தம் வேததீர்த்தம், கடல்துறை, மணிகர்ணிகை, தேவ பூடணம் என்பன.

தலவிருட்சம் வன்னி.

பார்வதிதேவியாரின் திருமணத்தின் பொருட்டுத் தேவரும் பிறரும் கூடிய கூட்டத்தின் காரணமாக வடதிசை உயர்ந்து, தென்திசை தாழ்ந்தது. அதைச் சமன்செய்யச் சிவபெருமான் அகத்தியரைத் தென்திசைக்கு அனுப்பினுர். அதுபொழுது அகத்தியர்பெருமானது மணக்கோலத்தைக்காண முடியாது போவது பற்றிவருந்தினுர். அப்பொழுது சிவபெருமான் மணக் கோலத்தைத் திருமறைக்காட்டில் காட்டியருள்வதாகத் திருவாய் மலர்ந்து அதன்படி அக்கோலத்தைக் காட்டியருளப் பெற்ருர். மணவாளக்கோலம் மூலத்தானத்தில் சிவலிங்கப் பெருமானுக்குப் பின்பக்கத்தில் இருக்கின்றது. இராமர் இராவணனைக்கொன்ற பழி நீங்கப் பூசித்த தலமாதல் பற்றி இது கோடிக்கரை என்றும் பேசப்படும். இங்குள்ள மணி கர்ணிகைத் தீர்த்தத்தில் மூழ்கி, கங்கை புனித்மாயினுள். இங்கு உள்ள தேவபூடணத்தீர்த்தத்தில் மூழ்கி, காவிரி பரிசுத்தத் தன்மை எய்தினள். பிர்மதேவர் பூசித்துப் பேறுபெற்றனர். வேதங்களால் பூசிக்கப்பெற்றுத் திருக்காப்பிடப்பட்டிருந்த திருக்கதவை, திருஞானசம்பந்தர் கட்டளைப்படி திருநாவுக்கரசர் "பண்ணினேர் மொழியாளுமைபங்கரோ" என்று தொடங்கிப் பத்துப்பாடல்களைப் பாடிக் கதவைத் திறப்பித்தார். ஞானசம் பந்தர் தேவாரம் பாடி அதை அடைப்பித்தார். முசுகுந்தசக்கிர வர்த்தி தியாகேசப்பெருமானை எழுந்தருளுவித்த ஏழுவிடங்கத் தலங்களுள் ஒன்று. தியாகர்புவனவிடங்கர். நடனம் ஹம்ச நடனம். சுந்தரமூர்த்தி நாயனுருடன், சேரமான்பெருமாள் நாயனுரும் வழிபட்டனர். இதற்குத் திருஞானசம்பந்தர் பதிகம் நான்கு, திருநாவுக்கரசர் பதிகம் ஐந்து, சுந்தரர் பதிகம் ஒன்று ஆகப் பத்துப் பதிகங்கள் இருக்கின்றன.

இத்திருக்கோயிலில் எரியும் விளக்கில் இருந்த நெய்யை உண்ணுதற்குவந்த எலி, அணையும் நிலையில் இருந்த திரியைத் தூண்டி, அதன் வினைவாய் மறு பிறப்பில் மாவலிச் சக்கிர வர்த்தியாகப் பிறந்தது. இச்செய்தியை அப்பர் சுவாமிகள் திருக் குறுக்கைத் திருநேரிசையில் எட்டாம் திருப்பாட்டில்,

"நிறைமறைக் காடு தன்னி லீண்டெரி தீபந் தன்னைக்
கறைநிறத் தெலிதன் மூக்குச் சுட்டிடக் கனன்று தூண்ட
நிறைகடல் மண்ணும் விண்ணும் நீண்டவா னுலக மெல்லாங்
குறைவறக் கொடுப்பர் போலுங் குறுக்கைவீ ரட்ட னாரே"

என அருளியுள்ளார்கள்.

தலபுராணம், இவ்வூரில் தோன்றி யருளியவரும் திருவிளையாடற் புராணம் எழுதியவருமாகிய பரஞ்சோதி முனிவரால் எழுதப்பெற்றது. அச்சில் வெளிவந்துள்ளது. மறைசையந்தாதி இது சின்னத்தம்பிப் புலவரால் எழுதப்பெற்றது. புலவர் பெருமக்கள் பெரிதும் பாராட்டும் நூல் இவை.

## 76 திரு மாந்துறை

இது வடகரை மாந்துறை என்று அழைக்கப்பெறும். காவிரிக்குத் தென்கரையில் ஒரு மாந்துறை இருக்கின்றது. அதனின்று இதை வேறு பிரித்துக் காட்டுதற்கு வடகரை மாந்துறை என்னும் பெயர் வழங்குகிறது. தென்கரைமாந்துறை வைப்புத் தலமாகும். தனக்கெனத் தனிப்பதிகமின்றி, வேறு ஓர் பதியில் வைத்துப் பாடப்பட்டது வைப்புத்தலம் என்னும் பெயர்பெறும்.

இது லால்குடி ரயில் நிலையத்திற்கு மேற்கில் மூன்றுமைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவிரி வடகரையில் ஐம்பத்தெட்டாவது தலமாகும்.

இறைவர் திருப்பெயர் ஆம்பிரவனநாதர். இறைவி திருப்பெயர் அழகம்மை.

மருதவானவரும் (மருத்துக்களும்) கண்ணுவ முனிவரும் பூசித்துப் பேறுபெற்றனர். இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கின்றது.

இதற்கு ஆம்பிரவனம் என்ற வேறு பெயரும் உண்டு. ஆம்பிரவனம் என்ருல் மாமரங்கள் உள்ள காடு என்று பொருள்.

கல்வெட்டு: (22—234/27) சோழர் கல்வெட்டுக்கள் இரண்டு படியெடுக்கப்பட்டன. இராசராசன் பதினைந்தாம் ஆண்டு வானவ நாயக்கன் பெருந்திருக் குடிகள் வரி கொடுக்க முடியாது வெளியேறவே, மீண்டும் அவர்களை அங்கே குடி வைக்கப்பட்டமை தெரிவிக்கிறது.

இராசராசன் பதினுரும் ஆண்டுக் கல்வெட்டு நந்தவனம் வைப்பதற்காகக் கொடுத்த நிலத்தின் வரியைத் தள்ளுபடி செய்ததைக் கூறுகிறது.

## 77 திரு மீயச்சூர்

இது மாயூரம் பேரளம் ரயில் பாதையில், பேரளம் ரயில் நிலையத்திற்கு மேற்கே சுமார் ஒன்றரை மைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவிரித் தென்கரையிலுள்ள ஐம்பத்து மூன்ருவது தலம்.

இறைவர் திருப்பெயர் முயற்சிநாதர். இறைவி திருப்பெயர் சுந்தரநாயகி.

தலவிருட்சம் வில்வம்.

தீர்த்தம் சூரியபுட்கரிணி.

சூரியன் வழிபட்டுப் பேறு எய்திய தலம். இதற்கு ஞான சம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கின்றது.

இத் திருமீயச்சூர் கோயில் மூலவிமானம் கஜப்பிரஷ்ட விமானமாகும். இக் கோயிலிலே மீயச்சூர் இளங்கோயில்

என்னும் வேறு கோயில் ஒன்று வடக்குப் பிராகாரத்தில் இருக்கிறது. இங்குள்ள இறைவர் சகலபுவனேச்சுவரர். இறைவியார் மின்னுமேகலாம்பா. இது காளியால் பூசிக்கப்பட்டது. இதற்குத்திருநாவுக்கரசர் பாடிய பதிகம் ஒன்று இருக்கின்றது.

கல்வெட்டு: இக் கோயிலில் ஏழு கல்வெட்டுக்கள் படியெடுக்கப்பட்டுள்ளன. பரகேசரி, இராசகேசரி, சோழர்களில் நான்கும், பாண்டியர்களில் மூன்றும் ஆக ஏழு ஆகும், அவை கோயிலுக்கு நிலதானம் விளக்குகளுக்கு நிலதானம் இவைகளைக் குறித்தவைகளாக இருக்கின்றன. பதின்மூன்றும் ஆண்டுத்தொடக்கத்திலேயே பாண்டியராட்சி இங்கேவந்துவிட்டது. இடைக்காலச் சோழர்களின் கல்வெட்டுக்கள்தெரியவில்லை.

## 78 திரு முதுகுன்றம்

சிவபெருமானால் முதலில் படைக்கப்பெற்றது ஆதலின் இப்பெயர் எய்திற்று. இது விருத்தாசலம், என்றும் வழங்கப்பெறும்.

இது விழுப்புரம்—திருச்சிராப்பள்ளி குறுக்கு வழியில் (Chord line) விருத்தாசலம் ரயில் நிலயத்திற்குச் சுமார் ஒரு மைல் தூரத்தில் இருக்கின்றது. இது நடுநாட்டுத் தலங்களுள் ஒன்று.

இறைவர் திருப்பெயர் பழமலைநாதர். இறைவி திருப்பெயர் பெரியநாயகி.

தலவிருட்சம் வன்னி.

தீர்த்தம் மணிமுத்தாறு.

திருஞானசம்பந்தப் பெருந்தகையார் இத்தலத்தை அடையும்போதும், வலஞ் செய்தபோதும், வழிபட்டபோதும் தனித் தனிப் பதிகங்கள் பாடியருளிய பெருமை உடையது. இங்கு இறப்பவர்களுக்கெல்லாம் உமாதேவியார் தமது ஆடையால் வீசி இளைப்பாற்ற, சிவபெருமான் அவர்களுக்கு ஐந்தெழுத்தை

உபதேசித்துத் தமது உருவமாக்கும் திருப்பதி ஆதலால் இது காசியினும் மேம்பட்டதாகும். சுந்தரமூர்த்தி சுவாமிகள் இறைவனைப்பாடிப் பன்னீராயிரம் பொன்பெற்று அவைகளை மணிமுத்தநதியில் இட்டுத் திருவாரூர்க் கமலாலயத்தில் பெற்றார். இதற்குத் திருஞானசம்பந்தர் பாடிய திருப்பதிகங்கள் ஏழு, திருநாவுக்கரசர் பாடிய பதிகங்கள் ஒன்று, சுந்தரமூர்த்தி நாயனார் அருளிய பதிகங்கள்மூன்று. ஆக பதினொரு பதிகங்கள் இருக்கின்றன.

துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள், பழமலை அந்தாதி, பிட்சாடன நவமணிமாலை, கொச்சக்கலிப்பா, பெரியநாயகி யம்மை நெடுங்கழி நெடிலாசிரிய விருத்தம், பெரியநாயகி யம்மை கட்டளைக் கலித்துறை என்னும் நூல்களை இயற்றியுள்ளனர். அவைகளெல்லாம் அச்சில் வெளிவந்துள்ளன. தலபுராணம் ஞானக்கூத்தச் சிவப்பிரகாசரால் எழுதப்பெற்றது. அச்சில் வெளிவந்துள்ளது.

கல்வெட்டு: இக்கோயிலில் எழுபத்துநான்குகல்வெட்டுக்கள் உள்ளன. அவைகள் சோழர்கள், காடவர், பாண்டியர், விஜய நகரத்தார், குறுநில மன்னர்கள். முதலியோர்களது கல்வெட்டுக்களாகும். அவைகள் பொதுவாக உரைநடையிலும் மெய்க் கீர்த்திகள் அகவலிலும். ஒரு செய்யுளிலுமாக இருக்கின்றன. இவைகளினால் கணக்கற்ற பழைய செய்திகள் கிடைக்கின்றன. திருப்பணிகள். குருவிழாக்கள் மன்னராட்சிகள், வழிபட்டோர் பெயர்கள், அரசர் வெற்றிகள் நிலவிற்பனை, நிலதானம் ஆகிய வற்றைப்பற்றிய செய்திகளையெல்லாம் தெரிவிக்கின்றன. செம்பியன் மாதேவியாரால் இக்கோயிலுக்கு ஒரு திருப்பணி நடந்துள்ளது. வீரசேகர காடவராயன் (1186) அதிகமான் நாட்டையும் கடலையும் அழித்ததாகக் கூறும் கல்வெட்டுச் செய்தியொன்று உள்ளது.

## 79 தென்திரு முல்லைவாயில்

சீகாழிக்குக் கிழக்கே எட்டுமைல் தூரத்தில் கடற்கரையில் இருக்கின்றது. இது காவிரித் தென்கரைத் தலங்களுள் ஏழாவது ஆகும்.

இறைவர் திருப்பெயர் முல்லைவனநாதர். இறைவியாரின் திருப்பெயர் கோதையம்மை.

தலவிருட்சம் முல்லை.

உமாதேவி வழிபட்டுத் தட்சிணாமூர்த்தியிடம் ஐந்தெழுத்து உபதேசம் பெற்றதலம். இதற்குத் திருஞானசம்பந்தர் பதிகம் மாத்திரம் இருக்கிறது.

சோழநாடு, தஞ்சை மாவட்டம், சீகாழி தாலூகா. கோயிலின்வாயில் கிழக்குப் புறத்திலுள்ளது. கல்லாலான திருப்பணி. அம்மனுக்குத் தனிப்பிராகாரமுண்டு. கோயிலுக்கும் கடற்கரைக்கும் இடையில் சிந்தனைப் பிள்ளையார் கோயில் ஒன்று இருக்கின்றது. வடக்கே நந்தகோபால தீர்த்தம் என்ற குளம் இருக்கிறது.

## 80 திரு மூக்கீச்சுரம்

திருச்சிராப்பள்ளிக்கு மேற்கே ஒன்றரை மைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவிரியின் தென்கரைத் தலங்களில் ஐந்தாவது ஆகும். இது உறையூரிலுள்ள திருக்கோயிலாகும்.

இறைவர் பஞ்சவர்ணேசுவரர். இறைவியார் காந்திமதியம்மை.

தலவிருக்ஷம் வில்வம்.

தீர்த்தம் சிவதீர்த்தம்.

இது புகழ்ச்சோழநாயனார் அவதரித்த திருப்பதி. தமிழ் நாட்டு மூவேந்தரும் சேர்ந்து வழிபட்ட பதி. உதங்க முனிவர்க்குச் சிவபெருமான் ஐந்து காலங்களில் ஐந்து வர்ணமாகக் காட்சியளித்த தலம். கத்துருவின் மகன் கார்க்கோடகன் வந்து பூசித்துப் பேறுபெற்றான். வேதச் சுருதி என்னும் அந்தணன் பூசித்துப் பேயுரு நீங்கப்பெற்றான்.

வீரவாதித்தன் என்னும் சோழஅரசன் உலாவரும்பொழுது அவனது யானையைக் கோழி வென்றமையால் இத்தலத்திற்குக்

கோழியூர் என்ற வேறு பெயரும் உண்டு. இதற்கு ஞான சம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கின்றது.

திருசிரபுரம் மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளை இதற்குத் தலபுராணம் எழுதியுள்ளார்கள். அது அச்சில் வெளிவந்துள்ளது. உறையூர்க் காந்திமதியம்மை பிள்ளைத் தமிழையும் அவர் செய்திருக்கிருர். இன்னும் பல பிரபந்தங்கள் இக்கோயிலுக்கு உண்டு.

பழுதுபட்டிருந்த இந்தக் கோயிலைத் தேவகோட்டையார் திருப்பணி செய்துள்ளனர். 4—5—1922ல் இக்கோயிலுக்குக் குடமுழுக்கு நடந்தது. கல்தூண்களில் புராண வரலாறுகள் செதுக்கப்பட்டிருக்கின்றன.

கல்வெட்டு: இக்கோயிலில் ஒன்பது கல்வெட்டுக்கள் படியெடுக்கப்பட்டன. அவையெல்லாம் சோழர்களின் கல்வெட்டுக்களே, பரகேசரிவர்மன் கல்வெட்டில் உறையூர் திருவுடைத் தலைப்பெருமாளுக்கு நித்திய பூசைக்கான திட்டம் வகுக்கப்பட்டுள்ளது: ராஜேந்திரன் காலத்தில் அதிகுண கற்பக நல்லூர் இக்கோயிலுக்குத் தரப்பட்டது.

## 81 திரு வலஞ்சுழி

பிலத்தினுள் சென்றுவிட்ட காவிரி வெளிப்படும் பொருட்டு ஏரண்ட முனிவர் பிலத்தினுள் இறங்க, காவிரி வெளிவந்து வலமாகச் சுழித்துக்கொண்டு சென்ற காரணத்தால் இப்பெயர் பெற்றது.

இது கும்பகோணம்—தஞ்சாவூர் ரயில் பாதையில், சுவாமிமலை ரயில் நிலையத்திற்கு வடக்கே அரைமைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவிரியின் தென்கரைத் தலங்களுள் 25-ஆவது ஆகும்.

இறைவர் கற்பகநாதேசுரர். இறைவியார் பெரியநாயகி.

தீர்த்தம்: காவிரி.

அமுதம் பெறுதற் பொருட்டுத் தேவர்கள் பாற்கடலைக் கடைந்தபொழுது பூசித்த வெள்ளைப் பிள்ளையாரை இந்திரன் இங்குக் கொண்டுவந்து எழுந்தருளுவித்து வழிபட்டான்.

வெள்ளைப் பிள்ளையார் கோயில் மிகவும் வேலைப்பாடுடையது. இக்கோயிலில் ஏரண்ட முனிவரின் பிரதிமமும், அவருக்குப் பக்கத்தில் வலஞ்சுழி நாதர் என்னும் சிவலிங்கத்திருமேனியும் இருக்கின்றன. இத்தலத்திற்குத் திருஞானசம்பந்தர் பதிகங்கள் மூன்று, திருநாவுக்கரசு நாயனார் பதிகம் ஒன்று ஆக நான்கு பதிகங்கள் இருக்கின்றன.

கல்வெட்டு: *10, 11, 12* நூற்றாண்டைச் சார்ந்த சோழ மன்னர்களது கல்வெட்டுக்கள் கோயில்களில் காணப்படுகின்றன. நிலதானம், விளக்குத்தானம், விளக்குக்காக நிலதானம் ஆகியவைபற்றி இவை குறிக்கின்றன. *25—1—1219*ல் சிவபாதசேகரன் என்பான் முந்திய தானங்களை ஊர்ஜிதப் படுத்தியிருக்கின்றான். இரண்டாம் இராசராசன் காலத்தில் திருநாவுக்கரசர், திருவாதவூரடிகள், திருக்கண்ணப்பதேவர் இவர்களின் திருவுருவங்களுக்கு நிலதானங்கள் செய்யப்பட்டன. முதலாம் இராசஇராசன், அவன் தேவியான லோகமாதேவியும் அவன் மகளும் (விமலாதித்தன் மனைவி குந்தவை) அரசர்கட்டிய கோயிலுக்குத் திருவாபரணங்கள் கொடுத்துள்ளார்கள்.

## 82 திரு வாஞ்சியம்

இலக்குமியை வாஞ்சித்து (விரும்பி)த் திருமால் பூசித்த தலமாதலின் இப்பெயர் பெற்றது.

மாயூரம்--பேரளம் ரயில் பாதையில், நன்னிலம் ரயில் நிலயத்திற்கு மேற்கே ஆறு மைல் தூரத்தில் இருக்கிறது. காவிரித்தென்கரைத் தலங்களுள் 70-ஆவது ஆகும்.

இறைவர் திருப்பெயர் வாஞ்சியநாதர். இறைவியார் திருப்பெயர் வாழவந்தநாயகி.

தீர்த்தம் குப்த கங்கை. இது கோயிலுக்கு வடபால் இருக்கிறது. கார்த்திகை ஞாயிறு நாட்களில் மக்கள் விசேடமாக நீராடுகின்றனர்.

தலவிருட்சம் சந்தனமரம். இது பிராகாரத்தில் இருக்கின்றது.

இயமன் பூசித்துப் பேறுபெற்ருன். இத்தலத்தில் இறப்பவர்களுக்கு இயமவாதனை இல்லை. இயமனுக்குத் தனிக் கோயிலும் இருக்கின்றது. இது முத்தியளிக்கும் தலங்களுள் ஒன்ருகும். இது மூவராலும் பாடப்பெற்றது. மூன்று பதிகங்கள் இருக்கின்றன.

கல்வெட்டு: இக்கோயிலில் இருபத்தேழு கல்வெட்டுக்கள் படி எடுக்கப்பட்டிருக்கின்றன. அவைகளில் ஏழு பிற்காலச் சோழர்களது, ஏழு பாண்டியர்களுடையனவும், ஒன்று நாயக்கரதுமாம். திருவாஞ்சியம் குலோத்துங்க சோழவளநாட்டில் பனையூர் நாட்டில் திருவாஞ்சியம் எனக் கூறப்பட்டது. இவ்வூருக்கு ராஜகம்பீர சதுர்வேதி மங்கலம் என்ற மறுபெயர் உண்டு. நிலவிற்பனை. நிலதானம் வரி தள்ளுபடி இவைகளைப் பற்றிக் கல்வெட்டுக்கள் குறிக்கின்றன. இரண்டாம் ராஜராஜதேவன் கல்வெட்டு ஒன்று கோயிலில் சேர்ந்த நிலங்களின் வரிசையைக் கூறுகிறது. இவ்வரசன் காலத்தில் அம்மனுக்கு ஒரு கோயில் கட்டப்பட்டு, பிரதிஷ்டையும் செய்யப்பட்டது. அப்போது நிலமும் வீடும் தானம் செய்யப்பட்டன. குலோத்துங்கன் காலத்தில் திருப்பள்ளியறை நாச்சியாருக்குக் கோமாங்குடியான் ஒருவன் நிலதானம் செய்தான். மங்களாம்பா கோயிலில் உள்ள ஒரு கல்வெட்டின்படி II இராசராசதேவன் காலத்தில் (கி. பி. 18) திருவாஞ்சியமுடையார் கோயிலில் அம்மனுக்கு ஒரு கோயில்கட்டிப் பிரதிட்டை செய்யப்பட்டது. அப்போது நிலம் வீடுகள் தானம் செய்யப்பட்டன, ஒரு நிலத்தில் இருந்த கல்வெட்டின்படி சிதம்பரத்துப் பிச்சைமடத்து அகோர சிவாசாரியார் சீடர் அச்சுற்றமங்கலத்துப் பெருமாநாயனுர் பண்டாரம் அம்மடத்திற்கு முண்டுவான்சேரியில் ஒரு வேலி நிலம் வாங்கியதாகக் கூறப்பெற்றுள்ளது.

## 83 திரு வாய்மூர்

இது திருக்குவளை என்று இக்காலம் வழங்கும் திருக்கோளிலிக்குத் தென்கிழக்கே மூன்றுமைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவிரித் தென்கரைத் தலங்களுள் ஒன்ருகும்.

இறைவர் திருப்பெயர் வாய்மூர்நாதர். இறைவியார் திருப்பெயர் பாலினுநன்மொழியாள்.

தீர்த்தம் சூரியதீர்த்தம். இது கோயிலுக்கு எதிரில் இருக்கிறது.

தலவிருட்சம் பலா.

விடங்கர் எழுந்தருளியிருக்கும் தலங்கள் ஏழனுள் ஒன்று. இவர் நீலவிடங்கர், நடனம் கமலநடனம். சூரியன் பூசித்துப் பேறுபெற்றான். சைவப் பெருமக்களாகிய அப்பரும், சம்பந்தரும் திரு மறைக்காட்டில் எழுந்தருளியிருந்தபொழுது வாய்மூர் இறைவர் அப்பர் கனவில் தோன்றி "நாம் வாய்மூரில் இருப்போம் வா" என்றனர். உடனே அப்பர் விரைவில் எழுந்து இறைவரைத் தொடர்ந்து சென்றார். திருக்கோயிலுக்கு அருகில் சென்றதும் இறைவர் மறைந்துவிட்டனர். இதற்குள் ஞான சம்பந்தரும் அங்கு எழுந்தருள, அப்பர், "கதவைத் திறக்கப் பாடிய என்னினும், செந்தமிழ் உறைப்புப்பாடி அதை அடைத்த ஞானசம்பந்தப் பெருந்தகையாரும் எழுந்தருளியுள்ளார். அவர்க்குக் காட்சியை அளிக்கவாவது வெளிப்பட்டருளவேண்டும்" என்றுபாட அவ்வாறே வாய்மூர் இறைவர் காட்சி தந்தருளினர்.

இத்தலத்திற்குத் திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்று அப்பர் பதிகங்கள் இரண்டு, ஆக மூன்று பதிகங்கள் இருக்கின்றன. சுந்தரரும் "வாய்மூர் மணாளனை" என்கின்றார்.

## 84 திரு வாழ்கொளிபுத்தூர்

இவ்வூர் மதுரை, இராமசுவாமிபிள்ளை என்னும் ஞான சம்பந்தப் பிள்ளையால் அச்சிடப்பெற்ற தேவாரத்தில், வாள் கொளிபுத்தூர் என்றும், வேறுசில பதிப்பில், வாளொளி புற்றூர் என்றும் காணப்பெறுகின்றது. சேக்கிழார், பெரிய புராணத்தில் திருவாழ்கொளிபுத்தூர் என்றே குறித்துள்ளனர்.

மாயூரம்—சிதம்பரம் ரயில் பாதையில், நீடூர் ரயில் நிலையத்திற்கு வடக்கே ஆறுமைல் தூரத்தில் இருக்கிறது. (கல்சாலை. இக்காலம் பஸ் வசதியும் உண்டு.) வைத்தீசுவரன்கோயிலுக்கு நேர்மேற்கிலும் ஆறுகல் அளவே.

இறைவர் திருப்பெயர் மாணிக்கவண்ணர். இது திரு மேனியின் ஒளிகாரணமாக ஏற்பட்ட திருப்பெயராகும். இப்பெயரைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் இவ்வூர்க்குரிய ஒவ்வொரு திருப்பாட்டிலும், 'வாழ்கொளிபுத்தூர் மாணிக் கத்தை மறந்து என்னினைக்கேனே' என இப்பெயரை எடுத் தாண்டுள்ளார்கள்.

இறைவி திருப்பெயர் வண்டமர்பூங்குழலி. இத்திருப் பெயரை, ஞானசம்பந்தர் இவ்வூர்ப் பதிகம் (பண்—தக்கராகம்) பாடல் எட்டில் ''வண்டமர்பூங்குழல் மங்கையொர் பாகமா யவன்'' என்று குறித்தருளினர்.

திருமால், அர்ச்சுனன் இவர்கள் பூசித்துப் பேறுபெற்றார் கள். துர்க்காதேவியாரும் வழிபட்ட தலம். துர்க்கைக்கு வழிபாடு இத்தலத்தில் சிறக்க நடைபெறுகின்றது. வாசுகி வழிபட்ட தலம். அவ்வாசுகிக்கு ஆண்டுதோறும் அபிடேக பூஜை நடக்கின்றது. அருச்சுனனது வாளாயுதத்தை ஈசுரன் மறைத்துவைக்கும் ஆற்றால் அவனை ஆட்கொள்ளக் கருதினர். வாளை எடுத்துக்செல்லும் வழியில், அவன் அதைத் தேடிவர, வாகையிலைகளை அறிகுறியாக இட்டுச்சென்றான். வாளிருந்த இடத்தில் வாசுகி மறைத்திருந்தது. அதை வழிபட்டு வாளைப் பெற்றான் அருச்சுனன். அக்காரணத்தால் வாளொளிபுற்றூர் என்று பெயர் வழங்கலாயிற்று.

தலவிருக்ஷம் வாகைமரம். அது நெடுங்காலமாயிருந்து மூன்று யாண்டிற்குமுன் பட்டது. புதிதாக ஒன்று வைத்து வளர்க்கப்படுகின்றது. அதனை 'வாகைநுண்டுளிவீசும் வாழ் கொளிபுத்தூருளானே' என்பதில் அதனைக் குறித்துள்ளார்.

திரிசிரபுரம் மகாவித்துவான், திரு. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களால் எழுதப்பெற்ற தலபுராணம் அச்சில் வெளிவந்துள் ளது. இப்புராணத்தை எழுதுவித்த புலவர், திரு. அ. ஐயாத் துரைப்பிள்ளை அவர்கள். அவர்களதுபௌத்திரரே இப்பொழுது தருமபுர ஆதீனத்து இசைக்கல்லூரித் தலைவர் பிடில், திரு. சா. சம்பந்தம் பிள்ளை அவர்கள்.

இத்தலத்திற்கு ஞானசம்பந்தர் பதிகம் இரண்டு, சுந்தரர் பதிகம் ஒன்று ஆக மூன்று பதிகங்கள் இருக்கின்றன.

## 85 திரு வான்மியூர்

வான்மீக முனிவர் பூசித்த பதியாதலால் இப்பெயர் பெற்றது.

இது மயிலாப்பூருக்குத் தெற்கே மூன்று மைல் தூரத்தில் இருக்கின்றது. இது தொண்டை நாட்டின் இருபத்தைந் தாவது தலமாகும்.

இறைவர் திருப்பெயர் பால்வண்ணநாதர், இறைவி திருப் பெயர் சொக்கநாயகி.

இலிங்கத்திருமேனி சற்று வடபக்கமாகச் சாய்ந்திருக் கின்றது. வான்மீகி முனிவர்க்கு இவ்வூரில் தனிக்கோயில் இருக்கின்றது.

இவ்வூர்த் தலபுராணம் பூவை கல்யாணசுந்தர முதலியார் அவர்களால் எழுதப்பெற்றது. அச்சில் வெளிவந்துள்ளது.

கல்வெட்டு: இக்கோயிலில் ஏழுகல்வெட்டுகள் படி எடுக் கப்பட்டிருக்கின்றன. ராஜேந்திரசோழனுடைய கல்வெட்டுகள் ஐந்தும் ராஜாதிராஜனுடைய கல்வெட்டுகள் ஐந்தும் ராஜாதி ராஜனுடைய கல்வெட்டுகள் மூன்றும் ராஜேந்திரதேவனுடைய கல்வெட்டு மூன்றும் இருக்கின்றன. இவைகளின்படி நுந்தா விளக்கு வைப்பதற்கு ஆடுகள் தானம், கோயில் வழிபாட்டிற்கு நிலதானம், பூமாலை இடுவதற்குப் பொன்தானம், வழிபாட் டிற்குப் பணமும் நெல்லும் தானம்செய்யப்பட்டன.

## 86 திரு விளநகர்

இது மாயூரம்—தரங்கம்பாடி ரயில் பாதையில் மாயூரத் திற்கு கிழக்கே நான்குமைல் தூரத்தில் இருக்கின்றது. இது காவிரித் தென்கரையில் உள்ள நாற்பதாவதுதலமாகும்.

இறைவர் திருப்பெயர் துறைகாட்டும்வள்ளலார். அருள் வித்தகர் என்னும் அந்தணர் ஒருவர் பூக்கூடையை எடுத்துக் கொண்டு காவிரியாற்றில் இறங்கி வந்தபோது, வெள்ளம் அவரை அடித்துக்கொண்டு செல்ல, அவர் பூக்கூடையை விடாது சிவபெருமானையே சிந்திக்க, அவர்க்கு இறைவர் ஒரு துறையைக் காட்டிக் கரையேறச்செய்து ஞான உபதேசம் செய்தருளிய காரணத்தால் இப்பெயர்பெற்றார். "காவிரித்துறை காட்டினார்" என்று இவ்வூர்த் தேவாரத்தில் குறிக்கப்பட்டுள்ளது. இறைவி திருப்பெயர் தோழிநாயகி.

இதற்கு ஞானசம்பந்தர் பதிகம் ஒன்று இருக்கின்றது. இது தருமபுரம் ஆதீனத்திற்குச் சொந்தமானது.

கல்வெட்டு: இக்கோயிலில் மூன்று கல்வெட்டுக்கள் படியெடுக்கப்பட்டன. பரகேசரிவர்மன் ஐந்தாவது ஆண்டு உத்தம சோழனின் முதல் மாதேவியார் அர்த்தயாம கட்டளைக்காக நிலம் வாங்கித் தந்தனள். அதில் நெறியுடைச் சோழப்பேராறு என்று ஓராற்றின்பேறு குறிக்கப்பட்டுள்ளது. தஞ்சை நாயகர் நாளில் இக்கோயிலில் அர்த்தமண்டபம், மகாமண்டபம், அரண் மனைப் பணத்திலும் பொதுமக்கள் பணத்திலுமாகக் கட்டப் பட்டன. இக்கோயிலின் துறைகாட்டு மண்டபத்தைத் தீட்சித ஐயன் உபயமாகத் தந்துள்ளான்.

## 87 திரு விற்குடிவீரட்டம்

சிவபெருமான் தன் வீரத்தைக்காட்டிய இடங்கள் எட்டு ஆகும். அவற்றுள் இது சலந்தரனைச் சங்கரித்த பதியாகும்.

மாயூரம்—பேரளம் ரயில் பாதையில், விற்குடி ரயில் நிலையத்திற்கு ஒருமைல் தூரத்தில் இருக்கிறது.

இறைவர் திருப்பெயர் வீரட்டநாதர். இறைவி திருப்பெயர் ஏலவார்குழலி.

இறைவரின் கோயில் கட்டுமலையில் இருக்கின்றது. உற்சவ மூர்த்தியின் கையில் சக்கிரம் இருக்கிறது. இதற்குப் பதிகம் ஒன்றுதான். அது ஞானசம்பந்தருடையதாகும்.

## 88 திரு வெண்காடு

ஆக்கூர் சீகாழி செல்லும்பெருவழியில் (Road) பஸ்மூலம் அல்லிவிளாகத்தில் இறங்கிக் கிழக்கே மூன்றுமைல் அளவு சென்றால் இத்தலத்தை அடையலாம். இது காவிரி வடகரைத் தலங்களுள் பதினொன்றாவது ஆகும்.

இறைவர் திருப்பெயர் திருவெண்காட்டீசர், சுவேதாரண்யேசர். இறைவி திருப்பெயர் பிரமவித்யாநாயகி,

தீர்த்தம் முக்குளங்கள் இவை சூரியதீர்த்தம், அக்நி தீர்த்தம், சந்திரதீர்த்தம் என வழங்கப்பெறும். இக்குளங்களில் நீராடி வழிபடுகிறவர்கள் பிள்ளைப்பேற்றை அடைவார்கள். அவர்களைத் தீவினைகள் அடையா. இச்செய்திகளை இத்தலத்துக்குரிய.

"பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவ ரையுறவேண்டா வொன்றும்
வேயன தோளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே"

என்னும் திருஞானசம்பந்தர் தேவாரப்பாடல் (பண்-சீகாமரம், பாட்டு. 2.) இனிது தெளிவு படுத்தும்.

இதற்கு ஏற்பத் திருப்பெண்ணாகடத்தில் அச்சுதகளப்பாளர் என்பார் ஒருவர் புத்திரப்பேறின்றி இருந்தார். அவர் தமது ஆசாரியர் அருணந்திசிவாசாரியர் அருளியபடி, திருமுறையில் கயிறுசார்த்தினர். சார்த்தியபொழுது ஞானசம்பந்த சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய "பேயடையா பிரிவெய்தும்" என்னும் மேற்குறித்த திருப்பாடல் தோன்றிற்று. அதிலுள்ள "வெண்காட்டு முக்குளநீர் தோய் வினையார் பிள்ளையினோடு உள்ள நினைவாயினவே வரம்பெறுவர். ஒன்றும் ஐயுறவேண்டாம்" என்னும் பொருளை அறிந்து மகிழ்ந்து, திருவெண்காட்டிற்குத் தம் மனைவியாரோடு சென்று, முக்குளத்தில் நீராடி இறைவனை வழிபட்டுவந்தார். இங்ஙனம் வழிபட்டுவரும் நாட்களில் ஒருநாள் இறைவன் அவரது கனவில்தோன்றிச் சைவ சித்தாந்தத்தை நிலைபெறச் செய்யக்கூடிய ஒரு புத்திரனை நீ அடைவாய் என்று சொல்லி மறைந்தருளினர். அவ்வாறே அவர் புத்திரப்பேற்றை

அடைந்தார். இக்குழந்தையே பின்னால் சைவசித்தாந்த பரமாசாரியராக விளங்கின மெய்கண்டதேவர் ஆவர்.

தலவிருட்சம் ஆலமரம்; கொன்றைமரம்.

உள் பிராகாரத்தில், அகோரமூர்த்தி கையில் சூலத்துடன் எழுந்தருளியிருக்கின்றார். அவர்க்கு எதிரில் காளியின் சந்நிதி இருக்கின்றது.

சிதம்பரத்தில் இருப்பதுபோலவே இங்கு நடராஜர் பெருமையுடன் விளங்குகின்றார். இப்பதியில் வெள்ளானை பூசித்துப் பேறுபெற்றது. இதை,

"வெள்ளானை வேண்டும் வரம் கொடுப்பர்
வெண்காடு மேவிய விகிர்தனாரே"

என்னும் அப்பர் பெருமானின் இவ்வூர்த் தேவாரப் பகுதியாலும்,

"அயிராவதம் பணிய மிக்கதனுக்
கருள்சுரக்கும் வெண்காடு"

என்னும், ஞானசம்பந்தர் தேவாரப் பகுதியாலும் அறியலாம். இத்தலத்திற்குத் திருஞானசம்பந்தர் பதிகம் மூன்று, அப்பர் பதிகம் இரண்டு, சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம் ஒன்று ஆக ஆறு பதிகங்கள் இருக்கின்றன.

சைவ எல்லப்ப நாவலர் தலபுராணத்தை இயற்றியுள்ளார். அது அச்சில் வெளிவந்துள்ளது.

## 89 திரு வெண்ணியூர்

தஞ்சாவூர்—திருவாரூர் இருப்புப் பாதையில், கோயில் வெண்ணி என்னும் ரயில் நிலையத்திற்கு ஒன்றரைமைல் தூரத்திலிருக்கின்றது. இது காவிரிக்குத் தென்கரையிலுள்ள நூற்றிரண்டாவது தலமாகும்.

இறைவர் திருப்பெயர் வெண்ணிக்கரும்பர். இறைவி திருப்பெயர் அழகியநாயகி.

இறைவர் திருமேனி கரும்புக்கழிகளை ஒன்றுசேர்த்து வைத்தாற்போல் இருக்கின்றது.

கல்வெட்டு: இக்கோயிலில் பல கல்வெட்டுக்கள் படியெடுக்கப்பட்டுள்ளன. இராசராசன் கல்வெட்டுக்கள் ஆறு. குலோத்துங்கன் ஒன்பது. தேதியில்லாத கல்வெட்டு ஒன்றும் உள்ளன. 13—10—1222 தேதியிட்ட இராசராசன் கல்வெட்டு நீளமானதாகும். அதன்படி நாடு சுத்தமலிவளநாடு, உள்நாடு வெண்ணி கூற்றம் ஊர் வெண்ணிநகரம். இறைவன் திருவெண்ணி உடையார் என அறிகிறோம். அந்த இறைவனுக்கு நித்தவிநோத வளநாட்டு வீரசோழவளநாட்டுப் புத்தூரான திரிபுவன சதுர்வேதி மங்கலத்துச் சபையார் திருநாமத்துக் காணியாக விட்ட நிலத்தின் எல்லை கூறப்படுகிறது. அந்நிலத்தில் விளைகிற பொருள்களின் அளக்கும் அளவும் கொடுக்கப்பட்டுள்ளது. இனி குலோத்துங்கன் கல்வெட்டுகள் "புனல்வாய்த்து" என்ற தொடக்கம் கொண்டவைகள். கோயிலுக்கு நிலங்கொடுக்கப்பட்ட விவரங்கள் அவைகளில் காணப்படுகின்றன. சுற்றுவட்டத்து ஊர்களின் பெயர்களும், ஆட்களின் பெயர்களும் அவைகளில் எழுதப்பட்டுள்ளன. அவைகளில் ஒன்று 2—7—1196ஆம் தேதியுடையது. ஆகவே 12ஆவது நூற்றாண்டின் முற்பகுதியும் இக்கோயில் சிறந்திருந்த காலமாகும்.

பிற்சேர்க்கை

## 14 திரு இடைமருதூர்

*கல்வெட்டு: மதுரைகொண்ட கோப்பரகேசரி பன்மராகிய முதற்பராந்தகசோழன் (கி. பி. 907-948) இரண்டாம்பராந்தக சோழனது மகனாகிய ஆதித்த கரிகாலன், முதலாம் இராசராச சோழன் இவர்கள்காலங்களில் இக்கோயிலில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இவ்வூரைத் திருவிடை மருதில், திருவிடைமருது

* இக்குறிப்பு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்து ஆராய்ச்சிப் புலவர் திரு. வை. சுந்தரேச வாண்டையார் அவர்கள் எழுதியுதவியது.

எனக்குறிப்பிடுகின்றன. முதலாம் இராசராசன்காலத்தில் இது ஒருநகரமாக விளங்கியிருந்தது. இச்செய்தி அம்மன்னனது ஆறும் ஆண்டில் பொறிக்கப்பெற்ற "திருஇடைமருதுடையார் ஸ்ரீ காரியம் ஆராய்கின்ற சிற்றுயிலுடையாரும், தேவகன்மிகளும், சபையும், திருவிடைமருதில் நகரமும் இருந்து நம் பிராட்டியார் ஸ்ரீ பஞ்சவன் மாதேவியார் ஆழ்வாரைத் திருவடி தொழவந்தருளினர்" என்னும் கல்வெட்டுப் பகுதியால் அறியக் கிடக்கின்றது. முதற் குலோத்துங்கசோழன் காலத்தும், அவனுக்குப் பிற்பட்டார் காலத்தும் பொறிக்கப் பெற்றுள்ள கல்வெட்டுக்கள் இவ்வூரைத் திருவிடைமருதூர் என்னும் பெயரால் குறிப்பிடுகின்றன. எனவே மிகப் பழங்காலத்தே இதுஒரு நகரமாக விளங்கியிருந்த செய்தி புலப்படுகின்றது.

இத்திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் ஸ்ரீ மூலஸ்தானத்துப் பெருமான் அடிகள் மூலஸ்தானத்து மகாதேவர், திருவிடை மருதுடையார், திருவிடைமருதில் ஆள்வார், திருவிடைமருதூருடைய தம்பிரானர், என்னும் திருப்பெயர்களாலும், நடராசப்பெருமான் மாணிக்கக்கூத்தர் என்னும் பெயராலும் அழைக்கப்பெற்றுள்ளனர்.

இத்திருக்கோயிலின் முதல் பிராகாரத்து மேலைத்திருமாளிகையில் மூப்பிமாரில் இராசராசேச்சரத்துப் பதியிலாரில் அரிய பிராட்டியார், பெருமாள் பெரியதேவர் திரிபுவன வீரதேவரின் (மூன்றுங்குலோத்துங்க சோழதேவரின்) முப்பத்தேழாம் ஆட்சி ஆண்டில் உடையார் தைப்பூசமுடைய நாயனரை எழுந்தருளுவித்துள்ளார். இத்திருக்கோயிலில் தைப்பூசத்திருவிழா மிகவும் சிறப்பாகக் கூறப்பெற்றுள்ளது. தைப்பூசத் திருநாளில் தீர்த்தம் ஆடின பிற்றைநாள் தொடங்கி மூன்று நாளும், வைகாசித் திருவாதிரையின் பிற்றைநாள் தொடங்கி மூன்று நாளும் ஆக ஏழு அங்கங்களுடன் கூடிய இவ்ஆரியக்கூத்து ஆடப் பெற்றுவந்தது. இக்கோயிலில் நாடகசாலை ஒன்றும் இருந்தது. இச்செய்தியைத் "திரைமூர்நாடு உடையாரும், திருவிடைமருதில் நகரத்தாரும், தேவகன்மிகளும் நாடகசாலையிலே இருந்து" என்னும் கல்வெட்டுப் பகுதியால் அறியலாம். திருவிடைமருதுடையார் திருவோலக்கத்து வீற்றிருக்குங்காலத்து அவருக்கு மூன்று சந்தியும் உடுக்கை வாசிக்கப்பெற்றுவந்தது. பெருமான் எழுந்தருளுங்கால் தேவர் அடியார் கவரி வீசிவந்

தார்கள். அவர்கள் கவரிப்பிணுக்கள் என்னும் பெயரால் அழைக்கப்பெற்றுள்ளனர். இக்கோயிலில் தேவரடியாரைப் பாடச் செய்வதற்கும் ஏற்பாடு செய்யப்பெற்றிருந்தது. இத்திருக்கோயிலில்எழுந்தருளியிருக்கும்ஆளுடையபிள்ளையார்ஆளுடைய நம்பி இவர்களுக்கு உய்யக்கொண்டார் வளநாட்டு இருமாறன் பூண்டிப்பெருமாள் சதுர்வேதிமங்கலத்தில் திரிபுவனச் சக்கிரவர்த்தி கோனேரின்மைகொண்டானின் 21 ஆம் ஆண்டில் நிலம் விடப்பெற்றிருந்தது. ஒரு கல்வெட்டு நான்காம் பிராகாரத்தில் எழுந்தருளியிருக்கும் பிடாரிபோகிருந்த பரமேசுவரியைப் பற்றிக் குறிப்பிடுகிறது.

இத் திருக்கோயிலுக்கு உரியதாக திருக்கலசக்கோரோணியின் தென்கரையில் ஒரு நந்தவனம் இருந்தது. அதற்குச் செம்பியன் மாதேவியான பெருஞ்சண்பக நந்தவனம் என்னும் பெயர் இடப்பட்டிருந்தது. முதலாம் இராசராச மன்னரது தேவியாராகிய பஞ்சவன் மாதேவியார் இறைவனை வழிபட வந்தபொழுது இந்த நந்தவனத்திற்கு எழுந்தருளிப் பார்வையிட்டதை ஒரு கல்வெட்டு உணர்த்துகின்றது. மல்லிகைப் பூக்களைச் சார்த்துவதற்காக மல்லிகை நந்தவனம் என்னும் தோட்டமும் இருந்தது.

இக்கோயில் திருமடைவிளாகத்தில் பெருந் திருவாட்டி என்னும் பெயர் பூண்ட மடம் ஒன்று இருந்தது. இது இளங்காரிகுடையான் சங்கரதேவன் சிவலோக நாயகனுன கங்கை கொண்டசோழ அனந்த பாலனுல் செய்வித்ததாகும்.

இங்கா நாட்டுப் பல்லவரையன் இத்திருக் கோயிலில் ஆடல்விடங்கதேவரை எழுந்தருளுவித்திருந்தான். இத்திருக்கோயிலின் வாசல் ஒன்றுக்கு ஏகநாயகன் திருவாசல் என்னும் பெயரை ஒரு கல்வெட்டு குறிப்பிடுகின்றது. ஒரு பிள்ளையாருக்குப் புராண கணபதி என்னும் பெயர் உண்மையை ஒரு கல்வெட்டுப் புலப்படுத்துகின்றது.

முதற் பராந்தகன் காலத்துக் கல்வெட்டுக்கள் இவ்வூரைத் தென்கரை, திரைமூர் நாட்டுத் திருவிடைமருதில் எனவும், முதற் குலோத்துங்கசோழன் காலத்துக் கல்வெட்டுக்கள் உலகுய்யக் கொண்ட சோழவளநாட்டுத் திரைமூர் நாட்டுத் திருவிடைமருதூர் எனவும் குறிப்பிடுகின்றன.

முதற் பராந்தகசோழன் காலத்தில் அளிக்கப்பட்டவை:- திருவிடைமருதில் ஸ்ரீ மூலஸ்தானத்துப் பெருமானடிகளுக்கு மார்கழித் திருவாதிரைதோறும் நெய்யாடி அருளுதற்குத் தொண்டை நாட்டு, செங்காட்டுக் கோட்டத்து மாகனூர் நாட்டு இடும்பேட்டைப் பண்டாரிகிழான் கொட்டி என்பான் பதின்கழஞ்சு பொன் கொடுத்திருந்தான். மூலஸ்தானத்து மகாதேவர்க்கு ஒரு நொந்தாவிளக்கினுக்குப் புலியூர்க் கோட்டத்து மயிலாப்பில் வியாபாரி விளத்தூர் கிழவன் அரையன் அரிவலன் இருபத்தைந்து கழஞ்சு பொன் னை உதவியிருந்தான். இருமடிச் சோழப் பல்லவரையர் திருவிடை மருதுடையார்க்குத் திருமெய்ப் பூச்சுச் சந்தனத்திற்கும், சீதாரிக்கும், மாகேஸ்வரர்க்கும், பிராமணர்க்கும், திருநொந்தாவிளக்கு எட்டினுக்கும் ஆகப் பதினான்குவேலி நிலத்தைத் திருவிடைமருதில் நகரத்தாரிடையும், திரைமூர்ச்சபையாரிடையும் முதற் பராந்தக சோழனது முப்பத்தைந்தாம் ஆண்டில் அதாவது கி. பி. 942இல் விலைக்கு வாங்கி அளித்துள்ளான்.

கிழக்கெல்லை வண்ணக்குடியார் பிணம்போகும் வழிக்கு மேற்கு, தென்எல்லை பெருவழிக்கும் வண்ணக்குடி வாய்க்காலுக்கும் வடக்கு, மேற்கெல்லை பழங்காவிரிக்குக் கிழக்கு, வடவெல்லை பழங்காவிரிக்கும் குடந்தையார் நிலத்திற்கும் தெற்கு ஆக இசைந்த பெருநான்கெல்லையுள் அகப்பட்டதாகும். செம்பியன் தமிழவேளான் மூலத்தானமகாதேவர்க்கு நொந்தா விளக்கு ஒன்றை வைத்துள்ளான். வெண்ணாட்டு வரம்பூசலுடையான் சந்திராதித்தன் சத்துருகண்டன் 'திருவிடை மருதுடையார் சாலை' உண்ணும் பிராமணர்க்குத் தாலம் பதினெட்டு, சட்டுவம் ஒன்று இவைகளை இட்டுள்ளான். இவை முறையே நூற்றைம்பத்திரண்டு பலங்களும், ஐந்து பலங்களும் நிறையுள்ளன.

பாண்டியன் தலைகொண்ட கோப்பரகேசரி பன்மர் காலத்தில் விடப்பட்ட நிவந்தங்கள்:- தைப்பூசத் திருநாளில் தீர்த்தம் ஆடினபிற்றைநாள்தொடங்கி மூன்றுநாள்கூத்து ஆடுவதற்கும், வைகாசித்திருவாதிரையின் பிற்றைநாள் தொடங்கி மூன்றுநாள் கூத்து ஆடுவதற்கும் ஏழு அங்கங்களைக் கொண்டுள்ள இந்தப் பழைய ஆரியக்கூத்தில் வல்லவனாகிய கீர்த்திமறைக்காடன் ஆன திருவெள்ளறை சாக்கனுக்கு விளங்குடிநிலத்தில் பறைச்சேரி

பத்து உள்பட வேலி நிலத்தை நிரைமூர்நாடு உடையாரும், திருவிடைமருதில் நகரத்தாரும், கோயில் ஸ்ரீ காரியம் ஆராய்கின்றவரும் கொடுத்துள்ளனர்.

கோராசகேசரிபன்மர் காலத்தில் அளிக்கப்பெற்றுள்ள நிவந்தம்:- ஆனைமேல் துஞ்சின உடையாரின் தாயாருடைய பரிவாரத்துப் பெண்டாட்டி பொதுவன் சிற்றடி திருவிடைமருதில் ஆள்வார்க்குத் திருவிளக்கினுக்கு ஈழக்காசு இருபதினைல் பொன் பதின்கழஞ்சையும், திருவிடைமருதுடையார் அமுது செய தண்ணீர் அமுதுவட்டில் ஒன்று இருபத்துநான்கு கழஞ்சு நிறை உள்ளதையும் அளித்துள்ளனர்.

கவரிப்பிணுக்களுக்குத் திவசம்முந்நாழி நெல்பெறுவத்தற்கு தேவதானம் விளங்குடி பாட்டத்தில் அறுபது நீக்கி நின்ற நிலத்தில் வந்த நெல்லுப்பெறுமாறு கோயிலார் ஏற்பாடு செய்து அதைக் கல்லில் வெட்டுவித்துள்ளனர். அக் கவரிப் பிணுக்களில் ஒருவர் பெயர் மழுபாடி மருதி என்பதாகும்.

விக்கிரமசோழன் காலத்தில் அளிக்கப்பெற்ற நிவந்தம்:- திருவிடைமருதூர் திருக்கற்றளியில் மாணிக்கக் கூத்தற்கு அமாவாசைதோறும் திருவமுது உள்ளிட்டு வேண்டுவனவற்றிற்கும் கட்டுச்சோற்றுக்கும் அமாவாசை ஒன்றுக்கு நெல் ஐங்குறுணி இருநாழியாக ஓராண்டுக்கு வேண்டும் நெல் ஐங்கலனேமுக்குறுணியும், தேவர்கட்டமைக்கு ஐங்கலனேமுக்குறுணியும் ஆக நெல் பதின்கலனே தூணிப்பதக்குக்குத் திருவிடைமருதூரில் சதாசிவன் மகிக்கல் என்னும் பெயருள்ள நூற்றுஎழுபத்தைந்துகுழி நிலத்தை அரிகுலராஜமாராயன் வாங்கிக் கொடுத்துள்ளான்.

விட்டலதேவ மகாராயர் அளித்த நிவந்தம்:- வீரப்பிரதாப ஸ்ரீமான் மகாமண்டலேசுவர இராமராச விட்டலதேவ மகாராசர் புத்தாற்றுக்கு வடக்கு ஆவணம், சிற்றுடி என்னும் இரு ஊர்களைத் திருவிடைமருதூர்ச் சிவபெருமானுக்குத் தருமசிலா சாசனம் செய்துகொடுத்துள்ளார். இவைபோன்று இக்கோயிலுக்கு அளிக்கப்பெற்ற நிவந்தங்கள் பலவாகும்.

See the Annul reports on south Indian Epigraphy for the years 1895-1907. Numbers 130-159; 193-313 and the South Indian Inscriptions Volumes.

# 16 திரு இரும்பூளை

கல்வெட்டு: இத்திருக்கோயிலில் சோழமன்னர்களில் முதலாம் இராசராசன், முதற்குலோத்துங்கன், விக்கிரமசோழன், இரண்டாம் குலோத்துங்கன், இரண்டாம் இராசராசன், மூன்றும் இராசராசன் இவர்கள் காலங்களின் கல்வெட்டுக்களும் பாண்டியர்களில் மாறவர்மன் திரிபுவன சக்கிரவர்த்தி குலசேகரதேவர் காலத்திலும், நாயக்க அரசர்களில் அரியப்பநாயக்கர் காலத்திலும் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

இவ்வூரின் பழம் பெயர் இரும்பூளை ஆகும். இது முதலாம் இராசராசசோழன் காலத்தில் நித்தவிநோதவளநாட்டு முடிச் சோழநாட்டுப் பிர்மதேயம் ஸிம்ஹவிஷ்ணு சதுர்வேதிமங்கலத்தில் அடங்கியிருந்தது. முதற்குலோத்துங்கசோழன் காலத்தில் கல்யாணபுரம்கொண்ட சோழவளநாட்டுப் பிர்மதேயம் ஜனநாத சதுர்வேதிமங்கலம் என்னும் பெயர்பெற்றது. மாறவர்மன் திரிபுவன சக்கிரவர்த்தி குலசேகரதேவபாண்டியன் காலத்தில் இது ஆலங்குடியாகிய ஜனநாத சதுர்வேதிமங்கலம் என்னும் பெயர்பெற்றது. அந்த ஆலங்குடி என்ற பெயரே இக்காலத்தே நிலவுவதாயிற்று.

சிவபெருமான் திரு இரும்பூளை உடைய மகாதேவர் என்னும் திருப்பெயரால் கல்வெட்டில் கூறப்பெறுகின்றனர்.

இக்கோயிலின் இரண்டாம் பிராகாரத்தைக் கட்டுவித்தவர் வாணதிராயர் என்கிற இராசேந்திரக் கொத்தமங்கல நாடாள்வார். இக்கோயில் முதற்பிராகாரத்து மேற்குத் திருமாளிகையின் வடகோடியில் சிவஞான ஈஸ்வரம் உடையாரை எழுந்தருளுவித்து அவருக்கு நிவந்தம் அளித்தவர் பிரம்பலூர் உடைய பெருமாள் என்கிற பிள்ளை கோசலராயர் ஆவர் அது நிகழ்ந்த காலம் சகம் 1182. அதாவது கி. பி. 1260 ஆகும். இவ்வூரில் எழிசைநாயக மடம் ஒன்று இருந்தது.

அரியப்பநாயக்கர் திரு இரும்பூளை உடைய மகாதேவருக்கு குடையாளி மான்யமாக ஒருவேலி நிலத்தை கங்கைகொண்ட சோழ நல்லூரில் விட்டுள்ளனர். மாறவர்மன் குலசேகரதேவ

பாண்டியன் ஐந்தாம்நாள் விழாவிற்கு இருவேலி நிலத்தை அளித்துள்ளான்.

See the Annual reports on South Indian Epigraphy for the years 1891, 1894, 1899, 1920. Numbers 44, 165, 3-5, 496-523 and the South Indian Inscriptions Volume VII.

## 17 திரு இரும்பைமாகாளம்

கல்வெட்டு: இத்திருக்கோயில் கல்வெட்டுக்கள் சிதைந்தும், உள்ளேவைத்துக் கட்டப்பெற்றுமுள்ளன. இத்திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவர் திருவிரும்பை உடையார், திருமாகாளமுடைய நாயனுர் என்னும் திருப்பெயரால் கல்வெட்டில் கூறப்பெற்றுள்ளனர். ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் இருஞ்சேரி அழகியமணவாளப்பெருமாள் இத்திருக்கோயிலைக் கற்றளியாக்கினுர். இவ்வூர் ஜயங்கொண்டசோழமண்டலத்து மாத்தூர் நாட்டுக்கு உட்பட்டிருந்தது. சகலலோக சக்கிரவர்த்திகள் இராசநாராயண சம்புராயருக்கு ஆண்டு பத்தாவதில் நிலம் வாங்கி அளிக்கப்பெற்றது.

See the Annual reports on South Indian Epigraphy for the years 1902, 1937. Numbers 190-193, 176-178 and the South Indian Inscriptions Volume VII.

## 23 திருக் கருப்பறியலூர்

இத்தலத்தின் கோயில் சீகாழி மலைக்கோயிலைப்போல் அமைந்திருக்கின்றது. மலைக்கோயிலில் அம்மையப்பர் திருவுருவமும் சட்டைநாதர் திருவுருவமும் உள்ளன. அண்மையில் தருமபுர ஆதீனம் இருபத்தைந்தாவது மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களால் ஜீரணோத்தாரணம் செய்யவும், சுதைவிக்ரகங்கள் புதுப்பிக்கவும்பெற்றுக் கும்பாபிஷேகம் செய்யப்பெற்றது. இதனை மேலைக்காழி எனவும் வழங்குவர்.

கல்வெட்டு: இத்திருக்கோயிலில் மூன்றுங்குலோத்துங்க சோழதேவரின் 13 ஆம் ஆண்டு 280 ஆம் நாள், 14 ஆம் ஆண்டு 35 ஆம் நாட்களிலும், கோனேரின்மைகொண்டானின் 7 ஆம் ஆண்டு 73 ஆம் நாள், 10 ஆம் ஆண்டு 334 ஆம் நாட்களிலும் திரிபுவனச்சக்கிரவர்த்தி இராசராசதேவரின் மூன்று, இருபது ஆண்டுகளிலும் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்களும் விஜயநகர அரசர்களில் பிரதாபகிருஷ்ண தேவராயரின் சகம் 1489 இல் பொறிக்கப்பெற்ற கல்வெட்டும், அரசன்பெயர் குறிப்பிடாமல் உள்ள சில கல்வெட்டுக்களும் இருக்கின்றன.

தலைஞாயிறு என்னும் பெயர் எய்தியதற்குக் காரணம்:- மூன்றுங்குலோத்துங்கசோழன் காலத்தில் இவ்வூர் தனிநாயகச் சதுர்வேதிமங்கலம் என்னும் பெயர்பெற்றது. அப்பெயரே சிதைந்து இக்காலம் தலைஞாயிறு என வழங்கப்பெறுகின்றது. இது மூன்றுங் குலோத்துங்கசோழன் காலத்தில் இராசாதிராச வளநாட்டுக் கழுமலநாட்டுக்கு உட்பட்டிருந்தது. இவ்வூரை இக்கோயில் கல்வெட்டுக்கள் அகரம் தனிநாயகச் சதுர்வேதி மங்கலம் எனக் குறிப்பிடுவதால் இது பிராமணர்கள் நிறைந்து வாழ்ந்த இடமாக இருக்கவேண்டும். இக்கோயிலில் பாறையின் மீது எழுந்தருளியிருக்கும் இறைவர் பார்வதிபாகர் என்னும் பெயரால் குறிக்கப்பெற்றுள்ளனர். சோழக்குலத்தான் மங்க ளாதிராசர் என்பவர் இக்கோயிலின் ஸ்தூபியை வைத்தவர் ஆவர். அது நிகழ்ந்தது மூன்றுங் குலோத்துங்கசோழன் கால மாகும். இத்திருக்கோயிலில் பள்ளியறை நாச்சியாரை எழுந் தருளுவித்தவர் வில்லவரையர் ஆவர். திரிபுவன சக்கிரவர்த்தி இராசராசதேவரின் மூன்றும் ஆண்டில் திருஞானம்பெற்ற பிள்ளையாருக்குக் காலைசந்திக்கும், உச்சியம்போதைக்கும் திரு வமுது நடத்துமாறு நிவந்தம் கொடுக்கப்பட்டிருந்தது. இக் கோயிலை வழிபடவரும் மாகேஸ்வரர்களுக்கும், திருவாதிரையில் கூத்தப்பெருமானை எழுந்தருளச்செய்வதற்கும் நிவந்தங்கள் அளிக்கப்பெற்றுள்ளன.

இக்கோயிலில் பெருமாள், சுந்தரப்பிள்ளையார், திரு வுடையார், சோழர்குலத்தன் மங்களராசர் இவர்களின் உருவங் களின் பெயர்கள் பொறிக்கப்பட்டுள்ளன. ஆனால் இப்பெயர் களுக்குரிய உருவங்கள் காணப்பெறவில்லை.

ஊர்ச்சபை உறுப்பினர்களாதற்குரிய சட்டதிட்டங்கள் இக்கோயில் வடபுறச் சுவரில் பொறிக்கப்பெற்றுள்ளன. அரசியல் அக்காலத்தில் எவ்வாறு நடைபெற்றது என்பதை அறிய விரும்புவாருக்கு இக்கல்வெட்டுப் பெரிதும் பயன்தரும். இக்கோயிலிலுள்ள மகாமண்டபம் விக்கிரமசோழவேளாளரால் கட்டப்பெற்றது.

See the Annual reports on South Indian Epigraphy for the year 1927. Numbers 140 to 158.

## 24 திருக் கருவூர்த்திருவானிலை

கல்வெட்டு: கல்வெட்டுக்களில் இறைவர் திருவானிலை ஆளுடையார் என்னும் திருப்பெயரால் கூறப்பெற்றுள்ளனர். விக்கிரமசோழன் காலத்தில் இவ்வூர் வீரசோழமண்டலத்து வெங்காலநாட்டுக்கும், மூன்றுங்குலோத்துங்கசோழன் காலத்துச் சோழகேரளமண்டலத்து வெங்காலநாட்டுக்கும் உட்பட்டிருந்தது. மூன்றுங்குலோத்துங்கசோழன் காலத்தில் இக்கருவூர் முடிவழங்குசோழபுரம் என்னும் பெயரையும் பெற்றிருந்தது. மூன்றுங் குலோத்துங்கசோழன் திருவானிலை ஆளுடையாருக்கு வெங்காலநாட்டுத் தட்டையூர்நாட்டுக் கேரளபள்ளியிலும், மன்றையிலும் ஐம்பதுவேலி நிலத்தைத் திருநாமத்துக்காணியாகக் கொடுத்திருந்த செய்தி அறியப்படுகின்றது (South Indian Inscription Volume III. Part I. Page 43) "திருமகள் மருவிய செங்கோல் வேந்தன்" எனத் தொடங்கும் மெய்க்கீர்த்தியையுடைய ஸ்ரீ இராசேந்திரசோழதேவரின் கல்வெட்டு வெங்காலநாட்டு நெல்வாய்ப்பள்ளியில் பூசைக்கும் திருப்பணிக்கும் நிலம் அளிக்கப்பெற்றதைக் குறிப்பிடுகின்றது. வீரராசேந்திரசோழன் பாக்கூரிலும் திருநாமத்துக்காணியாக நிலம் கொடுத்திருந்தான். கோனேரின்மைகொண்டான் அந்தணூரான வீரசோழநல்லூரரை உவச்சர், தேவரடியார், தவசியர் இவர்களுக்காக அளித்திருந்தான்.

See the Annual reports for the years 1890 58-66, 1905 135-142, 1936 165-168 South Indian Inscriptions Volume III Part I Page 43.

## 25 திருக் கழிப்பாலை

இத்திருக்கோயில் கொள்ளிடப் பேராற்றின் வடகரையில் இருந்து, அவ்வாற்று வெள்ளத்தால் இடிந்துபோய்விட்டது. சைவப்பெரியார்கள் இக்கோயில் கற்களைக் கொண்டுவந்து, சிவபுரிக்குத் தென்பால் கோயில்கட்டி அதில் இறைவரை எழுந்தருளுவித்துள்ளனர். அங்ஙனம் கட்டியபோது கல்வெட்டுக்களைத் தொடர்ச்சியின்றி வெவ்வேறு இடங்களில் வைத்துக் கட்டியுள்ளனர். அவைகளை ஒருவாறு படித்து இக்குறிப்பு எழுதப்பெற்றது.

*கல்வெட்டு: இத்திருக்கோயிலில் முதலாம் இராசராச சோழன், இவனது மகனாகிய முதல் இராசேந்திரசோழன் இவர்கள் காலங்களில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இவற்றுள் முதலாம் இராசராசன் கல்வெட்டு, திருக்கழிப்பாலை உடைய மகாதேவருக்கு ஒரு திருநுந்தாவிளக்கு எரிப்பதற்கு இத்தேவர் பண்டாரத்தில் காசுகளை (Acertaion amount) வைத்து அதன் வட்டியைக்கொண்டு நாடோறும் உழக்கு நெய் கொண்டு ஒரு விளக்கு எரிய நிவந்தம் அளித்ததைக் குறிப்பிட்டுள்ளது. முதலாம் இராசேந்திரன் கல்வெட்டால் உச்சியம்போதைக்குத் திருவமுதுக்கு நிலம் அளித்த செய்தி புலனாகின்றது. மேலும் சில துண்டுக் கல்வெட்டுக்கள் நுந்தாவிளக்கு, தண்ணீர் அமுதுக்கு வெள்ளிவட்டில், இவைகள் கொடுக்கப்பட்ட செய்திகளை உணர்த்துகின்றன.

## 26 திருக் களர்

கல்வெட்டு: இத்திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவர் முளைத்த நாயனார், திருக்களர் உடையார், அடைந்தார்க்கு அருள்செய்த நாயனார் என்னும் திருப்பெயர்களால் கல்வெட்டுக்களில் கூறப்படுகின்றனர்.

இத்திருக்கோயில் திருமடைவிளாகத்துத் தெற்குத் திருவீதியில் எழுந்தருளியிரும் பிள்ளையார் இடங்கைவிநாயகர்க்கு

---

* இதுகாறும் ஆண்டு அறிக்கை, கல்வெட்டுத் தொகுதி இவைகளில் இக்கோயில் கல்வெட்டுக்கள் வெளிவந்தில. நேரில் படித்து எழுதியுதவியன

என்னும் பெயர்பெற்றிருந்தனர். இக்கோயில் கருப்பஇல்லுக்கு முன்புறத்துள்ளமண்டபத்தைச் செய்வித்தவர் சிறாருடையான் மறைதேடும் பொருள் பெரிய அம்பலக்கூத்தர் ஆவர். இச்செய்தி மாறவர்மன் குலசேகரதேவன் கல்வெட்டால் அறியக்கிடக்கின்றது. இக்கோயிலில் திருவாலவாயுடையாரை எழுந்தருளுவித்துப் பூசைக்கும் திருவமுதுபடிக்கும் உடலாகத் திரிபுவன சக்கிரவர்த்தியின் ஏழாம் ஆண்டில் நிவந்தம் அளித்தவர் நாகங்குடையார்மண்டை ஆழ்வார் ஆவர். இக்கோயிலில் கருணாகரன் திருமண்டபம் என்னும் பெயருடைய ஒரு மண்டபம் கூறப்பெற்றுள்ளது. ஊர்ச்சபையார் அதில் கூட்டம் கூடும் வழக்கம் குறிக்கப்பெற்றுள்ளது. இம்மண்டபத்தின் கீழைத்திருவாசல் தென்பக்கம் எழுந்தருளியிருக்கும் விநாயகர் மூவாயிர விநாயகப் பிள்ளையார் என்னும் பெயரால் அழைக்கப்பெற்றுள்ளனர். சுந்தரத்தோளுடையான் திருமண்டபம் என்றும் ஒரு மண்டபம் இருந்தது. அதிலும் ஊர்ச்சபையார் கூட்டம்கூடி நிர்வாகத்தை நடத்தியதாக ஒரு கல்வெட்டு அறிவிக்கின்றது. வீரபூபதி உடையார் கல்வெட்டில் வைகாசித் திருவிழாவைப்பற்றிக் கூறப்பெற்றுள்ளது.

அக்காலத்தில் இக்கோயில் மாகேஸ்வரக் கண்காணியும் திருப்பதியக்காணியும் உடையவனாய் இருந்தவன் மறைதேடும் பொருளான் அகளப்பிரியன் ஆவான். இக்கல்வெட்டுக்களில் இவ்வூர் இராசேந்திரசோழவளநாட்டுப் புறங்கரம்பை நாட்டைச்சேர்ந்ததென்று குறிக்கப்பெற்றுள்ளது.

குறிப்பு :— இவ்வூர்க் கல்வெட்டில் "நம் தேவாரத்துக்குத் திருப்பதியம் பாடும் பெரியான்" என வந்துள்ள தொடரில் தேவாரத்துக்கு என்பதன் பொருளை நுணுகி ஆராய்வது கற்றறிந்தார் கடமையாகும்.

See the Annual reports on South Indian Epigraphy for the year 1902. Numbers 642-655; and the Annual reports on South Indian Inscriptions Volume 7. Inscription Numbers 247-260.

# 32 திருக் குற்ருலம்

கல்வெட்டு: இக்கோயிலில் சோழமன்னர்களில் மதுரை கொண்ட கோப்பரகேசரிவர்மன் முதலாம் இராசராசன் பரகேசரிவர்மனுகிய இராசேந்திரசோழதேவன் I இவர்கள் காலங்களிலும் பாண்டியர்களில் ஜடாவர்மன் திரிபுவன சக்கிரவர்த்திப் பெருமாள்,பராக்கிரமபாண்டியதேவன், மாறவர்மன் திரிபுவன சக்கிரவர்த்தி வீரபாண்டியன், வீரமார்த்தாண்ட பராக்கிரம பாண்டியன், திரிபுவன சக்கிரவர்த்தி கோனேரின்மைகொண்டான், மாறவர்மன் திரிபுவன சக்கிரவர்த்தி விக்கிரமபாண்டியன், மாறவர்மன் திரிபுவனசக்கிரவர்த்திசுந்தரபாண்டியன், ஜடாவர்மன் திரிபுவன சக்கிரவர்த்தி விக்கிரமபாண்டியன், அபிராமபராக்கிரமபாண்டியன் மகனுகிய குலசேகரதேவனுகிய பராக்கிரமபாண்டியன் முதலானேர் காலங்களிலும் பொறிக்கப்பெற்ற எண்பத்தாறு கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

இறைவர் திருக்குற்ருலமுடைய தம்பிரானர், திருக்குற்ருலமுடைய நாயனர், குற்ருலநாதர் என்னும் பெயர்களாலும், அம்மையார் குழல்வாய்மொழியம்மை என்னும் தமிழ்ப் பெயராலும் கூறப்பெற்ருள்ளனர்.

இக்கோயிலில் அர்த்தமண்டபம், மகாமண்டபம், கர்ப்பஇல் இவைகளேப் புதியவாகக் கட்டியவன் ஜடாவர்மன் திரிபுவன சக்கிரவர்த்தி பராக்கிரமபாண்டியன் ஆவன். அவை கட்டப்பெற்ற காலம் சகம் 1309. அதாவது கி. பி. 1487 ஆகும். இக்கோயில் நுந்தாவிளக்குகளுக்கன்றி வேதபாராயணம் பண்ணுவதற்கும் இறைவருக்குப் பூணூல் சார்த்துவதற்கும் நிவந்தங்கள் அளிக்கப்பெற்றிருந்தன.

இக்கோயிலில் வட்டெழுத்தில் இருந்த கல்வெட்டுக்கள் முதலாம் இராசராசன் காலத்தில் தமிழில் எழுதப்பெற்றன. முதலாம் இராசராசன் பாண்டியன் கட்டுவதற்கு முன்னர்ப் பழுதுபார்த்துள்ளான்.

See the Annual reports on South Indian Epigraphy for the year 1918. Numbers 404-489.

## 37 திருக் கோட்டாறு

கல்வெட்டு. இக்கோயில் கல்வெட்டுக்களில் இவ்வூர், இராசராசப் பாண்டிநாட்டு உத்தமசோழ வளநாட்டு நாஞ்சில் நாட்டுக் கோட்டாறான மும்முடிச்சோழநல்லூர் எனக் குறிக்கப் பெற்றுள்ளது. இக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவரின் திருப்பெயர் இராசேந்திரசோழீசுவரமுடைய மகாதேவர் என்பதாகும். இக்கோயிலைக் கட்டுவித்தவன் சோழமண்டலத்து மண்ணிநாட்டு முழையூருடையான் அரையன் மதுராந்தகனான குலோத்துங்கசோழ கேரள இராசன் ஆவன். இக் கோவிலில் குன்றமெறிந்த பிள்ளையாருக்கு நாச்சியாரை எழுந்தருளுவித்தவர், தேவரடியார் செங்கோடன் பூவாண்டியாவர். இது நிகழ்ந்தது கொல்லம் ஆண்டு 428 அதாவது கி. பி. 1253 ஆகும். இந்த இராசேந்திரசோழீச்சரமுடையார் கோவிலின் மண்டபத்தைக் கட்டுவித்தவர் ஸ்ரீ கோயிலிற் பள்ளியுடைய பெரியான் குடிதாங்கியான சுந்தரபாண்டிய நாஞ்சில்நாடு ஆழ்வார் ஆவர். (இதில் பள்ளியுடையான் என்பது கோவில் கண்காணிப்பாளரைக் குறிப்பதாகும்.)

சடையவர்மன் சுந்தரசோழ பாண்டிய தேவரின் 11ஆம் ஆண்டில் விஷ்ணுவர்த்தன மகாராஜாவாகிய சளுக்கு விஜயாதித்தன் விக்கண்ணன் இராசேந்திர சோழீச்சரமுடையாருக்கு நிசதி உழக்கு நெய் அட்டுவதற்கு இருபத்தைந்து சாவாமூவாப் பசுவை வைத்துள்ளான். இம்மன்னனது இதே ஆண்டில் பெருந்தனத்துத்தேவன் விச்சாதிரனான சோழமாராயன் சாவாமூவாப் பேராடு ஐம்பதை நிசதம் உழக்கு நெய் வார்த்து ஒரு விளக்கு எரிப்பதற்கு வைத்துள்ளான். இம்மன்னனது இதே ஆண்டில் இராசராசத்தென்னாட்டுக்கொடுங்குளத்து ஆதித்தன் இரணசிங்கனான வீரபாண்டிய பல்லவரையன் நொந்தாவிளக்கினுக்கு ஐம்பது ஆடுகளை விட்டுள்ளான். இவ்வூரில் இருந்த பெண்தவசி நாற்பத்தெண்ணாயிரம் மறலிதேவி அரைவிளக்கு ஒன்றுக்குப் பன்னிரண்டு பசுக்களை விட்டிருந்தாள்.

"புகழ்சூழ்ந்த புணரி" என்னும் தொடக்கமுள்ள மெய்க்கீர்த்தியையுடைய முதலாம் குலோத்துங்கசோழன் காஞ்சிபுரத்து அரண்மனையில் இருந்து ஆந்தாய்க்குடி என்னும் ஊரில்

இராசேந்திரசோழீச்சரமுடையாருக்கு வேண்டும் நிவந்தங் களுக்கு நாற்பத்தைந்தரையே மும்மாவரை நிலத்தை அளித் திருந்தான்.

Travancore Archaclogical series Volume VI Part I.

## 39 திருக் கோவலூர்விரட்டம்

கல்வெட்டு: இக்கோயிலில் சோழமன்னர்களில் மதுரை கொண்ட கோப்பரகேசரிவர்மன், முதலாம் இராசராசன், பரகே சரிவர்மனாகிய உடையார் வீரராசேந்திரதேவன், பரகேசரிவர்ம னாகிய உடையார் அதிராசேந்திரதேவன், ராஜகேசரிவர்மனாகிய உடையார் குலோத்துங்கசோழதேவன், இராசகேசரிவர்மனாகிய திரிபுவன சக்கிரவர்த்தி இராசாதிராசதேவன் இவர்களின் காலங்களிலும், பாண்டியர்களில் மாறவர்மன் திரிபுவன சக்கிரவர்த்தி சுந்தரபாண்டியதேவர், கோனேரின்மைகொண் டான் விக்கிரமபாண்டியதேவன் இவர்களின் காலங்களிலும், கங்கபல்லவர்களில் விஜயநிர்பதுங்கவிக்கிரமன், விஜயநந்தி விக்கிரமநந்திவர்மன் காலங்களிலும், ராஷ்டிரகூட வம்சத்துக் கன்னரதேவன் காலத்திலும் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

இத்திருக்கோயிலில் உள்ள தட்சிணாமூர்த்திக் கோயிலைக் கட்டியவர் மகதைப்பெருமாளின் மந்திரியாவர். அது குலோத் துங்கசோழரின் இருபதாம் ஆண்டில் கட்டப்பெற்றது. இக் கோயிலில் உள்ள மடைப்பள்ளி விக்கிரமசோழசேதிராயரின் மனைவியாரால் திரிபுவன சக்கிரவர்த்தி குலோத்துங்கசோழ னின் நான்காம் ஆண்டில் கட்டப்பெற்றதாகும்.

இக்கோயிலில் நுந்தாவிளக்குகளுக்கு அளிக்கப்பெற்ற நிவந்தங்கள்தான் மிகுதியாகும். ஒரு விளக்கினுக்கு முப்பத் திரண்டு பசுக்களும், ஒரு எருதும்; நான்கு விளக்கினுக்கு நானூற்றெண்பது ஆடுகளும்; இருபத்துநான்கு விளக்கு களுக்கு இரண்டாயிரத்துமுன்னூற்றுநான்கு ஆடுகளும் இவை போன்று பலவாகக் கொடுக்கப்பெற்றுள்ளன. பரகேசரிவர்ம னாகிய இராசேந்திரசோழதேவர் கல்வெட்டு இக்கோயிலுக்குரிய அணிகலன்களைக் குறிப்பிடுகின்றது.

இத்திருக்கோயில் கல்வெட்டினால் முதலாம் இராசராச னுடைய மனைவியராகிய ஒலோகமாதேவியாரின் தாயாரின் பெயர் அமிர்தவல்லி என்று அறியக்கிடக்கின்றது. பரகேசரி வர்மனின் இரண்டாம் ஆண்டுக் கல்வெட்டு செம்பியன்மிலா டுடையாரைப்பற்றியும், மதுரைகொண்ட கோப்பரகேசரிவர்ம ரின் இருபத்தெட்டாம் ஆண்டுக் கல்வெட்டு மிலாடுடையார் மகளைப்பற்றியும் விக்கிரமசோழன் கல்வெட்டு கிழையூர்மலைய மான் விக்கிரமசோழசேதிராயனைப்பற்றியும் குறிப்பிடுகின்றது.

See the Annual reports on South Indian Epigraphy for the year 1902. Numbers 230-306. Page 15, 16, 17 and 18.

## 46 திருத் தெங்கூர்

கல்வெட்டு: இத்திருக்கோயிலில் சோழமன்னர்களுள் மூன்றுங்குலோத்துங்கசோழதேவர், திரிபுவன சக்கிரவர்த்தி இராசராசதேவர், திரிபுவன சக்கிரவர்த்தி இராசேந்திரசோழ தேவர் இவர்கள் காலங்களிலும், பாண்டிய மன்னர்களில் மாறவர்மன் திரிபுவன சக்கிரவர்த்தி குலசேகரதேவரின் காலத் திலும் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

இக்கல்வெட்டுக்களில் இறைவர் வெள்ளையன்குன்றமுடை யார் என்னும் திருப்பெயரால் கூறப்பெற்றுள்ளனர். மூன்றுங் குலோத்துங்கசோழதேவரின் முப்பதாம் ஆண்டுக் கல்வெட்டு ஒரு நுந்தாவிளக்கினுக்கு நாலாயிரம்காசு கொடுக்கப்பெற்றதை யும், திரிபுவனச்சக்கிரவர்த்தி இராசராசதேவரின் இருபத்தைந் தாம் ஆண்டுக் கல்வெட்டு திருக்கோயிலுக்கு எண்ணெய் கொண்டுவந்து நாடோறும் கொடுப்பவர்களுக்கு நிலம் விடப் பெற்றதையும், திரிபுவன சக்கிரவர்த்தி இராசேந்திரசோழ னின் பன்னிரண்டாம் ஆண்டுக் கல்வெட்டு எண்ணெய்உற்பத்தி செய்வார்களுக்கு விதிக்கப்பெற்றிருந்த வரி நீக்கப்பெற்றதையும் குலசேகரதேவபாண்டியரின் முப்பத்தொன்றும் ஆண்டுக் கல் வெட்டு நரசிங்கதேவருடைய மகன் மாளவச்சக்கிரவர்த்தியின் பேரால் மாளவன்சந்தி நடத்துவதற்கு நிவந்தம் அளிக்கப் பெற்றதையும் குறிப்பிடுகின்றன.

See the Annual reports on South Indian Epigraphy for the year 1905. Numbers 528 to 532.

## 48 திருத் தேவூர்

கல்வெட்டு: இத்திருக்கோயிலில் ஜடாவர்மன் திரிபுவன சக்கிரவர்த்தி சுந்தரபாண்டியதேவரின் பதினொன்றும் ஆட்சி ஆண்டிலும் விஜயநகரபரம்பரையைச் சேர்ந்த தேவராயமகா ராஜரின் (சகம் 1347 இல் பொறிக்கப்பெற்ற) காலத்திலும் பொறிக்கப்பெற்ற இருகல்வெட்டுக்கள் இருக்கின்றன.

இவைகளுள் பாண்டியன்காலத்துக்கல்வெட்டில் இத்தேவூர் அருண்மொழித் தேவவளநாட்டுத் தேவூர்நாட்டுத் தேவூர் எனக் குறிக்கப்பெற்றிருப்பதால் இத்தேவூர் நாட்டின் தலைநகராய் இருந்தது என்று பெறப்படுகின்றது.

இறைவர் ஆதித்தேச்சரமுடையார் என்னும் பெயரால் அழைக்கப்பெறுகின்றனர். விஜயநகர பரம்பரையைச் சேர்ந்த புக்கண்ண உடையார் தேவர்கள் நாயன் எனச் சிறப்பிக்கப் பெற்றுள்ளனர்.

See the Annual reports on South Indian Epigraphy for the year 1905. Numbers 518-519.

## 52 திரு நறையூர்ச்சித்தீச்சரம்

கல்வெட்டு: இத்திருக்கோயிலில் இராசராசகேசரிவர்மனு கிய இராசராசதேவன், பரகேசரிவர்மனுகிய இராசேந்திரசோழ தேவன், இராசகேசரி திரிபுவன சக்கிரவர்த்தி குலோத்துங்க சோழதேவன், பரகேசரி விக்கிரமசோழதேவன், திரிபுவன சக்கிரவர்த்தி இராசாதிராசதேவன், பரகேசரிவர்மனுகிய திரி புவன சக்கிரவர்த்தி வீரராசேந்திரன் இவர்கள் காலங்களில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

இக்கல்வெட்டுக்களில் இறைவர் சித்தீச்சுவரமுடையமகா தேவர், சித்தீச்சுவரமுடைய கங்காளதேவர் என்னும் திருப் பெயர்களால் கூறப்படுகின்றனர். திருநறையூராகிய இவ்வூர் முதலாம் இராசராசமன்னன் காலத்தில் க்ஷத்திரியசிகாமணி வளநாட்டுத் திருநறையூர்நாட்டுத் திருநறையூர் எனவும், முதற் குலோத்துங்கசோழ தேவருடைய காலத்தில் குலோத்துங்க

சோழவளநாட்டுத் திருநறையூர்நாட்டுத் திருநறையூர் எனவும் வழங்கப்பெற்றிருந்தது. இந்தச் சித்தீச்சுவரமுடையார்க்குச் செம்பியன்மாதேவியார் வெள்ளிப்பாத்திரங்களையும், திருவமுது உள்ளிட்டவைகளுக்கு நிலங்களையும் அளித்துள்ளனர். இத் திருக்கோயிலை வழிபட வரும் மாகேசுவரர்களுக்கு உணவு அளிப் பதற்கு விருதராசபயங்கரவளநாட்டு மண்ணிநாட்டுக் கருப்பூ ருடையானும், சித்தீச்சுவரமுடையார்க்கு நாள்வழிபாட்டிற்கு ஜெயங்கொண்டசோழமண்டலத்து ஆமூர்க்கோட்டத்து குமிழி நாட்டு மாத்தூர் சாமுண்டதேவரும் நிலம் வாங்கி அளித் துள்ளனர்.

See the Annual reports on South Indian Epigraphy for the year 1909. Numbers 156-180.

## 64 திருப் பாதிரிப்புலியூர்

கல்வெட்டு: இத்திருக்கோயிலில் சோழமன்னர்களுள் மதுரைகொண்ட கோப்பரகேசரிவர்மன், இராசராச ராசகேசரி வர்மன் (முதலாம் இராசராசசோழன்), இராசகேசரிவர்மனாகிய உடையார் வீரராசேந்திரதேவன், இராசகேசரிவர்மனாகிய உடையார் இராசமகேந்திரதேவன், முதற்குலோத்துங்கன், விக்கிரமசோழதேவன் இவர்கள் காலங்களிலும், பாண்டியர் களில் பெருமாள் விக்கிரமபாண்டியன் காலத்திலும், விஜயநகர பரம்பரையினரில் வீரவிருப்பண்ண உடையார் காலத்திலும் செதுக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

இக்கல்வெட்டுக்களில் இறைவர் திருக்கடைஞாழல் பெரு மான் அடிகள், திருக்கடைஞாழல் ஆழ்வார், தோன்றுத்துணை ஆளுடையார், திருக்கடைஞாழல் உடையார் என்னும் பெயர் களால் குறிக்கப்பெற்றுள்ளனர். இவ்வூரை மதுரைகொண்ட கோப்பரகேசரிபன்மரின் கல்வெட்டு வடகரைதேவதானம் திருப் பாதிரிப்புலியூர் எனவும், இராசகேசரிபன்மரான உடையார் இராசமகேந்திரதேவர் கல்வெட்டு வடகரை இராசேந்திரசோழ வளநாட்டு மேல்கால்நாட்டுப் பிர்மதேயம் திருப்பாதிரிப்புலியூர் எனவும், விக்கிரமசோழதேவர் கல்வெட்டு இராசராசவள நாட்டுப் பட்டான்பாக்கைநாட்டுத் திருப்பாதிரிப்புலியூர்

எனவும், 'வீரமே துணையாக' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியையுடைய வீரராசேந்திரசோழதேவர் கல்வெட்டு இராசேந்திரசோழவளநாட்டுப் பவித்திரமாணிக்கவளநாட்டு பிர்மதேயம் பரநிருப பர்ராக்கிரம சதுர்வேதிமங்கலம் எனவும் கூறுகின்றன.

மதுரைகொண்ட கோப்பரகேசரிவர்மன் கல்வெட்டு "வடகரை தேவதானம் பாதிரிப்புலியூர் திருக்கடைஞாழல் பெருமான் அடிகளுக்கு" எனவும், கோவிராசகேசரிபன்மரான உடையார் ஸ்ரீ இராசமகேந்திரதேவரின் கல்வெட்டு வடகரை இராசேந்திர சோழவளநாட்டு மேல்கால்நாட்டுப் பிர்மதேயம் பாதிரிப்புலியூரான பரநிருபபராக்கிரம சதுர்வேதிமங்கலத்து உடையார் திருக்கடைஞாழலுடையாருக்கு எனவும், முதற்குலோத்துங்க சோழன் கல்வெட்டு திருப்பாதிரிப்புலியூர்த் திருக்கடைஞாழல் உடைய பெருமான் அடிகள் எனவும் குறிப்பிடுகின்றன. ஆதலால் ஊரின் பெயர் பாதிரிப்புலியூர் ஆகவும் கோயிலின் பெயர் ஞாழற்கோயிலாகவும் கொள்ளவேண்டும். நாவுக்கரசு பெருந்தகையார் "கடிபொழில்சூழ் ஞாழற்கோயில்" என்று அடைவுதிருத்தாண்டகத்தில் குறிப்பிட்டிருக்கும் கோயில் இப் பாதிரிப்புலியூர்க்கோயில் என்பதை மேற்கண்ட கல்வெட்டுக்கள் உறுதிப்படுத்துகின்றன.

ஞாழல் என்பதற்குப் புலிநகக்கொன்றை என்ற பொருள் உண்டாயினும் அதைத் தலவிருட்சமாகக் கொள்ளுதற்கில்லை. இவ்வூர்க்குரிய தலவிருட்சம் பாதிரிமரமாதலால் பாதிரிப்புலியூர் என்று பெயர்பெற்றது. மேலும் ஒரு ஊருக்கு இரண்டு தல விருட்சங்கள் கிடையாதென்பதையும் உய்த்துணரவேண்டும். பாதிரி என்ற சொல் தேவாரத்தில் வருவதால் அதுவே தலமரமாதல் வேண்டும்.

இக்கோயில் கல்வெட்டுக்கள் நுந்தாவிளக்கினுக்கும், திருவமிர்துக்கும், பூந்தோட்டத்திற்கும் நிவந்தங்கள் கொடுத்த செய்திகளைக் குறிப்பிடுகிறது. "திருநட்டக்கணப்பெருமக்கள் வழி கொடுத்த தோட்டம்", "திருவுண்ணாழிகைப் பெருமக்களோம் திருவமிர்துக்கு வேண்டும் முதல் இவரிடைப்பெற்றோம்" என்னும் கல்வெட்டுத் தொடர்கள் திருநட்டக்கணப் பெருமக்களும், திருவுண்ணாழிகைப் பெருமக்களும் இக்கோயில் நிர்வாகிகளில் சிலர் என்பதைக் குறிப்பனவாகும்.

இவ்வூர்க் கல்வெட்டுப் பாடலில் திருநாவுக்கரசுப் பெருந் தகையார் பரசமயகோளரிமாமுனி எனக் கூறப்பெற்றிருப்ப தோடு அவர்மீது புராணம் இயற்றிய புலவர்க்கு இரண்டுமா நிலம் இறையிலியாகக் கொடுத்த செய்தி குறிப்பிடப்பெற் றுள்ளது. இச்செய்தி முதற் குலோத்துங்கசோழ தேவரின் (கி. பி. 1070 முதல் 1120 வரை) நாற்பத்தொன்பதாம் ஆண்டில் (கி. பி. 1119 இல்) அதாவது இற்றைக்கு எண்ணூற்றுமுப்பத் தைந்து ஆண்டிற்கு முன்னதாகும். மேலும் முதற்குலோத் துங்கசோழன் காலத்துக் கல்வெட்டுப் பாடல் ஒன்று இக்கோயி லுக்குக் கன்னிவன புராணமும், நாடகமும் பாடிய நாவலர் ஒருவர்க்கு நிவந்தம் அளித்ததையும் குறிப்பிடுகின்றது. வீர. விருப்பண்ண உடையார் கல்வெட்டு இவ்வூரில் புஷ்பகிரிமடம் ஒன்று இருந்ததைப்பற்றித் தெரிவிக்கின்றது.

See the Annual reports on South Indian Epigraphy for the year ending 1902. Numbers 115-135 and, South Indian Inscription Volume VII. Numbers 739-759.

## 65 திருப்புகலூர்

கல்வெட்டு: இக்கோவிலில் சோழ மன்னர்களில் சாலை கலமறுத்த கோவிராசகேசரி வர்மனாகிய முதலாம் இராசராச சோழன், பரகேசரி வர்மனாகிய இராசேந்திரசோழன், இராச கேசரி வர்மராகிய உடையார் இராசாதிராசதேவர், இராச கேசரி வர்மராகிய இராசேந்திரதேவர், இராசகேசரிவர்மராகிய முதல் குலோத்துங்க சோழதேவர், விக்கிரம சோழதேவர், திரிபுவனச் சக்கிரவர்த்தி இராசராசதேவர் இவர்களின் காலங் களிலும், பாண்டியர்களில் மாறவர்மன் திரிபுவனச் சக்கிர வர்த்தி கோனேரின்மை கொண்டான், சடாவர்மன், திரிபுவனச் சக்கிரவர்த்தி சுந்தரபாண்டியன் இவர்களின் காலங்களிலும் செதுக்கப்பட்ட கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

இக்கோவில் கல்வெட்டுக்களில் இறைவர் புகலூர் மகா தேவர் என்னும் பெயரால் கூறப்பெற்றுள்ளனர். இத்திருக் கோவிலில் இடபவாகன தேவரையும், ராஜராஜவிடங்கரையும் எழுந்தருளுவித்தவர் இராசராச மங்கலத்தரையர் ஆவர். அவர்கள் எழுந்தருளுவிக்கப்பெற்ற காலம்; திரிபுவனச் சக்கிர

வர்த்தி இராசராசதேவரின் ஐந்தாம் ஆண்டில் ஆகும். இக் கோவிலில் சூரியதேவரையும் அவர் தம் இரு பிராட்டியாரையும் எழுந்தருளுவித்தவர், தேவன் பட்டகன் பண்டாரமும், (சிவபாத சேகரத் தெரிந்த திருமஞ்சனத்தார் வேளத்தைச்சேர்ந்த அவரது மகளாரும் ஆவர். இவை நிகழ்ந்தகாலம் "இரட்டபாடி ஏழரை இலக்கமும்கொண்டு" எனத் தொடங்கும் மெய்க்கீர்த்தியுடைய பரகேசரி இராசேந்திர தேவரின் 11 ஆம் ஆண்டாகும். இங்கே சிவபுரத்துத்தேவரை எழுந்தருளுவிக்கப்பெற்ற காலம், முதலாம் இராசாதிராசரின் 32 ஆம் ஆண்டாகும்.

பாண்டி குலாசனி வளநாட்டு, ஆர்க்காட்டுக் கூற்றத்து இறையூரான், முதற் குலோத்துங்க சோழதேவரின் 36 ஆம் ஆண்டில், அமாவாசைதோறும் புகலூர்த்தேவர் எழுந்தருளு வதற்குப் பொன் அளித்திருந்தான்.

இவ்வூரில், நம்பியார் குளத்தின் தென்கரையில், ஒரு சாலை ஒன்றைக் கட்டி, அதில் உச்சிக்காலத்திற்குப் பிறகு பன்னிரு பிராமணர்களுக்கு அமுது அளிக்கும்படி செயங்கொண்ட சோழ மண்டலத்துப் புலியூர்க் கோட்டத்து, பேரூர்நாட்டு நெற்குன் றத்துக் களப்பாளராஜர், பூலோக மாணிக்கச் சபையாரிடம் நிலம் கொடுத்துள்ளார். வடகரை இராசேந்திர சிங்க வள நாட்டுத் தனியூர் வீர நாராயணச் சதுர்வேதி மங்கலத்துச் சிற்றூராகிய குண்டூர் பொற்கோவில் சண்டேஸ்வரயோகி, திருநாவுக்கரைய தேவர்க்கு உச்சியம்போது, அர்த்தயாமம் இவைகளின் வழிபாட்டிற்கு, முதலாம் இராசராசசோழனின் 21 ஆம் ஆண்டில் நிலம்விட்டிருந்தான்.

கோதண்டராமன் சந்திக்கு, குலோத்துங்க சோழவள நாட்டில், முடிகொண்ட சோழப்பேராற்றின் தென்கரையில் தோட்டக்குடியாகிய இராசேந்திர சோழநல்லூரில் 45 வேலி நிலம், கோனேரின்மை கொண்டானின் 14-ஆம் ஆண்டில் கொடுக்கப்பெற்றிருந்தது. வீரபாண்டியன் சந்திக்கு, அரிசில், முடிகொண்டான் இவ்வாறுகளுக்கு இடையில், 10 வேலி நிலங் களின் வரிகள், வீரபாண்டியன் சந்திக்குக் கொடுக்கப்பட் டிருந்தது.

இவ்வூர்க்கோவிலில் நரலோகவீரன்மண்டபம்ஒன்றிருந்தது. க்ஷத்திரியநாதச் சதுர்வேதிமங்கலத்தார் அதில் கூட்டம் கூடு வது வழக்கம். இவ்வூரில் முடிகொண்ட சோழப்பேராற்றின்

வடகரையில் ஒரு ஆஸ்பத்திரி இருந்தது. இதில் நோயாளி களுக்கு உணவு அளிப்பதற்கு, இராசநாராயண வளநாட்டுத் திருவழுந்தூர் நாட்டுத் தேலூர், விருதராசன் நிலம் விட்டிருந் தான். இக்கோவிலில் சித்திரையில் பெருந்திருவிழா நடந்து வந்தது. இராசாக்கள் தம்பிரான் திருவீதி என்று ஒருவீதி மூன்றுங் குலோத்துங்கன் காலத்தில் ஏற்படுத்தப்பட்டது. பரகேசரி வர்மராகிய திரிபுவனச்சக்கிரவர்த்தி இராசராச தேவரின் 19-ஆம் ஆண்டுக் கல்வெட்டு குளிச்செழுந்த நாயனர் கோவிலைப்பற்றிக் குறிப்பிடுகிறது. முதற்குலோத்துங்க சோழ தேவரின் 35-ஆம் ஆண்டுக் கல்வெட்டு, நம்பிமுருகன் திருமடத் தைப்பற்றிக் குறிப்பிடுகிறது. அதில் சித்திரை, வைகாசி விழாக்காலங்களில் மாகேஸ்வரர்களுக்கு உணவு அளிப்பதற்கு அரசி ஏழுலகமுடையாரின் வேலைக்காரி, ராஜராஜசோழ ரம்பையார், நிவந்தம் ஏற்படுத்தியிருந்தார். புகலூர்ப் பெரு மான்கோவில் மண்டபத்தைக் கட்டியவர் ஆர்க்காட்டுத் தலைவ ராகிய சேதிராயர் ஆவர்.

See the Annual reportson South Indian Epigraphy for the year 1928. Numbers 42—108.

## 71 திரு மங்கலக்குடி

**கல்வெட்டு:** இத்திருக்கோவிலில் சோழர்களுள் திரிபுவனச் சக்கிரவர்த்தி இராசராசதேவர், திரிபுவனச் சக்கிரவர்த்தி கோனேரின்மை கொண்டான், இவர்கள் காலங்களிலும், பிற் காலப் பல்லவர்களில் சகல புவனச் சக்கிரவர்த்தி கோப்பெருஞ் சிங்கத்தேவர் காலத்திலும், விஜயநகர அரசர்களில் வீரப் பிரதாப கிருஷ்ணதேவ மாராயர் காலத்திலும் பொறிக்கப் பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

இவற்றுள் இராசராசதேவரின் கல்வெட்டு, அவ்வரசனின் 23 ம் ஆட்சியாண்டில் பஞ்சம் ஏற்பட்டதையும், கோனே ரின்மைகொண்டானின் கல்வெட்டு முதற் குலோத்துங்க சோழனின் 16 ம் ஆட்சியாண்டில் ரெவினியூ சர்வே நடை பெற்றதையும் (நிலங்கள் அளக்கப்பெற்றதையும்) கோப் பெருஞ்சிங்கதேவர் கல்வெட்டு. இத்திருக்கோயில் முதற்பிரா காரத்தில் நாயகர் திருமண்டபத்தில் புராணலிங்க தேவரை எழுந்தருளுவித்து நிவந்தம் அளித்தவன் பாண்டி குலாசனி

வளநாட்டு ஆர்க்காட்டுக் கூற்றத்துப் பெருமங்கலத்து உதயஞ் சடையனுன தொண்டமான் என்பதையும் குறிப்பிடுகின்றன. தட்சிணுமூர்த்திக் கோவிலில் நின்ற கோலத்தில் கைகுவித்துக் கடவுளை வணங்கும் முறையில் இருக்கும் உருவம் முல்லைக் குடையான் தியாகப்பெருமாளாகிய வானவன் பல்லவரையன் ஆவன். இரண்டாம் கோபுரத்தில் இருக்கும் உருவம் வரகுணப் பெருமாள் ஆகும் இவ்வூர் விருதராச பயங்கர வளநாட்டு வேம்பற்றூராகிய எதிரிலி சோழசதுர்வேதிமங்கலத்து மங்கலக் குடி எனக் குறிக்கப்பெற்றுள்ளது.

## 76 திருமறைக்காடு

கல்வெட்டு : இத்திருக் கோயிலில் சோழமன்னர்களில் மதுரை கொண்ட கோப்பரகேசரிவர்மன், முதலாம் இராசராச மன்னன், மூன்ருங் குலோத்துங்கசோழன், திரிபுவனச் சக்கிர வர்த்தி இராசேந்திரசோழதேவன், திரிபுவனச் சக்கிரவர்த்தி இராசராசதேவன், இவர்களின் காலங்களிலும், விசயநகர அரசர்களில் வீரப்பிரதாப மகாராயர், தேவராய மகாராயர் இவர்கள் காலங்களிலும் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இவ்வூர் (மறைக்காடு) உம்பளநாட்டுக் குன்றூர் காட்டைச் சேர்ந்தது என்று கல்வெட்டுக்கள் உணர்த்து கின்றன. இராசகேசரிவர்மனுகிய திரிபுவனச் சக்கிரவர்த்தி குலோத்துங்கசோழன் கல்வெட்டு, திருப்பதியம் பாடுவதற்கு நிவந்தம் அளிக்கப்பெற்ற செய்தியைத் தெரிவிக்கின்றது. இரா சேந்திரசோழன் கல்வெட்டு, விக்கிரமன் சந்தியையும் ஏனைய கல்வெட்டுகள், விளக்கினுக்கு, ஆடு, ஈழக்காசு இவைகள் கொடுக்கப்பட்டதையும் புலப்படுத்துகிறது. மராத்திமொழியில் உள்ள கல்வெட்டு பிரதாபசிங் மகாராசர், துளசாமகாராசர் இவர்களைப்பற்றிக் கூறுகின்றன.

See tbe Annual reports on South Indian Epigraphy for the year 1924 Numbers 415 - 503.

## 79 திருமுதுகுன்றம்

கல்வெட்டு : இத்திருக்கோவிலில் சோழமன்னர்களுள் பரகேசரிவர்மன், முதலாம் இராசராசன், திரிபுவனச் சக்கிர வர்த்தி ராஜராஜதேவர், திரிபுவனச் சக்கிரவர்த்தி குலோத்துங்க

சோழதேவர் முதலானோர் காலங்களிலும், பாண்டியர்களில், வீரபாண்டியதேவன், கோனேரின்மைகொண்டான் விக்கிரம பாண்டிய தேவன், திரிபுவனச் சக்கிரவர்த்தி கோனேரின்மை கொண்டான் விக்கிரமபாண்டியதேவன், மாறவர்மன் பராக் கிரம பாண்டியன், மாறவர்மன் விக்கிரமபாண்டியன், முதலா னோர் காலங்களிலும், விஜயநகர அரசர்களில், வீரவிஜய மகா ராயர் மகனாகிய பிரதாபதேவ மகாராயர், புக்கண்ண உடையார் மகனார் கம்மப்பண்ண உடையார், வீர விசுவராய மகாராயர் மகனார் காத்தவராய மகாராயர், முதலானோர் காலங்களிலும், பல்லவர்களில், கோப்பெருஞ்சிங்கதேவர் காலங்களிலும் பொறிக் கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

இதுபொழுதுள்ள கற்றளி, பெரிய சோழராகிய பராந்தக தேவரது மகனாகிய கண்டராதித்த தேவரது மனைவியாரும், மழபெருமான் அடிகளின் மகளாரும், உத்தமசோழ தேவரது தாயாருமாகிய செம்பியன் மாதேவியாரால் பரகேசரி வர்மனின் பன்னிரண்டாம் ஆண்டில் கட்டப் பெற்றதாகும். இவ்வம்மை யார் இக்கோவிலையன்றி, இக்கோவிலில் உள்ள ஸ்நபநமண்டபம், கோபுரம், சுற்றாலை, பரிவார தேவதைகளுக்குக் கோவில்கள் இவைகளையும் கட்டியுள்ளார்.

இத்திருக்கோவிலில் உள்ள நூற்றுக்கால் மண்டபத்தைக் கட்டியவன் அரசன் நாராயணன் ஆளப் பிறந்தானாகிய வீர சேகர காடவராயனும், திருமடைப்பள்ளியைக் கட்டியவன் எவிசை மோகனாகிய கச்சிராயனும், உற்சவமூர்த்திக் கோவிலைக் கட்டியவன் வையப்ப கிருஷ்ணம நாயக்கரும், மகாஸ்நபந மண்ட பத்தைக் கட்டியவன் ஆளப்பிறந்தான் எவிசை மோகனாகிய குலோத்துங்கசோழ காடவாராதித்தனும் ஆவர். இந்த மகா ஸ்நபந மண்டபம் கட்டிய செய்தியைப்பற்றி இராசகேசரி திரிபுவனச் சக்கிரவர்த்தி குலோத்துங்க சோழ தேவரின் பதினைந்தாம் ஆண்டுக் கல்வெட்டு உணர்த்துகின்றது. இக் கோவிலில் உள்ள கோபுரவாசலுக்குக் கண்டராதித்த கோபுரத் திருவாசல் என்று பெயர். சிவபெருமான் திருமுதுகுன்ற முடைய மகாதேவர் என்னும் திருப்பெயரால் குறிக்கப்பெற் றுள்ளனர். இத்திருக்கோவிலில் விக்கிரமசோழன் மடம் ஒன்று இருந்தது. இக்கோவிலில் நெய் அளக்கும் உழக்கு தேவாசிரியன் உழக்கு, தேவாசிரியன் கால் என்னும் பெயர்களால் வழங்கப்

பெற்றிருந்தது. நந்தவனங்களுக்கு விக்கிரம பாண்டியன் நந்தவனம், ராஜாக்கள் நாயகன் திருநந்தவனம் என்னும் பெயர்கள் வைக்கப்பெற்றிருந்தன.

இக்கோயிலில் உள்ள பாண்டியமன்னர்களின் கல்வெட்டுக்களுள் சில, விக்கிரமபாண்டியன் சந்தி, கோதண்டராமன் சந்தி இவைகளைக் குறிப்பிடுகின்றன. இவ்வூர் முதலாம் இராசராசசோழனது மகனாகிய கங்கைகொண்டசோழன் காலத்தில், வடகரை இராசேந்திர சிங்கவளநாட்டு, இருங்கோளப்பாடி நாட்டு, பருவூர்க் கூற்றத்தில் அடங்கியிருந்தது. முதலாம் இராசராசன், பரகேசரிவர்மன் இராசேந்திர சோழதேவன் I இவர்களின் கல்வெட்டுக்கள் நெற்குப்பையாகிய திருமுதுகுன்றம் எனக்குறிப்பிடுகின்றன.

அளிக்கப்பெற்ற நிவந்தங்கள் நெற்குப்பை ஊரவர்கள், திருமுதுகுன்றம் கோவிலில், திருப்பதியம் பாடுவார்க்கு நிலம் அளித்திருந்தனர். இச்செய்தியை முதலாம் இராசராசன் கல்வெட்டு உணர்த்துகிறது. பரகேசரிவர்மனாகிய திரிபுவனச் சக்கிரவர்த்தி இராசராசதேவரின் பத்தாம் ஆண்டுக் கல்வெட்டு, திருமுதுகுன்றம் உடையார்க்கு, விருதராசபயங்கரவளநாட்டு, மேற்காநாட்டு, பெண்ணாகடமாகிய முடிகொண்டசோழன் திறப்பில் 35 வேலி நிலம், தேவதான இறையிலியாகக் கொடுக்கப்பட்டிருந்தது. மற்றும் திருவாதிரைத் திருநாளுக்கும், பஞ்சகவ்வியத்திற்கும், நுந்தாவிளக்குகளுக்கும், அயன காலங்களுக்கும், கோபுரம் திருமதில் மண்டபம் இவைகள் பழுது பார்ப்பதற்கும் நிலங்கள் அளிக்கப்பெற்றுள்ளன.

இக்கோவிலில் திருக்கடம்பந்துறை உடைய நாயனார், பிரமேசுவரமுடையார் இவர்களைப்பற்றிக் குறிக்கப்பெற்றுள்ளன. 1253 இல் கோப்பெருஞ்சிங்கன் ஹொய்சல அரசர்களுடைய தண்ட நாயக்கரை, பெரம்பலூரில் தோற்கடித்து, அவருடைய மனைவி, செல்வம் இவைகளையெல்லாம் தனதாக்கிக் கொண்டான். அப்பாவம் நீங்குவதற்கு முதுகுன்றத்து இறைவனுக்கு நிவந்தம் அளித்துள்ளான்.

See the Annual reports on South Indian Epigraphy for the years 1900, 1918, 1935. Numbers 132-140, 39-92, 94-102.

---

# 90 திரு நெல்வாயில்

சுவாமியின்பெயர் உச்சிநாதேசுவரர். தேவியின்பெயர் கனகாம்பிகை. உச்சியார் என்பது தேவாரப்பெயர்.

இவ்வூர் தென் ஆற்காடு ஜில்லா சிதம்பரம் தாலூகாவில் சிதம்பரம் ரயில்வேஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கே ஒன்றரை மைல் தூரத்திலும், அண்ணாமலைநகருக்குத் தெற்கே ஒருமைல் தூரத்திலும் உள்ளது. தற்பொழுது சிவபுரி என்று வழங்கப் பெறுகிறது. புதுப்பிக்கப்பெற்ற தலமாகும். சிவபுரி மான்மியம் என்ற தல வரலாறும் இதற்கு உண்டு. Ep 1926. 512-26.

கல்வெட்டு: இந்தக்கோயிலில் மூன்று கல்வெட்டுக்கள் படியெடுக்கப்பட்டிருக்கின்றன. முத்துவேங்கடப்ப நாயக்கன் சகம் 1564 இல் (1642) துபாஷ் கிருஷ்ணப்ப நாயக்கன் நலத்திற்காகச் சிதம்பரம் அபிஷேகபுரம் அக்கிராகாரத்திற்கு முத்து வேங்கடப்ப நாயக்கன் காரியத்தர் கோனேரி செட்டியார் இருபத்தைந்துமா நிலம் தந்தார்.

குறிப்பு:

இது தலவரலாற்றுக் குறிப்பின் வரிசையில் 58–59 எண்களுக்கு இடையில் சேர்தற்பாலது. இக்குறிப்பு, பின்கிடைத்ததால் இங்குச் சேர்க்கப்பட்டது.

## ஒரு திருத்தம்

தலவரலாற்றுக் குறிப்பு, பக்கம் 171-இல், திருப்பாதிரிப் புலியூர்க் கல்வெட்டைப்பற்றிய ஒரு திருத்தம்.

திருநாவுக்கரசுப்பெருந்தகையார்......பெற்றுள்ளது என்ற கருத்தைத் தவிர்க, கன்னிவனபுராணமும் திருப்பாதிரிப்புலியூர் நாடகமும் பரசமயகோளரிமாமுனிவர் என்னும் ஒருவரால் இயற்றப்பட்டவை என்று கொள்க.

## இரண்டாவது திருமுறையிலே சிறப்பாயுள்ள

# திருப்பதிக வரலாறுகள்

இரண்டாவது திருமுறையிலுள்ள

# பண்களும் பதிகத் தொகையும்

| | | | |
|---|---|---|---|
| 1. | இந்தளம் | ... | 39 |
| 2. | சீகாமரம் | ... | 14 |
| 3. | காந்தாரம் | ... | 29 |
| 4. | பியந்தைக்காந்தாரம் | ... | 14 |
| 5. | நட்டராகம் | ... | 16 |
| 6. | செவ்வழி | ... | 10 |
| | | | 122 |

காரைக்குடி, தேவாரம், திரு. அ. நடேச தேசிகர் அவர்கள் கட்டளைவிளக்கத்திலுள்ளபடி வருமாறு :-

| | | | |
|---|---|---|---|
| 1. | இந்தளம் | ... | 45 |
| 2. | சீகாமரம் | ... | 19 |
| 3. | காந்தாரம் | ... | 26 |
| 4. | நட்டராகம் | ... | 14 |
| 5. | செவ்வழி | ... | 10 |
| | | | 114 |

இம்முறைப்படி எட்டுத் திருப்பதிகங்களைப் பற்றிய செய்தி அதில் இல்லை.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருஞானசம்பந்த சுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்

## இரண்டாவது திருமுறை

### திருப்பூந்தராய்

**137. பதிகவரலாறு :**

இது சீகாழிப் பதிகங்களுள் ஒன்று. அவற்றுள் சில பதிகங்களுக்கே வரலாறு காணப்படுகின்றது.

பண் - இந்தளம் வினவுரை

திருச்சிற்றம்பலம்

செந்நெ லங்கழ னிப்பழ னத்தய லேசெழும்
புன்னை வெண்கிழி யிற்பவ ளம்புரை பூந்தராய்
துன்னி நல்லிமை யோர்முடி தோய்கழ லீர்சொலீர்
பின்னு செஞ்சடை யிற்பிறை பாம்புடன் வைத்ததே. 1

---

திருஞான சம்பந்த மூர்த்தி நாயனர் இத் திருப்பதிகம் முதலாக நான்கு பதிகத்தில், சிவபெருமானை முன்னிலையிற்

பெற்று, வினவுதலும் விடைகூறியருள வேண்டுதலும் அமையப் பாடியிருத்தல்பற்றி, இவற்றை 'வினவுரை' என்றனர். இத் தலைப்புடைய பிறமூன்றும் காண்க. இதன் ஒவ்வொரு திருப் பாடலிலும் வெவ்வேறு பொருளைக்குறித்து வினவினர். முதல் வினை இறைவன் திருமுடிச் சார்புடையது. ஈற்றுவினை, திருவடிச் சார்புடையது. இடையிலே எருதேற்றம், மாதுபாகம், காம தகனம், கங்கையடக்கம், குழையும் தோடும்குலவும் முகம், இராவணனுக்கு அருளிய ஆக்கம் என்பவை வினவிற்குரிய பொருளாயுள்ளன. மூன்றும் அடிகளிலுள்ள விளிகளால் திருவடிப் பெருமையும், அமலமும் (யானையுரித்த வரலாறும்), விருப்பு வெறுப்பில்லாத வித்தகமும் (பிறையும் பாம்பும் சூடிய வரலாறும்), உயிர்களைத் தாங்கியுதவும் அருளுடைமையும் (மானேந்தியதால் விளங்கும் பசுபதித்துவமும்), திருவெண் ணீற்றுத் திருமேனிப் பொலிவும், மால்விடையூரும் மாட்சியும், மறைமுதலாகும் இறைமையும், அடியாரைக்காக்கும் அடியும் (காரணமும்) குறிக்கப்பட்டன. இவ்வாறு பதிகந்தோறும் உய்த்துணர்ந்து போற்றிவரின் சிவபிரான் திருவருள் எளிதின் எய்தும். திருமுறையைப் பாராயணம் புரிவோர் அதனால் பெறும் பயன் அவரவர் அநுபவத்தால் அன்றி அறிய ஒண்ணாது. பாக்கள் வெளிப்படையாகத் தோன்றலாம். கருத்து அருள் வெளியைக் கவர்ந்தது, மருளுலகம் இவ்வுண்மையை உணராது. வேதத்தின் இயல்பே இதன் இயல்பு.

முதற் பத்துத் திருப்பாடல்களுள்ளும் 'சொலீர்' என்று விடையிறுத்தருள வேண்டுவதுணர்க. சடையில் பிறையும் பாம்பும் ஒருசேர வைத்ததற்குக் காரணம் சொல்லவேண்டு கின்றார்; சந்திரனைப் பாம்பு விழுங்குவதாகக் கொள்ளும் ஐதிகத்தைக் கருத்திற்கொண்டு, பகைப்பொருள்கள் இரண்டும் ஓரிடத்தில் இருப்பது குற்றம் என்பார்க்கு 'வேண்டுதல் வேண்டாமை இல்லான்' ஆகிய சிவபிரான் சடையில், பகை நீங்கி உறவுகொள்ளும்நிலையை அவ்விரண்டும் அடைந்துள்ளன என்றார். பிறையைச்சூடிய வரலாறு, சிவாபராதம் புரிந்தாரும் அதனை உணர்ந்து அந்த இறைவனை வணங்குவராயின், அவர்க்குத் திருவருள் கிடைப்பது உறுதி என்னும் உண்மையை உணர்த்துவது. ஐந்தலைப் பாம்பணிந்தது, 'பிறவிஐவாய் அரவம் பொரும் பெருமான்' (திருவாசகம் 139) என்ற கருத்தினது.

எற்று தெண்டிரை யேறிய சங்கினொ டிப்பிகள்,
பொற்றி கழ்கம லப்பழ னம்புகு பூந்தராய்ச்
சுற்றி நல்லிமை யோர்தொழு பொற்கழ லீர்சொலீர்
பெற்றம் ஏறுதல் பெற்றிமை யோபெரு மானிரே. 2

---

"தூமதி சடைமிசைச் சூடுதல் தூநெறியா மதியான் என அமைத்தவாறே" (பட்டினத்தார் ஒருபா ஒருபஃது 6.)

'சோழவளநாடு சோறுடைத்து' இதிலுள்ள செந்நெல் அம் கழனிப்பழனம் உடைமை, சீகாழிக்கும் உரித்தாயிற்று. கிழி - துணி. கிழி(யும் துணியும் அறுவையும்) காரணப்பெயர், புரை - ஒத்த. துன்னி-நெருங்கி. துன்னித்தோய்கழல் என்க. பழனத்தின் அயலிடங்களில் புன்னைப் பூக்கள் விழுந்துகிடக்கும் தோற்றம் வெள்ளைத் துணியில் பவளம் கிடக்கும் காட்சியை ஒத்திருந்தது என்க. 'புன்னை பொன்தாது உதிர்மல்கும் அந்தண்புகலி' (3. 7. 9) என்றதால் அதன்பூக்கள் செம்பவளம் போல்வன ஆதல் அறியப்படும். பாண்பு என்பது பாம்பு என்று திரிந்தது. பாண் - பாட்டு. பாட்டைக் கேட்கும் இயல்புடையது பாண்பு. இதில், பிறையும்பாம்பும் சடையில் ஒருங்குவைத்த வாற்றை வினவினர்.

2. எற்று - எறிந்த. திரை - அலை. இப்பி - சங்கினத்துள் முதலாவது. இடம்புரியும் வலம்புரியும் சலஞ்சலமும் பாஞ்ச சன்னியமும் ஆகிய சங்கினம் நான்கும் முறையே இப்பி முதல் சலஞ்சல முடியக்கூறும் நான்காலும் ஆயிரம் ஆயிரமாகச் சூழப்பெற்ற பெருமையின. (நிகண்டு, தொகுதி 3. பா. 73) பெற்றம்-எருது. பெற்றிமை - தன்மை, பேறு, உயர்வுடையது, சிறந்த பாக்கியம் என்னுங் கருத்தில் வந்தது. பெருமகன் என்பது பெருமான் என்று மருவிற்று. மகன் - தேவன், (மகள் - தேவி, திருமகள், நாமகள்) பெருமானிர் - விளி, ஏகாரம் ஈற்றசை, சீகாழிக்கழனியிற் சங்கும் இப்பியும் பொன்போல் விளங்கும் தாமரைகளும் மிக்குள்ளன; பெற்றமேறுதல் - 'பசு வேறும் பரமன்' விடையேறுதல்; பசுபதி என்பதைக் குறித்தது. இதில் விடை (பசு) ஏறும் உண்மையை வினவினர்.

சங்கு செம்பவ ளத்திரண் முத்தவை தாங்கொடு
பொங்கு தெண்டிரை வந்தலைக் கும்புனற் பூந்தராய்த்
துங்க மால்களிற் றின்னுரி போர்த்துகந் தீர்சொலீர்
மங்கை பங்கமும் அங்கத்தொ டொன்றிய மாண்பதே. 3

சேம வன்மதில் பொன்னணி மாளிகை சேணுயர்
பூம ணங்கம ழும்பொழில் சூழ்தரு பூந்தராய்ச்
சோம னும்மர வுந்தொடர் செஞ்சடை யீர்சொலீர்
காமன் வெண்பொடி யாகக் கடைக்கண் சிவந்ததே. 4

---

3. பொங்குதல் - உயர்தல், மிகுதல், புனல் - நீர், துங்கம் - உயர்ச்சி. பவளத்தின் அடைமொழியால் மற்றையிரண்டின் நிறம் வெளிப்படை, திரள் - திரட்சி; தொகுதியுமாம். களிறு- மதக்களிப்புடையது (யானையில் ஆண்). மால் - பெருமை, மயக் கமுமாம். உரி - தோல், உகந்தீர் - உயர்ந்தவரே, பங்கம் - கூறு. (பங்கு+அம்). அங்கம் - உறுப்பு, இங்குத் திருமேனியைக் கொள்க. ஒன்றிய மாண்பு - அர்த்தநாரீச்சுரவடிவின்சிறப்பு, யானையை உரித்தது ஆணவமல நாசம் என்பர், மங்கை பங்கு; போகியா யிருந்து உயிர்க்குப் போகத்தைப் புரிதல்பற்றியும் உயிர்க்கு இச்சாஞானக் கிரியா பலத்தை மிக விளைத்தல் பற்றியும் ஆயிற்று. ஆற்றலுக்கு அதுவே ஏது. களிற்றையுரித்த போது தேவியார் அஞ்சியதாகச் சொல்வது, ஞானமும் அஞ்சத் தக்க அத்துணைக்கொடியது இருண்மலம் என்பதுணர்த்த. இதில் மெய்ப்பாதியில் மாதிருக்கும் உண்மையை வினவினர்.

4. சேமம் - காவல், சேண் உயர்தல் - விண்ணில் மிக வோங்குதல், பொழில் - சோலை, சோமன் - பிறை, அரவு - பாம்பு, காமன் - மன்மதன். வெண்பொடி - (எரிந்த) சாம்பல். சிவத்தல் - கோபக்குறிப்பு, "கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள" (தொல், சொல், உரிச்சொல். 76) மன்மததகனம், யோகியாய், யோகமுத்தி உதவுதற்பொருட்டு நிகழ்கின்ற இயற்கை. (சித்தியார். 70.) இதில் காமனை எரித்தவாற்றை வினவினர்.

பள்ள மீனிரை தேர்ந்துழ லும்பகு வாயன
புள்ளு நாடொறுஞ் சேர்பொழில் சூழ்தரு பூந்தராய்த்
துள்ளு மான்மறி யேந்திய செங்கையி னீர்சொலீர்
வெள்ள நீரொரு செஞ்சடை வைத்த வியப்பதே. 5

மாதி லங்கிய மங்கைய ராட மருங்கெலாம்
போதி லங்கம லம்மது வார்புனற் பூந்தராய்ச்
சோதி யஞ்சுடர் மேனிவெண் ணீறணி வீர்சொலீர்
காதி லங்குழை சங்கவெண் டோர்டுடன் வைத்ததே. 6

---

*5.* நீர்ப்பள்ளங்களில் இருக்கும் மீன்களை இரையாகத் தேர்ந்து அலையும் நாரைகள் நாள்தொறும் சோலையில் தங்கும் வளமுடையது சீகாழி. நாரை பகுந்த (பிளந்த)வாய் உடைமையால் பகுவாயன புள்ளு என்றார். பதிகம், 138 பா. 2-ல் 'வெண் குருகும் பகுவாயன நாரையும் திரைவாய் இரைதேரும் வலஞ்சுழி' என்றது காண்க. உணவும் இரையும் ஒன்றல்ல என்பதை "இழிவறிந்துண்பான்கண் இன்பம்போல் நிற்கும் கழிபேர் இரையான்கண் நோய்" என்ற (946) குறளாலறிக. செஞ்சடைமேல் நீர்ப்பெருக்கை வைத்த வியப்பைச் சொல்வீர் என்று துள்ளுகின்ற மான்கன்றை ஏந்திய செங்கையுடைய சிவபெருமானை நோக்கி வேண்டுகின்றார். காட்டில் இருக்கத் தக்க மானைக் கையிலும் கையில் இருக்கத்தக்க (கமண்டல) நீரைச் சடைக் காட்டிலும் ஏந்தியது வியப்பு. இதில் கங்கையைத்தாங்கிய ஆற்றலை வினவினார்.

*6.* மாது - அழகு, இலங்குதல் - விளங்குதல், மருங்கு - பக்கம், போது - மலரும் பருவத்து அரும்பு, கமலம் - தாமரை, மது - கள், குழையும் தோடும் காதணிகள், சீகாழியில் அழகிய மங்கையர் ஆடுதற்குப் பரிசாகத் தாமரை மலர்கள் தேனை ஒழுக்குகின்றன என்று நீர்நிலவளம் உணர்த்தப்பட்டது. செம்மேனியில் வெண்ணீற்றை அணிவீர் என்று அழைத்து, திருக்காதில் குழையும் தோடும் உடன்வைத்த புதுமையை வினவினார், 'தோடுடையான் குழையுடையான்' (1, 61. 8,) தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும் ...... உடைத் தொன்மைக் கோலம்' என்பது (232) திருவாசகம்.

* * * 7

வருக்க மார்தரு வான்கடு வன்னெடு மந்திகள்
தருக்கொள் சோலை தருங்கனி மாந்திய பூந்தராய்த்
துரக்கு மால்விடை மேல்வரு வீர்அடி கேள்சொலீர்
அரக்கன் ஆற்றல் அழித்தரு ளாக்கிய ஆக்கமே. 8

வரிகொள் செங்கயல் பாய்புனல் சூழ்ந்த மருங்கெலாம்
புரிசை நீடுயர் மாடநி லாவிய பூந்தராய்ச்
சுருதி பாடிய பாணியல் தூமொழி யீர்சொலீர்
கரிய மால்அயன் நேடி உமைக்கண் டிலாமையே. 9

வண்ட லங்கழ னிம்மடை வாளைகள் பாய்புனற்
புண்டரீக மலர்ந்து மதுத்தரு பூந்தராய்த்
தொண்டர் வந்தடி போற்றிசெய் தொல்கழ லீர்சொலீர்
குண்டர் சாக்கியர் கூறிய தாங்குறி யின்மையே. 10

---

8. வருக்கம் - இனம், கடுவன் - ஆண்குரங்கு, மந்தி - பெண்குரங்கு, தரு - மரம், மாந்திய - தின்ற, துரக்கும் - துரத்தும். (பிறவினை) துரந்த, துரந்து எனல் தன்வினையாட்சி. அருகிய வழக்கு, வருவீராகிய அடிகேள் என்று விளித்து. இராவணனது ஆற்றலை அழித்து அருள்கொடுத்த ஆக்கத்தைப் பற்றி இதில் வினவினர்.

9. சீகாழியில் உள்ள மாடமாளிகைகளின் உயர்வும் நீள்வும், புரிசையும், நீர்வளமும், அந்நீரிற்பாயும் மீன்களின் செழுமையும் குறிக்கப்பட்டன. வேதாகமங்கள் சிவபெருமான் திருவாக்காதலின், சுருதிபாடிய பாண் இயல் தூமொழியீர் என்று விளித்தார். இதில், அரியும் அயனும் அடிமுடிதேடிக் காணாமையை வினவினர். பாடிய பாண் (பாட்டு) இயலும் மொழி. தூமொழி. சுருதி - கேள்வி, எழுதாக்கிளவியாதலின் கேள்வியால் தொன்று தொட்டுணர நின்றன. நேடி - தேடி.

10. வண்டல் - வெள்ளத்தால் அடித்துக்கொண்டு வரப் பட்ட உரம்மிக்க மணல். மடை - நீர்மடை. புண்டரீகம் - தாமரை. தொல்கழல் - திருவடியின் தொன்மை. ஆதியும் மத்தியும் அந்தமும் இல்லாதது. கழல் என்பது எருதினது கொம்பு போல் அமைந்தது. பகைவர் உடம்பில் ஊறுபடுத்த, வலக்காலில்

மகர வார்கடல் வந்தண வும்மணற் கானல்வாய்ப்
புகலி ஞானசம் பந்தன் எழில்மிகு பூந்தராய்ப்
பகவ னுரைப் பரவுசொன் மாலைபத் தும்வல்லார்
அகல்வர் தீவினை நல்வினை யோடுட னவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

தரிக்கப்படுவது. "தாள், களங்கொளக் கழல் பறைந்தன, கொல்லேற்றின் மருப்புப்போன்றன." என்னும் புறப்பாப்(4) பகுதியாலறிக. தய்ந்தபின் மழுமழுவென்ருகி எருதின் கொம்பை யொத்தது. வடிவில் முழுதும் ஒப்பது. குண்டர் - சமணர். குறியின்மை - பிழையாதகுறி இல்லாமை. (82: 10) இதில் புறப் புறச்சமயத்தார் செய்யும் நிந்தையின் பொருளின்மையை வினுவினர்.

11. மகரம் - சுருமீன். அணவும் - பொருந்தும். கானல். கடற்கரைச்சோலை. புகலி - சீகாழி. எல்லாவுயிர்க்கும் புகலிட மானது. பகவனுர் - திரு, ஞானம் முதலிய ஆறுகுணங்களும் உடையவர். பரவுதல் - வாழ்த்தல். தீவினையை அகல்வர்- நல்வினையை அகலாது உடனுவர். ஒடு உடன் இரண்டும் இணைந்து வந்தவாறு அறியத்தக்கது.

---

கட்டளைக் கலித்துறை

பார்மண் டலத்தினிற் பன்னிரு பேரொடு
மன்னிநின்ற
நீர்மண் டலப்படப் பைப்பிர மாபுரம்
நீறணிந்த
கார்மண் டலக்கண்டத் தெண்டடந் தோளன்
கருணைபெற்ற
தார்மண் டலமணி சம்பந்தன் மேவிய
தண்பதியே.

—ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி.

# 2. திருவலஞ்சுழி

## 138 பதிகவரலாறு:

முத்தமிழ் விரகர், மாதவத்து முதிரும் அன்பர்கள் எதிர் கொள, வலஞ்சுழிப்பெருமான் கோயில் வந்துஎய்திக், கோபுரம் இறைஞ்சி, உள்புகுந்து, வலங்கொண்டு, உச்சிமேல் அஞ்சலியினராய்ப் பெருகும் ஆதரவுடன் பணிந்தெழுந்து ஊனமில் இசையுடன் விளங்கிய இத்திருப்பதிகத்தைப்பாடி வினவியருளினர்.

### பண் - இந்தளம் வினவுரை

திருச்சிற்றம்பலம்

விண்டெ லாமல ரவ்விரை நாறுதண் டேன்விம்மி
வண்டெ லாம்நசை யால்இசை பாடும் வலஞ்சுழித்
தொண்டெ லாம்பர வுஞ்சுடர் போல்ஒளி யீர்சொலீர்
பண்டெ லாம்பலி தேர்ந்தொலி பாடல் பயின்றதே. 1

பாரல் வெண்குரு கும்பகு வாயன நாரையும்
வாரல் வெண்டிரை வாயிரை தேரும் வலஞ்சுழி
மூரல் வெண்முறு வன்னகு மொய்யொளி யீர்சொலீர்
ஊரல் வெண்டலை கொண்டுல கொக்க வுழன்றதே. 2

---

1. விண்டு - திறந்து, எல்லாம் - போதுகள் யாவும். விண்டு மலர என்க. விரை - மணம். நசை - விருப்பம். தொண்டு - தொண்டர் (ஆகுபெயர்). சுடர் - செஞ்சுடர். ஒலிபாடல் - வினைத்தொகை. இப்பதிகமுழுதும் சிவபெருமான் பலியேற்ற வரலாற்றைப்பற்றிய வினாக்களாதலை அறிக. 1, 4. 7, 8, 6, 9, 5, 10 என்பனவற்றின் முடிவில் வினைப்பெயர்களும், பண்பும், செல்வமும் சொல்லீர் என்பதொடு முடியும்.

2. பாரல் - நீளல், அல் விகுதி (பதிகம் 321, பா. 5-ல் பார்க்க) வாரல் - வார்தல், ஒழுகுதல். திரைவாய் இரைதேரும் - அலை நீரிலுள்ள மீன் உணவு ஆராயும், குருகு - கொக்கு, மூரல் - புன்னகை, முறுவல் - பல், நகு - விளங்கும், ஊரல் - ஊர்தல், பாரல் - நீளல், நீண்டவாய், பிளத்தல் - பிளந்தவாய் எனில் 'பகுவாய்' கூறியது கூறலாகும். பதிகம், 321, பா. 5, 'பாரல் வாய்ச்சிறுகுருகு'.

கிண்ண வண்ணமல ருங்கிளர் தாமரைத் தாதளாய்
வண்ண நுண்மணன் மேலனம் வைகும் வலஞ்சுழிச்
சுண்ண வெண்பொடிக் கொண்டுமெய் பூசவல் லீர்சொலீர்
விண்ண வர்தொழ வெண்டலை யிற்பலி கொண்டதே. 3

கோடெ லாநிறை யக்குவ ளைம்மல ருங்குழி
மாடெ லாமலி நீர்மண நாறும் வலஞ்சுழிச்
சேடெ லாமுடை யீர்சிறு மான்மறி யீர்சொலீர்
நாடெ லாமறி யத்தலை யின்னற வேற்றதே 4

கொல்லை வென்றபுனத் திற்குரு மாமணி கொண்டுபோய்
வல்லை நுண்மணன் மேலனம் வைகும் வலஞ்சுழி
முல்லை வெண்முறு வன்னகை யாளொளி யீர்சொலீர்
சில்லை வெண்டலை யிற்பலி கொண்டுழல் செல்வமே. 5

பூச நீர்பொழி யும்புனற் பொன்னியிற் பன்மலர்
வாச நீர்குடை வாரிடர் தீர்க்கும் வலஞ்சுழித்
தேச நீர்திரு நீர்சிறு மான்மறி யீர்சொலீர்
ஏச வெண்டலை யிற்பலி கொள்வ திலாமையே. 6

---

3. தாமரைகள் கிண்ணத்தின் உருவம்போல மலர்தலை உணர்த்தினர். கிளர் - விளங்குகின்ற, அளாய் - அளாவி, கலந்து, வண்ணம் - நிறம், அழகு. அன்னம் தாமரைப்பூந் தாதுகளைப் பொருந்திய அழகுடன் பொடிமணலில் வைகும் வளத்தது வலஞ்சுழி, பொடிக்கொண்டு பூசுதலின்வன்மை சர்வ சங்கார கர்த்திருத்துவத்தைக் குறித்தது. வைகல் - தங்குதல்.

4. கோடு - கரைகள், குழி - அக்கரைகளுக்கு நடுவிலுள்ள பள்ளம், மாடு - பக்கம், கரைகளில் பூத்த குவளைமலர் மணம் பள்ளத்திலுள்ள நீரில்நாறும். சேடு - பெருமை, தலை - பிரம கபாலம், நறவு - ஈண்டுப் பிச்சை யேற்ற உணவு குறித்து நின்றது.

5. குரு - நிறம், வல்லை - விரைவு. முல்லைப்பூ வெண்முறு வலையுடைய நகை (பற்)களுக்கு ஒப்பு. சில்லை - சிறுமை.

6. பூசம் - தை முதலிய பன்னிரு திங்களிலும் வரும் நன்னாள், பூசநக்ஷத்திரம். ''பூசம் புகுந்தாடிப் பொலிந்

கந்த மாமலர்ச் சந்தொடு காரகி லுந்தழீஇ
வந்த நீர்குடை வாரிடர் தீர்க்கும் வலஞ்சுழி
அந்த நீர்முத லீர்நடு வாமடி கேள்சொலீர்
பந்த நீர்கரு தாதுல கிற்பலி கொள்வதே. 7

தேனுற்ற நறு மாமலர்ச் சோலையில் வண்டினம்
வானுற்ற நசை யாலிசை பாடும் வலஞ்சுழிக்
கானுற்ற களிற் றின்னுரி போர்க்கவல் லீர்சொலீர்
ஊனுற்ற தலை கொண்டுல கொக்க வுழன்றதே. 8

தீர்த்த நீர்வந் திழிபுனற் பொன்னியிற் பன்மலர்
வார்த்த நீர்குடை வாரிடர் தீர்க்கும் வலஞ்சுழி
ஆர்த்து வந்த வரக்கனை அன்றடர்த் தீர்சொலீர்
சீர்த்த வெண்டலை யிற்பலி கொள்வதுஞ் சீர்மையே. 9

---

தழகாய ஈசன் உறைகின்ற இடைமருது ஈதோ" (1–32–5) என்றருளியதுணர்க. குடைவார் - முழுகுவார். தேசமும் திருவும் நீவிரே. பலிகொள்வதாகிய இல்லாமை எனவிரிக்க, இல்லாமை - வறுமை.

7. கந்தம் - மணம், சந்து - சந்தனவிருட்சம், கார்அகில் - கரிய அகில், அந்தமும் ஆதியும் நடுவும் நீவிரே. 'அடிகள்' விளியாங்கால் அடிகேள் என்றும் ஆகும், பந்தம் கருதாமை: பிச்சை யேற்றலில் உயிர்க்கு ஆகும் பந்தம் இறைவனுக்கு இன்மையை உணர்த்தி நின்றது. பந்தமென்று கருதாமல் என்னும் உரை சிறவாது.

8. நசை - விருப்பம். களிறு - ஆண்யானை, மதக்களிப்பை யுடையது என்னுங் காரணப்பொருளது. கான் - காடு. உலகு ஒக்க: - உலகெல்லாம் என்றவாறு.

9. தீர்த்தநீர் - பரிசுத்தம் புரியும் ஆற்றலுடைய நீர், காவிரிமுதலிய யாறுகள் புண்ணிய நதிகள் ஆம். தீர்த்தமாகா நதிகளும் உள. பொன்னி - காவிரி, ஆர்த்து - ஆரவாரம்செய்து, சீர்த்த - சீருடைய.

உரம னுஞ்சடை யீர்விடை யீரும தின்னருள்
வரம னும்பெற லாவது மெந்தை வலஞ்சுழிப்
பிரம னுந்திரு மாலு மளப்பரி யீர்சொலீர்
சிரமெ னுங்கல னிற்பலி வேண்டிய செல்வமே. 10

வீடு ஞானமும் வேண்டுதி ரேல்விர தங்களால்
வாடின் ஞானமென் னாவது மெந்தை வலஞ்சுழி
நாடி ஞானசம் பந்தன செந்தமிழ் கொண்டிசை
பாடு ஞானம்வல் லாரடி சேர்வது ஞானமே. 11

திருச்சிற்றம்பலம்

---

10. உரம் - பெருமை, (சிவபிரா னுக்குச் சடையும் ஞான மாதலின்) அறிவுமாம். பலியேற்கும் பாத்திரம் பிரமகபால மாதலின் "சிரமெனுங்கலம்" என்றார். பா. 5+10-ல் செல்வம் என்றது குறிப்பு. வரம்பெறலாவதும் மன்னும் என மாற்றலு மாகும்.

11 வீடும் அதற்கு ஏதுவான ஞானமும் வேண்டுவீ ரெனில், விரதங்களால் உடல்மெலிந்தால் ஞானம் ஆவதும் என்? என்று வினவுக. விரதங்களால் உடல்வாட்டம் அன்றி உண்மை ஞானப் பேறு வாயாது என்றவாறு. எந்தையாகிய சிவபிரானது திருவலஞ்சுழியை (மனத்தால்) நாடி, (வாக்கால்) ஞானசம்பந்தருடைய செந்தமிழ் கொண்டு இசைபாடும் ஞானம் வல்லவர் திருவடி சேர்வது ஒன்றே ஞானமாகும் என்று பொருள்கொள்க. இத்திருமுறை பாடுவார்டிமலர் சேர்வதே வீடுதரும் ஞானமாகும் என்பது கருத்து. 'சைவமும் தமிழும் தழைத்தினி தோங்குக' என்று இக்காலத்தில் வழங்கும் தொடரில், 'தமிழ்' என்றது திருமுறைகளையே குறிக்கும். பழந் தமிழ் நூல்களையும் தமிழ் மொழியையும் குறித்ததன்று. அவை வேறு பல சமயக்குறிப்புக்களையும் கொண்டிருத்தலாலும், சைவத்தொடு நெருங்கிய தொடர்பில்லாமையாலும், தமிழில் பிற சமய நூல்கள் பல உள்ளமையாலும் அவற்றை ஈண்டுச் சைவத்தொடு சேர்த்து வாழ்த்தினர் என்றல் பொருந்தாது.

பிற்காலப் பதிப்புக்களில் 'வாடி' என்ற பாடமே உளது.

---

# 3 திருத்தெளிச்சேரி

## *139* பதிகவரலாறு

சண்பை வள்ளலார் திருநள்ளாறு வணங்கிச்சென்று திருத்தெளிச்சேரியினைச் சேர்ந்து பரவிப் பாடிய பதிகம் இது.

### பண் - இந்தளம் வினாவுரை

*திருச்சிற்றம்பலம்*

பூவ லர்ந்தன கொண்டுமுப் போதுமும் பொற்கழல்
தேவர் வந்து வணங்கு மிகுதெளிச் சேரியீர்
மேவ ருந்தொழி லாளொடு கேழற்பின் வேடனாம்
பாவ கங்கொடு நின்றது போலுநும் பான்மையே. 1

விளைக்கும் பத்திக்கு விண்ணவர் மண்ணவ ரேத்தவே
திளைக்குந் தீர்த்த மறாத திகழ்தெளிச் சேரியீர்
வளைக்குந் திண்சிலை மேலைந்து பாணமுந் தானெய்து
களிக்குங் காமனை யெங்ஙன நீர்கண்ணிற் காய்ந்ததே. 2

---

1. தெளிச்சேரியில் மூன்றுவேளையிலும் தேவர்கள் பூக்களைக் கொண்டுவந்து சிவபூசைசெய்த வரலாறு உணர்த்தப்பட்டது. மேவருந்தொழில், சிவசத்தியின் இருத்தியும் எனையோரெவராலும் அடைதற்கரியவை. கேழல் - பன்றி. சிவனும் உமையும், வேடனும் வேட்டுவச்சியுமானதை உணர்த்திற்று பாவகம் - மெய்யல்லாமை குறித்தது.

2. சிவபத்தியை விளைத்தலால் தெளிச்சேரி தீர்த்தத்தில் விண்ணோரும் மண்ணோரும் திளைப்பர். அத்தகைய தீர்த்தம் இடையறாத சீர்த்தியை அத்தலம் உடையது. சிலை - (கரும்பு) வில். ஐந்து (மலர்க்) கணை, எய்து களித்த மன்மதனை நெற்றிக் கண் நெருப்பைப் பெய்தெரித்தது எங்ஙனம் என வினவினர். காய்தல் - எரித்தல். கர்மத்தனம் புரிந்ததைக் குறித்தது.

வம்ப டுத்த மலர்ப்பொழில் சூழ மதிதவழ்
செம்ப டுத்த செழும்புரி சைத்தெளிச் சேரியீர்
கொம்ப டுத்ததொர் கோல விடைமிசைக் கூர்மையோ
டம்ப டுத்தகண் ணுளொடு மேவ லழகிதே. 3

காரு லாங்கட லிப்பிகள் முத்தங் கரைப்பெயும்
தேரு லாநெடு வீதிய தார்தெளிச் சேரியீர்
ஏரு லாம்பலிக் கேகிட வைப்பிட மின்றியே
வாரு லாமுலை யாளையொர் பாகத்து வைத்ததே. 4

பக்க நுந்தமைப் பார்ப்பதி யேத்திமுன் பாவிக்கும்
செக்கர் மாமதி சேர்மதில் சூழ்தெளிச் சேரியீர்
மைக்கொள் கண்ணியர் கைவளை மால்செய்து வெள்வவே
நக்க ராயுல கெங்கும் பலிக்கு நடப்பதே. 5

---

3. வம்பு - மணம். மதி - சந்திரன். செம்பு - உலோகம். புரிசை - மதில். செம்புமதில். கொம்பு - எருதின்கோடு. கோலம் - அழகு. கண்ணுள் - பார்வதி தேவியார், மேவல் - எழுந்தருளியிருக்குங் காட்சி. இடபாரூடரானதை உணர்த்திற்று.

4 கார் - மேகம். இப்பி - (முத்துப் பிறக்குமிடங்களுள் ஒன்றாய) சங்கினத்தின் முதற்பிறப்பு. முதற்பதிகம் இரண்டாவது பாட்டின் குறிப்பிற்காண்க. தேருலாவும் பெருந்தெரு, ஏர் - எழுச்சி, அழகு. வார் - கச்சு, அர்த்தநாரீச்சுர வடிவமானதை உணர்த்திற்று.

5. முதற்பாட்டிலும் எட்டாவதுபாட்டிலும் உள்ளவாறே இதிலும் முன்னிலை ('உம்', 'நும்') நின்றவாறுணர்க. பார்ப்பதி- பருவதபுத்திரி. செக்கர் - செவ்வானம். மாமதி - பூரணசந்திரன், தேவிபூசித்த திருத்தலம் ஆதலை முன் ஈரடியில் உணர்த்தினர். கண்ணியர் - தாருகாரணியத்து மாதர். வளை - வளையல். மால் - காமமயக்கம். வெள்வல் - கவர்தல். நக்கர் - (நக்நர்) ஆடையில்லாதவர், 'இக்கலிங்கம்போனால் என் ஏகலிங்க மாமதுரைச் சொக்கலிங்கம் உண்டேதுணை' என்று நக்நருதலாலும் கூறினர் இரட்டைப் புலவருள் ஒருவர். பலியேற்றலைச் சொல்லிற்று.

தவள வெண்பிறை தோய்தரு தாழ்பொழில் சூழநல்
திவள மாமணி மாடந் திகழ்தெளிச் சேரியீர்
குவளை போற்கண்ணி துண்ணென வந்து குறுகிய்
கவள மால்கரி யெங்ஙன நீர்கையிற் காய்ந்ததே. 6

கோட டுத்த பொழிலின் மிசைக்குயில் கூவிடும்
சேட டுத்த தொழிலின் மிகுதெளிச் சேரியீர்
மாட டுத்தமலர்க் கண்ணினுள் கங்கை நங்கையைத்
தோட டுத்த மலர்ச்சடை யென்கொனீர் சூடிற்றே. 7

கொத்தி ரைத்த மலர்க்குழ லாள்குயில் கோலஞ்சேர்
சித்தி ரக்கொடி மாளிகை சூழ்தெளிச் சேரியீர்
வித்த கப்படை வல்ல வரக்கன் விறற்றலை
பத்தி ரட்டிக் கரநெரித் திட்டதும் பாதமே. 8

---

6. தவளம் - வெண்மை. அழகுமாம். வெண்பிறை என்றது. அடையின்பொருளின் றிப்பெயரளவாய்நின் றதுபோலும், திவள் அம் எனப் பிரித்து, திவள்கின்ற அழகிய எனப் பொருள் கொள்க. திவளல் - அசைதல், திகழ்தல் - விளங்குதல். 'குவளைக் கண்ணி கூறன் காண்க.' துண்ணெனல் விரைவுக் குறிப்பு. கவளம் - யானைகொள்ளும் உணவுத்திரட்சி. மால்கரி - மதமயக்கமும் துதிக்கையும் உடைய யானை. கரத்தை உடையது கரி, யானையுரித்ததை உணர்த்திற்று.

7. கோடு - கொம்பு. பொழில் - சோலை, சேடு - பெருமை. மாடு - பொன், செல்வம், கண்ணினுளும் கங்கையுமாகிய நங்கை. தோடு - இதழ், கங்கை சூடியதைக்கூறிற்று.

8. தெளிச்சேரியில், தேவியார் குயிலுருவுற்றிருக்கின்றார் போலும்! மலர்க்கொத்து. (வண்டுகள்) இரைத்த மலர். குழல் - கூந்தல். அத்தலத்து மாளிகையின் மேலுள்ள கொடியின் சித்திரம் எனலாம். சித்திரம் - அழகுமாம். வித்தகப்படை - சிவன் தந்தவாள், அரக்கன் - இராவணன். விறல் - வலிமை, தலைபத்து, கரம் - கை, இரட்டி: - இருபது. 'பத்துமோரிரட்டி தோளான்' (4, 70, 10.) இராவணனை அடக்கிய திறம் குறித்தது.

காலெ டுத்த திரைக்கை கரைக்கெறி கானல்சூழ்
சேல டுத்த வயற்பழ னத்தெளிச் சேரியீர்
மால டித்தல மாமல ரான்முடி தேடியே
ஓல மிட்டிட வெங்ஙன மோருருக் கொண்டதே. 9

மந்தி ரந்தரு மாமறை யோர்கள் தவத்தவர்
செந்தி லங்கு மொழியவர் சேர்தெளிச் சேரியீர்
வெந்த லாகிய சாக்கிய ரோடு சமணர்கள்
தந்தி றத்தன நீக்குவித் தீரோர் சதிரரே. 10

திக்கு லாம்பொழில் சூழ்தெளிச் சேரியெஞ் செல்வனை
மிக்க காழியுண் ஞானசம் பந்தன் விளம்பிய
தக்க பாடல்கள் பத்தும்வல் லார்கள் தடமுடித்
தொக்க வானவர் சூழ விருப்பவர் சொல்லிலே. 11

திருச்சிற்றம்பலம்

---

9. கால் - காற்று. திரை - அலை. சேல் - மீன்வகையுள் ஒன்று. திருவடியைத் திருமாலும் திருமுடியைப் பிரமனும் தேடிக்காணாத அருமையைத் தெரிவித்தது.

10. மறையோர்கள் தவத்தவர் ( - தவத்தையுடையவர்) என்று பிரிக்க, செந்து - ஒரு பெரும் பண், 'செந்ினத்திசை யறுபதமுரல்' 2. 82. 9. நல்ல செந்திசைபாடல். 1. 114. 11. செந்துநேர்மொழியார். 2–51–11. மொழியவர் - சொல்லுடைய மகளிர், வெந்தல் - எரிந்தகட்டை. நிறம்பற்றிய உவமை. ஆகிய - உவம உருபு. அது சமணர்க்கும் அடையாகும். 'காரமணர்' என்ற வழக்குணர்க. சினமுமாம். திறத்தன - வகையின. நீக்குவித்தீர் - நீங்கச்செய்தீர். சதிரர் - மேம்பட்டவர். சாமர்த்தியர்.

11. திக்கு - எட்டுத் திக்குக்களிலும், மிக்க - எல்லா உலகிலும் மேம்பட்ட. தட - பெரிய. தொக்க - ஒன்றுகூடிய. வல்லார்கள் எழுவாய். இருப்பவர் - பயனிலை, சொல்லில் என்பது சொல்லுங்கால் என்றவாறு. சொல்லில், பத்தும் வல்லவர் வானவர்சூழ இருப்பவர் ஆவர் என்க.

# 4 திருவான்மியூர்

## 140 பதிகவரலாறு

அழுது உலகை வாழ்வித்த ஆளுடைய பிள்ளையார் திருமயிலைப்பதியில் அமர்ந்தருளும்நாளில், பல தலங்களை வணங்கிச்சென்று நிறைகாதலருத்தியொடும் திருவான்மியூரை அணைந்து, திருத்தொண்டர் எதிர்கொள்ளச்சென்று, திருக்கோபுரத்தை வணங்கி வலங்கொண்டு உள்ளணைந்து, பிறவிமருந்தான பெருந்தகையை வினவுரைச் சொன்மாலையாகப் பாடியது இத்திருப்பதிகம்.

பண் - இந்தளம் வினவுரை

திருச்சிற்றம்பலம்

கரையு லாங்கட லிற்பொலி சங்கம்வெள் ளிப்பிவன்
றிரையு லாங்கழி மீனுக ளுந்திரு வான்மியூர்
உரையு லாம்பொரு ளாயுல காளுடை யீர்சொலீர்
வரையு லாமட மாதுட னாகிய மாண்பதே. 1

சந்து யர்ந்தெழு காரகில் தண்புனல் கொண்டுதம்
சிந்தை செய்தடி யார்பர வுந்திரு வான்மியூர்ச்
சுந்த ரக்கழன் மேற்சிலம் பார்க்கவல் லீர்சொலீர்
அந்தி யின்னொளி யின்னிற மாக்கிய வண்ணமே. 2

---

1. கடலில் விளங்கும் சங்குகளும் வெள்ளை யிப்பிகளும் கரையில்வந்து உலாவும்படி வலியனவாக அலைகள் வீசுகின்றன. அவ்வலைகளையுடைய கழிகளில் மீன்கள் பிறழ்கின்றன. உகளல் - பிறழ்தல். அத்தகைய வளமுடைய திருவான்மியூரிலெழுந்தருளிய சிவபிரானை முன்னிலையாக்கி வினவியருளினார். சொற்பொருளாயும் எல்லா உலகங்களையும் ஆளுபவராயும் இருக்கும் சுவாமீ! மலைமங்கையுடனாகிய மாட்சியை மொழிவீர் என்றார். மாதியலும் பாதியனை உண்மையை வினவிற்று இத்திருப்பாடல். சொல் - உமை. பொருள் - சிவம். உரையுலாம் பொருள்:- மங்கைபங்கன்; அம்மையப்பன்.

2. திருவான்மியூரில் அடியார், சந்தனமும், அகிலும், அபிடேக தீர்த்தமும் கொண்டு, தியானம்புரிந்து வழிபடுஞ்

கான யங்கிய தண்கழி சூழ்கட லின்புறம்
தேன யங்கிய பைம்பொழில் சூழ்திரு வான்மியூர்த்
தோன யங்கம ரரடையி னீரடி கேள்சொலீர்
ஆனையங் கவ்வுரி போர்த்தன லாட வுகந்ததே. 3

மஞ்சு லாவிய மாடம திற்பொலி மாளிகைச்
செஞ்சொ லாளர்கள் தாம்பயி லுந்திரு வான்மியூர்த்
துஞ்சு வஞ்சிரு ளாட லுகக்கவல் லீர்சொலீர்
வஞ்ச நஞ்சுண்டு வானவர்க் கின்னருள் வைத்ததே. 4

---

சிறப்பும், அழகிய திருவடியில் சிலம்புங் கழலும் கட்டவல்லராதலும், அந்திவண்ணராதலும் இதிற் குறிக்கப்பட்டன. சந்து - சந்தனம். கார் அகில் - கரிய அகிற்கட்டை, (புகைத்தற்குரியது.) கழல் - வெற்றிகுறித்து வலக்காலில் அணிவதொரு படை. எருதின் கொம்புபோன்ற வடிவுங் கூர்மையும் அன்றி அருப்புத்தொழிலும் அமைந்தது. 'தாள் களங்கொளக் கழல் பறைந்தன, கொல்லேற்றின் மருப்புப்போன்றன, பக். 7. பார்க்க. சுந்தரம்-அழகு. அந்தி-மாலையந்தி. வண்ணம் - அழகு.

3. கான் - காட்டில். அயங்கியகழி - பள்ளமானகழி, அசங்குதல் என்பதன் மரூஉவாக் கொண்டுரைத்தலுமாம். கான், கழி, கடல் ஆம் மூன்றன் வேறுபாடும் ஈண்டு உணர்க. தேன் அயங்கிய - தேன்சொரிந்த. பொழில் - சோலை, தோல் + நயங்கு + அமர் + ஆடை. நயங்கு அமர் தோலாடையினீர் என்றலுமாம். ஆடையினீர் - உடையை அணிந்தவரே, நயங்க - நசங்க முன்னைய நிலைமை குலைய (பதி 162. 11.; 211:.4) அடிகேள் - அடிகளென்பதன் விளியுருவம். அங்கம் உரி என்பது அங்கவ்வுரி என்று விகாரமாயிற்று அங்கம் - உடம்பு. உரி - தோல், தியாடியதை வினுவினுர். ஆடல் என்றிருந்ததோ?

தோனயங்கம ராடையினீர் என்பதற்குச் செம்பொருள் கொள்ளல் எளிதன்று. தோல் ஆடை இரண்டற்கும் இடையில் உள்ளதைப் பிரித்தல் எவ்வாறு? நயம் கமர் என்னின் கமர் என்பதன் பொருள் யாது? நயங்கு அமர் என்னின் நயங்கு என்பது தமிழில் இல்லை. தோன் எனப் பிரித்தல் ஒவ்வாது.

4. திருவான்மியூரில் உள்ள மாடமாளிகைகளின் உயர்வு மேகங்கள் தங்குமளவினதாயிருந்தது. பொருண்மொழி வல்லார்

மண்ணி னிற்புகழ் பெற்றவர் மங்கையர் தாம்பயில்
திண்ணெ னப்புரி சைந்தொழி லார்திரு வான்மியூர்த்
துண்ணெ னத்திரி யுஞ்சரி தைத்தொழி லீர்சொலீர்
விண்ணி னிற்பிறை செஞ்சடை வைத்த வியப்பதே. 5

போது லாவிய தண்பொழில் சூழ்புரி சைப்புறம்
தீதி லந்தண ரோத்தொழி யாத்திரு வான்மியூர்ச்
சூது லாவிய கொங்கையோர் பங்குடை யீர்சொலீர்
மூதெ யில்லொரு மூன்றெரி யூட்டிய மொய்ம்பதே. 6

---

வாழ்ந்தவூர். நள்ளிருளில் நட்டம் பயின்றாடும்நாதர், நஞ்சுண்டு வானோரைக் காத்தருளிய திறத்தை வினவினர். மஞ்சு - மேகம். செஞ்சொல் - பொருள் பொருந்திய செவ்விய சொல். துஞ்சுதல்- துயிலுதல். இருள் தூங்கும்பொழுது ஆடல். வஞ்சு - வஞ்சம், கறுப்பு. வஞ்சிருள் - காரிருள். வஞ்சநஞ்சு - கருவிடம். பயிலும்- பெருகியிருக்கும்,

5. திருவான்மியூர் மங்கையர் கற்பு முதலியவற்றாலும் சிவபத்தியாலும் உலகம் புகழப்பெற்றிருந்தனர். அவ்வூர் மதில் உறுதியும் வேலைப்பாடும் நிறைந்தது. திண்ணெனல் - உறுதிப் பாடு. புரிசை - மதில், தொழில் - வேலைப்பாடு. ஆர்தல் - நிறைதல். துண்ணெனல் - குறிப்புமொழி. திரியுஞ்சரிதைத் தொழில் - பிக்ஷையேற்கச் செல்லுந்தொழில். (சிந்தாமணி. 3072. 3. உரை) இதில் பா. 9-ன் வினாக்காண்க. பிறை-பிறத்த லுடையது. பிறைசூடியதை வினவினர். செஞ்சடை என்றதால் வெண்பிறை எனக் கொள்ளவைத்தார். விண்பிறையைச் செஞ் சடையில் வைத்தது வியப்பாதல் அறிக.

6. போது - பூக்கும் பருவத்தது. பொழில் - சோலை. புரிசைப்புறம் - மதிற்புறத்தில் உள்ள வேதபாடசாலை, வீடு, சத்திரம் முதலியவற்றில், மாசற்ற அந்தணர் வேதாத்தியயநம் ஒழியாச் சிறப்புடையது திருவான்மியூர். சூது - சூதாடுதற் கருவியாகிய வல்லுக்கு ஆகுபெயர். கொங்கைக்கு உவமை. கொங்கை-உமாதேவி. ஆகுபெயர். முதுமை + எயில் = மூதெயில். மொய்ம்பு - வலிமை. திரிபுரசங்காரத்தை வினவினர்.

வண்டி ரைத்த தடம்பொழி லின்னிழற் கானல்வாய்த்
தெண்டி ரைக்கட லோதமல் குந்திரு வான்மியூர்த்
தொண்டி ரைத்தெழுந் தேத்திய தொல்கழ லீர்சொலீர்
பண்டி ருக்கொரு நால்வர்க்கு நீருரை செய்ததே 7

தக்கில் வந்த தசக்கிரி வன்றலை பத்திறத்
திக்கில் வந்தல றவ்வடர்த் தீர்திரு வான்மியூர்த்
தொக்க மாதொடும் வீற்றிருந் தீரரு ளென்சொலீர்
பக்க மேபல பாரிடம் பேய்கள் பயின்றதே. 8

பொருது வார்கட லெண்டிசை யுந்தரு வாரியால்
திரித ரும்புகழ் செல்வமல் குந்திரு வான்மியூர்ச்
சுருதி யாரிரு வர்க்கு மறிவரி யீர்சொலீர்
எருது மேல்கொ டுழன்றுகந் தில்பலி யேற்றதே. 9

---

7. இரைத்தல் - ஒலித்தல். திரை - அலை. ஓதம் - நீர். தொண்டு - தொண்டர். இரைத்து - சிவநாம தோத்திரஞ் செய்து. பண்டு - கல்லாலின் நிழற்கீழ் உபதேசித்த அன்று. இருக்கு-சிவஞானோபதேசம். வேதமுமாம். நால்வர்-சனகாதியர். தக்ஷிணாமூர்த்தியாயிருந்து உபதேசித்ததை வினவினர்.

8. தகு இல் - தகுதியில்லாத நெறியினில், தசக்கிரிவன் - பத்துத்தலை இராவணன். கிரீவம் - கழுத்து. திருக்கைலையை எடுத்தபோது அடர்த்த வரலாறு. இதில் இரண்டுமுறை விளித்ததை அறிக. பலபாரிடம் - பூதகணம்.

9. பொருது - அலைகள்மோதி, வார் - நீளும். வாரி - வருவாய், புகழ் செல்வம் - வினைத் தொகையும் உம்மைத் தொகையும் ஆக நின்றது அறிக. சுருதியார்-வேதங்களிற் கூறப் பட்ட அயனும் அரியும், சிவபரத்துவங் கேட்டவர் எனலுமாம். ஆனேறிச் சில்பலிக்குத் திரிந்த வரலாறுணர்த்தினர். இதனை, 5-ல் விளியாற் குறித்தது உணர்க.

மைத ழைத்தெழு சோலையின் மாலைசேர் வண்டினம்
செய்த வத்தொழி லாரிசை சேர்திரு வான்மியூர்
மெய்த வப்பொடி பூசிய மேனியி னீர்சொலீர்
கைத வச்சமண் சாக்கியர் கட்டுரைக் கின்றதே. 10

மாதொர் கூறுடை நற்றவ னைத்திரு வான்மியூர்
ஆதி யெம்பெரு மானருள் செய்ய வினவுரை
ஓதி யன்றெழு காழியுண் ஞானசம் பந்தன்சொல்
நீதி யானினை வார்நெடு வானுல காள்வரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*10.* மை - மேகம், கரியது என்னும் பொருள்தரும் மைப்பு என்ற பெயரின் மரூஉவாகிய மப்பு என்னும் வழக்குமொழியை உணர்க. மாலை - ஈண்டுப்பொழுது. செய்தவம் ஆகிய தொழிலுடைய அந்தணர், முனிவர். இசை - வேதாகம முழக்கம். புகழெனல் பொருந்தாது. மெய்தவப் பொடிபூசல் - பால்வண்ணநாதர் என்னும் பெயர்க்கொப்பத் திருமேனியில் தவக்கோலத்தின் குறியாகிய திருநீற்றைப் பூசுதல். வழிபடுவார் உடம்பு (பிறவி) ஒழிய வெண்பொடி பூசுதல் எனினுமாம். கைதவம் - வஞ்சகம். சமண் - சமணர். கட்டுரைத்தல் - கட்டிச் சொல்லும் பொய்யுரை. புறப்புறச் சமயத்தார் பொருளில்லாத மொழியைக் குறித்த வினா இது.

*11.* நல்தவன்-நல்லதவத்தன். செய்ய-செய்யற்பொருட்டு. வினவுரை - இறந்தகால வினைத்தொகை, உரையை ஓதி என்க. நீதி - சைவாசாரத்தில் விதித்த ஒழுங்கு. நெடுவானுலகு - திருவடி நீழல். அருள்செய்த என்ற பாடம் பின்னோர் படைத்தது. அது பொருந்தாது.

# 5 திருவனேகதங்காவதம்

## 141 பதிகவரலாறு

பாடியசமயம் எழுதப்பட்டிலது.

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

நீடன் மேவுநிமிர் புன்சடை மேலொர் நிலாமுளை
சூடன் மேவுமறை யின்முறை யாலொர் சுலாவழல்
ஆடன் மேவுமவர் மேயவ னேகதங் காவதம்
பாடன் மேவுமனத் தார்வினை பற்றறுப் பார்களே. 1

சூல முண்டுமழு வுண்டவர் தொல்படை சூழ்கடல்
ஆல முண்டபெரு மான்ற னனேகதங் காவதம்
நீல முண்டதடங் கண்ணுமை பாக நிலாயதோர்
கோல முண்டள வில்லை குலாவிய கொள்கையே. 2

---

1. நீடல் -(நீள் + தல்) நீளல். நீடுமாம் நிமிர் தல் - உயர்தல். புன்மை - மென்மை, பொன்மையுமாம். நிலாமுளை - பிறையாகிய மூளை. சூடல் - சூடுதல். மறையின்முறை - வேதவிதி. சுலாவு அழல் - சுழன்றெரியுந்தீ. அழலாடல் - தீயிலாடுதல். அநேகதங்காபதம் - வடநாட்டிலுள்ளதொருமலை, பாடல் - பாடுதலை. மேவும் - விரும்பும். வினைபற்று - வினையும் அதனால் வரும் பற்றும். உம்மைத்தொகை.

2. உண்டு என்னும் இரண்டும் வினைமுற்று. அவர் தொல்படையாகச் சூலமும் மழுவும் உள என்க. ஆலம் - நஞ்சு; நீலம் - நீலநிறம். நீலோற்பலமுமாம், கோலம் - திருக்கோலம். நிலாவுதல் - பிரகாசமாயிருத்தல். குலாவுதல் - பொருந்துதல்.

செம்பி னுருமதின் மூன்றெரி யச்சின வாயதோர்
அம்பி னலெய்தருள் வில்லி யனேகதங் காவதம்
கொம்பி னேரிடை யாளொடுங் கூடிக்கொல் லேறுடை
நம்ப னுமநவி லாதன நாவென லாகுமே. 3

தந்தத் திந்தத்தட மென்றரு வித்திரள் பாய்ந்துபோய்ச்
சிந்த வெந்தகதி ரோனொடு மாசறு திங்களார்
அந்த மில்லவள வில்ல வனேகதங் காவதம்
எந்தை வெந்தபொடி நீறணி வார்க்கிட மாவதே. 4

பிறையு மாசில்கதி ரோனறி யாமைப் பெயர்ந்துபோய்
உறையுங் கோயில் பசும்பொன் னணியா ரசும்பார்புனல்
அறையு மோசை பறைபோலு மனேகதங் காவதம்
இறையெம் மீச னெம்மா னிடமாக வுகந்ததே. 5

---

3. மதில் மூன்று - திரிபுரம். சினம் வாயது - எரிதலை யுடைய முனையுடையது. விண்டுவாகிய பாணத்தின் முனையில் அக்கினியிருப்பதுபற்றிச் சினவாய் எனப்பட்டது. கொம்பின் நேர் இடையாள் - கொம்புபோன்ற இடையினையுடைய அம்பிகை. நம்பன் - எல்லா உயிர்களாலும் விரும்புதற்கு உரியவன், சிவநாமத்தைச் சொல்லிச் சொல்லிப் பழகாதநாக்கள் நாவாகா. 1. 5. 9. 1–18–10; 1. 50. 5; 3. 4. 6, 9; நவிலல் - நாவாற்சொல்லி அடிப்படல். 'மறைநவில் அந்தணர்' (புறம், கடவுள் வாழ்த்து),

4, அருவிக்கூட்டம் பாயும்போது உண்டாகும் ஒலிக் குறிப்பு, 'தந்தத் திந்தத் தடம்' என்றுள்ளதாம். பாய்தலால் சிந்துகின்றன. வெந்த - சுடர்ந்த, கதிரோன் - கதிர்களையுடைய சூரியன். வெந்தகதிர்:- வெங்கதிர். மாசு - குற்றம். திங்கள் - சந்திரன். அந்தம் - முடிவு. அளவு - எல்லை. நாசமுமில்லை அளவுமில்லை என்றபடி.

5. பிறையும் - சந்திரனும், மாசு - குற்றம். கதிரோன் - சூரியனும். அறியாமை - அறியாமல். கோயிலின் உயர்ச்சியை அறியமாட்டாமல். பெயர்ந்து - அப்பால் விலகி. சூரிய சந்திரர் திருக்கோபுரத்தைத் தாண்டற்கு உயர்ந்து செல்ல மாட்டாமல் பக்கத்திற் பெயர்ந்துபோவர் என்றது. அசும்பு - நீர்த்துளி. துளித்தல் பொருந்திய புனல். புனல் - நீர். அறையும் - ஒலிக்கும். பறை - வாத்தியவோசையை.

தேனை யேறுநறு மாமலர் கொண்டடி சேர்த்துவீர்
ஆனை யேறுமணி சார வனேகதங் காவதம்
வானை யேறுநெறி சென்றுணரு ருந்தனை வல்லிரேல்
ஆனை யேறுமுடி யானருள் செய்வதும் வானையே. 6

வெருவி வேழமிரி யக்கதிர் முத்தொடு வெண்பளிங்
குருவி வீழவயி ரங்கொழி யாவகி லுந்திவெள்
அருவி பாயுமணி சாரல னேகதங் காவதம்
மருவி வாழும்பெரு மான்கழல் சேர்வது வாய்மையே. 7

ஈர மேதுமில னாகி யெழுந்த விராவணன்
வீர மேதுமில னாக விளைத்த விலங்கலான்
ஆரம் பாம்ப தணிவான்ற னனேகதங் காவதம்
வார மாகிநினை வார்வினை யாயின மாயுமே. 8

---

6. தேனையேறும் - தேனை மிகுதியாகப்பெற்ற. அடி - திருவடியில்: சேர்த்துவீர் -(தூவித்) தொழுபவர்களே என்று விளித்தார். ஆனை - யானை. வானை - பேரின்ப வீட்டுலகை. நெறி - சரியை முதலிய நான்குநெறி. உணருந்தனை - உணரும் அளவை. ஆன்ஐ - பசுவிவிடத்துண்டாகும் பால் தயிர் நெய் முதலிய ஐந்து. ஆனிலங்கிளர் ஐந்தும் அவிர்முடியாடி, (திருப் பதிகம். 146 பா. 5 பார்க்க) வானை ஏறு நெறியுணரவல்லி ரேல் ஆனையேறுமுடியவன் அருள்வதும் வானையே என்று ஐயந்தீர்த்தருளினர்.

7. அநேகதங்காபதம் என்னும் மலையின்மேலிருந்துபாயும் வெள்ளருவியொலியால் யானைகள் அஞ்சி ஓடும். அவ்வருவி முத்துக்களையும் பளிங்குகளையும் வயிரங்களையும் அகில் (முதலிய மரங்)களையும் அடித்து வருகின்றது. அத்தகைய அழகிய சாரல் உடைய மலை; அம்மலைமேல் எழுந்தருளிய இறைவன் திருவடி சேர்வது மெய்ந்நெறி. வெருவி - அஞ்சி. வேழம் - யானை. இரிய - ஓட. உருவி - ஊடுருவி. வயிரம் - வச்சிரமணி. கொழியா - கொழித்து. அகில் - மணமுள்ள தொருமரம். வாய்மை - மெய்ந்நெறிக்குப் பண்பாகுபெயர்.

8. ஈரம் - அன்பு. ஏதும் - யாதும், சிறிதும். விலங்கல் - (கைலை) மலை. ஆரம் - மாலை. வாரம் - அன்பு. பக்தியின்றி வீரம் ஒன்றே கொண்டு கைலையைத்தூக்கிய இராவணனுக்கு அவ்வீரம் சிறிதும் இல்லாதவனாக்கினர். விலங்கலான் - கைலை யான், சிவபிரான்.

கண்ணன் வண்ணமல ரானொடுங் கூடியோர்க் கையமாய்
எண்ணும் வண்ணமறி யாமை யெழுந்ததோ ராரழல்
அண்ண னண்ணுமணி சாரல னேகதங் காவதம்
நண்ணும் வண்ணமுடை யார்வினை யாயின நாசமே. 9

மாப தம்மறி யாதவர் சாவகர் சாக்கியர்
ஏப தம்பட நின்றிறு மாந்துழல் வார்கள்தாம்
ஆப தம்மறி வீருளி ராகில னேகதங்
காப தம்மமர்ந் தான்கழல் சேர்தல் கருமமே. 10

தொல்லையூ ழிப்பெயர் தோன்றிய தோணிபு ரத்திறை
நல்லகேள் வித்தமிழ் ஞானசம் பந்தனல் லார்கண்முன்
அல்லல் தீரவுரை செய்த வனேகதங் காவதம்
சொல்ல நல்லவடை யும்மடை யாசுடு துன்பமே. 11

திருச்சிற்றம்பலம்

---

9. கண்ணன் - கிருட்டிணனாக அவதரித்த திருமால். வண்ணமலர் - தாமரை. வண்ணம் - அழகு. ஐயம் - சந்தேகம். அறியாமை - அறியாமல். ஆர் அழல் - நிறைந்த பெரியதீப்பிழம்பு (அக்கினிமலை வடிவம்) அண்ணல் - சிவபிரான். நண்ணும் - சேர்ந்து வழிபடும். வண்ணம் - வகை. மதுரைத் திருஞானசம்பந்தப் பிள்ளை பதிப்பில் 'கையமாய்' என்ற பாடமுளது.

10. மாபதம் - பெரிய பதவி. ஏ பதம் - ஏ ஏ என்னும் இகழ்கின்ற சொல்; 'ஏ ஏ இவன் ஒருத்தி பேடியோ என்றார்' சீவகசிந்தாமணி. பா. 652. அறிவீருளிர் - அறிவீராயிருப்பீர் (ஆகில்). கருமம் - இன்றியமையாது செயற்பாலதொருகடன்.

11. தோணிபுரம் - சீகாழி. இறை - தலைவர். தமிழ் - சைவத்தமிழ் நூல்களை அருளும். கேள்வி - சுருதி. ஒவ்வொரு பதிகமும் ஒவ்வொருநூலாதல் ஆசிரியர் திருவாக்காலறியலாம். 'கழுமலத்தின் பெயரை நாளும் பரவியசீர்ப் பன்னிரண்டும் நன்னூலாப் பத்திமையால் பனுவல்மாலை.' (2. 70. 12.) 'வன்றொண்டன் பன்னு தமிழ் நூல் வல்லார்' (7. 41. 10.) நல்லார்கள் - சிவனடியார்கள். நல்ல - நல்லன. நல்ல அடையும், சுடுதுன்பம் அடையா என்க.

# 6 திருவையாறு

## 142 பதிகவரலாறு

திருஞானசம்பந்தப்பெருமான் தொண்டர் எதிர்கொள்ள, முத்துப்பல்லக்கில் சென்று திருவையாற்றை அடைந்து அந் நன்னகரை முன்னிறைஞ்சி, புந்திநிறை செந்தமிழின் சந்த இசையில், புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி அறிவழிந் திட்டு ஐம்மேலுந்தி அலமந்த போதாக அஞ்சேலென்று அருள்செய்வார் அமருங்கோயிலை அணுகி, நீடுகோபுரத்தைத் தொழுது, உள்ளே புகுந்து வலங்கொண்டு தாழ்ந்து, 'கோடல் கோங்கம்' என்னும் இத்திருப்பதிகக்குலவுமாலையை, 'நீடு பெருந் திருக்கூத்து நிறைந்ததிருவுள்ளத்து நிலைமைதோன்ற' ஆடுமாற்றைப்பாடி ஆடினார்.

### பண் - இந்தளம்

### திருச்சிற்றம்பலம்

கோடல்கோங் கங்குளிர் கூவிள மாலை குலாயசீர்
ஒடுகங் கையொளி வெண்பிறை சூடு மொருவனார்
பாடல் வீணைமுழ வங்குழன் மொந்தைபண் ணாகவே
ஆடு மாறுவல் லானுமை யாறுடை யையனே. 1

---

1. கோடல் - வெண்காந்தள். கோங்கம் - கோங்குமரம். இதைக் கன்னிகாரம் துருமோற்பலம் என்பர். கூவிளம்-வில்வம். இதன் முன்னீரடியிற் சிவபெருமான் சூடுவனவற்றுள் ஐந்தும் பின்னீரடியில் அவனது திருக்கூத்து வன்மையும், இசைக்கருவி களும்-கூறப்பட்டன. எல்லாத் தலங்களிலும் பரமேசுவரனது நடனம் வணங்கப்பெறும் உண்மை சாத்திரமுணர்ந்தோர்க்கே விளங்கும். ஆடல் அமர்ந்துறைகின்ற ஐயாறு என்ற அப்பர் அருண்மொழியும் அறிக. பாடல் - இசைப்பாட்டு. முழவம் - தண்ணுமை, மத்தளம், குடமுழா. குழல் - வேய்ங்குழல், மொந்தை - ஒருகட்பறை, பண்ணாக ஆடல் - பண்ணோடு பொருந்த ஆடுதல். ஐயாறு: - பஞ்சநதம் என்பது வடமொழிப் பெயர்.

தன்மை யாருமறி வாரிலை தாம்பிற ரெள்கவே
பின்னு முன்னுஞ்சில பேய்க்கணஞ் சூழத் திரிதர்வர்
துன்ன வாடை யுடுப்பர் சுடலைப்பொடி பூசுவர்
அன்னமா லுந்துறை யானுமை யாறுடை யையனே. 2

கூறு பெண்ணுடை கோவண முண்பது வெண்டலை
மாறி லாருங்கொள் வாரிலை மார்பி லணிகலம்
ஏறு மேறித் திரிவ ரிமையோர்தொழு தேத்தவே
ஆறு நான்குஞ்சொன் னானுமை யாறுடை யையனே. 3

பண்ணி னல்லமொழி யார்பவ ளத்துவர் வாயினர்
எண்ணி னல்லகுணத் தாரிணை வேல்வென்ற கண்ணினர்
வண்ணம் பாடிவலி பாடித்தம் வாய்மொழி பாடவே
அண்ணல் கேட்டுகந் தானுமை யாறுடை யையனே. 4

---

2. எள்க - இகழ. திரிதர்வர் - திரிதருவார், திரிவார். துன்னம் - துளைத்தல், தைத்தல். துன்னவாடை - கந்தை. 'துன்னங்கொண்ட உடையான்' (212) 'துன்னலினுடை யுடுத்தது' (41) எனப் பிற பதிகங்களிலும் காணலாம். சிவபிரானியல்பை அறிபவர் எவரும் இல்லை. அவர் பின்னும் முன்னும் சில பேய்க் கூட்டம்சூழத் திரிவதைக்கண்டு பிறர் இகழ்தலுங்கூடும். கந்தலணிவார். சுடுகாட்டுப்பொடி பூசுவார். அவற்றால் அவனை அளந்தறியலாகாது. அன்னப்புட்கள் ஆலும் ( - ஒலிக்கும், ஆடும்) துறை.

3. கூறு - இடப்பால், பெண் - உமாதேவியார், உடை கோவணம், உண்பதும் வெண்டலையில். மார்பிலணிந்தன முற்ற லாமை யிளநாகமொடு ஏனமுளைக் கொம்பு, பரிவர்த்தனஞ் செய்துகொள்ளு முறையில், ஏனைப் பொற்கலம் மணிக்கலம் போலக் கொள்வார் எவருமில்லை. மாறில் - பரிவர்த்தனஞ் செய்யவேண்டின். இப்பொருளில் உலக வழக்குமுண்டு. ஏறு - எருது. ஆறும் - சிக்கை, கற்பசூத்திரம், வியாகரணம், நிருத்தம், சந்தோவிசிதி, சோதிடம் என்னும் அங்கம் ஆறும்; நான்கும் - வேதம் நான்கும், 2. 84. 11. பார்க்க. சொன்னான் - சிவபிரான், 'மிக்க வேத மெய்ந்நூல் சொன்னவனே' திருவாசகம். 147.

4. பண்ணின் - பண்ணிசைபோல, பண்ணிசையிலும், நல்ல - இனிய, பவளம்போன்ற துவர்வாயினர்; துவர் - செந் நிறம். எண் இல் - கணக்கில்லாத, எண்ணில் என்பது வினை

வேன லானை வெருவவுரி போர்த்துமை யஞ்சவே
வானை யூடறுக் கும்மதி சூடிய மைந்தனுர்
தேனெய் பாறயிர் தெங்கிள நீர்கரும் பின்றெளி
ஆனஞ் சாடுமுடி யானுமை யாறுடை யையனே. 5

எங்கு மாகி நின்ருனு மியல்பறி யப்படா
மங்கை பாகங்கொண் டானு மதிசூடு மைந்தனும்
பங்க மில்பதி னெட்டொடு நான்குக் குணர்வுமாய்
அங்க மாறுஞ்சொன் னுனுமை யாறுடை யையனே. 6

---

யெச்சமாக் கோடலமையாது, கண் இரண்டாதலின், வேலினை (இரண்டு) ஒப்பாக்கப்பட்டன. வண்ணம் - அவனருளே கண்ணுக் காணும் வண்ணம். தன்மை. வலி - மந்திரமும் தந்திரமும் மருந்துமாகித் தீராநோய் தீர்த்தருளும் வன்மை. தம் வாய்மொழி - சிவநாமமே பாடும் நல்ல வாயின்மொழியுந் தோத்திரங்களை. மொழி - ஆகுபெயர். அண்ணல் - சிவபெருமான், அக்காலத்தில் திருவையாற்றில் இளமகளிர் சிவபத்தியிற் சிறந்திருந்தனர் என்று கருத இடனுண்டு. 'காந்தாரம் இசையமைத்துக் காரிகையார் பண்பாட...சேயிழையார் நடமாடுந் திருவையாறு' என்று வருந் தேவாரமும் (1. 130. 6) ஈண்டுக் கருதுக.

5. வேனல் - வெம்மை. 'கெடிலக்கரை வேனலானையுரித்த வீரட்டர்' (5-54-5). வானையூடறுக்கும் மதி - விண்ணூடு அறுத்துச்செல்லும் பிறை. தேன் முதலிய ஏழும் அபிடேக திரவியங்கள், நெய் பால் தயிர் என்னும் மூன்றும் தனித்தனி ஆட்டற்குரியன. இம்மூன்றையும் 'ஆடினுய் நறுநெய்யொடு பால் தயிர்' என்று தனித்தும், 'ஆனிலங்கிளரைந்தும் அவிர் முடியாடி' என்று ஐந்தாகச் சேர்த்தும் கூறுதல் திருமுறை வழக்கு. 'ஆனஞ்சு' பஞ்சகௌவியம். (ஞானபூசாவிதி. 14. உரை பார்க்க.) தெளி - தெளிந்த சாறு. (ஆகுபெயர்) தெங்கு - தென்னை. தென்கு என்பதன் மரூஉ.

6. எங்குமாகி நின்ருன் - அகண்ட வியாபகன். இயல்பு அறியப்படாமங்கை. சிவனுக்கும் ஏற்றிக்கூறலாம். பங்கம் - இழிவு, பதினெட்டு - பதினெண்புராணம் 'சூதன் ஒலிமாலை' (3, 54, 8 பெரியபுராணம், திருஞான. 840.) நான்கு - நாலு வேதம். உணர்வு - மலம் அகற்றற் பொருட்டு, உயிரினிடத்து

ஓதி யாருமறி வாரிலை யோதி யுலகெலாம்
சோதி யாய்நிறைந் தான்சுடர்ச் சோதியுட் சோதியான்
வேதி யாகிவிண் ணாகிமண் ணோடெரி காற்றுமாய்
ஆதி யாகிநின் றானுமை யாறுடை யையனே. 7

குரவ நாண்மலர் கொண்டடி யார்வழி பாடுசெய்
விரவு நீறணி வார்சில தொண்டர் வியப்பவே
பரவி நாடொறும் பாடநம் பாவம் பறைதலால்
அரவ மார்த்துகந் தானுமை யாறுடை யையனே. 8

உரைசெய் தொல்வழி செய்தறி யாவிலங் கைக்குமன்
வரைசெய் தோளடர்த் துமதி சூடிய மைந்தனூர்
கரைசெய் காவிரி யின்வட பாலது காதலான்
அரைசெய் மேகலை யானுமை யாறுடை யையனே. 9

---

நிலைபெற்றுள்ள பர (சிவ) ஞானமாகிய திருவருளும், அத் திருவருளைத் தெளியவோதுகின்ற அபரஞானமாகிய சிவாகமங் களும். அங்கம் - வேதாங்கங்கள். பா. 3. உரை பார்க்க.

7. வேதி - வேதசொரூபன். விண் - ஆகாயம், எரி - தீக் கடவுள். ஆதி - முதற்பொருள். ஓதியறிவார் யாரும் இல்லை. உயிர்கள் ஓதியறிதலில்லையேனும், சிவபிரான் தானே தன்னை உயிர்க்கு ஓதுவித்தும் உணர்வித்தும், சேதனாசேதன பிரபஞ்சம் எல்லாம் சோதி (ஒளி)யாய் நிறைந்துள்ளான். சுடரையுடைய சோதிகளாகிய சூரிய சந்திராக்கினிக்குள் சோதியாய் உறை பவன். (திருவிசைப்பா. 2) வேதியாகி - சேதன சொரூபியாகி, விண்...ஆகி - அசேதனரூபமாகி, (தடத்த வடிவத்தைச் சார்ந்தது). பழம் பதிப்பிலுள்ள 'எரிகாற்றுமாய்' என்ற பாடமே சிறந்தது. எரி - தீ. எறியுங்காற்று எனின், காற்று என்பதில் உள்ள பொருளே எறிதலுமாதலின் சிறப்பில்லை.

8. குரவம் - குராமரம். நாள் மலர் - காலையிற் பூத்த பூ. வியப்ப - புகழ்ந்துரைக்க. பரவி - வாழ்த்தி. பறைதல் - நீங்குதல். அரவம் - பாம்பு, ஆர்த்து - கட்டி, (அணிந்து) உகந்தான் - உயர்ந்தவன். 'விரவி' என்றது புதிய பாடம்.

9. இராவணன் மிக்க சிவபக்தனாகித் திரிலோகாதி பத்தியம் முதலிய பெருவரங்களைப் பெற்றவன். அதற்குரிய

மாலுஞ் சோதி மலரானு மறிகிலா வாய்மையான்
காலங் காம்பு வயிரங் கடிகையன் பொற்கழல்
கோல மாய்க்கொழுந் தீன்று பவளந் திரண்டதோர்
ஆல நீழலு ளானுமை யாறுடை யையனே. 10

கையி லுண்டுழல் வாருங் கமழ்துவ ராடையான்
மெய்யைப் போர்த்துழல் வாரு முரைப்பன மெய்யல
மைகொள் கண்டத்தெண் டோண்முக்க ணன்கழல் வாழ்த்தவே
ஐயந் தேர்ந்தளிப் பானுமை யாறுடை யையனே. 11

---

வேதாகமவழி அவனுக்குப் புதுவழியன்று, தொல் (பழைய) வழியே. அறியாமை மேலிட்டபோது, அத்தொல் வழிமறந்து திருக்கயிலையைப் பெயர்த்து எடுக்க முயன்றான். அதனால், அவனுடைய மலைகளைப்போன்ற தோள்களை நசுக்கப் பெருவிரல் விரல் நுனியைமட்டும் ஊன்றியருளினார், சந்திரசேகரரான வீரனார். மதி - வளராததும் தேயாததும் ஆன திங்கட்பிறை. மைந்தனார் - வீரனார். திருவையாறு காவிரியின் வடகரைக்கண் உள்ளது. காதல் - அத்தலத்தில் எழுந்தருளியிருக்க விரும்புதல். அரைசெய் மேகலையான் - மேகலாபரணம் இடுப்பிற் கொண்டவன். மேகலை - பொன்னுடை விசேடம். 'எண்கோவை மேகலை.'

*10.* மால் - (மயக்கம்) விண்டு. சோதிமலர் - தாமரைப்பூ. வாய்மையான் - சத்தியசொரூபி. காலம் காம்பு வயிரம் கடிகையன் என்பதன் பொருள் புலப்பட்டிலது. ஆயினும் ஒருவாறு எழுதலாம். கால் - திருவடி, அம் காம்பு - அழகிய காண்பு. வயிரம் - வைரரத்நம், கடிகை - துண்டு, கால்போலக் காம்பு. கழல்போலக் கொழுந்து. கடிகையம் பொற்கழல் என்றிருந்தது போலும். ஆலமரம் இறைவனது பொற்கழல்போலப் பொன்மையும் மென்மையும் ஒளியும் அழகும் உடைய கோலமாய்க் கொழுந்தீன்று என்க. ஈன்று - தோன்றி. ஆலம்பழம் செந்நிறமுடையது ஆதலின், பவளம் திரண்டதோர் ஆலம் என்றார். பவளம்போன்ற செந்நிறம் உடைய பழங்களைப் பவளமென்றது உவமையாகு பெயர். கல்லாலுக்குச் சாதியடை.

*11.* கையில் உண்டு உழல்வார் - கையில் உணவை ஏந்தி உண்டு திரியுஞ் சாக்கியர். கமழ்......உழல்வார் - நாற்றம் வீசும்

பலிதி ரிந்துழல் பண்டங்கன் மேயவை யாற்றினைக்
கலிக டிந்தகை யான்கடற் காழியர் காவலன்
ஒலிகொள் சம்பந்த ஞெண்டமிழ் பத்தும்வல் லார்கள்போய்
மலிகொள் விண்ணிடை மன்னிய சீர்பெறு வார்களே. 12

திருச்சிற்றம்பலம்

---

பழுப்பேறிய ஆடையால் உடம்பைப் போர்த்துத் திரியுஞ் சமணர். மைகொள்கண்டம் - நீலகண்டம். முக்கண் - சோம சூரியாக்கினி. ஐயம் - பிச்சை.

12. பண்டங்கன் :- பாண்டரங்கம் என்னுந் திருக்கூத்தை ஆடுபவன். கலி - வறுமை, கலிகடிந்தகையான் என்றது திருஞான சம்பந்தர் எரி ஓம்பும் திருக்கையால் அளவற்றோர் வறுமை நீக்கிய உண்மையை உணர்த்திநின்றது. கடிந்த - நீக்கிய, "உரவார் கலையின் கவிதைப் புலவர்க்கு ஒருநாளுங் கரவா வண்கைக் கற்றவர் சேருங் கலிக்காழி" (திருப்பதிகம், 102. பா. 1) யில், திருஞானவேந்தர் திருக்கைகள் உலகவர் கலி (வறுமை) முதலிய துன்பங்களைக் கடிதலில் ஐயமின்று. கடந்த என்றது புதியது. காழியர் காவலன் என்றதால், பாலருவாய ரான காரணம்பற்றி, அக்காழியில் இருந்த அந்தணர் எல்லோரும் அப்பெருமான் திருவடித் தொண்டர் ஆயினர் என்பதும், காழி வேந்தர் தலைவரானார் என்பதும், சிவனருள் பெற்றவரையே, நல்லோர், தமக்குக் காவலராக் கொள்ளும் வழக்கம் உடையவரா யிருந்தனர் என்பதும் புலப்படும். 'ஒலிகொள் சம்பந்தன்':- பரநாதத்தைக்கொண்டு பர்ட்டாக அருளும் சிவஞானசம்பந்தர். கொள் தமிழ் எனலுமாம்.

---

பதிகப் பெருவழி காட்டப் பருப்பதக்
கோன்பயந்த
மதியத் திருநுதல் பங்கன் அருள்பெற
வைத்தளங்கள்
நிதியைப் பிரமா புரநகர் மன்னனை
என்னுடைய
கதியைக் கருதவல் லோர்அம ராவதி
காப்பவரே.

—அந்தாதி 2

# 7 திருவாஞ்சியம்

## 143 பதிகவரலாறு

காழிவேந்தர், தவமுனிவரான சொல்வேந்தரோடும்கூடச் சிவதலங்கள் வணங்கப்போவாராய், தென்திருவாஞ்சியமூதூர் சென்று சேர்ந்து அங்கு எழுந்தருளிய முக்கண் நீலமிடற்றரு மணியை வணங்கிப்போற்றி, வன்னி கொன்றை எனும் இத்திருப்பதிகத்தைப்பாடி அத்திருவாஞ்சியத்து என்றும் நின்ற இறையானை உணர்ந்து அடி ஏத்தினர்.

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

வன்னி கொன்றைமத மத்த மெருக்கொடு கூவிளம்
பொன்னி யன்றசடை யிற்பொலி வித்தபு ராணனர்
தென்ன வென்றுவரி வண்டிசை செய்திரு வாஞ்சியம்
என்னை யாளுடை யானிட மாக வுகந்ததே. 1

கால காலர்கரி கானிடை மா நட மாடுவர்
மேலர் வேலைவிட முண்டிருள் கின்ற மிடற்றினர்
மாலை கோலமதி மாடமன் னுந்திரு வாஞ்சியம்
ஞாலம் வந்து பணியப்பொலி கோயி னயந்ததே. 2

---

1. வன்னி - வன்னிமரத்திலை. கொன்றைப்பூ, ஊமத்தை மலர், எருக்கம்பூ. கூவிளம் - வில்வம். பொன் இயன்ற - பொன் போன்ற. சடையில் வன்னி முதலியவற்றைப் பொலிவுபெறச் சூடிய புராணனர். புராணன் - முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப்பழம் பொருளாயுள்ளவன். தென்ன என்று இசை செய்வன வரிவண்டுகள். உகந்தது - விரும்பியது (வினையாலணையும் பெயர்), மேலும் இவ்வாறுதல் அறிக.

2. காலகாலர் - இயமனுக்குங் காலமுடிவைச் செய்பவர், இயமனுக்கியமன் என்பாருமுளர். கரிகான் - கரிந்தகாடு, மேலர்- எப்பொருட்கும் எவ்வுயிர்க்கும் எத்தேவர்க்கும் மேலாயுள்ள

மேவீ லொன்றர் விரிவுற்ற விரண்டினர் மூன்றுமாய்
நாவி னலருட லஞ்சின ராறரே ழோசையர்
தேவி லெட்டர்திரு வாஞ்சிய மேவிய செல்வனூர்
பாவந் தீர்ப்பர்பழி போக்குவர் தம்மடி யார்கட்கே. 3

---

முழுமுதல்வர். வேலை - கடல். மிடறு - கழுத்து. நஞ்சுண்டிருண்ட கண்டத்தர். 'இருள்கின்ற' என நிகழ்வாற் கூறியதால், இன்னும் இருளும்படி செய்யுங் கொடிய நஞ்சையுண்டு வாழ்வித்த கருணைத்திறத்தை அறியலாம். திருவாஞ்சியத்து மாடங்கள் சந்திரமண்டலத்தின் அளவும் ஓங்கியவை என்று உயர்த்துக்கூறினர். மதிமண்டலத்தை அளாவிய மாடம். மாலைமதி, கோலமதி, மாலைப்பொழுதும் அழகும் மதிக்கு அடை, ஞாலம் - உலகத்துயிர்கள். இடவாகுபெயர், ஞாலம் - தொங்குவது என்னுங் காரணப் பொருளதாய், முன்னோரது பூகோள ககோள ஞானத்தை உணர்த்துவது அறிக. நயந்தது - விரும்பியது.

3. இதனுள் ஒன்று முதல் எட்டீறாகிய எண்ணுப்பெயர் அமைந்த அழகு உணரத்தக்கது. 79, 380-ஆம் (திருக்கழுமலம், திருவோமமாம்புலியூர்) திருப்பதிகங்களுள்வரும் 'எண்ணிடையொன்றினர்' 'மணந்திகழ் திசைகளெட்டும்' எனத் தொடங்குந் திருப்பாடல்களை இங்கு நோக்கின், இவ்வாசிரியர்க்கு இவ்வாறு பாடியருளும் எளிமை இனிது விளங்கும். மேவில் ஒன்றர் - விரும்பி வழிபட்டால் அநந்நியமாதலையுடையவர், 'அறிபவன் அருளினாலே அநந்நியமாகக் காண்பன்' என்பதும் 'அறியவல்லான் ஒருவனுக்கு அச்சிவப்பொருள் அதனோடு ஒற்றித்து நின்று அவ்வருளானே அறியற்பாலதாம் என்னும் அதன் உரையும் (சித்தியார். 245), சைவ உபநிடதங்களினும் சைவாகமங்களினும் அந்நியமின்றி நின்றுணரும் அநுபவமாத்திரையிற் கோசரிப்பது என்று ஓதப்படுஞ் சிவனருளாம் மெய்ப்பொருள்" என்னும் சிவஞான பாடிய வசனமும் (சூ. 6.) ஈண்டுணரத் தக்கன. ஒன்றர் - ஒருபொருளாயிருப்பவர் எனலுமாம். விரிவுற்ற இரண்டினர் - விரிதலடைந்த ஞானமும் கிரியையும் உடையவர். சிவமும் சத்தியுமானவர் எனலுமாம், "சிவசத்தி மூன்றனுள் யாண்டும் ஒரு பெற்றித்தாய் வியாபரிக்கும் இச்சையை ஒழித்து ஒழிந்த ஞானக்கிரியைகள் இரண்டும் தனித்தனி

வியாபரித்தலானும் ஒத்து வியாபரித்தலானும் தம்முள் ஏறிக் குறைந்து வியாபரித்தலானும்" (சித்தியார் உரை. 85) விரிவுற்றன. இரண்டு - சொரூபம் தடத்தம் எனலுமாம். விரிவுற்ற இரண்டு - போகமும் முத்தியும் ஆதலும் பொருந்தும். மூன்றுமாய் - இச்சா ஞானக் கிரியையாய். "ஒன்றதாய் இச்சா ஞானக் கிரியை என்று ஒருமூன்ருகி" (சித்தியார், 83). அவை முறையே உயிர்கட்கு மலந்தீர்த்துச் சிவங்கொடுக்கும் கருணையும், அதற்கான உபாயங்களை அறியும் அறிவும், அவற்றை அவ்வாறே கொண்டு செய்யும் சங்கற்பமும் ஆகும். இலயம் போகம் அதிகாரமாய், ஒன்ருய் வேருய் உடனுய், மூன்று தீயுமாய், முச்சுடருமாய் எனினும் பொருந்தும். மூன்றும் ஆய் நாவின் நாலர் என்று கொண்டு பதி, பசு, பாசம் என்னும் மூன்று பொருளையும் ஆய்ந்துணர்த்தும் நான்மறை நாவர் எனலுமாம். உடல் அஞ்சினர் - பரை, ஆதி, இச்சை, ஞானம், கிரியை என்னும் ஐவகைச் சத்தியாகிய திருமேனியை யுடையவர், பஞ்சப் பிரம மந்திரதேகமும் ஆம். அருவம் இரண்டு, அருவுருவம் ஒன்று, உருவம் இரண்டு ஆகிய ஐந்து உடலும் சொரூபமல்லவாயினும் உபசாரத் திருமேனியாகும். "அநாதி முத்த சித்துருவாகிய முதல்வனுக்குத் தன்னுருவமாகிய உலகத்தைத் தொழிற்படுத்தற் பொருட்டு வேருருவம் வேண்டப்படுவ தன்ருயினும்...உயிர் வர்க்கங்கள் பொருளியல்பு உணர்ந்து வீடுபெறுமாறு வேதாகமங்களைக் கோவைப்படச் செய்தற்பொருட்டும் அதனைக் குருபரம்பரையின்கண் வைத்தற் பொருட்டும் திருமேனி ஒருதலையான் வேண்டப்படும்" (சித்தியார். 66 உரை.) ஆறர் - அறுகுணத்தர், (ஷாட்குண்யர்) முற்றறிவு முதலியவை. பகவர் எனலுமாம். உடலஞ்சினர் ஆறர் - பிறவியையஞ்சிய நல்லோர் வழியில் விளங்குபவர், உடலஞ்சு:- பஞ்சகோசம், ஆறர்-கங்கையாற்றினர் எனினுமாம். 'நன்மூவிருதொன்னூலர்' 'முத்தியர்' 'நால்வேதத்தர்' 'விழி மிழலையார்' (3, 9, 7.) என்றதில் வருமாறுங் கொள்ளலாம். 'திருவெழுகூற்றிருக்கை'யும் நோக்குக. ஏழ் ஓசையர் - 'ஏழிசையாய்' (இசைப்பயனுய்) இருப்பவர். தேவில் - தெய்வத்தன்மையில். எட்டர் - அட்டமூர்த்தி, எண்குணத்தர் எனின் ஆறர் என்பதற்கு ஷாட்குண்யர் என்னுது வேறுரைக்க. பாவம் - தீவினை. பழி - தீச்சொல். முறையே செயலும் மொழியுமாய்த் தன் திரிகரணத்தாலும் பிறர் வாயாலும் நிகழ்வன. அடியார்

சூல மேந்திவளர் கையினர் மெய்சுவண் டாகவே
சால நல்லபொடிப் பூசுவர் பேசுவர் மாமறை
சீல மேவுபுகழ் ழாற்பெரு குந்திரு வாஞ்சியம்
ஆல முண்டவடி கள்ளிட மாக வமர்ந்ததே. 4

கையி லங்குமறி யேந்துவர் காந்தளம் மெல்விரல்
தையல் பாகமுடை யாரடை யார்புரஞ் செற்றவர்
செய்ய மேனிக்கரி யமிடற் றார்திரு வாஞ்சியத்
தையர் பாதமடை வார்க்கடை யாவரு நோய்களே. 5

அரவம் பூண்பரணி யுஞ்சிலம் பார்க்க வகந்தொறும்
இரவி னல்லபலி பேணுவர் நாணிலர் நாமமே
பரவு வார்வினை தீர்க்கநின் றார்திரு வாஞ்சியம்
மருவி யேத்தமட மாதொடு நின்றவெம் மைந்தரே. 6

---

கட்கே பாவந்தீர்ப்பர் பழிபோக்குவர் எனவே அல்லார்க்கு இல்லை என்றதாம்.

4. சுவண்டு - பொருத்தம், 7:- 470. சால - மிக, பொடி - திருநீறு, மறைபேசுவர் என மாற்றுக. சீலம் - பெருந்தகைமையுள் ஒன்று, ஒழுக்கமுமாம். ஆலம் - நஞ்சு. ஒற்று(ப்)மிகை.

5. மறி - மான்கன்று. காந்தட்பூ கைவிரல்கட்குவமை. தையல் - கட்டழகுடைமையாற் பெண்ணைக் குறிக்கும் பெயர், இங்குப் பார்வதிதேவியாரை யுணர்த்திற்று; தையல் எல்லார்க்கும் நாயகியாதலின். அடையார் - பகைவர். புரம் செற்றவர் - திரிபுரதகனம் செய்தவர். "முப்புரமாவது மும்மலகாரியம்" என்பது திருமந்திரம். மிடறு - கழுத்து. செய்ய, கரிய முரண். ஐயர் - முதல்வர், அருநோய் அடையா - நீங்கற்கரிய பிறவிநோய் முதலியயாவும், திருவடியடையும் அன்பர்க்கு இல்லை.

6. அரவம் - பாம்பு, பூண்பர் - சூடுவர். அணியுஞ்சிலம்பு - அலங்காரமாகப்பூணும் வேதச்சிலம்பு. ஆர்க்க - ஒலிக்க. அகம் - வீடு. பேணுவர் - விரும்புவர். நாமமே பரவுவார் - திருநாமஜபமே செய்பவர். வினை - கர்மம். மடமாது - உமாதேவியார். மைந்தர் - வீரர்.

விண்ணி லானபிறை சூடுவர் தாழ்ந்து விளங்கவே
கண்ணி னலநங் கன்னுட லம்பொடி யாக்கினர்
பண்ணி லானவிசை பாடன்மல் குந்திரு வாஞ்சியத்
தண்ணலார் தம்மடி போற்றவல் லார்க்கில்லை யல்லலே. 7

மாட நீடுகொடி மன்னிய தென்னிலங் கைக்குமன்
வாடியூ டவரை யாலடர்த் தன்றருள் செய்தவர்
வேட வேடர்திரு வாஞ்சிய மேவிய வேந்தரைப்
பாட நீடுமனத் தார்வினை பற்றறுப் பார்களே. 8

செடிகொ ணோயினடை யார்திறம் பார்செறு தீவினை
கடிய கூற்றமுங் கண்டக லும்புகல் தான்வரும்
நெடிய மாலொடய னேத்தநின் றூர்திரு வாஞ்சியத்
தடிகள் பாதமடைந் தாரடி யாரடி யார்கட்கே. 9

---

7. பிறை - பிறத்தலுடையது என்னுங் காரணப்பொருட் டான பெயர். 'திங்கட்டுண்டம்'. அநங்கன் - அங்கமில்லான். உருவிலி, மன்மதன். பண்ணும் இசையும் முறையே ஆதாரமும் ஆதேயமுமாதலின் பண்ணில் ஆன இசை என்றார். போற்ற வல்லார் - போற்றுதலில் வேதாகம ஞானவல்லபம் உடையவர், நிஷ்டாநுபூதிமான்கள். அல்லல் - துன்பம்.

8. மாடம் - உயரிய வீடுகள். கொடி - துகிற்கொடிகள். மன்னிய - நிலைத்த. மன் - அரசன். இராவணன். வரை - கைலாசகிரி. வேடவேடர் - வேட்டுவக் கோலத்தர். வினை பற்று உம்மைத்தொகை. வினை - கர்மம். பற்று - மூலகர்மம். "இருவினைப்பாச மும்மலக்கல் ஆர்த்தலின் வருபவக் கடலில் வீழ்மாக்கள்" (பெரிய. அப்பர். 129) என்புழியறிக.

9. செடி - துன்பம், பாவமுமாம். திருவாஞ்சியத்துப் பெருமான் திருவடியை அடைந்தவருடைய அடியார்க்கு அடியார் ஆனவர்க்கு நோயின்மையும், தீவினை நீக்கமும், இறவாமையும், சிவகதியும் உண்டு என்றது. இத்திருப்பதிகத்துள் (3, 5, 6, 7, 8, 10, 11.) அடியார் சிறப்புணர்த்திய உண்மையை உணர்க. கூற்றம் - இயமன். புகல் - சிவகதி. "தன்னைச் சரணென்று தாளடை" (4. 105. 1.) வதே புகலாகும்.

பிண்ட முண்டுதிரி வார்பிரி யுந்துவ ராடையார்
மிண்டர் மிண்டுமொழி மெய்யல பொய்யிலை யெம்மிறை
வண்டு கெண்டிமரு வும்பொழில் சூழ்திரு வாஞ்சியத்
தண்ட வாணனடி கைதொழு வார்க்கில்லை யல்லலே. 10

தென்றல் துன்றுபொழில் சென்றணை யுந்திரு வாஞ்சியத்
தென்று நின்றவிறை யானை யுணர்ந்தடி யேத்தலால்
நன்று காழிமறை ஞானசம் பந்தன செந்தமிழ்
ஒன்று முள்ளமுடை யாரடை வாருயர் வானமே. 11

திருச்சிற்றம்பலம்

---

10. பிண்டம் - பிண்டித்த சோறு. மிண்டர் - வலியர். கெண்டி - கிளறி. பொழில் - சோலை. அண்டவாணன் - அண்ட முழுதும் வாழ்நன். வாணன் மரூஉமொழி, பாவாணன், அம்பலவாணன், மன்றவாணன், அண்டவாணன் என்னும் வழக்கால் இறைவனியல்பு உணர்தல் கூடும்.

11. என்றும் நின்ற இறையான் - நித்தியகர்த்தா. செந்தமிழ் - திருப்பதிகம். ஒன்றும் உள்ளம் - ஒன்றியிருந்து நினைக்கும் உள்ளம். 'இப்பதிகம் ஒன்றும் மனம்' என்பதே ஆசிரியர் உட்கோள். வானம் - வீடு.

---

காப்பயில் காழிக் கவுணியர் தீபற்கென்
 காரணமா
மாப்பழி வாரா வகையிருப் பேன்என்ன
 மாரன்என்னே
பூப்பயில் வாளிகள் அஞ்சும்என் நெஞ்சரங்
 கப்புகுந்த
வேப்பயில் வார்சிலை கால்வளை யாநிற்கு
 மீண்டிரவே.

—அந்தாதி 3

# 8 திருச்சிக்கல்

## 144 பதிகவரலாறு

கடல்நாகைக்காரோணத்தை வணங்கி நீங்கிப் பரவிய பதிகள் பல. அவற்றுள் திருச்சிக்கல், திருக்கீழ்வேளூர் முதலி யனவும் ஆம். அவற்றைப்பணிந்து பாடிய திருப்பதிகங்களுள் 'வானுலாவுமதி' என்னும் இதுவும் ஒன்று.

### பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

வானு லாவுமதி வந்துல வும்மதின் மாளிகை
தேனு லாவுமலர்ச் சோலைமல் குந்திகழ் சிக்கலுள்
வேனல் வேளைவிழித் திட்டவெண் ணெய்ப்பெரு மானடி
ஞான மாகநினை வார்வினை யாயின நையுமே. 1

மடங்கொள் வாளைகுதி கொள்ளு மணமலர்ப் பொய்கைசூழ்
திடங்கொண் மாமறை யோரவர் மல்கிய சிக்கலுள்
விடங்கொள் கண்டத்துவெண் ணெய்ப்பெரு மானடி மேவிய
அடைந்து வாழும்மடி யாரவ ரல்ல லறுப்பரே. 2

---

1. வான் உலாவும் மதி - தன்மேல் வந்துலாவும் அளவு உயரிய மாளிகை. 'வண்கொண்டல் விட்டு மதி முட்டுவன மாடம்' என்றார் கம்பர். வேனல் - சினம். வேள் - மன்மதன். விழித்திட்ட - நெற்றிக் கண்ணைத்திறந்து எரித்த, எரித்தவன் வெண்ணெய்ப்பெருமான் என்ற நயம் உணர்க. ஞானமாக நினைவார் - "பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் பார்ப் பரிய பரம்பரனைப் பதி ஞானத்தாலே நேசமொடும் உள்ளத்தே நாடிப் பாதநீழற்கீழ் நீங்காதே" (சித்தியார் 292.) நினைந்து நிற்பவர். நையும் - நைந்தொழியும்.

2. மடம் - மடப்பம். குதி - குதித்தல். முதனிலைத் தொழிற் பெயர். பொய்கை - இயற்கை நீர்நிலை. திடம் - சிவபெருமானே மெய்ப்பொருட் கடவுள் என்னும் வேதாகம பரத்துவ நிச்சயம். மல்கிய - நிறைந்த. மேவி - விரும்பி. அல்லல் அறுத்தல் - பிறவித் துன்பந் தீர்த்தல்.

நீல நெய்தனில விம்மல ருஞ்சுனை நீடிய
சேலுமா லுங்கழ னிவ்வள மல்கிய சிக்கலுள்
வேலொண் கண்ணியி னளொயொர் பாகன்வெண் ணெய்ப்பிரான்
பாலவண் ணன்கழ லேத்தநம் பாவம் பறையுமே. 3

கந்த முந்தக் கைதைபூத்துக் கமழ்ந்துசே ரும்பொழிற்
செந்துவண் டின்னிசை பாடன்மல் குந்திகழ் சிக்கலுள்
வெந்தவெண் ணீற்றண்ணல் வெண்ணெய்ப் பிரான்விரை யார்கழல்
சிந்தைசெய் வார்வினை யாயின தேய்வது திண்ணமே. 4

மங்குல்தங் கும்மறை யோர்கண்மா டத்தய லேமிகு
தெங்குதுங் கப்பொழிற் செல்வமல் குந்திகழ் சிக்கலுள்
வெங்கண்வெள் ளேறுடை வெண்ணெய்ப்பி ரானடி மேவவே
தங்கு மேற்சர தந்திரு நாளுந் தகையுமே. 5

---

3. நெய்தல் - நெய்தல் மலர். நிலவி - விளங்கி. ஆலும் - அசையும், துள்ளும். மாலும் என்றுகொண்டு மயங்குமெனலு மாம். வேல்-வேல்போன்ற, வேலவொண் கண்ணியினள் என்றது புதியது. வேல் நெடுங்கண்ணி என்னும் அத்தலத்தின் திருநாமத் தைக் குறித்தது. இவ்வாறு பல திருப்பதிகங்களுட் காணலாம். பிற்காலத்தில் வடமொழிப் பெயராக மாறிய காரணத்தால் சிற்சில பதிகங்களுள் அம்முறை விளங்கவில்லை. பாலவண்ணன்- பால்போலும் வெண்ணிறத்தன். பாலனுந் தன்மையனுமாம். பறையும் - நீங்கும்.

4. கந்தம் - மணம். முந்த - முற்பட்டுச்சென்று விசிப்பரவ. கைதை - தாழை. கமழ்ந்து - மணந்து. செந்து - ஒரு பெரும் பண். 2. 3. 10. குறிப்பைப்பார்க்க. இசை. ஐந்து என்பது சந்து என்றாகிச் செந்து என்று மருவிற்று எனலுமாம். ஜயம்- சயம், செயம். கஜம் - (கசம்) கெசம் என்பனபோலப் பலவுள. வெந்தவெண்ணீறு - விதிப்படி கற்பஞ் செய்யப்பெற்ற திரு வெண்பொடி. திண்ணம் - உறுதி.

5. மங்குல் - மேகம். தங்கும் மாடம் என்று சேர்க்க. மறையோர்களது மாடம் என்க. தெங்கு - தென்கு தென்னை என்பதால் அதன் தொல்லுரு விளங்கும். துங்கம் - உயர்ச்சி

வண்டி ரைத்துமது விம்மிய மாமலர்ப் பொய்கைசூழ்
தெண்டி ரைக்கொள்புனல் வந்தொழு கும்வயற் சிக்கலுள்
விண்டி ரைத்தமல ராற்றிகழ் வெண்ணெய்ப் பிரானடி
கண்டி ரைத்துமன மேமதி யாய்கதி யாகவே. 6

முன்னுமா டம்மதின் மூன்றுட னேயெரி யாய்விழத்
துன்னுவார் வெங்கணை யொன்று செலுத்திய சோதியான்
செந்நெலா ரும்வயற் சிக்கல்வெண் ணெய்ப்பெரு மானடி
உன்னிநீ டம்மன மேநினை யாய்வினை யோயவே. 7

தெற்ற லாகிய தென்னிலங் கைக்கிறை வன்மலை
பற்றி னுன்முடி பத்தொடு தோள்கனெ ரியவே
செற்ற தேவனஞ் சிக்கல்வெண் ணெய்ப்பெரு மானடி
உற்று நீநினை யாய்வினை யாயின வோயவே. 8

---

ஏறு - விடை. மேல் - மேலானகதி. சரதம் - உண்மை. திரு - இலக்குமி. தகையும் - பொருந்தும். அழகு பெற்றிருக்கும், வீற்றிருக்கும். 'பூவீற்றிருந்த திருமாமகள்' (சிந்தாமணி 30) 'மேன்மை' புதியது. மேற்கதி என்றிருந்ததோ?

6. இரைத்து - ஒலித்து. விம்மிய - மிக்குச் சொரிந்த. மாமலர் - தாமரைப்பூ. திரை - அலை. விண்டு இரைத்த மலர் - திருமால் அருச்சனைசெய்த (பத்திர) புட்பங்கள். இரைத்து - துதிசெய்து. மதியாய் - தியானிப்பாய். கதி - சிவகதி. ஆக - எய்தலாக ஆக மதியாய் என்க.

7. துன்னுகணை, வார்கணை, வெங்கணை என்க. உன்னிநீட - தியானித்து அழியாது வாழ. ஓய்தல் - தேய்ந்தொழிதல்.

8. தெற்றல் - அறிவில் தெள்ளியவன். 'நடைகற்ற தெற்றல்'. (திவ். பெரியதி. 11. 4. 9.) மாறுபாடுடையவன் என்பது இக்காலத்தார்கூறிய புதுப்பொருள். அதற்கு ஆதார மில்லை. இராவணன் ஒழுக்கத்திற் பிழைத்தவனேயாயினும் அறிவிற் சிறந்தவன். செற்ற - (வலியை) அழித்த.

மாலி னோடரு மாமறை வல்ல முனிவனும்
கோலி னார்குறு கச்சிவன் சேவடி கோலியும்
சீலந் தாமறி யார்திகழ் சிக்கல்வெண் ணெய்ப்பிரான்
பாலும் பன்மலர் தூவப் பறையுநம் பாவமே. 9

பட்டை நற்றுவ ராடையி னாரொடும் பாங்கிலாக்
கட்ட மணகழுக் கள்சொல் லினைக்கரு தாதுநீர்
சிட்டன் சிக்கல்வெண் ணெய்ப்பெரு மான்செழு மாமறைப்
பட்டன் சேவடி யேபணி மின்பிணி போகவே. 10

கந்த மார்பொழிற் காழியுண் ஞானசம் பந்தநல்
செந்தண் பூம்பொழிற் சிக்கல்வெண் ணெய்ப்பெரு மானடிச்
சந்த மாச்சொன்ன செந்தமிழ் வல்லவர் வானிடை
வெந்த நீறணி யும்பெரு மானடி மேவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

9. மால் - திருமால். முனிவன் - பிரமன், சிவன்சேவடி குறுகக் கோலினார். கோலியும் அறியார் என்க. கோலுதல் - வழிவகுத்தல், அடிமுடிதேட மாறிமுயலுதல் இங்குக் கோலுதலாம். சீலம் - பரமசிவன் மெய்த்தன்மை. பால் - பக்கம்- பசுப்பாலும் மலரும் என்று உம்மை கூட்டிப் பாலும் மலரும் என்க. பாலபிடேகம் புரிய. பறையும் - நீங்கும்.

10. பட்டை நற்றுவராடையினார் - சாக்கியர். துவர் - செந்நிறம். காவியேறியது. பட்டை என்பது துவர்ப்பட்டை நிறம் துணிக்கு ஊட்டும் வழக்கை நினைவூட்டும். பாங்கிலாமை - முறையற்ற பண்பு. கட்டு - உடற்கட்டு. கழுக்கள் . கழுவேறுதற்குற்ற அபசாரம் செய்தவர்கள். அமண் - சமண், க்ஷமண் என்பதன் திரிபு. சிட்டன் - வேதாகமம் வல்ல பெருமான். 'சிட்டர் வாழ்தில்லைச் சிற்றம்பலம்'. பட்டன் - புலவன். தன்னைத்தானே அருச்சித்தானுதலின் அருச்சகன் எனினும் பொருந்தும். 'ஆலநிழற் பட்டன்' (திருப்பல்லாண்டு) என்றதால் ஆசாரியனுமாம். ஏகாரம் - பிரிநிலை. பிணி - பிறவிப் பெருமபிணி முதலிய பலவுமாம்.

11. சந்தம் - இசை. செந்தமிழ் - இத்திருப் பதிகத்தை உணர்த்திற்று. வான் - பேரின்ப வீட்டுலகு, தேவாரத்தில்

# 9 திருமழபாடி

## 145 பதிகவரலாறு

கைத்தாளம் பெற்ற கவுணியர்பெருமான் நெய்த்தானப் பதியினின்று, திருமழபாடியைச் சேர்ந்து, "மங்கைவாழ் பாகத்தார் மழபாடி தலையினால் வணங்குவார்கள் பொங்குமா தவமுடையார்" எனத் தொழுது போற்றிசைத்துக் கோயில் புக்கு வலங்கொண்டு வழிபட்டு வயிரமணித்தூணைக் கும்பிட்டுப் பாடியது இத்திருப்பதிகம்.

### பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

களையும் வல்வினை யஞ்சனெஞ் சேகரு தார்புரம்
உளையும் பூசல்செய் தானுயர் மால்வரை நல்விலா
வளைய வெஞ்சரம் வாங்கியெய் தான்மதுத் தும்பிவண்
டளையுங் கொன்றையந் தார்மழ பாடியு ளண்ணலே. 1

---

'வான்' என்று வருமிடங்களிற் பெரும்பாலு மிப்பொருளே, கொள்ளல் வேண்டும். 'வானிடை அடிமேவர்' என்றதால் துறக்கம் ஈண்டுப் பொருந்தாமை அறிக. 'கேடிலாவானுலகம்' 'தூயவிண்' 'வானசம்பந்தத்தவரொடும் மன்னிவாழ்வாரே' என்ற திருமுறை வசனங்களை நோக்குக.

1. நெஞ்சே, அஞ்சல்; வல்வினையை மழபாடி அண்ணல் களைவான் என்க. விற்பூட்டுப் பொருள்கோள். கருதார் - பகைவர் (திரிபுரத்து அசுரர்). உளையும் - வருந்தும். பூசல் - போர். வரை - மேருமலையாகிய வில். விலா - பக்கத்தெலும்பு. சரம் - பாணம் (திருமாலாகிய கணை). மது - கள். தும்பி வண்டு - வண்டினங்கள். அளையும் - துழாவும் தார் - மாலை. மழபாடி - மழுவாடி என்பதன் மரூஉ என்பர். அண்ணல் - பெருமான்.

காச்சி லாதபொன் னோக்குங் கனவயி ரத்திரள்
ஆச்சி லாத பளிங்கின னஞ்சுமு ருடினன்
பேச்சி னலுமக் காவதென் பேதைகாள் பேணுமின்
வாச்ச மாளிகை சூழ்மழ பாடியை வாழ்த்துமே. 2

உரங்கெ டுப்பவ னும்பர்க ளாயவர் தங்களைப்
பரங்கெ டுப்பவ னஞ்சை யுண்டுபக லோன்றனை
முரண்கெ டுப்பவன் முப்புரந் தீயெழச் செற்றுமுன்
வரங்கொ டுப்பவன் மாமழ பாடியுள் வள்ளலே. 3

---

2. பேதைகாள் - அறிவிலிகளே. பேச்சினல் - சிவசம்பந்தமில்லாத அவப்பேச்சால். உமக்கு ஆவதென் - உமக்கு ஆவது யாது? மழபாடியைப் பேணுங்கள். வாழ்த்துங்கள் என்க. காய்ச்சு - தீயிலிட்டுச் சுடல். காய்ச்சிலாத - காய்த்தல் இல்லாத. காய்ச்சு - காச்சு, முதனிலைத்தொழிற்பெயர். பிள்ளைத்தாய்ச்சி - பிள்ளைத்தாச்சி என்பதுபோலமருவிற்று. காய்ச்சப்பெறுத இயற்கையிலொளிரும் பொன் என்றபடி. பொன் - தேவியார். நோக்கும் - பார்க்கும். கனவயிரத்திரள் - இறைவன் திருத்தோள்களைக் குறித்த உவமையாகுபெயர். இறைவன் திருநாமம் வச்சிரத்தம்பநாதர் என்பதாகும். மகளிர்க்கு ஆடவர் தோள்நோக்கலும், ஆடவர்க்கு மகளிர் கொங்கை நோக்கலும் இயல்பு. (கம்பர், மிதிலைக் காட்சிப். பா. 36. பார்க்க). ஆய்தல் - நுணுக்கம். ஆய்த்தல் - நுணுக்கம்புரிதல். பளிங்கு, தன்பாற்பட்டதை நுணுக்கஞ்செய்யாது புறத்தே விளங்கச்செய்வது. அதனல் ஆச்சிலாத பளிங்கு என்றூர். சிவபெருமானைத் 'தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே' என்றனர். அஞ்சு - ஆனைந்து. ஆடினனது மழபாடியை என்க. வாச்ச - (இலக்கணமெல்லாம்) வாய்க்க.

3. உரம் - வலிமை. உம்பர்கள் - தக்கன் வேள்வியிற் கலந்த தேவர்கள். பரம் - தேவத்தன்மை. திவ்வியம், பகலோன் முரண்கெடுப்பவன் - சூரியன் பல்லைத் தகர்த்தவன். வரம் - மூவர்க்குத்தந்த வரம். வள்ளல் - எவ்வுயிர்க்கும் எப்பொருளும் எப்பொழுதும் அருள்வோன். மழபாடிப் பெருமானது திருநாமம் வள்ளல் என்பதும் (பா, 4, 8, 11. காண்க.) வயிரத்திரள் (2) என்பதும் ஆதலறிக.

பள்ள மார்சடை யிற்புடை யேயடை யப்புனல்
வெள்ள மாதரித் தான்விடை யேறிய வேதியன்
வள்ளன் மாமழ பாடியுண் மேய மருந்தினை
உள்ள மாதரி மின்வினை யாயின வோயவே. 4

தேனு லாமலர் கொண்டுமெய்த் தேவர்கள் சித்தர்கள்
பானெ யஞ்சுட னாட்டமுன் னாடிய பால்வணன்
வான நாடர்கள் கைதொழு மாமழ பாடியெங்
கோனை நாடொறுங் கும்பிட வேகுறி கூடுமே. 5

தெரிந்த வன்புர மூன்றுடன் மாட்டிய சேவகன்
பரிந்து கைதொழு வாரவர் தம்மனம் பாவினன்
வரிந்த வெஞ்சிலை யொன்றுடை யான்மழ பாடியைப்
புரிந்து கைதொழு மின்வினை யாயின போகுமே. 6

---

4. பள்ளம் - சடைமுடி நடுவிற்பொருந்திய குழிவு. பள்ள மார்புனல் வெள்ளம் (கங்கைப் பெருக்கம்) எனலுமாம். மேய - மேவிய, விரும்பிய. மருந்து - பிறவிப் பிணிக்கொரு பெருமருந்து. உள்ளம் - மனம். ஆதரிமின் - விரும்புங்கள். வாயாலுண்ணும் மருந்தன்று. "உன்னுமுள தைய மிலதுணர்வாய் ஓவாது மன்னுபவம் தீர்க்கும் மருந்து" (திருவருட்பயன். 10.) என்றபடி நினைக்கும் மருந்து.

5. மெய்த்தேவர்களும் சித்தர்களும் தேன்சொரியும் பூக்களைக்கொண்டு பாலும் நெய்யும் தயிருமாகிய ஆனைந்தும் அபிடேகிக்க ஆடிய பால்வண்ணன். ஆடிய - அபிடேகிக்கப் பெற்ற, நடனமாடிய. வானநாடர்கள் - துறக்கத்தில் வாழ்பவர்கள். அம்மெய்த்தேவர் வேறு, இவர் வேறு. கோன் - தேவாதி தேவேசன். குறிகூடல் - 'அறிவதொரு குறி குருவினருளினலறிந்து மன்னு சிவன்றனையடைந்து' நிற்றலும், 'குறியொடு தாம் அறியும் நெறியதனுற் சிவமேயாய் நின்றிடுதலும் பின்பு வாய்ப்பன, 'குறியதனல் இதயத்தே அரனைக்கூடு'தலே ஈண்டுக் குறித்தது. "அருள் ஞானக் குறியில் நின்று கும்பிட்டுத் தட்டம் இட்டுக் கூத்தாடித்திரி" என்று விதித்தமையுணர்க.

6. தெரிந்தவன் - சருவஞ்ஞன், முற்றுணர்வுடையவன். தெரிந்த வன்மை, புரம் என்றல் அமையாது. மாட்டிய - மாள்வித்த, தீயைமாட்டிய எனலுமாம். சேவகன் - வீரன்,

சந்த வார்குழ லாளுமை தன்னொரு கூறுடை
எந்தை யானிமை யாதமுக் கண்ணின னெம்பிரான்
மைந்தன் வார்பொழில் சூழ்மழ பாடிம ருந்தினைச்
சிந்தி யாவெழு வார்வினை யாயின தேயுமே. 7

இரக்க மொன்று மிலானிறை யான்றிரு மாமலை
உரக்கை யாலெடுத் தான்றன தொண்முடி பத்திற
விரற்ற லைந்நிறு வியுமை யாளொடு மேயவன்
வரத்தை யேகொடுக் கும்மழ பாடியுள் வள்ளலே. 8

ஆல முண்டமு தம்மம ரர்க்கரு ளண்ணலார்
கால னாருயிர் வீட்டிய மாமணி கண்டனார்
சால நல்லடி யார்தவத் தார்களுஞ் சார்விடம்
மால யன்வணங் கும்மழ பாடியெம் மைந்தனே. 9

---

பரிந்து - அன்பு கொண்டு. பாவினான் - பரவியவன். வரிந்த - கட்டிய. சிலை - மேருவில். புரிந்து - விரும்பி. வினையாயின - பிராரப்தம், சஞ்சிதம், ஆகாமியம் என்னும் மூன்றும், அவற்றின் உட்பட்ட பல்வகையும் ஆகிய கர்மங்கள்.

7. சந்தம் - அழகு. வார் - நீளம். ஒழுகுதல். கூறு - இடப்பால். எந்தையான் - எம் அப்பன். முக்கண்ணினன் - சோமசூரியாக்கினி நேத்திரங்களையுடையவன். மழபாடி மருந்து திருமழபாடியிலுள்ள பவரோக வைத்தியநாதன். இம்மருந்து உடற்கின்றி உயிர்க்காதலின், உண்ணலின்றி உன்ன நினைத்தலுக்குரியதால் எழுவார் என்றார். சிந்தியா - சிந்தித்து. நினைத்து, செய்யா என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். வடசொற் பகுதியடியாகப் பிறந்தது.

8. இரக்கம் - பக்தி. இறையான் - சிவபிரான். மலை - கயிலாயம். உரம் - வலிமை. இலான், எடுத்தான், மேயவன் மூன்றும் வினையாலணையும் பெயர்கள். ஒள்முடி - ஒளியுடைய முடிகள். இற - இற்றொழிய. விரல் - ஈண்டுக், காற்பெருவிரல் மட்டும். நிறுவி - ஊன்றி, ஊன்றியதும் கருணைப்பொருட்டாதலை வரத்தையே கொடுக்கும் என்றதாலறிக. (பா. 3, 4, 8, 11ல்) வள்ளல் என்றதும் 'வரங்கொடுப்பவன்' 'வரத்தையே கொடுப்பான்' என்றதும் அறியின், சிவதலயாத்திரைக் கருத்தும் பயனும் விளங்கும்.

9. தான் உண்டது நஞ்சு, அமரர் (தேவர்)க்கு அருளியது அமுதம் ஆயினும் நஞ்சின் பயனும் இறப்புத் தனக்கில்லை.

கலியின் வல்லம ணுங்கருஞ் சாக்கியப் பேய்களும்
நலியு நாள்கெடுத் தாண்டவென் னுதனர் வாழ்பதி
பலியும் பாட்டொடு பண்முழ வும்பல வோசையும்
மலியு மாமழ பாடியை வாழ்த்தி வணங்குமே. 10

மலியு மாளிகை சூழ்மழ பாடியுள் வள்ளலைக்
கலிசெய் மாமதில் சூழ்கடற் காழிக் கவுணியன்
* * * * 11

திருச்சிற்றம்பலம்

---

அமுதத்தின் பயனும்வாழ்வு அத்தேவர்க்கிருக்கின்றது. இதனால் உயிர்களின் வாழ்முதல் இறைவன் என்னும் சிவ பரத்துவம் இனிதுவிளங்கும். தன்னைப் புகலடைந்தவர்க்கு மரணபயம் போக்கும் ஆற்றலுடையவன் என்னும் வாய்மைக்குக் 'கால காலன்' 'நீலகண்டன்' என்ற திருநாமமே சான்றும் என்பார், 'காலனுருயிர் வீட்டிய மாமணிகண்டனுர்' என்றார் அடியவர்க் குளதாகும் நலத்தை அளவிடலரிதென்பதை, 'சாலநல்லடியார்' என்று விளக்கினுர். தவத்தார்களும் என்றதால் அடியார்களும் என்க. சார்விடம் - புகலிடம் (சரணுகதி ஸ்தானம்). மைந் தனே - சிவபெருமானே. அடியார் - திருவடியடைந்தவர். தவத் தார் - அடி அடையத் தவஞ்செய்பவர். தவம் - சரியை, கிரியை, யோகம். அடி - ஞானம். மால் - திருமால். அயன் - பிரமன்.

10. கலி - துன்பம், இங்குத் துன்பஞ் செய்தலைக் குறித் தது. அமண் - சமணர். நலியும் நாள் - தமிழ்நாட்டுமக்களை வருத்தியகாலத்தில். கெடுத்து - அவ்வருத்தத்தைப் போக்கி. ஆண்ட - சைவத்தை நிலைநாட்டிப் பரவச்செய்து சிவநெறியிற் புகுத்திய, 'என் நாதனுர்' என்றது இங்கு மிக்க பொருத்தமாகி இவர் திருவருளை முன்னிட்டுப் பரசமய நிராகரணம் புரிந்த உண்மையை விளக்குகின்றது. திருமழபாடியில் பலி, பாட்டு, பண், முழவு, பலவோசை எல்லாம் மலிந்திருந்தன என்பதால் அக்காலத்துச் சிவாலயபரிபாலன மகிமையை அறியலாம். வாழ்த்தி வணங்கும் என்றது முன்னிலைப் பன்மை யேவல்வினை. (பா. 2, 4, 6. பார்க்க).

11. மழபாடி மாளிகைச் சிறப்புள்ளதென்று இரண் டாவது திருப்பாடலிலும் கூறினுர். கலி - வலிமை, எழுச்சி. கவுணியன் - கௌண்டிண்ணிய கோத்திரத்தார்.

---

# 10 திருமங்கலக்குடி

## 146 பதிகவரலாறு

திருக்கஞ்சனூர், திருமாந்துறை இரண்டையும் வழிபட்டு மீண்டு திருமங்கலக்குடியையடைந்து பாடியது இத்திருப் பதிகம்.

### பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

சீரி ஞர்மணி யுமகில் சந்துஞ் செறிவரை
வாரி நீர்வரு பொன்னி வடமங் கலக்குடி
நீரின் மாமுனி வன்னெடுங் கைகொடு நீர்தனைப்
பூரித் தாட்டியர்ச் சிக்க விருந்த புராணனே. 1

பணங்கொ ளாடர வல்குனல் லார்பயின் றேத்தவே
மணங்கொண் மாமயி லாலும் பொழின்மங் கலக்குடி
இணங்கி லாமறை யோரிமை யோர்தொழு தேத்திட
அணங்கி னோடிருந் தானடி யேசர ணாகுமே 2

---

1. சீர் - கனம், புகழ். மணியும் அகிலும் சந்தனமும் மிக்குள்ள மலை. சந்து - சந்தனம். வரை - மலை. வாரி-வெள்ளம். பொன்னி - காவிரி. பொன்னி வடமங்கலக்குடி - ஆற்றின் வடகரையிலுள்ள தலம். இத்தலத்தில் வாழ்ந்த முனிவர் ஒருவர் சிவபூஜைக்குரிய திருமஞ்சனநீரை அமர்ந்தவண்ணமே திருக்கைகளை நீட்டி, ஆற்றுநீரை முகந்து அபிடேகம் புரிந்தார் என்பது வரலாறு. அவ்வுண்மையை முதற்றிருப்பாட்டில் உணர்த்தி யருளியதால் ஆசிரியர் திருவுள்ளக் கிடக்கையில் அது முந்தி நின்றவாறறியலாம். ஆற்றினளவும் நீண்டதால் 'நெடுங்கை' என்றார். பூரித்து - நிறைத்து. ஆட்டி - அபிடே கித்து. அர்ச்சிக்க - அருச்சனை புரிய. புராணன் - முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம்பொருள், பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியன் என்னும் இருபொருளும் தருமாறு பிரிக்கப்படும் வடசொல்.

2. பணம் - அரவின் படம். நல்லார் - பெண்டிர். மணம் கொள் பொழில் - வாசனை கொண்ட சோலை. ஆலும் - ஆடும்.

கருங்கை யானையி னீருரி போர்த்திடு கள்வனார்
மருங்கெ லாமண மார்பொழில் சூழ்மங் கலக்குடி
அரும்பு சேர்மலர்க் கொன்றையி னானடி யன்பொடு
விரும்பி யேத்தவல் லார்வினை யாயின வீடுமே. 3

பறையி னோடொலி பாடலு மாடலும் பாரிடம்
மறையி னோடியல் மல்கிடு வார்மங் கலக்குடிக்
குறைவி லாநிறை வேகுண மில்குண மேயென்று
முறையி னால்வணங் கும்மவர் முன்னெறி காண்பரே. 4

---

இணங்கிலா மறையோர் என்பதில், இணங்கிலாமை மறைகட்குரிய அடைமொழியேயாகும். மறைகள் மெய்ப்பொருளை அறிந்து இணங்காதன. ஆரணம் அறியா அரும்பெருங்கடவுள் பரமசிவன் என்பதும் அவன் 'இணங்கிலி' (திருவாசகம். 389.) என்பதும் பிரசித்தம். இமையோர் - இமைகொட்டாத வானோர். விழித்தகண் குருடாய்த் திரிவீரராகிய யோகியருமாம். அணங்கு - உமையம்மையார், சரண் - கதி, புகல்.

3. கருங்கை - பெரிய துதிக்கை. கருமையை யானைக்குச் சேர்த்து நிறத்தைக் கொள்ளலும் ஆம். ஈர் உரி - ஈர்ந்த தோல். வினைத்தொகை இத்தொடரின் உண்மைக்கருத்து ஆணவ மலத்துட்படும் உயிரின் உள்ளொளி வடிவுடையன் மெய்ப் பொருள் என்பதாம். 'ஒளிக்கும் இருட்கும் ஒன்றே இடம்' எனத் தொடங்கும் கொடிப்பாட்டின் உட்கிடக்கையை இங்கு உணர்க. மருங்கு - பக்கம். அன்பு - பக்தி. விருப்பம் - ஆர்வம். வீடும் - அழியும்.

4. பறை - வாத்தியம். பாரிடம் - பூதகணம். மறையினோடு இயல் மல்கிடுவார் - வேதஞானமும் வேதவொழுக்கமும் மிக்கவர் அந்தணர். குறைவிலா நிறைவே என்றது பரிபூரணன் பரசிவனன்றி வேறில்லாமை உணர்த்திற்று, ஏனைய நிறைவெல்லாம் அதனிற் பெரிய பிறிதொரு நிறைவைநோக்கின் குறைவுடையதாகும், ஏரி நீர் நிறைவைநோக்கி வாவி நீர் நிறைவு குறைவுடையதாதல்போல; பார்க்குமிடம் எங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணாநந்தம் ஒன்றே குறைவிலா நிறைவு என்க. 'குறைவிலா நிறைவே கோதிலா அமுதே' 'குறைவிலா நிறைவே

ஆனி லங்கிள ரைந்தும விர்முடி யாடியோர்
மானி லங்கையி னன்மண மார்மங் கலக்குடி
ஊனில் வெண்டலைக் கையுடை யானுயர் பாதமே
ஞான மாகநின் றேத்தவல் லார்வினை நாசமே 5

தேனு மாயமு தாகிநின் றான்றெளி சிந்தையுள்
வானு மாய்மதி சூடவல் லான்மங் கலக்குடி
கோனை நாடொறு மேத்திக் குணங்கொடு கூறுவார்
ஊன மானவை போயறு முய்யும் வகையதே. 6

---

குணக்குன்றே' என்ற ஆசிரிய வசனங்களும் அறிக. குணம் இல் குணம் - என்குணத்தவன். முறை - சிவாகம விதிமுறை. முன்னெறி - சமயநெறி எல்லாவற்றிற்கும் முதன்மையுடைய சிவநெறி. நெறி என்பது அந்நெறியொழுகிப் பெறும் பேரின்பப் பயனை உணர்த்தும் ஆகுபெயர்.

5. ஆனில் அம் கிளர் ஐந்தும் - கோ (பசு) வினிடத்து உண்டாகிய பால், தயிர், நெய், கோமயம், கோமூத்திரம் என்னும் ஐந்தும்; ஆயினும் முதன் மூன்றே சைவாசாரியர் கொண்டாடியன. 'ஆடினாய் நறுநெய்யொடு பால்தயிர்.' மான் நில் அம்கை - மான்நிற்கும் அழகிய கை. மான் நிலம் அங்கை என்பதில் நடுமொழி குறைந்ததெனினும் பொருந்தும். மானுக்கு இல்லமாகிய கையுமாம்.

ஊன் இல் வெள்தலை - தசையற்ற வெள்ளைத்தலை, பிரம கபாலம். உயர்பாதம் - திருவடி. இதில் திருவடிஞானம் ஒன்றே வீடுபேறளிக்கும் உண்மை உணர்த்தினார். முன்னர் "வெண்ணெய்ப் பெருமானடி ஞானமாகந் நினைவார் வினை யாயின நையுமே" என்றதும் அறிக. 'அவனடி அவ்வொளி ஞானம்' 'அடிஞானம் ஆன்மாவிற் றோன்றும்' 'இறைவனடி ஞானமே ஞானம் என்பர்' 'ஆசான் அருளால் அடிசேர் ஞானம் வந்திடும் மற்றொன்றாலும் வாராதாகும்.' (சித்தியார்.)

6. தேனுமானான். அமுதும் ஆனான், தெளிந்த சிந்தை என இறந்த காலப்பெயரெச்சமாக விரிக்க. தெளியாத சிந்தையுள் ஞானாகாசம் எய்தாது. வான் - ஞானவெளி. மதி - பிறை. கோன் - முதல்வன். கோணம் - அடிமைப் பண்பு.

வேள்படுத்திடு கண்ணினன் மேருவில் லாகவே
வாள ரக்கர் புரமெரித் தான்மங் கலக்குடி
ஆளு மாதிப் பிரானடி கள்ளடைந் தேத்தவே
கோளு நாளவை போயறுங் குற்றமில் லார்களே. 7

பொலியு மால்வரை புக்கெடுத் தான்புகழ்ந் தேத்திட
வலியும் வாளொடு நாள்கொடுத் தான்மங் கலக்குடிப்
புலியி னுடையி னனடி யேத்திடும் புண்ணியர்
மலியும் வானுல கம்புக வல்லவர் காண்மினே. 8

---

கூறுவார் - தோத்திரஞ்செய்வார். ஊனமானவை - பிறவிக்கேது வான மும்மல காரியங்கள். உய்யும்வகை - பாசம் நீங்கிச் சிவம் பிரகாசிக்கும் திறம். இஃது ஆன்மாக்கள் 'உய்யுமாறு ஒன்று அருளிச் செய்'தது. இந்த 'உய்வினைநாடா திருப்பது...ஊனம்.'

7. வேள் - கருவேள், மன்மதன். படுத்திடுகண் - அழித்த நெற்றித் தீ விழி. கண்ணினன் - கண்ணுடையவன். வாள் - கொடுமை, வாட்படையுமாம். அரக்கர் - பிறர்தீமை செய்யா திருப்பவும் தீங்கிழைப்பவர். (அசுரர் - தீங்கிழைத்தவர்க்கு அது செய்பவர்). ஆளும் - ஆட்கொள்ளும். ஆதிப்பிரான் - முதற்கடவுள். அடிகள் - பாசநீக்கமும் சிவப்பேறுமாகிய இரண்டு திருவடிகள். 'யான்' 'எனது' என்னும் இருசெருக்கும் அறுதலாகிய இரண்டெனலும் சாத்திர சம்மதம், 'பரைஉயிரில் யான் எனதென்றறநின்றதடியாம்' (உண்மை நெறிவிளக்கம்.) 'யான் எனதென்றற்ற இடமே திருவடி'. ஏத்த - வழிபட, துதிக்க. எடுத்தல் என்பதன் மரூஉ. ஏத்தல் - இறைவன் புகழை எடுத்தோதுதல், எடுத்தலோசையே தோத்திரங்கட்கு உரியது. கோள் - கிரகங்கள். நாள் - மீன்கள். குற்றம் - ஆணவம் முதலிய முக்குற்றம்.

8. பொலியும் - விளங்கும். வரை - கயிலைமலை. வலி - பலம். வாளும் நாளும்: - வாட்படையும் ஆயுளும் அருளிய இவ் உண்மைபயின்று வருதல் காணலாம். புலியினுடையினன் - புலித்தோலுடை தரித்தவன். புண்ணியர் - சிவபுண்ணியத்தவர். மலியும் - இன்பம் மிகும். வானுலகம் - வீட்டுலகு. வல்லவர் - வன்மையுடையவர். காண்மின் என்றது ஆசிரியர் திருமுன் அந்நாளில் இருந்தவரை நோக்கி.

ஞால முன்படைத் தானளிர் மாமலர் மேலயன்
மாலுங் காணவொ ணாவெரி யான்மங் கலக்குடி
ஏல வார்குழ லாளொரு பாக மிடங்கொடு
கோல மாகிநின் றான்குணங் கூறுங் குணமதே. 9

மெய்யின் மாசினர் மேனி விரிதுவ ராடையர்
பொய்யை விட்டிடும் புண்ணியர் சேர்மங் கலக்குடிச்
செய்ய மேனிச் செழும்புனற் கங்கை செறிசடை
ஐயன் சேவடி யேத்தவல் லார்க்கழ காகுமே. 10

மந்த மாம்பொழில் சூழ்மங் கலக்குடி மன்னிய
எந்தை யையெழி லார்பொழிற் காழியர் காவலன்
சிந்தை செய்தடி சேர்த்திடு ஞானசம் பந்தன்சொல்
முந்தி யேத்தவல் லாரிமை யோர்முத லாவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

9. ஞாலம் - பூமி. நளிர் - குளிர்ச்சி, படைத்தானாகிய அயன் (பிரமன்). மாமலர் - தாமரை. எரியான் - தீப்பிழம்பானவன். ஏலம் - மயிர்ச்சாந்து. "ஏலவார் குழலாள்" என்பது அம்பிகையின் திருநாமங்களுள் ஒன்று. இது திருமுறையுட் பயின்றது. கோலம் - அழகு. குணத்தைக் கூறுங்கள். அதுவே குணமாகும். மற்றவை குணமாகா.

10. மெய்யின்மாசு - உடலழுக்கு. சமணர் சாக்கியர் ஆகிய பரசமயத்தவர் பொய்யுரைகளை வீட்டுச் சைவவுண்மையை உணர்ந்தொழுகுவோர் புண்ணியர். அத்தகையவர் சேர்ந்துறையும் புகழ் மங்கலக்குடிக்குள்ளது. செய்யமேனி - 'சிவனெனும் நாமந்தனக்கேயுடைய செம்மேனி எம்மான்' புனல் - வெள்ளம். ஐயன் - பரத்துவக் கடவுள். சேவடி - சிவந்த திருவடி. சிவஞானப் பிரகாசம். அழகு - பேரின்ப வாழ்வு.

11. மந்தம் - தென்றல் (வீசுதல்). மன்னிய - நிலைபெற்ற. எழில் - அழகு. இத்திருப்பதிகம் திருவடியிற் சேர்க்கவல்லது. சிந்தை செய்தல் சேர்த்திடற்கும் ஏத்தற்கும் பொருந்துதலறிக. இமையோர்முதல் - தேவர் கோமகன்.

---

## 11 சீகாழி

### 147 பதிகவரலாறு

137ஆவது பதிகத் தலைப்பிற் காண்க.

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

நல்லானை நான்மறை யோடிய லாறங்கம்
வல்லானை வல்லவர் பான்மலிந் தோங்கிய
சொல்லானைத் தொன்மதிற் காழியே கோயிலாம்
இல்லானை யேத்தநின் றார்க்குள தின்பமே. 1

நம்மான மாற்றி நமக்கரு ளாய்நின்ற
பெம்மானைப் பேயுட னாடல்பு ரிந்தானை
அம்மானை யந்தணர் சேரு மணிகாழி
எம்மானை யேத்தவல் லார்க்கிட ரில்லையே. 2

---

1. நல்லான் - மங்களவடிவினன், சிவன். நான்மறை - சைவத்திற்கு உரியனவாயிருந்த பழைய நான்கு மறைகள். "தத்துவாதீதமெனச் சாற்றுங்காண் சைவமறை அத்துவா எல்லாம் அற" (துகளறுபோதம். 20) ஆறு அங்கம் - சிக்ஷை, வியாகரணம், சந்தம், நிருத்தம், சோதிடம், கற்பம் என்பன. இவை சைவமறைக்கும் உரியன. 'மறைகள் - வேதம்'. (2. 12, 7.) வல்லான் - வன்மையுடைய சிவபிரான். வல்லவர் - வன்மை யுடைய அந்தணர். பால் - ஏழனுருபு. மலிந்து - நிறைந்து. சொல்லான் - துதிவடிவானவன். கோயிலாம் இல்லான் - கோயில் என்னும் பெயரினதாய வீட்டினன். நின்றார் - நிலைத் தவர். இன்பம் உளது. உளது - அழியாது என்றும் இருப்பது.

2. நம் மானம் - நம் குற்றங்களாகிய ஆணவம், மாயை. கன்மம் (மூன்றும்). மாற்றி - தீர்த்து. மாறச்செய்து, வீடுற்ற உயிர்களின்நீங்கி ஏனையுயிர்களையுற்று. அருளாய் - சிவஞான மாகி. 'மருமகன்' மருமான் என்றானதுபோலப் 'பெருமகன்' பெருமான் என மருவிற்று. பேயோடு கூத்தாடிய வரலாறு.

அருந்தானை யன்புசெய் தேத்தகில் லார்பாற்
பொருந்தானைப் பொய்யடி மைத்தொழில் செய்வாருள்
விருந்தானை வேதிய ரோதி மிடைகாழி
இருந்தானை யேத்துமி னும்வினை யேகவே. 3

புற்றானைப் புற்றர வம்மரை யின்மிசைச்
சுற்றானைத் தொண்டுசெய் வாரவர் தம்மொடும்
அற்றானை யந்தணர் காழி யமர்கோயில்
பற்றானைப் பற்றிநின் றார்க்கில்லை பாவமே. 4

---

புரிதல் - செய்தல். அருமகன் என்பது அம்மான் என்று மருவி அருமைக் கடவுள் என்றதாம். எம்மான் - எம்கடவுள். மகன், மைந்தன் என்பவை வீரன், ஆடவன், கடவுள் என்னும் பொருளில் ஆளப்பட்டன. இடர் - கேவலாவத்தையும் சகலா வத்தையும் அவற்றுட்பட்ட துயரும்.

3. அருந்தானை - உண்ணலாகாதென்ற நோன்பியை, 'தன் உடம்பின் ஊன்கெடினும் உண்ணார் கைத்து உண்ணற்க' (நாலடி. 80) அன்பு - பக்தி. ஏத்தகில்லார் - ஏத்தமாட்டாதவர். அன்புசெய்து ஏத்தமாட்டாதவரிடத்தில் யாதும் அருந்தாத (உண்ணாத)வனை. பொய்யடிமைத் தொழில் செய்பவருள் பொருந்தாதவனை. விருந்தானை - புதியனை. வேதியர் - மறை யோர். ஓதி - வேதம் ஓதி. நும் வினைபோக ஏத்துமின்.

4. புற்றான் - புற்றனவன் (வன்மீகநாதன், புற்றிடங் கொண்டான் என்பன திருவாரூர்ப் பெருமான் திருநாமங்கள். பந்தணைநல்லூர் முதலிய வேறு தலங்களிலும் புற்றிடத்தில் இறைவன் எழுந்தருளிய உண்மையை அறியலாம்). புற்று அரவம் - புற்றில் வாழும் பாம்பு. அரை - இடை. சுற்றான் - சுற்றுதலுடையவன். பாம்பை இடுப்பிற் சுற்றியவன். தொண்டு செய்வார் அவர் தம்மொடும் - தொண்டுகளைச் செய்பவராகிய அவரொடும். அற்றானை - அற்றவர்க்கு அற்ற சிவனை. 'அற்ற வர்க்கு அற்ற சிவன்' என்பதன் தாற்பரியம் ஆராய்ந்து உணரத்தக்கது. எல்லாப்பற்றும் அற்றவர்க்கே சிவபிரான் 'பற்றற்றான்' எனல் விளங்கும். "புற்றில் வாளரவும் அஞ்சேன் பொய்யர் தம் மெய்யும் அஞ்சேன், கற்றைவார்

நெதியானை நெஞ்சிடங் கொள்ள நினைவார்தம்
விதியானை விண்ணவர் தாம்வியந் தேத்திய
கதியானைக் காருல வும்பொழிற் காழியாம்
பதியானைப் பாடுமி னும்வினை பாறவே. 5

---

சடைஎம் அண்ணல் கண்ணுதல் பாதம்நண்ணி மற்றும் ஓர் தெய்வந்தன்னை உண்டு என நினைந்து எம்பெம்மாற்கு **அற்றி லாதவரைக்** கண்டால் அம்மநாம் அஞ்சுமாறே" என்னுந் திருவாசகத்தின் கருத்தே ஈண்டுக் கொள்ளல்வேண்டும். 'அற்ற வர்கள் நற்றுணைவன்' (சம்பந்தர் திருக்கயிலாயம் 2), 'பாவம் அற்றவர் நாளும் ஏத்த அயவந்தி அமர்ந்தவனே' (திருச்சாத்த மங்கை. 6), 'நெஞ்சு அற்றவர் அருவினையிலரே. (திருச் சிறுகுடி. 5), 'உறவும் ஆகி அற்றவர்களுக்கு மாநெதிகொடுத்து நீள்புவி இலங்கு சீர்ப்புறவ மாநகர்க் கிறைவனே எனத் தெற கிலாவினையே' (திருப்பிரமபுரம். 8), 'உலகினில் இயற்கையை ஒழிந்திட்டு அற்றவர்க்கு அற்றசிவன் உறைகின்ற ஆலவாய் ஆவதும் இதுவே' (2). 'தம்வினையான எலாம் அற அற்றவர் ஆரூர் அரனெறி' (அப்பர். 5). 'அற்றவர்க்கு அன்பர்' 'அற்றுப் பற்றின்றி யாரையும் இல்லவர்க்கு உற்ற நற்றுணையாவான்' (திருவாஞ்சியம். 6) அற்றவர்கட்கு ஆரமுதம் ஆனாய்போற்றி' 'அற்றார்க் கருள்செய்யும் ஐயாறன்னே', 'அற்றார்கட்கு அற்றானாய் நின்றான் கண்டாய்.' 'அற்றவர்க்கு அருள்செய் பாச்சிலாச் சிராமத்து அடிகள்' 'அற்றவனார் அடியார் தமக்கு' ...நின்றியூரே' 'பங்கயச் சேவடிக்கே செல்ல அற்றனன் அற்றனன்' 'சோற்றுத்துறையுள்...முதல்வன் பாதத்து அற்றார் அடியார் அடிநாயூரன்' 'ஒன்றுமிலாதவரைக் கழற்போ திறைஞ்சி' (திருவாசகம், 524), 'அற்றவர்க்கு அற்றசிவன்' (பொன்வண்ணத்தந்தாதி, 74. இருபா இருபஃது 20.) என்னுந் தோத்திரமும் சாத்திரமும் இதனைப் பலமுறை குறித்தல் அறிதற்பாலது. 'ஒருபற்றிலாமையும் கண்டிரங்காய்' என்றதாலும் இதனை இனிதுணரலாம். இன்னும் பல இடங்களில் இதனைத் திருமுறைகள் வற்புறுத்துகின்றன. பற்றான் - பற்று உடையவன்.

5. நெதி - நிதி என்பதன் மரூஉ. இவ்வாறுள்ளது பயின்றுள்ளது. விதி - கட்டளை. கதி - நெறி. கார் - மேகம். பொழில். சோலை. பதி - நகர். பாற - அழிய.

செப்பான மென்முலை யாளைத் திகழ்மேனி
வைப்பானை வார்கழ லேத்தி நினைவார்தம்
ஒப்பானை யோத முலாவு கடற்காழி
மெய்ப்பானை மேவிய மாந்தர் வியந்தாரே. 6

துன்பானைத் துன்ப மழித்தரு ளாக்கிய
இன்பானை யேழிசை யின்னிலை பேணுவார்
அன்பானை யணிபொழிற் காழி நகர்மேய
நம்பானை நண்ணவல் லார்வினை நாசமே. 7

---

6. செப்பு ஆன - செப்பை ஒத்த. மேனி - திருமேனியின் இடப்பாதியில். வைப்பானை - வைத்தலுடையவனை. 'வைப் பவனை' எனின் முக்காலத்தும் ஒத்தியல்வதாகாது. தொல்காப் பியர் 'செய்யும்' என்னும் வாய்பாட்டு நிகழ்காலத்து வினையாற் சொல்க என்றார். (வினையியல். 43.) 'முந்நிலைக் காலமும் தோன்றும் இயற்கை எம்முறைச் சொல்லும் நிகழுங்காலத்து மெய்ந்நிலைப் பொதுச்சொல் கிளத்தல்வேண்டும்.' (பெயரியல், 19:) 'நிகழூஉ நின்ற பால் வரைகிளவி' (வினையியல். 30:) பல் லோர் படர்க்கை முன்னிலைதன்மை அவ்வயின் மூன்றும் நிகழுங் காலத்துச் செய்யும் என்னுங் கிளவியொடு கொள்ளா.' என்ப வற்றை நோக்குக. ஒப்பானை - ஒப்புதலுடையவனை. 'பராவு சிவர்' (3; 67. 6, சித்தியார். 287) என்ற உண்மையைநோக்குக. ஓதம் - கடலின் அலை, குளிர்ச்சி. மெய்ப்பான் - மெய்யாதலை யுடையவன். அவனே மெய்ப்பொருள். மேவிய - விரும்பி வழி பட்ட, மாந்தர் - மனிதரிற் சிறந்தவர். வியந்தார் - பிறரால் பேசப்படும் புகழ்க்குரியவர். பிறரை ஏவியாட்கொள்ளும் மேன்மையர் எனலும் பொருந்தும். மெய்ப்பானை வியந்தா ரெனலும் ஆம்.

7. துன்பானை - துன்ப வடிவாயிருப்பவனை. அருள் ஆக்கிய இன்பானை - சிவஞானந்தந்த பேரின்ப வடிவினனை, 'இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே', 'பந்தமுமாய் வீடும் ஆயினர்', 'அருள் நிதிதர வரும் ஆநந்தமலையே' என்ற திருவாசகக் கருத்து இங்குக்கொள்ளற்பாலது. 'இன்பமும் நீயே துன்பமும் நீயே' (பெருந்தேவபாணி. 59). ஏழிசையின் நிலை பேணுவார் - ஏழிசையின் நிலையை விரும்புவார். 'ஏழிசையாய்

குன்றானைக் குன்றெடுத் தான்புய நாலைந்தும்
வென்றானை மென்மல ரானொடு மாறேட
நின்றானை நேரிழை யாளொடுங் காழியுள்
நன்றானை நம்பெரு மானை நணுகுமே. 8

சாவாயும் வாதுசெய் சாவகர் சாக்கியர்
மேவாத சொல்லவை கேட்டு வெகுளேன்மின்
பூவாய கொன்றையி னானைப் புனற்காழிக்
கோவாய கொள்கையி னானடி கூறுமே. 9

• • • • 10

---

இசைப்பயனாய்' 'இன்னிசை வீணையில் இசைந்தோன்' 'ஏழிசை யோன் கொச்சையை மெச்சினை' 'எழுவகை யோசையும்...... ஆகிய பரமனை' 'ஏழிலின்னரம் பிசைத்தனை'.

---

அன்பான் - அன்பு வடிவானவன் 'அன்பேசிவம் ஆவது.' அணி - அழகு. நம்பான் - உயிர்களால் விரும்பப்படுபவன். 'நம்பும் மேவும் நசையாகும்மே' (தொல்காப்பியம்). நண்ண - விரும்ப, அடைய, செறிய. நாசம் - அழிவு.

8. குன்றான் - கயிலை முதலிய குன்றுகளையுடையவன். குன்றெடுத்தான் - கயிலையைத்தூக்கிய இராவணன். வென்றான் - நொறுக்கியவன். மலரான் - பிரமன். மால் - விண்டு. நேர் இழையாள் - திருநிலைநாயகி. இழை - ஆபரணம். நன்றான் - பெரியவன், நல்லதுடையான், சிவன். 'குறைவிலா மங்கல குணத்தன்.' 'நணுகும்' முன்னிலை ஏவல் வினை.

9. சாவாயும் வாதுசெய்தல் - தம்கட்சி அழிந்தபோதும் வாதம்புரிதல். சாவு ஆயும் எனலுமாம். மேவாத - செல்லாத. வெகுளேன்மின் - கோபிக்காதீர்கள், (ஏவல்வினை) பகைவனை வெறுத்தல் வேண்டா என்றேனும், பகைவர் தீயுரைகேட்டுச் சைவத்தை வெறுத்தல் வேண்டா என்றேனும் கருத்துக் கொள்ளலாம். அடிகூறும் - திருவடியே துதிசெய்யுங்கள். கோஆய கொள்கையினன் - பரத்துவக்கடவுளாகிய கொள்கைக் குரியவன்; பரமசிவன்.

கழியார்சி ரோதமல் குங்கடற் காழியுள்
ஒழியாது கோயில்கொண் டானை யுகந்துள்கித்
தழியார்சொன் ஞானசம் பந்தன் றமிழார
மொழிவார்கண் மூவுல கும்பெறு வார்களே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. கழி - கழிகள், ஆர் - பொருந்திய. சீர் ஓதம் - மிக்க கடல்நீர். உகந்து - விரும்பி. உள்கி - நினைந்து, தழி - தழுவி. ஆர் - பொருந்திய. ஆர - நிறைய. மொழிவார் - பாடுவார். கள் விகுதி பிற்கால வழக்கில் வழங்குவது. மூவுலகும் - மண், விண், பாதலம் மூன்றும். தழியார் - தழுவிய சிவஞானியர். சொல் - புகழ்ந்து போற்றுகின்ற எனலும் பொருந்தும்.

---

இரவும் பகலும்நின் பாதத் தலர்என்
வழிமுழுதும்
பரவும் பரிசே அருளுகண் டாய்இந்தப்
பாரகத்தே
விரவும் பரமத கோளரி யேகுட
வெள்வளைகள்
தரளஞ் சொரியுங் கடல்புடை சூழ்ந்த
தராய்மன்னனே. அந்தாதி 4

மன்னிய மோகச் சுவையொளி யூறோசை
நாற்றம்என்றிப்
பன்னிய ஐந்தின் பதங்கடந் தோர்க்குந்
தொடர்வரிய
பொன்னியல் பாடகக் கிங்கிணிப் பாத
நிழல்புகுவோர்
துன்னிய காவமர் சண்பையர் நாதற்குத்
தொண்டர்களே. அந்தாதி

# 12 திருக்கச்சியேகம்பம்

## 148 பதிகவரலாறு

வேதமோடு சைவநீதி விளங்கவந்த கவுணியனுர் காஞ்சியை அணைந்து. மதிற்புறத்தே சென்று சேர்ந்து வணங்கினுர். அளவற்ற தொண்டர்கள் அஞ்சலித்து வாழ்த் தியலி வானளாவப் பெருகிற்று. பூமாரியும், பொற்சுண் ணமும் புயல்போல் பொழிந்தன. காமக்கண்ணி தழுவக் குழைந்த கச்சியேகம்பரை, உருகிய அன்பு உள்ளலைப்பப் பருகிய மெய்யுணர்வினேடும் பாடியருளிய பதிகம் இது.

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

மறையானை மாசிலாப்புன் சடைமல்குவெண்
பிறையானைப் பெண்ணெடாணு கியபெம்மானை
இறையானை யேர்கொள்கச்சித் திருவேகம்பத்
துறைவானை யல்லதுள்கா தெனதுள்ளமே. 1

நொச்சியே வன்னிகொன்றை மதிகூவிளம்
உச்சியே புனைதல்வேடம் விடையூர்தியான்
கச்சியே கம்பமேய கறைக்கண்டனை
நச்சியே தொழுமினும்மேல் வினைநையுமே. 2

---

1. மறையான் - வேதசொரூபன், வேதங்களை அருளியவன் எனலுமாம். மாசு - குற்றம். புன்சடை - மென்மையையுடைய சடை. புன்மை, பொன்மையுமாம். பிறையான் - பிறையை அணிந்தவன். பெண்ணும் ஆணும் ஆகிய பெருமான். இறை யான் - எப்பொருளினும் உறைவான். ஏர் - எழுச்சி. அழகும் ஆம். கச்சி - சிவதலம், காஞ்சிபுரம். திருவேகம்பம் - அங்குள்ள பெரிய சிவாலயம். திருவேகம்பத்து உறைவான் - திருவேகம்பம் எனப் பெயரிய திருக்கோயிலுள் வாழ்பவன். உள்காது - எண்ணுது. ஏகம்பம் - ஏகாம்ரம், ஏகாம்பரம். ஏகம் - ஒன்று. ஆம்ரம் - மாமரம்.

2. நொச்சியிலை, வன்னிபத்திரம், கொன்றைப்பூ, பிறை, கூவிளம் (- வில்வம்) ஆகியவற்றைச் சிவபெருமான் முடியிற்

பாராரு முழவமொந்தை குழலியாழொலி
சீராலே பாடலாடல் சிதைவில்லதோர்
ஏரார்பூங் கச்சியேகம் பனையெம்மானைச்
சேராதா ரின்பமாயந் நெறிசேராரே. 3

குன்றேய்க்கு நெடுவெண்மாடக் கொடிகூடிப்போய்
மின்றேய்க்கு முகில்கள்தோயும் வியன்கச்சியுள்
மன்றேய்க்கு மல்குசீரான் மலியேகம்பம்
சென்றேய்க்குஞ் சிந்தையார்மேல் வினைசேராவே. 4

சடையானைத் தலைகையேந்திப் பலிதருவார்தம்
கடையேபோய் மூன்றுங்கொண்டான் கலிக்கச்சியுள்
புடையேபொன் மலருங்கம்பைக் கரையேகம்பம்
உடையானை யல்லதுள்கா தெனதுள்ளமே. 5

---

புனைவது அவனது திருவேடமாகும். ஊர்தி - வாகனம். எருது வாகனத்தன். கறை -(நஞ்சுண்டதன் காரணமாகப்பொருந்திய அதன்) கறுப்பு. கண்டன் - திருக்கழுத்தினன். நச்சி - விரும்பி, பக்திகொண்டு. தொழுமின் - வழிபடுங்கள். நும்வினை - உங்கள் கர்மம். மேல்வினை - ஆகாமியம். நையும் - அழியும்.

3. பார் - நிலம். ஆரும் - நிறைந்து முழங்கும். முழவம், மொந்தை, குழல், யாழ் என்னும் இசைக்கருவிகளின் ஒலியும், சீரும், பாடலும், ஆடலும் கச்சியுள் அக்காலத்தில் மிக்கிருந்த உண்மை புலனாகும். சிதைவு - கேடு. ஏர் - எழுச்சி, அழகு. சேராதார் - இடைவிடாது நினையாதவர். இன்பமாய நெறி - பேரின்பத்தை எய்துவதற்குரிய நன்னெறியை (சன்மார்க்கத்தை). நகரமெய் விரித்தல். சேரார் - அடையார்.

4. குன்று ஏய்க்கும் நெடுவெண்மாடம்:- நெடிய (உயரிய) சுதையால் தீற்றப்பட்ட மாடங்கள் மலைகளைப்போல் விளங்குகின்றன. கொடி கூடிப்போய் மின்தேய்க்கும் முகில்கள்தோயும் - அம்மாடங்களின்மேல் கட்டிப் பறக்கவிட்ட துணிக்கொடிகள் எல்லாம் ஒருங்குசேர்ந்து சென்று மின்னல்கள் ஒன்றோடொன்று உராயும் மேகமண்டலத்தை அளாவிப்படியும். மன்று - பிருதிவியம்பலத்தை. மிகுதியாப் பரவித் தேய்க்கும் சீரால் எனலுமாம். மல்குசீரான் - மிக்க சிறப்புடைய சிவபிரான். ஏய்க்கும் - பொருந்தச்செய்யும்.

5. தலைகை ஏந்தி - தலையை (ப்பிரமகபாலத்தை)க் கையில் தாங்கி, தருவார்:- தாருகாவனத்துப் பெண்டிர். கடை - வாயிற்

மழுவாளோ டெழில்கொள்சூலப் படைவல்லார்தங்
கெழுவாளோ ரிமையருச்சி யுமையாள்கங்கை
வழுவாமே மல்குசீரால் வளரேகம்பம்
தொழுவாரே விழுமியார்மேல் வினைதுன்னுவே. 6

விண்ணுளார் மறைகள்வேதம் விரித்தோதுவார்
கண்ணுளார் கழலின்வெல்வார் கரிகாலனை
நண்ணுவா ரெழில்கொள்கச்சி நகரேகம்பத்
தண்ணலா ராடுகின்ற வலங்காரமே. 7

---

கடை. மூன்றும் - உடல் பொருள் ஆவி எல்லாம். உயிர், நாண், கற்பு என்றலுமாம். புடை - நகரின் பக்கங்களில். பொன் மலரும் - பொன் (பொற் கொன்றைகள்) பூக்கும். பொன் விளையும் எனல் பொருந்தாது. கம்பை - கம்பாநதி. உடையான் - சுவாமி. உள்காது - நினையாது.

6. மழு, வாள், சூலம் என்னும் படைகள் ஏந்தவல்லவர். வாள் - கட்கம், எழில் - அழகு. வல்லார்தம் ஏகம்பம், கெழுவாள் உமையாள், வாளோர் இமையர் (- இமயமலையர்). வாளோர் - ஒளியுடையவர். உச்சி, பொது. உமையாளும் கங்கையும் மல்குசீர். வழுவாமே - தவறாமல். தொழுவாரே - வணங்கு பவரே. விழுமியார் - சிறந்தவர். துன்னு - நெருங்கா.

7. விண்ணிலும் வேதங்களை விரித்துப் பொருள்கூறும் அறிஞர் கண்ணிலும் இருப்பவர். கரி(ந்த) காலன் - யமதர்மன். கழல் - திருவடிக்கு ஆகுபெயர். யமனைக் காலால் உதைத்து வென்றவர், வெல்வார். நண்ணுவார் - அடைவார், விரும்புவார். எழில் கொள்ளல் - வண்ணம்பெறல். நண்ணுவாரெழில் கொள்ளல் - இறைவன் தன்னைச் சேர்ந்தவர் வண்ணத்தைத் தான் கொள்ளுதல். 'பொன்னிறம் கட்டியினும் பூணினும் நின்றாற்போல் அந்நிறம் அண்ணலும் அம்பிகையும்' - (திருக் களிறு. 79) என்றும் 'ஈருகி...முதலொன்ருய்...எண்வகையாய் ...வேருய்...உருவுடைமை...இருக்கின்ருன்' (ஷ 86) என்றும்) உள்ள சிவாகம வசனத்தை நோக்குக. 'தந்தது உன்றன்னைக் கொண்டது என்றன்னை' என்றதும் உணர்க. நண்ணுவார் எழில் கொள்ள நகர் கொடுக்கும் என்ற கருத்தும் பொருந்தும். எழில் - சிவப்பொலிவு.

தூயானைத் தூயவாயம் மறையோதிய
வாயானை வாளரக்கன் வலிவாட்டிய
தீயானைத் தீதில்கச்சித் திருவேகம்பம்
மேயானை மேவுவாரென் றலைமேலாரே. 8

நாகம்பூ ணேறதேறல் நறுங்கொன்றைதார்
பாகம்பெண் பலியுமேற்பர் மறைபாடுவர்
ஏகம்ப மேவியாடு மிறையிருவர்க்கு
மாகம்ப மறியும்வண்ணத் தவனல்லனே. 9

போதியார் பிண்டியாரென் றிவர்பொய்ந்நூலை
வாதியா வம்மினம்மா வெனுங்கச்சியுள்
ஆதியார் மேவியாடுந் திருவேகம்பம்
நீதியாற் றொழுமினும் மேல்வினை நில்லாவே. 10

---

8. தூயவனும், தூயனவாகிய மறைகளை ஓதியருளிய வாயவனும், வாளேந்திய அரக்கனாகிய இராவணனது வலியை வாடச்செய்த தீயவனும், தீயது இல்லாத திருக்கச்சியேகம் பத்தில் மேவியவனும் ஆகிய சிவபெருமானை விரும்பித்தொழு வார் என் தலைமேல் இருப்பவர். இத்திருப்பாட்டின் ஈற்றடிப் பொருளால், திருஞானசம்பந்தர்க்குச் சிவனடியாரிடத்திலுள்ள பத்திச் சிறப்பு விளங்குகின்றது.

9. பூண்நாகம், ஏறல்ஏறது, தார் நறுங்கொன்றை, பாகம் பெண் என்று இயைத்து, சர்ப்பாபரணம், இடபவாகனம், கொன்றைமாலை, மாதியலும் பாதியைக் கொண்டுரைக்க. பலியும் ஏற்பர் - பிச்சையும் கொள்வர். உம்மை பலியின் இழிவை மிகுத்து நின்றது. மறை - வேதம். ஏகம்பம் மேவி ஆடும் இறை - திருவேகம்பத்தில் (பிருதிவியம்பலத்தில்) எழுந் தருளிய கடவுள். ஆட்டம்: - காமாட்சியம்மையாரைத் தன்பால் ஒடுக்கிய இடமாதலின், வகாரத்தைத் தன்பால் அடக்கிய சிகாரத்தின் நிலையாகிய சிவாநந்த தாண்டவம். இருவர் - பிரம விட்டுணு. மாகம்பம் - அறியும் வண்ணத்தவன் அல்லன்.

10. போதியார் - போதிமரத்தின் கீழமர்ந்த புத்தனை வணங்குவோர். பிண்டியார் - பிண்டி (அசோக) மரத்தின் கீழமர்ந்த அருகனை வணங்குவோர். பொய்ந்நூல் - மெய்ப்

அந்தண்பூங் கச்சியேகம் பணையம்மானைக்
கந்தண்பூங் காழியூரன் கலிக்கோவையால்
சந்தமே பாடவல்ல தமிழ்ஞானசம்
பந்தன்சொற் பாடியாடக் கெடும்பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

பொருளை அறிந்தெழுதப்படாத புத்தகம். வாதியா - வாதிக்காமல். வம்மின் - வாருங்கள். அம் - அழகிய. மா - மாமரம். ஏகாம்பரம். மா எனும் கச்சி:- திருவேகம்பம் எனப்படும் கச்சி. ஆதியார் - முதல்வர். நீதியால் - சிவாகம முறைப்படி. தொழுமின் - வழிபடுங்கள். நும்மேல் - உங்கள்பால். வினை நில்லா - கர்மம்பற்று.

11. அம்தண்பூ - அழகும் குளிர்ச்சியும் பொலிவும் பொருந்திய. கந்தண்பூங்காழியூர் - நீரும் குளிர்ச்சியும் அழகும் உடைய சீகாழிப்பதி. கலிக்கோவை - ஒலிமாலை. 'பூத முதல்வன் முதலே முதலாகப் பொலிந்த சூதன் ஒலிமாலை என்றே கலிக்கோவை சொல்லே' (3. 54. 8) என்று திருப்பாசுரத்தில் அருளியது அறிக. சந்தம் - இசைப்பாடல். சொல் - சொல்மாலை. பாடி ஆடப் பாவம்கெடும். காழியூரனாகிய தமிழ் ஞானசம்பந்தன்; கலிக்கோவையால் சந்தமே பாடவல்ல ஞான சம்பந்தன்; 'ஒண்கலியைப் பொன்றும் கவுணியன்' அருளிய கோவை ஆதலின், கலியைத் தீர்க்கும் கோவை எனலும் ஆம். கலியுகத்துக்கோவை, கலிவிருத்தக்கோவை எனல் பொருந்து மேற்கொள்க.

---

தொண்டினஞ் சூழச் சுரிகுழ லார்தம்
மனந்தொடர
வண்டினஞ் சூழ வரும்இவன் போலும்
மயில்உகுத்த
கண்டினஞ் சூழ்ந்த வளைபிரம் போர்கழு
வாவுடலம்
விண்டினஞ் சூழக் கழுவின வாக்கிய
வித்தகனே. —அந்தாதி 6

## 13 திருக்கோழம்பம்

### 149 பதிகவரலாறு

ஆளுடையபிள்ளையார், 'திருவாவடுதுறையமர்ந்தாரைப் பணிந்து உறைந்து போந்து திருக்கோழம்பம் சேர்ந்தார். அங்குக் 'கொன்றைவார் சடைமுடியரை இறைஞ்சி என்றும் நீடிய இன்னிசைப் பதிகம்' ஆகிய இதனைப் பாடினார்.

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

நீற்றானை நீள்சடைமே னிறைவுள்ளதோர்
ஆற்றானை யழகமர்மென் முலையாளையோர்
கூற்றானைக் குளிர்பொழிற் கோழம்பமேவிய
ஏற்றானை யேத்துமினும் மிடரேகவே. 1

மையான கண்டனை மான் மறியேந்திய
கையானைக் கடிபொழிற் கோழம்பமேவிய
செய்யானைத் தேனெய்பாலுந் திகழ்ந்தாடிய
மெய்யானை மேவுவார்மேல் வினைமேவாவே. 2

---

1. நீற்றானை - திருநீற்றை அணிந்தவனை. நிறைவு - பூரணம். ஆற்றானை - கங்கையாற்றை அணிந்தவனை. மென் முலையாள்-உமாதேவியார். ஓர் கூற்றானை ஒரு (வாம) பாகத்தை யுடையவனை. பொழில் - சோலை. ஏற்றான் - எருது வாகனத்தன். இடர் ஏக ஏத்துமின் - துன்பம் தொலையத் தொழுங்கள்.

2. மை - கருமை, மேகமும் ஆம். ஆன - ஆகிய, ஒத்த. கண்டனை - திருக்கழுத்துடையவனை. மறி - கன்று. கடி-மணம். பொழில் - சோலை. செய்யான் - செந்நிறமுடையவன், செம்மை யுடையவன், (பதிகம். 195. பா. 5. 225-11) 'திருநின்ற செம்மை' 'செம்மையுள் நின்றவன்' (சுந்தரர்) 'செம்பொருள்.' தேன், நெய், பால் என்பன அபிடேகப் பொருள்களுள் அடங் கியவை, திகழ்ந்து - விளங்கி. ஆடிய - அபிடேகிக்கப்பெற்ற. மெய் - திருமேனி, சத்தியமுமாம். மேவுவார் - இடைவிடாது தியானிப்பவர். மேவா - அடையமாட்டா.

ஏதனை யேதமிலா விமையோர்தொழும்
வேதனை வெண்குழை தோடுவிளங்கிய
காதனைக் கடிபொழிற்கோ ழம்பமேவிய
நாதனை யேத்துமினும் வினைநையவே. 3

சடையானைத் தண்மலரான் சிரமேந்திய
விடையானை வேதமும்வேள் வியுமாயநன்
குடையானைக் குளிர்பொழில்சூழ் திருக்கோழம்பம்
உடையானை யுள்குமின்உள் ளங்குளிரவே. 4

காரானைக் கடிகமழ்கொன் றையம்போதணி
தாரானைத் தையலொர்பான் மகிழ்ந்தோங்கிய
சீரானைச் செறிபொழிற்கோ ழம்பமேவிய
ஊரானை யேத்துமினும் மிடரொல்கவே. 5

---

3. ஏதன் - குற்றமுடையவன். 'குற்றம்நீ குணங்கள்நீ கூடலாலவாயிலாய், (3. 52. 3) என்று இவ்வாசிரியர் திருவாக்கே யிருத்தல் அறிக. ஏதம் - குற்றம். காரணனுமாம். இமையோர் என்பதற்குத் தேவர் என்று பொருள்கூறுவர். இது சைவநூல் கட்கு ஒவ்வாது. இமைத்தலில்லாதவர் - இமையோர் என்னும் சாமான்யம்பற்றி இவ்வாறு கூறுவர். 'இமையவர்க்கு அன்பன் திருப்பாதிரிப்புலியூர்த் தோன்றாத் துணையாயிருந்தனன்' என் பதில் தேவர்க்கு அன்பன் எனல்பொருந்துமோ? கண்ணிமைத்துக் காணாத யோகியர், விழித்தகண் குருடாத் திரிவீரர் என்பதே உண்மைப்பொருள். வேதன் - மறைகளை அருளியவன். வெண் குழைதோடு - சங்கத்தோடுங் குழையும். நைய - வருந்த (நீங்க).

4. தண்மலரான்சிரம் - பிரமகபாலம், 'வேத வேள்வியை' (நிந்தனை செய்துழல் ஆதமில்லி) (3. 108.1.) என்றதறிக. (பா. 7,) நன்கு - நன்மை. உடையான் - உடையவன், சுவாமியும் ஆம். உள்குமின் - தியானம் புரியுங்கள்.

5. காரான் - மேகமாயிருப்பவன். 'கனத்தகத்தான் கயிலா யத்துச்சியுள்ளான்' போது - பூ. தார் - (மாலை, கண்ணி) தார். தையல் - பாலாம்பிகை. சீரான் - கனவான். ஒல்க - சுருங்க. கோழம்பம் மேவிய ஊர் என்றதால் திருக்கோயிலின் திருநாமம் கோழம்பம் என்க. 'கோழம்பங் கோயிலாக் கொண்டான்' என மேல்வருதலும் காண்க.

பண்டாலின் னீழலானைப் பரஞ்சோதியை
விண்டார்கள் தம்புரமூன் றுடனேவேவக்
கண்டானைக் கடிகமழ்கோ ழம்பங்கோயிலாக்
கொண்டானைக் கூறுமினுள் ளங்குளிரவே. 6

சொல்லானைச் சுடுகணையாற் புரமூன்றெய்த
வில்லானை வேதமும்வேள் வியுமானானைக்
கொல்லானை யுரியானைக்கோ ழம்பமேவிய
நல்லானை யேத்துமினும் மிடர்நையவே. 7

விற்றானை வல்லரக்கர் விறல்வேந்தனைக்
குற்றானைத் திருவிரலாற் கொடுங்காலனைச்
செற்றானைச் சீர்திகழுந் திருக்கோழம்பம்
பற்றானைப் பற்றுவார்மேல் வினைபற்றாவே. 8

---

6. ஆல் - கல்லாலமரம். பரஞ்சோதி - மெய்யொளி. விண்டார்கள் - பகைவராகிய திரிபுரத்தசுரர்கள். புரம் மூன்று - முப்புரம். கண்டான் - கண்டவன். வினையாலணையும் பெயர். கூறுமின் - புகழுங்கள். கடவுள் புகழை வாயாற் கூறுதல் உள்ளக் குளிர்ச்சிக்குக் காரணம் என்றவாறு.

7. சொல்லான்-சொல்வடிவாகிய அம்பிகையையுடையவன். சொல்லாயிருப்பவன் எனலும் பொருந்தும். கணை - திருமாலாகிய அம்பு, வில் - மேருவில். வேதவேள்வி, (பா. 4.) கொல்லானை - கொல்லும் யானை வினைத்தொகை. (உரி - தோல்) உரியான் - தோலைப் போர்த்துக்கொண்டவன். நல்லான் - சிவன், மங்கல வடிவன்.

8. வில்தானை - விற்படை. வல் அரக்கர் - வலிய இராக்கதர். அசுரர் காரணம்பற்றி வருத்துபவர். இராக்கதர் ஒரு காரணமும்பற்றாது வருத்துபவர். அரக்கர் வேந்தன்-இராவணன். குற்றான் - சிறுமைப்படுத்தியவன், குற்றியவன். விரலாற் குற்றான் என்று கொள்க. காலனைச்செற்றான் - காலசங்காரக் கடவுள். பற்றான் - பற்றுதலுடையவன். பற்றுவார் - அடியர். பற்று - தொடரா.

நெடியானோ டயனறி யாவகை நின்றதோர்
படியானைப் பண்டங்க வேடம் பயின்றானைக்
கடியாருங் கோழம்ப மேவிய வெள்ளேற்றின்
கொடியானைக் கூறுமின் உள்ளங் குளிரவே. 9

புத்தருந் தோகையம் பீலிகொள் பொய்ம்மொழிப்
பித்தரும் பேசுவ பேச்சல்ல பீடுடைக்
கொத்தலர் தண்பொழிற் கோழம்ப மேவிய
அத்தனை யேத்துமின் அல்லல் அறுக்கவே. 10

தண்புன லோங்குதண் ணந்தராய் மாநகர்
நண்புடை ஞானசம் பந்தனம் பானுறை
விண்பொழிற் கோழம்ப மேவிய பத்திவை
பண்கொளப் பாடவல் லார்க்கில்லை பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

*9.* நெடியான் - விக்கிரமன், திருமால். அயன் - அஜன், பிரமன். படியான் - உருவத்தையுடையவன் (படியனூர். *2. 79. 10*) பண்டங்கவேடம் - பாண்டரங்கம் என்னும் கூத்துக்காகக் கொண்ட திருவேடம். வெள்ளேற்றின் கொடி - இடபத்துவசம். எருதின்கொடி.

*10.* தோகையம்பீலி - மயிற்பீலியாலாகிய வார்கோல். பொய்மொழிப்பித்தர் - மெய்யுரையாத மயக்கவுணர்வினராய சமணர். பீடு - பெருமை. அத்தன் - பிதா. அல்லல் - பிறவிப் பிணி முதலிய துன்பங்கள். அறுக்க - அறச்செய்ய.

*11.* தராய் - சீகாழியின் பெயர். நம்பான் - சிவபிரான். விண்பொழில் - வானை அளாவிய சோலை. பத்தும் இவை - இப் பதிகத்தை. பண்கொளப் பாடவல்லார் - பண்ணிசையுடன் பாடும் வன்மையுடையவர்.

---

# 14 திருவெண்ணியூர்

## 150 பதிகவரலாறு

பாலருவாயர் வேதிகுடியினில் தமிழ்வேதத்தின் ஓங்கிசையை ஓதி, முதல்வரைப் போற்றித் தொழுதுவந்து, திருவெண்ணிப்பதியினிற் கோயிலை நண்ணிக்காதலின் வணங்கி, 'சடையானை' எனும் இப்பதிகத்தைப் பாடினர்.

### பண் - இந்தளம்

### திருச்சிற்றம்பலம்

சடையானைச் சந்திர னோடுசெங் கண்ணரா
உடையானை யுடைதலை யிற்பலி கொண்டுரும்
விடையானை விண்ணவர் தாந்தொழும் வெண்ணியை
உடையானை யல்லதுள் காதென துள்ளமே. 1

சோதியைச் சுண்ணவெண் ணீறணிந் திட்டவெம்
ஆதியை யாதியு மந்தமு மில்லாத
வேதியை வேதியர் தாந்தொழும் வெண்ணியி
னீதியை நினையவல் லார்வினை நில்லாவே. 2

---

1. சடையானை என்றதன் பின் கூறியதால், சந்திரனையும் சிவந்த கண்களையுடைய பாம்பையும் அச்சடைமேல் உடையான் என்க. அரா - பாம்பு. உடைதலை - உடைந்ததலை, பிரமகபாலம். ஊரும்விடை - ஏறிச் செலுத்தப்படும் எருது. விண்ணவர் - தேவர். வெண்ணி:- வென்றி என்பதன் மரூஉ. நன்றி - நண்ணி. பன்றி - பண்ணி, மன்று - மண்ணு, கன்று - கண்ணு என்பன வற்றிலுள்ள னகரமும் றகரமும் உற்ற திரிபைநோக்குக. உள்காது - நினையாது.

2. சுண்ணம் - பொடி. ஆதியும் அந்தமும் இல்லாத வேதியை - முதலும் முடிவுமில்லாத மறையோனை, வேதத்தை அருளியதால் வேதியானான். நீதியை - தரும சொரூபியை. நினைதல் எளிதன்று. அரிதாகப் பெறத்தக்கது ஆதலின் 'வல்லார்' என்றார்.

கனிதனைக் கனிந்தவ ரைக்கலந் தாட்கொள்ளும்
முனிதனை மூவுல குக்கொரு மூர்த்தியை
நனிதனை நல்லவர் தாந்தொழும் வெண்ணியில்
இனிதனை யேத்துவ ரேதமி லாதாரே. 3

முத்தானை மூவுல குக்கொரு மூர்த்தியாய்க்
காத்தானைக் கனிந்தவ ரைக்கலந் தாளாக
ஆர்த்தானை யழகமர் வெண்ணியம் மான்றன்னை
ஏத்தாதா ரென்செய்வா ரேழையப் பேய்களே. 4

நீரானை நிறைபுனல் சூழ்தரு நீள்கொன்றைத்
தாரானைத் தையலொர் பாகமு டையானைச்
சீரானைத் திகழ்தரு வெண்ணி யமர்ந்துறை
ஊரானை யுள்கவல் லார்வினை யோயுமே. 5

---

3. கனிதனை - பழத்தை. கனிந்தவர் - மனங் கனிந்துருகி வழிபடுபவர். முனிதனை - மனனசீலனை. நனிதனை - மேம்பட்டவனை. நனி - மிகுதி, உரிச்சொல்லடியாக நின்ற பெயர். நல்லவர் - சரியை, கிரியை, யோகங்களில் முதிர்ந்த ஞானிகள், சைவநலமுடையவரெனப் பொதுப் பெயருமாம். இனிதனை - (இனிது+அன்+ஐ) இன்புருவானவனை. ஏதம் - இருவினைக் குற்றம்.

4. மூத்தான் - முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளாயிருப்பவன். மூவுலகுக்கு ஒரு மூர்த்தி: - சிவ பரத்துவம் கூறியவாறு, முற்பாட்டினிலும் காண்க. காத்தான் - மூவுலகையும் காத்தவன், காக்கின்றவன், காப்பவன். கனிந்த வரைக்கலந்தாட் கொள்ளல் மேலும் கூறப்பட்டது. அழகமர் வெண்ணி என்றதால் தலச்சிறப்பு விளங்கும். அம்மான் - அரிய மகன். மகன் - கடவுள். மகள் - திருமகள், நாமகள். ஏத்தாதார் - துதித்து வணங்காதார். ஏத்துதல் - தோத்திரத்தால் வழிபடல். சிவபிரானை ஏத்தாதவர் மக்கட் பிறப்பினராயினும் பேய்போன்றவரேயாவர். 'மனத்துன்னை நினைப்பின்றிப் பேயாய்த் திரிந்தெய்த்தேன்' என்னும் அருள்மொழிப் பகுதியைக் காண்க, திருவள்ளுவரும் 'வையத்தலகை' என்றார்.

5. நிறைபுனல் - கங்கைநீர். தலையிற் கங்கையைச் சூழக் கொன்றைமாலை யணிந்தான். திருவெண்ணியூர் அமர்ந்து

முத்தினை முழுவயி ரத்திரள் மாணிக்கத்
தொத்தினைத் துளக்க மிலாத விளக்காய
வித்தினை விண்ணவர் தாந்தொழும் வெண்ணியில்
அத்தனை யடையவல் லார்க்கில்லை யல்லலே. 6

காய்ந்தானைக் காமனை யுஞ்செறு காலனைப்
பாய்ந்தானைப் பரியகை மாவுரித் தோன்மெய்யில்
மேய்ந்தானை விண்ணவர் தாந்தொழும் வெண்ணியில்
நீந்தானை நினையவல் லார்வினை நில்லாவே 7

---

உறைவான் என்று இயைத்துக்கொள்க. தோத்திரம் புறப் பூசையினும் சிறந்தது. அகத்தில் செய்யும் தியானம் அவ்விரண்டினும் பெரும்பயன் அளிப்பது. திரிகரணங்களாலும் ஆகும் வினைகளை அத்திரிகரணங்களாலும் தீர்க்கும் வழிகள் தியானம், தோத்திரம், நமஸ்காரம், பூசை முதலியவை. அவற்றுள் தியானமே உத்தமம் ஆதலின், உள்கவல்லார்வினை ஓயும் என்று அருளினர்.

6. முத்து, முழுவயிரத்திரள், மாணிக்கத் தொத்து, முதலியவை, ஒப்பில்லாத கடவுளுக்கு அன்பின் மேலீட்டால், ஒப்புறுத்திச் சொல்லும் உபசார வழக்கு. 'பொருள்சேர் புகழ்' என்ற வள்ளுவர் கருத்தும் ஈண்டு நினைக்கத்தக்கது. தொத்து - கொத்து. துளக்கம் - அசைவு. இங்கு அணைதலைக் குறித்தது. அணையா விளக்கு என்க. நமக்கு அல்லல் இல்லையாம்படி சிவனை அடையும் வன்மையைப்பெறத் தவஞ்செய்தல் வேண்டும்.

7. காமன் - பெண்ணாசையை வளர்ப்பவன், மன்மதன், காமத்திற்கு அதிதேவதை. காலன் - இயமன். காய்ந்தான் - கோபித்து எரித்தான். பாய்ந்தான் - பாய்ந்து உதைத்தான். பரிய - பருமையுடைய, பருத்த. கை - துதிக்கை. மா - யானை. உரி - உரித்ததோல். உரித்தோல் - உரியாகிய தோல். உரி:- முதனிலைத் தொழிற்பெயர். அஃது ஆகுபெயராய்த் தோலை உணர்த்துமிடமும் உண்டு. இங்குத் 'தோல்' என்று அடுத்திருப்பதால் தொழிற்பெயராய் மட்டும் கொள்ளப்பட்டது. மெய் - திருமேனி. மேய்ந்தான் - வேய்ந்தான், அணிந்தான். நீந்தான் - கடவுள்.

மறுத்தானை மாமலை யைமதி யாதோடிச்
செறுத்தானைத் தேசழி யத்திகழ் தோண்முடி
இறுத்தானை யெழிலமர் வெண்ணியெம் மானெனப்
பொறுத்தானைப் போற்றுவா ராற்ற லுடையாரே. 8

மண்ணினை வானவ ரோடு மனிதர்க்கும்
கண்ணினைக் கண்ணனு நான்முக னுங்காணா
விண்ணினை விண்ணவர் தாந்தொழும் வெண்ணியில்
அண்ணலை யடையவல் லார்க்கில்லை யல்லலே. 9

குண்டருங் குணமிலாத சமண் சாக்கிய
மிண்டர்கண் மிண்டவை கேட்டு வெகுளன்மின்
விண்டவர் தம்புர மெய்தவன் வெண்ணியில்
தொண்டரா யேத்தவல் லார்துயர் தோன்றுவே. 10

---

8. மறுத்தானை - பகைவனை. ஒன்றார் பொருந்தாதார், மறுத்தார் என்பவைபோலப் பகைவரைக் குறித்தற்கு ஆளும் பெயர்களை அறிந்து கொள்ளலாம். 'மறுத்தவர் திரிபுரம் மாய்ந்தழியக் கறுத்தவன்' (1-109-8) செறுத்தான் - கோபித்தவனை. மறுத்தல், செறுத்தல் இரண்டும் இராவணன் தொழில். இறுத்தல் - முரித்தல். இறுத்தவனும் பொறுத்தவனும் சிவபிரான். ஆற்றல் - ஞானபலம் முதலிய யாவும்.

9. மண்ணினை - அஷ்டமூர்த்தத்துள் பிருதிவிரூபமாக இருக்கின்ற சிவனை. 'உலகுக்கெல்லாம் ஒருகண்' 'உயிர்க்கெல்லாம் கண்' என்பதனால், 'வானவர்க்கும் மனிதர்க்கும் கண்ணினை' என்றார். 'பெண்ணவன்காண்...எல்லாம் காணும் கண்ணவன்காண்' (6. 48. 7) 'கலைபயில்வோர் ஞானக்கண் ஆனான்கண்டாய்' (6. 73. 2) விண் - திருச்சிற்றம்பலம். அண்ணல் - முன்னைப்பழம்பொருட்கும் முன்னைப்பழம்பொருள் அல்லல் - பிறவித்துன்பம், இம்மையில் உறும் துயரம் எல்லாம்.

10. குண்டர் - கற்குண்டுபோலக் கட்டமைந்த உடம்பினர், சமணர், சாக்கியர். மிண்டர் - மிடுக்குடையவர். மிண்டவை - அதிக பிரசங்கம். வெகுளேல்மின் - சைவாகமப்பொருள் உண்மைகளைக் கோபித்து அலட்சியம் செய்யாதீர்கள். எதிர்மறைப் பன்மையேவல். 'மின்' பன்மை விகுதி, அதுநீங்கின் ஒருமையாதல் தெரியும். விண்டவர் - பகைவர்,

மருவாரு மல்குகா ழித்திகழ் சம்பந்தன்
திருவாருந் திகழ்தரு வெண்ணி யமர்ந்தானை
உருவாரு மொண்டமிழ் மாலை யிவைவல்லார்
பொருவாகப் புக்கிருப் பார்புவ லோகத்தே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. மருவாரும் - மணம் நிறையும்; பொருந்தாதவரும் காழியைப் பொருந்தி வழிபடு சிறப்புணர்த்தியதுமாம். மல்கு - நிறையும். திரு - நீர்வளம் முதலிய எல்லாச் செல்வங்களும். ஆரும் - நிறைந்துள்ள. திகழ்தரு - விளங்குகின்ற. (பிரசித்தி குறித்தது). அமர்ந்தான் - திருக்கோயில் கொண்டிருக்கின்றவன். உரு ஆரும் - ஞானவடிவம் பூரணமாயிருக்கும். பொரு - (உறழ் பொரு) சிறப்பு. பூலோகத்தினும் மேலானது புவலோகம். அஃது இங்குச் சிவலோகத்தை உணர்த்திற்று.

---

வித்தகம் பேசிநம் வேணுத் தலைவனை
வாள்நிகர்த்து
முத்தகங் காட்டும் முறுவல்நல் லார்தம்
மனம்அணைய
உய்த்தகம் போந்திருந் துள்ளவும் இல்லா
தனவுமுறு
பொத்தகம் போலும் முதுபுலைப் பாணன்
புணர்க்கின்றதே. —அந்தாதி 7

புணர்ந்தநன் மேகச் சிறுநுண் துளியிற்
சிறகொதுக்கி
உணர்ந்தனர் போல இருந்தனை யால்உல
கம்பரசும்
குணந்திகழ் ஞானசம் பந்தன் கொடிமதிற்
கொச்சையின்வாய்
மணந்தவர் போயின ரோசொல்லு வாழி
மடக்குருகே. —அந்தாதி 8

# 15 திருக்காருயில்

## 151 பதிகவரலாறு

திருவைந் தெழுத்தின் மெய்ம்மையை உணர்ந்த பிள்ளையார், திருவாரூர்ப் புற்றிடங்கொண்டாரைப் போற்றிப் பணிந்து வைகுங்காலத்தில், 'வலிவலம் கோளிலி முதலாம்' பதிபலவற்றுள் ஒன்ருன இத்திருக்காருயிலை வணங்கிப் பாடியது இப்பதிகம்.

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

நீரானே நீள்சடை மேலொர் நிரைகொன்றைத்
தாரானே தாமரை மேலயன் ருன்ருேழும்
சீரானே சீர்திக ழுந்திருக் காருயில்
ஊரானே யென்பவ ருனமி லாதாரே. 1

மதியானே வரியர வோடுடன் மத்தஞ்சேர்
விதியானே விதியுடை வேதியர் தாந்தொழும்
நெதியானே நீர்வயல் சூழ்திருக் காருயிற்
பதியானே யென்பவர் பாவமி லாதாரே. 2

---

1. நீள்சடைமேல் நீரான் - நீண்டசடையின்மேல் கங்கை நீரையுடையவன், நிரை - வரிசை. தார் - மாலை. தாமரைமேல் அயன் - செந்தாமரையில் அமர்ந்திருக்கும் பிரமன். அயன் அஜன், தோன்ருதவன் என்பது அடிச்சொற்பொருள். சீரான் - மேன்மையை உடையவன். ஊனம் - பிறவி முதலிய குறைகள்.

2. மதி - பிறைச்சந்திரன். அரவு - பாம்பு. மத்தம் - ஊமத்தம்பூ. விதியான் - ஊழானவன், பாக்கியமானவன், விதிக்குங் கர்த்தா. விதித்தலையுடையவன். விதி உடை வேதியர்-வேதத்தில் விதித்தவை செய்தலும் விலக்கியவை செய்யாமையுமாகிய விதியை உடைய மறையவர். நெதி - நிதி, செல்வம்.

விண்ணனே விண்ணவ ரேத்தி விரும்புஞ்சீர்
மண்ணனே மண்ணிடை வாழு முயிர்க்கெல்லாம்
கண்ணனே கடிபொழில் சூழ்திருக் காருயில்
எண்ணனே யென்பவ ரேதமி லாதாரே. 3

தாயானே தந்தையு மாகிய தன்மைகள்
ஆயானே யாய நல் லன்பர்க் கணியானே
சேயானே சீர்திக ழுந்திருக் காருயில்
மேயானே யென்பவர் மேல்வினை மேவாவே. 4

கலையானே கலைமலி செம்பொற் கயிலாய
மலையானே மலைபவர் மும்மதின் மாய்வித்த
சிலையானே சீர்திக ழுந்திருக் காருயில்
நிலையானே யென்பவர் மேல்வினை நில்லாவே. 5

---

3. விண் - வீட்டுலகம், உயிர்க்கெல்லாம் கண். (பதிகம் 150. பா. 9) எண் - எண்ணம். எண்ணன் - உள்ளத்திலிருப்பவன், எண்ணப்படாதவன், எண்ணுதற்குப் பொருளாயிருப்பவன், அளக்கும் அளவாயுள்ளவன். ஏதம் - குற்றம், கேடு, துன்பம் (எல்லாம்).

4. தாயான் + தந்தை...ஆயான் - 'அம்மையப்பர்'. மெய்யுணர்வும் அன்பும் உடைய இருதிறத்தாரையும் நல்லன்பர் என்பது வழக்கம். கண்ணப்பர் நல்லன்பர்; மெய்கண்டார் மெய்யுணர்வினர்; இருவரும் அன்பிற் சிறிதும் வேறுபடார். சேயான்-செந்நிறத்தன் எனப் பொருள்கூறலாம். ஆயினும் முன் அணியான் என்றதனால் சேய்மை (தூரம்) இடத்தினன் என்பதே பொருந்தும். மேயான் - மேவியவன். மேவா - பொருந்தா.

5. கலையான் - கலைகளாயும் அவற்றின் ஞானமாயும் உள்ளவன். செம்பொற் கயிலாயமலை: - வெண்மைநிறமுடையது. வெண்கயிலை என்றதற்கு முரணன்று. இமயத்தை மேரு என்றும் மேருவை இமயம் என்றும் நூல்களிற் கூறுவதுபோல் கூறப்பட்டது. பனிமலையில் தவளகிரியும் காஞ்சனசிருங்கமும் உண்டு. மலைபவர் - போர்செய்பவர், திரிபுரத்தசுரர். சிலை - மேருவில். நிலை - உறையுள், திருக்கோயில். நிலையானவனுமாம்.

ஆற்றானே யாறணி செஞ்சடை யாடர
வேற்றானே யேழுல கும்மிமை யோர்களும்
போற்றானே பொழிறிக ழுந்திருக் காருயில்
நீற்றானே யென்பவர் மேல்வினை நில்லாவே. 6

சேர்த்தானே தீவினை தேய்ந்தறத் தேவர்கள்
ஏத்தானே யேத்துநன் மாமுனி வர்க்கிடர்
காத்தானே கார்வயல் சூழ்திருக் காருயில்
ஆர்த்தானே யென்பவர் மேல்வினை யாடாவே. 7

கடுத்தானே காலனைக் காலாற் கயிலாயம்
எடுத்தானை யேதமா கம்முனி வர்க்கிடர்
கெடுத்தானே கேழ்கிள ருந்திருக் காருயில்
அடுத்தானே யென்பவர் மேல்வினை யாடாவே. 8

பிறையானே பேணிய பாடலொ டின்னிசை
மறையானே மாலொடு நான்முகன் காணாத
இறையானே யெழிறிக ழுந்திருக் காருயில்
உறைவானே யென்பவர் மேல்வினை யோடுமே. 9

---

6. ஆற்றான் - ஆறுடையவன், வேதாகம வழியினன். ஆடரவு - ஆடும் பாம்பு. ஏற்றான் - தாங்கியவன். போற்று-துதி. பொழில் - சோலை. நீற்றான் - திருநீற்றை யணிந்தவன்.

7. ஏத்தான் - புகழ்களை எடுத்துச் சொல்லுதலைப் பெற்றவன். காத்தான் - தடுத்தவன். கார் - மேகம். வானுக்கும் பயிர்க்கிடம் ஆதலின் கார்வயல் என்றார். விளைபயிர்த் தோற்றம் பற்றியதுமாம். ஆர்த்தான் - நிறைந்தவன், ஊட்டியவன். ஆடா - வெல்லா. "அடராவே" என்பது பின்னோர் பதிப்பின் பாடம். அடரா - தாக்கா.

8. கடுத்தான் - கோபித்(து உதைத்)தான். ஆக+முனிவர் என்புழி மகரம் இசைபற்றி நின்றது. இராவணனுக்கு ஏதம் (- துன்பம்) ஆகுமாறும் முனிவர்களுக்கு இடர்கெடுமாறும் செய்தவன். கேழ் - (ஒளிரும்) நிறம்.

9. இசை மறையான் - சாமவேதத்தவன். இறையான் - இறைவன், எங்கும் தங்கியவன். எழில் - அழகு. உறைவான் - திருக்கோயில் கொண்டவன்.

செடியாரும் புன்சமண் சீவரத் தார்களும்
படியாரும் பாவிகள் பேச்சுப் பயனில்லை
கடியாரும் பூம்பொழில் சூழ்திருக் காருயில்
குடியாருங் கொள்கையி னூர்க்கில்லை குற்றமே. 10

ஏய்ந்தசி ரெழிறிக முந்திருக் காருயில்
ஆய்ந்தசி ரானடி யேத்தி யருள்பெற்ற
பாய்ந்தநீர்க் காழியுண் ஞானசம் பந்தன்சொல்
வாய்ந்தவா றேத்துவார் வானுல காள்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*10.* செடி - தீநாற்றம். சீவரத்தார்கள் - அழுக்குடையதும் பிறர்பால் காணாததும் அவர்க்கே வழக்கத்தால் உரியதுமான துவரூட்டிய உடையினை உடுத்தவர்கள் (சமணர் முதலோர்). படி - நிலம். கடி - மணம். குடியாருங் கொள்கை - தலவாசம் புரியும் விரதம். 'அடியார் குடியாவர்' (6, 17. 6) 'அடியார்கள் குடியாக (2; 43: 5), என்புழிப் படும் பொருளை உணர்க. குற்றம்:- ஆணவம் முதலியன.

*11.* ஏய்ந்த - பொருந்திய. ஆய்ந்தசீர் - வேதாகமங்களுள் ஆராயப்பட்ட (பொருள் சேர்) புகழ். பாய்ந்த நீர்க்காழி:- வெள்ளப்பெருக்கில் அழியாத உண்மை குறித்ததும் வளமுரைத்ததுமாம். 'வந்தவணம் ஏத்துமவர் வானமடைவாரே' என்றது உணர்க.

---

குருந்தலர் முல்லையங் கோவலர் ஏற்றின்
 கொலைமருப்பால்
அருந்திற லாகத் துழுதசெஞ் சேற்றரு
 காசனிதன்
பெருந்திற மாமதிற் சண்பை நகர்அன்ன
 பேரமைத்தோட்
டிருந்திழை யார்வம்…………………
 முரசே. —அந்தாதி 9

# 16 திருமணஞ்சேரி

## 152 பதிகவரலாறு

வேதந்தமிழால் விரித்த வித்தகர், பந்தணைநல்லூரைப் பணிந்து, திருமணஞ்சேரியில் தொண்டரொடும் சென்று தொழுது இசைபாடியபோது 'அயிலாரும் அம்பு' எனத் தொடங்கிப் பாடியருளியது இப்பதிகம்.

### பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

அயிலாரு மம்பத னாற்புர மூன்றெய்து
குயிலாரு மென்மொழி யாளொரு கூறாகி
மயிலாரு மல்கிய சோலை மணஞ்சேரிப்
பயில்வானைப் பற்றிநின் றார்க்கில்லை பாவமே. 1

விதியானை விண்ணவர் தாந்தொழு தேத்திய
நெதியானை நீள்சடை மேனிகழ் வித்தவான்
மதியானை வண்பொழில் சூழ்ந்த மணஞ்சேரிப்
பதியானைப் பாடவல் லார்வினை பாறுமே. 2

---

1. அயில் - கூர்மை. அம்பு - திருமாலாகிய கணை. 'குயில் வாய்மொழியம்மை' என்பது அம்பிகை திருநாமம். பயில்வான் - கோயில்கொண்டு பயில்பவன். பற்றிநிற்றல் - பற்றுவிடுமாறு பற்றி வழிபடல்.

2. விதியானை - வேதாகமவிதியானவனை, படைப்பவனாகியவனை; 'கரியானை நான்முகனை' (6, 1, 1) 'நாரணன் காண், நான்முகன்காண்' (6, 8, 3) நெதி - செல்வம். 'நிதி'யின் மரூஉ மொழிமுதல் இகாரம் எகாரமாயொலிக்கும், 'விலை - வெலை'போல. வான்மதி - வெண்பிறை, 'வானூர்மதி'யுமாம். பாறும் - அழியும்.

எய்ப்பானார்க் கின்புறு தேனளித் தூறிய
இப்பாலர் யென்னையு மாள வுரியானை
வைப்பான மாடங்கள் சூழ்ந்த மணஞ்சேரி
மெய்ப்பானை மேவிநின் றார்வினை வீடுமே. 3

விடையானை மேலுல கேழுமிப் பாரெலாம்
உடையானை யூழிதோ றூழி யுளதாய
படையானைப் பண்ணிசை பாடு மணஞ்சேரி
அடைவானை யடையவல் லார்க்கில்லை யல்லலே. 4

எறியார்பூங் கொன்றையி னோடு மிளமத்தம்
வெறியாருஞ் செஞ்சடை யார மிலைத்தானை
மறியாருங் கையுடை யானை மணஞ்சேரிச்
செறிவானைச் செப்பவல் லார்க்கிடர் சேராவே. 5

மொழியானை முன்னொரு நான்மறை யாறங்கம்
பழியாமைப் பண்ணிசை யான பகர்வானை
வழியானை வானவ ரேத்து மணஞ்சேரி
இழியாமை யேத்தவல் லார்க்கெய்து மின்பமே. 6

---

3. எய்ப்பு - இளைப்பு. மெய்ப்பான் - பொய்யாதல் இல்லாதவன்; உண்மைப்பொருள். வீடும் - அழியும்.

4. விடையான் - எருதேறி. படையான் - படைகளையுடையவன். ஊழிதோறும் உள்ளபடை ஞானவாட்படை, 'ஞான வாளேந்தும் ஐயர்' (திருவாசகம். 613). மணஞ்சேரியில், ஆசிரியர் சென்றருளிய காலத்தில் பண்ணிசைபாடுதல் சிறந்திருந்தது.

5. எறிஆர் - ஒளிபொருந்திய (எறித்தல் - ஒளிவிடல்) வெறி - மணம். ஆர - நிறைய, மிலைத்தான் - சூடினான். மறி - மான்கன்று. கொன்றையினோடும் மத்தம், சடை ஆரமிலைத்தானும் மறிக்கையுடையானும் செறிவானும் ஆகிய சிவனைச் செப்பவல்லார் என முடிக்க.

6. "எக்கலைக்கும் பூதங்கள் எவற்றினுக்கும் பிரமனுக்கும் ஈசன் என்னத்தக்கமுதல் பரப்பிரமம் சதாசிவன்ஓம் என வேதம் சாற்றும்." (காஞ்சிப். குமர. 16). 'சொல்லும் பொருளெலாம் ஆனாய்நீயே' (6, 78, 5) 'இமையோர் ஏத்தும் சொல்தான்காண்' (6, 8, 4) என்பன வேதவுண்மையாதலின்,

எண்ணானை யெண்ணமர் சீரிமை யோர்கட்குக்
கண்ணானைக் கண்ணொரு மூன்று முடையானை
மண்ணானை மாவயல் சூழ்ந்த் மணஞ்சேரிப்
பெண்ணானைப் பேசநின் றார்பெரி யோர்களே. 7

எடுத்தானை யெழின்முடி யெட்டு மிரண்டுந்தோள்
கெடுத்தானைக் கேடிலாச் செம்மை யுடையானை
மடுத்தார வண்டிசை பாடு மணஞ்சேரி
பிடித்தாரப் பேணவல் லார்பெரி யோர்களே. 8

---

மொழியான் என்றார், 'சொல்லானை' (பா. 9) எனப் பின் வருதலும் அறிக. நான்மறையும் அம்மறைப்பொருளுணர்ச் சிக்குக் கருவியாகிய ஆறு அங்கங்களும் மொழிந்தவன் சிவனே ஆதலால், அவற்றைப் பழியாதவாறு காத்தல் அவன் கடனாகும். 'தொகுத்தவன் அருமறை அங்கம் ஆகமம், வகுத்தவன்' 'விரித்த வன் அருமறை.' (3, 23, 6, 7) 'மருவினிய மறைப்பொருளை' 'விரித்தானை நான்மறையோடங்கம் ஆறும்' (6, 80, 6, 10) 'வேதத்தை வேதவித்தை' (6, 79, 3) அதுபற்றிப் பண்ணிசை களையும் அளித்தருளினான். अस्य महतो भूतस्य निःश्वसित-मेतदृग्वेदो यजुर्वेद स्सामवेदः ॥ (இருக்குவேதம், யஜுர்வேதம், சாமவேதம் [முதலியவை] இம்மெய்ப்பொருளின் உயிர்ப்பு.) என்று பிருகதாரணியோபநிடதம் (4, 4, 10, 6, 5, 11) கூறு கின்றது. பகர்தல் - சொல்லுதல், ஆன - ஆனவை, வினையா லணையும் பெயர். வழியான் - வேதாகமவழி, திருவருள்நெறி, ஒளிசேர்நெறி. இழியாமை - இகழாமல்.

7. எண்ணானை - யாவராலும் மனத்தால் எண்ணி அறியப் படாதவனை, மனோதீதனை. எண் - அளவு, பெண்ணான் - மங்கைபங்கன், கங்கைச்சடையன். பெரியோர்க்கு உரிய இலக்க ணத்துள், சிவகீர்த்தனம் பாடுதலும் ஒன்று.

8. இராவணன் முடிபத்தும் தோள் (இருபதும்)கெடுத்த சிவனை, கேடிலாச்செம்மை - அழிவில்லாத 'திருநின்ற செம்மை' எனப்படும் பேரின்பம். வண்டுகள் மடுத்து(- உண்டு), ஆர - நிறைய. பிடித்துஆர - சிக்கெனப்பற்றிப் பூரணமாக, பேண - பத்திசெய்ய, பெரியோர்க்கு இதுவும் இலக்கணம்.

சொல்லானைத் தோற்றங்கண் டானு நெடுமாலும்
கல்லானைக் கற்றன சொல்லித் தொழுதோங்க
வல்லார்நன் மாதவ ரேத்து மணஞ்சேரி
எல்லாமா மெம்பெரு மான்கழ லேத்துமே 9

சற்றேயுந் தாமறி வில்சமண் சாக்கியர்
சொற்றேயும் வண்ணமொர் செம்மை யுடையானை
வற்றாத வாவிகள் சூழ்ந்த மணஞ்சேரி
பற்றாக வாழ்பவர் மேல்வினை பற்றாவே. 10

கண்ணாருங் காழியர் கோன்கருத் தார்வித்த
தண்ணார்சீர் ஞானசம் பந்தன் றமிழ்மாலை
மண்ணாரு மாவயல் சூழ்ந்த மணஞ்சேரி
பண்ணாரப் பாடவல்லார்க் கில்லை பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

9. சொல்லானை, பா. 6. பார்க்க. தோற்றம் - படைப்பு, சிருட்டி. கண்டான் - பிரமன். கல்லானை - கற்றுணரப்படாத பெருமையுடைய சிவனை, கற்றன - கற்றறிந்த சிவகீர்த்தனங்களை, ஓங்கவல்லார் - திருவருளுயர்ச்சியை அடையவல்லவர். 'ஓங்குணர்வு' (திருவருட்பயன், 91.) 'எல்லாம் சிவன் என்ன நின்றாய் போற்றி' 'ஒருவனே எல்லாம் ஆகி அல்லனுயுடனுமாவன்,' (சித்தியார், 47.) ஏத்தும் - ஏத்துங்கள்.

10. சற்று - சிறிது. சொல்தேயும்வண்ணம் - பிதற்றுரைகள் பொருளுருதனவாய் ஒழியும்வகை, 'செம்மை உடையானை' (பா. 8. பார்), வாவி - குளம். பற்று ஆக - உண்மையன்பிற்குரிய தலமாக. கண் - ஞானக்கண்.

11. காழியர்கோன் - தோணியப்பர். கருத்து - திருவுள்ளம். ஆர்வித்த - நிறைவித்த, ஒவ்வொரு திருப்பதிகமும் ஒவ்வொரு 'தமிழ்மாலை' என்னும் உண்மையை இதில் அறியலாம். பண்ணாரப்பாடுதல் வல்லார்க்குப் பாவம் இல்லை. 'கண் ......சீர்' என்றது ஆசிரியர் சிறப்பை உணர்த்துகின்றது. கண் - வேணுவனம், கண் - மூங்கில், 'கண்ணார் கமழ்காழியர்' (பதிகம். 159. பா. 11) என்றது காண்க.

# 17 திருவேணுபுரம்

## 153 பதிகவரலாறு

137-ஆவது பதிகத் தலைப்பிற் காண்க.

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

நிலவும்புன லுந்நிறை வாளரவும்
இலகுஞ்சடை யார்க்கிட மாமெழிலார்
உலவும்வய லுக்கொளி யார்முத்தம்
விலகுங்கட லார் வேணுபுரமே. 1

அரவார்கர வன்னமை யார்திரடோட்
குரவார்குழ லாளொரு கூறனிடங்
கரவாதகொ டைக்கலந் தாரவர்க்கு
விரவாகவல் லார் வேணுபுரமே. 2

---

1. நிலவு - பிறை, ஆகுபெயர். புனல் - கங்கை. நிறை வாள் - நிறைந்தகொடுமையையுடைய; சாதிஅடை. இலகும் - விளங்கும். எழிலார் - அழகுடையமகளிர். எழுச்சி உடைய உழத்தியருமாம். கடல் முத்துக்கள் வயலை அடைகின்றன. வெள்ளத்தில் மிதந்த வரலாறுபற்றி, 'கடலார் வேணுபுரம்' என்றார்.

2. அரவு ஆர்கரவன் - பாம்பைக் கங்கணமாக அணிந்த கையினன். அமை - மூங்கிற் கணுக்களின் இடைப்பகுதியை. ஆர் - ஒத்த. திரள் - திரண்ட. குரவு - குராமலர்மாலை. 'கரவாது உவந்தீயுங்கண் அன்னார்' (குறள் 1061). குழலாள் - கூந்தலை யுடைய அம்பிகை. கூறன் - பாகத்தையுடையவன். கரவாத - மறைக்காத. கலந்தார் அவர்க்கு - கூடியவராகிய அவர்க்கு. விரவு ஆகவல்லார் - நட்பாக வல்லவர்கள் (வல்லவர்கள் வாழும் வேணுபுரம் என்க.)

ஆகம்மழ காயவ டான்வெருவ
நாகம்முரி போர்த்தவன் நண்ணுமிடம்
போகந்தரு சீர்வயல் சூழ்பொழில்கண்
மேகந்தவ ழும் வேணுபுரமே. 3

காசக்கட லில்விட முண்டகண்டத்
தீசர்க்கிட மாவது வின்னறவ
வாசக்கம லத்தனம் வன்றிரைகள்
வீசத்துயி லும் வேணுபுரமே. 4

அரையார்கலை சேரன மென்னடையை
உரையாவுகந் தானுறை யும்மிடமாம்
நிரையார்கமு கின்னிகழ் பாளையுடை
விரையார்பொழில் சூழ் வேணுபுரமே. 5

---

3. ஆகம் அழகு ஆயவள் - அழகிய திருமேனியை உடைய அம்பிகை. ஆகம் - உடம்பு. வெருவ - அஞ்ச. நாகம் - யானை. உரி - தோல். இரண்டடியிலும் வந்த மகர ஒற்றுக்கள் இசை பற்றி வந்த விகாரம். போகம் - வயல்விளைவாகக் கிடைக்கும் உணவுப்பொருள்கள். முதல் போகம் இரண்டாம் போகம் என்னும் வழக்கு உணர்க. பொழில்கண் மேகம் என்பதில் கண் உருபும், கள் விகுதியும் ஆகப்பிரித்துப் பொருள் கூறலாம்.

4. காசு அக்கடல் - மணிகளையுடைய அழகிய பாற்கடல். இன் நறவவாசக் கமலம் - இனிய தேனையும் மணத்தையும் உடைய கமலம். அனம் - அன்னப்பறவை, இடைக்குறை. அன்னம் கமலத்தில் வலிய அலைகள் வீசுதலால் சிறுதுயில் கொள்ளும்.

5. அரை ஆர் கலைசேர் அனம் மெல் நடையை - திருவிடையில் உடுத்தல் பொருந்திய மேகலை முதலிய திருப்புடைவை சேர்ந்த அன்னத்தினது மெல் நடைபோலும் நடை உடைய திருநிலைநாயகியை. உரையா - (புகழ்ந்து) உரைத்து. உகந்தான் - உயர்ந்தவன், மகிழ்ந்தவன் எனலுமாம். நிரை - வரிசை; நிகழ் - விளங்கிய; உடைவிரை - உடைதலால் பரவும் மணம். உடைய பொழில் என்றும் இயையும்.

ஒளிரும்பிறை யும்முறு கூவிளவின்
றளிருஞ்சடை மேலுடை யானிடமாம்
நளிரும்புன லின்னல செங்கயல்கண்
மிளிரும்வயல் சூழ் வேணுபுரமே. 6

• • • • 7

ஏவும்படை வேந்த னிராவணனை
ஆவென்றல றவடர்த் தானிடமாந்
தாவும்மறி மானெடு தண்மதியம்
மேவும்பொழில் சூழ் வேணுபுரமே. 8

கண்ணன்கடி மாமல ரிற்றிகழும்
அண்ணல்விரு வரறி யாவிறையூர்
வண்ணச்சுதை மாளிகை மேற்கொடிகள்
விண்ணிற்றிக ழும் வேணுபுரமே. 9

---

6. பிறையும் தளிரும் உடையான். கூவிளம் - வில்வம். நளிர் - குளிரும். மிளிரும் - விட்டு விட்டு விளங்கும், கண் மிளிரும் - கண்போல் விளங்கும் என்பதுமாம்.

8. ஏவும்படை - குறிதவருது வினையாற்றும் ஆயுதம். ஆ என்று அலற - அலறுவோர் ஒலிக் குறிப்புக்களுள் 'ஆ' என்பது தலைமையானது. அஃது ஆஆ என அடுக்கியும் பின் 'ஆவா' என்று உடம்படுமெய் பெற்றும் வரும். அதனைத் திருமுறைகளில் பல இடங்களில் காணலாம். அடர்த்தான் - தாக்கியவன். மறிமான் - மான்கன்று; மறிகளும் மான்களும் ஆம். பொழிலின் உள்ளே மானும் மேலே மதியமும் மேவும் என்க; மதியின் களங்கமுமாம்.

9. கண்ணன் -(திருமால்) கரியவன். கடி - மணம். மலர் - தாமரை. அண்ணல் - பிரமன். இறை - இறைவன். (சிவன்) வண்ணம் - அழகு. சுதை - சுண்ணம்.

போகம்மறி யார்துவர் போர்த்துழல்வார்
ஆகம்மறி யாவடி யாரிறையூர்
மூகம்மறி வார்கலை முத்தமிழ்நூல்
மீகம்மறி வார் வேணுபுரமே 10

கலமார்கடல் போல்வள மார்தருநற்
புலமார்தரு வேணு புரத்திறையை
நலமார்தரு ஞானசம் பந்தன்சொன்ன
குலமார்தமிழ் கூறுவர் கூர்மையரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*10.* போகம் - சிவாநந்த போகத்தை. துவர் - பழுப்பு ஏறிய ஆடைக்கு ஆகுபெயர். உழல்வார் - திரிவார் (சமணர்சாக்கியர்) ஆகம் அறியா அடியார் - சிவநிந்தைசெய்யும் பிறமதத்தரை ஏறெடுத்தும் பார்க்காத சிவனடியார். ஆகம் - உடம்பு. மூகம் - மௌநம். மீகம் - வானோர்க்குயர்ந்த உலகம். (கம் - வான். மீ - மேல்.) மூகம் அறிவாரும் கலை முத்தமிழ் நூலால் மீகம் அறிவாரும் வாழ்கின்ற வேணுபுரம். அறிவார் - ஞானியர்.

*11.* கலம் - மரக்கலம். ஆர்தல் - நிறைதல், பொருந்துதல். நற்புலம் - (நல் புலம்) நன்செய். நலம் - சிவம், சிவத்தைச் சார்வித்தற்குரிய ஞானத்தின் தொடர்பு. குலம் - மேன்மை. தமிழ் - இத்திருப்பதிகத்தை. கூறுவர் - அன்பொடு பாராயணம் செய்வோர். கூர்மையர் - திருவருட் பெருக்கம் அடைபவர்.

---

முரசங் கறைபமுன் தோரண நீட
முழுநிதியின்
பரிசங் கொணர்வான் அமைகின் றனர்பலர்
பார்த்தினிநீ
அரிசங் கணைதலென் னுமுன் கருதரு
காசனிதன்
சுரிசங் கணிவயற் றந்த நகரன்ன
தூமொழிக்கே. —அந்தாதி 10

# 18 திருமருகல்

## 154 பதிகவரலாறு

கணபதீச்சரத்தை வழிபட்டு மீண்ட கவுணியர்கோன், அருகிலுள்ள திருமருகலில் எழுந்தருளிய மாணிக்கவண்ணர் கழலிணை வணங்கி 'உருகிய அன்புறுகாதல் உள்ளலைப்பத் தெள்ளுமிசையுடன் பெருகும் தமிழ்த்தொடை சார்த்தி' அங்கிருந்தார். அவை இப்பொழுது கிடைத்தில. அந்நகரில், அந்நாளில், வணிகன் மகள் ஒருத்தி, தன்னை மணக்க இருந்தவன் மடத்தில், இரவில் துயிலும்போது பாம்பு கடித்து இறக்க, அழுது புலம்பும் ஒலி கேட்டது. அங்குச் சென்ற புகலிவேந்தர் "பயப்படேல் நீ" என்று அபயம் தந்து, வரலாறுணர்ந்து, அவன் விடம்தீர்ந்து எழுந்துநிற்கச்செய்தற் பொருட்டு அருளியது இத்திருப்பதிகம்.

### பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

சடையாயெனு மால்சர ணீயெனுமால்
விடையாயெனு மால்வெரு வாவிழுமால்
மடையார்குவ ளைமல ரும்மருகல்
உடையாய்தகு மோவிவ ளுண்மெலிவே. 1

---

1. 'எனும்' 'விழும்' செய்யுமென்னும் வாய்பாட்டு முற்று வினை; ஈண்டுப் பெண்பாற்குவந்தது. "ஆல்' என்பன அசைகள். சரண்நீ - நீயே அடைக்கலம். வெருவா - வெருவி, 'அஞ்சி வெருவி ஓடித்தழுவ வெளிப்பட்ட கள்ளக்கம்பனை' (சுந்தரர், கச்சியேகம்பம்) அஞ்சுதல் உள்ள நிகழ்ச்சி. வெருவுதல் வாயொலி. மடை - நீர்மடையில். மருகல் - ஒருவகை வாழை மரத்தாற்பெற்ற தலப்பெயர். உடையாய் - சுவாமீ. உள் மெலிவு - மனநோய்.

சிந்தாயெனு மால்சிவ னேயெனுமால்
முந்தாயெனு மால்முதல் வாவெனுமால்
கொந்தார்குவ ளைகுல வும்மருகல்
எந்தாய்தகு மோஇவ ளேசறவே. 2

அறையார்கழ லும்மழல் வாயரவும்
பிறையார்சடை யும்முடை யாய்பெரிய
மறையார்மரு கன்மகிழ் வாயிவளை
இறையார்வளை கொண்டெழில் வவ்வினையே. 3

ஒலிநீர்சடை யிற்கரந் தாயுலகம்
பலிநீதிரி வாய்பழி யில்புகழாய்
மலிநீர்மரு கன்மகிழ் வாயிவளை
மெலிநீர்மைய ளாக்கவும் வேண்டினையே. 4

துணிநீலவண் ணம்முகி றோன்றியன்ன
மணிநீலகண் டம்முடை யாய்மருகல்
கணிநீலவண் டார்குழ லாளிவடன்
அணிநீலவொண் கண்ணயர் வாக்கினையே. 5

---

2. சிந்தாய் - சிந்தையே; அழியாதவனே எனலுமாம். முந்தாய்-முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப்பழம் பொருளே. முதல்வா - ஆதியனே: கொந்து - பூங்கொத்து. எந்தாய் - எம் அப்பனே, எம் அன்னையே. ஏசறவு - மெய்ம்மறத்தல்.

3. அறை - ஒலி, அழல் வாய் அரவு - (நஞ்சு) வெப்பம் பொருந்திய வாயுடைய பாம்பு. மறையார் மருகல் - வேதங்களை உணர்ந்தவர் வாழ்கின்ற திருமருகல். இறை - கைச்சந்து. எழில் - அழகு.

4. ஒலிநீர் - முழங்குங் கங்கை. கரந்தாய் - மறைத்தாய். பலி - பிச்சை. நீர்மலி மருகல் என்றும் மாற்றலாம்.

5. துணி நீல......கண்டம் - தெளிந்த நீலநிறம் உடைய் மேகம் தோன்றினாற்போன்ற அழகிய நஞ்சாற் கறுத்த திருக் கழுத்தை. கணி - கருதுகின்ற. அயர்வு - சோர்வு, மறதி.

திருமருகலில்




கற்றைபஞ் சடையற் போற்றிக் காரிகை கணவனைகப்
பற்ற நஞ்சொழித்து வாழ்க்கைப் பயன்தந்தார் காழிவேந்தர்,

பலரும்பர வப்படு வாய்சடைமேல்
மலரும்பிறை யொன்றுடை யாய்மருகல்
புலருந்தனை யுந்துயி லாள்புடைபோந்
தலரும்படு மோவடி யாளிவளே. 6

வழுவாள்பெரு மான்கழல் வாழ்கவெனு
எழுவாணினை வாளிர வும்பகலும்
மழுவாளுடை யாய்மரு கற்பெருமான்
தொழுவாளிவ ளாத்துய ராக்கினையே. 7

இலங்கைக்கிறை வன்விலங் கல்லெடுப்பத்
துலங்கவ்விர லூன்றலுந் தோன்றலனுய்
வலங்கொண்மதில் சூழ்மரு கற்பெருமான்
அலங்கல்லிவ ளாயல ராக்கினையே. 8

எரியார்சடை யும்மடி யும்மிருவர்
தெரியாததொர் தீத்திர ளாயவனே
மரியார்பிரி யாமரு கற்பெருமான்
அரியாளிவ ளாயயர் வாக்கினையே. 9

---

6. பரவ - துதிக்க. மலரும் - பரவும். புலரும்தனை - விடியுமளவும். துயிலாள் - தூங்காதவள், புடை - பக்கம், வெளி. அலர் - பழிச்சொல்.

7. பெருமான் கழல் வாழ்க எனு வழுவாள் எழுவாள் என மாற்றுக. எனு - என்று. வழுவாள் - தவருதவளாய். எழுவாள் - உறங்கிவிழித் தெழுவாள், இரவும் பகலும் நினைவாள். மழுவாள் - மழுவாகிய படை.

8. இறைவன் - அரசன். (இராவணன்). விலங்கல் - மலை (கயிலை). துலங்கு - விளங்கிய. ஊன்றலும் - அழுத்தியதும். தோன்றலனுய் - செய்வது இன்னதென்று தோன்றப் பெருதவனுய். வலம்கொள் - வலமாக வந்து பணிந்து வேண்டி வரம் கொண்ட, தோன்றலனுய் என்பது, வலங்கொள் என்பதொடு இயையும்; இன்றேல், முடிபில்லாதொழியும். அலங்கல் - மாலை, அசைந்திடுதலும் ஆம்.

9. எரி ஆர் சடை - நெருப்பைப்போலும் சிவந்த சடை தீத்திரள் - ஒளிப்பிழம்பு, இலிங்கபுராண வரலாறு. மரியார் - திருவடி வழிபாட்டால் பிறவி நீங்கியவர், (ஜீவன் முக்தர்) அரியாள் - அரியவள்.

அறிவில்சம ணும்மலர் சாக்கியரும்
நெறியல்லன செய்தனர் நின்றுழல்வார்
மறியேந்துகை யாய்மரு கற்பெருமான்
நெறியார்குழ லிநிறை நீக்கினையே. 10

வயஞானம்வல் லார்மரு கற்பெருமான்
உயர்ஞான முணர்ந்தடி யுள்குதலால்
இயன்ஞானசம் பந்தன பாடல்வல்லார்
வியன்ஞாலமெல் லாம்விளங் கும்புகழே. 11

திருச்சிற்றம்பலம்

---

10. அறிவு இல் சமண் - மெய்ப்பொருள் உணர்வில்லாத சமணர். அலர் - பலராகப் பரவிய. நெறி அல்லன - சைவநெறி அல்லாத புன்னெறிகள். மறி - மான்கன்று, நெறி - நெறித்தல், அடர்ந்திருத்தல். நிறை - நெஞ்சைக் கற்புநெறியில் நிறுத்தல். (குறள் - 57-உரை) 'நிறை எனப்படுவது மறை பிறர றியாமை' (கலித். 136). என்றதன் கருத்தும் அறிக.

11. வயஞானம் - தன்வயமாக்கிய திருவருண் ஞானம். அருள்வயமான நல்லோர் வாழும் மருகல் என்க.

---

மொழிவது சைவ சிகாமணி சீரித்
 தடவரைத்தோள்
தொழுவது மற்றவன் தூமலர்ப் பாதங்கள்
 தாமங்கமழ்ந்
தெழுவது கூந்தல்அம் பூந்தா மரையினி
 யாதுகொலோ
மொழிவது சேரி முரிப்புதை மாதர்
 முறுவலித்தே. —அந்தாதி 11

# 19 திருநெல்லிக்கா

## 155 பதிகவரலாறு

தேவூரணைந்து போற்றிய திருஞானசம்பந்தர், திருநெல்லிக்காவைப் பணிந்து பாடியது இத்திருப்பதிகம்.

### பண் - இந்தளம்

### திருச்சிற்றம்பலம்

அறத்தா லுயிர் காவ லமர்ந்தருளி
மறத்தான்மதின் மூன்றுடன் மாண்பழித்த
திறத்தாற்றெரி வெய்திய தீவெண்டிங்கள்
நிறத்தானெல்லிக் காவு ணிலாயவனே. 1

பதிதானிடு காடுபைங் கொன்றைதொங்கல்
மதிதானது சூடிய மைந்தனுந்தான்
விதிதான்வினை தான்விழுப் பம்பயக்கும்
நெதிதானெல்லிக் காவு ணிலாயவனே. 2

---

1. அறத்தால் - தருமத்தை நிலை நிறுத்தவேண்டி, உயிர் காவல் - உயிர்களைக் காத்தல். மறம் - அதர்மம். மாண்பு - மாட்சி. தெரிவு - விளக்கம். தீ நிறத்தான் - அழல் வண்ணன். வெண்டிங்கள் நிறத்தான் - பவளம்போன்ற திருமேனியில் பால் போலும் திருவெண்ணீற்றைப் பூசிய திருக்கோலத்தால், வெண்டிங்கள் போலும் தண்ணொளியுடையவனான பரமசிவன். நிலாயவன் - நிலவி நின்றவன். நிலாயவனே நிறத்தான் என்றும் இயையும். 'தான்' அசையுமாம். மேலும் இவ்வாறே அசையாதலாம்.

2. பதி இடுகாடு. தொங்கல் - (மாலை) கொன்றை. மதி - பிறை. மைந்தன் - வலியன். வீரன். விதியும் வினையும் நிதியும் எல்லாம் அவனன்றி வேறில்லை என்றபடி. விழுப்பம் - மேன்மை. திருவருளே தனக்கு மேலொன்றில்லாச் செல்வமாதலின் 'விழுப்பம் பயக்கும் நெதி' எனப்பட்டது. 'செல்வன் கழல் ஏத்தும் செல்வம் செல்வமே' 'சிவமேபெறும் திரு' 'சென்றடையாத திரு'

நலந்தானவ னான்முகன் றன்றலையைக்
கலந்தானது கொண்ட கபாலியுந்தான்
புலந்தான்புக ழாலெரி விண்புகழும்
நிலந்தானெல்லிக் காவு ணிலாயவனே. 3

தலைதானது வேந்திய தம்மடிகள்
கலைதான்றிரி காடிட நாடிடமா
மலைதானெடுத் தான்மதின் மூன்றுடைய
நிலைதானெல்லிக் காவு ணிலாயவனே. 4

தவந்தான்கதி தான்மதி வார்சடைமேல்
உவந்தான்சுற வேந்த னுருவழியச்
சிவந்தான்செயச் செய்து செறுத்துலகில்
நிவந்தானெல்லிக் காவு ணிலாயவனே. 5

---

'சென்றடையாச் செல்வன்' என்பன காண்க. நிலாயவன் பதி இடுகாடு; தொங்கல் கொன்றை என்றும் நிலாயவனே மைந்தனும் விதியும் வினையும் நெதியும் என்றும் கொள்க.

3. நலம் தான் அவன் - அவனே நலம், மங்கலம். சிவம் அல்லாது வேறு நலம் உயிர்கட்கு இல்லை. 'குறைவிலாமங்கல குணத்தன்' (காஞ்சிப் புராணம் திருநெறிக் 23) 'நகராநலம்' 2-19-11) பிரமனது தலையைக்கிள்ளிக் கையிற்கொண்ட வரலாறு முற்பகுதியிற் கூறப்பட்டது. கபாலி - பிரமகபாலத்தைத் தாங்கியவன். புலம் - சிவஞான சொரூபம். புகழால் எரிவிண் - கீர்த்தியால் விளங்கும் வானம். விண்புகழும் நிலம் - வானோர் துதிக்கும் சிவதலம் (திருநெல்லிக்கா). நலம்தான் கபாலியும் தான், புலம்தான், நிலம்தான் என்று கொள்ளின், நிலம் என்பது மிசை நிலம், வீட்டுலகு ஆம். 'நிலமிசை நீடுவாழ்வார்' (குறள் 3) 'மீதானம்.' (திருக்களிறு).

4. தலை - பிரமகபாலம். கலை - மான். ஏந்தியதுதலை. காடிடம் நாடிடமாம். காடாகிய இடம் நாடுகின்ற இடம், நாடாகிய இடமுமாம். மதில் மூன்றுடைய மலை தான் எடுத்தான் - முப்புரமும் உடைந்தழிய மேருமலை வில்லை எடுத்தவன். நிலை - உறையுள்.

5. தவமும் அத்தவத்தின்பயனாக எய்தும் கதியும் தானே (சிவனே) ஆவான். வார் சடைமேல் மதியை உவந்தான்.

வெறியார்மலர்க் கொன்றையந் தார்விரும்பி
மறியார்மலை மங்கை மகிழ்ந்தவன்றான்
குறியாற்குறி கொண்டவர் போய்க்குறுகும்
நெறியானெல்லிக் காவு ணிலாயவனே. 6

பிறைதான்சடைச் சேர்த்திய வெந்தைபெம்மான்
இறைதானிற வாக்கயி லைமலையான்
மறைதான்புன லொண்மதி மல்குசென்னி
நிறைதானெல்லிக் காவு ணிலாயவனே. 7

மறைத்தான்பிணி மாதொரு பாகந்தன்னை
மிறைத்தான்வரை யாலரக் கன்மிகையைக்
குறைத்தான்சடை மேற்குளிர் கோல்வளையை
நிறைத்தானெல்லிக் காவு ணிலாயவனே. 8

---

உவத்தல் - மகிழ்தல். சுறவேந்தன் - மீனக்கொடி யுடைய மன்மதன். உரு அழிய - (உருவிலியாக) வடிவம் எரிந்து சாம்பராக. சிவந்தான். கோபித்தான். சிவந்தான் (ஆகச்) செய்யச் செய்து. செறுத்து - அழித்து. நிவந்தான் - ஓங்கினான். செயற் செய்து என்னும் பாடத்திற்குச் சிவந்தானது செயலைச் செய்து என்று கொள்க செய (ஜெய) - வெற்றி எனலுமாம் செயம் என்றதன் விகாரமாகக்கொள்க.

6. வெறி - மணம். தார் மாலை. மறி - மான். மலைமங்கை இமாசலகுமரி. குறியால் குறிகொண்டவர் போய்க் குறுகும் நெறியான் - குரு உபதேசித்தகுறியினால் தியானித்துணர்ந்து கொண்டவர் சென்று அடையும் ஒளி நெறியுடையவன். 'அறிவதொருகுறி குருவினருளினால் அறிந்து மன்னுசிவன்றனை யடைந்து நின்று' அருள் ஞானக் குறியில் நின்று கும்பிட்டுத் தட்டம் இட்டுக் கூத்தாடித்திரி (சித்தியார் 286. 323) 'குறியொடுதாம் அழியும்நெறி' (324) அதனின்மேலாயது.

7. சடைச்சேர்த்திய - சடைமேல் சேரச்செய்த. ஏழன் தொகை, இறவாக்கயிலைமலை - என்றதால் அழிவில்லாத சிறப்புணர்க. புனல் - கங்கை. முதலடியிற் பிறையும் சடையும், மூன்றாவதடியில் மதியும். சென்னியும் என ஓரிடமும் நோக்கின் இப் பதிகத்தைப்பற்றி ஒரு சிந்தனை தோன்றும்.

8. ஒரு பாகத்தில் மாதினைப் பிணித்து மறைத்தான். பிணி மறைத்தான் - வரிப்புனைபந்து என்புழிப்போலும். மிறைத்

தழருமரை யான்வையந் தாயவனும்
கழருன்முடி காணிய நாணெளிரும்
அழருனடி யார்க்கரு ளாய்ப் பயக்கும்
நிழருனெல்லிக் காவு ளிலாயவனே. 9

கனத்தார் திரை மாண்டழற் கான்றநஞ்சை
எனத்தாவென வாங்கிய துண்டகண்டன்
மனத்தார்சமண் சாக்கியர் மாண்பழிய
நினைத்தா னெல்லிக் காவு ளிலாயவனே. 10

புகரேது மிலாதபுத் தேளுலகில்
நிகராநெல்லிக் காவு ளிலாயவனை
நகராநல ஞானசம் பந்தன்சொன்ன
பகர்வாரவர் பாவ மிலாதவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

தான் - வருத்தினன், மிகை - மீச்செலவை, குறைத்தான் - அடக்கினன். கோல்வளையை - கங்கையை - அன்மொழித்தொகை. கோல் - திரட்சி, வளை - வளையலையுடையவள், நிறைத்தான் - நிறைய அடக்கிக்கொண்டான்.

9. தழல் தாமரையான் - தீயையொக்கும் செந்தாமரையில் வாழும் பிரமன். வையம் தாயவன் - உலகம் அளந்த திருமால். கழல்முடி - காலும் தலையும். காணிய - காண்பதற்கு. அழல் - தீப்பிழம்பு. அடியாருக்கு - யான் எனது என்னும் செருக்கற்றுத் திருவடிஞானம் பெற்றார்க்கு, அருளாய்ப் பரக்கும்நிழல் - திருஞானமாய்ப் பரவியுள்ளபேரொளி.

10. கனத்து ஆர் திரை - மேகத்தால் உண்ணப்படுங் கடல். ஈண்டுப் பாற்கடல் என்க, திரை - அலை, ஆகுபெயர். மாண்டு - பெருகி, சுழல் - வெப்பம். கான்ற - வீசிய, உமிழ்ந்த. 'என் அத்தா' என்று தேவர்வேண்ட, வாங்கி அது உண்ட கண்டன் என்க. மாண்பு - மாட்சி.

11. புகர் - குற்றம். புத்தேள் உலகு - தேவருலகம். நிகரா - ஒப்பாகாத. நகராநலம் - அழியாத நன்மை, சிவம். சொன்ன - சொல்லிய. இப்பாமாலையை. பகர்வார் - பாடித் தொழுவார்.

# 20 திருஅழுந்தூர்

## 156 பதிகவரலாறு

ஞானப்பாலுண்டவர் திருநல்லம் முதலிய திருப்பதிகங்களைப்பணிந்து திருவழுந்தூர் மாடக்கோயிலை அடைந்தார். அம்மாமடம் மகிழ்ந்த வான்பொருளினை வணங்கிப் பாடிய பதிகம் இது.

### பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

தொழுமாறுவல் லார்துயர் தீரநினைந்
தெழுமாறுவல் லாரிசை பாடவிம்மி
அழுமாறுவல் லாரழுந் தைமறையோர்
வழிபாடுசெய் மாமட மன்னினையே. 1

கடலேறிய நஞ்சமு துண்டவனே
உடலேயுயி ரேயுணர்வே யெழிலே
அடலேறுடை யாயழுந் தைமறையோர்
விடலேதொழ மாமட மேவினையே. 2

---

1. திருவழுந்தூரிலுள்ள வேதியர் (கட்டி) வழிபாடு செய்யும் பெரியமடத்தில் (பா. 3) சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். அவ்வேதியர்கள் சிவபிரானைத் தொழும் வகையிலும், பிறவித்துன்பம் போயொழிய நினைந்தெழும் வகையிலும், இசை பாடிட விம்மி அழும் வகையிலும் வன்மையுற்ற பயிற்சியுடையவர்கள். அழுந்தை என்பது அழுந்தூர் என்பதன் மரூஉ. இது புலவர் செய்துகொள்ளும் மரூஉச் சொற்களுள் ஒன்று. புலியூர்-புலிசை, மறைக்காடு - மறைசை, ஆவடுதுறை - துறைசை முதலிய அறிக. தொட்டிக்கலை - கலைசை, திருவோத்தூர் (வேதபுரி, மறைநகர்) - மறைசை என்பவை வழங்கி மருவாதன ஆயினும் புலவர் வழக்கில் உள.

2. பாற்கடல், உடலும், உயிரும், உணர்வும், எழிலும் ஆக இருப்பவன் சிவபிரான், அடல் வலிமை, கொலையுமாம், 'கொல்லேறு'. விடலே - தலைவனே.

கழிகாடல னேகன லாடலினாய்
பழிபாடில னேயவை யேபயிலும்
அழிபாடில ராயழுந் தைமறையோர்
வழிபாடுசெய் மாமட மன்னினையே. 3

வானேமலை யேயென மன்னுயிரே
தானேதொழு வார்தொழு தாண்மணியே
ஆனேசிவ னேயழுந் தையவரெம்
மானேயென மாமட மன்னினையே. 4

அலையார்புனல் சூழழுந் தைப்பெருமான்
நிலையார்மறி யுந்நிறை வெண்மழுவும்
இலையார்படை யும்மிவை யேந்துசெல்வ
நிலையாவது கொள்கென நீநினையே. 5

நறவார்தலை யின்னய வாவுலகில்
பிறவாதவ னேபிணி யில்லவனே
அறையார்கழ லாயழுந் தைமறையோர்
மறவாதெழ மாமட மன்னினையே. 6

---

3. கழிகாடலனே - சுடுகாட்டில் (இரவில்) ஆடுபவனே, 'கரிகாடலினாய்' (பதிகம், 157. பா. 8) 'சுடலையாடி'. கனல் ஆடலினாய் - தீயில் ஆடுதலையுடையவனே. பழிபாடு இலனே - பழிக்கப்படுதல் இல்லாதவனே. அழிபாடு - அழிவுபடுதல்.

4 வான் - வானம் வானம் மலை என்று தொழமன்னிய உயிரே. வானே என மலையே என மன்னும் உயிர். தொழுவார் தொழு - வணங்குவார் வணங்குதற்குரிய. தாள் - திருவடி. ஆனே:- பசுபதீ என்னும் பொருட்டு. ஆன் - பசு. அழுந்தையவர் - திருவழுந்தூர் மறையோர். எம்மானே - எம்பெருமானே. என - என்று கூவித்தொழ.

5. இலையார் படை - திரிசூலாயுதம். இவையே நிலையான செல்வம். ஏனைய அழியும் என்றவாறு.

6. நறவு - தேன், நயவா - நயமுடையவன். நயம் - மகிழ்ச்சி, இன்பம், நன்மை, நீதி. உலகில் பிறவாதவன் - 'பிறவா யாக்கைப் பெரியோன்' 'பிறப்பிலி இறப்பிலி' (பாரதம்). பிணி இல்லவன் - நோயில்லான். அறை - ஒலி.

குத்தாலம்



"வண்டினம் துத்தம் நின்றுபண் செயும்
சூழ் பொழில் துருத்தி"

குத்தாலம்



"வெயிற்கு எதிர்ந்து இடங்கொடாது அகம்குளிர்ந்த பைம்பொழில
துயிற்கு எதிர்ந்த புள்ளினங்கள் மல்கு தண் துருத்தி"

தடுமாறுவல் லாய்தலை வாமதியம்
சுடுமாறுவல் லாய்சுட ரார்சடையில்
அடுமாறுவல் லாயழுந் தைமறையோர்
நெடுமாநகர் கைதொழ நின்றனையே. 7

பெரியாய்சிறி யாய்பிறை யாய்மிடறு
கரியாய்கரி காடுயர் வீடுடையாய்
அரியாயெளி யாயழுந் தைமறையோர்
வெரியார்தொழ மாமட மேவினையே. 8

மணிநீண்முடி யான்மலை யையரக்கன்
தணியாதெடுத் தானுட லந்நெரித்த
அணியார்விர லாயழுந் தைமறையோர்
மணிமாமட மன்னி யிருந்தனையே. 9

---

7. தடுமாறுவல்லாய் - உயிர்கள் உன்னை உணர்வதில் தடுமாறுதலைச் செய்ய வல்லவனே. 'உணர்ந்தார்க்கு உணர்வரியோன்'. என்றது இத்தடுமாற்றத்தை வலியுறுத்தும். தடுமாறுதல் - தட்டுமாறுதல் என்பதன் மரூஉ வாகக்கொண்டு அஃது ஈண்டுத் திருக்கூத்தைக் குறித்து நின்றது எனலுமாம். 'ஆடவல்லாய்' ஆடுமாறு வல்லானும் ஐயாறுடை ஐயனே' எனவரும் தேவாரங்களால் உணர்க. மதியம் சுடும் ஆறு - பிறையால் (காதல்கொண்ட) மகளிரைச் சுடும்வகை. சூடுமாறு என்பதன் முதற் குறுக்கமுமாம். அடும் ஆறு - கங்கைப் பெருக்கு, நெடுமாநகர் - நீள்பெருங்கோயில்.

8. கரியமிடறுய் - நீலகண்டனே. சர்வசங்கார காலத்தில் எல்லாம் அழியுமாதலின், 'கரிகாடு' என்றும் அதுவே முதல்வனுக்குக் கோயிலாதலின் 'உயர்வீடு' என்றும் அருளினர். 'கோயில் சுடுகாடு' 'பெருமை, சிறுமை, அருமை, எளிமை எல்லாம் ஆண்டவனுக்குள. 'வெரியார்' - பழிபாவங்களை அஞ்சுதலுடைய அம்மறையோர். வேரியார் (- தேன்போலும் இனியர்,) என்பதன் முதற்குறுக்கம் எனல் அமைவுடையதன்று.

9. மணிமுடி - ரத்நகிரீடம். அரக்கன் - இராவணன். நெரித்த - நொருங்கிய. அணி - அழகு. பணி - பணிகின்ற.

முடியார்சடை யாய்முன நாளிருவர்
நெடியான்மல ரானிகழ் வாலிவர்கள்
அடிமேலறி யாரமுந் தைமறையோர்
படியாற்றொழ மாமடம் பற்றினையே. 10

அருஞானம்வல் லாரமுந் தைமறையோர்
பெருஞான முடைப்பெரு மானவனைத்
திருஞானசம் பந்தன செந்தமிழ்கள்
உருஞானமுண் டாமுணர்ந் தார்தமக்கே. 11

திருச்சிற்றம்பலம்

---

*10. முடியார் சடையாய் - சடைமுடியுடையாய். நெடியான் - திரிவிக்கிரமனாகிய மாயோன். அடிமேல் - அடிமுடி, படியால் - விதிப்படி. பற்றினை - பற்றாகக் கொண்டாய்.*

*11. அருஞானம் - எய்தற்கு அரிய திருவருண்ஞானம். திருஞானசம்பந்தன் - திருஞானசம்பந்தனுடைய. அ:- ஆறனுருபு, பன்மை, செந்தமிழ்கள் - செந்தமிழ்ப்பாக்கள். உருஞானம் - சொரூபஞானம், உண்மையுணர்வு.*

---

*வலிகெழு குண்டர்க்கு வைகைக் கரையன்று
வான்கொடுத்த
கலிகெழு திண்தோள் கவுணியர் தீபன்
கடலுடுத்த
ஒலிதரு நீர்வை யகத்தை யுறையிட்ட
தொத்துதிரு
மலிதரு வார்பனி யாமட மாதினை
வாட்டுவதே.* —அந்தாதி 12

# 21 திருக்கழிப்பாலை

## *157 பதிகவரலாறு*

பாலருவாயர் மன்ருடும் ஐயன் திருக்கூத்துக் கும்பிட்டு அணைவுறும் நாளில் கைம்மான் மறியார் கழிப்பாலையுள் அணைந்து இம் மெய்ம்மாலைச் சொற்பதிகம் பாடினர்.

### பண் - இந்தளம்

*திருச்சிற்றம்பலம்*

புனலாடிய புன்சடை யாயரணம்
அனலாக விழித்தவ னேயழகார்
கனலாடலி னுய்கழிப் பாலையுளாய்
உனவார்கழல் கைதொழு துள்குதுமே. 1

துணையாகவொர் தூவள மாதினையும்
இணையாக வுகந்தவ னேயிறைவா
கணையாலெயி லெய்கழிப் பாலையுளாய்
இணையார்கழ லேத்த விடர்கெடுமே. 2

---

1. புன்சடையாய் - பொன்போலும் சடையுடையாய், அரணம் - திரிபுரக்கோட்டை, திரிபுரத்தை விழித்தெரித்தான் என்றும் வரலாறுண்டு. ப. 170, 212 279, 319, 343, 376 பார்க்க. கனல் - தீ, உனவார்கழல் - உன்னுடைய நீள்கழலடிகள். (பா. 9. பார்க்க) உள்குதும் - தியானம் செய்வோம்,

2. இறைவா! கழிப்பாலை உள்ளாய்! (உன்) கழல் ஏத்த (எம்) இடர் கெடும் என்று இயைத்துக் கொள்க. தூ - தூய்மை. எல்லாப் பொருள்கட்கும் பற்றுக்கோடு. ‘பெண்ணுரு ஒருதிறன் ஆகின்று, அவ்வுருத் தன்னுள் அடக்கிக் கரக்கினுங் கரக்கும்’ (புறம் - கடவுள் வாழ்த்து) என்றதன் உரையைக் காண்க. துணை - துணைவி. இணை - இருவரென்னுதவாறு இணைதல், எயில் - திரிபுரம், எய் - எய்த, எய்கழிப்பாலை உள்ளாய் - வினைத்தொகை. ‘கழிப்பாலையுள்ளாய்’ என்பது சிவனென்னும் பொருட்டாய் எய்யென்னும் பகுதியொடு தொக்கு வினைத்தொகையாயிற்று.

நெடியாகுறி யாய்நிமிர் புன்சடையின்
முடியாய்சுடு வெண்பொடி முற்றணிவாய்
கடியார்பொழில் சூழ்கழிப் பாலையுளாய்
அடியார்க்கடை யாவவ லம்மவையே. 3

எளியாயரி யாய்நில நீரொடுதீ
வளிகாயமெ னுவெளி மன்னியதூ
ஒளியாயுனை யேதொழு துன்னுமவர்க்
களியாய்கழிப் பாலை யமர்ந்தவனே. 4

நடநண்ணியொர் நாக மசைத்தவனே
விடநண்ணிய தூமிட றுவிகிர்தா
கடனண்ணு கழிப்பதி காவலனே
உடனண்ணி வணங்குவ னுன்னடியே. 5

---

3. நெடியாய் - நீண்டவனே; குறியாய் - குறியவனே, புன்சடை முடி - பொன்போலும் செஞ்சடைமுடி, சுடுவெண் பொடி - திருநீறு. முற்று அணிவாய் - முழுதும் அணிவாய். கடி - மணம். அடியார் - யான் எனதென்னும் செருக்கற்றவர். அவலம் அடையா.

4. அன்பர்க்கு எளியாய். அல்லாதார்க்கு அரியாய், 'காண்டற்கு அரிய கடவுள் கண்டாய். கருதுவார்க்கு ஆற்ற எளியான் கண்டாய்' (6; 23; 1) 'நிலம்.........காயம்' - மண் முதலிய ஐம்பெரும் பூதங்கள். இறைவன் அட்டமூர்த்தியாய் விளங்குதல் பற்றி 'நிலம்......வெளிமன்னிய தூ ஒளியாய்' என்றருளினார். உனையே தொழுது உன்னுமவர்க்கு அளியாய்- 'ஆமாத்தூரம் மான்றன் சாம்பல் அகலத்தார் சார்பல்லாற் சார்பிலமே'— (180 - 3) என்றருளியவாறு சிவனையே தொழுது தியானிப்பவர்க்குத் திருவருட்பேறு எய்தும் என்பது தாற்பரியம்.

5. அசைத்தவன் - கட்டியவன். நண்ணி அசைத்தவன் என்க. நடம் - திருக்கூத்து. விடம்...மிடறு - திருநீலகண்டனே. விகிர்தன் - விரூபாக்கன் முதலிய நிலைமையன். 'விளையாடவல்ல விகிர்தத்துருக் கொள்விமலன்' (ப. 219. பா, 10) கடல் நண்ணு கழிப்பதி - கடற்கரைக் கழியிலுள்ள தலம். உடல்

பிறையார்சடை யாய்பெரி யாய்பெரிய
மறையார்தரு வாய்மையி னுயுலகிற்
கறையார்பொழில் சூழ்கழிப் பாலையுளாய்
இறையார்கழ லேத்த விடர்கெடுமே. 6

முதிருஞ்சடை யின்முடி மேல்விளங்குங்
கதிர்வெண்பிறை யாய்கழிப் பாலையுளாய்
எதிர்கொண்மொழி யாலிரந் தேத்துமவர்க்
கதிரும்வினை யாயின வாசறுமே. 7

எரியார்கணை யாலெயி லெய்தவனே
விரியார்தரு வீழ்சடை யாயிரவிற்
கரிகாடலி னுய்கழிப் பாலையுளாய்
உரிதாகி வணங்குவ னுன்னடியே. 8

---

நண்ணி வணங்குவன் - அஷ்டாங்க நமஸ்காரம் செய்வேன். உன்அடியே - ஏகாரம் பிரிநிலை. 'தோற்றிய திதியே, என்புழி "ஏகாரம் இயைபின்மை நீக்குதற்கும், பிறிதினியைபு நீக்கு தற்கும் பொதுவாய் நின்ற பிரிநிலை" என்ற சிவஞானபோதச் சிற்றுரைப் பகுதியைக்காண்க. உடன் எனப்பிரித்தல் பொருந் தாது. நண்ணுதற்குச் செயப்படுபொருள் நிலமும் திருவடியும்.

6. ஆர் - பொருந்திய. பெரியாய் - முழு முதல்வனே. பெருமை - பரத்துவம். பெரியமறை ஆர்தரு வாய்மையினுய் - வேதத்திற் சொல்லப்பட்ட உண்மைப் பொருளானவனே. மகர மெய் விரித்தல் விகாரம். இறை ஆர் கழல் - (எங்கும்) தங்குத லுடைய திருவருளாகிய கழல். இறை - இறைமையும் ஆம்.

7. கதிர் வெண்பிறை :- வெண்மை கதிர்க்கும் பிறைக் கும் உரியது. எதிர்கொள்மொழி - முன்னிலை மொழியாகிய துதிகள். அதிரும் நடுக்கத்தை விளைக்கும். ஆயின ஆசு - ஆன வையாகிய குற்றங்கள், பெயரெச்சமும் ஆம். "அரன்பணியில் நின்றிடவும் அகலுங்குற்றம்" "ஆசுபடுமலமாயை அருங்கன்மம் அனைத்தும் அகலும்". (சித்தியார் பா. 304, 291.)

8. எரி ஆர்கணை - அக்கினியை நுனியிற்பெற்ற திருமா லாகிய பாணம். எயில் - (முப்புரம்) மும்மதில். கரிகாடல் - கரிந்த காடு. கழிகாடலனே (பதி 156. பா. 3.) கழிகாடு ஆடலனே என்பதன் விகாரம் என்ருருமுளர். உரிது - உரியது.

நலநாரண னான்முக னண்ணலுறக்
கனலானவ னேகழிப் பாலையுளாய்
உனவார்கழ லேதொழு துன்னுமவர்க்
கிலதாம்வினை தானெயி லெய்தவனே. 9

தவர்கொண்ட தொழிற்சமண் வேடரொடுந்
துவர்கொண்டனர் நுண்டுகி லாடையரும்
அவர்கொண்டன விட்டடி களுறையும்
உவர்கொண்ட கழிப்பதி யுள்குதுமே. 10

கழியார்பதி காவல னைப்புகலிப்
பழியாமறை ஞானசம் பந்தனசொல்
வழிபாடிவை கொண்டடி வாழ்த்தவல்லார்
கெழியாரிமை யோரொடு கேடிலரே. 11

திருச்சிற்றம்பலம்

---

9. நலம் - காத்தற்றொழிலாகிய நன்மை, அழகும் ஆம். உன - உன்னுடைய. (ஆறனுருபு பன்மை பா. 1. பார்க்க). உன்னுமவர் - தியானம் புரிபவர். எயில் எய்தவன் - திரிபுராரி, முப்புரமெரித்த முதல்வன். வினை தான் இலதாம் என்க.

10. சமண் வேடர்க்குரிய தொழிலன்று. தவர் (தவத்தோர்) க்குரிய தொழிலை (ப்போலியா) க்கொண்டவர். துவர் - பழுப்புநிறம். நுண்துகில் - மெல்லிய துகில். துகில் - ஆடை; ஈண்டு இருபெயரொட்டு, அவர் - அப் புறப்புறச்சமயத்தார். கொண்டன-கொண்ட கொள்கைகள், வினையாலணையும் பெயர், அடிகள் - பரமேசுவரன். உவர் கொண்ட கழிப்பதி - உவர் நீர் கொண்ட கடற்கழியிலுள்ள பாலைப்பதி. 'உள்குதும்' என முதற்பாட்டிற் கூறியதே முடிவிலுங் கூறியதால் சிறப்பாகத் தியானம்புரிதற்குரிய தலமென்றுணர்க. மூவர் திருப்பதிகங்களும் இத்தலத்தின் தனிச் சிறப்பை விளக்குகின்றன.

11. காவலன் - சிவபிரான். 'மறைஞானசம்பந்தன்' என்ற திருப்பெயர் 'வேதநெறி தழைத்தோங்கப் புனிதவாய் மலர்ந் தழுத சிறப்பிற் பெற்றது. அகரம் - ஆறனுருபு பன்மை. வழிபாடு இவை - இத்திருப்பதிகப் பாடல் வழிபாடு. இமையோரொடு கெழியார் - வானோரொடு பொருந்தி விளங்குவார். கேடு இலர் - பிறவி முதலாய கேடு இல்லாதவராவர்.

## 22 திருக்குடவாயில்

### 158 பதிகவரலாறு

தமிழ்விரகர் அரதைப் பெரும்பாழி, திருச்சேறை, திருநாலூர் என்னும் தலங்களை வழிபட்டபின், குடவாயிலை அடைந்து பெருங்கோயிலை வணங்கிப் பாடியது இத்திருப் பதிகம்.

**பண் - இந்தளம்**

திருச்சிற்றம்பலம்

திகழுந்திரு மாலொடு நான்முகனும்
புகழும்பெரு மானடி யார்புகல
மகிழும்பெரு மான்குட வாயின்மன்னி
நிகழும் பெருங் கோயி னிலாயவனே. 1

ஓடுந்நதி யும்மதி யோடுரகம்
சூடுஞ்சடை யன்விடை தொல்கொடிமேல்
கூடுங்குழ கன்குட வாயிறனில்
நீடும்பெருங் கோயி னிலாயவனே. 2

---

1. திகழும் - அவர் அவர்க்குள்ள புவனங்களில் விளக்கம் பெறும். புகல - விரும்பித்துதிக்க. நிகழும் - பிரசித்தி பெற்றுள்ள. (பா. 11 இல்) 'பெருங்கோயில்' என்று உணர்த்தியதால் ஆசிரியர் திருவுள்ளம் அதனது பெருமையில் ஈடுபட்டமை புலனாகும். வேறு சில தலங்களிலும் கோயிற்பெருமை கூறப்பட்டுளது.

2. நதி - கங்கை. மதி - பிறை. உரகம் - பாம்பு, மார்பால் நகர்வது. உரம் - மார்பு. கம் - செலவு. தொல் கொடி - பழங் கொடி, 'கொடிமேல் விடைகூடும்' என்றியைக்க. குடவாயில் தனில் நீடும் பெருங்கோயில்' என்றதால், அதன் பழமையும் பெருமையும் விளங்கும்,

கலையான்மறை யான்கன லேந்துகையான்
மலையாளவள் பாக மகிழ்ந்தபிரான்
கொலையார்சிலை யான்குட வாயிறனில்
நிலையார்பெருங் கோயி னிலாயவனே. 3

சுலவுஞ்சடை யான்சுடு காடிடமா
நலமென்முலை யாணகை செய்யநடம்
குலவுங்குழ கன்குட வாயிறனில்
நிலவும்பெருங் கோயி னிலாயவனே. 4

என்றன்னுள மேவி யிருந்தபிரான்
கன்றன்மணி போன்மிட றன்கயிலைக்
குன்றன்குழ கன்குட வாயிறனில்
நின்றபெருங் கோயி னிலாயவனே. 5

அலைசேர்புன லன்னன லன்னமலன்
தலைசேர்பலி யன்சது ரன்விதிரும்
கொலைசேர்படை யன்குட வாயிறனில்
நிலைசேர்பெருங் கோயி னிலாயவனே. 6

---

*3 கலையான் - பீதாம்பரதாரி, திருமால். மறையான் - வேதாஆன பிரமன். கனல் - நெருப்பு. மலையாள் - இமாசல குமாரி. கொலை ஆர்சிலை:- மேருமலையாகிய வில்லுக்குக் கொலை திரிபுரசங்கார கிருத்தியம். நிலை - திருக்கோபுர நிலை.*

*4. சுலவும் - சுற்றும். நலம் - அழகு. நகைசெய்ய - மகிழ, சிரிக்க என்றுமாம். குழகன் - இளைஞன். நிலவும் - ஒளிவிடும். நிலா, நிலவு என்பன வெள்ளொளியைக் குறித்தல் அறிக.*

*5. 'என்றன் உளம் மேவி இருந்த பிரான்' என்று சிவ ஞானமுண்டார் அன்றி மற்று எவர் சொல்லத்தக்கார்? கன்றல் மணி - கன்றிய நீலமணி. கன்றன் - இளைஞன், மான் கன்றுடைய வன் எனலுமாம். மிடறன் - திருக்கழுத்தினன். மிடற்றன் என்னற்பாலது ஒற்றிரட்டாது நின்றது. எயிறன், வயிறன், கயிறன் எனல்போல. 2. 23. 1 பார்க்க.*

*6. புனல் - கங்கை. அனல் - தீ. அமலன் - மும்மலமில் லாதவன் (எண்குணத்துள் ஒன்று). தலைசேர் பலியன் - பிரமகபாலத்திற் பலி பெறுபவன். சதுரன் - மூவர்க்கும் முதல் வன். விதிரும் - நடுங்கும். படை - திரிசூலம். மழுவாயுதம் முதலியன.*

அறையார்கழ லன்னழ லன்னியலின்
பறையாழ்முழ வும்மறை பாடநடம்
குறையாவழ கன்குட வாயிறனில்
நிறையார்பெருங் கோயி னிலாயவனே. 7

வரையார்திர டோளரக் கன்மடியவ்
வரையாரவொர் கால்விரல் வைத்தபிரான்
வரையார்மதில் சூழ்குட வாயின்மன்னும்
வரையார்பெருங் கோயின் மகிழ்ந்தவனே. 8

பொன்னொப்பவ னும்புய லொப்பவனும்
தன்னொப்பறி யாத்தழ லாய்நிமிர்ந்தான்
கொன்னற்படை யான்குட வாயிறனில்
மன்னும்பெருங் கோயின் மகிழ்ந்தவனே. 9

வெயிலின்னிலை யார்விரி போர்வையினர்
பயிலும்முரை யேபகர் பாவிகள்பால்
குயிலன்குழ கன்குட வாயிறனில்
உயரும்பெருங் கோயி லுயர்ந்தவனே. 10

---

*7, அறை - ஒலி. இயலின் பறை - இசையியலின்கண் அமைந்த வாத்தியம். நடம் - திருக்கூத்து. குறையா அழகன் - பூரணாலங்காரன். அரக்கன் - இராவணன்.*

*8. வரைஆர் - மலையை ஒத்த. வரை - கயிலை. ஆர - சுமையாக அழுந்திப் ) பொருந்த. வகரமெய்விரித்தல் விகாரம். வரை ஆர்மதில் - மலைகளைப்போல உயரிய மதில்கள்; பெருங் கோயிலும் அத்தகையதே. வரையார் - வழிபாட்டை ஒழியாத அடியார் என்றும் உரைத்தல் கூடும்.*

*9. பொன் ஒப்பவன் - பிரமன், புயல் ஒப்பவன் - கார் வண்ணன், மால். தன்ஒப்பு அறியாத் தழல்ஆய், நிமிர்ந்தான் - தனக்குவமை யில்லாதானாகிச் சோதிப் பிழம்பாய் ஓங்கிப் பெருகிய பரசிவன். கொல் நல்படை:- பா, 6. பார்க்க.*

*10. நிலையார் - நிற்றலை உடையவர், வெயில் காய்பவர் என்றபடி. உரை - பிறமதபோதனை. குயிலன் - குயிலாதவன். பதியாதவன். குயிலல் - பதிதல், செய்தல், சொல்லல் எனல் இங்குப் பொருந்தாது.*

கடுவாய்மலி நீர்குட வாயிறனில்
நெடுமாபெருங் கோயி நிலாயவனைத்
தடமார்புக லித்தமி ழார்விரகன்
வடவார் தமிழ் வல்லவர் நல்லவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. கடுவாய் - வேகம் வாய்ந்த. நீர்மலி குடவாயில் என்று அதன் வளம் உணர்த்தியபடி. 'நெடுமாபெருங்கோயில்' என்றது இப்பதிகம் முழுதும்கூறியவற்ருல் உறுதிப் படுகின்றது. திருமுறைகளுள் பெருங்கோயிலையும் சிறுகோயிலையும் பிரித்துணர்த்துங் குறிப்பு மிகுதியாயுளது. 'அதிகைமாநகர்' என்பது முதலியவற்றை உணர்க. மாநகர் - பெருங்கோயில்.

---

வாட்டுவர் தத்தந் துயரைவன் கேழலின்
பின்புசென்ற
வேட்டுவர் கோலத்து வேதத் தலைவனை
மெல்விரலால்
தோட்டியல் காதன் இவன்என்று தாதைக்குச்
சூழ்விசும்பில்
காட்டிய கன்றின் கழற்றிற மானவை
கற்றவரே. —அந்தாதி 13

அவர்சென் றணுகுவர் மீள்வதிங் கென்னை
அருகர்தம்மைத்
தவர்கின்ற தண்தமிழ்ச் சைவ சிகாமணி
சண்பை என்னப்
பவர்கின்ற நீள்கொடிக் கோபுரம் பல்கதி
ரோன்பரியைக்
கவர்கின்ற சூலத் தொடுநின்று தோன்றுங்
கடிநகரே. —அந்தாதி 14

## 23 திருவானைக்கா

### *159 பதிகவரலாறு*

*திருச்சிராப்பள்ளியினின்றும் புறப்பட்டுத் திருவானைக் காவை அடைந்த பெருமானார், அங்கு வெண்ணாவில் மேவிய மெய்ப்பொருளை வணங்கி, யானை வழிபட்டதையும் கோச் செங்கட்சோழ நாயனார் செய்த அடிமையையும் அமைத்துப் பாடிய பண்ணுறு செந்தமிழ் மாலை இது.*

**பண் - இந்தளம்**

*திருச்சிற்றம்பலம்*

மழையார்மிடறு மழு வாளுடையாய்
உழையார்கர வாவுமை யாள்கணவா
விழவாரும் வெணாவலின் மேவியவெம்
அழகாவெனு மாயிழை யாளவளே. 1

கொலையார்கரி யின்னுரி மூடியனே
மலையார்சிலை யாவளை வித்தவனே
விலையாலெனை யாளும் வெணா வலுளாய்
நிலையாவரு ளாயெனு நேரிழையே. 2

---

*1. மழை ஆர் மிடறு - மேகம்போலக் கறுத்த திருக்கழுத் தினனே! உழை - மான், புல்வாய், மரை, கவரிவேறு, உழை வேறு. கரவா - திருக்கையினனே. விழவு - திருவிழாக்கள். வெண்நாவல் - ஜம்புகேச்சுரம். எம் அழகா என்னும் ஆயிழை யாள் என்க. எனும் - என்று அழைப்பாள். ஆய் இழையாள் - நுண்ணிய வேலைப்பாடமைந்த ஆபரணத்தை அணிந்தவள். ஆராய்ந்திழைத்த இழையாள் எனலுமாம்.*

*2. கரி - யானை; கரத்தை உடையது என்னுங் காரணத் தால்பெற்ற பெயர். உரி - தோல். மூடியன் - போர்வையன். மலை - மேருகிரி. சிலை - வில். விலையால் - விலைக்குப் பெறும் அடிமைத்தன்மையால். (பா. 8) நேரிழை - அன்மொழித் தொகை.*

காலா லுயிர் காலனை வீடுசெய்தாய்
பாலோடுநெய் யாடிய பால்வணனே
வேலாடுகை யாயெம் வெணுவலுளாய்
ஆலார்நிழ லாயெனு மாயிழையே. 3

சுறவக்கொடி கொண்டவ னீறதுவாய்
உறநெற்றி விழித்தவெ முத்தமனே
விறன்மிக்க கரிக்கருள் செய்தவனே
அறமிக்கது வென்னுமெ னுயிழையே. 4

செங்கட்பெயர் கொண்டவன் செம்பியர்கோன்
அங்கட்கரு ணைபெரி தாயவனே
வெங்கண்விடை யாயெம் வெணுவலுளாய்
அங்கத்தயர் வாயின ளாயிழையே. 5

---

*3. காலனைக் காலால் உயிர்வீடு செய்தாய் - யமனைத் திருவடியால் உதைத்து உயிரைப் போக்கியவனே. பால் நெய் தயிர் மூன்றும் சொல்லி நிறுத்தி, 'ஆனைந்து' என்பது சைவ சம்பிரதாயம். கோமயம், கோசலம் இரண்டும் திருமுறையுட் கூறப்படாமை அறிக. பால் வண்ணன் :- இறைவனுக்கு இத்தலத்தில் வழங்கிய திருப்பெயர். வேல் - திரிசூலம். ஆல் ஆர் நிழலாய் - கல்லால மரத்தின் நிழலின்கண் வீற்றிருந்து அறம் உரைத்தவனே. ஆயிழை - அன்மொழித்தொகை.*

*4. சுறவக்கொடி கொண்டவன் - மீன் கொடி உடைய மன்மதன். நீறு - சாம்பல். அது - பகுதிப்பொருள் அன்றி வேறு குறியாது, விகுதிபோல் நிற்பது. அவர் முதலியன அங்ஙனம் நில்லா என்பது தமிழ் மரபு. நீறாய் உறவிழித்த உத்தமன் என்க. நெற்றி விழித்த - நெற்றிக்கண்ணால் விழித்த. நெற்றி - நெற்றிக்கண்; இடவாகுபெயர். உத்தமன் - மேலவர்க்கும் மேலானவன். விறல் - வலிமை. கரி - யானை.*

*5. செங்கட் பெயர் - கோச் செங்கட் சோழன் என்னும் திருப்பெயர். செம்பியர்கோன் - சோழன். அம்கண் கருணை பெரிது ஆயவன் - கண்ணிற்கு அழகாகிய கருணையில் மிக்குள்ளவன் என்றவாறு. வெம்கண் :- கண்ணில் விளங்கும் சினக் குறிப்பை உணர்த்துவது. சாதியடை. அங்கம் - உடம்பு, அவயவம் எனலுமாம். அயர்வு - சோர்வு. காதலால் நேர்ந்தது.*

குன்றேயமர் வாய்கொலை யார்புலியின்
தன்றோலுடை யாய்சடை யாய்பிறையாய்
வென்றாய்புர மூன்றை வெண்ணாவலுளே
நின்றாயரு ளாயெனு நேரிழையே. 6

* * * * 7

மலையன்றெடுத் தவ்வரக் கன்முடிதோள்
தொலையவ்விர லூன்றிய தூமழுவா
விலையாவெலும் யாளும் வெண்ணாவலுளாய்
அலசாமனல் காயெனு மாயிழையே. 8

திருவார்தரு நாரண னன்முகனு
மருவாவெரு வாவழ லாய்நிமிர்ந்தாய்
விரையாரும் வெண்ணாவலுண் மேவியவெம்
அரவாவெனு மாயிழை யாளவளே. 9

புத்தர்பல ரோடமண் பொய்த்தவர்கள்
ஒத்தவ்வுரை சொல்லிவை யோரகிலார்
மெய்த்தேவர் வணங்கும் வெண்ணாவலுளாய்
அத்தாவரு ளாயெனு மாயிழையே. 10

---

6. குன்று - கயிலை, 'புலியின் தன் தோல்' என்றும் 'புரம் மூன்றை வென்றாய்' என்றும் கொள்க. நின்றாய் - திருக்கோயில் கொண்டு வீற்றிருப்பவனே என்று எதிர்காலத்திற் கொள்க.

8. அரக்கன் - இராவணன். தொலைய - நொறுங்க. என்னும் பொருட்டாய் நின்றது. வகரமெய் விரித்தல் விகாரம். (பா. 2, பார்க்க.) அலசாமல் - அலைக்காமல், வருத்தாமல். நல்காய் - வந்து அணைந்து இன்பங்கொடுப்பாய். எனும் - என்பாள்.

9. திரு - இலக்குமி. மருவா - மருவி. வெருவா-அச்சத்தால் வாயால் அரற்றி (நிற்க) என்று ஒருசொல் வருவித்து முடிக்க. வெருவி (நிற்க) அழலாய் நிமிர்ந்தாய் என்றபடி. விரை - மணம். அரவா - பாம்பணிந்தவனே. ஹர! வா எனலும் பொருந்தும். 'எம் அரனேயோ என்றென்று'

10. அமண் - சமணர். பொய்த்தவர்கள் - மெய்த்தவரல்லாதவர்கள்; பொய்த்தவத்தையுடையவர்கள் என்று ஒரு

வெண்ணாவ லமர்ந்துறை வேதியனைக்
கண்ணார்கமழ் காழியர் தந்தலைவன்
பண்ணோ டிவைபாடிய பத்தும்வல்லார்
விண்ணோரவ ரேத்த விரும்புவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

மொழியும் தொடர்மொழியுமாக் கொள்ளலாம். ஒத்தவ்வுரை:- வகரம் விரித்தல் விகாரம். ஓரகிலார் - உணரமாட்டார்.

11. வேதியன் - வேதத்தைப்படைத்த பரசிவன். வல்லவரை விண்ணோர் ஏத்த விரும்புவர் என்றபடி. திருப்பதிகம் - 152. பா. 11. 'கண்ணாருங் காழியர்' என்றது காண்க. கண் - மூங்கில்; 'வேணுவனம்'. ஞானக்கண் என்றுகொண்டு. அதையுடையார்க்கு ஆகுபெயராக்கலுமாகும். திருஞானசம்பந்த சுவாமிகள் பண்ணோடுபாடிய உண்மை ஈண்டும் புலனாகின்றது.

---

நகரங் கெடப்பண்டு திண்தேர் மிசைநின்று
நான்மறைகள்
பகரங் கழலவ னைப்பதி னாரு
யிரம்பதிகம்
மகரங் கிளர்கடல் வையந் துயர்கெட
வாய்மொழிந்த
நிகரங் கிலிகலிக் காழிப் பிரான்என்பர்
நீள் நிலத்தே. —அந்தாதி 15

நிலமே றியமருப் பிற்றிரு மாலும்
நிலம்படைத்த
குலமே றியமலர்க் கோகன தத்தய
னுங்கொழிக்குஞ்
சலமே றியமுடி தாள்கண் டிலர்தந்தை
காண அன்று
நலமே றியபுகழ்ச் சம்பந்தன் காட்டிய
நாதனையே. —அந்தாதி 16

# 24 திருநாகேச்சரம்

## 160 பதிகவரலாறு

ஆதிசேடன், சிவராத்திரியொன்றில், நான்கு யாமங்களிலும் முறையே திருவலஞ்சுழி, திருநாகேச்சுரம், திருப்பாம்புரம், திருநாகைக்காரோணம் என்னும் நான்கு திருத்தலங்களையும் அடைந்து பூசித்த வரலாறு 'மாநாகம் அருச்சித்த மலர்க்கமலத் தாள்வணங்கி' என்பதிற் குறித்தருளினர் அருண்மொழித்தேவர். அவற்றுள் ஒன்முன திருநாகேச்சுரத்தில், காழிப் புரவலனுர் சென்று பரவுவார் பிணிதீர்க்கும் நலம் போற்றிப் பாடியது இது.

### பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

பொன்னேர்தரு மேனிய னேபுரியும்
மின்னேர்சடை யாய்விரை காவிரியின்
நன்னீர்வய ளுகேச் சுரநகரின்
மன்னேயென வல்வினை மாய்ந்தறுமே 1

சிறவார்புர மூன்றெரி யச்சிலையில்
உறவார்கணை யுய்த்தவ னேயுயரும்
நறவார்பொழி ளுகேச் சுரநகருள்
அறவாவென வல்வினை யாசறுமே. 2

---

1. பொன் ஏர்தரு மேனியன் - பொன்னைப்போல ஒளிரும் திருமேனியுடையவன். ஏர் - உவமவுருபு. விரை (காவிரி) நீர் - விரைந்தோடும் (காவிரி) நீர். நீர்வயல் - நீர் நிலவளம் உணர்த்தியவாறு. மன்னே - இறைவனே. வல்வினை மாய்ந்து அறும் என்றதுபோல இத்திருப்பதிகம் முழுதும்பாடி யருளியதால் இத்தலவழிபாடு நம் பழவினைப் பற்றறுக்கும் என்பது உறுதியாதலறிக. என - என்று துதிக்க. மேலும் இவ்வாறே கொள்க.

2. சிறவார் - சிறக்காதவர் (திரிபுரத்தசுரர்). சிலையில் உற - மேருவில்லிற் பொருந்த. வார்கணை - நீண்ட அம்பு.

கல்லானிழல் மேயவ னேகரும்பின்
வில்லானெழில் வேவ விழித்தவனே
நல்லார்தொழு நாகேச்சுர நகரில்
செல்வாவென வல்வினை தேய்ந்தறுமே. 3

நகுவாண்மதி யோடர வும்புனலும்
தகுவார்சடை யின்முடி யாய்தளவம்
நகுவார்பொழி ஞகேச் சுரநகருள்
பகவாவென வல்வினை பற்றறுமே. 4

கலைமான்மறி யுங்கன லும்மழுவும்
நிலையாகிய கையின னேநிகழும்
நலமாகிய நாகேச் சுரநகருள்
தலைவாவென வல்வினை தானறுமே. 5

---

உய்த்தவன் - செலுத்தியவன். உயரும் பொழில். நறவு ஆர் பொழில். நறவு - கள், தேன். நகர் - திருக்கோயில். அறவா - தருமசொரூபீ! ஆசு - குற்றம்.

3. கல் ஆல் நிழல் மேயவன் - கல்லாலின் நிழலில் வீற்றிருந்தவன். கரும்பின் வில்லான் - கரும்பை வில்லாகவுடைய மன்மதன். எழில் - அழகு. ஆகுபெயராய் உடம்பைக் குறித்தது. விழித்தவன் - தீவிழி திறந்து எரித்தவன். நல்லார்-நன்னெறியாகிய சிவஞானத்தை உடையார், நற்பண்புடையாருமாம். செல்வா - சென்றடையாத திருவுடையானே!

4. நகு - விளங்குகின்ற. வான்மதி - விண்ணிலூரும் திங்கள்; வெண்டிங்களுமாம். அரவு - பாம்பு. புனல் - கங்கை. தகு - தக்க. வார் - நீண்ட. தளவம் - முல்லை. நகுவார் - பல்லைக் காட்டிச் சிரிப்பார் (போலப்பூக்கும் பொழில்.) தளவம் நகும் வார் பொழில் எனல் வெளிப்படை. பகவா - கடவுளே; ஷாட்குண்யனே.

5. கலைமான்மறி - ஆண் மான்கன்று. கனல் - தீ. மழு - மழுவாயுதம். நிலை - நிற்றல். நிகழும் நலம் - உலகப் பிரசித்தி பெற்ற வினைதீர்தலாகிய நன்மை. நகர் - திருக்கோயில்.

குரையார்கழ லாட நடங்குலவி
வரையான்மகள் காண மகிழ்ந்தவனே
நரையார்விடை யேறுநா கேச்சுரத்தெம்
அரைசேயென நீங்கு மருந்துயரே. 6

முடையார்தரு வெண்டலை கொண்டுலகில்
கடையார்பலி கொண்டுழல் காரணனே
நடையார்தரு நாகேச் சுரநகருள்
சடையாவென வல்வினை தானறுமே. 7

ஓயாத வரக்க னொடிந்தலற
நீயார்அருள் செய்து நிகழ்ந்தவனே
வாயார வழுத்துவர் நாகேச்சுரத்
தாயேயென வல்வினை தானறுமே. 8

நெடியானொடு நான்முக னேடலுறச்
சுடுமாலெரி யாய்நிமிர் சோதியனே
நடுமாவய லுகேச் சுரநகரே
இடமாவுறை வாயென வின்புறுமே. 9

---

*6. குரை - ஒலி. நடம் - நிருத்தம். வரையான் - இமாசல ராசன். நரை - வெண்மை. ஆர் - பொருந்திய. விடையேறு:- (தொல், மரபியல். சூ. 37, 38 பார்க்க) அரைசு - மொழியிடை நின்ற ஐகாரம் போலி. அரசனே என்று விளித்தது. நீங்கு தற்கு அரியதுயரமும் நீங்கும் என்றவாறு.*

*7. முடை - புலால், நாற்றமுமாம். கடை - கடைவாயில். காரணன் - முதல்வன். நடை - ஒடுக்கம். சடையா - (ஞான மான) சடையனே. 'நுண்சிகை ஞானமாம்'.*

*8. ஓயாத - (தான் செய்யுங் குற்றத்தை உணர்தற்கு உணர்வில்) நுணுகாத, இடைவிடாத என்றலுமாம். நீ - தேவரீர். ஆரருள் - பூரணகருணை. வாயார வழுத்துவர் - "வாயாரப்பாடுந் தொண்டர்". தாயே - 'தாயாய் முலையைத் தருவானே' (முத்திநிச்சயப்பேருரை பக்கம் 78–9, 192–3ல் உள்ள விளக்கம் பார்க்க). 2–86–4 குறிப்புரை காண்க.*

*9. நெடியான் - விக்கிரமன்; திருமால். நேடல் - அடி முடி தேடுதல். மால் - பெரிய. சோதியன் - தீப்பிழம்பானவன்*

மலம்பாவிய கையொடு மண்டையதுண்
கலம்பாவியர் கட்டுரை விட்டுலகில்
நலம்பாவிய நாகேச் சுரநகருள்
சிலம்பாவெனத் தீவினை தேய்ந்தறுமே. 10

கலமார்கடல் சூழ்தரு காழியர்கோன்
தலமார்தரு செந்தமி ழின்விரகன்
நலமார்தரு நாகேச்சுரத் தரனைச்
சொலன்மாலைகள் சொல்ல நிலாவினையே. 11

திருச்சிற்றம்பலம்

---

நடு - நாற்று நடுகின்ற. மாவயல் - நீள் கழனி. நகரே இடமா உறைவாய் - திருக்கோயிலே உறையுளாக எழுந்தருளியவனே. இன்பு - இம்மை மறுமை வீட்டின்பம்.

10. மலம் - அழுக்கு. பாவிய - பரவிய. மண்டை - உண்வு கொள்ளும்பொருட்டு, விரிந்த பனையோலை முதலியவற்றால் செய்யப்பட்டது. உண்கலம் - உண்ணும் பாத்திரம். பாவியர் - தீவினையுடையவர். கட்டுரை - கட்டிச்சொல்லும் பொய்மொழி. சிலம்பா - சிலம்பணிந்தவனே, கயிலை மலையானே.

11. கலம் - மரக்கலம். தலம் - சிவதலம். விரகன் - வல்லவன், அறிஞன். சொலல் - சொல்லுதலையுடைய, புகழுடைய. சொல் - புகழ். சொல்ல - இசையுடன் பாட. வினையில்லா என்க.

---

நாதன் நனிபள்ளி சூழ்நகர் கானக
மாக்கிஅஃதே
போதின் மலிவயல் ஆக்கிய கோன்அமர்
பொற்புகலி
மேதை நெடுங்கடல் வாருங் கயலோ
விலக்குனது
காதின் அளவு மிளிர்கய லோசொல்லு
காரிகையே. —அந்தாதி 17

# 25 திருப்புகலி

## *161 பதிகவரலாறு*

*சீகாழிக்குரிய பதிகவரலாறு காண்க.*

### பண் - இந்தளம்

### திருச்சிற்றம்பலம்

உகலியாழ்கட லோங்குபாருளீர்
அகலியாவினை யல்லல்போயறும்
இகலியார்புர மெய்தவன்னுறை
புகலியாநகர் போற்றிவாழ்மினே. 1

பண்ணியாள்வதோ ரேற்றர்பான்மதிக்
கண்ணியார்கமழ் கொன்றைசேர்முடிப்
புண்ணியன்னுறை யும்புகலியை
நண்ணுமின்னல மானவேண்டிலே. 2

வீசுமின்புரை காதன்மேதகு
பாசவல்வினை தீர்த்தபண்பினன்
பூசுநீற்றினன் பூம்புகலியைப்
பேசுமின்பெரி தின்பமாகவே. 3

---

**1.** உகலி - தாவி. (உகளிஎன்பதன்போலி) உகுதலை யுடைய எனலுமாம். ஆழ் - ஆழ்ந்த. பார் - பூமி. உளீர் - உள்ளவர்களே!. வினை அகலியா - வினைகள் பெருகாமல் ஒழியும். அல்லல் போய் அறும். இகலியார் - பகைவர். புகலியாம் நகர் - சீகாழித் திருக்கோயிலை. போற்றி - வழிபட்டு. வாழ்மின் - இன்பவாழ்க்கை எய்துங்கள்.

**2.** பண்ணி - அலங்காரம் செய்து. ஏறி ஊர்வது இங்கு ஆள்வதாயிற்று. ஏற்றர் - எருதுடையவர். மதிக்கண்ணி - பிறையாகிய கண்ணி. தலையிற் சூடுவதும் காம்புகளை ஒருபால் வைத்துக் கட்டுவதுமாகிய பூங்கண்ணியாகப் பிறையைக்கொண்டவன் சிவன். நலம் ஆன - நலங்களானவை. வேண்டில் - விரும்பினுல்.

**3.** வீசும் மின் புரை - வீசுகின்ற மின்னலை ஒத்த, பெரிது ஆகப் பேசுமின் என்க, பெரிது இன்பம் - பேரின்பம் எனலுமாம்.

கடிகொள்கூவிள மத்தம்வைத்தவன்
படிகொள்பாரிடம் பேசும்பான்மையன்
பொடிகொண்மேனியன் பூம்புகலியுள்
அடிகளையடைந் தன்புசெய்யுமே. 4

பாதத்தாரொலி பல்சிலம்பினன்
ஓதத்தார்விட முண்டவன்படைப்
பூதத்தான்புக லிந்நகர்தொழ
ஏதத்தார்க்கிட மில்லையென்பரே. 5

மறையினாறெலி மல்குவீணையன்
நிறையினார்நிமிர் புன்சடையனெம்
பொறையினானுறை யும்புகலியை
நிறையினாற்றொழ நேசமாகுமே. 6

கரவிடைமனத் தாரைக்காண்கிலான்
இரவிடைப்பலி கொள்ளுமெம்மிறை
பொருவிடையுயர்த் தான்புகலியைப்
பரவிடப்பயில் பாவம் பாறுமே. 7

---

4. கடி - மணம், கூவிளம் - வில்வம், மத்தம்-ஊமத்தம்பூ. படி - உருவம். (நாற்றம் உடைமை ஆகிய) பண்புமாம். பாரிடம் - பூமி, படிகொள்பாரிடம் - பெரிய உருவங்கொண்ட பூதகணங்கள் என்பதும் பொருந்தும், பொடி - திருநீற்றுப் பொடி. அன்பு - பக்தி.

5. பாதத்து - திருவடிகளில், ஆர் - பொருந்திய. ஒலி - ஒலிக்கின்ற. ஓதத்து - பாற்கடலில். படைப்பூதத்தான் - பூதப்படை உடையவன். ஏதத்தார்க்கு - துன்பத்திற்கு. ஏதம் - துன்பம், இங்கு ஆர் விகுதி இழிவுபற்றியது. 'பசியார்' என்பதுபோன்றதொரு வழக்கு.

6. மறையினான் - வேதகர்த்தா. வீணையன் - "மிக நல்ல வீணைதடவி". நிறை - நிறைவு. பொறை - பொறுமை. எட்டுப் பூக்களுள் ஒன்று. ஞானபூஜைக்குரியது. நிறை - சிவனையன்றி வேறு ஒன்றும் வழிபாட்டிற்குக் குறிக்கோளாக் கொள்ளாத கற்பு. நேசம் - அன்பு.

7. கரவு - வஞ்சகம். பொருவிடை - இடபக்கொடி. உயர்த்தவன் - எடுத்துப் பிடித்தவன். பரவிட - வாழ்த்த. பாறும் - அழியும்.

அருப்பினார்முலை மங்கைபங்கினன்
விருப்பினனரக் கன்னுரஞ்செகும்
பொருப்பினன்பொழி லார்புகலியூர்
இருப்பினனடி யேத்திவாழ்த்துமே. 8

மாலுநான்முகன் றானும்வார்கழற்
சீலமும்முடி தேடநீண்டெரி
போலுமேனியன் பூம்புகலியுட்
பாலதாடிய பண்பனல்லனே. 9

நின்றுதுய்ப்பவர் நீசர்தேரர்சொல்
ஒன்றதாகவை யாவுணர்வினுள்
நின்றவன்னிக மும்புகலியைச்
சென்றுகைதொழச் செல்வமாகுமே. 10

---

8. அருப்பு - அரும்பு. ஆர் - ஒத்த. விருப்பினன் - பக்தன். உரம் - வலிமை. செகும் - அழிக்கும். பொருப்பு - மலை. இருப்பு- வாசம். விருப்பு, பொருப்பு இருப்பு மூன்றும் இன்சாரியையும் ஆன்விகுதியும் பெற்றுப், பெயரடியாகப் பிறந்த பெயராயின. விருப்பும் இருப்பும் தொழிற்பெயர்.

9. கழல்சீலம் - திருவடிப்பான்மை. 'சீலமோ உலகம் போலத் தெரிப்பரிது' (சித்தியார். 50). முடியும் என்று உம்மை கூட்டிக்கொள்க. எரிபோலும் மேனியன் - தீவண்ணன். பாலது ஆடிய - பாலால் அபிடேகஞ் செய்யப்பெற்ற. நல்லன் - சிவன். அல்லனே என வினாவாக்கொள்ளலும் அமையும். புகலி உட்பாலது ஆடிய என்பதற்குத் திருப்புகலியின் உட்பக்கத்தி லுள்ள திருக்கோயிலில் திருக்கூத்தியற்றிய எனலுமாம்.

10. துய்ப்பவர் - உண்பவர். 'நின்றுண்போர்' எனப் பிற இடங்களில் வருதலும் காண்க. (பதிகம். 38. 95). 'நின்றுண் சமணர் இருந்துண்தேரர்' (பதிகம். 71). ஒன்று - ஒருபொருள், வையா - வைத்து மதிக்காத. செல்வம் - இம்மை, மறுமை, வீட்டுக்குரிய செல்வங்கள்.

புல்லமேறிதன் பூம்புகலியை
நல்லஞானசம் பந்தனுவிறுற்
சொல்லுமாலையீ ரைந்தும்வல்லவர்க்
கில்லையாம்வினை யிருநிலத்துளே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. புல்லம் - எருது. 'புல்வாய்' போன்றதொரு காரணப் பெயர். ஏறி - ஏறுகின்றவன். இகர விகுதியுடைய பெயர்ச் சொல். மாலை ஈர் ஐந்து - இப்பத்துப்பாக்களாலாகிய மாலையை. இருநிலம் - 'மாநிலம்' 'பெரும்பூமி'.

---

கைம்மையி னுன்நின் கழல்பர வாதுகண்
டார்க்கிவனோ்
வன்மைய னேஎன்னும் வண்ணம் நடித்து
விழுப்பொருவோ(டு)
இம்மையில் யான்எய்தும் இன்பங் கருதித்
திரிதருமத்
தன்மையி னேற்கும் அருளுதி யோசொல்லு
சம்பந்தனே. —அந்தாதி 18

பந்தார் அணிவிரற் பங்கயக் கொங்கைப்
பவளச்செவ்வாய்க்
கொந்தார் நறுங்குழல் கோமள வல்லியைக்
கூறுஞ்சீர்
நந்தா விளக்கினைக் கண்டது நான்எப்
பொழுதுமுன்னுஞ்
சந்தார் அகலத் தருகா சனிதன்
தடவரையே. —அந்தாதி 19

## 26 திருநெல்வாயில்

### 162 பதிகவரலாறு

ஞானப்பாலுண்ட பெருமான் மன்றுடும் ஐயன் திருக்கூத்துக் கும்பிட்டு, திருக்கழிப்பாலையைப் பணிந்துபாடி, கொன்றைச் செம்மாலைவேணித் திருவுச்சி மேவியுறை அம்மானைப்பாடிய அருந்தமிழ்ப் பதிகம் இது.

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

புடையினார்புள்ளி கால்பொருந்திய
மடையினார்மணி நீர்நெல்வாயிலார்
நடையினால்விரற் கோவணந்நயந்
துடையினாரெம துச்சியாரே. 1

வாங்கினார்மதின் மேற்கணைவெள்ளந்
தாங்கினார்தலை யாயதன்மையர்
நீங்குநீரநெல் வாயிலார்தொழ
ஓங்கினாரெம துச்சியாரே. 2

---

1. புடையின் - வயற்பக்கத்தில். ஆர் - பொருந்திய. புள்ளி - நண்டு. கால் - வாய்க்கால். மடையின் - நீர்மடையில். ஊர்ப்பெயர்க்கேற்ப வளம் கூறப்பட்டிருக்கின்றது. நடை - ஒழுக்கம். நால்விரற்கோவணம் ஐவிரற்கோவணம் 'உடைதனில் விரற்கோவண வாடை' (1. 39. 2) 'ஐவிரற் கோவணவாடை பாறருமேனியர்' (1–44–6) இரண்டும் இவர் திருமுறையுட் கூறப்பட்டன. நயந்து-விரும்பி. உடையினார்-உடை உடுத்தவர். உச்சியார் என்பது இத்தலத்து இறைவர் திருப்பெயர், நெல்வாயிலார், உடையினார் என்பன இறைவரைக் குறிப்பன.

2. மதில்மேல் - திரிபுரத்து மதிலின்மீது. கணை - பாணம். வாங்கினார் - (வில்லை) வளைத்(துஎய்)தார். வெள்ளம் - கங்கைப் பெருக்கு. தலையாயதன்மையர் - முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம்பொருளாந்தன்மை முதலிய ஆறும் உடையவர்.

நிச்சலேத்துநெல் வாயிலார்தொழ
இச்சையாலுறை வாரெமீசனர்
கச்சையாவதோர் பாம்பினர்கவின்
இச்சையாரெம துச்சியாரே. 3

மறையினர்மழு வாளினர்மல்கு
பிறையினர்பிறை யோடிலங்கிய
நிறையினரநெல் வாயிலார்தொழும்
இறைவனரெம துச்சியாரே. 4

விருத்தனகிவெண் ணீறுபூசிய
கருத்தனர்கன லாட்டுகந்தவர்
நிருத்தனரநெல் வாயின்மேவிய
ஒருத்தனரெம துச்சியாரே. 5

---

...ஷாட்குண்யர். எண்குணமுமாம். நீங்கும் நீர - ஓடும் நீர்ப் பெருக்காகிய வளமுடைய. நீள்கு என்பதன் மரூஉவே நீங்கு என்பது. 'நீங்கிற்றெறூஉம் குறுகுங்கால் தண் என்னுந் தீ' (1104) என்னுங் குறளுக்குப் பரிமேலழகர் எழுதிய உரையை நுணுகி நோக்கின் இது விளங்கும்.

3. நிச்சல் - நித்தல், நாடோறும். கச்சை - அரையிற் கட்டும் கயிறு, வடம். அரவக்கச்சு. கவின் - அழகு. இச்சையார்- உயிரின் இச்சைக்குக் காரணமான இச்சாசத்தியை உடையவர். 'இச்சை உயிர்க்கு அருள்நேசம் ஆகும்' (சிவஞானசித்தியார்,83)

4. மறையினர் - வேதகர்த்தா. மழுவாளினர் - மழுப்படை யுடையவர். 'பிறையோடு இலங்கிய நிறையின் ஆர் அம் நெல்' என்பது வானளாவ வளர்ந்து நிறைய விளங்கிய அழகிய நெற்பயிர் என்று குறித்தது. 'விண்தயங்கு நெல்' என (10. பா.) வருதல் காண்க. நிறையினர் - கற்புடைய கங்கா தேவியை உடையவர் எனலுமாம்.

5. விருத்தன் - முதியவன். கருத்தன் - தலைவன். கன லாட்டு - தீயில் ஆடல். உகந்தவர் - விரும்பியவர். நிருத்தனர் - கூத்தர். ஒருத்தனர் - தனிமுதல்வர்.

காரினார்கொன்றைக் கண்ணியார்மல்கு
பேரினார்பிறை யோடிலங்கிய
நீரினாரநெல் வாயிலார்தொழும்
ஏரினாரெம துச்சியாரே. 6

ஆதியாரந்த மாயினார்வினை
கோதியார்மதில் கூட்டழித்தவர்
நீதியாரநெல் வாயிலார்மறை
ஓதியாரெம துச்சியாரே. 7

பற்றினானரக் கன்கயிலையை
ஒற்றினாரொரு கால்விரலுற
நெற்றியாரநெல் வாயிலார்தொழும்
பெற்றியாரெம துச்சியாரே. 8

நாடினார்மணி வண்ணனான்முகன்
கூடினார்குறு காதகொள்கையர்
நீடினாரநெல் வாயிலார்தலை
ஓடினாரெம துச்சியாரே. 9

---

6. காரின் ஆர் கொன்றை - கார்காலத்தில் மலரும் கொன்றைமலர். 'கார்நறுங் கொன்றை' (புறம் - கடவுள் வாழ்த்து) மல்குபேரினார் - நிறைந்த பெயர் (புகழ்) உடையார், நீரினார் - கங்கை(ச்சடை)யர். இலங்கிய-விளங்கிய, பிறைக்கும், நீர்க்கும் பொது அடைமொழியாகக்கொள்ள லும் ஆம். ஏரினார் - அழகர்.

7. ஆதியார் - முதல்வர், அந்தமாயினார்-(சங்காரகாரணர்) முடிவுமானார். வினை கோதியார் - குரோத வினையுடையார். திரிபுரத்தசுரர். குரோதி என்பதன் திரிபு கோதி என்பது. 'கோதித்த நெஞ்சன்' (பாரதம்). மறையோதியார் - வேதங்களை ஓதியருளியவர்.

8. நெற்றி - இராவணனது உச்சி. ஆர் - பொருந்த. பெற்றியார் - தன்மையையுடையவர். ஒரு கால்விரல் உற நெற்றி ஆர ஒற்றினார் என்று இயைக்க. 'திருவொற்றுடை'.

9. நாடினார் - விரும்பினவர், தேடினவர். மணிவண்ணன் - திருமால், கூடினார் - கூடி. முற்றெச்சம். குறுகாத - (கண்டு)

குண்டமண்டுவர்க் கூறைமூடர்சொற்
பண்டமாகவை யாதபண்பினர்
விண்டயங்குநெல் வாயிலார்நஞ்சை
உண்டகண்டரெம் முச்சியாரே. 10

நெண்பயங்குநெல் வாயிலீசனைச்
சண்பைஞானசம் பந்தன்சொல்லிவை
பண்பயன்கொளப் பாடவல்லவர்
விண்பயன்கொளும் வேட்கையாளரே. 11

திருச்சிற்றம்பலம்

---

நெருங்காத. நீடினர் - சோதிப்பிழம்பாக நீண்டார். தலை ஓடினர் - பிரமகபாலத்தை உடையவர்.

*10.* குண்டு அமண் - குண்டராகிய அமணர். துவர்க் கூறை - துவர்ப்பேறிய ஆடை. பண்டம் - பொருள். விண் தயங்கு - வான் (அளாவி) விளங்கிய, நஞ்சு - விடம்.

*11.* நெண்பு - நண்பு. அயங்கு - அசங்கிய. (பதி. 140.) சண்பை - சீகாழி, 'பண்பயன்கொளப் பாடவல்லவர்' என்றதால் தேவாரம் பாடும்முறையை அறியும் இன்றியமையாமை புலனாகின்றது. விண் - வீட்டுலகம். பயன் - பேரின்பம், இம்மை மறுமைப் பயனுமாம். வேட்கையாளர் - விருப்பத்தை ஆள்பவர்.

---

வரைகொண்ட மாமதிற் சண்பைத் தலைவனை
வாழ்த்தலர்போல்
நிரைகொண்டு வானோர் கடைந்ததில் நஞ்சு
நிகழக்கொலா
நுரைகொண்டு மெய்ப்பரத் துள்ளஞ் சுழலநொந்
தோர்இரவுந்
திரைகொண் டலமரும் இவ்அகல் ஞாலஞ்
செறிகடலே —அந்தாதி 20

# 27 திருவிந்திரநீலப்பருப்பதம்

## *163 பதிகவரலாறு*

சண்பைவேந்தர் திருக்காளத்தியிலிருந்து அம்மலைத் தேனை அறிவால் நுகர்ந்தநாளில், அருந்தமிழ் வழக்கில்லாத வடக்கிலும் குடக்கிலும் உள்ள சிவதலங்களை நினைந்து பாடினர். அவை வடகயிலை, திருக்கேதாரம், கோகரணம், திருப்பருப்பதம், திருவிந்திர நீலப்பருப்பதம் என்பவை. அதனால் 'உள்க நல்கும்' என்று அருளியதை இதன் முதற் பாட்டிறுதியிற் காண்க.

**பண் - இந்தளம்**

திருச்சிற்றம்பலம்

குலவுபாரிடம் போற்றவீற்றிருந்
திலகுமான்மழு வேந்துமங்கையர்
நிலவுமிந்திர நீலபர்ப்பதத்
துலவினனடி யுள்கநல்குமே. 1

குறைவிலார்மதி சூடியாடல்வண்
டறையுமாமலர்க் கொன்றைசென்னிசேர்
இறைவனிந்திர நீலபர்ப்பதத்
துறைவினன்றனை யோதியுய்ம்மினே. 2

---

1. பாரிடம்-பூதகணம். அங்கையன்-அகங்கையுடையவன். பர்ப்பதத்து - மலைமேல். உலவினன் - உலாவியவன். உள்க - தியானம்செய்ய. நல்கும் . அருள்செய்யும்.

2. குறைவு இல் ஆர் மதி - குறைதல் இன்றி நிறைவு பொருந்திய பிறை. கடவுள் சடைமேல் உள்ள பிறைக்குக் குறைவும் அழிவும் இல்லை. உறைவினன் - வாழ்தலை உடையவன்.

என்பொனென்மணி யென்னவேத்துவார்
நம்பனன்மறை பாடுநாவினன்
இன்பனிந்திர நீலபர்ப்பதத்
தன்பன்பாதமே யடைந்துவாழ்மினே. 3

நாசமாம்வினை நன்மைதான்வரும்
தேசமார்புக ழாய செம்மையெம்
ஈசனிந்திர நீலபர்ப்பதம்
கூசிவாழ்த்துதுங் குணமதாகவே. 4

மருவுமான்மட மாதொர்பாகமாய்ப்
பரவுவார்வினை தீர்த்தபண்பினன்
இரவனிந்திர நீலபர்ப்பதத்
தருவிசூடிடு மடிகள்வண்ணமே. 5

---

3. என்பொன், என்மணி என்ன ஏத்துவார் நம்பன்-என் பொன்னே என்மணியே என்று எடுத்துப் புகழ்ந்து போற்றுவாரை விரும்பி யருள்பவன், 'நம்பும் மேவும் நசையாகும்மே' என்றார் தொல்காப்பியர். 'பாதமே' என்றதில் ஏகாரம் பிரிநிலை.

4. வினை நாசம் ஆம் என்க. நன்மைவரும். கூசி வாழ்த்துதும் - இறைவன் பெருமையையும் நம் சிறுமையையும் எண்ணிக்கூசி, வாழ்த்துவோம். 'நேசம் தன்பால் இல்லாத நெஞ்சத்து நீசர் தம்மைக் கூசன் காண் கூசாதார் நெஞ்சு தஞ்சே குடிகொண்ட குழகன்காண்' என்ற அப்பர் திருவாக்கில்வந்த கூசுதல் வேறு. இது வேறு. தேசம் ஆர் - தேசம் (முழுதும்) நிறைந்த.

5. மருவு......பண்பினன் - அம்மையப்பராகத் தொழுத அன்பர் கன்மத்தைத்தீர்த்த குணமுடையவன். இரவன்-இரத்தலைச் செய்தவன், இரவாகியவன், அன்பர் இரத்தற்குரிய வள்ளல். அருவி - மலையருவி, கங்கையுமாம். வண்ணம் - இயல்பு.

வெண்ணிலாமதி சூடும்வேணியன்
எண்ணிலார்மதி லெய்தவில்லினன்
அண்ணலிந்திர நீலபர்ப்பதத்
துண்ணிலாவுறு மொருவனல்லனே. 6

கொடிகொளேற்றினர் கூற்றுதைத்தவர்
பொடிகொண்மேனியிற் பூண்டபாம்பினர்
அடிகளிந்திர நீலபர்ப்பதம்
உடையவாண னுகந்தகொள்கையே. 7

எடுத்தவல்லரக் கன்கரம்புயம்
அடர்த்ததோர்விர லானவணையாட்
படுத்தனிந்திர நீலபர்ப்பதம்
முடித்தலம்முற முயலுமின்பமே. 8

பூவினுநெடு மாலும்போற்றுறும்
தேவனிந்திர நீலபர்ப்பதம்
பாவியாவெழு வாரைத்தம்வினை
கோவியாவருங் கொல்லுங்கூற்றமே. 9

---

*6. வேணி - சடை. எண்ணிலார் - நினையாத பகைவர். வில் - மேருவில். 'அல்லனே' ஏகாரம் வினு.*

*7. ஏற்றினர் - விடையுடையவர். கூற்று - யமன். உயிர் வேறு உடல் வேறாகக் கூறுபடுத்துவோன் கூற்றுவன். பொடி- திருநீறு. வாணர் - வாழ்நர். உகந்த - உயர்ந்த, விரும்பிய.*

*8. கரம் - கை. புயம் - தோள். அடர்த்தது - நெருங்கியது. விரலான் - விரலால். படுத்தன் - படுத்தியவன். முடித்தலம் - உச்சியிடம். உச்சியிலுள்ள ஸ்தலமுமாம். உற - அடைந்து வழிபட. முயலும் இன்பம் - நாம் அடைய முயலும் இன்பமே எளிதின் வாய்க்கும் என்றபடி.*

*9. பூவினன்-செந்தாமரை மலரிலுள்ள பிரமன். போற்று- துதி. உறும் - அடையும். பாவியாது - தியானம்பண்ணுமல். கோவியா - கோபித்து, கூற்றம் வரும் என்க.*

கட்டர்குண்டமண் டேரர்சீரிலர்
விட்டரிந்திர நீலபர்ப்பதம்
எட்டனை நினை யாததென்கொலோ
சிட்டதாயுறை யாதிசீர்களே. 10

கந்தமார்பொழில் சூழ்ந்தகாழியான்
இந்திரன்றொழு நீலபர்ப்பதத்
தந்தமில்லியை யேத்துஞானசம்
பந்தன்பாடல்கொண் டோதிவாழ்மினே. 11

திருச்சிற்றம்பலம்.

---

*10.* கட்டர் - உடற்கட்டுடையவர், சீர் - சிறப்பு. விட்டர்- விட்டொழிய நின்றவர், 'விட்டல் - வீடுதல்' திருவிளையாடல். எள்தனை - எள்ளளவும். சிட்டதாய் - நல்லறிவுமயமாய். உறை- வாழும். ஆதி - முதல்வன்.

*11.* கந்தம் - மணம். அந்தம் இல்லி - முடிவில்லாதவன் - அநந்தன்.

---

கடலன்ன பொய்மைகள் செய்யினும் வெய்ய
கடுநரகத்
திடமன் ஏவுதற் கெவ்விடத் தான் இருஞ்
செந்தமிழால்
திடமன்னு மாமதிற் சண்பைத் தலைவன்செந்
தாமரையின்
வடமன்னு நீள்முடி யானடிப் போதவை
வாழ்த்தினமே. —அந்தாதி 21

# 28 திருக்கருவூரானிலை

## 164 பதிகவரலாறு

*பாண்டிக் கொடுமுடியை அடைந்து வணங்கித் தமிழ் மாலை மகிழ்ந்துசார்த்தி, வெஞ்சமாக்கூடல் விடையவர் தானம் பல போற்றிக் கிழக்கில்போந்து, திருவானிலைக் கோயிலையுடைய கருவூரை மருவி அடைந்து அக்கோயிலுட் புகுந்து இறைஞ்சிப் பாடிய நல்லிசை வண்டமிழ்ச் சொற் றொடை இத்திருப்பதிகம்.*

**பண் - இந்தளம்**

*திருச்சிற்றம்பலம்*

தொண்டெலாமலர் தூவியேத்தநஞ்
சுண்டலாருயி ராயதன்மையர்
கண்டனார்கரு வூருளானிலை
அண்டனாரரு ளீயுமன்பரே. 1

நீதியார்நினைந் தாயநான்மறை
ஓதியாரொடுங் கூடலார்குழைக்
காதினார்கரு வூருளானிலை
ஆதியாரடி யார்தமன்பரே. 2

---

*1. தொண்டு எலாம் - தொண்டர் எல்லாரும் .உண்டல் - உண்ணல், உண்டலாருமாம். ஆருயிர் - அரியவுயிர், உயிர்க் குயிர். கண்டு அனார் - கண்டுபோலினிப்பவர். திருக்கருவூரில் உள்ள திருக்கோயில் ஆநிலை, ஆன்நிலை எனப்படும், பசுபதி என்னுந் திருப்பெயருண்மை உணர்க. அண்டனார் - தேவர். அன்பர் - அன்பையுடையர்.*

*2, நீதியார் - நீதியே வடிவான சிவபெருமான் நினைந்து ஆய நான்மறை ஓதியார் - எண்ணி ஆராய்ந்த நான்கு மறைகளை ஓதுவார், கூடலார் - கூடுவார். குழைக்காதினார் - குழையணிந்த திருச்செவியை உடையவர். குழை தோட்டின் வேறானது; இதனைக் 'குழையும் சுருள்தோடும்' என்ற திருவாசகத்தான றிக. ஆதியார் - முதல்வர். அடியார்தம் அன்பர் - அடியார்களுக்கு அன்பராயிருப்பர்.*

விண்ணுலாமதி சூடிவேதமே
பண்ணுளார்பர மாயபண்பினர்
கண்ணுளார்கரு வூருளானிலை
அண்ணலாரடி யார்க்குநல்லரே. 3

முடியர்மும்மத யானையீருரி
பொடியர்பூங்கணை வேளைச்செற்றவர்
கடியுளார்கரு வூருளானிலை
அடிகள்யாவையு மாயவீசரே. 4

பங்கயம்மலர்ப் பாதர்பாதியோர்
மங்கையர்மணி நீலகண்டர்வான்
கங்கையார்கரு வூருளானிலை
அங்கையாடர வத்தெம் மண்ணலே. 5

---

3. விண் - ஆகாயம். சூடி - வினையெச்சம். வேதமே பண் உளார் - வேதத்தில் சுரூபமாக இருப்பவர். பரம் ஆய பண்பினர் - மேலாகிய பண்பை உடையவர். பண்பு - எண்குணம். கண்ணுள் - கூத்து. கண்ணுளார் - கூத்தர். கண் - உளார் - உயிர்களுக்குக் கண்ணுயிருப்பவர். பண்பினர்கண் உளாருமாம். அண்ணலார் - தலைவர், பெரியர். அடியார்க்கு நல்லார் என்பது இறைவன் திருப்பெயர்களுள் ஒன்று.

4. முடியர் - சடைமுடி உடையவர். வணங்குவோர் உச்சியருமாம் (பத - 162 "உச்சியார்") மும்மதம் - கன்னம், கோசம், கை என்னும் மூன்றிடத்தும் ஒழுகும் மதநீர், "கன்னமும் கோசமும் கையும் என்னும், இன்னமுத்தானத்து இழிவன மும்மதம்" - (பொருட்டொகை நிகண்டு.) ஈர்த்தல் - உரித்தல். ஈர் உரி - உரித்த தோல். உரியென்பது முதனிலைத் தொழிலாகு பெயர். பொடியர் - திருவெண்பொடியை உடையவர். உரியை அணிந்த பொடியர், வேளை - மன்மதனை, கருவேளை. செற்றவர்- அழித்தவர். கடி - சிறப்பு, அதிசயம். யாவையும் ஆய ஈசர் - 'ஒருவனே எல்லாமாகி அல்லனுய் உடனுமாவான்' (சித்தி. 46) "முழுதுமாகிய மூர்த்தி" (- பா - 9).

5. பங்கயம் - (சேற்றில் முளைப்பது) தாமரை. மலர்ப் பாதர் - மலர்போன்ற திருவடியை உடையவர். பாதி ஓர்

தேவர் திங்களும் பாம்புஞ்சென்னியின்
மேவர் மும்மதி லெய்தவில்லியர்
காவலர்கருவூ ருளானிலை
மூவரா கிய மொய்ம்பரல்லரே. 6

பண்ணிஞர்படி யேற்றர் நீற்றர்மெய்ப்
பெண்ணிஞர்பிறை தாங்குநெற்றியர்
கண்ணிஞர்கரு வூருளானிலை
நண்ணிஞர் நமை யாளுநாதரே. 7

கடுத்தவாளரக் கன்கயிலையை
எடுத்தவன்றலை தோளுந்தாளிஞல்
அடர்த்தவன்கரு வூருளானிலை
கொடுத்தவன்னருள் கூத்தனல்லனே. 8

---

மங்கையர் - அர்த்தநாரீச்சுரர். மணி - அழகிய. வான் கங்கையர்- ஆகாச கங்கையை அணிந்தவர். அம் - அழகு. ஆடு அரவத்து- ஆடுகின்ற பாம்பை உடைய.

6. சென்னி - தலை. மேவர் - பொருந்துதலை உடையவர். வில்லியர் - மேருவாகிய வில்லை உடையவர். மூவர் ஆகிய மொய்ம்பர் அல்லரே - அயன் முதலிய மூவருமாகிய சக்தியை உடையவர் அல்லரோ. மொய்ம்பு - சக்தி.

7. பண்ணிஞர் - பண்ணுயிருப்பவர். படி ஏற்ருர்-படி(ந்து அமர்)தற்குரிய விடையை உடையவர். மெய்ப்பெண்ணிஞர் - பெண்ணை ஒருபாற்கொண்ட மெய்யார். மெய் - உடம்பு. நெற்றியர் - உச்சியர். கண்ணிஞர் - உலகுக்கொரு கண்ணு யிருப்பவர், ஞானக்கண்ணருமாம். நண்ணிஞர் - சேர்ந்தார். நமை - நம்மை. நாதர் - தலைவர், உடையவர்.

8. கடுத்த - கோபித்த. தலை தோளும் - தலைகளும் தோள் களும். தாள் - திருவடி. அருள்கொடுத்தவன் என்க.

உழுதுமா நிலத் தேனமாகிமால்
தொழுதுமாமல ரோனுங்காண்கிலார்
கழுதினன்கரு வூருளானிலை
முழுதுமாகிய மூர்த்திபாதமே. 9

புத்தர்புன்சம ணாதர்பொய்யுரைப்
பித்தர்பேசிய பேச்சைவிட்டுமெய்ப்
பத்தர்சேர்கரு வூருளானிலை
அத்தர்பாதமடைந்து வாழ்மினே. 10

கந்தமார்பொழிற் காழிஞானசம்
பந்தன்சேர்கரு வூருளானிலை
எந்தையைச்சொன்ன பத்தும்வல்லவர்
சிந்தையிற்றுய ராயதீர்வரே. 11

திருச்சிற்றம்பலம்

---

9. ஏனம் - பன்றி. கழுதினன் - பேயன். முழுதும் ஆகிய மூர்த்தி - "யாவையும் ஆய ஈசர்" - பா. 4.

10. ஆதர் - அறிவிலார். மெய்ப்பத்தர் - உண்மை அன்பர். அத்தர் - இறைவர், உயர்ந்தவர்.

11. கந்தம் - வாசனை. துயர் ஆய - துன்பமானவை.

---

வாழ்த்துவ தெம்பர மேயாகும் அந்தத்து
வையமுந்நீர்
ஆழ்த்திய காலத்தும் ஆழா ததுஅரன்
சேவடியே
ஏத்திய ஞானசம் பந்தற் கிடம்இசைத்
தும்பிகொம்பர்க்
காத்திகழ் கேதகம் போதகம் ஈனுங்
கழுமலமே. —அந்தாதி 22

# 29 திருப்புகலி

136-வது தலைப்பைப் பார்க்க.

## பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

முன்னியகலைப்பொருளு மூவுலகில்வாழ்வும்
பன்னியவொருத்தர் பழவூர்வினவின்ஞாலந்
துன்னியிமையோர்க டுதிசெய்துமுன்வணங்குஞ்
சென்னியர்விருப்புறு திருப்புகலியாமே. 1

வண்டிரைமதிச்சடை மிலைத்தபுனல்சூடிப்
பண்டெரிகையாடு பரமன்பதியதென்பர்
புண்டரிகவாசமது வீசமலர்ச்சோலைத்
தெண்டிரைகடற்பொலி திருப்புகலியாமே. 2

---

1. முன்னிய - பொருந்திய, முந்திய, நினைக்க. கலை - அறுபத்து நான்கு கலைகள்; 'உவமையிலாக் கலைஞானம்' எனலுமாம். மூவுலக வாழ்வு - மூன்று உலகத்திலும் வாழும் வாழ்க்கை. பன்னிய - ஆராய்ந்த, ஒருத்தர் - தனிமுதல்வர், வினவின் - கேட்டால்; ஞாலம் - பூமி. துன்னி - நெருங்கி, இமையோர்கள் - தேவர்கள். துதி - தோத்திரம், சென்னியர் ஆரம்போல மேம்பட்டவர், சென்னியிலுள்ளவர் என்றுமாம்.

2. வண்டு இரை என்றால் புனலில் உள்ள மனம்பற்றிய தாகும். வண்திரை என்றால் புனல் (நீர்) அலையின் வளம் உரைத்தாகும். மதிச்சடை - பிறைசூடிய சடைமேல், மிலைத்த - சூடிய, புனல் - கங்கை நீர். எரி - தீ. ஆடுபரமன் - ஆடும் கடவுள், தீயில் ஆடும், தீ ஏந்தி ஆடும் என்றிரண்டும் ஆகும். பதியது - தலம், அது - பகுதிப் பொருள் விகுதி. புண்டரிகம் - தாமரை. வாசம் - மணம், கடல் பொலி புகலி - கடலில் மிதந்து விளங்கிய காழி.

பாவணவுசிந்தையவர் பத்தரொடுகூடி
நாவணவுமந்தணன் விருப்பிடமதென்பர்
பூவணவுசோலையிருண் மாலையெதிர்கூரத்
தேவணவிழாவளர் திருப்புகலியாமே. 3

மைதவழுமாமிடறன் மாநடமதாடி
கைவளையினளொடு கலந்தபதியென்பர்
செய்பணிபெருத்தெழு முருத்திரர்கள்கூடித்
தெய்வமதிணக்குறு திருப்புகலியாமே. 4

முன்னமிருமூன்று சமயங்களவையாகிப்
பின்னையருள்செய்த பிறையாளனுறைகோயில்
புன்னையமலர்ப்பொழில்க ளக்கினொளிகாட்டச்
செந்நெல்வயலார்தரு திருப்புகலியாமே. 5

வங்கமலியுங்கடல் விடத்தினைநுகர்ந்த
அங்கணனருத்திசெய் திருக்குமிடமென்பர்
கொங்கணவியன்பொழிலின் மாசுபனிமூசத்
தெங்கணவுதேன்மலி திருப்புகலியாமே. 6

---

3. பா - பாடல். அணவு-கிட்டும், சிந்தையவர் - சித்தத்தை யுடையவர். பத்தர் - அன்பர். நா அணவும் - நாக்கில் (புகழ் வடிவாகப்) பொருந்திய. அந்தணன் - சிவன், அம் + தண் + அன் - அழகும் குளிர்ச்சியும் உடையவன். அந்தத்தை அண்ணு தலை, உடையவன் என்றுருமுளர். 'அந்தத்தை அணவுவார்' என்றார் நச்சினார்க்கினியர். கூர - மிக. தேவணவிழா - தெய்வ வடிவான திருவிழா.

4. மை - நஞ்சின் கறுப்பு. மை தவழும் - மேகம் போலும் கருநிறம் பரவிய, மா - கரிய. மிடறன் - திருக்கழுத்தை உடையவன். மாநடம் - மகாதாண்டவம். பணி - தொண்டு. இணக்கு உறு - இணங்குதல் உற்ற

5. இரு மூன்றுசமயங்கள், 'அறுவகைச் சமயம்' அறு வகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய்' (சித்தியார். 2) அக்கு - உருத்திராக்க மாலை, சங்குமணியுமாம்.

6. வங்கம்-மரக்கலம், கடலுக்குச் சாதியடை. அங்கணன்- கருணைக்கண்ணன். அருத்தி - விருப்பம், கொங்கு - மணம், தேன், பூந்தாது. அண - அண்ண, வியன் (வியல்) - அகலம். தெங்கு - தென்னை.

நல்குரவுமின்பமு நலங்களவையாகி
வல்வினைகளர்த்தருளு மைந்தனிடமென்பர்
பல்குமடியார்கள் படியாரவிசைபாடிச்
செல்வமறையோருறை திருப்புகலியாமே. 7

பரப்புறுபுகழ்ப்பெருமை யாளன்வரைதன்னால்
அரக்கனையடர்த்தருளு மண்ணலிடமென்பர்
நெருக்குறுகடற்றிரைகண் முத்தமணிசிந்தச்
செருக்குறுபொழிற்பொலி திருப்புகலியாமே. 8

கோடலொடுகூன்மதி குலாயசடைதன்மேல்
ஆடரவம்வைத்தருளு மப்பனிருவர்க்கும்
நேடவெரியாகியிரு பாலுமடிபேணித்
தேடவுறையுந்நகர் திருப்புகலியாமே. 9

கற்றமணருற்றுலவு தேரருரைசெய்த
குற்றமொழிகொள்கைய திலாதபெருமானூர்
பொற்றொடிமடந்தையரு மைந்தர்புலனைந்துஞ்
செற்றவர்விருப்புறு திருப்புகலியாமே 10

---

7. நல் குரவு - வறுமை, நல்க ஊர்தல் என்னுந் தொடர் நல்கூர்தல் என்று மருவிற்று. பிறர் நல்க - வீடு வீடாக ஊர்ந்து சென்று வேண்டி நிற்றல் பற்றிய காரணப்பெயர். இன்பம் - இன்பந்தரும் பொருள். மைந்தன் - வலிமையுடைய வீரன். படி - நிலம்.

8. பரப்பு - பரவுதல். பெருமை புகழ் ஆளன் - பெரும் புகழை ஆள்பவன், புகழினது பெருமையை ஆள்பவன் எனக் கிடந்தவாறுங்கொள்ளலாம். வரை - கயிலை மலை. திரை - அலை. முத்தம்மணி - முத்துக்களையும், மணிகளையும்.

9. கோடல் - வெண்காந்தள். குலாய - குலவிய. நேட - தேட. பேணி - விரும்பி.

10. கற்ற அமணர் - அவைதிகநூல்களைப்படித்த சமணர். குற்றம் மொழி - குற்றங்களையுடைய வார்த்தைகளை. கொள்கையது - கொள்ளுவது. தொடி - வளையல். மடந்தையர் - மகளிர். மைந்தர் - ஆடவர். புலன் ஐந்தும் செற்றவர் - ஐம்புலத் தாசையையும் அகற்றிய ஞானியர்.

செந்தமிழ்பரப்புறு திருப்புகலிதன்மேல்
அந்தமுதலாகிநடு வாயபெருமானைப்
பந்தனுரைசெய்தமிழ்கள் பத்துமிசைகூர
வந்தவணமேத்துமவர் வானமுடையாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. 'செந்தமிழ் பரப்பு உறு திருப்புகலி' என்றதால், பண்டு சீர்காழியின் கண் இருந்த தமிழ் வளர்ச்சி புலனாகும். முதல் அந்தம் ஆகி எனமாற்றுக. பந்தன் - சம்பந்தர். தமிழ்கள்- தமிழ்ப்பாடல்கள், இசைகூர - பண்ணிசைமிக. வந்தவணம் - வந்தவாறு. (170 : 112 பார்க்க.)

---

மலர்பயில் வாட்கண்ணி கேள்கண்ணி நீள்முடி
வண்கமலப்
பலர்பயில் கீர்த்திக் கவுணியர் தீபன்
பகைவரென்னத்
தலைபயில் பூம்புனங் கொய்திடு மேகணி
யார்புலம்ப
வலர்பயி லாமுன் பறித்தன மாகில்
அரும்பினையே. —அந்தாதி 23

அரும்பின அன்பில்லை அர்ச்சனை இல்லை
அரன்நெறியே
விரும்பின மாந்தர்க்கு மெய்ப்பணி செய்கிலம்
பொய்க்கமைந்த
விரும்பின உள்ளத்தி னேற்கெங்ங னேவந்து
நேர்பட்டதால்
கரும்பன நீள்வயல் சூழ்காழி நாதன்
கழலடியே. —அந்தாதி 24

# 30 திருப்புறம்பயம்

## 166 பதிகவரலாறு

திருவிசய மங்கையினின்றும் போந்த ஆளுடைய பிள்ளையார், திருவைகாவில் அணைந்துபாடி வழிபட்டு, இத் திருப்புறம்பயத்தைக் கண்டு மேன்மேல் விருப்புறப்பெற்று, செந்தமிழ் நிறம்பயில் இசையுடன் பாடியது இத்திருப்பதிகம்.

### பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

மறம்பயமலைந்தவர் மதிற்பரிசறுத்தனை
நிறம்பசுமைசெம்மையொ டிசைந்துனதுநீர்மை
திறம்பயனுறும்பொரு டெரிந்துணருநால்வர்க்
கறம்பயனுரைத்தனை புறம்பயமமர்ந்தோய். 1

விரித்தனைதிருச்சடை யரித்தொழுகுவெள்ளம்
தரித்தனையதன்றியு மிகப்பெரியகாலன்
எருத்திற வுதைத்தனை யிலங்கிழையொர் பாகம்
பொருத்துதல்கருத்தினை புறம்பயமமர்ந்தோய். 2

---

1. மறம் - வீரம், பாவமுமாம். பயம்-அச்சம், மறத்தையும் அச்சம் விளைவிப்பதையும் உடைய. மலைந்தவர் - (பகைவர்) போராடியவர்; திரிபுரத்தசுரர். பரிசு - (பெயர்ந்து சென்று அழிக்குந்)தன்மை. அறுத்தனை - அறுத்தாய். செம்மை நிறம் அப்பனது. பசுமை நிறம் அம்மையினது, அம்மையப்பர் நிறம் இரண்டும் கூறப்பட்டன, பயன் உறும் பொருள் - உயிர்க் குறுதியை அடைவிக்கும் ஆகமாந்தப் பொருள். நால்வர்க்கு - சனகாதியர்க்கு. அறம்பயன் - அறமாகிய பயன். அமர்ந்தோய் - வீற்றிருந்தருளியவனே. அறுத்தனை உரைத்தனை என்க.

2. சடை விரித்தனை; வெள்ளம் தரித்தனை. எருத்து - கழுத்து, பிடர். இலங்கிழை - விளங்கிய பூண் உடைய உமா தேவியார். கருத்தினை - கருத்தை உடையாய்.

விரிந்தனை குவிந்தனை விழுங்குயிருமிழ்ந்தனை
திரிந்தனைகுருந்தொசி பெருந்தகையுநீயும்
பிரிந்தனைபுணர்ந்தனை பிணம்புகுமயானம்
புரிந்தனை மகிழ்ந்தனை புறம்பய மமர்ந்தோய். 3

வளங்கெழுகடும்புன லொடுஞ்சடையொடுங்கத்
துளங்கமரிளம்பிறை சுமந்ததுவிளங்க
உளங்கொள வளைந்தவர் சுடுஞ்சுடலை நீறு
புளங்கொளவிளங்கினை புறம்பயமமர்ந்தோய். 4

பெரும்பிணிபிறப்பினொ டிறப்பிலையொர்பாகம்
கரும்பொடுபடுஞ்சொலின் மடந்தையைமகிழ்ந்தோய்
சுரும்புணவரும்பவிழ் திருந்தியெழுகொன்றை
விரும்பினைபுறம்பய மமர்ந்தவிறையோனே. 5

---

3. விழுங்கு உயிர் உமிழ்ந்தனை-இளைப்பாற்றற்பொருட்டு, உடலினின்றும் பிரிக்கப்பட்ட உயிர்களை மீண்டும் அவற்றின் வினைகளைக் கழித்தற்பொருட்டு உடம்பிற் புகுத்தினாய். குருந்து ஒசி பெருந்தகை - குருந்த மரத்தை ஒடித்த பெரிய தகைமையை உடைய மாயன்; திருமால். மோகினி வடிவங்கொண்டு மனைவி யாகிய வரலாறு காண்க. மயானம் புரிந்தனை - சுடுகாட்டை விரும்பினாய், 'கள்ளி முதுகாட்டிலாடி' 'கோயில் சுடுகாடு'.

4. புனல் - கங்கை. துளங்கு - அசைவு, முதனிலைத் தொழிற்பெயர். அளைந்தவர் - கலந்தவர், குழைந்தவருமாம். புலம் - புளம். லகரளகரப்போலி, அளமரு - அலமரு என்பது போல. மெய்யினிடம் என்றபடி.

5. பிணியும் பிறப்பும் இறப்பும் இல்லாய் என்றபடி. கரும்பொடு படுஞ்சொலின் மடந்தை - 'கரும்பன்ன சொல்லம்மை' என்னும் அம்பிகையின் திருப்பெயர். பல திருப்பதிகங்களுள் இறைவனுக்கும் இறைவிக்கும் அக்காலத்தில் வழங்கிய திருப்பெயர்களைக் குறித்தல் மூவர் இடத்தும் உண்டு. சுரும்பு - வண்டு.

அனற்படுதடக்கையவ ரெத்தொழிலரேனும்
நினைப்புடைமனத்தவர் வினைப்பகையுநீயே
தனற்படுசுடர்ச்சடை தனிப்பிறையொடொன்றப்
புனற்படுகிடக்கையை புறம்பயமமர்ந்தோய் 6

மறத்துறைமறுத்தவர் தவத்தடியருள்ளம்
அறத்துறையொறுத்துன தருட்கிழமைபெற்றோர்
திறத்துளதிறத்தினை மதித்தகலநின்றும்
புறத்துளதிறத்தினை புறம்பயமமர்ந்தோய் 7

இலங்கையரிறைஞ்சிறை விலங்கலின்முழுங்க
உலங்கெழுதடக்கைக ளடர்த்திடலுமஞ்சி
வலங்கொளவெழுந்தவ னலங்கவினவஞ்சு
புலங்களைவிலங்கினை புறம்பயமமர்ந்தோய். 8

---

6 அனல்படு தடக்கையவர்-செந்தீ வளர்க்கும் கையுடைய அந்தணர். 'எரியோம்புஞ் சிறப்பர்' 1. 80. 2. வினைப்பகை - வினைக்குப் பகைவன். தனல் - தணல். புனல் - கங்கை. கிடக்கையை - கிடத்தலை உடையாய்.

7. மறத்துறை - பாபமார்க்கம். மறுத்தவர்-வேண்டாதார். தவத்து அடியர் - தவத்தையுடைய அடியவர். அறத்துறை ஒறுத்து - புண்ணிய மார்க்கத்தையும் கடிந்து. இருவினை யொப்புடைமை குறித்தபடி. அருட்கிழமை - சிவஞானத்திற்கு உரியராந்தன்மை. திறம் - சரியை முதலிய நான்கு திறங்கள். சரியையாளர் திறத்திற்குத் தக்கவாறு அருள்செய்யும் இறைவனது திறத்தைக் குறித்தபடி. மதித்து அகலநின்றும் புறத்து உள திறத்தினை என்பது இறைவனது ஒன்றாய் வேறாய் உடனாயிருக்கும் மூன்று இயல்புகளுள் வேறாய் நிற்பதைக் குறித்தது.

8. இலங்கையர் - இலங்கையில் வாழ்ந்தவர்கள். இறைஞ்சு இறை - வணங்கும் அரசனாகிய இராவணன். விலங்கலில் - கயிலையை எடுக்குந்திறத்தில். உலம் - திரண்டகல்லை. கெழு - ஒத்த. கவின - அழகுசெய்ய. அஞ்சு - அஞ்சுகின்ற, ஐம்புலன் எனலுமாம்.

வடங்கெட நுடங்குண விடந்தவிடையல்லிக்
கிடந்தவனிருந்தவ னளந்துணரலாகார்
தொடர்ந்தவருடம்பொடு நிமிர்ந்துடன்வணங்கப்
புடங்கருள்செய்தொன் றினை புறம்பயமமர்ந்தோய். 9

விடக்கொருவர் நன்றெென விடக்கொருவர் தீதென
உடற்குடைகளைந்தவ ருடம்பினைமறைக்கும்
படக்கர்கள்பிடக்குரை படுத்துமையொர்பாகம்
அடக்கினைபுறம்பய மமர்ந்தவுரவோனே. 10

---

9. வடம் - ஆலமரம். இங்கு ஆலிலையை உணர்த்திற்று. நுடங்கு உள - அசைவுள்ள, தூங்க என்றபடி. இடந்த - பெயர்ந்த. இடை அல்லி - கொப்பூழிடையில். பூத்த - (அக விதழையுடைய) தாமரையொடு. கிடந்தவன் - திருமால். இருந்தவன் - அம்மலர்மேல் இருந்த பிரமன். புடம் - மறைப்பு. கருள் - இருள். இருள் மறைக்கப்பட்டாற்போல (ஒளிப் பிழம்பாய் இருந்தும் இருவரும் அடிமுடி காணாது) அறியாமையான் மறைக்கப்பட்டார்கள். "கருள் தரு கண்டத்து எம் கயிலையார்" (தி. 3-பதி - 109 - பா - 4). புடங்கருள்செய்து - புள் தங்க அருள்செய்து எனப் பிரித்துக் கருடப்புள், அன்னப்புள் இரண்டின்மேலும் தங்க அருள்செய்து எனலும் ஆம். பெயரெச்சத்து அகரம் தொக்கது. புள் தங்கு - புட்டங்கு என இரட்டிக்காதது, எதுகை நோக்கிற்றும். 2. 92. 1 காண்க. 'புட்டன் பேடையொடாகும் பூம்புகலூர்த் தொண்டர் போற்றி வட்டஞ்சூழ்ந்தபடி பரவும் வர்த்தமானீச்சரத்தாரே (2. 92. 1), என்பதில், புள் + தன் = புட்டன் என்றுபுணர்ந்தமையால், இங்கும் புள் தங்கு என்பவற்றின் புணர்ச்சி எனக் கொள்வதில் தடை இராது.

10. விடக்கு - ஊன். ஒருவர் நன்றென்னும் தேரரையும் தீதென்னும் சமணரையும் குறித்ததாகும். (உடற்கு உடை களைந்தவர் திகம்பரசைனர்.) படக்கர்கள் - உடையுடுத்தோர் படக்கு - உடை. பிடக்கு உரை - பிடக நூல்மொழி "பிடக்கே உரைசெய்வார்" (1-13-19)

கருங்கழிபெருந்திரை கரைக்குலவுமுத்தம்
தருங்கழுமலத்திறை தமிழ்க்கிழமைஞானன்
சுரும்பவிழ்புறம்பய மமர்ந்ததமிழ்வல்லார்
பெரும்பிணிமருங்கற வொருங்குவர்பிறப்பே. 11

திருச்சிற்றம்பலம்

---

*11.* கழி - உப்பளம். கரைக்குலவு முத்தம் - கரைமேல் விளங்கும் முத்து. கழுமலத்து இறை - காழி வேந்தர். அமர்ந்த தமிழ் - விரும்பிப் பாடிய இப்பதிகம். மருங்கு அற - இருந்த இடமும் தெரியாது ஒழிய. பிறப்பு ஒருங்குவர் - பிறப்பு ஒழியப் பெறுவர். ஒருங்குவது பிறப்பின் வினை. பிறவி ஒருங்கப் பெறுவது இத்தமிழ்வல்லார் வினை. அப்பிறப்பு ஒருங்கப்பெறுவர் எனற்பாலது பிறவி ஒருங்குவர் எனப்பட்டது. நோயொழிவர், காலொடிவர் என்பவைபோல்வது.

---

அடியால் அலர்மிதித் தாலரத் தம்பில்
கமிர்தமின்றிக்
கொடியா ஞெடும்பின் னடந்தநெய் வாறலர்
கோகனதக்
கடியார் நறுங்கண்ணி ஞானசம் பந்தன்
கருதலர்சேர்
வெடியா விடுவெம் பரற்சுறு நாறு
வியன்சுரத்தே. —அந்தாதி 25

சுரபுரத் தார்தந் துயருக் கிரங்கிச்
சுரர்கள் தங்கள்
பரபுரத் தார்தந் துயர்கண் டருளும்
பரமன்மன்னு
மரபுரத் தான்அடி எய்துவன் என்ப
தவனடிசேர்
சிரபுரத் தான்அடி யாரடி யேன்என்னுந்
திண்ணெனவே. —அந்தாதி 26

## 31 திருக்கருப்பறியலூர்

### 167. பதிகவரலாறு:

திருநாரையூரை அருந்தமிழ் புனைந்து வழிபட்ட நாயனுர். அடியார்களை வானுலகம் ஏற்றக் கற்றவனுகிய சிவபிரான் வீற்றிருக்குங் கருப்பறியலூரை அடைந்து தொழுது, பாடிப் பரவிய அடியவர் வினையை எளிதில் ஒழித்திடுமாறு பாடியருளியது இத்தமிழ்க்கிளவி.

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

சுற்றமொடு பற்றவை துயக்கற வறுத்துக்
குற்றமில் குணங்களொடு கூடுமடி யார்கள்
மற்றவரை வானவர்தம் வானுலக மேற்றக்
கற்றவ னிருப்பது கருப்பறிய லூரே. 1

வண்டணைசெய் கொன்றையது வார்சடைகண் மேலே
கொண்டணைசெய் கோலமது கோளரவி னேடும்
விண்டணைசெய் மும்மதிலும் வீழ்தரவொ ரம்பால்
கண்டவ னிருப்பது கருப்பறிய லூரே. 2

---

*1. சுற்றமொடு பற்று அவை - (துணையும்) சுற்றமும் பற்றும் ஆகியவற்றை. இவ்வாறு கருமூலத்தைப் பறிப்பதால் கருப்பறியலூர் என்ருயிற்று. கலந்தவர் கருப்பறியல் என ஆசிரியரே இப்பதிக முடிவில் ஊர்ப்பெயர்ப் பொருளை உணர்த்தியது உணர்க. துயக்கு - அறிவு வேறுபடல். சிவபிரானையே அறியும் அறிவு வேறுபடாதவாறு சுற்றம் முதலியவற்றை அறுத்து என்றபடி. மற்று அசை. அடியார்களாகிய அவரை என்க. வானுலகம் - வீடுலகு. கற்றவன் - இயல்பாகவே உணர்ந்தசிவன்.*

*2. வண்டு அணைசெய் - வண்டுகள் அணைதலைச்செய்கின்ற. கோலம் - திருக்கோலம், அழகு. கோள் - துன்பம், வலிமையுமாம். விண்டு - (இடம்) விண்டு, நீங்கி, விள்ளல் உற்று.*

வேதமொடு வேதியர்கள் வேள்விமுத லாகப்
போதிெனாடு போதுமலர் கொண்டுபுனை கின்ற
நாதனென நள்ளிருண்மு னாடுகுழை தாழும்
காதவ னிருப்பது கருப்பறிய லூரே. 3

மடம்படு மலைக்கிறைவன் மங்கையொரு பங்கன்
உடம்பினை விடக்கருதி நின்றமறை யோனைத்
தொடர்ந்தணவு காலனுயிர் காலவொரு காலால்
கடந்தவ னிருப்பது கருப்பறிய லூரே. 4

ஒருத்தியுமை யோடுமொரு பாகமது வாய
நிருத்தனவ னீதியவ னித்தனெறி யாய
விருத்தனவன் வேதமென வங்கமவை யோதும்
கருத்தவ னிருப்பது கருப்பறிய லூரே. 5

விண்ணவர்கள் வெற்பரசு பெற்றமகண் மெய்த்தேன்
பண்ணமரு மென்மொழியி னாளையணை விப்பான்
எண்ணிவரு காமனுடல் வேவவெரி காலும்
கண்ணவ னிருப்பது கருப்பறிய லூரே. 6

---

3. முதலாக - முதலிய பல நற்செயல்களிலும். போதினொடு - (காலம் பெறப்) பொழுதொடு. போது - மலரும் பருவத்தது. மலர் - பூ. குழைதாழும் காதவன் - 'குழைக்காதன்' என்னும் திருப்பெயரைக் குறித்தது.

4. மடம் - அழகு. துறவிகள் உறையும் இடம் பல உடையதால் மடம் படு மலை என்று இமயத்தினைக் குறித்தல் பொருந்தும். இறைவன் - அரசன். மறையோன் - மார்க்கண்டேய முனிவர். அணவு - கிட்டிய. காலன் - யமன். கால - கக்க. கடந்தவன் - கடக்கவுதைத்தவன்.

5. நிருத்தன்-கூத்தன், நித்தன்-அழியாதவன். விருத்தன் - முதியோன். வேதம் அங்கம் - நான் மறையும் ஆறங்கமும். கருத்தவன் - தலைவன், கருத்துள் இருப்பவன். 6. 83. 5.

6. விண்ணவர்களுக்கு, வெற்புக்கு அரசு எனக்கூட்டுக. எரிகாலும் கண் - நெருப்பைக்கக்கும் கண்: இது பெருமானது வெகுண்ட நிலையைக் குறித்தது, அணைதல் அம்பிகையது. அணைவித்தல் ஆண்டவனது. தேன்மொழி, பண்மொழி என்றவாறு.

ஆதியடி யைப்பணிய வப்பொடு மலர்ச்சேர்
சோதியொளி நற்புகை வளர்க்குவடு புக்குத்
தீதுசெய வந்தணயு மந்தக னரங்கக்
காதின னிருப்பது கருப்பறிய லூரே. 7

வாய்ந்தபுகழ் விண்ணவரு மண்ணவரு மஞ்சப்
பாய்ந்தமர்செ யுந்தொழிலி லங்கைநகர் வேந்தற்
கேய்ந்தபுய மத்தனையு மிற்றுவிழ மேனாள்
காய்ந்தவனிருப்பது கருப்பறிய லூரே 8

பரந்தது நிரந்துவரு பாய்திரைய கங்கை
கரந்தோர்சடை மேன்மிசை யுகந்தவளை வைத்து
நிரந்தர நிரந்திருவர் நேடியறி யாமல்
கரந்தவ னிருப்பது கருப்பறிய லூரே. 9

அற்றமறை யாவமண ராதமிலி புத்தர்
சொற்றமறி யாதவர்கள் சொன்னசொலை விட்டுக்
குற்றமறி யாதபெரு மான்கொகுடிக் கோயில்
கற்றென விருப்பது கருப்பறிய லூரே. 10

---

7. அப்பு - சலம். சோதி ஒளி - தூபம். நற்புகை - தூமம். வளர்க் குவடு புக்கு-வளர்தலையுடைய கருப்பறியலூர்க் கோயில் கட்டுமலை மேலுள்ளதாதலின் அதனுள் புகுந்து. அரங்க - புடை பெயர. அழியவுமாம். காதினன் - ஈண்டு உதைத்தவன் என்னும் பொருட்டு.

8. வாய்ந்த புகழை உடைய விண்ணவர் என்றும் மாறிக் கூட்டி புகழ் வாய்ந்த என்றும் கொள்ளலாம். இற்றுவிழ - ஒடிந்து விழ. காய்ந்தவன் - சினந்தவன். ஏய்ந்த - பொருந்திய.

9. நிரந்து - வரிசையாக. பரந்து - பரவி. சடைமேல் மிசை - சடையினது மேலிடத்தில். நிரந்தரம் - எப்போதும். நேடி - தேடி. கரந்தவன் - ஒளித்தவன்.

10. அற்றம் மறையா அமணர் - மறைக்கவேண்டிய உறுப்புக்களை மறைக்காத சமணர். 'அற்றம் மறைப்பதுமுன் பணியே' என்றதுணர்க. சொற்றம் - சொல்லும் சொற்கள். சொல்+து+அம். கொகுடி - ஒருவகை முல்லை. குற்றமறியாத பெருமான் - இத்தலத்துப் பெருமான் திருப்பெயர். கற்றென - நிலையாக. கல்+து - கற்று. கல்லைப்போன்றுறுதியானது.

நலந்தரு புனற்புகலி ஞானசம் பந்தன்
கலந்தவர் கருப்பறியன் மேயகட வுள்ளைப்
பலந்தரு தமிழ்க்கிளவி பத்துமிவை கற்று
வலந்தரு மவர்க்குவினை வாடலெளி தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. கடவுள்ளை - கடவுளை (விரித்தல் விகாரம்). பலம் - பலன். வலந்தருதல் - உயிர்க்கு வன்மையை அளித்தல், திருக்கோயிலை வலம்வருதலுமாம். வினை வாடல் - கருப்பறிதல், 'கலந்தவர்கருப்பறியல்' என்ற தொடர் இத் திருத்தலத்தின் பெயர்ப்பொருளைக் குறித்தது. பறியல்மேய - பறியலில் மேவிய.

---

திண்ணென வாசென்ற நாட்டிடை இல்லைகொல்
தீந்தமிழோர்
கண்ணென வோங்குங் கவுணியர் தீபன்கை
போற்பொழிந்து
விண்ணின வாய்முல்லை மெல்லரும் பீனமற்
றியாம்மெலிய
எண்ணின நாள்வழு வாதிரைத் தோடி
எழுமுகிலே. —அந்தாதி 27

எழுவாள் மதியால் வெதுப்புண் டலமந்
தெழுந்துவிம்மித்
தொழுவாள் தனக்கின் றருளுங்கொ லாந்தொழு
நீரவைகைக்
குழுவா யெதிர்ந்த உறிகைப் பறிதலைக்
குண்டர்தங்கள்
கழுவா உடலங் கழுவின வாக்கிய
கற்பகமே. —அந்தாதி 28

# 32 திருவையாறு

## 158 பதிகவரலாறு

142-வது பதிகத் தலைப்பிற் காண்க. தனியே வரலாறு காணப்பட்டிலது,

### திருவிராகம் பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

திருத்திகழ் மலைச்சிறுமி யோடுமிகு தேசர்
உருத்திக ழெழிற்கயிலை வெற்பிலுறை தற்கே
விருப்புடைய வற்புத ரிருக்குமிட மேரார்
மருத்திகழ் பொழிற்குலவு வண்டிருவையாறே. 1

கந்தமர வுந்துபுகை யுந்தலில் விளக்கேர்
இந்திர னுணர்ந்துபணி யெந்தையிட மெங்கும்
சந்தமலி யுந்தரு மிடைந்தபொழில் சார
வந்தவளி நந்தணவு வண்டிருவை யாறே. 2

---

1. திரு - அழகு. திகழ் - விளங்குகின்ற. மலைச்சிறுமி - இமாசலகுமாரியாகிய பார்வதி தேவியார். தேசர் - ஒளிவடிவினர். உரு - வெண்மையுருவம். எழில் - அழகு. வெற்பு - மலை. உயர்ச்சியிற் பிற எல்லாவற்றையும் வெல்லுங்காரணத்தாற் பெயர், ஏர் - அழகு. மரு - மணம். அற்புதர் இருக்குமிடம் திருவையாறுஎனக்கூட்டுக. 7, 8, பாக்களில் கூறியபடி வண்மை-கொடையாளர்; ஈகையை உணர்த்தும்.

2. கந்து - பற்றுக்கோடு. அமர - பொருந்த. உந்தல் - தூண்டல், செலுத்துதல், இல் - இல்லாத, விளக்கு ஏர் - விளக்கினது அழகை. பணி - பணிகின்ற, இந்திரனுணர்ந்தது செம்பொற் சோதியைப் போலும். இதன் முதலடியிற் குறித்த 'விளக்கேர்' என்பதன் உண்மை புலப்பட்டிலது. திருவையாற்றுப் புராணம்:- பஞ்சநதிச் சருக்கம். பா. 15-ல் உணர்த்தும் வரலாறு காண்க. சந்தம் - அழகு, சந்தனமுமாம். தரு - மரங்கள். வளி - காற்று, நந்து - நந்தவனம்? அணவு - கிட்டும், பொருந்தும். எந்தையிடம் திருவையாறு எனக் கூட்டுக.

கட்டுவட மெட்டுமுறு வட்டமுழ வத்தில்
கொட்டுகர மிட்டவொலி தட்டும்வகை நந்திக்
கிட்டமிக நட்டமவை யிட்டவ ரிடஞ்சீர்
வட்டமதி லுட்டிகழும் வண்டிருவை யாறே. 3

நண்ணியோர் வடத்தினிழ லுல்வர்முனி வர்க்கன்
றெண்ணிலி மறைப்பொருள் விரித்தவ ரிடஞ்சீர்த்
தண்ணின்மலி சந்தகிலொ டுந்திவரு பொன்னி
மண்ணின்மிசை வந்தணவு வண்டிருவை யாறே. 4

வென்றிமிகு தாரகன தாருயிர் மடங்கக்
கன்றிவரு கோபமிகு காளிகத மோவ
நின்றுநட மாடியிட நீடுமலர் மேலால்
மன்றன்மலி யும்பொழில்கொள் வண்டிருவையாறே. 5

---

3. முழவம் எட்டு வடத்தைக் கொண்டு கட்டப்பட்டது, வட்டமானது. நந்திதேவரால் கொட்டப்படுவது. கரம் - கை. இடம் - விருப்பம். நட்டம் அவை இட்டவர் - திருக்கூத்து வகைகளை ஆடியவர், (சிவபெருமான்) இட்டவர்இடம் திருவை யாறு என்க. சீர் வட்டம் இரண்டும் மதிலைவிசேடித்தன, மதிலுள் திகழும் திருவையாறு. வண்மை-வளத்தைக்குறித்தது.

4. வடத்தின் நிழல் - கல்லால்மரத்தின் நிழல். நால்வர் - சனகாதியர். விரித்தவர் - விரித்துரைத்தவர்; (சின்முத்திரைக் குறிப்பால்). சீர் - சிறப்பு, கனமுமாம். தண்ணின் மலி - குளிர்ச்சியில் மிக்க. சந்து அகில் - சந்தனமும் அகிலுமாகிய மரங் கள். பொன்னி - காவிரி, வரித்தவர் இடம் திருவையாறு என்க.

5. வென்றி - வெற்றி. தாரகன் - அசுரன். ஆருயிர்மடங்க- அரியவுயிர் மடிய. கன்றி - மனங்கன்றி. கதம் - கோபாவேசம். ஓவ - நீங்க. நடமாடி - பெயர்ச்சொல், நடராசப்பெருமான். மன்றல் - மணம். மேலால் பொலியும் பொழில் என்றும். நடமாடி இடம் திருவையாறு என்றும் கூட்டுக.

பூதமொடு பேய்கள்பல பாடநட மாடிப்
பாதமுதல் பையரவு கொண்டணி பெறுத்திக்
கோதைய ரிடும்பலி கொளும்பர னிடம்பூ
மாதவி மணங்கமழும் வண்டிருவை யாறே, 6

துன்னுகுழன் மங்கையுமை நங்கைசுளி வெய்தப்
பின்னொரு தவஞ்செய்துழல் பிஞ்ஞகனு மங்கே
என்னசதி யென்றுரைசெ யங்கண னிடஞ்சீர்
மன்னுகொடை யாளர்பயில் வண்டிருவை யாறே. 7

இரக்கமில் குணத்தொடுல கெங்குநலி வெம்போர்
அரக்கன்முடி யத்தலை புயத்தொடு மடங்கத்
துரக்கவிர லிற்சிறிது வைத்தவ ரிடஞ்சீர்
வரக்கருணை யாளர்பயில் வண்டிருவை யாறே. 8

---

6. பூதமொடு பேய்கள் பல பாட இறைவன் நடமாடினான். பை - படம். சர்ப்பாபரணத்தைப் பாதாதிகேசாந்தம் அழகு பெறக் கொண்டவன். கோதையர் - தாருகவனத்து ரிஷிபத்தினிகள். பரன் - மேலானவன், மாதவி - குருக்கத்தி, பரன் இடம் திருவையாறு என்க.

7. துன்னு நெருங்கிய, குழல் - கூந்தல், மங்கையுமை நங்கை - உமாதேவியார். சுளிவு எய்த - கோபம் அடைய. பின் ஒரு தவம் செய்து - பின்னரும் ஒரு தவத்தைச் செய்து. உழல் - உழலுதற்குக் காரணமான. பிஞ்ஞகன் - சடைமுடி உடையவன். அங்கே - தவஞ்செய்த இமயமலைச்சாரலில். என்ன சதி என்று உரைசெய் அங்கணன் - சதி என்ன காரணத்தால் நீ தவம் செய்கின்றாய் என்று வினவியவன். சதி - பதிவிரதை. அங்கணன் - கருணைக்கண்ணன். சீர் மன்னு கொடையாளர் - சிறப்பு நிலை பெற்ற கொடையை ஆள்பவர்.

8. இல் - இல்லாத. நலி - வருந்துகின்ற. அரக்கன் - இராவணன். தலை புயத்தொடும் அடங்க - இருபது தோள்களொடும் பத்துத் தலைகளும் நெரிய. துரக்க - செலுத்த. (அழுத்த என்றவாறு) சீரும் வரமும் கருணையும் ஆள்பவர்.

பருத்துருவ தாகிவி ணடைந்தவனோர் பன்றிப்
பெருத்துருவ தாயுல கிடந்தவனு மென்றும்
கருத்துரு வொணுவகை நிமிர்ந்தவ னிடங்கார்
வருத்துவகை தீர்கொள்பொழில் வண்டிருவை யாறே. 9

பாக்கியம தொன்றுமில் சமணபதகர் புத்தர்
சாக்கியர்க ளென்றுடல் பொதிந்துதிரி வார்தம்
நோக்கரிய தத்துவ னிடம்படியின் மேலால்
மாக்கமுற நீடுபொழில் வண்டிருவை யாயே. 10

---

9. பருத்து உரு அது - பருந்து உருவம். வலித்தல் விகாரம். விண்ணடைந்தவன் - பிரமதேவன். பெருத்த பன்றி உருவதாய் - பெரிய பன்றி வடிவமாய். பெயரெச்சத்து அகரம், தொக்கது. உலகிடந்தவன் - உலகங்களைப் பேர்த்தவன். திருமால் பிரமன் ஒரு கற்பத்தில் கழுகாகி முடிதேடினன் என்னும் உண்மை இதில் குறிக்கப்பட்டது "பூவார் பொற்றவிசின் மிசை இருந்தவனும், பூந்துழாய் புனைந்தமாலும், ஓவாது கழுகு ஏனமாய் உயர்ந்து ஆழ்ந்து உற நாடி உண்மைகாணாத், தேவாரும் திருவுருவன்" (தி - 1 பதி - 131, பா 9) என்று முன்னும் அருளியது உணர்க. "ஏனங்கழுகானவருன்னை முனென்கொல் வானந்தலமண்டியும் கண்டிலாவாறே" என்றது காண்க. (தி - 2. பதி 37. பா 9) "புண்டரிகத்துள்ளிருந்த புத்தேள் கழுகுருவாய், அண்டரண்டம் ஊடுருவ ஆங்கோடிப், பண்டொருநாள், காணான் இழியக் கனக முடிகவித்துக் கோணாது நின்ற குறி போற்றி" (தி - 11, நக்கீரர். போற்றித்திருக்கலி வெண்பா 4, 5 கண்ணிகள்) கருத்து உரு ஒணுவகை - அவர்கள் கருத்தில் இறைவன் உருவம் (அடிமுடி) ஒன்றுவகை, ஒன்றுமை - ஒண்ணுமை மருஉ. கார்வருத்து வகை தீர்கொள் பொழில் - வானோங்கி வளர்தலால் ஆங்குச் செல்லும் முகிலைத் தடுத்து வருத்தும் வகையால், வெயிலால் காய்ந்த வெப்பத்தை மழையால் தீர்தலைக்கொள்ளும் சோலை. காரை வருவித்தலால் எனலுமாம். வருத்தல் (-வருவித்தல்) என்பது வழக்கிலும் உண்டு. நிமிர்ந்த இடம் திருவையாறு எனக்கூட்டுக.

10. பாக்கியம் - நல்வினை. இல் - இல்லாத. ஒன்றும் - சிறிதும். பதகர் - பாதகர். பொதிந்து - மறைந்து, மூடி. நோக்கு

வாசமலி யும்பொழில்கொள் வண்டிருவை யாற்றுள்
ஈசனை யெழிற்புகலி மன்னவன்மெய்ஞ் ஞானப்
பூசுர னுரைத்ததமிழ் பத்துமிவை வல்லார்
நேசமலி பத்தரவர் நின்மல னடிக்கே. 11

திருச்சிற்றம்பலம்

---

அரிய தத்துவன் - நோக்கிற்கு அரியனல்லாத மெய்ப்பொருளானவன். படி - பூமி. நீடு - வளர்ந்த. மாக்கம் - விண். மாகம் மாக்கமென வலித்தல் விகாரம், தத்துவனிடம் திருவையாறு என்க.

11. வாசம் - மணம். புகலிமன்னவன் - காழிவேந்தன். மெய்ஞ்ஞானப் பூசுரன் - திருஞானசம்பந்தன், பூசுரர் - பூதேவர். நேசம் - அன்பு. பத்தர் - பக்தர். நின்மலன் - அழுக்கில்லாதவன். மலரகிதன்.

---

கற்பா நறவ மணிகொழித் துந்து
மலைச்சிலம்பா
நற்பா மொழியெழில் ஞானசம் பந்தன்
புறவமன்ன
விற்பா நுதலிதன் மென்முலை யின்னிளஞ்
செவ்விகண்டிட்
டிற்பா விடும்வண்ணம் எண்ணுகின் றுள்அம்ம
எம்மனையே. —அந்தாதி 29

எம்மனை யாய்எந்தை யாய்என்னை ஆண்டென்
துயர்தவிர்த்த
செம்மலர் நீள்முடி ஞானசம்பந்தன்
புறவமன்னீர்
வெம்முனை வேல்என்ன என்ன மிளிர்ந்து
வெளுத்தரிபோன்
றும்மன வோஅல்ல வோவந்தென் உள்ளத்
தொளிர்வனவே. —அந்தாதி 30

# 33 திருநள்ளாறு

## 169 பதிகவரலாறு

'போகமார்த்த பூண்முலையாள்' எனத் தொடங்குந் திருப் பதிகத்தொடு பாடப்பட்டதாயிருக்கலாம் என்று தோன்று கிறது.

### திருவிராகம் பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

ஏடுமலி கொன்றையர விந்துவிள வன்னி
மாடவல செஞ்சடையெ மைந்தனிடமென்பர்
கோடுமலி ஞாழல்குர வேறுசுர புன்னை
நாடுமலி வாசமது வீசியநள் ளாறே. 1

விண்ணியல் பிறைப்பிள வறைப்புனல் முடித்த
புண்ணிய னிருக்குமிட மென்பர்புவி தன்மேல்
பண்ணிய நடத்தொடிசை பாடுமடி யார்கள்
நண்ணிய மனத்தின்வழி பாடுசெய்நள் ளாறே. 2

---

1 ஏடு - இதழ், (எளைது, எளை + து ஏள் + து ஏடு, சிந்தாமணி 1552 உரை.) இந்து - பிறை. வன்னி - வன்னிபத்திரம். மாடு அவலசெஞ்டை - பொன்னை ஒவ்வாதென்று அவலம் உறுத்தும் செஞ்சடை. கோடு - கொம்புகள். ஞாழல் - புலிநகக் கொன்றை, கோங்கென லுமாம். குரவு - குராமரம். வாசம் - மணம், நள்ளாறே மைந்தனிடம் என்பர்; இவ்வாறே ஏனையவும் ஒட்டுக.

2. விண் இயல் பிறை பிளவு - வானூர் பிறைத்துண்டம். அறைப்புனல் - ஒலிநீர்கங்கை. புவி - பூமி. பண்ணிய - செய்த, பண்ணொடு கூடிய எனலுமாம். நண்ணிய - விரும்பிய. வழி பாடு - அருள்வழி உயிர்க்குப் படுதல்.

விளங்கிழை மடந்தைமலை மங்கையொரு பாகத்
துளங்கொள விருத்திய வொருத்தனிட மென்பர்
வளங்கெழுவு தீபமொடு தூபமலர் தூவி
நளன்கெழுவி நாளும்வழி பாடுசெய்நள் ளாறே. 3

கொக்கரவர் கூன்மதியர் கோபர்திரு மேனிச்
செக்கரவர் சேருமிட மென்பர்தட மூழ்கிப்
புக்கரவர் விஞ்சையரும் விண்ணவரு நண்ணி
நக்கரவர் நாமநினை வெய்தியநள் ளாறே. 4

நெஞ்சமிது கண்டுகொ ளுனக்கென நினைந்தார்
வஞ்சம தறுத்தருளு மற்றவனை வானோர்
அஞ்சமுது காகியவர் கைதொழ வெழுந்த
நஞ்சமுது செய்தவ னிருப்பிடநள் ளாறே. 5

பாலனடி பேணவவ னுருயிர் குறைக்குங்
காலனுடன் மாளமு னுதைத்தவர னூராம்
கோலமலர் நீர்க்குட மெடுத்துமறை யாளர்
நாலின்வழி நின்றுதொழில் பேணியநள் ளாறே. 6

---

3 இழை - ஆபரணம், முதல்நிலைத் தொழிலாகுபெயர். உளங்கொள - திருஉள்ளங்கொள்ள, விரும்ப. இருத்திய:- பிற வினை, ஒருத்தன் - தனிமுதல்வன், நளன் வழிபட்டவரலாறு உணர்த்தப்பட்டது. பூசிக்கும் முறையும் கூறப்பட்டது.

4 கொக்கு - கொக்கிறகு, 'கொக்கிறகு சென்னி உடையான் கண்டாய்' (6–39–2) அவர் - பாம்பணிந்தவர். கூன் மதியர் - இளம்பிறைசூடி. கோபர் - கோபத்தை உடையவர். செக்கர் திருமேனியர் - செவ்வானம் போலும் வண்ணத்தை உடைய திருமேனியர். அந்திவண்ணர். புக்கு - புகுந்து. அரவர் - நாகலோகத்தவர். விஞ்சையர் - வித்யாதரர். நக்கர் - நக்நர். திகம்பரர். நாமம் - திருப்பெயர், திருவைந்தெழுத்துமாம்.

5 நினைந்தார் - நினைந்தவரது, வஞ்சம் அது - வஞ்சத்தை, பொய்யை, பாற்கடலினின்றெழுந்த விஷத்தை அஞ்சிப் புறங் காட்டி ஓடிய வானவர் கைதொழ அந்நஞ்சை அமுதாகக் கொண்டு அவர்களைக்காத்த சிவபெருமான்.

6 பாலன் - மார்க்கண்டேய முனிவர். பேண - விரும்பித் தொழ. காலன் உடல்-எமனுடைய தேகம். உடன்மாள-உடனே

நீதியர் நெடுந்தகையர் நீண்மலையர் பாவை
பாதியர் பராபரர் பரம்பர ரிருக்கை
வேதியர்கள் வேள்வியொழி யாதுமறை நாளும்
ஓதியர ஞமமு முணர்த்திடுநள் ளாறே. 7

கடுத்துவ லரக்கன்மு னெருக்கிவரை தன்னை
எடுத்தவன் முடித்தலைகள் பத்துமிகு தோளும்
அடர்த்தவர் தமக்கிடம தென்பரளி பாட
நடத்தகல வைத்திரள்கள் வைகியநள் ளாறே. 8

உயர்ந்தவ னுருக்கொடு திரிந்துலக மெல்லாம்
பயந்தவ னினைப்பரிய பண்பனிட மென்பர்
வியந்தமரர் மெச்சமலர் மல்குபொழி லெங்கும்
நயந்தரும வேதவொலி யார்திருநள் ளாறே 9

---

அழிய என்றுமாம். அரன் - சிவபெருமான். கோலமலர் - அழகிய பூக்கள். நீர்க்குடம் - அபிஷேக ஜலபாத்திரம். நாலின்வழி - நால்வேதநெறி. தொழில் - அருச்சனை தொழில்.

7 நீதியர் - நீதிவடிவாய் விளங்குபவர், நெடுந்தகையர் - பெருங்குணங்களுக்கு உறைவிடமானவர். நீள்மலையார் - நீண்ட திருக்கயிலை மலையை உடையவர். பாவை பாதியர் - அர்த்தநாரீசுரர். பராபரர் - மேலவர்க்கும் மேலவர், 'பராபரன் என்பது தமதுபேராக்கொண்டார்' (அப்பர் 310:- 11) பரமும் அபரமும் ஆயவர் எனலும் பொருந்தும். 'பின்தானும் முன்தானும் ஆனான்' (6.11.2.) 'முன்னவன்காண் பின்னவன்காண்' (6.48.8) 'முன்பனை உலகுக்கெல்லாம் (4.74.2.) முன்னவன் உலகுக்கு 5.60.8.) 'முன்பாகி நின்ற முதலே போற்றி' (4.56 2.) 'முன்பின்முதல்வன்' (4.90.3.) 'முன்னியா நின்ற முதல்வா போற்றி' (6.57. 5) 'முன்னையார்...பின்னையார்' (5.16.7) வேள்வி - யாகம், நாளும் - நாள்தோறும், காலைதோறும், எனலுமாம்.

8. வரை - மலை. அளி - வண்டு. கலவைத்திரள்கள் - வாசனைக் கலப்புடைய பொருள்களின் கூட்டம். நடத்த :- பெயரெச்சம்.

9. உயர்ந்தவன் - திருவிக்கிரமன், திருமால். பயந்தன் - பெற்றவன். பிரமன், அமரர் வியந்து மெச்ச. நயம் தருமம் -

சிந்தைதிரு கற்சமணர் தேரர்தவ மென்னும்
பந்தனை யறுத்தருள நின்றபர மன்னூர்
மந்தமுழ வந்தரு விழாவொலியும் வேதச்
சந்தம்விர விப்பொழின் முழங்கிய நள் ளாறே. 10

ஆடலர வார்சடைய னாயிழைத னோடும்
நாடுமலி வெய்திட விருந்தவனள் ளாற்றை
மாடமலி காழிவளர் பந்தனது செஞ்சொல்
பாடலுடை யாரையடை யாபழிக ளேயே. 11

திருச்சிற்றம்பலம்

---

நயத்தையுடைய தருமம். தருமவேதம்:- 'வேதத்தைவிட்ட அறமில்லை' (திருமந்திரம்.) நயம் தரும் அவேதவொலி எனலுமாம். ஆர் - நிறைந்த, நயந்தமரு என்றது பிழை.

*10.* திருகல் - மாறுபாடு. வேதச்சந்தம் - வேதத்தைஓதும் சந்தையொலி, பொழிலில் விரவி முழங்கிய நள்ளாறு.

*11.* ஆர் - பொருந்திய. ஆய் இழை - உமாதேவியார் 'போகமார்த்த பூண்முலையாள் தன்னோடும் பொன்அகலம்பாகம் ஆர்த்த...அண்ணல்,' என்றதை நினைப்பிக்கும் இடம் இது. காழிச்சிறப்புணர்த்திற்று. பந்தன் - திருப்பெயர்ச் சுருக்கம். பாடலுடையாரை பழிகளும் நோய்களும் அடையா என்க.

---

ஒளிறு மணிப்பணி நாட்டும் உலகத்தும்
உம்பருள்ளும்
வெளிறு படச்சில நிற்பதுண் டேமிண்டி
மீனுகளும்
அளறு வயற்சண்பை நாதன் அமுதப்
பதிகமென்னுங்
களிறு விடப்புகு மேற்றொண்டர் பாடுங்
கவிதைகளே. —அந்தாதி 31

# 34 திருப்பழுவூர்

## 170 பதிகவரலாறு

திருநெல்வெண்ணெய் முதலிய சிவதலங்களை மெய்யன்பர் பலரொடுந் தொழுது அருள்பெற்று மீளும்பொழுது, ஞானப் பாலூட்டிய தேவியாரோடு தோணியப்பர் திருக்காட்சி, காழிக்கோமானார் திருவுள்ளங் கொள்ளப்புகுந்து, அவரது உணர்வில் வெளிப்பட்டது. பாடலால் உருகினார். புகலியை நண்ண மனம்வைத்தார். திருவரத்துறை யடிகளைவணங்கிப் பேரருள் விடைகொண்டுபோனார். உள்ளே நடங்கொண்டு நிறைந்த பூங்கழலிணையை உச்சிமேற்கொண்டே முத்துச் சிவிகை மேற்கொண்டார். மறையும் தமிழும் வயிரும் வளையும் காளமும் முரசும் பிறவும் முழங்க, அன்பர் சூழ, பூரணகும்பங்களொடு நகரினர் எதிர்கொள்ளத் தலம் பல வழிபட்டு மாதியலும் பாதியர் மகிழ்பெரும் பழுவூர் சேர்ந்து அங்கு மலைநாட்டந்தணர் புரிந்த பணிகளையும் பாராட்டிப் பாடியருளியது இத்திருப்பதிகம்.

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

முத்தன்மிகு மூவிலைநல் வேலன்விரி நூலன்
அத்தனெமை யாளுடைய வண்ணலிட மென்பர்
மைத்தழை பெரும்பொழிலின் வாசமதுவீசப்
பத்தரொடு சித்தர்பயில் கின்றபழு வூரே. 1

---

1 முத்தன் - இயல்பாகவே பாசம்இல்லாதவன். நல்மூவிலை வேலன் - அழகிய திரிசூலப்படையினன். விரிநூலன் - விரிந்து பெருகிய மறை(நூல்களை அருளிய) முதல்வன். அத்தன் - தலைவன். மை - மேகம். தழை - தழைக்கின்ற. (பொழில்). வாசம் - மணம். பத்தர் - பத்துடையர். பத்து - பற்று, அன்பு. பக்தி என்னும் வடசொற்றிரிபுமாம். சித்தர் - சித்துடையர். சித்தத்தார் என்பது சித்தம் அடியாகத் தோன்றும் பெயர்.

கோடலொடு கோங்கவை குலாவுமுடி தன்மேல்
ஆடரவம் வைத்தபெரு மானதிட மென்பர்
மாடமலி சூளிகையி லேறிமட வார்கள்
பாடலொலி செய்யமலி கின்றபழு வூரே. 2

வாலிய புரத்திலவர் வேவவிழிசெய்த
போலிய வொருத்தர்புரி நூலரிடமென்பர்
வேலியின் விரைக்கமல மன்னமுக மாதர்
பாலென மிழற்றிநட மாடுபழுவூரே. 3

---

பயில்கின்ற பழுவூர் என்றதால், நம் ஆசிரியர் காலத்து இருந்த அத் திருத்தலத்தின் சிறப்பு விளங்குகின்றது. 'பழுவூரே இடமென்பர் என்று பாடல்தோறும் இயைத்துக்கொள்க.

2. கோடல் - வெண்காந்தள் மலர். கோங்கு - கோங்கமலர். மாடம் - உயரிய வீடு. சூளிகை - வீட்டின் உச்சி. மலிதல் இரண்டும் தலத்தின் செல்வச் சிறப்பைக் குறித்தன.

3, வாலிய - பெரிய. புரத்திலவர் - முப்புரத்தை இல்லமாக உடையவர். புரத்தில் அவர் எனலுமாம். அவர்-பண்டறிசுட்டு. வேவ விழிசெய்த - திரிபுரத்தைச் சிரித்தெரித்ததுமன்றி விழித்தெரித்ததும் ஒருகற்பத்தில் நிகழ்ந்தது என்பர். 'அரணம் அனலாகவிழித்தவனே' (157:- 1) 'பார்த்ததுவும் அரணம்படர் எரிமூழ்கவே' (212:- 5) 'கடைநவில் மும்மதிலும் எரி ஊட்டிய கண்ணுதலான்' (319:- 3) 'முதுமதிள் வெவ்வழல் கொளநனி முனிபவர்' (342:- 4) 'நெடுமதில் ஒருமூன்றும் கொலையிடைச் செந்தீவெந்தறக்கண்ட குழகனூர்' (376 - 7) என்று பிறுண்டும் ஆசிரியர் அருளியவாறறிக. 'மதில் மூன்றுடைய அறவைத் தொழில் புரிந்து அந்தரத்தே செல்லும் மந்திரத்தேர்ப் பறவைப்புரம்' (4 - 111 - 7) என்னும் திரிபுரத்தின் இயல்பை யுணர்க. போலிய - போன்ற; தடத்தமென்றபடி. வேலி - வயலிலுள்ள, விரை - மணம். கமலம் - தாமரை. அன்ன - போன்ற. பால் என - பால்போல இனியது என்ன. மிழற்றி - பாடி (க் கொண்டு) பாடி ஆடு (வளமுடைய) பழுவூர்.

எண்ணுமொ ரெழுத்துமிசை யின்கிளவி தேர்வார்
கண்ணுமுத லாயகட வுட்கிடமதென்பர்
மண்ணின்மிசை யாடிமலை யாளர்தொழு தேத்திப்
பண்ணினொலி கொண்டுபயில் கின்றபழு வூரே. 4

சாதல்புரி வார்சுடலை தன்னினட மாடும்
நாதனமை யாளுடைய நம்பனிட மென்பர்
வேதமொழி சொல்லிமறை யாளரிறை வன்றன்
பாதமவை யோதநிகழ் கின்றபழு வூரே. 5

மேவயரு மும்மதிலும் வெந்தழல் விளைத்து
மாவயர வன்றுரிசெய் மைந்தனிட மென்பர்
பூவையை மடந்தையர்கள் கொண்டுபுகழ் சொல்லிப்
பாவையர்கள் கற்பொடு பொலிந்தபழு வூரே. 6

---

4. எண்ணும் எழுத்தும் இசையின் கிளவி (யும்) தேர்வார் கண்ணும் முதல் ஆய கடவுள் - எண்ணையும் எழுத்தையும் இசையொடுகூடிய இனிய கிளவியையும் ஆராய்வார் கருதும் முதற்பொருளாகிய கடவுள். 'எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்' 'எண்ணென்ப ஏனை எழுத்தென்ப' என்புழிப் போல ஈண்டும் இருபொருள் கொள்ளல் பொருந்தும். 'எண்ணும் எழுத்தும் குறியும் அறிபவர்தாமொழியப் பண்ணின் இசைமொழிபாடியவானவர் தாம்பணிவார் திண்ணென் வினைகளைத்தீர்க்கும் பிரான்' (4, 90 - 6). மலையாளர் ஆடியும் தொழுதும் ஏத்தியும் பாடியும் பயில்கின்ற பழுவூர் என்றதால், அத்தலத்தில் 'அந்தணர்களான மலையாளர்' வந்து செய்யுந் திருத்தொண்டு, ஆசிரியர் கண்கூடாக் கண்டவுண்மையாதல் விளங்கும். இப்பதிகத்தின் திருக்கடைக்காப்பிற் காண்க.

5. 'கோயில் சுடுகாடு' என்றது, திருவாசகம். மறையாளர்-(மலையாளத்து) வேதியர். 'ஏத்த' பின்னோர் பாடம்.

6. மேவு அயரும் - பொருந்துவதால் அயர் உறுத்தும், மேவ அயரும் எனலுமாம். தழல் - தீ. விளைத்து - தோற்றி. மா - யானை. உரிசெய் - உரித்தலைச் செய்த. மைந்தன் - வீரன். பூவை - நாகணவாய்ப் பறவை. 'பொற்பில் நின்றன பொலிவு' அப்பொற்பு, கற்பால் நீடுநிற்கும். கற்பிலார்பொற்புக் கடிதில் அழிவது கண்கூடு.

மந்தண மிருந்துபுரி மாமடிதன் வேள்வி
சிந்தவிளை யாடுசிவ லோகனிட மென்பர்
அந்தணர்க ளாகுதியி லிட்டவகின் மட்டார்
பைந்தொடிநன் மாதர்சுவ டொற்றுபழு வூரே. 7

உரக்கடல் விடத்தினை மிடற்றிலுற வைத்தன்
றரக்கனை யடர்த்தருளு மப்பனிட மென்பர்
குரக்கினம் விரைப்பொழிலின் மீதுகனி யுண்டு
பரக்குறு புனற்செய்விளை யாடுபழு வூரே. 8

நின்றநெடு மாலுமொரு நான்முகனு நேட
அன்றுதழ லாய்நிமிரு மாதியிட மென்பர்
ஒன்றுமிரு மூன்றுமொரு நாலுமுணர் வார்கள்
மன்றினி லிருந்துடன் மகிழ்ந்தபழு வூரே. 9

---

7. மந்தணம் - இரகசியம். மாமடி - மாமன்; தக்கன். வேள்வி - யாகம். சிந்த - அழிய. விளையாடு - வீரபத்திரராய்ச் சென்று போர்விளையாட்டைச்செய்த. யாகத்தைப் போராக் கொள்ளாது விளையாட்டாக் கொண்டழித்த என்றபடி. "சுருதியான் தலையும் நாமகள் மூக்கும் சுடரவன் கரமும் முன் இயங்கு பருதியான் பல்லும் இறுத்து அவர்க்கு அருளும் பரமனார்" (பதிகம் 376 . 5.) என்று பின்னும், ஆசிரியர் அவ் விளையாட்டைக் குறித்தருளுமாறறிக. ஆர் - பொருந்துகின்ற (மாதர்). சுவடு - அடிச்சுவடு. அகில் தூபவர்க்கங்களுள் ஒன்று. மட்டு - தேன். ஆர் - ஆர்கின்ற, உண்ணுகின்ற, 'கருப்புமட்டு வாய்மடுத்து' திருவாசகம் (5-80)

8. உரம் - வலிமை. மிடற்றில் - கழுத்தில். குரங்கு இனம் - குரக்கினம். (வலித்தல் விகாரம்). விரை - மணம். பரக்கு - பரத்தல். புனல் செய் - நீர்வளமிக்க வயல். குரங்கினம் கனியுண்டு செய்யில் விளையாடும் ஊர் என்க. 'புணர்ச்செய்' என்ற பழைய பாடத்திற்குக் கலவி பொருளாகும். புணர்தலைச் செய்யும் விளையாட்டு.

9. ஒன்றும் - தனிமுதலாகிய சிவபெருமானையும். இரு மூன்றும் - ஆறு அங்கங்களாய் வேதார்த்த சாதகமாயுள்ள வற்றையும். ஒருநாலும் - நாலு வேதங்களையும். உணர்வார்கள்-

மொட்டையம ணுதர்துகின் மூடுவிரி தேரர்
முட்டைகண் மொழிந்தமுனி வான்றனிடமென்பர்
மட்டைமலி தாழையிள நீரதிசை பூகம்
பட்டையொடு தாறுவிரி கின்றபழு வூரே. 10

அந்தணர்க ளானமலை யாளரவ ரேத்தும்
பந்தமலி கின்றபழு வூரரனை யாரச்
சந்தமிகு ஞானமுணர் பந்தனுரை பேணி
வந்தவண மேத்துமவர் வானமுடை யாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

உணரும் அந்தணர். மன்று - அம்பலம், சபை, (பெரிய, திருநீல கண்ட.) 'அருமறையோடாறங்கம் ஆய்ந்துகொண்டு பாடினார் நால்வேதம்' (6. 83. 5) என்பதில் மறையும் வேதமும் வெவ்வேறு ஆதல் அறிக.

10. அமண் ஆதர் - சமணராகிய அறிவிலிகள். ஆதம் - அறிவின்மை. மொட்டை - தலைமயிர் பறித்தலால் ஆனது. முட்டைகள் - வழுவினர், குறைவினர், வறியர், பதர்கள் எனப் பல பொருளும் பொருந்தும். மொழிந்த - சொல்லியவை. முனிவான் - வெறுப்பவன். இளநீரது என்க. இசை - இசைந்த. பூகம் - பாக்குமரம். தாறு - குலை.

11. முன் உள்ள பாக்கள் 4. 5, 7, 9 காண்க. ஏத்தும் பந்தம் - வழிபட்டுநிற்கும் அருளுறவு. ஆர - நிறைய. ஞானம் உணர் பந்தன் என்று திருப்பெயர் பொருள் விளக்குமாறுணர்க. பேணி - விரும்பி. பதிகம் 165 முடிவிலும் இவ்வடி அமைந்தமை காண்க.

---

கவிக்குத் தருவன கண்ணுக் கினியன
கேட்கில்இன்பஞ்
செவிக்குத் தருவன சிந்தைக் குரியன
பைந்தரள
நவிக்கட் சிறுமியர் முற்றின் முகந்துதஞ்
சிற்றில்தொறுங்
குவிக்கத் திரைபரக் குங்கொச்சை நாதன்
குரைகழலே. —அந்தாதி 32

# 35 திருத்தென்குரங்காடுதுறை

## 171 பதிகவரலாறு

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் திருவிடைமருதூரை வழிபட்டுப் பாடித் திருநாகேச்சுரத்தையும் பணிந்து, மற்றும் நற்பதிபலநண்ணிப் போற்றிக் குரங்காடுதுறையை அணைந்து, குழகனர் குரைகழல்களைப் பெருங்காதலால் பேணிய இன்னிசை பெருக அருள்செய்தது இந்த அருங்கலை நூற்றிருப் பதிகம்.

### பண் - இந்தளம்

### திருச்சிற்றம்பலம்

பரவக்கெடும் வல்வினை பாரிடஞ் சூழ
இரவிற்புறங் காட்டிடை நின்றெரி யாடி
அரவச்சடை யந்தணன் மேய வழகார்
குரவப்பொழில் சூழ்குரங் காடு துறையே 1

விண்டார்புர மூன்று மெரித்த விமலன்
இண்டார்புறங் காட்டிடை நின்றெரி யாடி
வண்டார்கரு மென்குழன் மங்கையொர் பாகம்
கொண்டானகர் போல்குரங் காடு துறையே. 2

---

1. குரங்காடுதுறை பரவ வல்வினைகெடும் என்றியைக்க. பாரிடம் - பூதகணம். ஆடி - பெயர்ச்சொல். அந்தணன் - 'அறவாழியந்தணன்'. மேய - எழுந்தருளிய. (மேவிய - விரும்பிய) குரவம் - குராமரம்.

2. விண்டார் - பகைவர்; விமலன் - மலமில்லாதவன். இண்டு - புலிதொடக்கிக்கொடி. மென்குழல் மங்கை - இத்தலத்தின் அம்பிகையின் திருப்பெயராயிருக்கலாம். கொண்டான் - கொண்ட சிவபிரான்.,' வினையாலணையும் பெயர். கொண்டானதுநகர்' போலுமென்க.

நிறைவில்புறங் காட்டிடை நேரிழை யோடும்
இறைவில்லெரி யான்மழு வேந்திநின் றாடி
மறையின்னொலி வானவர் தானவ ரேத்தும்
குறைவில்லவ னூர்குரங் காடு துறையே. 3

விழிக்குந்நுதன் மேலொரு வெண்பிறை சூடித்
தெழிக்கும்புறங் காட்டிடைச் சேர்ந்தெரி யாடிப்
பழிக்கும்பரி சேபலி தேர்ந்தவ னூர்பொன்
கொழிக்கும்புனல் சூழ்குரங் காடுதுறையே. 4

நீருர்தரு மேனிய னெற்றியொர் கண்ணன்
ஏருர்கொடி யெம்மிறை யீண்டெரி யாடி
ஆருர்சடை யந்தண னாயிழை யாளோர்
கூறுனகர் போல்குரங் காடுதுறையே. 5

---

3. நிறைவு இல் புறங்காடு - 'எல்லார் புறனும்தான் கண்டு உலகத்து மன்பதைக்கெல்லாம் தானாய்த் தன்புறங்காண்போர்க் காண்பறியாது' (புறம் - 356) என்று கூறப்பட்ட புறங்காடு இனிவரும் பிணத்திற்கு இங்கு இடமில்லை என்று நிறைதல் என்றும் இல்லாதது. இறைவு - இறைதல் (அழிதல்) இல் - இல்லாத. எரியான் - தீயுடையவன். சிவபிரான் ஏந்திய தீக்கு என்றும் அழிவில்லை. ஆடி - பெயர்ச்சொல். தானவர் - அசுரர். குறைவு இல்லான் - குறைவிலா நிறைவினன்.

4. விழிக்கும் நுதல் மேல் - தீக்கண் திறக்கும் திருநுதலின் மேலிடத்தில் (சென்னியின் முற்பக்கத்தில் என்றபடி) 'பிறை நுதல் வண்ணம் ஆகின்று' (புறம் - கடவுள்) சூடி, ஆடித் தேர்ந்தவன் ஊர் குரங்காடு துறை என்க. தெழிக்கும் - ஒலிக்கும். பழிக்கும் பரிசே - பலியேற்கின்றானென்று பழிக்குந் தன்மையிலே. பொன் கொழிக்கும் புனல் - பொன்னியாகிய காவிரி நீர்.

5. நீறு ஆர் தரு மேனியன் - திருவெண்ணீற்றினை நிறையப் பூசிய திருமேனியன்; ஏறு ஆர் கொடி - (பா. 9) விடைக் கொடி. (ஆர்தல் - பொருந்துதல்) ஈண்டு எரி - வினைத்தொகை.; திரண்ட தீ. ஆறு - கங்கை. ஆயிழையாள் ஓர் கூறன் - மங்கை பங்கன்.

நளிரும்மலர்க் கொன்றையு நாறு கரந்தைத்
துளிருஞ்சுல விச்சுடு காட்டெரி யாடி
மிளிரும்மர வார்த்தவன் மேவிய கோயில்
குளிரும்புனல் சூழ் குரங்காடு துறையே. 6

பழகும்வினை தீர்ப்பவன் பார்ப்பதி யோடும்
முழவங்குழன் மொந்தை முழங்கெரி யாடும்
அழகன்னயின் மூவிலை வேல்வல னேந்தும்
குழகன்னகர் போல்குரங் காடுதுறையே. 7

வரையார்த் தெடுத்தவ் வரக்கன்வலி யொல்க
நிரையார்விர லானெரித் திட்டவ னூராம்
கரையார்ந்திழி காவிரிக் கோலக் கரைமேல்
குரையார்பொழில் சூழ்குரங் காடு துறையே. 8

நெடியானெடு நான்முக னுந்நினை வொண்ணப்
படியாகிய பண்டங்க னின்றெரி யாடி
செடியார்தலை யேந்திய செங்கண்வெள் ளேற்றின்
கொடியானகர் போல்குரங் காடு துறையே. 9

---

6. நளிரும் - குளிரும். கரந்தைத்துளிர் - கரந்தை என்னும் மரத்தின் தளிர். சுலவி - சுற்றி. மிளிரும் - விளங்கும், கீழ் மேலாகும் எனலுமாம்.

7. பழகும் வினை - பிறவிதோறும் உயிரை இடைவிடாது தொடர்ந்து பழகும் பழவினை. பார்ப்பதி - பார்வதி தேவியார். முழவம், குழல், மொந்தை என்னும் இசைக் கருவிகள் முழங்க எரியில் ஆடும் அழகன் என்க. முழங்கு எரி - வினைத் தொகையுமாம். அயில் - கூர்மை. மூவிலைவேல் - திரிசூலம். வலன் - வலக்கையில். குழகன் - இளைஞன்.

8. ஒல்க - தளர, சுருங்க. கோலம் - அழகு, நெரித்திட்டவன் - நெரியச் செய்தவன். குரை - ஒலி.

9. படி - தன்மை, உருவம். பண்டங்கன் - பாண்டரங்கம் என்னும் கூத்தை ஆடுபவன். 'பசுபதீ பண்டரங்கா' என்றேன் நானே' (6 - 37 - 63). செடியார்தலை - பிரம கபாலம். செங்கண் வெள்ளேற்றின் கொடியான் - சினக்குறிப்பை உணர்த்தும் சிவந்த கண்ணை உடைய வெள்ளை விடையை எழுதிய கொடியை உடையவன் (பா - 5).

துவராடையர் வேடம லாச்சமண் கையர்
கவர்வாய்மொ ழிகாதல்செய் யாதவ னூராம்
நவையார்மணி பொன்னகில் சந்தன முந்திக்
குவையார்கரை சேர்குரங் காடுதுறையே. 10

நல்லார்பயில் காழியுண் ஞானசம் பந்தன்
கொல்லேறுடை யான்குரங் காடு துறைமேல்
சொல்லார் தமிழ் மாலைபத் துந்தொழு தேத்த
வல்லாரவர் வானவ ரோடுறை வாரே. 11

திருச்சிற்றம்பலம்.

---

*10.* கையர் - கீழ்மக்கள். கவர்வாய்மொழி - கவர்த்த (ஐயத்தை விளைக்கும்) வாய்ப்பேச்சு. நவை - சிதைவு என்னும் பொருட்டாய் நின்றது. குவை - குவியல்.

*11.* நல்லார் - ஞானியர். 'கற்றவர்கள் பணிந்தேத்தும் கழுமலத்துள்ளீசன்றன் கழல் மேல் நல்லோர் நற்றுணையாம் பெருந்தன்மை' (*129 - 11*). வானவர் - வீட்டுலகடைந்தோர் உறைவார் - வாழ்வார்.

---

கழல்கின்ற ஐங்கணை அந்தியும் அன்றிலுங்
கால்பரப்பிட்
டுழல்கின்ற தென்றலும் வந்திங் கடர்ப்பவன்
ருயிழைக்காச்
சுழல்கின்ற நெஞ்சந் தணித்தவன் தன்னைத்
தொடர்ந்துபின்போய்
உழல்கின்ற நெஞ்சமிங் கென்னோ இனிஇன்று
உறுகின்றதே. —அந்தாதி 33

# 36 திருவிரும்பூளை

## 172 பதிகவரலாறு

ஆளுடைய பிள்ளையார் திருவாறை வடதளியினின்றும் எப்பொருளுமாய் நின்ற இறைவரது இருப்பூளை என்னும் தலத்தை எய்தித் தொண்டர்தொழ அண்டர்பிரான்கோயிலை அடைந்து, இறைஞ்சி, அடியார்களை வினவியவாற்றல் அருமறையின் பொருள் விரியப் பாடியது இத்திருப்பதிகம்.

### பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

சீரார்கழ லேதொழு வீரிது செப்பீர்
வாரார்முலை மங்கையொ டும்முட னாகி
ஏராரிரும் பூளை யிடங்கொண்ட வீசன்
காரார்கட னஞ்சமு துண்ட கருத்தே. 1

தொழலார்கழ லேதொழு தொண்டர்கள் சொல்லீர்
குழலார்மொழிக் கோல்வளை யோடுட னாகி
எழிலாரிரும் பூளை இடங்கொண்ட வீசன்
கழலுன்கரி கானிடை யாடு கருத்தே. 2

---

1. சீர் ஆர் கழலே - எல்லா உலகங்களையும் அளித்த சீர் நிறைந்த திருவருளையே. தொழுவீர் - தொழுகின்றவரே! கருத் தாகிய இது செப்பீர் என்க. மேலும் இவ்வாறே இயைத்துப் பொருள்கொள்க. ஏர் - அழகு. கார் - கருமை. மேகமுமாம். கடல் - பாற்கடல். நஞ்சு அமுது - நஞ்சமாகிய அமுதம், நஞ்சத்தை அமுதாக என்று ஆக்கச்சொல் வருவித்தும் முடிக்கலாம்.

2. தொழல் ஆர்கழலே - தொழுதற்குப் பொருந்திய திருவடி. தலைவைத்தது திருவடியை வணங்கற்கேயாதலின், அத்தலை தாழ்த்துதல் முதலிய தொழலுக்குப் பொருந்தியதும் திருவடி அல்லாது வேறில்லை. தொழு தொண்டர்கள் - வினைத் தொகை. குழல் ஆர் - மொழி நமக்கு வேய்ங் குழலிசையின்பம்

அன்பாலடி கைதொழு வீரறி யீரே
மின்போன்மருங் குன்மட வாளோடு மேவி
இன்பாயிரும் பூளை யிடங்கொண்ட வீசன்
பொன்போற்சடை யிற்புனல் வைத்த பொருளே. 3

நச்சித்தொழு வீர்க ணமக்கிது சொல்லீர்
கச்சிப்பொலி காமக் கொடியுடன் கூடி
இச்சித்திரும் பூளை யிடங்கொண்ட வீசன்
உச்சித்தலை யிற்பலி கொண்டுழ லூணே. 4

சுற்றார்ந்தடி யேதொழு வீரிதுசொல்லீர்
நற்றாழ்குழ னங்கையொ டும்முட னாகி
எற்றேயிரும் பூளை யிடங்கொண்ட வீசன்
புற்றாடர வோடென்பு பூண்ட பொருளே. 5

---

போல இறைவனது செவிக்கு இன்பஞ்செய்யும் மொழி. 'குழல் வாய்மொழியம்மை' என்பது அம்பிகையின் திருப்பெயர்களுள் ஒன்று. கோல் - திரட்சி. வளை - வளையல். மொழியும் வளையும் உடையாள் என்க. எழில் - அழகு. கழல் - திருவடிக்கு ஆகு பெயர். தொண்டர்கள் (விளி) கருத்து சொல்லீர் என்க.

3. அன்பு - பத்தி. அடி - திருவடி. தொழுவீர் - விளி. அறியீரே - அறிவீர்களோ? அறிவீர் என்று முன்பின் உள்ள வாறுங் கொள்ளலாம். மின்போல் மருங்குல் - மின்னிடை. புனல் - கங்கைநீர்.

4. நச்சி - விரும்பி. தொழுவீர்கள் (விளி). கச்சி - காஞ்சி புரம். திருக்கச்சி. பொலி - திருக்கோயில்கொண்டு விளங்கு கின்ற. காமக்கொடி - காமாட்சி தேவியாராகிய வல்லி, இச்சித்து - விரும்பி, ஊண் பொருட்டுப் பலிகொண்டு உழல்வது ஏன் சொல்லீர் என்றபடி.

5. சுற்று ஆர்ந்து - சூழ்ந்து நிறைந்து. அடியார் சுற்றம் நிறைந்து என்றுமாம். நல்தாழ்குழல் - அழகிய தொங்குகின்ற கூந்தலையுடைய. நங்கை - தேவியார்க்கெல்லாந் தலைவி. புற்று - ஆடு அரவு - புற்றிலுறைவதும் ஆடுவதும் ஆகிய பாம்பு என்றவாறு. முறையே இடமும் தொழிலும்பற்றிய அடை மொழிகள். என்பு - எலும்புமாலை. பொருள் - பயன். பொருள்

தோடார்மலர் தூய்த்தொழு தொண்டர்கள் சொல்லீர்
சேடார்குழற் சேயிழை யோடுட ஞகி
ஈடாயிரும் பூளை யிடங்கொண்ட வீசன்
காடார்கடு வேடுவ ஞன கருத்தே. 6

* * * * 7

ஒருக்கும் மனத் தன்பருள் ளீரிது சொல்லீர்
பருக்கைமத வேழ முரித்துமை யோடும்
இருக்கையிரும் பூளை யிடங்கொண்ட வீசன்
அரக்கன்னுரந் தீர்த்தரு ளாக்கிய வாறே. 8

துயராயின நீங்கித் தொழுந்தொண்டர் சொல்லீர்
கயலார்கருங் கண்ணியொ டும்முட ஞகி
இயல்பாயிரும் பூளை யிடங்கொண்ட வீசன்
முயல்வாரிரு வர்க்கெரி யாகிய மொய்ம்பே. 9

---

என்றே சொல்லீர் என்று இயைத்துரைக்க. எற்றே-எத்தன்மையதோ? எல் (-இகழ்ச்சி) தேய-தேய்ந்த, இல்லாத எனலும் ஆம். எல்து - ஒளியுடையது. ஏய் - பொருந்திய எனலும் அமையும்.

6. தோடு - இதழ், தொகுதியுமாம். தூய் - தூவி. சேடு - திரட்சி. சேயிழை - செய்ய பூண்களையுடைய அம்பிகை. (அன்மொழித்தொகை) ஈடு-பெருமை, சமமுமாம். காடு ஆர்-காட்டில் பொருந்திய. வேடுவன் - (அருச்சுனனோடு போர்செய்த) வேடன். 'ஏவார்சிலை எயினன் உருவாகி எழில்விசயற்கு ஓவாத இன்னருள் செய்த எம் ஒருவன்' (1. 12. 6).

8. ஒருக்கும் மனத்து - இறைவன் திருவடியே, ஒன்றியிருந்து உணர்ந்து உணர்ந்து, மற்றெல்லாப் பற்றுக்களும் ஒருங்கச்செய்த மனத்தினையுடைய. அன்பர் உள்ளீர் - அன்பர் கூட்டத்தைச் சார்ந்தவரே! பருக்கை - பரியதாகிய துதிக்கையையுடைய. உமையோடும் இருக்கையை உடைய என்க. உரம் - வலிமை. அருள் - நாளும் வாளும் பிறவும் நல்கிய கருணை.

9. ஆயின - வினையாலணையும் பெயர். துயர் - பிறவி, மறதி முதலியவை. கயல் - மீன்விசேடம். 'அங்கயற்கண்ணியார்' இருவர் - அரி அயன். மொய்ம்பு - வன்மை, ஆற்றல்.

துணை நன்மலர் தூய்த்தொழுந் தொண்டர்கள் சொல்லீர்
பணைமென் முலைப் பார்ப்பதி யோடுடனாகி
இணையில்லிரும் பூளை யிடங்கொண்ட வீசன்
அணைவில்சமண் சாக்கிய மாக்கிய வாறே. 10

எந்தையிரும் பூளை யிடங்கொண்ட வீசன்
சந்தம்பயில் சண்பையுண் ஞானசம் பந்தன்
செந்தண்டமிழ் செப்பிய பத்திவை வல்லார்
பந்தம்மறுத் தோங்குவர் பான்மையி னாலே. 11

திருச்சிற்றம்பலம்

---

*10.* துணை - ஒப்பு. பணை - பருமை. இணை - ஈடு, ஒப்பு. அணைவு இல் - அணை(ந்து வழிபடு)தல் இல்லாத. சமண் சாக்கியம் - சமணரும் சாக்கியரும் (ஆகிய புறப்புறச் சமயம்) உம்மைத்தொகை.

*11.* சந்தம் பயில்-வேதம் ஓதாது ஓதியுணர்ந்த. சந்தக்கவி பாடிப்பயின்ற எனலும் ஆம். பந்தம் - (மும்மலக்)கட்டு. ஈசனது சண்பையை உள்கின்ற ஞானசம்பந்தன். செப்பிய - பாடிய. பான்மை - தன்மை.

---

உறுகின்ற அன்பினொடொத்திய தாளமும்
உள்ளுருகிப்
பெறுகின்ற இன்பும் பிறைநுதல் முண்டமுங்
கண்டவரைத்
தெறுகின்ற வாறென்ன செய்தவ மோவந்தென்
சிந்தையுள்ளே
துறுகின்ற பாதன் கழுமலம் போலுந்
துடியிடைக்கே. —அந்தாதி 34

# 37 திருமறைக்காடு

## 173 பதிகவரலாறு

மேதினிமேற் பொய்மிகுத்து, ஆதி அருமறை வழக்கமும் அரனடியார்பாற் பூதிசாதன விளக்கமும் முறையே அருகிப் போற்றல்பெருது ஒழியக்கண்டு, இடர் உழந்த சிவபாத இருதயர் புரிந்த தவப்பயனுகப், பரசமயம் நிராகரித்து நீருக்கும் பொருட்டுத் திருவவதாரஞ்செய்த முதல்மறைப் பிள்ளையார், திருமறைக்காட்டை அடைந்தார். அங்கு, முன்பேசென்ற திருநாவுக்கரசு நாயனுரைக் கூடினுர். திறப்பும் அடைப்பும் இல்லாதிருந்த திருக்கோயிற் கதவங்களைத் திறக்கவும் மூடவும் முறையே இருவரும் பாடியருளினர். அவதார காரணங்களிரண்டனுள் ஒன்ருன வேதநெறி தழைத் தோங்குதலை வேதாரணியத்துள் தொடங்கி நிறுவியருளிய உண்மையை உணர்த்துவது இத்திருப்பதிகம்.

### பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

சதுரம்மறை தான்றுதி செய்து வணங்கும்
மதுரம்பொழில் சூழ்மறைக் காட்டுறை மைந்தா
இதுநன்கிறை வைத்தருள் செய்க வெனக்குன்
கதவந்திருக் காப்புக்கொள் ளுங்கருத்தாலே. 1

---

1. சதுரம் மறை - நால்வேதம். (மகரவொற்று விரித்தல்). மதுரம் - தேனினிமை. இறை - விடை. மறை துதிசெய்து வணங்கும் காரணத்தால் மறைக்காடு என்ருன உண்மையை உணர்த்தியருளியவாறறிக. பின்வருவன விஞக்களாதலின், அவற்றிற்குச் 'செவ்வனிறையோ இறைபயத்தலோ செய்க' என்பார், 'இறைவைத்தருள் செய்க' என்றருளினுர். 'எனக்கு அருள்செய்க' என்று இவ்வாறு வேண்டுவது ஆசிரியர் திருவாக்கில் வேறு எங்கும் காண்டல் அரிதாகும். இதற்குப் பிறர் உரைத்தது பொருந்துமோ?

சங்கந்தர ளம்மவை தான்கரைக் கெற்றும்
வங்கக்கடல்சூழ் மறைக் காட்டுறை மைந்தா
மங்கையுமை பாகமு மாகவி தென்கொல்
கங்கைசடை மேலடை வித்த கருத்தே. 2

குரவங்குருக் கத்திகள் புன்னைகண் ஞாழல்
மருவும்பொழில் சூழ்மறைக் காட்டுறை மைந்தா
சிரமும்மல ருந்திகழ் செஞ்சடை தன்மேல்
அரவம்மதி யோடடை வித்த லழகே. 3

படர்செம்பவ ளத்தொடு பன்மலர் முத்தம்
மடலம்பொழில் சூழ்மறைக் காட்டுறை மைந்தா
உடலம்முமை பங்கம தாகியு மென்கொல்
கடனஞ்சமு தாவது வுண்ட கருத்தே. 4

வானோர்மறை மாதவத் தோர்வழி பட்ட
தேனார்பொழில் சூழ்மறைக் காட்டுறை செல்வா
ஏனோர்தொழு தேத்த விருந்தநீ யென்கொல்
கானார்கடு வேடுவ னான கருத்தே. 5

---

*2. சங்கம் - சங்குகள். தரளம் - முத்துக்கள். எற்றும் - (அலைகள்) எறியும். வங்கம் - மரக்கலம். உமையோடு கூடியிருந்தும் கங்கையைச் சடைமேல் அடையச் செய்ததன் கருத்தை வினவியது.*

*3. குரவம் - குராமரம். குருக்கத்தி - மாதவி. ஞாழல் - புலிநகக்கொன்றை, கோங்குமாம். சிரம் - தலை, தலைமாலை. 'தலைமாலை தலைக்கணிந்து தலையாலே பலிதேருந்தலைவன்' இது பாம்பைப் பிறையொடுகூடிய அழகை வினவியது. வினாச் சொல்லை வருவித்துரைக்க. திங்களை விழுங்கும் பகைமை கருதி 'அழகு' என்று குறித்தருளினார்.*

*4. மடல் - மரத்தில் உள்ள மடல்கள். பூவிதழுமாம். பங்கமது - பாகத்தையுடையது. பாற்கடலினின்று எழுந்த நஞ்சினை உண்ட கருத்தை வினவியது.*

*5. வானோர் - தேவர்கள். மறை மா தவத்தோர் - வேதியரும் பெருந் தவத்தருமாகிய பெரியோர். ஏனோர் - தானல்லாத பிறர். தன்னையேதான் பூசித்தவுண்மையும் அறிக. கான் - காடு.*

பலகாலங்கள் வேதங்கள் பாதங்கள் போற்றி
மலரால்வழி பாடுசெய் மாமறைக் காடா
உலகேழுடை யாய்கடை தோறுமுன் னென்கொல்
தலைசேர்பலி கொண்டதி லுண்டது தானே 6

வேலாவல யத்தய லேமிளிர் வெய்தும்
சேலார்திரு மாமறைக் காட்டுறை செல்வா
மாலோடய னிந்திர னஞ்சமு னென்கொல்
காலார்சிலைக் காமனைக் காய்ந்த கருத்தே. 7

கலங்கொள்கட லோத முலாவு கரைமேல்
வலங்கொள்பவர் வாழ்த்திசைக் கும்மறைக் காடா
இலங்கையுடை யானடர்ப் பட்டிட ரெய்த
அலங்கல்விர லூன்றி யருள்செய்த வாறே. 8

---

ஆர் - பொருந்துகின்ற கடு வேடுவன் - கொடிய வேடன். (பதிகம். 139 - பா - 1) "குழலியொடு வேடுவனாய்......விசயன் போரில் மிகு பொறையளந்து பாசுபதம் அளித்த" கருத்தை வினவியது. (பதி. 131 - பா. 2).

6. இத்தலத்தில் நான்கு வேதங்களும் பலகாலம் பூசித்த உண்மையை முதல் இரண்டடியிலும், உணர்த்தியருளினார். உலகு ஏழ் உடையாய் - ஏழுலகுக்கும் சுவாமியே. ஜகதீசா! முன் கடைதோறும் தலைசேர் பலிகொண்டு அதில் உண்டது தான் ஏன்? என்று இறைவன் பலியேற்ற வரலாற்றின் கருத்தை வினவியது.

7. வேலாவலயத்து அயல் - கடலின் பக்கத்தில். மிளிர்வு - விளங்குதல். சேல் - மீன். முன் மாலும் அயனும் இந்திரனும் அஞ்சும்படி மன்மதனை எரித்ததன் கருத்து என்னை என்று வினவியது. கால் ஆர் சிலை - வலக்காலால் மிதித்தல் பொருந்திய வில். "அறனிலாதான் வெஞ்சினக்கோலின் நோன்றுள் மிதித்து மெய்குழைய வாங்கிச் செஞ்சிலை நெடுநாண்பூட்டித் திருவிரல் தெறித்துத்தாக்கி" (திருவிளையாடல் - கூடற் - யானை எய்த. 29) சிலை எனப்படும் மரத்தாற் செய்யப்படுதலின், 'சிலை' (கலி. 15 - 1. உரை) எனப்பட்டது. 'சிலைவிற்கானவன்' (குறுந். 385)

திருக்கழிப்பாலை



கடல் நண்ணுகழிப்பதி காவலன் கோயில்

வேதாரணியம்



“வேதம் பலவோமம் வியந்து அடிபோற்ற
ஓதம் உலவும் மறைக்காடு”

கோனென்றுபல் கோடி யுருத்திரர் போற்றும்
தேனம்பொழில் சூழ்மறைக் காட்டுறை செல்வா
ஏனங்கழு கானவ ருன்னை முனென்கொல்
வானந்தல மண்டியுங் கண்டிலா வாறே. 9

வேதம்பல வோமம் வியந்தடி போற்ற
ஓதம்முல வும்மறைக் காட்டி லுறைவாய்
ஏதில்சமண் சாக்கியர் வாக்கிவை யென்கொல்
ஆதரொடு தாமலர் தூற்றிய வாறே. 10

---

8. கலம் - மரக்கலம். ஓதம் - நீர். கரைமேல் வலங்கொள்பவர் - திருமறைக்காட்டில் வலம்வரும் முறைமை ஏனைய சிவதலங்களில் வலம் வருதலினும் விசேடம் உடையது. திருக்கோயில் வலம்மட்டும் பிறதலங்களில் நிகழும். இங்குத் திருமறைக்காட்டையே வலம் வருதல் வேண்டும். இதனை ஆளுடைய அரசரும் 'மண்ணினுர் வலம்செய் மறைக்காடர்' என்று குறித்தருளியது உணர்க. உடையான் - இராவணன். அடர் - முதல்நிலைத் தொழிற்பெயர். அலங்கல் - அசைதல். அன்பர்கள் திருவடிக்கண் சார்த்திய மாலையுமாம். "ஆர்மின் ஆர்மின் நாண் மலர்ப் பிணையலில், தாள் தளையிடுமின்" (திருவாசகம் திருவண்டப்பகுதி. 142 - 143). இராவணன் கயிலையை எடுத்த போது அடர்த்து அருள்செய்ததன் கருத்தை வினவியது. வினச்சொல் வருவித்துரைக்க.

9. பல்கோடி உருத்திரர்கோன் என்று போற்றும் செல்வா என்று இயைக்க. "நீலத்தார் கரியமிடற்றார் நல்லநெற்றிமேல் உற்ற கண்ணினுர் பற்று, சூலத்தார் சுடலைப்பொடி நீறணிவார் சடையார், சீலத்தார் தொழுதேத்து சிற்றம்பலம்" (தி-3-பதி 1. பா. 3) எனத் தில்லையிற்கண்ட உருத்திரகண தரிசனத்தை உணர்த்தியவாறறிக. ஏனம் - பன்றி. கழுகானவர் - பிரமனுர். (பதி-168. பா-9) வானத்தில் கழுகும் தலத்தில் ஏனமும் என இயைக்க, எதிர்நிரல்நிறை. அரியும் அயனும் அடிமுடி தேடியதன் கருத்தை வினவியது.

10. ஓமம் - யாகம். மறைக்காடு என்றதன் பெயர்க் காரணம் ஈண்டும் விளக்கியருளினுர். ஓதம் - கடல். ஏதில் - அயல். 'ஏதிலார் குற்றம்' 'ஏதிலார் ஆர' (திருக்குறள்)

காழிந் நக ரான்கலை ஞானசம் பந்தன்
வாழிம்மறைக் காடனை வாய்ந்தறி வித்த
ஏழின்னிசை மாலையீ ரைந்திவை வல்லார்
வாழியுல கோர்தொழ வானடை வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

ஈண்டுச் சமயத்தால் அயலவராயினர். ஆதர் - அறிவின்மை யுடையவர். அலர் - பழிச்சொல். அவைதிக மதத்தினர் அழியாத வைதிக சைவ சமயத்தைப் பழித்துரைத்ததன் கருத்தை வினவியது.

11. காழிந்நகரான் - விரித்தல் விகாரம். கலை - சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானமாகிய உவமையிலாக் கலை ஞானம். ஞானம் - பவமதனை அறமாற்றும் பாங்கினிலோங்கிய ஞானமாகிய உணர்வரிய மெய்ஞ்ஞானம். சம்பந்தன் - அவ் விரண்டு ஞானங்களின் சம்பந்தத்தை உடையவன். வாழி - வாழ்ச்சியை உடைய. வாய்ந்து:- திறக்கப்படாத கதவு திறக்கப் பெற்றுத் தரிசிக்க வாய்ந்து என்றவாறு. அறிவித்த இது நன்கு இறைவைத்தருள் செய்க. (பா-1) என்று பல வினாக்களை அறிவித்த. இம்மாலை வல்லார் உலகோர் தொழ வான் அடைவார் என்க.

---

இடையும் எழுதா தொழியலு மாம்இன
வண்டுகளின்
புடையும் எழுதிலும் பூங்குழல் ஒக்கும்அப்
பொன்னனையாள்
நடையும் நகையுந் தமிழா கரன்றன்
புகலிநற்றேன்
அடையும் மொழியும் எழுதிடிற் சால
அதிசயமே.

—அந்தாதி 35




## 38 திருச்சாய்க்காடு

### 174 பதிகவரலாறு

'அம்பிகை அளித்த ஞானம் அகிலமும் உய்ய உண்ட நம் பெருந்தகையார்' தலைச்சங்காடு பணிந்து, திருச்சாய்க் காட்டைச் சேர்ந்து போற்றி 'மண்புகார் வான் புகுவர்' என்ற திருப்பதிகம் பாடித் திருவெண்காட்டை அடைந்து வழிபட்டு மீண்டும் போந்து இத்திருப்பதிகம் பாடியருளியது போலும்.

**பண் - இந்தளம்**

**திருச்சிற்றம்பலம்**

நித்த லுந்நிய மஞ்செய்து நீர்வலந் தூவிச்  
சித்த மொன்றவல் லார்க்கரு ளுஞ்சிவன் கோயில்  
மத்த யானையின் கோடும்வண் பீலியும் வாரித்  
தத்துநீர்ப் பொன்னி சாகர மேவுசாய்க் காடே. 1

பண்ட லைக்கொண்டு பூதங்கள் பாட நின்றாடும்  
வெண்ட லைக்கருங் காடுறை வேதியன் கோயில்  
கொண்ட லைத்திகழ் பேரிமு ழங்கக் குலாவித்  
தண்ட லைத்தட மாமயி லாடுசாய்க் காடே. 2

---

1. நித்தலும் - நாள் தோறும். நியமம் - தின நியமம் ஆகக் கொண்டொழுகும் வழிபாடுகள் (ஆன்மார்த்தம்). கடன் களுமாம். நீர் மலர் தூவல் - புறப்பூசை. சித்த மொன்றல் - அகப்பூசை, தியானம் முதலியன. பீலி - மயிற் பீலி. சாகரம்- கடல். சிவன்கோயில் - சாய்க்காடே என்க. மேலும் இவ்வாறே கொள்க. காவிரி நீர் நாட்டு வளத்திற்கே பெரிதும் பயன் பட்டுக், கடலிற் சேர்வது மிகச் சிறிதேயாதலின், பாயும் என்னாது 'மேவும்' என்றார். (விடையின் மேல் வருவார் அமுது செய அஞ்சாதே விடம் அளித்ததெனக் கருதி மேதினிக்கு வளம் நிறைத்தே கடல் வயிறு நிறையாத காவிரி) என்றருளினார் சேக்கிழார்.

2. பண் - பண்ணிசை. தலைக்கொண்டு - மேற்கொண்டு பண்பாட ஆடும் வேதியன் என்க. காட்டின் கருமையும் அங்குள்ள தலைகளின் வெண்மையும் முரண்டொடை அமைய

நாறு கூவிள நாகிள வெண்மதி யத்தோ
டாறு சூடு மமரர் பிரானுறை கோயில்
ஊறு தேங்கனி மாங்கனி யோங்கிய சோலைத்
தாறு தண்கத லிப்புதன் மேவுசாய்க் காடே. 3

வரங்கள் வண்புகழ் மன்னியவெந்தை மருவார்
புரங்கள் மூன்றும் பொடிபட வெய்தவன் கோயில்
இரங்க லோசையு மீட்டிய சரக்கொடு மீண்டித்
தரங்க நீள்கழித் தண்கரை வைகுசாய்க் காடே. 4

ஏழை மார்கடை தோறு மிடுபலிக் கென்று
கூழை வாளர வாட்டும் பிரானுறை கோயில்
மாழை யொண்கண் வளைக்கை நுளைச்சியர் வண்பூந்
தாழை வெண்மடற் கொய்துகொண் டாடுசாய்க் காடே. 5

---

நின்றன. கொண்டல் - (குடக்கிலிருந்து வீசுங்காற்றால் உந்தப்பட்ட) மேகம். ஏனை முத்திசைக் காற்றும் முறையே தென்றல் கோடை வாடை எனப்படும். பேரி - பேரிகை. தண் தலை தடம் - குளிர்ந்த இடப்பரப்பையுடைய சோலை(க்குக் காரண)ப் பெயர். தட-வளைவு எனலுமாம். 'தட வென்கிளவி கோட்டமும் செய்யும்'. (தொல். உரி)

3. நாறு - மணம் வீசும். கூவிளம் - வில்வம். நாகு இள மதியம் - மிக்க இளையதாகிய பிறை. அமரர் பிரான் - தேவர்கட்குப் பிரியத்தைச் செய்பவன். ஊறு - (சுவை) ஊறுகின்ற. தேங்கனி - 'தெங்கங்காய்,' 'தெங்கம் பழம்' என்பவைபோல் இதுவும் அரியதொரு பிரயோகம். தாறு - குலை. கதலி - வாழை விசேடம். புதல் - புதர். திருச்சாய்க்காட்டின் இயற்கை வளம் உணர்த்தப்பட்டது.

4. வரங்களை அருளும் வண்மையால் எய்தும் புகழ் அழியாமல் நிலைபெற்ற என் அப்பன். மருவார் - பகைவர். இரங்கல் ஓசை - நெய்தற்றிணையுரிப்பொருளை நினைவூட்டுவது. சரக்கொடும் என்னும் பாடமே சிறந்தது. ஈட்டிய - (பொருள் தேடிச்)சேர்த்த (சரக்கு). ஈண்டி - கூடி, நெருங்கி. தரங்கம் - அலைகள். நீள்தார் கழிக்கரை என்க.

5. ஏழைமார் - மகளிர். 'ஏழைபங்காளனையே பாடேலோ ரெம்பாவாய்' என்னுந் திருவாசகத்திற்கு வறியர் பங்கை

துங்க வானவர் சூழ்கட ருங்கடை போதில்
அங்கொர் நீழ லளித்தவெம் மானுறை கோயில்
வங்க மங்கொளி ரிப்பியு முத்து மணியுஞ்
சங்கும் வாரித் தடங்கட லுந்துசாய்க் காடே. 6

வேத நாவினர் வெண்பளிங் கின்குழைக் காதர்
ஓத நஞ்சணி கண்ட ருகந்துறை கோயில்
மாதர் வண்டுதன் காதல்வண் டாடிய புன்னைத்
தாது கண்டு பொழின்மறைந் தூடுசாய்க் காடே. 7

---

ஆள்பவன் என்று பொருள் கூறுதல் மாபாதகம். கடை - கடை வாயில். கூழை - கடை குறைந்தது. (தோற்றம்) மாழை-பொன். மேலும் இவ்வாறு நெய்தற்றிணைக் கருப்பொருள் சில கூறல் அறிக. கண்ணையும் கையையும் உடைய நுளைச்சியர் கொய்து கொண்டாடும் சாய்க்காடு எம்மான் உறையும் கோயில் என்க. பாம்பின் உருவத்தைத் தலை முதலாக நோக்கின், கடை குறைந்திருத்தல் ஆகிய கூழைமை புலப்படும்.

6. துங்கம் - உயர்ச்சி. கடல் தாம் கடை(யும்) போதில் என்க. பொழுது - போழ்து - போது என மருவிற்று. நீழல் - நஞ்சின் வெப்பம் தணித்தற்கு அளித்த அருணிழல். வங்கம்- மரக்கலம். இப்பி - சிப்பி. கடல் வங்கத்தையும் அங்கு ஒளிர் கின்ற இப்பியையும் முத்தினையும் மணியினையும் சங்கினையும் வாரி உந்தும் என்க. அங்குவங்கம் வாரி உந்து மெனல் பொருந்தாது. ஒளிர்தல் முத்து முதலியவற்றிற்கும் உரியது. 'சங்கங்களும் இலங்கிப்பியும் வலம்புரிகளும் இடறி, வங்கங் களும் உயர்கூம்பொடு வணங்கும் மறைக்காடே.' (சுந்தரர்-721)

7. சிவபிரான் வேதத்தை முதன் முதலாகச் சொல்லி யருளிய திருநாவுடையார். பளிங்காலான குழை அணிந்த திருச்செவியார். ஓதம் நஞ்சு - பாற்கடலில் எழுந்தவிடம்- அணி கண்டர் - அழகு செய்யும் திருநீலகண்டர். அணிந்த எனலுமாம். உகந்து - உயர்ந்து, விரும்பி. மாதர் - அழகு, இச்சையுமாம். மாதர் வண்டு - பெண், காதல் வண்டு - ஆண். ஆடுதலும் ஊடுதலும் உணர்த்தப்பட்டமை அறிக.

இருக்கு நீள்வரை பற்றி யடர்த்தன் றெடுத்த
அரக்க னாகெ நெரித்தருள் செய்தவன் கோயில்
மருக்குலாவிய மல்லிகை சண்பகம் வண்பூந்
தருக்கு லாவிய தண்பொழி னீடுசாய்க் காடே. 8

மாலி னோடயன் காண்டற் கரியவர் வாய்ந்த
வேலை யார்விட முண்டவர் மேவிய கோயில்
சேலி னேர்விழி யார்மயி லாலச் செருந்தி
காலை யேகன கம்மலர் கின்றசாய்க் காடே. 9

ஊத்தை வாய்ச்சமண் கையர்கள் சாக்கியர்க் கென்றும்
ஆத்த மாக வறிவரி தாயவன் கோயில்
வாய்த்த மாளிகை சூழ்தரு வண்புகார் மாடே
பூத்த வாவிகள் சூழ்ந்து பொலிந்தசாய்க் காடே. 10

---

8. இருக்கும் நீள்வரை - வீற்றிருக்கும் உயர்ந்த கயிலை மலையை. ஆகம் - உடம்பு. மரு - மணம். தரு - மரம் நீடுதல் - ஓங்கிப் பரந்து அழியாமை குறித்தது. இருக்கும் வரையை எடுத்த அரக்கன், தூண் துரும்பாகும் இழிநிலையை எய்தி, அஞ்சி இறைவனை இன்புறுத்த இன்னிசைபாடி மகிழ் வித்து, நாளும் பெற்றான் வாளும் பெற்றான் என்பது குறித்தே, 'நெரித்து' என்பதை அடுத்து 'அருள் செய்தவன்' என்றருளினார் ஆசிரியர்.

9. வேலை - கடல். நேர் - ஒத்த. செருந்தி - கனகம் (-பொன்) போலப் பூப்பது. ஆறு சாமத்திலும் பூக்கும் வெவ் வேறு இனங்களுள் காலையிற் பூப்பது செருந்தி. 'நாண்மலர்' (நாள் - காலை) என்னும் தொல் வழக்குணர்க. 'அல்லி' அல்லிற் பூப்பது பற்றிய காரணப்பெயர்.

10. ஆத்தம் - ஆப்தம், உண்மை. அறிவு அரிது ஆயவன் - அறிவதற்கு அரிய உண்மைப் பொருளாயுள்ளவன். புகார்க்கு அருகில் சாய்க்காடு இருத்தல் கூறப்பட்டதறிக. புகார்க்குமாளிகையும் காட்டுக்கு வாவிகளும் விசேடம். புகா ஆறு என்றதன் மரூஉவே புகார் என்பது. இதன் முதற் பாட்டில் 'பொன்னி சாகரம் மேவு' என்றதற்கு எழுதிய குறிப்பைக்காண்க.

ஏனை யோர்புகழ்ந் தேத்திய வெந்தைசாய்க் காட்டை
ஞான சம்பந்தன் காழியர் கோனவில் பத்தும்
ஊன மின்றி யுரைசெய வல்லவர் தாம்போய்
வான நாடினி தாள்வரீம் மானிலத் தோரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*11.* ஏனையோர் - உபமன்யு முனிவர் இயற்பகை நாயனுர், ஆதிசேடன் முதலியோர் (திருநா - 4 - 56.5). **ஊனம்**- சொற்குற்றம், பொருட்குற்றம், அநாசாரம், **அன்பின்மை** முதலியவை பாராயணத்துக்கு ஊனங்கள்.

---

மேனாட் டமரர் தொழவிருப் பாரும்
 வினைப்பயன்கள்
தானாட் டருநர கிற்றளர் வாருந்
 தமிழர்தங்கள்
கோனாட் டருகர் குழாம்வென்ற கொச்சையர்
 கோன்கமலப்
பூனாட் டடிபணிந் தாரும்அல் லாத
 புலையருமே. —அந்தாதி 36

புலையடித் தொண்டனைப் பூசுர னாக்கிப்
 பொருகயற்கண்
மலைமடப் பாவைக்கு மாநட மாடும்
 மணியையன்றன்
தலையிடைப் பாதனைக் கற்றுங் குரைத்தசம்
 பந்தன்என்று
முலையிடைப் பொன்கொண்டு சங்கிழந் தாள்என்றன்
 மொய்குழலே. —அந்தாதி 37

# 39 திருக்ஷேத்திரக்கோவை

## பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

ஆரூர்தில்லை யம்பலம் வல்லந்நல்லம்
வடகச்சியு மச்சிறு பாக்கநல்ல
கூரூர்குட வாயில் குடந்தைவெண்ணி
கடல்சூழ்கழிப் பாலைதென் கோடிபீடார்
நீரூர்வய னின்றியூர் குன்றியூருங்
குருகாவையூர் நாரையூர் நீடுகானப்
பேரூர்நன் னீள்வய னெய்த்தானமும்
பிதற்றாய்பிறை சூடிதன் பேரிடமே. 1

அண்ணாமலை யீங்கோயு மத்திமுத்தா
றகலாமுது குன்றங் கொடுங்குன்றமுங்
கண்ணார்கழுக் குன்றங் கயிலை கோணம்
பயில்கற்குடி காளத்தி வாட்போக்கியும்
பண்ணார்மொழி மங்கையோர் பங்குடையான்
பரங்குன்றம் பருப்பதம் பேணிநின்றே
எண்ணாயிர வும்பகலு
மிடும்பைக்கட னீந்தலாங் காரணமே. 2

---

1. பீடு - பெருமை. நீர் ஊர் வயல் - நீர் பரவிய கழனி. பிதற்றாய் - இத்தலங்களின் திருநாமங்களை மீண்டும் மீண்டும் பிதற்றிக் கொண்டிருப்பாய். பிதற்றுதலாலேயே பெரும்பயன் எய்துவாய் என்றபடி. பிறைசூடி - சந்திரசேகரன். பேரிடம் - பெருந்தலங்கள். குடந்தை,குடந்தைக்கீழ்க்கோட்டம், குடமூக்கு, குடந்தைக்காரோணம் நான்கும் இப்போது கும்பகோணம் என்னும் நகரில் உள்ள வெவ்வேறு சிவதலங்கள். இதில் குடவாயில் குடந்தை என்றும், பா. 9-இல் குடமூக்கென்றும் வெவ்வேறு கூறப்படுதல் காண்க. இப்பதிகத்துள் அடங்கிய வைப்புத் தலங்கள் தனியாகக் காட்டப்பட்டிருக்கின்றன.

2. முத்தாறு - வீருத்தாசலத்தின் அருகே ஓடும் ஆற்றின் பெயர். வாட்போக்கி - ரத்நகிரி. வாள் - ஒளி. போக்கி-போகச் செய்வது. ஒளிவீசும் அரதனகிரி என்க. ஈற்றடி கிடைத்திலது.

அட்டானமென் றோதிய நாலிரண்டு
மழகன்னுறை காவனைத் துந்துறைகள்
எட்டாந்திரு மூர்த்தியின் காடொன்பதுங்
குளமூன்றுங் களமஞ்சும் பாடிநான்கும்
மட்டார்குழ லாண்மலை மங்கைபங்கன்
மதிக்கும்மிட மாகிய பாழிமூன்றும்
சிட்டானவன் பாசூரென் றேவிரும்பா
யரும்பாவங்க ளாயின தேய்ந்தறவே. 3

அறப்பள்ளி யகத்தியான் பள்ளிவெள்ளைப்
பொடிப்பூசி ஆறணிவானமர் காட்டுப்பள்ளி
சிறப்பள்ளி சிராப்பள்ளி செம்பொன்பள்ளி
திருநனிபள்ளி சீர் மகேந்திரத்துப்
பிறப்பில்லவன் பள்ளிவெள் ளச்சடையான்
விரும்பும்மிடைப் பள்ளிவண் சக்கரமால்
உறைப்பாலடி போற்றக் கொடுத்தபள்ளி
யுணராய்மட நெஞ்சமே யுன்னிநின்றே. 4

---

3. அட்டானம் என்று ஓதிய நாலிரண்டும் - எட்டு வீரட்டங்களும். அட்டானம் - அஷ்டஸ்தானம் என்பதன் திரிபு. கா, துறை, காடு, குளம், களம், பாடி, பாழி என முடியும் தலங்களையும் அவற்றுள் கா அல்லாதவற்றின் தொகையையும் குறித்தமை காண்க. சிட்டன் - சிஷ்டன். காடொன்பது - திருமறைக்காடு, தலைச்சங்காடு. தலையாலங்காடு, சாய்க்காடு, கொள்ளிக்காடு, ஆலங்காடு, பனங்காடு, வெண்காடு, வேற்காடு, கோட்டுக்காடு, நிறைக்காடு, மிறைக்காடு, இறைக்காடு என்பவும் உள. (சுந்தரர் ஊர்த்தொகை. 3) குளமூன்றும் களம் அஞ்சும்- திருக்குளம், இடைக்குளம், பாற்குளம், வளைகுளம், கடிக்குளம், தஞ்சைத் தளிக்குளம் என்பவற்றுள் எம்மூன்றோ? 'வளைகுளமும் தளிக்குளமும் நல்லிடைக்குளமும் திருக்குளத்தோடு அஞ்சைக்களம் விள்ளாத நெடுங்களம் வேட்களம்' (அப்பர். அடைவு திருத்தாண்டகம்). வேறு இரண்டு களம் யாவையோ? பாடி நான்கு - எதிர்கொள்பாடி, மழபாடி, பிற எவையோ? வலிதாயம் (பாடி) சேரின் மூன்றும். பாழி மூன்று- திருவரதைப் பெரும்பாழி, களப்பாழி பிறிதொன்று யாதோ?

4. பிறப்பில்லவன் - 'பிஞ்ஞகா பிறப்பிலி' பிறப்பிற்குக் காரணமாகிய பேதைமை இயல்பாகவே இல்லாதவன். உறைப்பு - திருவருள் உறைப்பு, அன்பின் அழுத்தம்.

ஆறைவட மாகற லம்பரையா
    றணியார்பெரு வேளூர் விளமர்தெங்கூர்
சேறைதுலை புகலூரக லா
    திவைகாதலித் தானவன் சேர்பதியே
* * * * 5

மனவஞ்சர்மற் றோடமுன் மாதராரு
    மதிகூர் திருக்கூடலி லாலவாயும்
இனவஞ்சொ லிலாவிடை மாமருது
    மிரும்பைப்பதி மாகாளம் வெற்றியூரும்
கனமஞ்சின மால்விடை யான்விரும்புங்
    கருகாவூர் நல்லூர் பெரும்புலியூர்
தனமென்சொலிற் றஞ்சமென் றேநினைமின்
    றவமாமல மாயின தானறுமே. 6

மாட்டூர்மடப் பாச்சி லாச்சிராம
    மயிண்டீச்சரம் வாதவூர் வாரணசி
காட்டூர்கடம் பூர்படம் பக்கங்கொட்டுங்
    கடலொற்றியூர் மற்றுறை யூரவையும்
கோட்டூர்திருவா மாத்தூர்கோ ழம்பமுங்
    கொடுங்கோவலூர் திருக்குண வாயில்
* * * * 7

---

5\. மாகறல், அம்பர், ஐயாறு. அணி - அழகு. துலைபுகலூர்- என்ற குறிப்பால், பெயர்க்காரணம் ஒருவாறு ஊகிக்கப்படுகின்றது.

6\. மனவஞ்சர் - வஞ்சமனத்தர். மற்றோட என்பது இங்குப் பொருந்துமாறு புலப்பட்டிலது. திருக்கூடலில் ஆலவாய்- திருக்கூடலில் உள்ள ஆலவாயென்னும் திருக்கோயில். இனவஞ்சொல் இலா - வன்சொல் இனம் இல்லாத. கனம் அம்சினம் மால்விடை - மேன்மையும் அழகும் கோபமும் உடைய திருமாலாகிய விடை. தஞ்சம் - அடைக்கலம். (தண் + து + அம்). தவமாம் - தவமாகும். மலம் ஆயினதான் அறுமே - மும்மலமும் தானே அற்றொழியும்.

7\. மற்று உறையூர். இப்பாவின் முழுப்பகுதி கிடைத்திலது.

* * குலாவுதிங்கட்சடையான் குளிரும் பரிதிநியமம்
போற்றூரடி யார்வழி பாடொழியாத்தென்
புறம்பயம் பூவணம் பூழியூரும்
காற்றூர்வரை யன்றெடுத் தான்முடிதோ
ணெரித்தானுறை கோயிலென் றென்றுநீகருதே 8

நெற்குன்றமோத் தூர்நிறை நீர்மருக
னெடுவாயில் குறும்பலா நீடுதிரு
நற்குன்றம் வலம்புரந் நாகேச்சுர
நளிர்சோலையுஞ் சேனைமா காளம்வாய்மூர்
கற்குன்றமொன் றேந்தி மழைதடுத்த
கடல்வண்ணனு மாமல ரோனுங்காணாச்
சொற்கென்றுந் தொலைவிலா தானுறையுங்
குடமூக்கென்று சொல்லிக் குலாவுமினே. 9

குத்தங்குடி வேதி குடிபுனல்சூழ்
குருந்தங்குடி தேவன் குடிமருவும்
அத்தங்குடி தண்டிரு வண்குடியு
மலம்புஞ்சலந் தன்சடை வைத்துகந்த
நித்தன்நிம லனுமை யோடுங்கூட
நெடுங்கால முறைவிட மென்றுசொல்லாப்
புத்தர்புறங் கூறிய புன்சமணர்
நெடும்பொய்களை விட்டு நினைந்துய்மினே. 10

---

8. என்று - என்றும் நீ கருது என்க. இதன் முழுப் பகுதியும் கிடைத்திலது. 'பருத்தி நியமத்துறைவாய்' (சுந்தரர். ஊர்த்தொகை. 8.) என்று வேறொன்றுமுண்டு. அதனை வைப்புத் தலத்தில் அடக்கினர்.

9. குறும்பலா - திருக்குற்றாலத் தலவிருட்சம். கற்குன்றம்- கோவர்த்தனகிரி. காணாச்சொற்கு - காணாதபுகழ்க்கு. தொலைவு- அழிவு.

10. அலம்பும் சலம் - அலையாய்ப் பெருகுங் கங்கைநீர். சொல்லா - புகழ்ந்து போற்றாத.

அம்மானை யருந்தவ மாகிநின்ற
வமரர்பெரு மான்பதியான வுன்னிக்
கொய்ம்மாமலர்ச் சோலை குலாவுகொச்சைக்
கிறைவன் சிவஞானசம்பந்தன் சொன்ன
இம்மாலையீ ரைந்து மிருநிலத்தி
லிரவும்பக லுந்நினைந் தேத்திநின்று
விம்மாவெரு வாவிரும்பும் மடியார்
விதியார் பிரியார்சிவன் சேவடிக்கே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. பதியான - தலமானவற்றை. விம்மா - விம்மி. வெருவா - வெருவி. விதியார் - செல்வமுடையவர். சேவடிக்குப் பிரியார்.

---

குழலியல் இன்கவி ஞானசம் பந்தன்
குரைகழல்போல்
கழலியல் பாதம் பணிந்தேன் உனையுங்
கதிரவனே
தழலியல் வெம்மை தணித்தருள் நீதணி
யாதவெம்மை
அழலியல் கான்நடந் தாள்வினை யேன்பெற்ற
ஆரணங்கே. —அந்தாதி 38

அணங்கமர் யாழ்முரித் தாண்பனை பெண்பனை
யாக்கிஅமண்
கணங்கழு வேற்றிக் கடுவிடந் தீர்த்துக்
கதவடைத்துப்
பிணங்கலை நீர்எதிர் ஓடஞ் செலுத்தின
வெண்பிறையோ
டிணங்கிய மாடச் சிரபுரத் தான்றன்
இருந்தமிழே. —அந்தாதி 39

# 40 திருப்பிரமபுரம்

## 176 பதிகவரலாறு

*136 ஆவது பதிகத் தலைப்பைக் காண்க.*

**பண் - சீகாமரம்**

*திருச்சிற்றம்பலம்*

எம்பிரா னெனக்கமுத மாவானுந் தன்னடைந்தார்
தம்பிரா னுவானுந் தழலேந்து கையானுங்
கம்பமா கரியுரித்த காபாலி கறைக்கண்டன்
வம்புலாம் பொழிற்பிரம புரத்துறையும் வானவனே. 1

தாமென்று மனந்தளராத் தகுதியரா யுலகத்துக்
காமென்று சரண்புகுந்தார் தமைக்காக்குங் கருணையினன்
ஓமென்று மறைபயில்வார் பிரமபுரத் துறைகின்ற
காமன்றன் னுடலெரியக் கனல்சேர்ந்த கண்ணனே. 2

---

1. எம்பிரான் ஆவானும், தன்னை அடைந்தவர் தம்பிரான் ஆவானும், தழல் ஏந்திய கையானும், காபாலியும், கறைக் கண்டனும் வானவனே என்று முடிக்க. தம் - ஆன்மாக்கட்டு. பிரான் - இனியன், பிரியமானவன் என்றும் ஆன்மாக்கள் அநேகமாதலின் 'தம்' என்றும், ஆண்டவன் ஏகனாதலின் 'தன்' என்றும் குறித்தனர் முன்னோர். 'தன்னுனந்தக் கொடி - 'சிவகாமவல்லி' என்புழிக்காண்க. கம்பம்-அசைவு. கட்டுந்தூண். கரி - கரத்தையுடையது. யானை. காபாலி - பிரம கபாலத்தை ஏந்தியவன். கறை - நஞ்சு. வம்பு - மணம்.

2. உலகத்துக்கு அடைக்கலம் சருவேசுவரன் ஒருவனே ஆவான் என்று, என்றும் மனம்தளராத தகுதியை உடைய வராகி, அச்சிவபிரானையே சரணம் அடைந்தவர்களைக் காக்கும் கிருபாகரன். ஓம் என்று - ஓம் என்று பிரணவமந்திரத்தைஓதி. உறைகின்ற கண்ணன்; எரியச் சேர்ந்த கண் என்க. மன்மத தகனம்.

நன்னெஞ்சே யுனையிரந்தே னம்பெருமான் றிருவடியே
உன்னஞ்செய் திருகண்டா யுய்வதனை வேண்டுதியேல்
அன்னஞ்சேர் பிரமபுரத் தாரமுதை யெப்போதும்
பன்னஞ்சீர் வாயதுவே பார்கண்ணே பரிந்திடவே. 3

சாநாளின் றிம்மனமே சங்கைதனைத் தவிர்ப்பிக்குங்
கோனாளுந் திருவடிக்கே கொழுமலர்தூ வெத்தனையுந்
தேனாளும் பொழிற்பிரம புரத்துறையுந் தீவணனை
நாநாளு நன்னியமஞ் செய்தவன்சீர் நவின்றேத்தே. 4

கண்ணுதலான் வெண்ணீற்றான் கமழ்சடையான் விடையேறி
பெண்ணிதமா முருவத்தான் பிஞ்ஞகன்பேர் பலவுடையான்
விண்ணுதலாத் தோன்றியசீர்ப் பிரமபுரந் தொழவிரும்பி
எண்ணுதலாஞ் செல்வத்தை யியல்பாக வறிந்தோமே. 5

---

3. நல்ல நெஞ்சமே! நீ உய்தி வேண்டுவாயானால் உன்னை இரந்தேன். இரந்தது என்ன என்றால், நம்பெருமான் திருவடிகளையே சதாகாலமும் நினைவுசெய்திரு. அன்னம் ஆசிரியர் காலத்திலிருந்தமை புலப்பட்டது. வாயதுவே - வாயே! எப்போதும் ஆரமுதைப்பன். அம்சீர்பன் - அழகிய கீர்த்தியைப் பன்னுக. கண்ணே! பரிந்திடப்பார். பரிந்திட - சிவபிரான் இரங்கி அருள்செய்ய. பார் - கேசாதிபாதம் + பாதாதிகேசம் தரிசித்துக்குளிர்வாய்.

4. சாம்நாள் இன்றி, இகரத்தைச்சுட்டாக்குதல் பொருந்தாது. சங்கை - சாகும் நாள் உண்டோ இன்றோ என்னும் சந்தேகம். தவிர்ப்பிக்கும் - தவிரப்போக்கும். கோன் - தலைவன் (சிவபிரான்) மேல் 'திருவடியே' என்றும் இங்கு, 'திருவடிக்கே' என்றும் அருளியதை உணர்ந்து, மறந்து மற்றொன்றை எண்ணாமைவேண்டும். தீவணன் - அழல் வண்ணத்தவன். நா - நாவே! நல்ல நியமம் செய்து அவன் சீரை நவின்று ஏத்து. நல்நியமம் - தோத்திரம் புரிதற்கு முன் செய்யற்பாலான ஆகிய பூஜாங்கங்களைத் தவறாமல் செய்யும் நியமம்.

5. கண்நுதலான் - நுதலிற் கண்ணை உடையவன், கண்ணையுடைய நுதலினன். நுதலும் (கருதும்) இடமாதலின், 'நுதல்' எனப்பட்டது. கண்ணுதல் என்றதும் அதுபற்றியே.

எங்கேனும் யாதாகிப் பிறந்திடினுந் தன்னடியார்க்
கிங்கேயென் றருள்புரியு மெம்பெருமா னெருதேறிக்
கொங்கேயு மலர்ச்சோலைக் குளிர்பிரம புரத்துறையுஞ்
சங்கேயொத் தொளிர்மேனிச் சங்கரன்றன் றன்மைகளே. 6

சிலையதுவெஞ் சிலையாகத் திரிபுரமூன் றெரிசெய்த
இலைநுனைவேற் றடக்கைய னேந்திழையா ளொருகூறன்
அலைபுனல்சூழ் பிரமபுரத் தருமணியை யடிபணிந்தால்
நிலையுடைய பெருஞ்செல்வ நீடுலகிற் பெறலாமே. 7

---

செந்தீயான் (கண்ணுதலான்) என்று கருதின் வெண்ணீற்றுன் முரண்டொடையாம். ஏறி - பெயர்ச்சொல். இதம் - நன்மை மாதுபங்கன். பிஞ்ஞகன் - தலைக்கோலத்தன். பேர்பல - "பேராயிரம் (பரவிவானோர் ஏத்தும் பெம்மான்") விண் - விண்ணோர்க்கு இடவாகுபெயர். நுதலா-கருதுதலாக. எண்ணுதலாம் செல்வத்தை - தியானிக்கும் ஐசுவரியத்தை. இயல்பாக - உள்ளவாறு.

6. எங்கு யாது பிறந்திடினும் என்பதும் எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் என்பதும் பொருள் வேறுபாடுடையன. இடமும் பிறப்பும் வேறுபட்டாலும் அடியார்க்கு ஆண்டவனருள் கிடைப்பது திண்ணம். 'எங்கேனும் இருந்து, எங்கே போவேனுயிடினும்,' 'எங்கேனும் போகினும்' என்னுந் தொடக்கத்துத் திருப்பாட்டுக்களை (திருமுறை 7) அறிக. 'இங்கே' என்றது பிறந்த இடத்தையும் அப்பிறவியையும் குறித்து நின்றது. கொங்கு - மணம். ஏயும்-பொருந்தும். பவளம்போலும் மேனியிற்பால் வெண்ணீறு கண்ணித்த திருமேனிக்குச் சங்கு ஒப்பு. எம்பெருமான் சங்கரன்றன் தன்மைகள் இங்கே என்று அருள்புரியும் என்றியைக்க.

7. சிலை அது - மேருமலையானது. (அது; பகுதிப்பொருள் விகுதி) சிலை - வில் (பதிகம் 173 : பா 7. குறிப்புணர்க) திரிபுரம் - வினைத்தொகை. 'திரிதருபுரம் எரிசெய்த சேவகன்' (திருமுறை. 3. பதிகம் 23. பா 9.) 'திரியும் மூவெயில்' (4. 20. 7. 5, 25, 4) 'திரியும் மும்மதில்' (5. 36, 10) 'திரியும் முப்புரம்' (சுந்தரர் 626, 685, 809) இலை - உவமை. நிலையுடைய பெருஞ் செல்வம்-சிவாநந்தாநுபவம். நீடுலகு - வானோர்க்குயர்ந்த உலகம்.

எரித்தமயிர் வாளரக்கன் வெற்பெடுக்கத் தோளொடுதாள்
நெரித்தருளுஞ் சிவமூர்த்தி நீறணிந்த மேனியினன்
உரித்தவரித் தோலுடையா னுறைபிரம புரந்தன்னைத்
தரித்தமன மெப்போதும் பெறுவார்தாந் தக்காரே. 8

கரியானு நான்முகனுங் காணாமைக் கனலுருவாய்
அரியானும் பரமேட்டி யரவஞ்சே ரகலத்தான்
றெரியாதா னிருந்துறையுந் திகழ்பிரம புரஞ்சேர
உரியார்தா மேழுலகு முடனாள வுரியாரே. 9

உடையிலார் சீவரத்தார் தன்பெருமை யுணர்வரியான்
முடையிலார் வெண்டலைக்கை மூர்த்தியாந் திருவுருவன்
பெடையிலார் வண்டாடும் பொழிற்பிரம புரத்துறையுஞ்
சடையிலார் வெண்பிறையான் றாள்பணிவார் தக்காரே. 10

---

8. சிவமூர்த்தி - சிவமாகிய மூர்த்தி. தக்கார் - பெருந்தகை யுடையார். மாணடிசேர்தல் தக்காரிலக்கணம் எனப்பட்டது. கற்றதனாலாயபயன் அதுவே. பா. 10. பார்க்க. 'தோளொடு தாள்' என்புழித் தோளொடு தாளையும் தாளொடு தோளையும் சேர்த்து நெரித்து என்று கொள்ளலாகாது. தோளையும் தாளையும் நெரித்து எனல் வேண்டும். 'சிவமூர்த்தி' என்பதில், மூர்த்தியும் மூர்த்திமானும் ஆக வெவ்வேறாகக் கொள்ளாமல் அபேதபுத்தியொடு தியானம் பண்ணுக.

9. பரமேட்டி - தன்னின்மேலதில்லாத உயரியநிலையினன். அரவம் - பாம்பு. அகலம் - மார்பு. தெரியாதவன் - சிந்தையும் மொழியுஞ் சென்று தெரிதற்கு அரியவன். 'போய்க்காடே மறைந்துறைதல் புரிந்தானும்' (பதிகம் 177. பா 2) ஆம். பிரம புரத்தை இடைவிடாது சேர்ந்து தியானம் புரியும் உரிமையடை வார்க்கு ஏழுலகாட்சியுரிமை உண்டு. உலகாட்சி ஆண்டவனை வழிபட்டால்தான் எய்தும்.

10. உடையிலார் - திகம்பரர். சீவரத்தார் - சுவேதாம்பரர். முடையில் - சுடுகாற்றத்தில். ஆர் - பொருந்திய. மூர்த்தியாந் திருவுருவு - ஞானமூர்த்தி. மந்திரமூர்த்தி, அத்துவாமூர்த்தி முதலியன. உருவன் - மூர்த்திமான், உருவை உடையவன் தக்காரிலக்கணம். பா. 8 பார்க்க.

தன்னடைந்தார்க் கின்பங்க டருவானைத் தத்துவனைத்
கன்னடைந்த மதிற்பிரம புரத்துறையுங் காவலனை
முன்னடைந்தான் சம்பந்தன் மொழிபத்து மிவைவல்லார்
பொன்னடைந்தார் போகங்கள் பலவடைந்தார் புண்ணியரே. 11

திருச்சிற்றம்பலம்

---

**11.** *தன் அடைந்தார்க்கு - தன்னை அடைந்த அன்பர்க்கும் அறிவர்க்கும். இன்பங்கள் -பெத்தத்திலுள்ள சிற்றின்பங்களும் முத்திப் பேரின்பமும். தத்துவன் - மெய்ப்பொருள். கன் - கல் (அடைந்தமதில்). முன் - முற்பிறப்பு, இளமை, சந்நிதி, தந்தைமுதலியோர் எதிர்என்றபொருளும் குறித்து நிற்றலறிக. வல்லார் எழுவாய், அடைந்தார் இரண்டும் வினைப்பயனிலை. புண்ணியர் பெயர்ப்பயனிலை, உம்மை கொடுத்து ஆக்கம் (ஆவர்) வருவித்து முடித்தலுமாம்.*

---

இருந்தண் புகலிகோ லக்கா எழில்ஆ
வடுதுறைசீர்
பொருந்தும் அரத்துறை போனகந் தாளம்நன்
பொன்சிவிகை
அருந்திட வொத்தமுத் தீசெய வேற
அரனளித்த
பெருந்தகை சீரினை எம்பர மோநின்று
பேசுவதே. —அந்தாதி 40

பேசுந் தகையதன் றேஇன்றும் அன்றுந்
தமிழ்வீரகன்
தேச முழுதும் மழைமறந் தூண்கெடச்
செந்தழற்கை
ஈசன் திருவரு ளால்எழில் வீழி
மிழலையின்வாய்க்
காசின் மழைபொழிந் தான்என்றிஞ் ஞாலங்
கவின்பெறவே —அந்தாதி 41

# 41 திருச்சாய்க்காடு

## 177 பதிகவரலாறு

திருவலம்புரத்தை வழிபட்ட திருஞானசம்பந்தப்பெருமானுர், நீர்வளம் நிறைந்த சீர்வளர் சாய்க்காட்டைத் தொழுதற்கு நினைந்து சென்று, திருப்பல்லவனீச்சரத்தைச் சொல்லழகும் பொருளழகும் பேரின்பூற்றும் அமையப்பாடிப் பரவி, பொன்னிசூழ் புகாரில் நீடிய புனிதரது திருசாய்க்காட்டை, திருத்தொண்டர் பலரும் எதிர்கொள்ளச் சென்று, வானளாவி உயர்ந்த திருவாயிலுள் வலங் கொண்டு, புகுந்து பணிந்து போற்றியது இத் திருப்பதிகம்.

பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

மண்புகார் வான்புகுவர் மனமிளையார் பசியாலுங்
கண்புகார் பிணியறியார் கற்றாருங் கேட்டாரும்
விண்புகா ரெனவேண்டா வெண்மாட நெடுவீதித்
தண்புகார்ச் சாய்க்காட்டெந் தலைவன்றாள் சார்ந்தாரே. 1

போய்க்காடே மறைந்துறைதல் புரிந்தானும் பூம்புகார்ச்
சாய்க்காடே பதியாக வுடையானும் விடையானும்
வாய்க்காடு முதுமரமே யிடமாக வந்தடைந்த
பேய்க்காடல் புரிந்தானும் பெரியோர்கள் பெருமானே. 2

---

1. மண் புகார் - பிறவார் என்றவாறு. வான்புகுவர் - பேரின்பம் அடைவார் என்றவாறு. மனம் இளையார் முதலிய மூன்றும் இம்மை நலம் குறித்தவை. கண்புகார் - இடுக்கண் ஊறுர் (இடுங்குகண்). கற்றவரும் கேட்டவரும் என்பது இடை நிலை விளக்கா நின்று முன்னும் பின்னும் உள்ள பயனிலைகட்கு எழுவாயாயின. விண்ணிற் புகமாட்டார் எனல் வேண்டா, அதனினும் உயர்ந்த சிவலோகம் சேர்ந்து, திருவடியைச் சார்ந்தாரே. வீதிக்கு வெண்மாடம் விசேடம். புகார் - காவிரிப்பூம் பட்டினம். (பா. 4)

2. காடே போய் மறைந்து உறைதல் புரிந்தான் - காட்டிலே சென்று ஒளிந்து தாழ்தலை விரும்பினவன். புகாரும்

நீநாளு நன்னெஞ்சே நினைகண்டா யாரறிவார்
சாநாளும் வாழ்நாளுஞ் சாய்க்காட்டெம் பெருமாற்கே
பூநாளுந் தலைசுமப்பப் புகழ்நாமஞ் செவிகேட்ப
நாநாளு நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே. 3

கட்டலர்த்த மலர்தூவிக் கைதொழுமின் பொன்னியன்ற
தட்டலர்த்த பூஞ்செருந்தி கோங்கமருந் தாழ்பொழில்வாய்
மொட்டலர்த்த தடந்தாழை முருகுயிர்க்குங் காவிரிப்பூம்
பட்டினத்துச் சாய்க்காட்டெம் பரமேட்டி பாதமே. 4

---

சாய்க்காடும் நெருங்கியிருத்தலால், 'புகார்ச்சாய்க்காடு' என்றூர் பதி - வாழுமிடம். வாய்க்காடு, காட்டுவாய் என மாற்றிக் காட்டின்கண் என்று உரைத்துக்கொள்க. வாய் - இடம், (அகன்ற) காடு என்றுமாம், முது மரம் - ஆலமரம். பேய்க்கு ஆடல் - பேயின் பாடலுக்குத்தக ஆடுதலை. 'பேயடைந்த காடிடமாப் பேணுவது' 'பேயாயினபாடப் பெரு நடமாடிய பெருமான்' (1. 48. 5 + 1. 15. 3.). புரிந்தானும் முதலிய நான்கும் கூட்டிப் பெருமானே என்பதொடு முடிக்க.

3. நல்நெஞ்சே! நீ நாளும் நினை. சாம்நாளும் வாழ்நாளும் அறிவார் ஆர்? எம்பெருமானுக்கே நாளும் தலை பூக்களைச் சுமக்கவும், செவிகள் அவன் திருப்புகழ்களையும் அவற்றைக் குறிக்கும் திருப் பெயர்களையும் கேட்கவும், நாக்கு அவற்றை நாளும் நவின்று ஏத்தவும் (செய்யும்) நல் வினையைப் பெற லாம், நல் வினையாற் பெறலாம் என்றுமாம். நவின்று - நாவால் சொல்லி அடிப்பட்டு. 'மறைநவில் அந்தணர் நுவலவும் படுமே'. (புறம், கடவுள் வாழ்த்து) இறப்பும் இருப்பும் அறியாமையால். இருக்கும்போதே முன்னை நல்வினைப் பயனாக நாடோறும் திருவடி நினைவு, பூச்சுமை, புகழ்க் கேள்வி, நாநவிற்சி ஆகிய சிவ புண்ணியங்களைத் தேடிக்கொள்க.

4. கட்டு - (கள் + து) கள்ளுடைய அரும்புகளின் உறுதி நிலை, பிணிப்புமாம். அலர்ந்த - அலரச்செய்த, பிறவினை. சிவ பூஜை செய்க என்று ஏவியருளியவாறு. பொன் இயன்ற தட்டு அலர்ந்தபூ - பொன்னால் ஆகிய தட்டுப்போலும் பூத்த பூ, தோங்கு அமரும் பொழில். மொட்டு - அரும்புகள். முருகு - மணம், உயிர்க்கும் - (வெளி) விடும். பரமேட்டி - தனக்கு

கோங்கன்ன குவிமுலையாள்கொழும்பணைத்தோட்கொடியிடையைப்
பாங்கென்ன வைத்துகந்தான் படர்சடைமேற் பான்மதியந்
தாங்கினன் பூம்புகார்ச் சாய்க்காட்டான் ருணிழற்கீழ்
ஓங்கினு ரோங்கினு ரெனவுரைக்கு முலகமே. 5

சாந்தாக நீறணிந்தான் சாய்க்காட்டான் காமனைமுன்
றீந்தாக மெரிகொளுவச் செற்றுகந்தான் றிருமுடிமேல்
ஓய்ந்தார மதிசூடி யொளிதிகழு மலைமகடோள்
தோய்ந்தாகம் பாகமா வுடையானும் விடையானே. 6

மங்குரேய் மணிமாட மதிதவழு நெடுவீதிச்
சங்கெலாங் கரைபொருது திரைபுலம்புஞ் சாய்க்காட்டான்
கொங்குலா வரிவண்டின் னிசைபாடு மலர்கொன்றைத்
தொங்கலா னடியார்க்குச் சுவர்க்கங்கள் பொருளலவே. 7

---

மேவில்லாத உயர்ந்த இடத்தினையுடையவன். பாதமே கைதொழுமின் என்று விற்பூட்டாக் கொள்க.

5. கோங்கு - கோங்கினரும்பு, அன்ன - ஒத்த, பணை - மூங்கில். பாங்கு - (பால்+கு) இடப்பால், பால் மதியம் - பால் போலும் வெண்டிங்கள். தாள் நிழல் கீழ் ஓங்கினர் - 'ஓங்குணர்வின் உள் அடங்கி உள்ளத்துள் இன்பு ஒடுங்கத் தூங்குவர்' (திருவருட்பயன். 91) திருவடிக்கீழ் ஓங்கினவரே ஓங்கினவர், மற்று எங்கு ஓங்கினும் அஃது ஓங்குதலாகாது; தாழ்தலேயாகும். என உலகம் உரைக்கும் என்று மாற்றுக.

6 சாந்து - சந்தனம். சாந்தாக நீறணிந்தான் - 'சாந்தம் ஈது என்று எம்பெருமான் அணிந்தநீறு' (1. 52. 7.) தீந்து - தீய்ந்து, எரிந்து. ஆகம் - உடம்பு. ஆகத்தைத் தீய்ந்து எரிகொளுவச் செற்று உகந்தான் என்க. கொள்ள - தன்வினை. கொளுவ:- பிறவினை. கொளுத்த; பொருத்த. ஓய்ந்த ஆர - நுணுகிப்பொருந்த. ஓய்தலுற்றுத் தங்க எனலுமாம். மலைமகள் (உமாதேவியார்). தோய்ந்து - தழுவி.

7. மங்குல் - மேகம். புலம்பும் - ஒலிக்கும். கொங்கு - மணம். தேன் உலாமலர். கொங்கிற்கு உலா வண்டு எனலுமாம். தொங்கலான் - மாலையினன். சுவர்க்கங்கள் - தேவலோகங்கள். வானோர்க்கும் உயர்ந்த உலகத்தை அடையத்தக்க சிவனடியார்க்கு வானோருலகம் பொருளாகா.

தொடலரிய தொருகணையாற் புரமூன்று மெரியுண்ணப்
படவரவத் தெழிலாரம் பூண்டான்பண் டரக்கனையுந்
தடவரையாற் றடவரைத்தோ ளூன்றினன் சாய்க்காட்டை
இடவகையா வடைவோமென் றெண்ணுவார்க் கிடரிலையே. 8

வையநீ ரேற்றானு மலருறையு நான்முகனும்
ஐயன்மா ரிருவர்க்கு மளப்பரிதா லவன்பெருமை
தையலார் பாட்டோவாச் சாய்க்காடெம் பெருமானைத்
தெய்வமாப் பேணாதார் தெளிவுடைமை தேறோமே. 9

குறங்காட்டு நால்விரற் கோவணத்துக் கோலோவிப்போய்
அறங்காட்டுஞ் சமணருஞ் சாக்கியரு மலர்தூற்றுந்
திறங்காட்டல் கேளாதே தெளிவுடையீர் சென்றடைமின்
புறங்காட்டி லாடலான் பூம்புகார்ச் சாய்க்காடே. 10

---

8. தொடல் - (தொடு+அல்) தொடுத்தல், தொடுதல் என்னும் இருபொருளும் அமையும்; தீக்கணையாதலின். பட அரவத்து எழில் ஆரம் - படத்தையுடைய அழகிய மாலை. தடவரை...ஊன்றினன், இராவணனது பெரிய மலைபோலும் தோள்களை விசாலமான கயிலை மலையால் அழுத்திய பரமசிவன். இடர் - பிறவித்துன்பம் முதலிய எல்லாம்.

9. வையம் - பூமி. மூவடிமண். நீர் - தத்தஞ் செய்நீர். ஏற்றான் - மாவலிபால் இரந்த திருமால். ஐயன்மார் இருவர் - அயனும் அரியுமாகிய துவி கர்த்தர்கள். அளப்பு - அளவிடுதல். தையலார் - பெண்டிர். ஓவா - இடைவிடாத. பேணாதார் - விரும்பி வழிபடாதவர். தெளிவு - ஞானத்தேற்றம். 'சீலத்தால் ஞானத்தால் தேற்றத்தால் சென்றகன்ற காலத்தால் ஆராத காதலால் - ஞாலத்தார் இச்சிக்கச் சாலச்சிறந்து அடியேற்கு இனிதாம் கச்சிக்கச் சாலைக் கனி.'' எனப் பின்வந்த ஞானப் பாடலை அறிக. தேறோம்-அதை ஒரு தெளிவாகக் கொள்ளோம், மதியோம் என்றபடி.

10. முதலீரடியும் புறப்புறச்சமயத்தார் நிலையும்செயலும் உணர்த்துகின்றன. குறங்கு ஆட்டும் - துடையில் அசைக்கும். கோலோவி - உலாவி; கொண்டாடி. மெய்யொழுக்கத்தால் உண்டெனத் தோற்றுதல் இன்றித் தம் பொய்யொழுக்கத்தை

நொம்பைந்து புடைத்தொல்கு நூபுரஞ்சேர் மெல்லடியார்
அம்பந்தும் வரிக்கழலு மரவஞ்செய் பூங்காழிச்
சம்பந்தன் றமிழ்பகர்ந்த சாய்க்காட்டுப் பத்தினையும்
எம்பந்த மெனக்கருதி யேத்துவார்க் கிடர்கெடுமே. 11

திருச்சிற்றம்பலம்.

---

நூலாலும் பேச்சாலும் மறைத்து, தம்மிடத்தில் அறம் உள்ளது போலக் காட்டுதலால் 'அறம் காட்டும்' என்றார். அலர் - பழி. காட்டல் - காட்டுவதை. கேளாதே - பொருட்படுத்தாமல் 'தம்மிற் புணராமை கேளாம்புறன்' (சிவஞானபோத வெண்பா. 1. உரை) தெளிவுடையீர் கேளாதே சாய்க்காடே சென்று அடைமின் என்க.

11. நொம் - நோகும். பைந்து - பந்து. "தண்மலர் நறும் பைந்து ஊழ் அறிந்து உருட்டா" (பெருங். மகத 8-64) புடைத்து - (பந்து) அடித்து. ஒல்கு - தளரும். நூபுரம் - (பாதக்)கிண்கிணி, சிலம்பு. அம்பந்து - அழகிய பந்து. கழல் - கழல் என்னும் அணி. அரவம் - ஓசை. எம்பந்தம் - எம்முடைய பற்று(க் கோடு). ஏத்துவார் - பாராயணம் புரிபவர்.

---

பெறுவது நிச்சயம் அஞ்சல்நெஞ் சேபிர
மாபுரத்து
மறுவறு பொற்கழல் ஞானசம் பந்தனை
வாழ்த்துதலால்
வெறியுறு கொன்றை மறியுறு செங்கை
விடைஎடுத்த
பொறியுறு பொற்கொடி எம்பெரு மான்அமர்
பொன்னுலகே —அந்தாதி 42

## 178 பதிகவுரலாறு

காழியர் வாழவந்தருளிய மறைவேந்தர், மொழிவேந்தரொடு திருக்கடவூர் தொழுது, விரவு நண்புடைய குங்கிலியப் பெருங்கலயர் திருமனை விருந்துண்டருளித் திருமயானம் பணிந்து, சிலநாள் அமர்ந்து, மறைப்பெருந் திருக்கலயரும் உடன்பட வணங்கிய மகிழ்வுடன் அறப்பெரும் பயன்போன்ற தொண்டர்சூழ இத், திருவாக்கூர்த்தான்தோன்றிமாடத்தை அணைந்து, அண்ணலைப் போற்றிப் பாடிய செந்தமிழ்த் தொடை இத்திருப்பதிகம்.

### பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

அக்கிருந்த வாரமு மாடரவு மாமையும்
தொக்கிருந்த மார்பினன் றோலுடையான் வெண்ணீற்றன்
புக்கிருந்த தொல்கோயில் பொய்யிலா மெய்ந்நெறிக்கே
தக்கிருந்தா ராக்கூரிற் றான்றோன்றி மாடமே. 1

---

1. அக்கு - உருத்திராக்கம். எலும்பும் ஆம். ஆரம் - மாலை, என்புமாலை, தலைமாலை. கொன்றைமாலை, உருத்திராக்கமாலை முதலியவற்றுள் முதலும் முடிவும் இங்குப் பொருந்தும். அரவு - பாம்பு, 'முற்றல் ஆமை இள நாகமொடு ஏனமுளைக் கொம்பவை பூண்டு' (பதிகம். 1. பா. 2.) தோலுடையான் - யானைத்தோலும் புலித்தோலுமாகிய உடையினன். உடையவனுமாம். சைவநெறி பசுபாசக் கலப்பாகிய பொய்யில்லாதது மட்டுமன்று, சிவத்துவமாகிய மெய்யேயாய் நிற்பது. கேவலம் சகலம் - பொய். சுத்தம் - மெய், அந்நெறிக்கே தக்கிருந்தார் - ஆக்கூர்ச் சைவர்கள். (பா. 3. வேளாளராகிய தாளாளர் முதலியோர்) இப்பதிகத்துள் முதற் பத்திலும் ஆக்கூர்ச் சைவர் சிறப்புணர்த்துதல் அறிக. இது தொல்கோயில் என ஆசிரியர் காலத்தே விளங்கியது. அவ்வாறே இன்றும் எண்ணக்கிடக்கின்றது. 'தான்றோன்றி மாடமே வெண்ணீற்றன் புக்கு இருந்த தொல்கோயில்' என்று கூட்டுக.

நீரார வார்சடையா னீறுடையா னேறுடையான்
காரார்பூங் கொன்றையினான் காதலித்த தொல்கோயில்
கூராரல் வாய்நிறையக் கொண்டயலே கோட்டகத்தில்
தாராமல் காக்கூரிற் றான்றோன்றி மாடமே. 2

வாளார்கண் செந்துவர்வாய் மாமலையான் றன்மடந்தை
தோளாகம் பாகமாப் புல்கினான் றொல்கோயில்
வேளாள ரென்றவர்கள் வள்ளன்மையான் மிக்கிருக்கும்
தாளாள ராக்கூரிற் றான்றோன்றி மாடமே. 3

---

'பூங்கோயில்' (4) என்றும் சொல்லப்படும். இதைத் தரிசித்தவரே இதன் பெருமை, தொன்மை முதலியவற்றை நன்கு உணர்வர்.

2. நீர் - கங்கை. ஆர - பொருந்த, நிறைய. வார் - நீண்ட. கார் ஆர் பூங்கொன்றை-'கண்ணி கார்நறுங் கொன்றை'. ஆரல்- ஆரால் மீன்களை. தாரா - நாரையினம். வாய் நிறைய ஆரலைக் கொண்டு அயலே கோட்டகத்தில் தாராமல்கும் ஆக்கூர் என்று இயைக்க. கோட்டகம் - நீர்நிலை, நீர்க்கரை, தான்தோன்றி - சுயம்பு. ஊர்க்கும் திருக்கோயிற்கும் வெவ்வேறு பெயர் வழங்கிய பழைய மரபை ஈண்டும் காணலாம்.

3. வாள் ஆர் - வாள்போன்ற ஒளிபொருந்திய. துவர் - பவளம். துவர்வாய் - உவமைத்தொகை. மடந்தை - உமா தேவியார். தோள் ஆகம் பாகமா, (177-6. பார்க்க). புல்கினான்- புணர்ந்தான். வள்ளன்மை - வள்ளலாந்தன்மை. கொடைமை. தாள் - முயற்சி. தாளாளர் - ஆக்கம் அதர்வினாய்ச் சாரத்தக்க ஊக்கமுடையர். வேளாளர் - அவ்வாக்கத்தைப் பிறர்க்கு உபகரிக்கும் வண்மையாளர். வேள் - மண் என்று கொண்டு, உழவர் எனலும் உண்டு, வேளாண்மை - உபகாரம். 'வேளாண் சிறுபதம்' (புறம். 74. உரை,) கொன்றையினான் காதலித்த கோயில் என்றதனால், வேண்டுதல் வேண்டாமை இல்லாத கடவுளுக்குக் காதல் உண்டென்ற குற்றம் தோன்றும் எனலாம். ஆயினும் அது பொருந்தாது. அன்பர்க்கு அன்பன், அல்லாதார்க்கு அல்லன் என்புழிப் பக்குவா பக்குவங்களைக் காரணமாக் கொள்ளல்போற் கொள்க. ஆண்டவனுக்கு வேறுபாடில்லை.

கொங்குசேர் தண்கொன்றை மாலையினன் கூற்றடரப்
பொங்கினன் பொங்கொளிசேர் வெண்ணீற்றன் பூங்கோயில்
அங்கமா றோடு மருமறைகளைவேள்வி
தங்கினா ராக்கூரிற் றான்றோன் றி மாடமே. 4

வீக்கினா னாரவம் வீழ்ந்தழிந்தார் வெண்டலையென்
பாக்கினன் பலகலன்க ளாதரித்துப் பாகம்பெண்
ஆக்கினன் றொல்கோயி லாம்பலம்பூம் பொய்கைபுடை
தாக்கினா ராக்கூரிற் றான்றோன் றி மாடமே. 5

பண்ணொளிசேர் நான்மறையான் பாடலினோ டாடலினன்
கண்ணொளிசேர் நெற்றியினன் காதலித்த தொல்கோயில்
விண்ணொளிசேர் மாமதியந் தீண்டியக்கால் வெண்மாடம்
தண்ணொளிசே ராக்கூரிற் றான்றோன் றி மாடமே. 6

வீங்கினார் மும்மதிலும் வில்வரையால் வெந்தவிய
வாங்கினார் வானவர்கள் வந்திறைஞ்சு ந் தொல்கோயில்
பாங்கினார் நான்மறையோ டாறங்கம் பலகலைகள்
தாங்கினா ராக்கூரிற் றான்றோன் றி மாடமே. 7

---

4. கொங்கு-தேன், மணம், தாது. கூற்று அடர-இயமனை வருத்த. பொங்கினன் - கோபம் மிகுந்தான். ஆறு அங்கம் - வேதாங்கம் ஆறும். ஐவேள்வி தங்கினார் - பஞ்ச மகாயக்ஞம் புரிவோர். வேள்வி - யாகம், பூஜை. தேவயாகம். பூதயாகம் முதலியன. (பா. 7. பார்க்க.)

5. வீக்கினன் - (அரவக்கச்சு) கட்டினன். வீந்து - மாண்டு. அழிந்தார் - அழிந்தவரது. தலை என்பு - தலையும் எலும்பும். கலன்கள் - ஆபரணங்கள். ஆதரித்து - விரும்பி. பாகம் - இடப்பால். பெண் - உமாதேவியார். ஆம்பல் அம் பூம் பொய்கை - ஆம்பல் மலரும் அழகிய பூங்குளம். பூ - பொலிவு. ஆம்பற்பூவுமாம். பொய்கையைப் புடையில் (எதிர்ப்பக்கத்தில்) தாக்கினார் (-வெட்டினார்) வாழும் ஆக்கூர் என்க. ஆதரித்து ஆக்கினன் என முன்னும் பின்னும் கூட்டுக.

6. ஒளி-அறிவினொளி. கண்ணொளி-நெருப்புக்கண்ணொளி. தண் ஒளி - குளிர்ச்சி ஆக்கும் ஒளி.

7. வீங்கினார் - பெருமையுடைய சிவபிரான். திரிபுரத் தசுரரையுங் குறிக்கும். செலவில் மிக்கார் - மீச்செலவினார்,

கன்னெடிய குன்றெடுத்தான் றோளடரக் காலூன்றி
இன்னருளா லாட்கொண்ட வெம்பெருமான் றெல்கோயில்
பொன்னடிக்கே நாடோறும் பூவோடு நீர்சுமக்கும்
தன்னடியா ராக்கூரிற் றன்றோன்றி மாடமே. 8

நன்மையா னாரணனு நான்முகனுங் காண்பரிய
தொன்மையான் றோற்றங்கே டில்லாதான் றெல்கோயில்
இன்மையாற் சென்றிரந்தார்க் கில்லையென்ன தீந்துவக்குந்
தன்மையா ராக்கூரிற் றன்றோன்றி மாடமே. 9

நாமருவு புன்மை நவிற்றச் சமண்டேரர்
பூமருவு கொன்றையினன் புக்கமருந் தொல்கோயில்
சேன்மருவு பங்கயத்துச் செங்கழுநீர் பைங்குவளை
தாமருவு மாக்கூரிற் றன்றோன்றி மாடமே. 10

ஆட லமர்ந்தானை யாக்கூரிற் றன்றோன்றி
மாட மமர்ந்தானை மாடஞ்சேர் தண்காழி
நாடற் கரியசீர் ஞானசம் பந்தன்சொல்
பாட லிவைவல்லார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

(பகைவர்) வில்வரை - மேருவில், வில்லாகியவரை. மறை + அங்கம் + பலகலைகள். தாங்கினர் - கற்றுணர்ந்து கொண்டவர். அந்தணர். (பா. 4. பார்க்க).

8. கல்நெடிய குன்று - திருக்கயிலை மலை. பொன்...... அடியார் - 'பொன்னடியே பரவிநாளும் பூவொடு நீர்சுமக்கும் நின் அடியார்' (1. 52. 3.)

9. தொன்மையான் - 'தொல்லோன்'. தோற்றம் கேடு - பிறப்பும் இறப்பும். இன்மை - வறுமை. ஈந்துவக்கும் தன்மையார் - 'ஈத்துவக்கும் இன்பம்' அறிந்தவராய், தம் உடைமை வைத்திழவாத தண்ணளியர், (சிறப்புலிநாயனர் புராணம். 1.)

10. புன்மை - அற்பக் கொள்கைகள் 'புன்பேச்சு' (182 - 10)ம் ஆம். நவிற்ற - பிதற்ற. சமண்தேரர்-சமணரும் தேரரும். சேல் - மீன். பங்கயம் - பசிய நீர்நிலை. தாம் - கழுநீர் குவளை களைக் குறித்த பன்மைப்பெயர்.

11. ஆடலமர்ந்தான் - திருக்கூத்தை விரும்பி யாடியவனை. அமர்ந்தான்-விரும்பியவன். தங்கியவன். நாடற்கு-ஆராய்தற்கு.

# 43 திருப்புள்ளிருக்குவேளூர்

## 179 பதிகவரலாறு

திருமறைச்சண்பையராளி திருக்கண்ணார் கோயிலை ஏத்தினர், பிறகோயிலும் இறைஞ்சினர், காவிரிவடபால் குடதிசை நோக்கி வருவாராய்க், காதல் பெருகப் புள்ளிருக்கு திருவேளூர்க்கோயிலை நண்ணினர், ஏற்ற அன்பு எய்த வணங்கினர். இருவர் புள்வேந்தர் இறைஞ்சி ஆற்றிய பூசையைச் சாற்றி இந்த நன்சொற்பதிகத்தை அணிந்தார்.

பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

கள்ளார்ந்த பூங்கொன்றை மதமத்தங் கதிர்மதியம்
உள்ளார்ந்த சடைமுடியெம் பெருமானா ருறையுமிடந்
தள்ளாய சம்பாதி சடாயென்பார் தாமிருவர்
புள்ளானார்க் கரையனிடம் புள்ளிருக்கு வேளூரே. 1

தையலா லொருபாகஞ் சடைமேலா ளவளோடும்
ஐயந்தேர்ந் துழல்வாரோ ரந்தணனா ருறையுமிடம்
மெய்சொல்லா விராவணனை மேலோடி யீடழித்துப்
பொய்சொல்லா துயிர்போனான் புள்ளிருக்கு வேளூரே. 2

---

1. கள் - தேன், ஆர்ந்த - நிறைந்த. மதமத்தம் - கடு நாற்றத்தையுடைய ஊமத்தை, முடியையுடைய பெருமானர் என்க. தள்ளா - தாழ்ந்த பறவைகள் எனக்கருதித் தள்ளி விடத் தகாத உயிர்களாகிய சம்பாதி சடாயு என்பர்தாம்; இருவர்புள் ஆனர். சம்பாதியும் சடாயுவும் பறவைப் பிறப்பை அடைந்து வழிபட்ட வரலாறு. அரையன் - வைத்தியநாதர். இதில் இருவரையும் உணர்த்தினர். 'மேல்' 2. 4, 6. 8, 9, 10, சடாயுவையும் 3,5,7, சம்பாதியையும் ஒருமையாகக் குறித்தனர் எனலாம். புள்ளிருக்குவேளூர் என்றதன் பெயர்க்காரணத்துள் ஒருபகுதி கூறப்பட்டது. சேக்கிழார்பெருமான் 'புள்ளிருக்கும் திருவேளூர்' எனப்பாடுதலால்.

2. தையலாள் - தலத்தின் அம்பிகை திருநாமம். சடைமேலாள் - கங்காதேவி. மேல் ஓடி - வானிற்பறந்து. ஈடு -

வாசநலஞ் செய்திமையோர் நாடோறு மலர்தூவ
ஈசனெம் பெருமானு ரினிதாக வுறையுமிடம்
யோசனைபோய்ப் பூக்கொணர்ந்தங் கொருநாளு மொழியாமே
பூசனைசெய் தினிதிருந்தான் புள்ளிருக்கு வேளூரே. 3

மாகாயம் பெரியதொரு மானுரிதோ லுடையாடை
ஏகாய மிட்டுகந்த வெரியாடி யுறையுமிடம்
ஆகாயந் தேரோடு மிராவணனை யமரின்கண்
போகாமே பொருதழித்தான் புள்ளிருக்குவேளூரே. 4

கீதத்தை மிகப்பாடு மடியார்கள் குடியாகப்
பாதத்தைத் தொழநின்ற பரஞ்சோதி பயிலுமிடம்
வேதத்தின் மந்திரத்தால் வெண்மணலே சிவமாகப்
போதத்தால் வழிபட்டான் புள்ளிருக்குவேளூரே. 5

---

(இராவணனது) வலியை. இராவணன் மெய்சொல்லாதவன்; சடாயு பொய் சொல்லாதவன் என்று குறித்த திறம் உணர்க.

3. வாசம் - தலவாசம். நலம் - தீர்த்தஸ்நாநம், பூர்த்தி தரிசனம் முதலியன. இமையோர் - தேவர், சூரியன், செவ்வாய் முதலோர். மலர் தூவ - அர்ச்சித்துவழிபட. யோசனை - நான்கு கூப்பீடு. கொணர்ந்து - கொண்டுவந்து. ஒழியாமே - தவறாமல். பூசனை - சிவார்ச்சனை. இருந்தான் - சம்பாதி. இவன் காவிரிப்பூம் பட்டினத்தில் பூங்காவைத்து நாள்தோறும் அங்கிருந்து மலர் கொண்டுவந்து வழிப்பட்ட வரலாற்றைக் குறித்தது.

4. காயம் - திருமேனி, ஏகாயம் - (ஏகாசம்) உத்தரீயம். ஆகாயத்தில் ஓடுந்தேர்; புட்பகவிமானம். அமர் - போர். பொருது - தாக்கி. அழித்தான் - சடாயு-

5. கீதம் - பாட்டு 'மணம் ஒன்றி உரை ஆர்கீதம் பாட நல்ல உலப்பு இல் அருள் செய்தார். (1. 71. 8) அடியார்கட்குப் பாதகமே குடி. குடியாகத் தொழ நின்ற சோதி என்க. பரஞ் சோதி - மெய்யொளி. மணலைச் சிவமாகப் போதத்தால் பாவித்து வேத மந்திரத்தால் வழிபட்டவன் சம்பாதி. போதம் - ஞானம்.

திறங்கொண்ட வடியார்மேற் றீவினைநோய் வாராமே
அறங்கொண்டு சிவதன்ம முரைத்தபிரா னமருமிடம்
மறங்கொண்டங் கிராவணன்றன் வலிகருதி வந்தானைப்
புறங்கண்ட சடாயென்பான் புள்ளிருக்குவேளூரே. 6

அத்தியினீ ருரிமூடி யழகாக வனலேந்திப்
பித்தரைப்போற் பலிதிரியும் பெருமானூர் பேணுமிடம்
பத்தியினால் வழிபட்டுப் பலகாலந் தவஞ்செய்து
புத்தியொன்ற வைத்துகந்தான் புள்ளிருக்கு வேளூரே. 7

பண்ணொன்ற விசைபாடு மடியார்கள் குடியாக
மண்ணின்றி விண்கொடுக்கு மணிகண்டன் மருவுமிடம்
எண்ணின்றி முக்கோடி வாணாள துடையானைப்
புண்ணொன்றப் பொருதழித்தான் புள்ளிருக்கு வேளூரே. 8

---

6. திறம் - 'சைவத்திறம்'. அறம் - அன்று 'ஆலின்கீழ் இருந்து உரைத்த அறம்'. சிவதன்மம் - சரியையையும், கிரியையும் 'சிவதன்மம்' என்பது சைவ சம்பிரதாயம் ஆயினும், இங்கு நான்கிற்கும் பொதுவாய் நின்றது. (இது தலவரலாற்றுக் குறிப்பு) மறம் - வீரம். தன்வலி - தனது பலத்தை. வந்தானை - வந்த (இரா) வ (ண) னை. புறம்கண்ட - முதுகுபார்த்த, வென்ற என்றபடி.

7. அத்தி - யானை. மூடி - போர்த்து. பித்தரைப்போல் என்றதால், இறைவனைப் பித்தனெனல் ஏலாது. பத்தி - பக்தி. திருவடிக்கு அன்பு. புத்தி - ஞானம். ஒன்ற - சிவத்தொடு பொருந்த. 'ஒன்றி இருந்து நினைமின்கள்'. உகந்தான் - விரும்பினன். உயர்ந்தவன். (சம்பாதி).

8. ஒன்ற - பொருந்த. 'பண்பொருந்த இசைபாடும் பழனம்சேர் அப்பன்' (4-12-5) குடியாகக் கொடுக்கும் மணிகண்டன் என்க. மண் இன்றி என்றது, பிறவாமைக்கும், விண் கொடுக்கும் என்றது, வீடு பேற்றிற்கும் எனக் கொள்க. எண் - கணக்கு. வாணாள் - வாழ்நாள் என்பதன்மருஉ. அழித்தான்:- சடாயு.

வேதித்தார் புரமூன்றும் வெங்கணையால் வெந்தவியச்
சாதித்த வில்லாளி கண்ணாளன் சாருமிடம்
ஆதித்தன் மகனென்ன வகன்ஞாலத் தவரோடும்
போதித்த சடாயென்பான் புள்ளிருக்கு வேளூரே. 9

கடுத்துவருங் கங்கைதனைக் கமழ்சடையொன் றாடாமே
தடுத்தவரெம் பெருமானார் தாமினிதா யுறையுமிடம்
விடைத்துவரு மிலங்கைக்கோன் மலங்கச்சென் றிராமற்காப்
புடைத்தவனைப் பொருதழித்தான் புள்ளிருக்கு வேளூரே. 10

---

9. வேதித்தார் - பேதித்தவர், பகைவர். சாதித்த-கொன்ற. வில்லாளி - (மேரு) வில்லை ஆள்பவன். கண்ஆளன் - ஞானக் கண்ணையிருந்து எல்லாவுயிர்களையும் ஆள்பவன், அடையாதார்க் குச் செய்யும் மறக்கருணையின்வேறாய், அடைந்தார்க்கு நல்கும் அறக்கருணையைக் காட்டுங் கண்ணை ஆள்பவன் எனலும் பொருந்தும். ஆதித்தன் - சூரியன். இதிற் குறித்த வரலாறு:- சூரியனுக்குச் சம்பாதி சடாயு இருவரும் மக்கள் என்றும், ஞாயிற்று மண்டலம் வரை பறந்து சென்று சிறகுகள் கரிந்து தலத்தில் வீழ்ந்து வழிபட்டுச் சிறகும் வரமும் பெற்றன ரென்றும் புராணம் உள்ளது. அகல் - அகலிய, பரந்த. ஞாலத் தவர் - உலகத்தவர்.

10. கடு - கோபித்து. சடைமேல் கங்கையைத் தடுத்தவர். ஒன்று - சிறிதும். ஆடாமே - முழுகாமல். விடைத்து - சீறி, வேறுபடுத்து. மலங்க - அலைய. இராமற்கு - இராமபிரானுக்கு புடைத்து - அடித்து, அலைத்து. அவனை - அவ்விராவணனை. பொருது - அழித்து. அழித்தான் : சடாயு. அழிக்கப்பட்டது வலி (கம்பர். சடாயுவுயிர்நீத்த 118). அவனைப் புடைத்து அழித்தான் என்று கூட்டுக.

"எறிந்தான் அதுநோக்கி இராவணன் நெஞ்சின் ஆற்றல்
அறிந்தான் முனிந்து ஆண்டதோர் ஆடகத்தண்டு வாங்கிப்
பொறிந்தாங் கெரியின் சிகை பொங்கியெழப் புடைத்தான்
மறிந்தான் எருவைக்கிறை மால்வரை போல மண்மேல்".

(பா. 121). என்றதை நோக்கிப், புடைத்தவன் என்று கொண்டே இராவணன் என்று கூறலும் நன்றாகும்.

செடியாய வுடறீர்ப்பான் தீவினைக்கோர் மருந்தாவான்
பொடியாடிக் கடிமைசெய்த புள்ளிருக்கு வேளூரைக்
கடியார்ந்த பொழிற்காழிக் கவுணியன்சம் பந்தன்சொல்
மடியாது சொல்லவல்லார்க் கில்லையா மறுபிறப்பே. 11

திருச்சிற்றம்பலம்

---

*11. செடி - குணமில்லாமை. ஆய - ஆகிய. உடல் தீர்ப்பான் - பிறப்பில்லாமலருள்பவன். 'தீவினைக்கு ஓர்மருந்து ஆவான்' 'வரும் பிறவி நோய் தீர்ப்பான்காண் வானவர்க்கும் தானவர்க்கும் மண்ணுளோர்க்கும்' (6, 64, 4) 'உள்ளம் உள்கி உகந்து சிவன் என்று மெள்ள உள்க வினை கெடும் மெய்ம்மையே' (5. 79. 8 - 9) 'மந்திரமும் தந்திரமும் மருந்துமாகித் தீராநோய் தீர்த்தருள வல்லான்' (6. 54. 8). இத்தலத்தில் நோய் நீங்கும் பொருட்டு மக்கள் திரள் திரளாக வந்து வழிபடுதலை இன்றும் காணலாம். பொடியாடிக்கு - திருநீற்றில் மூழ்கிய சிவபிரானுக்கு. அடிமை - அடித்தொண்டு. கடி - மணம், காவல். மடியாது - சோம்பியிராமல், வாளாபிறந்திறவாது எனலுமாம். இத்தலத்தை வழிபட்டவர்க்கு மேற்கூறியவாறு, தீராத பிறவி நோயையும் தீர்த்தருள்வான் சர்வலோகங் கட்கும் ஏகவைத்திய னை நாதன் என்னும் உண்மையை விளக்க 'இல்லையாம் மறுபிறப்பே' என்றருளினர். இத்திருப்பதிகத்தை மட்டும் நாடோறும் பாராயணஞ்செய்வோர்க்குப் பிறவிஒழியும்என்பது உறுதி.*

---

பொன்னார் மதில்சூழ் புகலிக் கரசை
அருகர்தங்கள்
தென்னாட் டரண் அட்ட சிங்கத் தினைஎஞ்
சிவன் இவனென்
றந்நாள் குழலைத் திருவாய் மொழிகள்
அருளிச்செய்த
என்னனை யைப்பணி வார்க்கில்லை காண்க
யமாலயமே.

—அந்தாதி 43

# 44 திருவாமாத்தூர்

## 180 பதிகவரலாறு

திருவதிகை வீரட்டத்தை வழிபட்ட திருஞானசம்பந்தப் பெருமானுர் திருவாமாத்தூர் அணைந்து பாடியவற்றுள் இத் திருப்பதிகமும் ஒன்று.

### பண் - சீகாமரம்

### திருச்சிற்றம்பலம்

துன்னம்பெய் கோவணமுந் தோலு முடையாடை
பின்னஞ் சடைமேலோர் பிள்ளை மதிசூடி
அன்னஞ்சேர் தண்கான லாமாத்தூ ரம்மான்றன்
பொன்னங் கழல்பரவாப் பொக்கமும் பொக்கமே. 1

கைம்மாவின் றோல்போர்த்த காபாலி வானுலகில்
மும்மா மதிலெய்தான் முக்கணன் பேர்பாடி
அம்மா மலர்ச்சோலை யாமாத்தூ ரம்மானெம்
பெம்மானென் றேத்தாதார் பேயரிற் பேயரே. 2

---

1. துன்னம் - தைத்தல். பெய் - செறிந்த, இட்ட. பெய்கோவணம்; வினைத்தொகை. பின் - பின்னிய. அம் - அழகிய. பொக்கம் - பொலிவு. பொலிவும் ஓரு பொலிவோ? பொலிவு அன்று என்க' பா. 5. 9. 10. பார்க்க.

2. கைம்மா - துதிக்கையையுடைய யானை. மும்மாமதில் - மூன்று பெரிய புரம். பேர் - திருநாமம். அம்மான், பெம்மான் என்பவை. அருமகன் பெருமகன் என்பவற்றின் மரூஉ. கோமகன் என்பது கோமான் என்று மருவியதுபோல, (பா. 81) ஏத்தாதார் - (உயர்த்துப்) புகழாதார். பேயரிற் பேயர் - கடவுளைப்புகழ்ந்து போற்றி வழிபடாதவர் மக்கள் வடிவினரா யினும் பேயரே என்பது பெரியோர் முடிவு. 'நாயேன்பல நாளும் நினைப்பின்றி மனத்துன்னைப் பேயாய்த்திரிந்தெய்த் தேன்' என்பது நம்பியாரூரர் திருவாக்கு. 'வையத்தலகை' என்ருர் நாத்திகரை வள்ளுவர்.

பாம்பரைச் சாத்தியோர் பண்டரங்கன் விண்டதோர்
தேம்ப விளமதியஞ் சூடிய் சென்னியான்
ஆம்பலம் பூம்பொய்கை யாமாத்தூ ரம்மான்றன்
சாழ்ப லகலத்தார் சார்பல்லாற் சார்பிலமே. 3

கோணுகப் பேரல்குற் கோல்வளைக்கை மாதராள்
பூணுகம் பாகமாப் புல்கி யவளோடும்
ஆணுகங் காதல்செ யாமாத்தூ ரம்மானைக்
காணுத கண்ணெல்லாங் காணுத கண்களே. 4

பாட னெறிநின்றுன் பைங்கொன்றைத் தண்டாரே
சூட னெறிநின்றுன் சூலஞ்சேர் கையினன்
ஆட னெறிநின்று ஞமாத்தூ ரம்மான்றன்
வேட நெறிநில்லா வேடமும் வேடமே. 5

---

**3.** அரை - இடுப்பில். பண்டரங்கன் - பாண்டரங்கம் என்னும் திருக்கூத்தை ஆடியவன். விண்டது - பிளந்தது. தேம்பல் - மெலிதல், வாடுதல். 'மதிப்பிளவு' 'தேய்பிறை' என்னும் வழக்குணர்க. சென்னியான் - தலையன். சாம்பல் - திருநீறு. அகலத்தார் - மார்பினர் (அடியார்) திருஞானசம்பந்தர்க்குச் சிவனடியாரிணக்கத்திலுள்ள பேரன்பும் உறுதியும் விளங்கும். 'நக்கனுரவர் சார்வலானல்கு சார்விலோம் நாங்களே' 'சைவனுரவர் சார்வலால் யாதுஞ்சார்விலோம் நாங்களே' *(213 : 849)* 'சாதுக்கண் மிக்கீர் இறையே வந்து சார்மின்களே' *(3. 54, 5)* 'கங்கைதரித்தானைச் சாராதார் சார்வென்னே' *(7. 872)* 'சிவபெருமான் திருவடியே சேரப்பெற்றேரும்' *(6. 98. 5).*

**4.** கோலி - வலிமை. கொலையுமாம். நாகம் - பாம்பு 'பையரவல்குல்'. கோல் - திரட்சி. ஆகம் - உடம்பு, மார்புமாம். புல்கி - தழுவி, புல்கியவள் என்றுமாம். ஆண் ஆகம் - ஆணுடம்பு. ஆள் நாகம் - ஆளுகின்ற (மலை போன்ற) கொங்கை எனலுமாம். நாகம் - உவமையாகுபெயர். காணுத கண்களே - குருட்டுக் கண்களே.

**5.** பாடல் நெறி - பாடுதலாகிய வழியில். சூடுதல் - அணிதல். வேட நெறி - உணர்ந்தறிந்தோர்க்கு உய்வேட

சாமவரை வில்லாகச் சந்தித்த வெங்கணையால்
காவன் மதிலெய்தான் கண்ணுடை நெற்றியான்
யாவருஞ் சென்றேத்து மாமாத்தூ ரம்மானைத்
தேவர் தலைவணங்குந் தேவர்க்குந் தேவனே. 6

மாருத வெங்கூற்றை மாற்றி மலைமகளை
வேருக நில்லாத வேடமே காட்டினன்
ஆருத தீயாடி யாமாத்தூ ரம்மானைக்
கூருத நாவெல்லாங் கூருத நாக்களே. 7

தாளா லரக்கன்றோள் சாய்த்த தலைமகன்றன்
நாளா திரையென்றே நம்பன்ற னாமத்தால்
ஆளானார் சென்றேத்து மாமாத்தூ ரம்மானைக்
கேளாச் செவியெல்லாங் கேளாச் செவிகளே. 8

---

மாகும்படி பயன் செய்யும் மெய்வேடமார்க்கம். (திருமந்திரம் - 1660). வேடமும் - மெய் வேடம் போலவே பூண்ட பொய் வேடமும், வேடமே, ஒரு வேடமாக மதிக்கப்படுமோ? படாது. 'வேடநெறி நில்லார் வேடம் பூண்டு என்ன பயன்?' (திருமந்திரம் 240) சிவவேடமே மெய்ப்பொருள் எனத் தொழுது கொண்டொழுகுதலே வேட நெறி, 'மாலறநேய மலிந்தவர் வேடமும்.........அரன்' என்பது சிவஞானபோதம். (சூ. 12.)

6. சாமவரை என்பது மதில்; திரிபுரம். யாவரும் - சாவாதவர், பிறவாதவர், தவமே மிக உடையார் மூவாதபல் முனிவர் எல்லாரும். (1. 12. 6) அகரச்சுட்டு - உலகறிசுட்டு. பண்டறிசுட்டுமாம். தேவர் தலைவணங்குந் தேவர் - இந்திரன், பிரமன், மால் முதலியோர். தேவர்க்கும் தேவன் - தேவ தேவேசனாகிய சிவபிரான். 'தேவர்கோ அறியாத தேவதேவன் செழும் பொழில்கள் பயந்து காத்தழிக்கும் மற்றை மூவர் கோனாய் நின்ற முதல்வன்' (திருவாசகம்.) அம்மான் - தேவனே என்று முடிக்க.

7. மாருத கூற்றைமாற்றி - ஒழியாத இயமனை ஒழித்து. மலைமகள் - இமாசல குமாரி (அம்பிகை). வேருக நில்லாத வேடம் - அர்த்தநாரீசுவரவடிவம். ஆருத - தணியாத. கூருத - புகழ்ந்து வாழ்த்தாத. கூருத நாக்களே:- ஊமைகளே என்றபடி.

8. தாள் - திருவடி. தலைமகன் - கோமகன். (பா. 2.) நாள் ஆதிரை - திருவாதிரை நாள். நம்பன் - விருப்பிற்

புள்ளுங் கமலமுங் கைக்கொண்டார் தாமிருவர்
உள்ளு மவன்பெருமை யொப்பளக்குந் தன்மையதே
அள்ளல் விளைகழனி யாமாத்தூ ரம்மானெம்
வள்ளல் கழல்பரவா வாழ்க்கையும் வாழ்க்கையே. 9

பிச்சை பிறர்பெய்யப் பின்சாரக் கோசாரக்
கொச்சை புலானாற வீருரிவை போர்த்துகந்தான்
அச்சந்தன் மாதேவிக் கீந்தான்ற ணுமாத்தூர்
நிச்ச நினையாதார் நெஞ்சமு நெஞ்சமே. 10

---

குரியவன் (சிவன்). ஆள் - அடிமை. நாமத்தால் - திருவைந் தெழுத்தால்; திருப்பெயர்களாலுமாம். நாமத்தால் ஏத்தும் ஊர் என்க. கேளாச்செவிகளே - செவிட்டுக்காதுகளே என்றபடி. கேளாமை - சிவபுராணம், சிவகீர்த்தி, சிவநாமம் முதலியவற்றைக் கேட்டல் இல்லாமை.

9. புள் - கருடப் பறவை. கமலம் - தாமரை. கைக்கொண்டார் - ஊர்தியாக் கொண்டமால், ஆசனமாகக் கொண்ட அயன். உள்ளும் அவன் - தியானிக்கப்படும் அப்பரமசிவனது. ஒப்பு அளக்கும் தன்மையதே - ஒப்பாக அளவிடப்பெறும் தன்மையை உடையதோ! இல்லை என்றபடி. அள்ளல் - சேறு. வள்ளல் :— எல்லாம் அருளும் பரம்பொருளினும் வேறு வள்ளல் உண்டோ?. கழல் - (தானியாகு பெயர்) திருவடி. பரவா - வாழ்த்தாத. வாழ்க்கையோ - ஒரு வாழ்வா (மதிக்கப்படு)மோ? வாழ்வன்று என்றபடி.

10. கோ-தலைமை. சார-(தன்னையே) பொருந்த. கொச்சை- இகழ்வு. உரிவை தோல் - யானைத்தோல் போர்த்தும். மாயா திருத்தல்பற்றிக் 'கோசார' என்றார். (சிந்தாமணி. 2787 உரை பார்க்க). 'யானையின் பசுந்தோல் பிறர் உடம்பிற்பட்டால் கொல்லும் என்றுணர்க' என்றார் நச்சினார்க்கினியர், பின்சாரப் போர்த்துகந்தான், கோசாரப்போர்த்துகந்தான் என்றியைத்துப் பொருள் உணர்க. 'கோசாரங்' என்று பாடபேதம் உண்டு என்று காட்டியுள்ளார் மதுரை ஞானசம்பந்தப்பிள்ளை. கோ - மலை. யானைக்கு உவமையாகு பெயராக்கொண்டு, யானை சார எனவும் பொருந்தும். தன் மாதேவிக்கு அச்சம் ஈந்தான் என்றது யானையை உரித்த வரலாறு பற்றியது. (1. 75. 7. பார்க்க) 'மலைக்கு மகள் அஞ்ச மதகரியை உரித்தீர்' (7. 9 1.).

ஆட லரவசைத்த வாமாத்து ரம்மானைக்
கோட லிரும்புறவிற் கொச்சை வயத்தலைவன்
நாட லரியசீர் ஞானசம் பந்தன்றன்
பாட லிவைவல்லார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. ஆடல் அரவம் - படம் விரித்து ஆடுதலையுடைய பாம்பு. அசைத்த - கச்சாகக்கட்டிய. கோடல் - வெண்காந்தள். இரும்புறவு - பெரியகாடு. முல்லை நிலம். புறவு, கொச்சை வயம் காழியின் வேறு பெயர்கள். பாவம் இல்லை ஆகும் என்க.

---

மாலையொப் பாகும் பிறைமுன்பு நின்று
மணிகுறுக்கி
வேலையைப் பாடணைந் தாங்கெழில் மன்மதன்
விற்குனித்த
கோலைப் போதும் பிடிப்பன் வடுப்படு
கொக்கினஞ்சூழ்
சோலையைக் காழித் தலைவன் மலர்இன்று
சூடிடினே. —அந்தாதி 44

சூடுநற் றூர்த்தமி ழாகரன் தன்பொற்
சுடர்வரைத்தோள்
கூடுதற் கேசற்ற கொம்பினை நீயுங்
கொடும்பகைநின்(று)
ஆடுதற் கேயத் தனைக்குனை யேநின்னை
ஆடரவம்
வாடிடக் காரும் மறுவும் படுகின்ற
வாண்மதியே. —அந்தாதி 45

# 45 திருக்கைச்சினம்

## *181 பதிகவரலாறு*

*சண்பைநகர் வேந்தர் சொல்வேந்தரொடு திருவாஞ்சியத்தில் திருநீலகண்டப் பெருமானை வணங்கினர். தலையாலங்காடு முதலிய தலங்களையும் பணிந்தனர். திருவாரூர் சென்றனர். திருக்காருயில், தேவூர், திருநெல்லிக்கா என்னும் தலங்களை வழிபட்டுத் திருக்கைச்சினத்தைப் பரவிப் பாடிய திருப்பதிகம்.*

பண் - சீகாமரம்

*திருச்சிற்றம்பலம்*

தையலோர் கூறுடையான் றண்மதிசேர் செஞ்சடையான்
மையுலா மணிமிடற்ருன் மறைவிளங்கு பாடலான்
நெய்யுலா மூவிலைவே லேந்தி நிவந்தொளிசேர்
கையுடையான் மேவியுறை கோயில் கைச்சினமே. 1

விடமல்கு கண்டத்தான் வெள்வளையோர் கூறுடையான்
படமல்கு பாம்பரையான் பற்ருதார் புரமெரித்தான்
நடமல்கு மாடலினு ளன்மறையோர் பாடலினன்
கடமல்கு மா வுரியா னுறைகோயில் கைச்சினமே. 2

---

*1. தையல் - உமாதேவியார். கூறு - இடப்பாகம். மை - மேகம். உலாம் - ஒத்த. நிவந்து - மேலோங்கி. ஒளி - தீ. கைச்சினம் - இந்திரனது கைச்சின்னம் (குறி). சிவபிரான் திருமேனியில் பட்டது பற்றிய காரணப்பெயர். 1. 2. 3. 6. ஆம் பாடல்களில் உணர்த்திய மறைப்பாடல் இத்தலத்தின் விசேடமாதலறியலாம்.*

*2. விடம் - நஞ்சு. மல்கு - நிறைந்த. கண்டத்தான் - கழுத்தினன். பற்ருதார் - பகைவர். (தாரகாட்சன் முதலிய மூவர்). நடம் - தாண்டவத்தின் வகை. ஆடல் - ஆடுதல். 'நள்ளிருளில் நட்டம் பயின்ருடும் நாதன்' (திருவாசகம்). கடம் - மதநீர்; காடுமாம். உரியான் - தோலுடையான்.*

பாடலார் நான்மறையான் பைங்கொன்றை பாம்பினொடும்
சூடலான் வெண்மதியந் துன்று கரந்தையொடும்
ஆடலா னங்கை யனலேந்தி யாடரவக்
காடலான் மேவியுறை கோயில் கைச்சினமே. 3

பண்டமரர் கூடிக் கடைந்த படுகடனஞ்
சுண்டபிரா னென்றிறைஞ்சி யும்பர் தொழுதேத்த
விண்டவர்க டொன்னகர மூன்றுடனே வெந்தவியக்
கண்டபிரான் மேவியுறை கோயில் கைச்சினமே. 4

தேய்ந்துமலி வெண்பிறையான் செய்ய திரு மேனியினன்
வாய்ந்திலங்கு வெண்ணீற்றன் மாதினையோர் கூறுடையான்
சாய்ந்தமரர் வேண்டத் தடங்கடனஞ் சுண்ட நங்கைக்
காய்ந்தபிரான் மேவியுறை கோயில் கைச்சினமே. 5

மங்கையோர் கூறுடையான் மன்னு மறைபயின்றான்
அங்கையோர் வெண்டலையா னடரவம் பூண்டுகந்தான்
திங்களொடு பாம்பணிந்த சீரார் திருமுடிமேல்
கங்கையினன் மேவியுறை கோயில் கைச்சினமே. 6

---

**3.** சூடல் - சூடுதல். துன்று - நெருங்கிய. கரந்தை - பூ. காடலான் - காட்டினன். 'அரவக்காடலான் - சடைக்காடு தாமரைக்காடு, வெள்ளக்காடு'போல மிகுதியை உணர்த்தியது.

**4.** பண்டு - முன்பு. அமரர் - தேவர். படுகடல் - ஆழ்கடல். விண்டவர்கள் தொல்நகரம் - பகைவர்களின் பழைய திரிபுரம்.

**5.** தேய்ந்து மலி - குறைந்து வளரும். திங்களுக்கு இயல்பு அடைமொழி. இது சிவபெருமான் திருமுடிமேற் பிறைக்கு அன்று. இலங்கு - விளங்கும். மாது - உமாதேவியார். சாய்ந்து - மெலிந்து, ஓடியெனலுமாம். அநங்கை - அநங்கனை. உருவிலியாகிய மன்மதனை, 'பெருந்திறத்து அநங்கனை அநங்கமா விழித்ததும் பெருமைபோலும்'' (349-9) 'மாய்ந்தன தீவினை... அநங்கைக் காய்ந்தபிரான் கண்டியூர் எம்பிரான்' (4-93-9). அநங்கனை என்பது அநங்கை எனக் குறைந்ததுபோலும்.

**6.** அங்கையோர் வெண்டலையான் - பிரமகபாலத்தை ஏந்திய கையன். பூண்ட அரவம் - அணிந்த பாம்பு. முறையே திருமேனியிலும் திருமுடியிலும் இருத்தல்பற்றி ஆதலின் கூறியது கூறலன்று. (பதி. 155, பா - 7 பார்க்க).

வரியரவே நாணுக மால்வரையே வில்லாக
எரிகணையான் முப்புரங்க ளெய்துகந்த வெம்பெருமான்
பொருசுடலை யீமப் புறங்காட்டான் போர்த்ததோர்
கரியுரியான் மேவியுறை கோயில் கைச்சினமே. 7

போதுலவு கொன்றை புனைந்தான் றிருமுடிமேல்
மாதுமையா ளஞ்ச மலையெடுத்த வாளரக்கன்
நீதியினு லேத்த நிகழ்வித்து நின்ருடும்
காதலினுன் மேவியுறை கோயில் கைச்சினமே. 8

மண்ணினைமுன் சென்றிரந்த மாலு மலரவனும்
எண்ணறியா வண்ண மெரியுருவ மாயபிரான்
பண்ணிசையா லேத்தப் படுவான்றன் னெற்றியின்மேல்
கண்ணுடையான் மேவியுறை கோயில் கைச்சினமே. 9

* * * * 10

---

7. வரி அரவு - வாசுகியென்னும் பாம்பு. நாண் - வில்லின் நாண் (கயிறு). மால்வரை - பெரிய மேருமலை. எரி கணை - அக்கினியை நுனியிலுடைய பாணம். சுடலை - சுடுதலைக் கொண்ட. ஈமப்புறங்காடு - புறத்தேயுள்ள ஈமக்காடு. கரி உரி - யானைத்தோல். போது:- மலரும் பருவத்தது. நீதியினுல் ஏத்த - முறைப்படித் துதிக்க.

8. திருமுடிமேல் கொன்றை மாலையை அணிந்தான். முடி போதுகள் பொருந்திய கொன்றை. உலவு கொன்றை - வினைத் தொகை. உமையாள் அஞ்ச மலையை எடுத்தான் அரக்கன். நிகழ்வித்து - (பண்டுபோல்) விளங்கச்செய்து. புனைந்தானும் காதலினுனும் ஆகிய சிவபெருமான் கைச்சினம் என்றியைக்க.

9. இரந்த - மாவலியினிடத்து யாசித்த. எண் - எண்ணும். பண்ணிசையால் ஏத்தப்படுவான், 'ஏழிசையாய் இசைப் பயனுய்' விளங்குதல்பற்றியது.

தண்வயல்சூழ் காழித் தமிழ்ஞான சம்பந்தன்
கண்ணுதலான் மேவியுறை கோயில் கைச்சினத்தைப்
பண்ணிசையா லேத்திப் பயின்ற விவைவல்லார்
விண்ணவரா யோங்கி வியனுலக மாள்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. பண்ணிசையால் ஏத்திப் பயின்ற இவை என்றதால், ஆசிரியருடைய இசை உணர்வின் மிகுதியையும் இப்பதிகத்தைப் பலமுறைப்பாடி மகிழ்ந்ததையும் உணரலாகும். வியனுலகம் - சொர்க்கம், வீடுமாம். வியல் (வியன்) - அகலம்.

---

மதிக்கத் தகுநுதல் மாதொடும் எங்கள்
மலையில்வைகித்
துதிக்கத் தகுசண்பை நாதன் சுருதி
கடந்துழவோர்
மிதிக்கக் கமல முகிழ்த்ததண் தேனுண்டு
மிண்டிவரால்
குதிக்கக் குருகிரி யுங்கொச்சை நாடு
குறுகுமினே. —அந்தாதி 46

குறுமன முள்கல வாத்தமி ழாகரன்
கொச்சையன்ன
நறுமலர் மென்குழ லாய்அஞ்சல் எம்மூர்
நகுமதிசென்(று)
உறுமனை யொண்சுவர் ஓவியக் கிள்ளைக்கு
நும்பதியிற்
சிறுமிகள் சென்றிருந் தங்கையை நீட்டுவர்
சேயிழையே. —அந்தாதி 47

# 46 திருநாலூர்மயானம்

## *182 பதிகவரலாறு*

*'செம்பொன்மலை வல்லியார் அருள்ஞானப்பாலுண்ட' சம்பந்தப்பெருமான் திரு அரதைப் பெரும்பாழிமுதலாகிய திருத்தலம் பல அடைந்து வழிபட்ட பின்னர்த் திருநாலூர் மயானம் அடைந்து நயந்து இறைஞ்சிப்பாடிய நீடுதமிழ்த் தொடை இது.*

### பண் - சீகாமரம்

*திருச்சிற்றம்பலம்*

பாலூரு மலைப்பாம்பும் பனிமதியு மத்தமும்
மேலூருஞ் செஞ்சடையான் வெண்ணூல்சேர் மார்பினன்
நாலூர் மயானத்து நம்பான்ற னடிநினைந்து
மாலூருஞ் சிந்தையர்பால் வந்தூரா மறுபிறப்பே. 1

சூடும் பிறைச்சென்னிச் சூழ்கா டிடமாக
ஆடும் பறைசங் கொலியோ டழகாக
நாடுஞ் சிறப்போவா நாலூர் மயானத்தைப்
பாடுஞ் சிறப்போர்பாற் பற்றாவாம் பாவமே. 2

---

*1. பால் - பக்கத்தில். ஊரும் - ஊர்ந்து செல்லும். மத்தம் - ஊமத்தை. நம்பான் - சிவன். மால் - அன்பு சிவபத்தி, (191 : 6) 'மாலுங்காட்டி வழிகாட்டி வாராவுலக நெறியேறக் கோலங்காட்டியாண்டான்' (திருவாசகம் ஆநந்த மாலை. 3) 'மால்கொடுத்து ஆவிவைத்தார் மாமறைக் காடனாரே' (4. 33. 4.) 'மாலொடுந் தொழுவார்வினைவாடுமே' (5. 34. 9) 'என்னிடைமாலும் உண்டு இறை என்றன் மனத்துளே' (5. 35. 5) மறுபிறப்பு வந்து ஊரா - மறு பிறவிகள் வந்து பரவாவாம். ஊரா - செலுத்தா எனலுமாம்.*

*2. அழகாக ஆடும் என்க. ஓவா - ஒழியாத. சிறப்போர் பால் - சிறப்புடையோரிடத்தில். பாவம் பற்றாவாம் - பாவங்கள் பற்றமாட்டாதொழிவனவாம்.*

கல்லா னிழன்மேவிக் காமுறுசீர் நால்வர்க்கன்
றெல்லா வறனுரையு மின்னருளால் சொல்லினுன்
நல்லார் தொழுதேத்து நாலூர் மயானத்தைச்
சொல்லா தவரெல்லாஞ் செல்லாதார் தொன்னெறிக்கே. 3

கோலத்தார் கொன்றையான் கொல்புலித்தோ லாடையான்
நீலத்தார் கண்டத்தா னெற்றியோர் கண்ணினுன்
ஞாலத்தார் சென்றேத்து நாலூர் மயானத்தில்
சூலத்தா னென்பார்பாற் சூழாவாந் தொல்வினையே. 4

கறையார் மணிமிடற்றன் காபாலி கட்டங்கன்
பிறையார் வளர்சடையான் பெண்பாக னண்பாய
நறையார் பொழில்புடைசூழ் நாலூர் மயானத்தெம்
இறையானென் றேத்துவார்க் கெய்துமா மின்பமே. 5

கண்ணார் நுதலான் கனலா டிடமாகப்
பண்ணார் மறைபாடி யாடும் பரஞ்சோதி.
நண்ணார் புரமெய்தா னூலூர் மயானத்தை
நண்ணா தவரெல்லா நண்ணாதார் நன்னெறியே. 6

---

3. காம் உறு - காமம் (அன்பு) உற்ற. எல்லா அறன் உரையும் - சகல தர்மோபதேசங்களும். சொல்லாதவர் - துதிக்காதவர். தொல்நெறி - அநாதியான சைவமார்க்கம்.

4. கோலத்து ஆர் - அழகால் நிறைந்த. நீலத்து ஆர் - நீலத்தைப் பொருந்திய. தொல்வினை - சஞ்சிதம். வினை சூழாவாம் என்க.

5. கறை - விஷக்கறை. மணி - நீலமணியை ஒக்கும். மிடறு - திருக்கழுத்து. கட்டங்கன் - மழுவேந்தியவர். பெண் பாகன் - மங்கைபங்கன். 'ஏழைபங்காளன்' (திருவெம்பாவை) நறை - தேன். இறையான் - இறைவன். இன்பம் எய்துமா மென்க.

6. ஆடு இடம் கனல் ஆக - ஆடுகின்ற இடம் நெருப்பாக. 'தீயாடி,' அனலாடி; இறைவன் ஆடலுக்குப் பாடல் பண்ணார் மறை. நண்ணார் - பகைவர். நண்ணாதவர் - அடையாதவர், அணுகாதவர். நன்னெறி - சரியை கிரியை யோகமென்னும் அழிவில்லாததவத்தால்வரும் ஞானம். (சிவஞான - சூ -8- உரை).

கண்பாவு வேகத்தாற் காமனைமுன் காய்ந்துகந்தான்
பெண்பாவு பாகத்தா னாகத்தோ லாகத்தான்
நண்பார் குணத்தோர்க ணாலூர் மயானத்தை
எண்பாவு சிந்தையார்க் கேலா விடர்தானே. 7

பத்துத் தலையோனைப் பாதத் தொருவிரலால்
வைத்து மலையடர்த்து வாளோடு நாள் கொடுத்தான்
நத்தி னொலியோவா நாலூர் மயானத்தென்
அத்த னடிநினைவார்க் கல்ல லடையாவே. 8

மாலோடு நான்முகனு நேட வளரெரியாய்
மேலோடு கீழ்காணா மேன்மையான் வேதங்கள்
நாலோடு மாறங்க நாலூர் மயானத்தெம்
பாலோடு நெய்யாடி பாதம் பணிவோமே. 9

துன்பாய மாசார் துவராய போர்வையார்
புன்பேச்சுக் கேளாதே புண்ணியனை நண்ணுமின்கள்
நண்பாற் சிவாயவெனா நாலூர் மயானத்தே
இன்பா யிருந்தானை யேத்துவார்க் கின்பமே. 10

---

7. பாவுதல் - பரவுதல். நாகம் - யானை. நண் - (நள்) நண்ணுதல், நள்ளுதலுமாகும். எண் - தியானம். இடர் ஏலா.

8. வாளோடு நாள் - வாளும், ஆயுளும். நத்து - சங்கு. அத்தன் - பிதா. அத்தன் - அத்தை. ஆத்தன் - ஆத்தான் என்பவை தந்தை தாயரைக் குறித்த பழைய வழக்கு. "ஆத்தானை அடியேன் தனக்கு என்றும்" (சுந்தரர். 7 - 680) 'அத்தை' என்பது தாயைக் குறித்து இன்னும் வழங்குகிறது. அல்லல் - துன்பங்கள்.

9. நேட - தேட. நாலுவேதம் ஆறு அங்கம். பாலோடு நெய் - பாலும் நெய்யும்.

10. துன்பு ஆய - துன்பமாகிய. மாசு - அழுக்கு. ஆர் - நிறைந்த. துவர் ஆய - பழுப்பாகிய. புன் பேச்சு - பொருளின்மையால் புல்லிய பிதற்றுரைகள். புண்ணியனை - சிவபுண்ணிய சொரூபனை, "புண்ணியனைப் பூசித்த புண்ணியத்தினாலே'

ஞாலம் புகழ்காழி ஞானசம் பந்தன்றுன்
நாலு மறையோது நாலூர் மயானத்தைச்
சீலம் புகழாற் சிறந்தேத்த வல்லாருக்
கேலும் புகழ்வானத் தின்பா யிருப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

(சிவஞானசித்தியார். சூ-8) நண்பு - செறிவு. யோகம் - நட்பும் ஆம். இதிற்குறித்த திருவைங்தெழுத்து அதிசூக்கும (காரண) பஞ்சாட்சரம். "விண்ணினுர் பணிந்தேத்த வியப்புறும், மண்ணினுர் மறவாது சிவாய வென்று, எண்ணினுர்க்கு இடமா எழில்வானகம், பண்ணினுவர் பாலைத்துறையரே" (5-51-6) இன்பு - பேரின்பம்.

11. ஞாலம் - உலகம். சீலம் - சிவபெருமானுடைய சீலத்தை, ஒழுக்கத்தாலும் புகழாலும் எனலும் பொருந்தும். ஏலும் - இயலும். ஏற்குமெனலுமாம்.

---

இழைவளர் ஆகத்து ஞானசம் பந்தன்
இருஞ்சுருதிக்
கழைவளர் குன்று கடத்தலுங் காண்பீர்
கடைசியர்நீள்
முழைவளர் நண்டு படத்தடஞ் சாலிமுத்
துக்கிளைக்கும்
மழைவளர் நீள்குடு மிப்பொழில் சூழ்ந்த
வளவயலே. —அந்தாதி 48

வயலார் மருகற் பதிதன்னில் வாளர
வாற்கடியுண்
டயலா விழுந்த அவனுக் கிரங்கி
அறிவழிந்த
கயலார் கருங்கண்ணி தன் துயர் தீர்த்த
கருணைவெள்ளப்
புயலார் தருகையி னுன்என்னத் தோன்றிடும்
புண்ணியமே. —அந்தாதி 49

திருமயிலாப்பூர்க் கபாலீச்சரத்தின் புறத்தில்



'புகலி வேந்தர் ஆயிர முகத்தால் கண்ட
கண்ணுதல் கருணை வெள்ளம்'

# 47 திருமயிலாப்பூர்

## 183 பதிகவரலாறு

திருவொற்றியூரை வழிபட்டு மயிலாபுரித் திருநகரை அணைந்து, கபாலீச்சரத்தமுதைப் பரவிப்போற்றிய திருஞான சம்பந்தர், 'சித்தம் இன்புறு சிவநேசர்'பால் திருவருள் செலுத்தி, 'திருமதிற் புறவாய்தலிற் கொண்டுவரச் செய்து மங்கையென்புசேர் குடத்தினை வைத்து வணங்க' நோக்கி, மண்ணோரும் விண்ணோரும் காணப், 'பூம்பாவை பேர்செப்பி', 'மண்ணினிற் பிறந்தார் பெறும் உண்மைப்பயன்' உணர்த்தி, இறைவனை உலகவர்முன் 'வருக' என்று உரைத்து, 'மட்டிட்ட' எனத் தொடங்கும் இந்நற்பதிகத்தைப் பாடினார். அக்குடத்துள் இருந்த எலும்பு பெண்ணுருவாயிற்று. ஆதலின், இத்திருப்பதிகம்'பூம்பாவைப்பாட்டு'எனப்பெற்றது.

பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

மட்டிட்ட புன்னையங் கானன் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சரமமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பி னுருத்திர பல்கணத்தார்க்
கட்டிட்டல் காணுதே போதியோ பூம்பாவாய். 1

---

1. மட்டு - கள். கானல் - கடற்கரைச்சோலை. மடமயிலைக் கட்டு - இளமயில்கள் ஆர்ப்பு மிக்க ஊரில் உள்ள திருக்கோயில். மயிலார்ப்பூர் என்பதன் மருஉ மயிலாப்பூர். இட்டம் - திருவுள்ளத்தன்பு.(இஷ்டம்)ஊர் மயிலை, மயிலாப்பூர், கோயில் கபாலீச்சரம். ஒட்டிட்டபண்பு - அத்துவிதக் கலப்பு. 'உணரப் படுவாரோடு ஒட்டிவாழ்தி' 'ஒட்டியவனுளமாகில்லான்'. உருத்திரபல்கணத்தார் - மாகேசுரர்; அடியவர். மதிசூடும் அண்ணலாரடியார் தமை அமுது செய்வித்தல் + கண்ணினால் அவர் 'நல்விழாப்பொலிவு கண்டார்தல்'. அட்டு-திருவமுது அமைத்து. இட்டல் - இடுதல். (நட்டல் - நடுதல் போல). இதிற் குறித்த

மைப்பயந்த வொண்கண் மடநல்லார் மாமயிலைக்
கைப்பயந்த நீற்றான் கபாலீச் சரமமர்ந்தான்
ஐப்பசி யோண விழாவு மருந்தவர்கள்
துய்ப்பனவுங் காணாதே போதியோ பூம்பாவாய். 2

வளைக்கை மடநல்லார் மாமயிலை வண்மறுகில்
துளக்கில் கபாலீச் சரத்தான்றொல் கார்த்திகைநாள்
தளத்தேந் திளமுலையார் தையலார் கொண்டாடும்
விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய். 3

---

திருவிழா, பூரட்டாதியில் நிகழ்வது. இத் திங்கள் முதலாக ஒவ்வொன்றிலும் நிகழ்த்தும் திருவிழாச் சிறப்பு மேல் வரும் பாக்களிற் குறிக்கப்பட்டமை உணர்க. போதியோ-போவாயோ? வருவாய் என்றவாறு.

2. மை - கண்ணிற்கிடும் மை. கைப்பயந்த நீறு - கைமேற் பயன்தந்த திருநீறு. வழிபடுவார் கையில் அர்ச்சகர் வடிவாயிருந்து கொடுத்த திருநீற்றினன். திருநீறு வடிவாயுள்ளானெனலும் சிறந்ததே, 'கைப்பூசு நீற்றான்.' (பா. 5) ஐப்பசித்திருவோண விழாச் சிறப்பும் அரியதவத்தோர்களாகிய அடியார்கள் திருவமுது செய்த காட்சியும் குறிக்கப்பட்டன. ஓணத்திற் கொடியேற்றம். கிருத்திகையில் தீர்த்தவாரி. தலவரலாறு காண்க. இராமர் வழிபாடு, ஓணம் திருமாலின் நாள்.

3. வளை - வளையல். மறுகு - தெரு. வண்மை - தெருவினர் கொடைவளம். துளக்கு - அசைவு, தளர்வு, வருத்தம். இல் - இல்லாத. இறைவனைக் குறித்தால் வருத்தமில்லாதவன் என்க. கபாலீச்சரத்தைக் குறித்தால் அசைவில்லாத, தளர்வில்லாத என்க. தளத்து - சாந்தினை. கார்த்திகை விளக்கீடு இளமகளிர் கொண்டாடும் திருவிழா. கார்த்திகைத் திருவிளக்கீட்டு விழாவின் தொன்மையைப் பழந்தமிழ் நூல்களிலும் சிவாகம புராணங்களிலும் உணர்க.

ஊர்திரை வேலை யுலாவு முயர்மயிலைக்
கூர்தரு வேல்வல்லார் கொற்றங்கொள் சேரிதனில்
கார்தரு சோலைக் கபாலீச் சரமமர்ந்தான்
ஆர்திரைநாள் காணுதே போதியோ பூம்பாவாய். 4

மைப்பூசு மொண்கண் மடநல்லார் மாமயிலைக்
கைப்பூசு நீற்றுன் கபாலீச் சரமமர்ந்தான்
நெய்ப்பூசு மொண்புழுக்க னேரிழையார் கொண்டாடும்
தைப்பூசங் காணுதே போதியோ பூம்பாவாய். 5

மடலார்ந்த தெங்கின் மயிலையார் மாசிக்
கடலாட்டுக் கண்டான் கபாலீச் சரமமர்ந்தான்
அடலானே றூரு மடிக ளடிபரவி
நடமாடல் காணுதே போதியோ பூம்பாவாய். 6

---

4. ஊர் திரை வேலை - ஊருந்திரையுடைய கடல். ஊர்தல்-மேற்படுதல். பரத்தல். வல்லார்- (நெய்தல் நிலமாக்கள்) வேலால் கடல் மீன்களைக் கொல்லவல்லவர்கள். கொற்றம் - கொன்று அடையும் வெற்றி. கார் - மேகம். ஆர்திரைநாள் - திருவாதிரை என்னும் மீன். எதுகை நோக்கின், 'ஆர்திரை' என்றதே உண்மைப் பாடம் ஆகும். 'ஆர்திரையான், ஆர்திரை யான் என்றென்றயருமால் ஊர்திரை வேலியுலகு' என்னும் முத்தொள்ளாயிர முதற் செய்யுளமைதியை உணர்க. இது மார்கழித்திருவாதிரை விழாச் சிறப்புணர்த்திற்று.

5. 'மைப்பயந்த வொண்கண்'. கைப்பயந்தநீற்றுன். (பா-2) நெய்ப்பூசும் தெண்புழுக்கல் - நெய்யால் மறைக்கப் பட்ட தெள்ளிய சோறு. அடியார், வறியர் முதலோர்க்கு அளிக்கும் தைப்பூச விழாச் சிறப்பு இதில் குறிக்கப்பட்டது.

6, தென்னையின் மடல் நீட்சியுடைமைபற்றி, 'மடல் ஆர்ந்த தெங்கு' எனப்பட்டது. மாசிமகநாளன்று கடலாட்டு விழா நிகழ்ந்தவுண்மை குறிக்கப்பட்டது. அடல் - வலிமை. ஆனேறு - விடை. நடம் ஆடல் - கூத்தாடுதல்; உலாவுதலுமாம். பரவி - வாழ்த்தி, மாசிக் கடலாட்டுச் சிறப்புணர்த்தியது. 'சேயிழையார்நடம்பயி லுந்திருவையாறு'. 'பண்ணினேர் மொழி மங்கைமார் பலர் பாடியாடிய வோசை......பொலியும்.....காழி'. 'பாலினேர் மொழி மங்கைமார் நடமாடிஇன்னிசைபாட'. எனப் பின்வருதல் அறிக. (185 - 186)

மலிவிழா வீதி மட நல்லார் மாமயிலைக்
கலிவிழாக் கண்டான் கபாலீச் சரமமர்ந்தான்
பலிவிழாப் பாடல்செய் பங்குனி யுத்திர நாள்
ஒலிவிழாக் காணுதே போதியோ பூம்பாவாய். 7

தண்ணு வரக்கன்றேள் சாய்த்துகந்த தாளினுன்
கண்ணுர் மயிலைக் கபாலீச் சரமமர்ந்தான்
பண்ணுர் பதினெண் கணங்கடம் மட்டமிநாள்
கண்ணுரக் காணுதே போதியோ பூம்பாவாய். 8

நற்று மரைமலர்மே ஞன்முகனு நாரணனும்
உற்றுங் குணர்கிலா மூர்த்தி திருவடியைக்
கற்றூர்க ளேத்துங் கபாலீச் சரமமர்ந்தான்
பொற்றுப்புக் காணுதே போதியோ பூம்பாவாய். 9

---

7. மலிவிழா வீதி - விழாக்கள் இடையறாது நிகழ விளங்கும்விதி. 'வீதிகள் விழவின் ஆர்ப்பும்'. கலிவிழா - திருவருள் எழுச்சியை விளக்கும் திருக்கோயில் விழாக்கள். முன்னவை- பல்வகைக்களிவிழாக்கள். பலி - உருத்திரபலி; திசைதோறும் இடுவது. ஒலி - விழாவின் ஆரவாரம். பங்குனி உத்திர விழாச் சிறப்புணர்த்திற்று.

8. தண்ணு :- வெம்மையைச் செய்யும் என்ற குறிப்பு. சாய்தல்; தோள்கட்கும் உகத்தல்; (உயர்தல்) தாள்கட்கும் கூறிய திறம் கருதத்தக்கது. இது சித்திரையில் நிகழ்ந்தது எனக்கொள்ள இடனுண்டு. அட்டமிநாள்விழா முற்காலத்தது. இக்காலத்தார் சித்திரைப் பௌர்ணமி கொண்டனர். பதினெண்கணங்களுக்கும் அட்டமிநாள் விழாவிற்கும் உள்ள தொடர்பு புலப்படவிலது.

9. நல்+தாமரை. முற்றுங்கு - முழுதும் உள்ளபடி. இது பட்டாங்கு, நல்லாங்கு, பொல்லாங்கு என்பன போல்வது. கற்றூர்கள் - 'கல்லா நெஞ்சின் நில்லான் ஈசன்' (3. 40. 3) என்று மேல் ஆசிரியர் அருள்வதுணர்க, 'கற்றவர்கள் பணிந்தேத்தும் கழுமலத்துள் ஈசன்' (1. 129. 11) 'கற்றல் கேட்டல்

உரிஞ்சாய வாழ்க்கை யமணுடையைப் போர்க்கும்
இருஞ்சாக் கியர்க ளெடுத்துரைப்ப நாட்டில்
கருஞ்சோலை சூழ்ந்த கபாலீச் சரத்தான்றன்
பெருஞ்சாந்தி காணுதே போதியோ பூம்பாவாய். 10

கானமர் சோலைக் கபாலீச் சரமமர்ந்தான்
தேனமர் பூம்பாவைப் பாட்டாகச் செந்தமிழான்
ஞானசம் பந்த னலம்புகழ்ந்த பத்தும்வல்லார்
வானசம் பந்தத் தவரோடும் வாழ்வாரே. 11

திருச்சிற்றம்பலம்.

---

உடையார்' என்றதால் நிட்டை முடிய உடையாரை உபலட்சணத்தாற் கொள்க. பொன்தாம்பு (பொற்றுப்பு) பொன்னூசல். (நன். 411. சங்கர) தாம்பு - கயிறு. ஊஞ்சலுக்குத் தாம்பு கருவி. தாப்பிசை. வைகாசியில் ஊஞ்சலாடுந் திருவிழாக் குறித்தவாறு. இப்பாட்டில் 'உற்றுங்கு' எனப் பிரித்தது பொருந்தாது.

*10.* உரிஞ்சு ஆயவாழ்க்கை அமண் - உடை ஒழிந்த காரணத்தால் உரிந்தது போன்று ஆகிய திகம்பரவாழ்வுடைய சமணர். உடையைப் போர்க்கும் சாக்கியர் என்றதால், சமணர்க்கு அஃதின்மை குறித்தாரெனல் பொருந்துமாறறிக கருஞ்சோலை - பெரிய சோலை. இருளால்கரிய எனலுமாம். எடுத்து உரைப்ப - (தூற்றுமாறு) கொண்டாட. பெருஞ்சாந்தி - பவித்திரோற்சவம். கும்பாபிடேகம் என்பாருமுளர். ஆண்டுதோறும் கும்பாபிடேகம் புரிவது எளிதன்று. அதற்கீடாகப் பவித்திரோற்சவமே நிகழ்த்துவதுண்டு. இவ்விழா ஆனி முதலிய மூன்று திங்களிலும் நிகழும். நிகழவே ஆண்டுமுழுதும் மயிலைக் கபாலீச்சரத்தில் திருவிழா உண்டு என்றவாறு. பவித்திரோற்சவம் ஆடி முற்பக்கத்துச் சதுர்த்தசியிலும், ஆவணி புரட்டாதிகளில் இருபக்கத்திலும், வரும் எட்டுபன்னிரண்டு நாட்களிலும் பவித்திரம் சார்த்தல் வேண்டும். (சோமசம்புபத்ததி).

*11.* 'தேன் அமர்பூம்பாவைப் பாட்டு' என்பதிலுள்ள பூவிற்குத் 'தேன் அமர்' என்று அடை இயல்பாம். வானசம்பந்தத்தவர் - வீடுபெற்ற வித்தகர்.

# 48 திருவெண்காடு

## 184 பதிகவரலாறு

முத்தமிழ் விரகர் அடியார்சூழத் திருக்கோபுரத்தை வணங்கித் திருக்கோயிலை வலம்வந்து வீழ்ந்து தொழுது மெய்ப்பொருள் ஆயினுரை முக்குளமும் சேர்த்துப் பாடியருளியது சொல்லுதற்கு அரிய இத்திருப்பதிகம்.

### பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

கண்காட்டு நுதலானுங் கனல்காட்டுங் கையானும்
பெண்காட்டு முருவானும் பிறைகாட்டுஞ் சடையானும்
பண்காட்டு மிசையானும் பயிர்காட்டும் புயலானும்
வெண்காட்டி லுறைவானும் விடைகாட்டுங் கொடியானே. 1

பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினே டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவ ரையுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே. 2

---

1. கண்காட்டும் - நெருப்புக்கண்ணைக்காட்டும். இவ்வாறே காட்டும் என்பதற்கு முன்னே இரண்டனுருபு (ஐ) விரித்துக்கொள்க. நுதலான், கையான், உருவான், சடையான், உறைவான் என்பன நுதல் முதலியவற்றை முறையே உடைமையால் வந்தது. உறைவானென்பது வினையாலணையும் பெயருமாம். இசையான், புயலான் என்பவற்று இசைவடிவாயும் புயல் (மேகம்) வடிவாயும் விளங்குகின்றான் என்றுகொள்க. 'ஏழிசையாய் இசைப்பயனாய்', 'ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே' என்பவை காண்க. விடை - எருது. கொடியவன் - கொடியை உடையான். உம்மை ஏற்ற பெயர்கள் எழுவாய். கொடியா னென்பது பெயர்ப்பயனிலை. (அற்புதத் திருவந்தாதி. 98.)

2. பேய் - பேய்கள். அடையா - சாரா. பிரிவு எய்தும் - சார்ந்த பேய்களும் இத்தலத்தை வழிபட்டால் நீக்கமுறும்.

மண்ணொடுநீ ரனல்காலோ டாகாய மதியிரவி
எண்ணில்வரு மியமான னிகபரமு மெண்டிசையும்
பெண்ணினொடாண் பெருமையொடு சிறுமையுமாம் பேராளன்
விண்ணவர்கோன் வழிபடவெண் காடிடமா விரும்பினனே. 3

விடமுண்ட மிடற்றண்ணல் வெண்காட்டின் றண்புறவின்
மடல்விண்ட முடத்தாழை மலர்நிழலைக் குருகென்று
தடமண்டு துறைக்கெண்டை தாமரையின் பூமறையக்
கடல்விண்ட கதிர்முத்த நகைகாட்டுங் காட்சியதே. 4

---

பிள்ளையினோடு உள்ளம் நினைவு ஆயினவே வரம் பெறுவர் - பிள்ளைவரங் கேட்டலொடு மற்றைய வரங்களையும் மனத்தில் நினைத்தவாறே அடைவர். ஆயின - வினையாலணையும் பெயர். ஒன்றும் - சிறிதும். ஐயுற - ஐயம் அடைய. வேய் - மூங்கில். அன்ன - ஒத்த, இடைக்குறை. முக்குளம்-சோம சூரிய அக்கினி தீர்த்தங்கள். தோய்வினையார் - முழுகும்செயலுடைய அடியார் முதலியோர். தீவினை தோயாவாம் என்க. தோய்தல் - பீடித்தல். மெய்கண்டதேவநாயனார் தோற்றத்துக்கு இத்திருப்பாடல் திருவருட் குறிப்பாயிருந்தது.

3. 'மண்...இயமானன்' - எட்டுருவம். (அஷ்டமூர்த்தி) 'எட்டுக்கொண்டார்'. (திருவுந்தியார்) இகபரம் - இம்மை மறுமை, விண்ணவர்கோன் - இந்திரன். அவனும் வெள்ளானை யும் வழிபட்டமை தலபுராணத்திற்காண்க. (பா. 7. 9.) இதில் சிவபிரான் 'உலகினை இறந்து நின்றது அரன்உரு.........மூட ரெல்லாம்' - (சிவஞானசித்தியார்) என்பதில்குறித்த விஸ்வரூபி விஸ்வாந்தர்யாமி என்னும் இரண்டுநிலைகளை உணர்த்தியவாறு.

4. மிடற்று அண்ணல் - திருநீலகண்டப் பெருமான். தண்புறவில் - குளிர்ந்த முல்லை நிலத்தில். குருகு - குருகு என்னும் புள். தடம் - குளம். கெண்டை - மீன். பூ - பூவின் பால். விண்ட - விள்ளுதல் உற்ற. முத்தம் - முத்துக்கள். நகை-பல், சிரிப்புமாம். கெண்டையின் அறியாமைச்செயலைக் கண்டு கடல் நகைத்தது என்றது தற்குறிப்பேற்றம்.

வேலைமலி தண்கானல் வெண்காட்டான் றிருவடிக்கீழ்
மாலைமலி வண்சாந்தால் வழிபடுநன் மறையவன்றன்
மேலடர்வெங் காலனுயிர் விண்டபினை நமன்றூதர்
ஆலமிடற் ருனடியா ரென்றடர வஞ்சுவரே. 5

தண்மதியும் வெய்யரவுந் தாங்கினன் சடையினுடன்
ஒண்மதிய நுதலுமையோர் கூறுகந்தா னுறைகோயில்
பண்மொழியா லவனமம் பலவோதப் பசுங்கிள்ளை
வெண்முகில்சேர் கரும்பெணைமேல் வீற்றிருக்கும் வெண்காடே. 6

சக்கரமாற் கீந்தானுஞ் சலந்தரனைப் பிளந்தானும்
அக்கரைமே லசைத்தானு மடைந்தயிரா வதம்பணிய
மிக்கதனுக் கருள்சுரக்கும் வெண்காடும் வினைதுரக்கு
முக்குளநன் குடையானு முக்கணுடை யிறையவனே. 7

---

5. வேலை - கடல். கானல் - கடற்கரைச்சோலை. காலன் மாய்ந்ததால், தூதர் சிவனடியாரிடத்தில் அச்சமுற்றனர். இதிற்குறித்தது திருவெண்காட்டுத் தலத்தில் நிகழ்ந்த சுவேத கேது முனிவர் வரலாறு, 2. 61. 7. பார்க்க. மார்க்கண்டேய முனிவர் வரலாறு என்றும் கூறுகின்றனர்.

6. தண்மை; வெம்மை இரண்டும் முறையே மதியின் நிலவும் பாம்பின் நஞ்சும் குறித்தன. ஒள்மதியம் நுதல் உமை - ஒளி பொருந்திய பிறை போன்ற நெற்றியையுடைய உமாதேவியார். கூறு - இடப்பால். பெணை - பெண்ணை. பனை, கிள்ளை நாமம் ஓதவீற்றிருக்கும் காடு என்க. 'பாரிசையும் பண்டிதர்கள் பல்நாளும் பயின்றோதும் ஓசைகேட்டு வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள் பொருட் சொல்லும் மிழலையாமே' (1-132-1) 'வேதத்தொலியாற்கிளிசொற்பயிலும் வெண்காடே' (பதி-197-பா 2)

7. மாற்கு-விஷ்ணுவுக்கு, அக்கு - எலும்புமாலை. அயிராவதம் - வெள்ளானை (பா 9). அதனுக்கு - அவ்வெள்ளானைக்கு அருள்மிக்குச்சுரக்கும் என்க. காடும் குளமும் உடையான் என்றும், காடும் முக்குளம் உடையானும் இறையவன்; பிளந்தானும் அசைத்தானும் உடையானும் இறையவனே என்றும் கொள்ளலாம். 'வெளிய உருவத்து ஆனை வணங்கும் வெண்காடே' (பா - 197, 6).

பண்மொய்த்த வின்மொழியாள் பயமெய்த மலையெடுத்த
உண்மத்த னுரநெரித்தன் றருள்செய்தா னுறைகோயில்
கண்மொய்த்த கருமஞ்ஞை நடமாடக் கடன்முழங்க
விண்மொய்த்த பொழில்வரிவண் டிசைமுரலும் வெண்காடே. 8

கள்ளார்செங் கமலத்தான் கடற்கிடந்தா னெனவிவர்கள்
ஒள்ளாண்மை கொளற்கோடி யுயர்ந்தாழ்ந்து முணர்வரியான்
வெள்ளானை தவஞ்செய்யு மேதகுவெண் காட்டானென்
றுள்ளாடி யுருகாதா ருணர்வுடைமை யுணரோமே. 9

போதியர்கள் பிண்டியர்கண் மிண்டுமொழி பொருளென்னும்
பேதையர்க ளவர்பிறிமி னறிவுடையீ ரிதுகேண்மின்
வேதியர்கள் விரும்பியசீர் வியன்றிருவெண் காட்டானென்
றோதியவர் யாதுமொரு தீதிலரென் றுணருமினே. 10

---

8. மொழியாள் - சொல்லியள் (தேவியார்). பயம் - அச்சம். உண்மத்தன் - பித்துக்கொளி. உரம் - மார்பு. கண் - தோகைக்கண்கள். கருமஞ்ஞை - நீல மயில். மயில் ஆட்டத்திற்கு முடிவு, கடல், இசைவண்டின்ஒலி, விண்மொய்த்த பொழில் என்ற தலத்தின் சோலைவளம் இன்றும் உளது.

9. கள் - தேன். கமலத்தான் - தாமரை மேலுள்ள பிரமன். கடல் - பாற்கடலில். கிடந்தான் - அறிதுயில் செய்யும் திருமால். 'தேசங்கள் தொழநின்ற திருமால்' (4.7.6). ஆண்மை - ஆளாந்தன்மை, அடிமைத் திறம். கொளற்கு - கொள்ளவேண்டி. உயர்ந்து - மேல் பறந்தும், ஆழ்ந்தும், கீழ்தோண்டிச் சென்றும். உணர்வு அரியான் - உணர்வதற்கு அரியவன். 'வெள்ளானை......வெண்காடு' (பா. 7) வெள்ளானைக்காடு என்பது வெண்காடு என்று சுருங்கிற்று எனக்கருத இடமுண்டு. உள் ஆடி - உள்ளம் கசிந்து, உள்ளம் நடுங்கி. உருகாதார் உணர்வு உடைமை-உருகாதவரது ஞானப்பேற்றை. உணரோம் - மதியோம். உருக்கம் சிவஞானத்தை எய்துவிக்கும். உருகாமை தற்போதத்தை ஒழிக்காது.

10. போதியர்கள் - சாக்கியர்கள். போதி - அரசமரம். புத்தன் போதி விருட்சத்தின் கீழினன்; போதி வேந்தன்.

தண்பொழில்சூழ் சண்பையர்கோன் றமிழ்ஞான சம்பந்தன்
விண்பொலிவெண் பிறைச்சென்னி விகிர்தனுறை வெண்காட்டைப்
பண்பொலிசெந் தமிழ்மாலை பாடியபத் திவைவல்லார்
மண்பொலிய வாழ்ந்தவர்போய் வான்பொலியப் புகுவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பிண்டியர்கள் - சமணர்கள். பிண்டி - அசோகமரம் 'பூமலி அசோகின் புனைநிழலமர்ந்த நான்முகன்'. மிண்டு மொழி - வன்புரை. பேதையர்களாகிய அவரைப் பிரிந்து சென்மின். அறிவுடையீர் இதைக் கேண்மின். 'மிண்டு மனத்தவர் போமின்கள் மெய்யடியார்கள் விரைந்து வம்மின்' (திருப்பல்லாண்டு) எனல் போல அவர் சென்மின் எனலுமாம். ஓதினவர் ஒருதீதும் இலர் என்று உணருமின் என்க.

11. விண்பொலி வெண்பிறை - ஆகாயத்தில் விளங்குகின்ற வெள்ளைப் பிறை. பண்பொலி செந்தமிழ்மாலை மண்பொலிய வாழ்ந்தவர் விண் பொலியப் புகுவர் என்க. வாழ்ந்தவர் எழுவாய், புகுவார் - பயனிலை.

---

புண்ணிய நாடு புகுவதற் காகப்
புலன்அடக்கி
எண்ணிய செய்தொழில் நிற்பதெல் லாருமின்
றியான்எனக்கு
நண்ணிய செய்தொழில் ஞானசம் பந்தனை
நந்தமர்நீர்க்
கண்ணியன் மாடக் கழுமலத் தானைக்
கருதுவதே.

—அந்தாதி 50

## 49 சீகாழி

### 185 பதிகவரலாறு

*136 ஆவது தலைப்பைக்காண்க.*

பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

பண்ணி னேர்மொழிமங்கை மார்பலர் பாடி யாடிய வோசை
கண்ணி னேரயலே பொலியுங் கடற்காழிப் [நாடொறுங்
பெண்ணி னேரொரு பங்கு டைப்பெரு மானை யெம்பெரு மானென்
அண்ண லாரடியா ரருளாலுங் குறைவிலரே. [றென்றுன்னும் 1

மொண்ட லம்பிய வார்தி ரைக்கடன் மோதி மீதெறிசங்க வங்கமுங்
கண்டலம் புடைசூழ் வயல்சேர் கலிக்காழி
வண்டலம்பிய கொன்றை யானடி வாழ்த்தி யேத்திய மாந்தர்
விண்ட லங்கெளிதா மதுநல் விதியாமே. [தம்வினை 2

நாடெ லாமொளி யெய்த நல்லவர் நன்று மேத்தி வணங்கு
காடெ லாமலர் தேன்றுளிக்குங் கடற்காழித் [வார்பொழிற்
தோடு லாவிய காது ளார்சுரி சங்க வெண்குழை யானென்
வேடங் கொண்டவர்கள் வினை நீங்கலுற்றாரே. [றென்றுன்னும் 3

---

1. பண்ணின் - பண்ணிசையின்பத்தை. நேர் - ஒத்த. கண்ணின் நேர் - கண்ணெதிரில். பெண்........பங்கு - மாதியலும்பாதி. உன்னும் - தியானம் புரியும். 'அருளாலும்' என்ற உம்மை இம்மைக்குரிய பொருளாலும் அன்றி என்று இறந்தது தழீஇயிற்று.

2. திரை - அலை. வங்கம் - மரக்கலம். கண்டல் - தாழை. புடை - பக்கம். அலம்பிய - ஒலித்த. விண்டல் - நீங்குதல். விதி - பாக்கியம்.

3. ஒளி - புகழ், விளக்கமுமாம். பொழிற்காடு - சோலைக் காடு. தேனை மலர் துளிக்கும் காடு. அக்காட்டையுடைய

மையி னார்பொழில் சூல நீழலில் வாச மார்மது மல்க நாடோறுங்
கையி னார்மலர் கொண்டெழுவார் கலிக்காழி
ஐய னேயர னேயென் றாதரித் தோதி நீதியு ளேநி னைப்பவர்
உய்யு மாறுலகில் லுயர்ந்தாரி னுள்ளாரே. 4

மலிகடுந்திரை மேனி மிர்ந்தெதிர் வந்து வந்தொளிர் நித்திலம்விழக்
கலிக டிந்தகையார் மருவுங் கலிக்காழி
வலிய காலனை வீட்டி மாணித னின்னு யிரளித் தானை வாழ்த்திட
மெலியுந் தீவினைநோ யவைமேவுவார் வீடே. 5

மற்று மிவ்வுல கத்து ளோர்களும் வானு ளோர்களும் வந்து
கற்ற சிந்தையராய்க் கருதுங் கலிக்காழி [வைகலுங்
நெற்றி மேலமர் கண்ணி னானை நினைந்தி ருந்திசை பாடு வார்வினை
செற்றமாந் தரெனத் தெளிமின்கள் சிந்தையுளே. 6

---

கடற்காழி. சங்கக்குழை - சங்கினாலாகிய குண்டலம். வேடம் - சிவவேடம்.

4. மை - மேகம். வாசம் - மணம். ஆர் - நிறைந்த. மது - தேன். மல்க - நிறைய. எழுவார் - எழுந்து பூசனை செய்யும் சிவபத்தர்கள். கலி - ஓசை. ஆதரித்து - விரும்பி. உய்யும் ஆறு - பிறவித்துன்புறுது தப்பும் வழி. உயர்ந்தாரின் - உயர்ந்த ஞானியரினத்துள். உள்ளார் - இருப்பவராவர்.

5. மலி - மிக்க. கடு - விரையும். நித்திலம் - முத்துக்கள். அலைமேல் நிமிர்ந்து எதிர் வந்து வந்து ஒளிரும். கலி - வறுமையை. கடிந்த - நீக்கிய. கையார் - கொடைக்கையினர், மருவும் - பொருந்திவாழும். மாணி - பிரமசாரி, மார்க்கண்டேய முனிவர். தீவினை நோயவை மெலியும். வீடு மேவுவர். நோய்கட்குக் காரணம் தீவினை. 'நோய் எல்லாம் நோய் செய்தார் மேலவாம். நோய்செய்யார் நோயின்மை வேண்டுபவர்' (குறள்).

6. கற்ற - சிவபிரான் திருவடியை வழிபடக் கற்றறிந்த. இசைபாடுவாரை வினையைத் தீர்த்தமாந்தர் (ஞானியர்) என்று சிந்தையுள்ளே தெளிந்துகொள்மின்கள்.

தான லம்புரை வேதிய ரொடு தக்க மாதவர் தாந்தொ ழப்பயில்
கானலின் விரைசேர் விம்முங் கலிக்காழி
ஊனு ளாருயிர் வாழ்க்கை யாயுற வாகி நின்றவொ ருவனேயென்
றுனலங் கொடுப்பா ரருள்வேந்த ராவாரே. 7

மைத்த வண்டெழு சோலை யாலைகள் சாலி சேர்வய லார வைகலுங்
கத்து வார்கடல் சென்றுலவுங் கலிக்காழி
அத்த னேயர னேய ரக்கனை யன்ற டர்த்துகந் தாயு னகழல்
பத்தராய்ப் பரவும் பயனீங்கு நல்காயே. 8

பரும ராமொடு தெங்கு பைங்கத லிப்ப ருங்கனி யுண்ண மந்திகள்
கருவரா லுகளும் வயல்சூழ் கலிக்காழித்
திருவி னயக னாய மாலொடு செய்ய மாமலர்ச் செல்வ னாகிய
இருவர் காண்பரியா னெனவேத்துத லின்பமே. 9

---

7. தான் தொழ என்று கூட்டித் தானே தொழ என்க, பாட்டின் முதலில் அசையாக்குதல் பொருந்தாது. நலம் - நன்மை. புரை - பெருமை. வேதியர்க்கு அடை. வேதியரோடு மாதவர் - மறையுணர்ந்தவரும் பெருந்தவத்தோரும். விரை - மணம். ஊனுள் - உடம்பினுள். ஆர் - பொருந்திய. ஆருயிர் எனலுமாம். உயிர்வாழ்க்கையாய் - உடம்பில் உயிர்வாழ்வது போல, உயிருள் வாழ்கின்ற பெற்றியாகி, 'இருள் அடராது உள் உயிர்க்கு உயிராய்த் தெளிக்கும் அறிவு திகழ்ந்துளது' (கொடிக்கவி,) ஆன்நலம் - ஆக்கள் (பசுக்கள்) இடத்திலிருந்து பெறும் பால், தயிர், நெய் ஆகிய நலங்களை. கொடு - கொண்டு உய்ப்பார் - அபிடேகம்புரியப் பயன்படுத்தும் அன்பர். அருள் வேந்தர் - ஞான நாயகர்.

8. மைத்த - கருமையுடைய. ஆலைகள் - கரும்பாலைகள் கரும்புகளுமாம். சாலி - நெல். ஆர - நிறைய. வைகலும் - நாள் தோறும். கத்து - ஒலிக்கின்ற. அரக்கன் - இராவணன். அடர்த்து - நெருக்கி. உன - உன்னுடைய. கழல் பரவும் பயன் - பத்தராய்ப் பரவும் பயன். ஈங்கு - இம்மையிலேயே. நல்காய் - அருள்வாய்.

9. பரு - பருத்த. மராம் - வெண்கடம்பு. கதலி - வாழை. திரு - இலக்குமி. ஆய - ஆகிய. செய்ய மாமலர்ச் செல்வன் - செந்தாமரையில் வீற்றிருக்கும் மறையவன் (பிரமன்), காண்பு அரியான் - காண்பதற்கு அருமையுடையவன்.

பிண்டமுண்டுழல் வார்களும்பிரி யாது வண்டுகிலாடை போர்த்தவர்
கண்டு சேரகிலா ரழகார் கலிக்காழித்
தொண்டை வாயுமை யோடுங்கூடிய வேட னேசுட லைப்பொடியணி
அண்டவா ணனென்பார்க் கடையா வல்லருனே. 10

பெயரெ னும்மிவை பன்னி ரண்டினு முண்டெ னப்பெயர் பெற்ற
கயலுலாம் வயல்சூழ்ந் தழகார் கலிக்காழி [வூர்திகழ்
நயன டன்கழ லேத்தி வாழ்த்திய ஞான சம்பந்தன் செந்த மிழுரை
உயருமா மொழிவா ருலகத் துயர்ந்தாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*10. பிண்டம்-சோற்றுத்திரளை, (நின்றுண்போர்) 'நின்று கவளம்பலகொள் கையரொடு மெய்யிலிடு போர்வை யவரும்' (3. 69. 10) சேரகிலார் - சேரும் அறிவாற்றல் இல்லாதவர். தொண்டை - கோவை(ப்பழம்போற் சிவந்த). வேடன் - வேடு வனன சிவபிரான். அண்டவாணன் - அண்டங்களில் வாழ்பவன்; (வாழ்நன் - வாணன்) 'மன்றவாணன்' 'அம்பலவாணன்'. அல்லல்தான் அடையா என்க.*

*11. பன்னிருபெயர்களையுடைய (சீகாழிச்) சிறப்புணர்த் திற்று. பெயர் - புகழ். நயன் - நீதி சொரூபன். நயன் - அருள் (கலி. 8). நடன் - கூத்தன். அருட்கூத்தன், 'ஞானக்கூத்தன்' (சிவப் பொது. 37) 'நம்பனே நடனே' (பதிகம், 188 பா. 4). உயருமா - உயர்ந்து அடையும் முறைமையில்.*

---

கருதத் தவஅருள் ஈந்தருள் ஞானசம்
பந்தன்சண்பை
இரதக் கிளிமொழி மாதே கலங்கல்
இவருடலம்
பொருதக் கழுநிரை யாக்குவன் நுந்தமர்
போர்ப்படையேன்
மருதச் சினையிற் பொதுப்பருள் ஏறி
மறைகுவனே. —அந்தாதி 51

# 50 திருவாமாத்தூர்

## 186 பதிகவரலாறு

திருமறைச் சிறுவர், பாம்பும் நீரும் பொற்கொன்றையும் வன்னியும் புனைந்த அங்கணரைப் போற்றிக் குலவிய இசையொடு பேரின்புறப் பாடியது இது.

### பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

குன்றவார்சிலை நாணராவரி வாளிகூரெரி காற்றின்மும்மதில்
வென்றவா றெங்ஙனே விடையேறும் வேதியனே
தென்றலார்மணி மாடமாளிகை சூளிகைக்கெதிர் நீண்ட [பெண்ணைமேல்
அன்றில் வந்தணையு மாமாத்தூ ரம்மானே. 1

பரவிவானவர் தானவர்பல ருங்கலங்கிட வந்தகார்விடம்
வெருவ வுண்டுகந்த வருளென்கொல் விண்ணவனே
கரவின்மாமணி பொன்கொழித்திழி சந்துகாரகி றந்துபம்பைநீர்
அருவி வந்தலைக்கு மாமாத்தூ ரம்மானே. 2

---

1. குன்றம் - மேருமலை. சிலை - வில். அரா - பாம்பு. அரி - திருமால். வாளி - அம்பு. கூர் - நுனி. எரி - அக்கினி தேவன். காற்று - ஈர்க்காகிய வாயுதேவன். காற்று ஈர்க்கு (1. 11. 6) இவற்றின் உதவியால் மும்மதிலை வென்றவாறு எவ்வாறு?. தென்றல் ஆர்கின்ற மாடம் என்க. சூளிகை - வீட்டினுச்சி. பெண்ணை - பனை. அன்றில் - ஒரு பறவை. அம்மான் - அருமகன்.

2. தானவர் - அசுரர். வெருவா - (அஞ்சி) அலறிப் பிதற்ற. விடம் உண்டு உகந்த அருள் என்?. கரவு இல் - மறைவில்லா. சந்து - சந்தனமரம். கார் அகில் - கரிய அகில் மரம். தந்து - அடித்துவந்து. பம்பை, திருக்கோவலூரின் கிழக்கில், அண்மையில், பெண்ணையாற்றினின்றும் பிரியும் ஆறு.

நீண்டவார்சடை தாழநேரிழை பாடநீறுமெய் பூசிமாலயன்
மாண்ட வார்சுடலை நடமாடு மாண்பதுவென்
பூண்டகேழன் மருப்பராவிரி கொன்றைவாள்வரி யாமைபூணென
ஆண்ட நாயகனே யாமாத்தூ ரம்மானே. 3

சேலினேரவு கண்ணிவெண்ணகை மான்விழித்திரு மாதைப்
தேல மாதவ நீமுயல்கின்ற வேடமிதென் [பாகம்வைத்
பாலினேர்மொழி மங்கைமார்நட மாடியின்னிசை பாடநீள்பதி
ஆலை சூழ்கழனி யாமாத்தூ ரம்மானே. 4

தொண்டர்வந்து வணங்கிமாமலர் தூவிநின்கழ லேத்துவாரவர்
உண்டியால் வருந்த விரங்காத தென்னைகொலாம்
வண்டலார்கழ னிக்கலந்து மலர்ந்ததாமரை மாதர்வாண்முகம்
அண்டவாணர் தொழு மாமாத்தூ ரம்மானே. 5

---

3. நேரிழை - உமாதேவியார். 'தளரிளவளரெனவுமை பாடத்தாளமிட' (பதிகம். 247 –) மால் அயன்மாண்டவார் சுடலை - ஆறுகோடி நாராயணரும் நூறுகோடி பிரமர்களும் இறந்த நீண்ட சுடுகாட்டில். மாண்பு - மாட்சி. என்? கேழல் மருப்பு - பன்றிக்கொம்பு. அரா - பாம்பு. 'முற்றலாமை இளநாகமொடு ஏனமுளைக்கொம்பவை பூண்டு' (1. 1. 2).

4. நேர்அன - நேரொத்த. கண்ணி - கண்ணை யுடையவள். வெள் நகை - வெண்மையுடையவாகிய பற்களையும். மான்விழி- மான்களைப்போல மருண்ட கண்களையும் உடைய. திருமாதை - அழகிய உமாதேவியாரை. ஏல - பொருந்த. தவம் புரிவார்க்கு, மங்கை பங்குடைமை முரண்பட்டசெயல் என்றவாறு. 'பால் இன் நேர்மொழி' - பால்போலும் இன்சொல்லையுடைய. ஆலை - கரும்பாலை, கரும்புமாம்.

5. தொண்டர் பூசித்தும் உணவின்றி வருந்துகின்றனர். அது கண்டு இரங்காதது ஏன்? ஆமாத்தூரில் அன்றிருந்த இந்நிலைமையை ஆசிரியர் அறிந்துபாடியருளினார். வண்டல் - நீர் ஒதுக்கிவிட்டமண். ஆர் - நிறைந்த. கழனி:- கழனியில் கலந்து மலர்ந்த தாமரைப் பூக்கள் ஆமாத்தூரிலுள்ள மாதர்களுடைய ஒளி பொருந்திய முகம்போல இருக்கின்றன. தாமரைகள்முகம் போலப் பூக்கும் ஆமாத்தூர் என்று பொருத்திக்கொள்க.

ஓதியாரண மாயநுண்பொரு ளன்றுநால்வர்முன் கேட்கநன்னெறி
நீதி யாலநிழ லுரைக்கின்ற நீர்மையதென்
சோதியேசுடரே சுரும்பமர் கொன்றையாய்திரு நின்றியூருறை
ஆதியே யரனே யாமாத்தூ ரம்மானே. 6

மங்கைவா ணுதன்மான் மனத்திடைவாடியூட மணங்கமழ் சடைக்
கங்கையா ளிருந்த கருத்தாவ தென்னைகொலாம்
பங்கயமது வுண்டுவண்டிசை பாடமாமயி லாட விண்முழ
வங்கையா லதிர்க்கு மாமாத்தூ ரம்மானே. 7

நின்றடர்த்திடு மைம்புலன்னிலை யாதவண்ண நினைந்துளத்திடை
வென்றடர்த் தொருபான் மடமாதை விரும்புதலென்
குன்றெடுத்த நிசாசரன்றிர டோளிருபது தானெரிதர
அன்றடர்த் துகந்தா யாமாத்தூ ரம்மானே. 8

---

அண்டவாணர் - அண்டங்களில் வாழும் தேவர்கள் முதலியோர். (பதிகம் 185 பா. 10. இல் உள்ள 'அண்டவாணன்' என்பதன் பொருள் வேறு).

6. ஆரணம் - வேதம். நால்வர் - சநகாதி முனிவர். நன்னெறி - ஞானமார்க்கம். ஆலநிழல் - 'கல்லால் நிழல்'. சுரும்பு - வண்டு. ஆதி - முதல்வன். அரன் - பிறப் பிறப்பை அழிப்பவன்.

7. வாள் - ஒளி. நுதல் - நெற்றி. மங்கையாகிய வாணு தன்மான் என்பது உமாதேவியாரைக் குறித்தது. வாடி ஊடுதற்கு ஏது, சடைமேல் கங்கையாள் இருப்பது. பங்கயம் - தாமரை. மது - தேன். விண் முழவு - விண்ணிலுள்ள மேக மாகிய மத்தளத்தை. அம் - அழகிய. அதிர்க்கும் - ஒலிக்கும், கையால் அதிர்க்கும் என்றது பொருந்துமாறு புலப்பட்டிலது.

8. அடர்த்திடும் - வருத்தியிடும். 'நின்று......அடர்த்து' என்ற பகுதி சிவபிரானது யோக நிலையைக் குறிப்பது. அதற்கு ஒவ்வாதபடி இடப்பால் அம்பிகையை விரும்பிக் கொண்டது ஏன் என்று வினவினர். நிசாசரன் - இரவில் சரிப்பவன், இராவணன்.

செய்யதாமரை மேலிருந்தவ னேடுமாலடி தேடநீண்முடி
வெய்ய வாரழலாய் நிமிர்கின்ற வெற்றிமையென்
தையலாளொடு பிச்சைக்கிச்சை தயங்குதோலரை யார்த்த
டைய மேற்றுகந்தா யாமாத்தூ ரம்மானே. [வேடங்கொண் 9

புத்தர்புன்சம ணுதர்பொய்ம்மொழி நூல்பிடித்தலர் தூற்றநின்னடி
பத்தர் பேணநின்ற பரமாய பான்மையதென்
முத்தைவென்ற முறுவலாளுமை பங்கனென்றிமை யோர்பரவிடும்
அத்தனே யரியா யாமாத்து ரம்மானே. 10

வாடல்வெண்டலை மாலையார்த்து மயங்கிருள்ளெரி யேந்திமாநடம்
ஆடன் மேயதென்னென் றுமாத்தூ ரம்மானைக்
கோடனாக மரும்புபைம்பொழிற் கொச்சையாரிறை ஞான
பாடல் பத்தும்வல்லார் பரலோகஞ் சேர்வாரே. [சம்பந்தன் 11

திருச்சிற்றம்பலம்

---

9. வெற்றிமை - வென்ற தன்மை. (பதி-188-பா-8) (ஐயம்). தையலாள் - உமாதேவியார். இச்சை தயங்கு - விருப்பம் விளங்குகின்ற. தயங்குதோல் - அசைகின்ற தோலுமாம். அரை - திருவரையில். ஆர்த்த - கட்டிய. ஐயம் - பிச்சையுண்டி.

10. நூல் - பிடகம் முதலியன. அலர் - பழி. பத்தர் - அன்பர். பேண - விரும்ப. பரம் ஆய பான்மையது - மேலவர்க்கும் மேலாந்தன்மையுடையது. (முழு முதன்மை). முறுவல் - பல். அரியாய் - அரியவனே (எளியானல்லன் அன்பரல்லார்க்கு). 'அரியதில் அரிய அரியோன். (திருவாசகம் : 3–47).

11. வாடல்-வாடுதலையடைந்த. (பதிகம். 196-5 பார்க்க). ஆர்த்து - கட்டி. ஆடல் - கூத்து. மேயது - விரும்பியது. கோடல் - வெண்காந்தள். நாகம் அரும்பு - பாம்புபோல அரும்புகின்ற. நாகம்; புன்னை மரமுமாம். கொச்சையார் இறை - காழியர்கோன்.

## 51 திருக்களர்

### 187 பதிகவரலாறு

சிரபுரத்துச் செல்வர், பிரிவாற்ருது சாலமிகத் தளர்ந்த மங்கையர்க்கரசியாரையும் குலச்சிறைநாயனுரையும் 'சிவநெறி போற்றி இருப்பீர்' என்று, தகுவன அருளி, பாண்டிய நாட்டையகன்று, சோழநாட்டை அணைந்து, தொண்டரினத் தொடும் பலதலம் பணிந்து, கன்னிமதில் திருக்களரைப் போற்றிப் பாடியது இத்திருப்பதிகம்.

பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

நீருளார்கயல் வாவிசூழ்பொழி னீண்டமாவய லீண்டுமாமதில்
தேரிஞர் மறுகில் விழாமல்கு திருக்களர்
ஊருளாரிடு பிச்சைபேணு மொருவனேயொளிர் செஞ்சடைம்மதி
ஆரநின் றவனே யடைந்தார்க் கருளாயே. 1

தோளின்மேலொளி நீறுதாங்கிய தொண்டர்வந்தடி போற்ற[மிண்டிய
தாளினுர் வளருந் தவமல்கு திருக்களருள்
வேளினேர் விசயற்கருள்புரி வித்தகா விரும்பும்மடியாரை
ஆளுகந் தவனே யடைந்தார்க் கருளாயே. 2

---

1\. நீருள் ஆர் கயல் வாவி - என்பது குளங்களின் நீர் மிகுதியையும் அதிலுள்ள மீன்களின் பெருக்கத்தையும் குறித்தது. திருக்களர் நீர்வளம், சோலைச்சூழல், வயல் வளம், மதிற்சுற்று, தேர்வீதி, விழாமலிவும் உடையது. சடையில் மதி ஆர (- நிறைய, பொருந்த) நின்றவனே. அடைந்த அன்பர்க்கு அருள்வாய் என்க.

2\. தோளின்......நீறு - 'திரள் தோள்மேல் நீறு நின்றது கண்டனை ஆயினும் நெக்கிலை' (திருவாசகம், திருச்சதகம், 33.) அங்குச் சிவபிரான் தோள். இங்குச் சிவத்தொண்டர் தோள், •சாந்தம் ஈதென்று எம்பெருமான் அணிந்த நீறுகொண்டார்

பாடவல்லநன் மைந்தரோடு பனிமலர்பல கொண்டுபோற்றிசெய்
சேடர் வாழ்பொழில் சூழ்செழுமாடத் திருக்களருள்
நீடவல்ல நிமலனேயடி நிரைகழல்சிலம் பார்க்கமா நடம்
ஆடவல் லவனே யடைந்தார்க் கருளாயே. 3

அம்பினேர்தடங் கண்ணினுருட னுடைவர்பயின் மாடமாளிகை
செம்பொ னுர்பொழில் சூழ்ந்தழகாய திருக்களருள்
என்புபூண்டதோர் மேனியெம்மிறைவா விணையடி போற்றி
கன்பு செய்தவனே யடைந்தார்க் கருளாயே. [நின்றவர்க் 4

கொங்குலாமலர்ச் சோலை வண்டினங்கெண்டிமாமது வுண்டி
தெங்கு பைங்கமுகம் புடைசூழ்ந்த திருக்களருள் [சைசெயத்
மங்கைதன்னெடுங் கூடியமண வாளனேபிணை கொண்டொர்
தங்கை யிற்படையா யடைந்தார்க் கருளாயே. [கைத்தலத் 5

---

இடர்களையாய் நெடுங்களமேயவனே' என்றதால், உடையானுக்கு ஏற்றது அடியார்க்கும் ஆதல் அறிக. மிண்டிய-நெருங்கிய. தாளினர் - திருவடியுடைய சிவபிரான். வேளின் நேர்-முருகனைப் போன்ற. விசயன் - அருச்சுனன். சிவவேடனிடம் தோற்றுச் சயம் நீங்கியவன். விசயன்=மேலான வெற்றியன் என்பது, அவன்பெற்ற பிற வெற்றிகளைக் குறித்தது. வித்தகா - ஞான வடிவா! ஆள் - அடிமையாக. உகந்தவனே - விரும்பிக்கொண்ட (ஆண்ட)வனே!

3. மைந்தர் - மக்கள். சேடர் - பெரியோர். நிமலன் - மலமில்லாதவன். அடி நிரைகழல் சிலம்பு ஆர்க்க மாநடம் ஆட வல்லவனே - திருவடிகளில் வரிசையாகக் கழலும் சிலம்பும் ஒலிக்க மகா தாண்டவம் ஆடவல்ல பெருமானே!

4. அம்பு - வாள். தடங்கண் - விசாலாட்சம். திருக்களரிலுள்ள ஆடவர் மகளிர் பன்மையும், மாளிகைச் சிறப்பும், செல்வப் பெருக்கும், வளமிகுதியும் குறித்தார். 'எம் இறைவா' என்று வாயாரப்பாடி, இணையடிபோற்றி நின்றவர்கண் இறைவன் அன்பு செய்தருள்வான் என்ற உண்மையை அறிவித்தவாறு.

5. கொங்கு - மணம், பூந்தாதுக்களுமாம். கெண்டி - கிளறி. மாமது - மிக்க தேன். கமுகம் - பாக்கு. மங்கை...மணவாளனே -

கோலமாமயி லாலக்கொண்டல்கள் சேர்பொழிற்குல
சேலிளங் கயலார் புனல்சூழ்ந்த திருக்களருள் [வும்வயலிடைச்
நீலமேவிய கண்டனேநிமிர் புன்சடைப்பெரு மானெனப்பொலி
ஆல நீழலுளா யடைந்தார்க் கருளாயே. 6

தம்பலம்மறி யாதவர்மதி ருங்குமால்வரை யாலழலெழத்
திண்பலங் கெடுத்தாய் திகழ்கின்ற திருக்களருள்
வம்பலர்மலர் தூவிநின்னடி வானவர்தொழக் கூத்துகந்தபேர்
அம்பலத் துறைவா யடைந்தார்க் கருளாயே. 7

குன்றடுத்தநன் மாளிகைக்கொடி மாடநீடுயர் கோபுரங்கண்மேல்
சென்ற டுத்துயர்வான் மதி தோயுந்திருக்களருள்
நின்றடுத்துயர் மால்வரைத்திர டோளினலெடுத் தான்றனீண்முடி
அன்றடர்த் துகந்தா யடைந்தார்க் கருளாயே. 8

---

பார்வதிமணாளனே! ஒருகைத்தலத்தில் பிணை (-மான்)கொண்டு-அழகிய (மற்றொரு)கையில் (மழுப்) படை உடையவனே!

6. கோலம் - அழகு. ஆல - தோகைவிரித்து ஆடி அசைய. கொண்டல்கள் - மேகங்கள். சேல் கயல் இரண்டும் மீன்வகை. நீலம் - நீலநிறத்தை. மேவிய - பொருந்திய. நஞ்சாலானநிறம். பொலி - விளங்குகின்ற. ஆல நீழலுளாய் - தக்ஷிணாமூர்த்தி யாகிய குருநாதரை விளித்தது.

7. தம் பலம் - தமது வலிமையை. அறியாதவர் - தெரிந்துணராத அசுரர். தாங்கும் மால்வரை - உலகத்தை அச்சாக நின்று தாங்கும் பெரிய மேருமலை. திண்பலம் - திண்ணிதாகிய வலிமையை. பலம் - பயனுமாம். வம்பு - மணம். அலர் - பரந்த. பேரம்பலத்து உறைவாய் - பேரம்பலத்தில் (கூத்து உகந்து) உறைபவரே! சிற்றம்பலம் பேரம்பலம் என்பவை இரண்டும் சிச்சபையே ஆகும்; சிதம்பரம், சிதாகாசம் என்பவற்றின் பொருள் ஞானவெளி என்பது. ஞானவெளி, ஞானசபை இரண்டும் பொருளால் ஒன்றே. அம்பலத்தின் அடைமொழி யாகிய சிறுமை பெருமைகளை நோக்கின், சிற்றம்பலம் என்பது வடசொற்றொடரின் திரிபாகாது எனல் புலப்படும்.

8. தம்மேலுள்ள கொடிகள், கோபுரங்களின் மேற்போய், சந்திரனைத் தோயும் அளவு, மாளிகைகள் உயர்ந்துள்ளன,

பண்ணியாழ்பயில் கின்றமங்கையர் பாடலாடலொ டாரவாழ்பதி
தெண்ணி லாமதியம் பொழில்சேருந் திருக்களருள்
உண்ணிலாவிய வொருவனேயிரு வர்க்குநின்கழல் காட்சியாரழல்
அண்ண லாயவெம்மா னடைந்தார்க் கருளாயே. 9

பாக்கியம்பல செய்தபத்தர்கள் பாட்டொடும்பல பணிகள்பேணிய
தீக்கியல் குணத்தார் சிறந்தாருந் திருக்களருள்
வாக்கினுன்மறை யோதினுயமண் டேரர்சொல்லிய சொற்க
ஆக்கி நின்றவனே யடைந்தார்க் கருளாயே. [ளானபொய் 10

இந்துவந்தெழு மாடவீதி யெழில்கொள்காழிந் நகர்க்கவுணியன்
செந்து நேர்மொழியா ரவர்சேருந் திருக்களருள்
அந்தியன்னதொர் மேனியானை யமரர்தம்பெரு மானைஞானசம்
பந்தன் சொல்லிவை பத்தும்பாடத் தவமாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

'வண்கொண்டல் விட்டு மதிமுட்டு வனமாடம்'. வரை - கயிலை மலையை. எடுத்தான்தன் - எடுத்த இராவணனுடைய. அன்று - எடுத்த அந்நாளில்.

9. பண் + யாழ் - பண்ணியாழ். யாழைத் திருந்திய சுரம் அமையப்பண்ணி எனலுமாம். ஆர - நிறைய. பதியாகிய திருக்களருள். உள் - திருக்கோயிலின் மூலஸ்தானத்தில், அன்பர் உள்ளத்தில். கழல் காட்சி - ஸ்ரீபாதசேவையை (அருளாய்).

10. பாக்கியம் - நல்வினைகள். பத்தர்கள் - அன்பர்கள். பணிகள் - திருப்பணிகள். தீக்கு இயல் - அக்கினி காரியத்துக்கு.

11. இந்து - சந்திரன். எழில் - அழகு. செந்து - முன் பதிகம் மூன்றில் உள்ள விளக்கம் காண்க. 'அந்தி வண்ணன்'.

# 52 திருக்கோட்டாறு

## *188 பதிகவரலாறு*

*முத்தமிழ் விரகர் திருநள்ளாற்றை வழிபட்டபோது, திருக்கோட்டாறு சென்று போற்றிப் பணிந்து பாடியருளியது இத்திருப்பதிகம்.*

**பண் - சீகாமரம்**

**திருச்சிற்றம்பலம்**

கருந்தடங்கண்ணின் மாதரா ரிசை செய்யக்கார திர் கின்ற
குருந்த மாதவியின் விரைமல்கு கோட்டாற்றில் [பூம்பொழிற்
இருந்தவெம்பெரு மானையுள்கி யிணையடிதொழு தேத்து
வருந்து மாறறியார் நெறிசேர்வர் வானூடே. [மாந்தர்கள் 1

நின்றுமேய்ந்து நினைந்துமாகரி நீரொடும்மலர் வேண்டிவான்மழை
குன்றி னேர்ந்துகுத்திப் பணிசெய்யுங் கோட்டாற்றுள்
என்றுமன்னிய வெம்பிரான்கழ லேத்திவானர சாளவல்லவர்
பொன்று மாறறியார் புகழார்ந்த புண்ணியரே. 2

---

*1. கண்ணின்-கண்ணையுடைய. இசைசெய்ய - (இனிய) இசை(ப் பாக்களைப் பாடலும் ஆடலும்)செய்ய. கார் - மேகம். அதிர்கின்ற - முழங்குகின்ற. குருந்தம்;- மரம். மாதவி - குருக்கத்திக்கொடி, 'மாடுலவு மல்லிகை குருந்து கொடி மாதவி செருந்திகுரவின் ஊடுலவு புன்னை விரைதாதுமலி சேருதவி மாணிகுழியே' (3 - 77 - 9). விரை - மணம். மல்கு - நிறைந்த. உள்கி - நினைந்து. வருந்தும் ஆறு - துன்பம் அடையும் வழியை. வான் ஊடு - விண்வழியாகச் செல்லும். நெறி - வீட்டு நெறியை.*

*2. மாகரி - பெரியயானை, கரத்தையுடையது கரி. வான் மழை - மேகத்திலுள்ள மழைநீரை, நேர்ந்து - நேர்பட்டு. உகுத்தி - உகச்செய்து. (அபிடேகித்து). ஏர்ந்து - எழுந்து, குத்தி எனலுமாம். பணி - தொண்டு. மன்னிய - நிலைபெற்றுள்ள. வான் - தேவருலகம். பொன்றும் ஆறு - 'சாமாறு,' (பிறந்திறந்துழலும் துன்பவழி). 'சாமாறே விரைகின்றேன்' (திருவாசகம். திருச்சதகம். 14) ஆர்ந்த - நிறைந்த*

விரவிநாளும் விழாவிடைப்பொலி தொண்டர் வந்துவியந்து
குரவ மாரு நீழற்பொழின்மல்கு கோட்டாற்றில் [பண்செயக்
அரவநீள்சடை யானையுள்கிநின் ருதரித்துமு னன்புசெய்தடி
பரவு மாறுவல் லார்பழிபள் றறுப்பாரே. 3

அம்பினேர்விழி மங்கைமார்பல ராடகம்பெறு மாடமாளிகைக்
கொம்பி னேர்துகி லின்கொடியாடு கோட்டாற்றில்
நம்பனேநட னேநலந்திகழ் நாதனேயென்று காதல்செய்தவர்
தம்பி னேர்ந்தறி யார்தடுமாற் றவல்வினையே. 4

பழையதம்மடி யார்துதிசெயப்பாரு ளோர்களும்விண்ணு
ளோர்தொழக்
குழலு மொந்தை விழாவொலிசெய்யுங் கோட்டாற்றில்
கழலும்வண்சிலம் பும்மொலிசெயக் கானிடைக்கண மேத்தவாடிய
அழக னென்றெழுவா ரணியாவர் வானவர்க்கே. 5

---

3. வியந்து - நன்குமதித்து, புகழ்ந்து. குரவம் - குரா மரம். 'நிழல்' என்ற பாடமே சந்தத்திற்குப் பொருந்துவது. (186. 6) அரவம் - பாம்பு. பரவும் ஆறு - வாழ்த்து முறைமை. பழி பற்று - பழியும் பற்றும், பழிக்கும் பற்று எனலுமாம்.

4. அம்பு - வேல். (முற்பதிகம். பா. 4) ஆடு அகம் - ஆடுகின்ற இடம். கொம்பின் ஏர். துகிலின் கொடி - கொம்பிற் கோத்து எழுகின்ற துணிக்கொடி. நேர் என்றும் பிரிக்கலாம். நடனே - கூத்தனே. (185-11. 'நயன் நடன்') நலம் - பேரின்பம். தம்பின் தடுமாற்றவல்வினையே நேர்ந்து அறியார் என்றியைக்க. செய்தவர் எழுவாய், அறியார் பயனிலை. நேர்தல் வினையின் செயலாகும்.

5. பழைய அடியார். 'பழவடியீர்' 'பண்டைப்பரிசே பழவடியார்க்கு ஈந்தருளும் அண்டம்'. பழவடியார்கூட்டம் அடியேன்காண ஆசைப்பட்டேன்'. 'பழிப்பு இல் நின்பாதப் பழந் தொழும்பு'. (திருவாசகம். 157. 183. 424. 151) பார் - மண். குழல் - வேய்ங்குழல். மொந்தை - இசைக்கருவியுள் ஒன்று. கழலும் சிலம்பும் ஒலி செய்ய என்க. கான் - காடு.

பஞ்சின்மெல்லடி மாதராடவர் பத்தர்சித்தர்கள் பண்புவைகலும்
கொஞ்சி யின்மொழியாற் றொழின்மல்கு கோட்டாற்றில்
மஞ்சனேமணி யேமணிமிடற் றண்ணலேயென வுண்ணெகிழ்ந்தவர்
துஞ்சு மாறறியார் பிறவாரித் தொன்னிலத்தே. 6

---

கணம் - பூதகணம், பேய்க்கணம். எழுவார் - நடுநாடியில், சிவபீஜத்தொடும் சிந்தித்து எழுகின்ற யோகியர். 'சித்தம் ஆரத் திருவடியே நினைந்து உள்கி எழுவார் உள்ளம் ஏயவன் காண்' (6. 64. 4). இவ்வுண்மையை ஒட்டித் 'தொழுதெழுவார்' 'தொழுதெழுவாள்' என்னுந் தொடர்கட்குப் பொருள் கொள்ளல் நன்று. 'கொழுநற்றொழுதெழுவாள்' - படுக்கையின் நின்று தொழுதுகொண்டே எழுதல் செய்வாள். தொழுதல் என்றதற்கு விழுந்து வணங்குதல் என்னும் பொருளே உரியது என்பார், பிறவாறெல்லாம் உரைப்பர். வானவர்க்கு அணி (பூஷணம்) ஆவர்.

6. பஞ்சின் - பஞ்சுபோல. இன் - ஐந்தாவதனுருபு உவமப்பொருள். பன்+து என்றதன் மரூஉ. பனுவல் என்பதற்கும் அதுவே பகுதி, பஞ்சினைப்பன்னுதல் இன்றும் உண்டு. 'பஞ்சி தன் சொல்லே பனுவல் இழையாக' (நன்னூற்பாயிரம்) 'பருத்திப்பெண்டின் பனுவலன்ன' (புறம் - 125). 'நுணங்கு - நுண்பனுவல்' (நற்றிணை - 353). (தொல் - எழுத்து - நச்சர் இறை - சூ 1 - உரை). பத்தர் - அன்பர். சித்தர் - அட்டமாசித்து வல்லவர். வைகலும் - நாள்தோறும். பண்பு - அவர்களுடைய குணங்களை. இன்மொழியால் கொஞ்சித் தொழுதல் நிறைந்த கோட்டாறு. தொழில் - தொழுதல். மஞ்சன் - மைந்தன் என்பதன் மரூஉ. "கிஞ்சுகவாயஞ்சுகமே கேடில் பெருந்துறைக் கோன் மஞ்சன்" (திருவாசகம் - 360). மஞ்சர்க்கும் மாதரார்க்கும் மனமென்பதொன்றேயன்றோ' (கம்பர் - பால - கோலங் - 19). மணிமிடற்றண்ணலே - திருநீலகண்டப்பெருமானே. துஞ்சும் ஆறு அறியார் - இனி இறக்கும் வகையை அறியார். இத் தொல் நிலத்தே பிறவார் என்பதும், துஞ்சுமாறறியாமை வலியுறுத்தி வீடுபெறுவரென்று விளக்கிற்று. நெகிழ்ந்தவர் - எழுவாய்; அறியார் பிறவார் இரண்டும் பயனிலை.

கலவமாமயி லாளொர்பங்கனைக் கண்டுகண்மிசை நீர்நெகிழ்த்திசை
குலவு மாறுவல்லார் குடிகொண்ட கோட்டாற்றில்
நிலவுமாமதி சேர்சடையுடை நின்மலாவென வுன்னுவாரவர்
உலவு வானவரி னுயர்வாகுவ துண்மையதே. 7

வண்டலார்வயற் சாலியாலைவ ளம்பொலிந்திட வார்புனற்றிரை
கொண்டலார் கொணர்ந் தங்குலவுந்திகழ் கோட்டாற்றில்
தொண்டெலாந்துதி செய்யநின்ற தொழிலனேகழ லாலரக்கனை
மிண்டெ லாந்தவிர்த் தென்னுகந்திட்ட வெற்றிமையே. 8

கருதிவந்தடி யார்தொழுதெழக் கண்ணனோடயன் றேடவானையின்
குருதி மெய்கலப் பவுரிகொண்டு கோட்டாற்றில்
விருதினன்மட மாதுநீயும்வி யப்பொடுமுயர் கோயின்மேவிவெள்
எருதுகந் தவனே யிரங்கா யுனதின்னருளே. 9

---

7. கலவம் - தோகை: மயிலாள் - மயில்போலும் சாயலுடைய உமாதேவியார். கண்மிசை நீர் நெகிழ்த்து - கண்ணீர் உகுத்து. நிலவம் - நிலாவைத்தரும். உன்னுவார் - தியானம் செய்பவர். வானவரின் - தேவரினும். உண்மையது - சத்தியமானது. ஆசிரியர் ஆணையிட்டுக் கூறுதலை நோக்கின், உயிர்களைச் சிவவழிபாட்டில் ஈடுபடுத்தக்கொண்டிருக்கும் பேரன்பு விளங்கும். (பதி - 220 - பா - 11, பதி - 221 பா - 11, பதி - 3 118 - 11).

8. வண்டல் - நீர் ஒதுக்கிய மண். சாலி - நெல். ஆலை - கரும்பாலை கரும்பு. கொண்டலார் - "தென்றலார்" போல். "தென்றலார் புகுந்துலவும் திருத்தோணிபுரத்து" (1–60–7) 'நரையார் வந்து நாளும் குறுகி' (2. 61. 4). தொண்டு - தொண்டர்கள்; சொல்லால் அஃறிணை; பொருளால் உயர்திணை; வேந்து அரசு ஒற்று முதலியனபோல. ஆகுபெயருமாம். துதி - தோத்திரம். மிண்டு - திண்மை. 'மிண்டனுக்கு இரண்டாள்' என்பது வழக்கு. தவிர்த்து - நீங்குதல். வெற்றிமை - வென்ற தன்மை. (பதி. 186 - பா - 9).

9. அடியார் கருதி வந்து தொழுது எழ என மாற்றுக. கண்ணன் - கிருஷ்ணன் என்னும் வடசொல்லின் திரிபாக் கொள்ளின் கறுப்பன்என்னும் பொருளாம்; தமிழாக்கொள்ளின்

உடையிலாதுழல் கின்றகுண்டரு மூணருந்தவத் தாயசாக்கியர்
கொடையி லார்மனத் தார்குறையாருங் கோட்டாற்றில்
படையிலார்மழு வேந்தியாடிய பண்பனேயிவ ரென்கொலோ நுனை
அடைகி லாதவண்ண மருளாயுன் னடியவர்க்கே. 10

காலனைக்கழ லாலுதைத்தொரு காமனைக்கன லாகச்சீறிமெய்
கோல வார்குழ லாள்குடிகொண்ட கோட்டாற்றில்
மூலனைமுடி வொன்றிலா தவெம் முத்தனைப்பயில் பந்தன்சொல்லிய
மாலை பத்தும்வல்லார்க் கெளிதாகும் வானகமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சினைப்பெயரடியாப் பிறந்தபெயராம். கருதுபவனுமாம் 'ஆனையின்...கொண்டு' - யானை உரித்த வரலாறு. குருதி - இரத்தம். விருதினன் - விருதுகளால். மடமாது - உமாதேவி. வெள்ளருது - நரைவெள்ளேறு. உகந்தவன் - விரும்பியவன்.

10. குண்டர் - சமணர். ஊணருந்தவம் - உண்ணுதலில்லாத தவம். அருமை - இன்மை; 'அருங்கேடன்' (குறள்). குறை - குறை கூறுதல். இவர் - குண்டர் முதலிய இவர்கள். நுனை - உன்னை. அடைகிலாத வண்ணம் என்கொலோ - அடைந்து தொழுது உய்யாதவாறு என்னோ?. உன் அடியவர்க்கு அருளாய் - உன்னடியவர்களுக்கு அக்காரணத்தை உணர்த்தியருளாய். ஆசிரியரும் தம்மை அப்படர்க்கையில் அடக்கிக் கொண்டார்.

11. கழலால் - கழலணிந்த திருவடியால். தானியாகு பெயர். கனலாகச் சீறி - தீயாகி வேவக் கோபித்து. கோலவார் குழலாள் மெய்குடிகொண்ட; என்று கூட்டி மாதியலும் பாதியன் என்க. (ப. 189. பா. 11). மெய் - பெருமான் திருமேனி. மூலன் - அநாதிகாரணன். 'படைப்போற் படைக்கும் பழையோன்'. முத்தன் - இயல்பாகவே பாசங்களில்லாதவன். வானகம் - வீடு.

# 53 திருப்புறவார்பனங்காட்டூர்

## 189 பதிகவரலாறு

ஆளுடைய பிள்ளையார் திருவரசிலியில் பரசிவனை வணங்கிப் பரசி, திருப்புறவார் பனங்காட்டூரை அணைந்து நறவார் கொன்றைச் சடைமுடியன் அடிமலரைப் போற்றிப் பாடியருளியது இத்திருப்பதிகம்.

பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

விண்ணமர்ந்தன மும்மதில்களை வீழவெங்கணை யாலெய்தாய்விரி
பண்ணமர்ந்தொலிசேர் புற வார்பனங்காட்டூர்ப்
பெண்ணமர்ந்தொரு பாகமாகிய பிஞ்ஞகாபிறை சேர்நுதலிடைக்
கண்ணமர்ந்தவனே கலந் தார்க்கருளாயே. 1

நீடல்கோட லலரவெண்முல்லை நீர்மலர்நிரைத் தாதளஞ்செயப்
பாடல்வண்டறையும் புற வார்பனங்காட்டூர்த்
தோடிலங்கிய காதயன்மின் றுளங்கவெண்குழை துள்ள நள்ளிருள்
ஆடுஞ்சங்கரனே யடைந் தார்க்கருளாயே. 2

---

1. விண் அமர்ந்தன - ஆகாயத்தில் பொருந்தியனவாகிய. பிஞ்ஞகா - சடைமுடியனே. பிறைசேர் நுதலிடைக்கண் - 'பிறைநுதல் வண்ணம் ஆகின்று' (புறம். கடவுள் வாழ்த்து.) நுதல்; நெற்றி + சென்னி இரண்டையும் குறித்து ஆளப்படும். யோகமார்க்கத்தில் பிறைவிளங்கும் இடம் நுதல் ஆதலைக் குறித்ததுமாம்.

2. நீடல் - (நீள் + தல்), நீட்சியை உடைய. கோடல் - வெண்காந்தள். நிரை - வரிசை. தாது - முல்லைப்பூந்தாதுக்கள். அளம்செய - உப்பளம்போலக் குவிக்க. இலங்கிய - விளங்கிய. அயல் - பக்கத்தில். மின் - ஒளி. நள் இருள் - செறிந்த இருளில். 'நள்ளிருளில் நட்டம் பயின்றாடும்'. சங்கரன் - சுகத்தைச் செய்பவன்.

வாளையுங்கய லும்மிளிர்பொய்கை வார்புனற்கரை யருகெலாம்வயற்
பாளையொண்கமுகம் புற வார்பனங்காட்டூர்ப்
பூளையுந்நறுங் கொன்றையும்மத மத்தமும்புனை வாய்கழலிணைத்
தாளையேபரவுந் தவத் தார்க்கருளாயே. 3

மேய்ந்திளஞ்செந்நெல் மென்கதிர்கவ்வி மேற்படுதலின் [மேதிவைகறை
பாய்ந்ததண்பழனப் புற வார்பனங்காட்டூர்
ஆய்ந்தநான்மறை பாடியாடு மடிகளென்றென் றரற்றிநன்மலர்
சாய்ந்தடிபரவுந் தவத் தார்க்கருளாயே. 4

---

*3.* மிளிர்தல் - ஒளிர்தல். கமுகம் - பாக்கு. பூளை - ஒரு செடி. இது சிறுமை பெருமையால் இருவகைப்படும். 'இரும் பூளை'. (பதிகம். 172.) 'மாருதம் அறைந்த பூளைப்பூ'. என்று உவமை கூறலாவதும் இதனையே. மதமத்தம் - உக்கிரகந்தத்தை யுடைய ஊமத்தை, புனைவாய் - அணிபவனே. கழல் - கழல்களை அணிந்த. இணைத்தாள் - இரண்டு திருவடிகள். ஏகாரம் பிரிநிலை, 'சாம்பல் அகலத்தார் சார்பல்லாற் சார்பிலமே' (ப. 180. பா. 3.)

*4.* மேதி - எருமை. வைகறை - விடியற்பொழுது. பழனம்- வயல். அடிகள் - சுவாமி, கடவுள். சிவபெருமானை 'அடி' என்றும், கள்விகுதிசேர்த்து உயர்வு குறித்து 'அடிகள்' என்றும் வழங்குதல் மரபு, 'திருவடி சேர்ந்தார்', 'அடிசேர் ஞானம்' என்பவற்றால் அவ்வுண்மை புலப்படும். 'இறைவனடி அடைவிக்கும் எழில் ஞானபூசை' என்பது முதலிய இடங்களில் சிவஞானத்தைக் குறித்தல் உணர்க. சிவனையும் சிவஞானத்தையும் அடைந்தவர் அடியார் என்பர். எல்லாவற்றிற்கும் அடி (மூலம்) சிவஞானமும் சிவமும் அன்றி வேறில்லை. 'அடியார் சிவஞானமானது பெற்றோர்' (திருமந்திரம். 1672.) 'முதல்வனது திருவடியாகிய சிவாநந்தத்தை' (சிவஞான பாடியம். சூ. 10. அதி. 1. ஏதுவின் விளக்கம்) 'முதல்வன் திருவடியாகிய சிவாநந்தாநுபூதி' (ஷை. 11. உரை) 'முதல்வனொருவனே ஞாயிறும் ஒளியும்போலச் சிவனும் சத்தியும் எனத் தாதான்மியத்தான் இருதிறப்பட்டுச் சருவவியாபியாய்ப் பொதுமையில் நிற்பன்' (ஷை. சூ. 2. அதி. 4.) ஆதலின், 'அடி' என்று சிவத்தையும் சிவஞானத்தையும் உணர்த்தலாயிற்று. உயிர்கள் அதை அடையுங்காலம்; 'யான் எனப்படும் ஞாதாவும், என

செங்கயல்லொடு சேல்செருச்செயச் சீறியாழ்முர றேனினத்தொடு
பங்கயம்மலரும் புற வார்பனங்காட்டூர்க்
கங்கையும்மதி யுங்கமழ்சடைக் கேண்மையாளொடுங் கூடிமான்மறி
அங்கையாடலனே யடி யார்க்கருளாயே. 5

தெனப்படும் ஞானமும், அதற்கு விடயமாய் எனதெனப் படும் ஞேயமும் எனப் பகுத்துக்காணும் மயக்கவுணர்விற்கு ஏதுவாகிய மலவாசனை' நீங்குங்காலம் ஆதலின், 'பரை உயிரில் யான் எனது என்று அறநின்றது அடியாம்' என்றது உண்மைநெறி விளக்கம். பின்வந்த குமரகுருபர முனிவரும், 'யான் எனது என்பது அற்ற இடமே திருவடி' என்றருளினர். கடவுளைச் சிவாகம விதிப்படி உருவுடையவராகக் கற்பித்துக் கொண்டு வழிபடுவார் அதன் திருவடிகளைக் குறிக்கும் உண்மையும் ஆய்ந்துணர்க, "உருவின தடிமுடி" (1. 126. 9) "ஆரொருவருள்குவார் உள்ளத்துள்ளே அவ்வுருவாய் நிற்கின்ற அருளும் தோன்றும்" (6 - 18. 11).

येन येन हि रूपेण साधकस्संस्मरेत तदा ।
तस्य तन्मयतां याति चिन्तामणिरिवेश्वरः ॥

என்ற சர்வசுரோத சங்கிரகம் கூறும் ஆற்றாலும் உருவ வழிபாட்டின்சிறப்பை உணர்க. என்று என்று:-அடுக்கு. பலகாலும் அரற்றல் வேண்டுமென்றது குறித்து நின்றது. மலர் சாய்ந்த அடி - பூக்கள் வீழ்ந்த திருப்பாதங்களை. தாமரைதோற்ற திருத்தாள் எனலுமாம். சாய்ந்த - அகரம் தொகுத்தல். மலரால், அடிகளைச் சாய்ந்து (விழுந்து) பரவும் (வாழ்த்தும்) எனலுமாம்.

5. செங்கயல் சேல் இரண்டும் போர்செய்ய மலரும், தேனினத்தொடு மலரும் என்றியைக்க. சிறுமை+யாழ் - சீறியாழ். பேரியாழ் வேறுண்டு. இப்பிரிவால் பாணரும் சிறுபாணர் பெரும்பாணர் என்றிருவகைப்படுவர். தேன்-வண்டு. யாழ்முரல்-யாழின் ஒலிபோல முரலு (ஒலித்)தல். கேண்மையாள் - உமாதேவியார். கேள்+மை - கேளாந்தன்மை. உரிமை. 'உன் பெருந்தேவி என்னும் உரிமை'. மறி - கன்று. ஆடல்(ஆள் + தல்)

நீரினார்வரை கோலிமால்கட னீடியபொழில் சூழ்ந்துவைகலும்
பாரினார் பிரியாப் புற வார்பனங்காட்டூர்க்
காரினார்மலர்க் கொன்றைதாங்கு கடவுளென்றுகை கூப்பி
சீரினால்வணங்குந் திறத்தார்க்கருளாயே. [நாடொறும் 6

கையரிவையர் மெல்விரல்லவை காட்டியம்மலர்க் காந்தளங்குறி
பையராவிரியும் புற வார்பனங்காட்டூர்
மெய்யரிவையொர் பாகமாகவு மேவினாய்கழ லேத்திநாடொறும்
பொய்யிலாவடிமை புரிந் தார்க்கருளாயே. 7

---

ஆளுதல், ஆடலன் - ஆளுதலையுடையவனே. மான் கன்றேந்திய அழகியகையன் என்றவாறு. அகங்கையுமாம். 'அங்கையிற் படையாய்' (ப. 187. பா. 5)

6. நீரின் ஆர் வரை கோலி மால் கடல் நீடிய பொழில் - நீரால் (அரணாகப்) பொருந்திய எல்லையை வகுத்துப், பெரிய கடல் நெடுகப்பரவிய சோலை. சூழ்ந்து பிரியா ஊர் என்க. சூழ்தல் சோலையின் வினை. பிரியாமை பாரினாரது. பாரினார் - மண்ணுலகத்தார். வைகலும் பிரியா - நாடோறும் நீங்காது வழிபடும். காரின் ஆர்மலர்க்கொன்றை :- 'கண்ணிகார்நறுங் கொன்றை' என்றவாறு, கார்காலத்தில் கொன்றை மிகுதியாகப் பூப்பதுணர்த்திற்று. கூப்பி - குவித்து. கூம்பி - தன்வினை. கூப்பி - பிறவினை.

7. அரிவையர் - மகளிர். கைமெல்விரலவை - கையிலுள்ள மெல்லிய விரல்கள். அவை ஈண்டுச்சுட்டல்ல, நிலமது, பொருளது என்பவற்றில் அது என்னும் ஒருமை சுட்டாதவாறு போல இதிற் பன்மை சுட்டாது நின்றது. நிலம் பொருள் என்றல்லாத வேறு பொருளில்லை, ஈண்டு விரலல்லாத வேறு பொருள் 'அவை' என்றதற்கு இல்லை. பை - படம். அரா - பாம்பு. அராவிரியும் - அராவைப்போல மலரும். காட்டி விரியும். அரிவை-உமாதேவியார். மெய் - திருமேனியில், ஓர் பாகமாகவும் மேவியவனே! (ப. 188. பா. 11). பொய்யிலா அடிமை - மெய்யடிமை.

தூவியஞ்சிறை மென்னடையன மல்கியொல்கிய தூமலர்ப்
பாவில்வண்டறையும் புற வார்பனங்காட்டூர் [பொய்கைப்
மேவிய ந்நிலை யாயரக்கன தோளடர்த்தவன் பாடல்கேட்டருள்
ஏவியபெருமா னென்பவர்க் கருளாயே. 8

அந்தண்மாதவி புன்னை நல்லவ சோகமும்மர விந்தமல்லிகை
பைந்தணாழல்கள்சூழ் புற வார்பனங்காட்டூர்
எந்திளம்முகில் வண்ண னான்முக னென்றிவர்க்கரி தாய்நி
சந்தமாயவனே தவத்தார்க் கருளாயே. [மிர்ந்ததொர் 9

நீணமார்முரு குண்டுவண்டின நீலமாமலர் கவ்விநேரிசை
பாணில்யாழ்முரலும் புறவார் பனங்காட்டூர்
நாணழிந்துழல் வார்சமணரு நண்பில்சாக்கிய ருந்நகத்தலை
ஊணுரியவனே யுகப்பார்க் கருளாயே. 10

மையினார்மணி போன்மிடற்றனை மாசில்வெண்பொடிப்
பையதேன்பொழில்சூழ் புறவார் பனங்காட்டூர் [பூசுமார்பனைப்
ஐயனைப்புக ழானகாழியு ளாய்ந்தநான்மறை ஞானசம்பந்தன்
செய்யுள்பாடவல்லார் சிவலோகஞ் சேர்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

8. தூவி - இறகினடிப்பாகம். அனம் - அன்னப்பறவை. பாவில் - பரப்பில். ஏவிய - ஏவல் செய்ய, ஆக்ஞை செய்த.

9. அம்தண் - அழகும் குளிர்ச்சியும் உடைய. அரவிந்தம்-தாமரை. தண் + ஞாழல்கள் – தணாழல்கள். ஞாழல்மரம். எந்து - எமது! முகில் - மேகம். என்ற இவர்க்கு அகரம் தொகுத்தல். சந்தம் - அழகு. கருத்து. ஆயவன் - ஆனவன்.

10. நீணம் - நீளம். 'நீணுதல்' (1. 1. 9). முருகு - தேன். பாண் - பாட்டு. நக - சிரிக்க. தலையூண் உரியவனே - பிரம கபாலத்தில் வாங்கி உணவு கொள்ளுதற்கு உரியவனே.

11. மையின் - மேகத்தைப்போல. மாசு - குற்றம். பைய - பசுமையுடைய. ஆய்ந்த - (முற்பிறவியில்) ஆராய்ந்த. செய்யுள்-இத்திருப்பதிகத்தை.

# 54 திருப்புகலி

## 190 பதிகவரலாறு

*137 ஆவது தலைப்பிற் பார்க்க.*

**பண் - காந்தாரம்**

திருச்சிற்றம்பலம்

உருவார்ந்த மெல்லியலோர் பாகமுடையீ ரடைவோர்க்குக்
கருவார்ந்த வானுலகங் காட்டிக்கொடுத்தல் கருத்தானீர்
பொருவார்ந்த தெண்கடலொண் சங்கந்திளைக்கும் பூம்புகலித்
திருவார்ந்த கோயிலே கோயிலாகத் திகழ்ந்தீரே. 1

நீரார்ந்த செஞ்சடையீர் நிரையார்கழல்சேர் பாதத்தீர்
ஊரார்ந்த சில்பலியீ ருழைமானுரிதோ லாடையீர்
போரார்ந்த தெண்டிரைசென் றணையுங்கானற் பூம்புகலிச்
சீரார்ந்த கோயிலே கோயிலாகச் சேர்ந்தீரே. 2

அழிமல்கு பூம்புனலு மரவுஞ்சடைமே லடைவெய்த
மொழிமல்கு மாமறையீர் கறையார்கண்டத் தெண்டோளீர்
பொழின்மல்கு வண்டினங்க ளறையுங்கானற் பூம்புகலி
எழின்மல்கு கோயிலே கோயிலாக விருந்தீரே. 3

---

*1. உரு - திருமேனிப்பொலிவு. மெல்லியல் - உமாதேவியார். கரு - 'உருவமைந்த மாநகர்க்குக் கருவமைந்த மாடம்போல' என்றதில் உள்ள பொருளே ஈண்டுங் கொள்ளப்படினும், அங்குப்பொருட்கருவும் இங்கு அருட்கருவும் என்று வேறுபட்டு நிற்கும். பொரு ஆர்ந்த - மோதுதல் நிறைந்த. புகலி - சீகாழி. கோயிலாக - தலைமையில்லமாக. கோ - தலைவன், தலைமை தலைவனில்லம் இரண்டன் வேறுபாடு உணர்க.*

*2. நீர் - கங்கா ஜலம். உழைமான் - உழையாகியமான் 'புல்வாய் (புலி) உழை மரையே கவரி,' 'நவ்வியும் உழையும்' என்னும் மரபியற் சூத்திரப்பகுதிகளால் மானின் பேதம் புலப் படும்.*

*3. அழி - மிகுதி. 'அற்றூர் அழிபசி'. அடைவு - சார்வு. இறை - நஞ்சின் கறுப்பு. எழில் - அழகு.*

கையிலார்ந்த வெண்மழுவொன் றுடையீர்கடிய கரியின்றேல்
மயிலார்ந்த சாயன்மட மங்கைவெருவ மெய்போர்த்தீர்
பயிலார்ந்த வேதியர்கள் பதியாய்விளங்கும் பைம்புகலி
எயிலார்ந்த கோயிலே கோயிலாக விசைந்தீரே. 4

நாவார்ந்த பாடலீ ராடலரவ மரைக்கார்த்தீர்
பாவார்ந்த பல்பொருளின் பயன்களானீ ரயன்பேணும்
பூவார்ந்த பொய்கைகளும் வயலுஞ்சூழ்ந்த பொழிற்புகலித்
தேவார்ந்த கோயிலே கோயிலாகத் திகழ்ந்தீரே. 5

மண்ணார்ந்த மண்முழவந் ததும்பமலையான் மகளென்னும்
பெண்ணார்ந்த மெய்மகிழப் பேணியெரிகொண் டாடினீர்
விண்ணார்ந்த மதியமிடை மாடத்தாரும் வியன்புகலிக்
கண்ணார்ந்த கோயிலே கோயிலாகக் கலந்தீரே. 6

---

4. கையில் என்பதில் ஐகாரம் ஒருமாத்திரையொலிப்பது 'சங்கக்கயனும்' (1-36-9). கரி - யானை, ஆர்ந்த-ஒத்த, வெருவ - (அஞ்சிவாய்) வெருவுதலடைய, தோல் போர்த்தீர் என்க, பயில் - (மறைப்) பயிற்சி, முதனிலைத் தொழிற்பெயர் - எயில். மதில்.

5. பாடல் - வேதகீதம். அரைக்கு - திருவிடையில். ஆர்த்தீர் - கட்டினீர். பாவும் அதன் பொருளும் அதன் பயனும் ஆயினீர். அயன் பேணும் புகலி - பிரமன் பூசித்த சீகாழி; பிரமபுரம். பூ - தாமரை மலர். 'பூவினுக்கருங்கலம் பொங்கு தாமரை' 'பூவிற்குத் தாமரையே'. தே - பிரளயகாலத்திலும் அழியாத தெய்வத்தன்மை.

6. மண் - மார்ச்சனை. முழவம் - மத்தளம், குடமுழா வுமாம். ததும்ப மகிழ ஆடினீர் என்க. மலையான் மகள் என்னும் பெண் - இமாசலராசன் குமாரி எனப்படும் உமா தேவியார், 'நாமகள்' 'திருமகள்' 'மலைமகள்' 'மலைப்பெண்' என்புழிப் போலத் தேவி என்ற பொருளைக் குறித்தலறிக. மெய் - திருமேனி. மகிழ - பூரிக்க. 'மெய்மகிழ' என்றது அரிய பிரயோகம். மிடை - நெருங்கிய. சந்திரமண்டலம் அளவும் ஓங்கிய மாடம் என்றவாறு, 'வண்கொண்டல் விட்டு மதி முட்டுவன மாடம்'. வியன் - அகலம். புகலிக்கண் ஆர்ந்த சீகாழியில் பொருந்திய.

களிபுல்கு வல்லவுண ரூர்மூன்றெரியக் கணைதொட்டீர்
அளிபுல்கு பூமுடியீ ரமரரேத்த வருள்செய்தீர்
தெளிபுல்கு தேனினமு மலருள்விரைசேர் திண்புகலி
ஒளிபுல்கு கோயிலே கோயிலாக வுகந்தீரே. 7

பரந்தோங்கு பல்புகழ்சே ரரக்கர்கோனை வரைக்கீழிட்
டுரந்தோன்றும் பாடல்கேட் டுகவையளித்தீ ருகவாதார்
புரந்தோன்று மும்மதிலு மெரியச்செற்றீர் பூம்புகலி
வரந்தோன்று கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 8

---

7. களி - களிப்பு. முதனிலைத் தொழிற்பெயர். புல்கு - பொருந்திய. மூன்று ஊர்-முப்புரம். அளி - வண்டுகள். அமரர் - தேவர். மரணமில்லாதவர் - நெடிது வாழ்பவர். ஏத்த - துதிக்க. தெளி - தெளிவு. கலங்கலின்மை - கலங்கல் நீக்கம். விரை - மணம். ஒளி - சிவப்பிரகாசம். சுடரொளியுமாம். உகந்தீர் - விரும்பினீர்.

8. பரந்து ஓங்குபல் புகழ் - உலகம் எங்கும் பரவி ஓங்கிய பெருங்கீர்த்தி, இராவணன் திரிலோக சஞ்சாரியாதலின் அத்தகு புகழ் பெற்றனன். உரம் - அறிவு, 'கைத்தலங்கள் .........பத்திலங்கு வாயாலும் பாடல் கேட்டுப் பரிந்து அவனுக்கு இராவணன் என்று ஈந்த நாமதத்துவனை.........ச் சாராதே சாலநாள்போக்கினேனே' (6 - 79 - 10). 'எரியுமா கடல் இலங்கையர்கோனை.........அடர்ந்திட்டுக் குறி கொள் பாடலின் இன்னிசை கேட்டுக் கோலவாளொடு நாளது கொடுத்த செறிவு கண்டு நின் திருவடியடைந்தேன் செழும் பொழிற்றிருப்புன் கூருளானே' (7 : 568). 'அரக்கன் ஆற்றல் அழித்து அவன் பாட்டுக்கு அன்று இரங்கிய வென்றியினானை' (7 : 643).

सामभिर्विविधैः स्तोत्रैः प्रणम्य स दशाननः ।

என்று வான்மீகிராமாயணம் உணர்த்துமாற்றால் அச் சாம வேதத்தையே உரந்தோன்றும் பாடல் என்றார். புரம்......... மும்மதில் - முப்புரமாகத் தோன்றியமதில். வரம் தோன்று கோவில் - 'வரபுரம் ஒன்றுணர் சிரபுரத்து றைந்தனை' (1-128, அடி. 31)

சலந்தாங்கு தாமரைமே லயனுந்தரணி யளந்தானுங்
கலந்தோங்கி வந்திழிந்துங் காணாவண்ணங் கனலானீர்
புலந்தாங்கி யைம்புலனுஞ் செற்றார்வாழும் பூம்புகலி
நலந்தாங்கு கோயிலே கோயிலாக நயந்தீரே. 9

நெடிதாய வன்சமணு நிறைவொன்றில்லாச் சாக்கியருங்
கடிதாய கட்டுரையாற் கழறமேலோர் பொருளானீர்
பொடியாரு மேனியினீர் புகலிமறையோர் புரிந்தேத்த
வடிவாருங் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 10

ஒப்பரிய பூம்புகலி யோங்குகோயின் மேயானை
அப்பரிசிற் பதியான அணிகொண்ஞான சம்பந்தன்
செப்பரிய தண்டமிழாற் றெரிந்தபாட லிவைவல்லார்
எப்பரிசி லிடர்நீங்கி யிமையோருலகத் திருப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*9.* சலம் - நீர். அயன் - பிரமன். தரணி - பூமி. அளந்தான் - திருமால். மாவலியிடம் மூவடி மண் பெற்ற வரலாறு. ஓங்கியவன் அயன் - இழிந்தவன் அரி. கனல் - தீ. புலம் - மெய்யுணர்வு. செற்றார் - அழித்த ஞானியார், அடியார். நலம்- அழகு, நன்மை. நயந்தீர் - விரும்பினீர்.

*10.* நிறைவு - சமயக்கொள்கையின் நிறைவு அறிவின் நிறைவுமாம். கடிது - கடுமையுடையது. கழற - பழித்துப்பேச. மேல் ஓர் பொருள் - மேலாக ஒரு மெய்ப்பொருள். பொடி - திருநீறு. புரிந்து - இடைவிடாது நினைந்து. வடிவு ஆகும் - அழகு நிறைந்த தோற்றமும் ஆம்.

*11.* மேயான் - மேவியவன். பரிசு - தகைமை. செப்ப அரிய - அருள்பெருதவர் சொல்லுதற்கு அருமையவாகிய. தெரிந்த - ஆராய்ந்த.

# 55 திருத்தலைச்சங்காடு

## 191 பதிகவரலாறு

தலைசையந்தணர்கள் எல்லாம் பெருவிருப்பால் வந்து உம்பரும் வணங்கும் மெய்ம்மை உயர் தவத்தொண்டரோடும் ஆளுடைய பெருந்தகையாரை எதிர்கொண்டு வணங்கி அழைத்துச்சென்றனர். அங்குற்று, பெருந்திருமாடக்கோயிலை எய்தி, அருமறைப் பொருளானாரைப் பணிந்து, அழகிய நல்ல வலம்புரிச்சங்கின் வடிவில் ஓங்கார ரூபமாக ஒளிரும் இறைவர் சார்ந்து விளங்குமாற்றைப் பாடியருளியது இத் திருப்பதிகம்.

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

நலச்சங்க வெண்குழையுந் தோடும்பெய்தோர் நால்வேதம்
சொலச்சங்கை யில்லாதீர் சுடுகாடல்லாற் கருதாதீர்
குலைச்செங்காய்ப் பைங்கமுகின் குளிர்கொள்சோலைக் குயிலாலும்
தலைச்சங்கைக் கோயிலே கோயிலாகத் தாழ்ந்தீரே. 1

துணிமல்கு கோவணமுந் தோலுங்காட்டித் தொண்டாண்டீர்
மணிமல்கு கண்டத்தீ ரண்டர்க்கெல்லா மாண்பானீர்
பிணிமல்கு நூன்மார்பர் பெரியோர்வாழுந் தலைச்சங்கை
அணிமல்கு கோயிலே கோயிலாக வமர்ந்தீரே. 2

---

1. நலம் - அழகையுடைய. சங்கவெண்குழை - சங்காலான வெளியகுண்டலம். சங்கை - ஐயம். கமுகின் குலைக்காய் செந்நிறத்ததாதல் கூறப்பட்டது. தாழ்ந்தீர் - எழுந்தருளியுள்ளீர். தலைச்சங்கை - தலைச்சங்காடு என்பதன் மரூஉப்போலும்.

2. மணி - நீலமணிபோலும் நிறம், அழகுமடம். அண்டர் - தேவர். மாண்பு - மாட்சி, பெருமை. பிணி - பிணித்தல். அணி - அழகு. நான்கு அடியிலும் மல்குதல் என்றதற்கு நிறைதல் என்ற பொருளுறப் பொருத்திக் கூறிக்கொள்க.

சீர்கொண்ட பாடலீர் செங்கண்வெள்ளே றூர்தியீர்
நீர்கொண்டும் பூக்கொண்டு நீங்காத்தொண்டர் நின்றேத்தத்
தார்கொண்ட நூன்மார்பர் தக்கோர்வாழுந் தலைச்சங்கை
ஏர்கொண்ட கோயிலே கோயிலாக விருந்தீரே. 3

வேடஞ்சூழ் கொள்கையீர் வேண்டிநீண்ட வெண்டிங்கள்
ஓடஞ்சூழ் கங்கையு முச்சிவைத்தீர் தலைச்சங்கைக்
கூடஞ்சூழ் மண்டபமுங் குலாயவாசற் கொடித்தோன்றும்
மாடஞ்சூழ் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 4

சூலஞ்சேர் கையினீர் சுண்ணவெண்ணீ றாடலீர்
நீலஞ்சேர் கண்டத்தீர் நீண்டசடைமே னீரேற்றீர்
ஆலஞ்சேர் தண்கான லன்னமன்னுந் தலைச்சங்கைக்
கோலஞ்சேர் கோயிலே கோயிலாக் கொண்டீரே. 5

நிலநீரொ டாகாச மனல்காலாகி நின்றைந்து
புலநீர்மை புறங்கண்டார் பொக்கஞ்செய்யார் போற்றோவார்
சலநீத ரல்லாதார் தக்கோர்வாழுந் தலைச்சங்கை
நலநீர கோயிலே கோயிலாக நயந்தீரே. 6

---

3. சீர் - கனம், மேன்மை. பாடல் - வேதப்பாடல், சாம கானம். ஏறு - எருது. ஊர்தி - வாகனம். சிவபூசை செய்வார்க்கு இன்றியமையாத பொருள் நீரும் பூவும் என்பது குறிக்கப்பட்டது. தார் - மாலை, தார்கொண்ட மார்பர். நூல் (பூணு நூல்) அணிந்த மார்பர் என்க. தக்கோர் - 'அந்தணாளர்'. (பா. 8.) ஏர் - அழகு.

4. வேடம் - 'பலபல வேடம் ஆகும் பரன்', உச்சியிலுள்ள கங்கையில் திங்கள் ஓடம்போல் உளது. கூடம், மண்டபம், மாடம் என்பன இடவிசேடங்கள். வாசலில் கொடி தோன்றும் மாடம் என்க.

5. சூலம் - 'மூவிலைவேல்'. சுண்ணம் - பொடியாகிய. ஆடலீர் - மூழ்குதலுடையீர். நீராடல் போல் நீறுடல். நீர் - கங்கை. ஆலம் - நீர். மன்னும் - பொருந்தும். கோலம் - அழகு; வடிவமுமாம்.

6. நிலம் முதலிய ஐம்பெரும் பூதங்களாகி நின்றவன் இறைவன். அட்டமூர்த்தங்களுள் முதலைந்தும் இவையே.

அடிபுல்கு பைங்கழல்க ளார்ப்பப்பேர்ந்தோ ரனலேந்திக்
கொடிபுல்கு மென்சாய லுமையோர் பாகங்கூடினீர்
பொடிபுல்கு நூன்மார்பர் புரிநூலாளர் தலைச்சங்கைக்
கடிபுல்கு கோயிலே கோயிலாகக் கலந்தீரே. 7

திரையார்ந்த மாகடல்சூழ் தென்னிலங்கைக் கோமானை
வரையார்ந்த தோளடர விரலாலூன்று மாண்பினீர்
அரையார்ந்த மேகலையீ ரந்தணாளர் தலைச்சங்கை
நிரையார்ந்த கோயிலே கோயிலாக நினைந்தீரே. 8

பாயோங்கு பாம்பணைமே லானும்பைந்தா மரையானும்
போயோங்கிக் காண்கிலார் புறநின்றோரார் போற்றோவார்
தீயோங்கு மறையாளர் திகழுஞ்செல்வத் தலைச்சங்கைச்
சேயோங்கு கோயிலே கோயிலாகச் சேர்ந்தீரே. 9

---

ஐந்துபுல நீர்மை புறம் கண்டார் - ஐம்புலன்களை வென்றவர். பொக்கம் - பொய். போற்று - துதி. ஓவார் - நீங்கார். சலம் - மாறுபாடு; வஞ்சகம். நீதம் - இழிஞர். 'தக்கார்' (ப-176, பா 10) நலநீர - அழகிய தன்மையுடைய.

7. புல்கு - சார்ந்த; கூடிய. ஆர்ப்ப - ஒலிக்க. பேர்ந்து - நட்டம் ஆடி. 'கொடி புல்கு மென்சாயல் உமை' என்றது தேவியார் திருநாமம் ஆகிய சௌந்தரியம்மை என்பதைத் தோற்றியது. பொடி - திருநீறு. புரிநூல் ஆளர் - விரும்புகின்ற வேத நூல்களை ஆள்பவர். 'நூன்மார்பர்' என்று முன் உள்ள தன் பொருளே கூறல் நன்றன்று. 'மறையாளர்' (பா. 91). கடி - காவல்.

8. திரை - அலை. மா - பெரியது. வரை - மலை. அரை - இடை. நிரை - வரிசை. மேகலை - அணிவிசேடம். அரை ஆர்ந்த மேகலையீர், என்பது, பாதி மாதை உடையீர் என்றவாறு. 'ஏரார்ந்த மேகலையாள் பாகங்கொண்டீர்' (பதி - 192 பா. 2.)

9. பாய் - பரந்து. போய் - கீழிடந்துபோய். ஓங்கி - மேற்பறந்துயர்ந்து. புறம் நின்று ஓரார் - புறச்சமயக் கொள்கைகளில் நின்று ஆராயாதவர். அகச்சமயக் கொள்கைவழி ஆராய்பவர் என்றவாறு. புறம் வெளியுமாம். போற்று - துதி. ஓவார் - நீங்காதவர். தீ - வேள்வித்தீ. சேய் - உயர்வின் நீட்சி.

அலையாரும் புனறுறந்த வமணர்குண்டர் சாக்கியர்
தொலையாதங் கலர்தூற்றத் தோற்றங்காட்டி யாட்கொண்டீர்
தலையான நால்வேதந் தரித்தார்வாழுந் தலைச்சங்கை
நிலையார்ந்த கோயிலே கோயிலாக நின்றீரே. 10

நளிரும் புனற்காழி நல்லஞான சம்பந்தன்
குளிருந் தலைச்சங்கை யோங்குகோயின் மேயானை
ஒளிரும் பிறையானை யுரைத்தபாட லிவைவல்லார்
மிளிருந் திரைசூழ்ந்த வையத்தார்க்கு மேலாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*10.* புனல் துறந்த - குளித்தல் இல்லாத என்றவாறு. சாக்கியர் என்பது புதிய பாடம். தொலையாது - இடையில் ஒழியாமல். அலர் - பழி. நிலை - கோபுரநிலை.

*11.* நளிரும் - குளிரும். மேயானை - மேவிய பெருமானை. மிளிரும் - விளங்கும். திரைகடல். வையத்தார் - மண்ணுலகோர். மேலார் - வானுலகோராவர்.

---

மறைமுழங் குங்குழ லார்கலி காட்ட
வயற்கடைஞர்
பறைமுழங் கும்புக லித்தமி ழாகரன்
பற்றலர்போல்
துறைமுழங் குங்கரி சீறி மடங்கல்
சுடர்ப்பளிங்கின்
அறைமுழங் கும்வழி நீவரிற் சால
வரும்பழியே.

—அந்தாதி 52

## 56 திருவிடைமருதூர்

### 192 பதிகவரலாறு

பரவுவார் பிணிதீர்க்கும் நலத்தை உடைய திருவிடைமருதூர் மகாலிங்கேசரை வணங்கிப் பாடிய பலபதிகங்களுள் இதுவும் ஒன்று: (திருஞான-புராணம் - 410)

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

பொங்குநூன் மார்பினீர் பூதப்படையினீர் பூங்கங்கை
தங்குசெஞ் சடையினீர் சாமவேத மோதினீர்
எங்குமெழிலார் மறையோர்கண் முறையாலேத்த விடைமருதில்
மங்குரேய் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 1

நீரார்ந்த செஞ்சடையீர் நெற்றித் திருக்க ணிகழ்வித்தீர்
போரார்ந்த வெண்மழுவொன் றுடையீர் பூதம்பாடலீர்
ஏரார்ந்த மேகலையாள் பாகங்கொண் டீரிடைமருதில்
சீரார்ந்த கோயிலே கோயிலாகச் சேர்ந்தீரே. 2

அழன்மல்கு மங்கையி லேந்திப்பூத மவைபாடச்
சுழன்மல்கு மாடலீர் சுடுகாடல்லாற் கருதாதீர்
எழின்மல்கு நான்மறையோர் முறையாலேத்த விடைமருதில்
பொழின்மல்கு கோயிலே கோயிலாகப் பொலிந்தீரே. 3

---

1. படை - கணம். எழில் - அழகு. எங்கும் ஏத்த மகிழ்ந்தீர் என்க. மேலும் இவ்வாறே கூட்டுக. முறையால் - வேதாகம விதிப்படி. மங்குல் - மேகம்.

2. நிகழ்வித்தீர் - விளங்கச் செய்தீர். பூதம் பாடலீர் - பூதங்கள் பாடுதலை உடையீர். ஏர் - அழகு. சீர் - சிறப்பு, மேன்மை.

3. அழல் - தீ. சுழல் மல்கும் ஆடலீர் - சூழ்தல் நிறைந்த திருக்கூத்தை உடையீர். பொழில் - பூஞ்சோலை. பொலிந்தீர் - பொன்போல் விளங்கினீர்.

பொல்லாப் படுதலையொன் றேந்திப் புறங்காட்டாடலீர்
வில்லாற் புரமூன்று மெரித்தீர் விடையார்கொடியினீர்
எல்லாக் கணங்களு முறையாலேத்த விடைமருதில்
செல்வாய கோயிலே கோயிலாகச் சேர்ந்தீரே. 4

வருந்திய மாதவத்தோர் வானோரேனோர் வந்தீண்டிப்
பொருந்திய தைப்பூச மாடியுலகம் பொலிவெய்தத்
திருந்திய நான்மறையோர் சீராலேத்த விடைமருதில்
பொருந்திய கோயிலே கோயிலாகப் புக்கீரே. 5

சலமல்கு செஞ்சடையீர் சாந்தநீறு பூசினீர்
வலமல்கு வெண்மழுவொன் றேந்திமயானத் தாடலீர்
இலமல்கு நான்மறையோ ரினிதாவேத்த விடைமருதில்
புலமல்கு கோயிலே கோயிலாகப் பொலிந்தீரே. 6

புனமல்கு கொன்றையீர் புலியினதளீர் பொலிவார்ந்த
சினமல்கு மால்விடையீர் செய்யீர்கரிய கண்டத்தீர்
இனமல்கு நான்மறையோ ரேத்துஞ்சீர்கொ ளிடைமருதில்
கனமல்கு கோயிலே கோயிலாகக் கலந்தீரே. 7

---

4. பொல்லா - பொலிவில்லாத. விடையார் கொடி - எருதுருவெழுதியகொடி. 'ஏர்காட்டும் கோதிலா ஏறுங்கொடி' (திருவா - திருத்தசா - 10). எல்லாக் கணங்களும் - சிவகணம் முதலிய எல்லாமும். செல்வு ஆய - செல்வமாகிய. அம்விகுதி கெட்டது. 'செல்வாய செல்வம் தருவாய் போற்றி,' (அப்பர்) 'செல்வாய்த்திருவானாய் நீயே' (அப்பர். 255:- 3).

5. வருந்திய - தவத்தால் மெய் வருந்திய. ஏனோர் - மண்ணோர், பாதலத்தோர் முதலியோர். ஈண்டி - கூடி. இத் தலத்தில் தைப்பூசத்தில் தீர்த்தமாடி வழிபடுதல் தொன்று தொட்டு நிகழும் வழக்கு. 'தேசம்புகுந்தீண்டி ஓர் செம்மை உடைத்தாய், பூசம் புகுந்தாடி' 'பூசம் நாம் புகுதும் புனலாடவே' (அப்பர்). பொலிவு - சிவப்பொலிவு.

6. சலம் - கங்காஜலம். வலம் - வெற்றி, வலப்பக்கமும் ஆம். இலம் - இல்லம்; வீடு. பற்றின்மையும் ஆகும். புலம் - அறிவு, இடமுமாம்.

7, புனம் - கொல்லை. அதள் - தோல். மால் விடை - திருமாலாகிய எருது; அறவிடை, உயிர் விடை என்பவை

சிலையுய்த்த வெங்கணையாற் புரமூன்றெரித்தீர் திறலரக்கன்
தலைபத்துந் திண்டோளு நெரித்தீர் தையல்பாகத்தீர்
இலைமொய்த்த தண்பொழிலும் வயலுஞ்சூழ்ந்த விடைமருதில்
நலமொய்த்த கோயிலே கோயிலாக நயந்தீரே. 8

மறைமல்கு நான்முகனு மாலுமறியா வண்ணத்தீர்
கறைமல்கு கண்டத்தீர் கபாலமேந்து கையினீர்
அறைமல்கு வண்டினங்க ளாலுஞ்சோலை யிடைமருதில்
நிறைமல்கு கோயிலே கோயிலாக நிகழ்ந்தீரே. 9

சின்போர்வைச் சாக்கியரு மாசுசேருஞ் சமணரும்
துன்பாய கட்டுரைகள் சொல்லி யல்லறூற்றவே
இன்பாய வந்தணர்க ளேத்துமேர்கொ ளிடைமருதில்
அன்பாய கோயிலே கோயிலாக வமர்ந்தீரே. 10

---

வேறு. இம்மூன்றும் சிவபிரானுக்கு ஊர்தி. செய்யீர் - செந்நிறத்தை உடையீர். 'செம்மேனியெம்மான்'. இனம் - கூட்டம். மறைக்கும், மறையோர்க்கும் பொது. கனம் - மேகம், கோயிலின் உயர்ச்சி குறித்தது.

8. உய்த்த - செலுத்திய. திறல் - வலிமை. தையல் - உமாதேவியார். நலம் - அழகு. நயந்தீர் - விரும்பினீர்.

9. கறை - நஞ்சின் கறுப்பு. அறை - ஓசை. கபாலம் - பிரும்ம கபாலம். ஆலும் - ஒலிக்கும். நிறை - 'நிறையால் நினைபவர்'. நிகழ்ந்தீர் - விளங்கினீர்.

10. சின் (போர்வை) - சின்மை, அற்பம். திரிபு, 'நன் பொருண்' என்பதிற் போல லகரம் னகரமாகத்திரிந்தது. துன்பு ஆயகட்டுரைகள் - துன்பந்தருவனவாய கட்டிச்சொல்லியவை. அல்லல் - துன்பம். இன்பு - இன்பம். அன்பு ஆயகோ 'அன்பே சிவம்' அன்பிற்குரியதாகிய கோயிலுமாம். அமர்தல் - விரும்பியிருத்தல்.

கல்லின் மணிமாடக் கழுமலத்தார் காவலவன்
நல்ல வருமறையா னற்றமிழ் ஞானசம்பந்தன்
எல்லி யிடைமருதி லேத்துபாட லிவைபத்தும்
சொல்லு வார்க்குங் கேட்பார்க்குந் துயரமில்லையே. 11

திருச்சிற்றம்பலம்

---

*11.* கல்லின் மணிமாடம் - கல்லாற் கட்டப்பட்ட அழகிய மாடங்களையுடைய (கழுமலம்). கழுமலத்தார் - சீகாழியில் உறையும் சிவமறையோர். காவலவன் - அரசன்; வேந்தன். 'சண்பையர் வேந்தன்.' எல்லி - இரவு. துயரம் - பிறப்பு இறப்புக்கள்.

---

பழிக்கே தருகின்ற தின்றிப் பிறைபல்
கதிர்விழுந்த
வழிக்கே திகழ்தரு செக்கரைக் கொச்சை
வயவரென்னும்
மொழிக்கே விரும்பி முளரிக் கலமரும்
ஓவியர்தங்
கிழிக்கே தரும்உரு வத்திவள் வாட்டிடக்
கீள்கின்றதே. —அந்தாதி 53

கிளரிக் குன்றத் தரவம் உமிழ்ந்த
கிளர்மணியின்
வாளரிக் கும்வைகை மாண்டனர் என்பர்
வயற்புகலித்
தாளரிக் கும்மரி யான்அருள் பெற்ற
பரசமய
கோளரிக் குங்கிக ராத்தமிழ் நாட்டுள்ள
குண்டர்களே. —அந்தாதி 54

# 57 திருநல்லூர்

## 193 பதிகவரலாறு

முதல் திருமுறை பதிகம் 86 - இன் பதிக வரலாறு பார்க்க.

### பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

பெண்ணமருந் திருமேனி யுடையீர் பிறங்கு சடைதாழப்
பண்ணமரு நான்மறையே பாடியாடல் பயில்கின்றீர்
திண்ணமரும் பைம்பொழிலும் வயலுஞ்சூழ்ந்த திருநல்லூர்
மண்ணமருங் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 1

அலைமல்கு தண்புனலும் பிறையுஞ்சூடி யங்கையில்
கொலைமல்கு வெண்மழுவு மனலுமேந்துங் கொள்கையீர்
சிலைமல்கு வெங்கணையாற் புரமூன்றெரித்தீர் திருநல்லூர்
மலைமல்கு கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 2

---

1. பெண்ணமருந் திருமேனி உடையீர் - மங்கை பங்கரே. பிறங்கு - விளங்குகின்ற. பண் - இசை. திண் - உறுதி. மண் அமரும் - மண்ணோர் விரும்பும். நிலத்தில் பொருந்தும் என்பது சிறந்ததன்று, 'வானமருங்கோயில்' (பா - 4) 'வான்தோயுங் கோயில் (பா - 7).

2. தண்புனல் - குளிர்நீர்; கங்கை. அனல் - தீ. கொள்கை - விரதம்; மேற்கோளும் ஆம். சிலை - மேருமலையாகிய வில். வெங்கணை - திருமாலாகிய அம்பில் தீயாகியமுனை உடைமையால் வெம்மை கூறப்பட்டது, கணையின் கொடுமை குறித்தலுமாம். மலைமல்கு கோயில் - மலைபோலத் தோற்றம் நிறைந்த கோயில். 'வெள்ளிமால் வரையை - நேர் விரிசுடர்க் கோயில்' (பெரிய-2266 பா - 10 பார்க்க).

குறைநிரம்பா வெண்மதியஞ் சூடிக்குளிர்புன் சடைதாழப்
பறைநவின்ற பாடலோ டாடல்பேணிப் பயில்கின்றீர்
சிறைநவின்ற தண்புனலும் வயலுஞ்சூழ்ந்த திருநல்லூர்
மறைநவின்ற கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 3

கூனமரும் வெண்பிறையும் புனலுஞ்சூடுங் கொள்கையீர்
மானமரு மென்விழியாள் பாகமாகு மாண்பினீர்
தேனமரும் பைம்பொழிலின் வண்டுபாடுந் திருநல்லூர்
வானமருங் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 4

நிணங்கவரு மூவிலையு மனலுமேந்தி நெறிகுழலாள்
அணங்கமரும் பாடலோ டாடன்மேவு மழகினீர்
திணங்கவரு மாடரவும் பிறையுஞ்சூடித் திருநல்லூர்
மணங்கமழுங் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 5

---

3. குறைமதியம்; நிரம்பாமதியம்; வெண்மதியம் என்க. குறை நிரம்பாத மதியமென்று கொளின் இறைவன் திருமுடி மேற்பிறை என்றும் பிறையாகவே இருப்பதாம். தேய்தலுங் குறைதலுமில்லை என்று கொள்ளலும் ஆம். பறை - வாத்தியங்கள். நவின்ற - மிக்கொலித்த. சிறை - அணை. நவின்ற - செய்த. மறை நவின்ற - வேதங்களைப் பயிலுதற்கு இடமான.

4. கூன் - வளைவு. மான் அமரும் விழி - மான் மருண்டு நோக்குவது போல நோக்கும் விழிகள். கண் வேறு விழிவேறு ஆயினும் இரண்டும் ஒன்றுகக்கொண்டு இருவகை வழக்கிலும் ஆள்வர். மாண்பு - பெருமை. வான் - வானோர். அமரும் - விரும்பித்தொழும். வானளாவிய எனலுமாம். 'மண்ணமருங் கோயில்' (பா. 1) 'வான்தோயுங்கோயில்' (பா. 7).

5. நிணம் - கொழுப்பு. நெறிகுழலாள் - நெறித்த கூந்தலையுடைய உமாதேவியார். அணங்கு - தெய்வம். குழலாளாகிய அணங்கு என்றேனும் தெய்வத்தன்மை பொருந்திய பாடல் என்றேனும் கொள்ளலாம். திணம் (திண்ணம்)- உறுதியாக. கவரும் - (நஞ்சால் உயிரைக்)கவரும். அரவு - பாம்பு. பிறையைத் திண்ணங் கவரும் அரவு எனலும் பொருந்தும். 'சொலீர்......செஞ்சடையிற் பிறை பாம்புடன் வைத்ததே' (137: - 1) மணம் - சிவமணம். கமழும் - மணக்கும்.

கார்மருவு பூங்கொன்றை சூடிக்கமழ்புன் சடைதாழ
வார்மருவு மென்முலையாள் பாகமாகு மாண்பினீர்
தேர்மருவு நெடுவீதிக் கொடிகளாடுந் திருநல்லூர்
ஏர்மருவு கோயிலே கோயிலாக விருந்தீரே. 6

ஊன்றோயும் வெண்மழுவு மனலுமேந்தி யுமைகாண
மீன்றோயுந் திசைநிறைய வோங்கியாடும் வேடத்தீர்
தேன்றோயும் பூம்பொழிலின் வண்டுபாடுந் திருநல்லூர்
வான்றோயுங் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 7

காதமரும் வெண்குழையீர் கறுத்தவரக்கன் மலையெடுப்ப
மாதமரு மென்மொழியாண் மறுகும்வண்ணங் கண்டுகந்தீர்
தீதமரா வந்தணர்கள் பரவியேத்துந் திருநல்லூர்
மாதமருங் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 8

---

*6. கார் - கார்காலம். 'காரார் கொன்றை' (1. 56. 1) 'கார்மலி கொன்றை' (3. 60. 6) 'காரினூர் மலர்க்கொன்றை தாங்கு கடவுள்' (186. 6) 'கார்க் கொன்றைமாலை கலந்ததுண்டோ' 'காரினூர் கொன்றைக் கண்ணியார்' (162; - 6) வார் - கச்சு. 'தேர்மருவு நெடுவீதிக் கொடிகள் ஆடும்' என்றதால், திருநல்லூரின் பிரமோற்சவமும் மாட வீதிகளின் சிறப்பும் குறித்தவாறு. ஏர் - அழகு.*

*7. ஊன் - தசை. மீன் தோயும் திசை - நட்சத்திரங்கள் பொருந்திய வானம். இது பத்துத் திக்குகளுள் மேலிடம். வேடம் - நடனக்கோலம். வான் தோயும் கோயில்:- 'வான் அமரும் கோயில்' (பா. 4).*

*8. காது - காதில். கறுத்த - கோபித்த. கருநிறமுடைய 'நீலமாமணி நிறத்து அரக்கனை இருபது கரத்தொடு ஒல்க வாலினால் கட்டிய வாலியார்' (3. 91. 8). மாது - காதல். மறுகும் வண்ணம் - கலங்கும்படி. கண்டு உகத்தல்:- மகிழ் விளையாட்டு. தீது அமரா - தீவினையை வெறுத்த. மாது - பெருமை.*

போதின்மே லயன்றிருமால் போற்றியும்மைக் காணது
நாதனே யிவனென்று நயந்தேத்த மகிழ்ந்தளித்தீர்
தீதிலா வந்தணர்க டீமூன்ஞேம்புந் திருநல்லூர்
மாதரா ளவளோடு மன்னுகோயின் மகிழ்ந்தீரே. 9

பொல்லாத சமணரொடு புறங்கூறுஞ் சாக்கியரொன்
றல்லாதா ரறவுறைவிட் டடியார்கள் போற்றோவா
நல்லார்க ளந்தணர்க ளுளுமேத்துந் திருநல்லூர்
மல்லார்ந்த கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 10

கொந்தணவும் பொழில்புடைசூழ் கொச்சைமேவு குலவேந்தன்
செந்தமிழின் சம்பந்தன் சிறைவண்புனல்சூழ் திருநல்லூர்ப்
பந்தணவு மெல்விரலாள் பங்கன்றன்னைப் பயில்பாடல்
சிந்தனையா லுரைசெய்வார் சிவலோகஞ்சேர்ந் திருப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*9.* போது - செந்தாமரைப்பூ. அயன் - பிரமன். 'நாதனே இவன்' என்று ஏத்தமகிழ்ந்து அளித்தீர். நயந்து - விரும்பி, பக்திகொண்டுமாம். தீ மூன்று - ஆகவனீயம், காருக பத்தியம், தாட்சிணுக்கினி. மாதராள் - அழகுடையாராகிய உமாதேவியார். மன்னு - நிலையுற்ற.

*10.* பொல்லாத - தீய. அறவுரை - இகழ்ச்சிக் குறிப்பு. போற்று - துதி. ஓவா - நீங்காத. மல் - மலை. 'மற்பகமலர்ந்த திண்டோள் வானவர்' (கம்பர், பால: உரைக்காட்சிப் 52). 'மல்லினும் உயர்தோளாய் மலரடிபிரியாதேன்' (கங்கைப்-66).

*11.* கொந்து - பூங்கொத்து. புடை - பக்கம். கொச்சை - சீகாழி. செந்தமிழில் மறைப்பொருளை அருளியதால் 'செந்தமிழின் சம்பந்தன்' என்னும் உரிமை உண்டாயிற்று. சிறை - அணை. 'பந்தார் விரலி' என்னும் அம்பிகையின் திருப்பெயரை நினைக்க. சிந்தனையால் - தியானத்தோடு.



"வாகை நுண்துளி வீசும் வாழ் கொளிபுத்தூர்க்கோயில்"

—பக்கம் 444

# 58 திருக்குடவாயில்

## 194 பதிகவரலாறு

தமிழ்விரகர் திருவிருப்பூளை, திரு அரதைப் பெரும்பாழி, திருச்சேறை, திருநாலூர் என்னும் தலங்களை வழிபட்டுத் திருக்குடவாயிலை அடைந்தார். அங்கு அருளிய திருப்பதிகங்களுள் இதுவும் ஒன்று.

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

கலைவாழு மங்கையீர் கொங்கையாருங் கருங்கூந்தல்
அலைவாழுஞ் செஞ்சடையி லரவும்பிறையு மமர்வித்தீர்
குலைவாழை கமுகம்பொன் பவளம்பழுக்குங் குடவாயில்
நிலைவாழுங் கோயிலே கோயிலாக நின்றீரே. 1

அடியார்ந்த பைங்கழலுஞ் சிலம்புமார்ப்ப வங்கையில்
செடியார்ந்த வெண்டலையொன் றேந்தியுலகம் பலிதேர்வீர்
குடியார்ந்த மாமறையோர் குலாவியேத்துங் குடவாயில்
படியார்ந்த கோயிலே கோயிலாகப் பயின்றீரே. 2

---

1. கலை - ஆண் மான். 'புல்வாய்க்கே அன்றிக் கலையென் காட்சி உழைக்கும் உரித்து' (தொல்,மரபியல். 42-3). கொங்கு - மணம், பூந்தாது, தேன். கூந்தல் அலை - கூந்தலை உடைய அலைமகளாகிய கங்கை. கமுகம் - பாக்கு. பொன் பவளம் பழுக்கும் - பொன்னையும் பவளத்தையும்போலப் பழுக்கும். நிலை - குடவாயில் நிலை. குடவாயிலாகிய நிலையில்.

2. கழலும் சிலம்பும் காலணி விசேடம். செடி - குணமின்மை. நாற்றமுமாம். தேர்வீர் - தெரிவீர். குலாவி கொண்டாடி.

கழலார்பூம் பாதத்தீ ரோதக்கடலில் விடமுண்டன்
றழலாருங் கண்டத்தீ ரண்டர்போற்று மளவினீர்
குழலார வண்டினங்கள் கீதத்தொலிசெய் குடவாயில்
நிழலார்ந்த கோயிலே கோயிலாக நிகழ்ந்தீரே. 3

மறியாருங் கைத்தலத்தீர் மங்கைபாக மாகச்சேர்ந்
தெறியாரு மாமழுவு மெரியுமேந்துங் கொள்கையீர்
குறியார வண்டினங்க டேன்மிழற்றுங் குடவாயில்
நெறியாருங் கோயிலே கோயிலாக நிகழ்ந்தீரே. 4

இழையார்ந்த கோவணமுங் கீளுமெழிலா ருடையாகப்
பிழையாத சூலம்பெய் தாடல்பாடல் பேணினீர்
குழையாரும் பைம்பொழிலும் வயலுஞ்சூழ்ந்த குடவாயில்
விழவார்ந்த கோயிலே கோயிலாக மிக்கீரே. 5

---

3. ஓதம் - அலையை உடைய. விடம் உண்டு அன்று அழல் ஆரும் கண்டத்தீர் என்க. அழல் - நஞ்சினது வெப்பம். அண்டர் - தேவர். போற்றும் அளவினீர் - வழிபடும் அளவிற் கேற்ற அருள் செய்வீர். குழல் - மகளிர் கூந்தல், குழலில் உள்ள மாலையிற் படிந்த வண்டு எனலுமாம். ஆர - நிறைய. குழலார - வேய்ங்குழலொலி நிறைய எனலும் பொருந்தும். நிழல் - ஒளி, அருள்.

4. மறி - மான்கன்று. "யாடும் குதிரையும் நவ்வியும் உழையும் ஓடும் புல்வாய் உளப்பட மறியே". (மரபியல்.சூ.12.) கைத்தலத்தீர் - கையிடத்தையுடையவரே! எறி (எறிதல்) - வீசுதல். எரி - தீ. குறி - போதுகளை மலர்த்தும் குறிப்பு. ஆர - பொருந்த. தேன் - தேனை உண்ணும் பொருட்டு. மிழற்றும் - பாடும். நெறி - வேதாகம வழி. ஆரும் - பொருந்தும்.

5. இழை - நூலிழை. கீள் - கிழி, கீழ், கீள் என மருவிற்று. 'மடையில்...சாம்பற்பூச்சும் கீழ் உடையும் கொண்ட உருவம்', (பதி - 23 - பா - 1). 'கீளார் கோவணமும் திருநீறும் மெய்பூசி' (சுந்தரர் 240). 'கீளலால் உடையுமில்லை' (4 - 40- 7). குழை - தளிர். விழவு - திருவிழாக்கள்.

அரவார்ந்த திருமேனி யானவெண்ணீ றுடினீர்
இரவார்ந்த பெய்பலிகொண் டிமையோரேத்த நஞ்சுண்டீர்
குரவார்ந்த பூஞ்சோலை வாசம்வீசுங் குடவாயில்
திருவார்ந்த கோயிலே கோயிலாகத் திகழ்ந்தீரே. 6

பாடலார் வாய்மொழியீர் பைங்கண்வெள்ளே றூர்தியீர்
ஆடலார் மாநடத்தீ ரரிவைபோற்று மாற்றலீர்
கோடலார் தும்பிமுரன் றிசைமிழற்றுங் குடவாயில்
நீடலார் கோயிலே கோயிலாக நிகழ்ந்தீரே. 7

கொங்கார்ந்த பைங்கமலத் தயனுங்குறளாய் நிமிர்ந்தானும்
அங்காந்து தள்ளாட வழலாய் நிமிர்ந்தீ ரிலங்கைக்கோன்
தங்காதன் மாமுடியுந் தாளுமடர்த்தீர் குடவாயில்
பங்கார்ந்த கோயிலே கோயிலாகப் பகர்ந்தீரே. 8

* * * * 9

6. அரவு - பாம்பு. வெண்ணீருடினீர் - திருவெண்ணீற்றில் மூழ்குதலுடையீர். இரவு - இரத்தல். குரவு - குராமரம். வாசம் - மணம். திரு - அழகு; 'சென்றடையாத்திரு'.

7. பாடல் - வேதப்பாடலில். ஆர் - பொருந்திய. வாய் மொழியீர் - சத்தியவார்த்தையாக விளங்குபவரே. வேதப்பாடல் பொருந்திய திருவாய்ச்சொல் உடையீர் எனலுமாம். ஏறு - ரிஷபம். ஊர்தி - வாகனம். மாநடத்தீர் - மகாதாண்டவம் செய்தீர். அரிவை - உமாதேவியார். ஆற்றல் - வலிமை. கோடல் - வெண்காந்தள். தும்பி - வண்டு. முரன்று - ஒலித்து. மிழற்றும் - இசை பாடும். நீடல் - நீளுதல்.

8. கொங்கு - தேன், மணம். கமலத்து அயனும் - தாமரைமீதுள்ள பிரமனும். குறளாய் - வாமனமூர்த்தியாய். நிமிர்ந்தானும் - விக்கிரமனும். அங்காந்து - வாய்திறந்து. தள்ளாட - அசைய. தம் காதல் - தம்முடைய காதலை விளக்கக்கூடிய. மா - பெரிய. தாளும் - அடியும். பங்கு - கூறு.

தூசார்ந்த சாக்கியருந் தூய்மையில்லாச் சமணரும்
ஏசார்ந்த புன்மொழிநீத் தெழில்கொண்மாடக் குடவாயில்
ஆசாரஞ் செய்மறையோ ரளவிற்குன்று தடிபோற்றத்
தேசார்ந்த கோயிலே கோயிலாகச் சேர்ந்தீரே. 10

நளிர்பூந் திரைமல்கு காழிஞான சம்பந்தன்
குளிர்பூங் குடவாயிற் கோயின்மேய கோமானை
ஒளிர்பூந் தமிழ்மாலை யுரைத்தபாட லிவைவல்லார்
தளர்வான தானொழியத் தகுசீர்வானத் திருப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

10. தூசு - துரிசு ஏறிய உடை. தூய்மை - பரிசுத்தம். ஏசு - இகழ்ச்சி. புன்மொழி - புல்லிய சொற்கள். நீத்து - நீக்கி. எழில் - அழகு. மாடம் - மாடக்கோயில்; மாடங்களை யுடைய எனினுமாம். ஆசாரம் - நல்லொழுக்கம். (வைதிக மார்க்கம்). குன்றுது - குறையாது. தேசு - ஒளி.

11. நளிர் - குளிர். திரை - அலை. மல்கு - மிக்க. மேய - மேவிய. கோமானை - கோமகனை. ஒளிர் - விளங்கும். தமிழ்ப் பூமாலை என மாற்றுக. தளர்வு ஆன - தளர்வாகிய துன்பங்கள். தான் - தானே. தகுசீர் - தக்கசீர். (வினைத் தொகை).

---

குண்டகழ் சூழ்தரு கொச்சைத் தலைவன்றன்
குன்றகஞ்சேர்
வண்டக மென்மலர் வில்லியன் னீர்வரி
விற்புருவக்
கண்டக வாளி படப்புடை வீழ்செங்
கலங்கலொடும்
புண்டகக் கேழல் புகுந்ததுண் டோநுங்கள்
பூம்புனத்தே. —அந்தாதி 55

# 59 சீகாழி

## 195 பதிகவரலாறு

137 ஆவது பதிகத் தலைப்பைக் காண்க.

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

நலங்கொண் முத்து மணியு மணியுந் திரளோதக்
கலங்க டன்னிற் கொண்டு கரைசேர் கலிக்காழி
வலங்கொண் மழுவொன் றுடையாய் விடையா யெனவேத்தி
அலங்கல் சூட்ட வல்லார்க் கடையா வருநோயே. 1

ஊரா ருவரிச் சங்கம் வங்கங் கொடுவந்து
காரா ரோதங் கரைமே லுயர்த்துங் கலிக்காழி
நீரார் சடையாய் நெற்றிக் கண்ணா வென்றென்று
பேரா யிரமும் பிதற்றத் தீரும் பிணிதானே. 2

---

1. நலம் - அழகு. முத்தும் மணியும் அணியும் தலங்களில் ஓதம்கொண்டு சேர்காழி என்க. ஓதம் - அலைகளையுடைய கடல். கலங்கள் - மரக்கப்பல். தன் - சாரியை. கலி - ஓசையை யுடைய, செழிப்புமாம். வலம் - வெற்றிக்குரிய வலிமை. விடையாய் - எருதுவாகனனே!. அலங்கல் - பூமாலை. அருநோய் - தீர்தற்கு அருமையதான பிறவிநோய் முதலியவை. ஏத்திச் சூட்டவல்லார்க்கு நோய் அடையா என்க.

2. ஊர் ஆர் சங்கம் - ஊர்தல் பொருந்திய சங்குகளையும். உவரி - உப்பையுடைய கடலில் (உள்ள சங்குகளை). வங்கம் - கப்பல். கொடு - கொண்டு. கார் ஆர் ஓதம் - மேகம் உண்ணும் கடலின் அலைகள். வங்கம் கரைமேல் உயர்த்தப்படல் இல்லை யாதலின், வங்கம் செயப்படுபொருளாகாது. வங்கம் சங்கத்தைக் கொண்டுவந்து ஓதம் கரைமேல் உயர்த்தும் என்க. கொடுவரல் வங்கத்தின் வினை. உயர்த்துதல் ஓதத்தின் வினை. என்று என்று:- அடுக்கு இடைவிடாது சொல்லற் பொருட்டாய் நின்ற குறிப்பு. ஆயிரம் பேரும் - அநேக நாமங்களையும். பிணிதீரும்.

வடிகொள் பொழிலின் மழலை வரிவண் டிசைசெய்யக்
கடிகொள் போதிற் றென்ற லணையுங் கலிக்காழி
முடிகொள் சடையாய் முதல்வா வென்று முயன்றேத்தி
அடிகை தொழுவார்க் கில்லை யல்ல லவலமே. 3

மனைக்கே யேற வளஞ்செய் பவளம் வளர்முத்தங்
கனைக்குங் கடலு ளோத மேறுங் கலிக்காழிப்
பனைக்கைப் பகட்டீ ருரியாய் பெரியா யெனப்பேணி
நினைக்க வல்ல வடியார் நெஞ்சி னல்லாரே. 4

பரிதி யியங்கும் பாரிற் சீரார் பணியாலே
கருதி விண்ணோர் மண்ணோர் விரும்புங் கலிக்காழிச்
சுருதி மறைநான் கான செம்மை தருவானைக்
கருதி யெழுமின் வழுவா வண்ணந் துயர்போமே. 5

---

3. வடி - திருத்தம், 'வடிநீள்மதில்' புறம். 18. மாம்பிஞ்சு என்றுமாம். மழலை - நிரம்பா மொழிபோலும் இனிமை செய்யும் வண்டின் ஓசை. கடி - மணம். போதின் தென்றல் - மலரும் பருவத்தையுடைய போதுகளிற்பட்டு அவற்றின் மணத்தைக் கொண்டு எறியும் (மந்தமாருதம்) தென்காற்று. சடைமுடி. முயன்று - 'தவமுயன்று'. அடி - திருவடிகளை. கைதொழுவார்க்கு அல்லலும் அவலமும் இல்லை என்க. அல்லலால் வரும் அவலம் எனலுமாம். அல்லல் - துன்பம். அவலம் - அழுகை, சோர்வு, வறுமை.

4. மனை - வீடு. கனைக்கும் - ஒலிக்கும். ஓதம் - அலை. பனைகைபகடு ஈர்உரியாய் - பனைமரம் போலும் பருத்த துதிக்கையையுடைய யானையின் ஈர்த்ததோலைப் போர்த்தவரே!. ஈர் - ஈர்த்த, உரித்த. ஈர் உரி - (ஈர்மை - குளிர்ச்சி) ஈரியதாய உரி எனப் பண்புத் தொகையுமாம். பேணி - விரும்பி. நெஞ்சின் நல்லார் - நெஞ்சின் நன்மையையுடையார். நல்ல நெஞ்சத்தார்.

5. பரிதி - சூரியன். இதைப் பருதி என்றெழுதுவது குரிசில் என்பதைக் குருசில் என்றெழுதுவது போலும் பிழை. (இலக்கியச் சொல்லகராதியின் உபக்கிரமணிகையில் பக்கம் 15. பார்க்க.) அடிசில், பரிசில் முதலியவற்றுள் இரண்டாவதெழுத்து உகரமாய் நிற்றலில்லாமையே அதற்குச் சான்று. 'பரிசிலர்க்கு

மந்த மருவும் பொழிலி லெழிலார் மதுவுண்டு
கந்த மருவ வரிவண் டிசைசெய் கலிக்காழிப்
பந்த நீங்க வருளும் பரனே யெனவேத்திச்
சிந்தை செய்வார் செம்மை நீங்கா திருப்பாரே. 6

புயலார் பூமி நாம மோதிப் புகழ்மல்கக்
கயலார் கண்ணார் பண்ணா ரொலிசெய் கலிக்காழிப்
பயில்வான் றன்னைப் பத்தி யாரத் தொழுதேத்த
முயல்வார் தம்மேல் வெம்மைக் கூற்ற முடுகாதே. 7

---

அருங்கலம் நல்கவும் குரிசில் வலியவாகும் நின்தாள்தோய் தடக்கை' (புறம் 14.) 'பரிசில் நல்குவையாயிற் குரிசில் நீ' (146) 'பரிசில் மன்னும் குரிசில் கொண்டதுவே' (333) என எதுகையில் நின்றதறிக. ஏனையிடங்களுள், குருசில் என்றிருத்தல் பொருந்தாமை இவ்விரண்டு காரணங்களால் புலப்படும். சுருதி - கேள்வி. நான்மறைக் கேள்வியான செம்மை தருவானை வழுவாவண்ணம் கருதி எழுமின் துயர்போம் என்க. ஆசிரியர், நான்மறைகளையும் ஆறங்கங்களையும் நினைவூட்டும் இடங்களை நோக்கின் 'வேதநெறி தழைத்தோங்க......அமுத' உண்மை தெளிவாகும்.

6. மந்தம் - தென்றல் காற்று. மருவும் - பொருந்தும். எழில் - எழுச்சி. மது - தேன். கந்தம் - மணம். பந்தம் பசு பாசப்பற்று. ''பற்றற பற்றற என்பதெல்லாம் பசுபாசம் விடல் மற்றொரு பற்றறல் இல்லை என்றுன் மன்னும் வெங்கலியைச் செற்றருள் சிற்றம்பலநாடி வண்மைச் சிரபுரத்தோன் உற்ற தபோதனரே ஒழிந்தே இரும் உம்மையுமே'' எனும் (சிற்றம்பல நாடிகள் சாத்திரக்கொத்துள் வருங்) கட்டளைக் கலித்துறையை அறிக. 'பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரனை' அப்பசு பாசம் ஆகிய பந்தம் நீங்காமல் பார்த்தல் கூடாது. 'பந்தம் நீங்க அருளும் பரனே என ஏத்திச் சிந்தை செய்வார் செம்மை நீங்காது இருப்பார்' என்பது அதை இனிது விளக்கிற்று. செம்மை 'திருநின்ற செம்மை'. (அப்பர், 4. 8. 1. 7 - 396.)

7. புயல் - மேகம். பெருங்காற்று எப்போதும் உள்ள தன்மையின்மையின் பொருந்தாது. பூமி-மண்ணிடத்துள்ளோர்.

அரக்கன் முடிதோ ளெரிய வடர்த்தா னடியார்க்குக்
கரக்க கில்லா தருள்செய் பெருமான் கலிக்காழிப்
பரக்கும் புகழான் றன்னை யேத்திப் பணிவார்மேற்
பெருக்கு மின்பந் துன்பமான பிணிபோமே. 8

மாணா யுலகங் கொண்ட மாலு மலரோனுங்
காணா வண்ண மெரியாய் நிமிர்ந்தான் கலிக்காழிப்
பூணார் முலையாள் பங்கத் தானைப் புகழ்ந்தேத்திக்
கோணா நெஞ்ச முடையார்க் கில்லைக் குற்றமே. 9

---

நாமம் - 'சிவனெனும் நாமம்' 'நந்திநாமம் நமச்சிவாயவே'. 'நல்லநாமம் நவிற்றி உய்ந்தேன்' 'நாமம்பரவி நமச்சிவாய என்னும் அஞ்செழுத்தும்......உரைக்கத் தருதி' 'திருநாமம் அஞ்செழுத்தும் செப்பாராகில்' 'பராபரன் என்பது பேராக் கொண்டார்' (அப்பர். 310. பொது. 11.). கயல் ஆர் கண்ணார் - மீனேக்கியர். 'கயற்கண்ணி'யர். பண் ஆர் ஒலி - பண்ணொடு பொருந்திய இசை. பயில்வான் தன்னை - பயின்றதொல்லோனை (சிவபிரானை) 'பழையோன்'. பத்தி-பக்தி, அன்பு. ஆர-நிறைய. முயல்வார்மீதே முடுகாது கூற்று என்றால், முயன்றார்மீது முடுகாமை கூறல்வேண்டா. 'விண்ணிடைத் தருமராசன் வேண்டினால் விலக்குவார் ஆர்? பண்ணிடைச் சுவைகள் பாடி ஆடிடும் பத்தர்க்கு என்றும் கண்ணிடை மணியர்போலும் கடவூர் வீரட்டனாரே' (.31. 2) 'கொன்றாய் காலனுயிர் கொடுத்தாய் மறையோனுக்கு' (7 - 281.).

8. அரக்கன் - இராவணன். அடியார்க்குக் கரக்ககில்லாது- அடியவர்க்கு (அருளை) மறைக்கமாட்டாமல். கில் - ஆற்றலை உணர்த்துவது. சிவபெருமான் தன் அடியவர்க்கு அருளை மறைக்கும் ஆற்றல் இல்லாதவன் என்பதுணர்க. 'குறைவிலா நிறைவு' எனப்படும் பரமேச்சுவரனுக்கும், தன் அடியார்க்கு இன்பங்கள் தருவதை மறுத்துக் கொள்ளும் ஆற்றல் இல்லாத ஒரு குறை உண்டு என்று உணர்த்திய நயம் போற்றத்தக்கது. பணிவார்மேல் இன்பம் பெருக்கும், துன்பமானபிணி போம். கில்லாமை:- 'கிற்றிலேன், கிற்பன் உண்ணவே' திருவாசகம் 45.

9. மாணாய் - வாமனனாய். மாண் - மாணி. குறுமாண் உருவன் தற்குறிக்காக' (1. 101. 5). 'மாணாகி வையம் அளந்

அஞ்சி யல்லன் மொழிந்து திரிவா ரமணாதர்
கஞ்சி காலை யுண்பார்க் கரியான் கலிக்காழித்
தஞ்ச மாய தலைவன் றன்னை நினைவார்கள்
துஞ்ச லில்லா நல்ல வுலகம் பெறுவாரே. 10

---

ததுவும்' என்று திருமங்கைமன்னன் பாடியதிலும் மாண் என்பது இப்பொருளில் வந்திருத்தல் அறிக. பூண் - ஆபரணம், பங்கத்தானை - (வாம) பாகத்தையுடைய சிவபெருமானை. கோணா நெஞ்சம் - திருகலில்லாத உள்ளத்தை. கோணல் - 'சிந்தைத்திருகு' 'மலக்கோண்' 'யான் செய்தேன் பிறர்செய்தார் என்னது யான் என்னும் இக்கோணை ஞானவெரியால் வெதுப்பி நிமிர்த்துத் தான் செவ்வே நின்றிட' (சிவஞான சித்தியார். கடவுள் வாழ்த்துரை+சூ. 10. திருவிருத்தம். 2.) லுடையார்க்குக் குற்றம் இல்லை என்க. 'இல்லைக்குற்றம்' என்று மிக்குப் புணர்ந்ததற்கு 'இல் என் கிளவி இன்மை செப்பின் வல்லெழுத்து மிகுதலும் ஐயிடைவருதலும்...ஆகிடன் உடைத்தே' என்ற (372) தொல்காப்பியச் சூத்திரவிதி காண்க.

10. அல்லல் - துன்பம் தரும் பேச்சுக்களை. ஆதர் - அறிவில்லார். காலையிற் கஞ்சி உண்ணும் தேரர் என்று கொள்க. அமணரை முற்கூறியதால், உண்பார் என்றது தேரரை என்க. தஞ்சம் - அடைக்கலம். 'தஞ்சம்' (3. 78. 10) 'தஞ்சம் என்று உன் சரண் புகுந்தேன், (3. 51. 6.) (தண்+து+அம்) துன்ப வெம்மையால் வந்து அடைந்தவர்க்குத் தண்மையுடையவரே, அடைக்கலமென்றபோது அபயம் அளிப்பர். அதனால் தஞ்சம் அடைதல் எனப்பட்டது. 'தஞ்சேகண்டேன்' (5. 50. 3.) என்று (தண்+து) அம்முப்பெறாது வருதலும் அறிக. 'தஞ்சவண்ணத்தர்'. (4. 17. 3. 1. 52. 5.) பார்க்க. 'அந்தணாளன் உன் அடைக்கலம் புகுத...உன் திருவடி அடைந்தேன்' (7 - 560) 'தஞ்சமென்று தன் தாளது அடைந்த பாலன்மேல்வந்த காலனை உருள நெஞ்சில் ஓர் உதைகொண்ட பிரானை நினைப்பவர் மனம் நீங்ககில்லானை' (7 - 961). துஞ்சல் - சாதல். நல்ல வுலகம் - பேரின்பவுலகு.

ஊழி யாய பாரி லோங்கு முயர்செல்வக்
காழி யீசன் கழலே பேணுஞ் சம்பந்தன்
றாழு மனத்தா லுரைத்த தமிழ்க ளிவைவல்லார்
வாழி நீங்கா வானோ ருலகின் மகிழ்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. ஊழி ஆய பாரில் - உக முடிவு ஆன மண்ணுலகில், ஓங்கும் காழி - பிரளய வெள்ளத்தால் அழியாமல் மேல் மிதந்த தோணிபுரம். உயர் செல்வம் - அழியாமல் உயர்ந்த செல்வத்தை உடைய. 'கழலே பேணும் சம்பந்தன்' என்ற பிரிநிலை ஏகாரம் உண்மைச் சைவர்க்குச் சிவபக்தியில் ஓர் உறைப்பை விளக்கும். தாழும் மனத்தால் - பணியும் உள்ளத்தால். 'வேற்காடு தாழ்வுடை மனத்தால் பணிந்தேத்திடப் பாழ்படும் அவர் பாவமே' (157 - 4) தாழும் மனமுடையவரே, 'கோழம் பத்துறை கூத்தன் குரைகழல் தாழும் பத்தர்கள்' ஆவர். 'தாழ்வெனுந் தன்மைவிட்டுத் தனத்தையே மனத்தில்வைத்து வாழ்வதே கருதித்தொண்டர் மறுமைக்கு ஒன்று ஈயகில்லார். (7 - 79) 'வாழ்வெனும் மையல் விட்டு வறுமையாம் சிறுமை தப்பித் தாழ்வெனுந் தன்மையோடும் சைவமாம் சமயம் சாரும் ஊழ் பெறலரிது' (சிவஞானசித்தியார் - 181) வாழி - வாழ்ச்சி. இகரம் தொழிற்பெயர் விகுதி.

---

புனத்தெழு கைம்மதக் குன்றம தாய்அங்கொர்
புண்கலையாய்
வனத்தெழு சந்தனப் பைந்தழை யாய்வந்து
வந்தடியேன்
மனத்தெழு பொற்கழல் ஞானசம் பந்தன்வண்
கொச்சைஅன்னாள்
கனத்தெழு கொங்கைக ளாய்அல்கு லாய்த்திவர்
கட்டுரையே. —அந்தாதி 56

# 60 திருப்பாசூர்

## 196 பதிகவரலாறு

பாரெல்லாம் உய்யவந்த பாலருவாயர், எம்மையாளும் அம்மை திருத்தலையாலே நடந்துபோற்றும் அம்மையப்பர் திருவாலங்காடு ஆம் என்று அம்மூதூர் மிதிக்க அஞ்சி அணுகச்சென்று, செம்மைநெறிவழுவாத பதியின் பக்கத்தில் உள்ள ஓரிடத்தில் இரவில் தங்கினர். இடையாமத்தில் கனவில் 'நம்மைப் பாடுதற்கு மறந்தனையோ' என்று ஆலங் காட்டப்பர் அருளினர். அவர் கருணைபோற்றி மெய்யுருகித் துஞ்சவருவார் எனத்தொடங்கும் சுருதிமுறை வழுவாத திருப்பதிகம் பாடிப் பழயனூர் வரலாற்றைச் சிறப்பித்துச் சொல்லித் திருவருளை உணர்த்தி அங்கிருந்து திருப்பாசூர் அணைந்து அருட்கருணைத் திருவாளன் நாமம் சிந்தை யிடையார் என்று அருளிய இசைப்பதிகம் இது.

### பண் - காந்தாரம்

### திருச்சிற்றம்பலம்

சிந்தை யிடையார் தலையின் மிசையார் செஞ்சொல்லார்
வந்து மாலை வைகும் போழ்தென் மனத்துள்ளார்
மைந்தா மணாளா வென்ன மகிழ்வா ரூர்போலும்
பைந்தண் மாதவி சோலை சூழ்ந்த பாசூரே. 1

---

1. சிந்தை, தலை, சொல் என மனம், காயம், வாக்கு ஆகிய திரிகரணங்களையும் உணர்த்தி அம் மூன்றிலும் சிவபெருமான் இருத்தலை மூவேறு சிறு வாக்கியங்களாக அருளிய திறம் அன்பரெல்லாராலும் அறியத்தக்கது. சிவ பூஜையில் அந்தரியா கத்தாலும், தோத்திரத்தாலும் இந்நிலையை அனுபவித்து உணர்ந்து போற்றுதல் இன்றியமையாதது. 61. 6. 'சிந்தையுள் ளும் நாவின் மேலும் சென்னியும் மன்னினன்' (1-73-9)- சிந்தையிடையார் - 'மனத்தகத்தான்'. தலையின் மிசையார் - 'தலைமேலான்'. செஞ்சொல்லார் - 'வாக்கினுள்ளான்'. 'மூவாத சிந்தையே மனமே வாக்கே தன் ஆணையாப்பண்ணியேறினன்'

பேரும் பொழுதும் பெயரும் பொழுதும் பெம்மானென்
றாருந் தனையு மடியா ரேத்த வருள்செய்வார்
ஊரு மரவ முடையார் வாழு மூர்போலும்
பாரின் மிசையார் பாட லோவாப் பாசூரே. 2

கையாற் றொழுது தலைசாய்த் துள்ளங் கசிவார்கண்
மெய்யார் குறையுந் துயருந் தீர்க்கும் விகிர்தனூர்
நெய்யா டுதலஞ் சுடையார் நிலாவு மூர்போலும்
பைவாய் நாகங் கோட லீனும் பாசூரே. 3

---

அப்பர் - 277. 'வாயானை - மனத்தானை' என்பது இதனின் வேறு. மாலை - மாலைப்பொழுது. (வந்து)வைகும்போழ்து- தங்கும்வேளையில். மைந்த ரென் றும் மணவாளரென்றும் துதிக்க மகிழ்பவர் (சிவபெருமான்). பாசூர் மகிழ்வார் ஊர்போலு மென் று கூட்டுக. பைந்தண் மாதவி - பசுமையும் தண்மையு முடைய குருக்கத்தி. பாசூர் - (பசுமை + ஊர்) இன் றும் பசுமை மிக்கதாகவே விளங்குகிறது.

2. பெயர்தல் - பேர்தல் என மருவும். ஆயினும் இங்கு இரண்டும் வேறுபட்டனவாகத் தோற்றுதலால் பொருளிலும் ஏதேனுமொரு வேறுபாட்டைக் கொள்ளுதல் வேண்டும். பேர்தல் முதன்முதலாக இடம் விட்டு அசைதல். பெயர்தல் மீண்டும் வருதல். இவ்விரண்டு காலத்தும் இறைவனை மனம் நிறைவுறுமளவும் அடியார் ஏத்த அருள் செய்வான். தனை - அளவு. ஊரும் அரவம் - நகரும் பாம்பு. பாரின்மிசையார் - மண்ணுலகத்தார். பாடல் - தோத்திரப் பாடல்கள். ஓவா - ஒழியாத. பாசூரே அருள் செய்வார் ஊர்போலும். 'பண்ணின் மொழியார்பாடல் ஓவாப்பாசூரே' (பா - 7). இவ்வாறே மேலும் கொள்க.

3. கைகளைப்பெற்றதன் பயனாகப் பாசூரீசன் பைங்கழலைத் தொழுதும், தலை உடையதன்பயனாக வணங்கியும், உள்ளம் வாய்ந்ததன் பயனாக உருகியும் வழிபடும் அடியார்களுடைய மெய்யிற் பொருந்திய குறைகளையும் துயரங்களையும் ஒழிக்கும் அநாதிமலமுத்தர். நெய் முதலிய அஞ்சும் (ஆனைந்தும்) ஆடு தலுடையார், திருமுறைகளுள் 'ஆனைந்து' எனப்படினும்




பொங்கா டரவும் புனலுஞ் சடைமேற் பொலிவெய்தக்
கொங்கார் கொன்றை சூடியென் னுள்ளங் குளிர்வித்தார்
தங்கா தலியுந் தாமும் வாழு மூர்போலும்
பைங்கான் முல்லை பல்லரும் பீனும் பாசூரே. 4

ஆடற் புரியு மைவா யரவொன் றரைச்சாத்தும்
சேடச் செல்வர் சிந்தையு ளென்றும் பிரியாதார்
வாடற் றலையிற் பலிதேர் கையா ரூர்போலும்
பாடற் குயில்கள் பயில்பூஞ் சோலைப் பாசூரே. 5

---

ஜலமும் மயமும் விட்டுப் பால் முதலிய மூன்றுமே கூறப் படும் உண்மையை ஆங்காங்குணர்க. 'ஆடினாய் நறுநெய்யொடு பால்தயிர்' 'பால் நறுநெய் தயிர் ஐந்தாடு பரம்பரன்' (7-84-9). நிலாவுதல் - நிலவுதல். பை வாய் நாகம் - படம் வாய்ந்த நாகம்; படத்தொடு கூடியவாய் எனினும் ஆம். நாகம் கோடல் ஈனும் - பாம்பைப்போல வெண்காந்தள் மலரைத்தோற்றும்.

4. 'கொன்றை சூடி நின்ற தேவை அன்றி ஒன்றும் நன்று இலோமே' என்று அருளிய உண்மையை உணர்ந்து நம்பியா ரூரரும், 'வம்பருவரிவண்டு மணம் நாற மலரும் மது மலர் நற்கொன்றையான் அடியலால் பேணா எம்பிரான் சம்பந்தனடி யார்க்கு மடியேன்' என்றருளினர். அதனை ஈண்டும் உணர் வாம். 'கொன்றைமாலை கொண்டடியேன் நானிட்டுக் கூறி நின்று பொய்யாத சேவடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே' என்று ஆளுடைய அரசரும் அருளியதை நினைக்க (6 - 99 - 8). சிவபூஜை செய்வோருக்குக் கொன்றைப் பூக்களால் வழிபடும் பேரன்பு உண்டு. பொலிவு - விளக்கம். எய்த - அடைய, கொங்கு - மணம். குளிர்வித்தாராகிய தாமும் தம் காதலியும் வாழும் ஊர் என்க. காதலி - உமாதேவியார். பைங்கான் - பசிய மணம்; - கால் கொடியையும் காட்டையும் கொடியேற நட்டகாலையும் குறித்ததாக்கோடலும் பொருந்தும். பல்லரும்பு - பல்போலும் அரும்பு; பல அரும்பு.

5. ஆடல் புரியும் - (படமெடுத்து) ஆடுதலைச்செய்யும். ஐவாய் அரவு - ஐந்தலைப் பாம்பு. அரை - திருவரை. சாத்தும் சார்த்தும். சேடச் செல்வர் - சேடராகிய செல்வர் (1-5-2) உடையவர், 'சேடர் வாழும் மாமறுகிற் சிரபுரக்கோன்

கானின் றதிரக் கனல்வாய் நாகங் கச்சாகத்
தோலொன் றுடையார் விடையார் தம்மைத் தொழுவார்கள்
மால்கொண் டோட மைய றீர்ப்பா ரூர்போலும்
பால்வெண் மதிதோய் மாடஞ் சூழ்ந்த பாசூரே. 6

கண்ணி னயலே கண்ணொன் றுடையார் கழலுன்னி
எண்ணுந் தனையு மடியா ரேத்த வருள்செய்வார்
உண்ணின் றுருக வுகவை தருவா ரூர்போலும்
பண்ணின் மொழியார் பாட லோவாப் பாசூரே. 7

---

'சேடர் விண்ணோர்கட்குத் தேவர்' (3 - 9 - 7) 'சேடர் தேவன் குடித்தேவர் தேவன்' (3-25-11) என்புழிப்போலப் பெரியோருமாம். (1 - 52 - 11). வாடல் தலை - வாடுதலை அடைந்த பிரம கபாலம். 'வாடல் வெண்தலை சூடினர்' (1 - 56 - 7) 'வாடல் வெண்டலை மாலை' (2 - 50 - 11). 'வாடற்றலைமாலை' (2 - 71 - 3) 'வாடல்வெண்தலை' (2-112-2) பாடல் குயில்கள் - பாடுதலையுடைய குயில்கள். பயில் - பயின்ற. பூஞ்சோலை.

6. கால் நின்று அதிர - திருவடி ஊன்றி நடஞ்செய்ய. கனல் - நஞ்சின் வெம்மை. கச்சு அரைக்கு அசைக்கும் கச்சு. விடையார் - இடபவாகனத்தார். மால் - அன்பு. (182 - 1.) மையல் - மயக்கம். மதிதோய் மாடம் - சந்திர மண்டலத்தை அளாவிய உயரியமாடம். பால் வெண்மதி - பால்போலும் வெண்ணிறத்தை உடைய திங்கள்.

7. கண்ணின் அயலே - வலக்கண்ணுக்கும் இடக்கண்ணுக்கும் அயலாகும் மேற்பக்கத்தில். கண் ஒன்று - நெற்றிக் (தீக்) கண்ணொன்றை. கழல் - திருவடி. உன்னி - நினைந்து. எண்ணும் தனையும் - அத்திருவடிச் சிறப்பைக் கருதுமளவும். உவகை - உவப்பிற்குரிய வரங்களும் முத்தி இன்பமும். 'உகவை' என்று கழகப்பதிப்பில் இருப்பது 'தான்நினைத்தைம்புனலும் அழிந்த சிந்தையந்தணாளர்' (1 - 53 - 6) என்பதில் புனலும் என்று புள்ளிமாறியதுபோல் இதிலும் புள்ளிமாறி நின்றவாறறிக. (பதி. 19 . பா. 3. பார்க்க) உவகை தருவான்:- மதுரை ஞானசம்பந்தப்பிள்ளை பதிப்பில் 'உவகை' என்றே உளது. அடங்கன் முறைப் பதிப்புகளில் அப்பதிப்பே மிக மேலானது என்பது அறிஞர் முடிபு. 'உரந்தோன்றும் பாடல் கேட்டு

தேசு குன்றுத் தெண்ணீ ரிலங்கைக் கோமானைக்
கூச வடர்த்துக் கூர்வாள் கொடுப்பார் தம்மையே
பேசிப் பிதற்றப் பெருமை தருவா ரூர்போலும்
பாசித் தடமும் வயலுஞ் சூழ்ந்த பாசூரே. 8

நகுவாய் மலர்மே லயனு நாகத் தணையானும்
புகுவா யறியார் புறநின் றோரார் போற்றோவார்
செகுவா யுகுபற் றலைசேர் கையா ரூர்போலும்
பகுவாய் நாரை யாரல் வாரும் பாசூரே. 9

---

உகவையளித்தீர். 'உகவிரதார் புரந்தோன்றும் மும்மதிலும் எரியச் செய்தீர்' (2 - 54 - 8). பண்ணின் - பண்ணைப்போன்ற. மொழியார் - மொழிகளை உடைய மகளிர். ஓவா - ஒழியாத. 'பாரின்மிசையார் பாடல் ஓவா' பா - 2.

8. தேசு - சூரியன் தன்மேல் செல்லாதிருப்பினும் சிவ பக்தியின் முதிர்ச்சியையுடைய அரசனது ஆட்சியாதலின் வையங்காக்கும் ஒளி. குன்று - குறையாத. தெள்நீர் இலங்கை - தெளிந்த நீரையுடைய கடல் நடுவிலே உள்ள இலங்கை. கூச - மனம் கூசுதலடைய. வீரத்தால் நாண என்பதும் பொருந்தும். வாள் கொடுத்த வரலாறு முன்னும் பின்னும் பல முறை கூறப் பெற்றுள்ளது. 'கொடுப்பார் தம்மையே பேசி' என்ற ஏகாரத்தை ஊன்றி நோக்குதல் நன்று. பெருமை - இம்மை மறுமை நலங்களும் வீட்டின்பமும். பாசி - நீர்ப்பாசி. தடமும் வயலும் நீர்வளத்தால் பசுமை உடையவாதலை உணர்த்தியது. இதனால் ஈண்டுப் பாசூரென்ற பெயர்க்காரணமும் நன்கு விளங்குகின்றது.

9. நகு வாய் மலர் - திறந்த வாயையுடைய தாமரை. நாகத்து அணையான - பாம்பணை மேலுறங்குபவன். புகு வாய் - சிவபெருமானைக் காணப் புகும் இடம். ஓரார் - உணரார். போற்று - துதி. ஓவார் - ஒழியார். செகு - அழிந்த. வாய் - வாயிலிருந்து. பல் உக்கதலை - பல் சிந்திய தலை. 'பல் இல் ஓடு கையேந்தி' (1 - 51 - 4) (2 - 91 - 6) (3 - 45 - 4) 'பல்லார் தலைசேர் மாலை' (2 - 63 - 3) 'வெண்பற்றலை கலனு' (7 - 506) 'பல் இல் வெள்ளைத்தலையன்' (7 - 831). பகு வாய் நாரை - பிளந்த வாயையுடைய நாரை. ஆரல்மீன்களை வாடும் பாசூர். வாடும் - வௌவும்.

தூய வெயினின் றுழல்வார் துவர்தோ யாடையார்
நாவில் வெய்ய சொல்லித் திரிவார் நயமில்லார்
காவல் வேவக் கணையொன் றெய்தா ரூர்போலும்
பாவைக் குரவம் பயில்பூஞ் சோலைப் பாசூரே. 10

ஞான முணர்வான் காழி ஞான சம்பந்தன்
தேனும் வண்டு மின்னிசை பாடுந் திருப்பாசூர்க்
கானம் முறைவார் கழல்சேர் பாட லிவைவல்லார்
ஊன மிலரா யும்பர் வானத் துறைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*10.* தூய வெயில் - நல்லவெயில். தூய்மை - கலப்பின்மை உணர்த்திற்று. 'சுத்தப்பொய்' என்பதுபோல. வெய்ய - கொடிய சொற்களை. நயம் - நீதி. காவல் - மும்மதில்; திரிபுரம் தொழிலாகுபெயர். பாவைக்குரவம் - பாவைபோலும் பூத்தலை யுடைய குரவமரம். 'அரவின்வாயின் முள்ளெயிறு ஏய்ப்ப அரும்பு ஈன்று குரவம்பாவை முருகமர் சோலைக் குற்றாலம்' (*1 - 99 - 9*).

*11.* ஞானம் - சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவ ஞானமாகிய உவமையிலாக் கலை ஞானமும், பவமதனை அற மாற்றும் பாங்கினிலோங்கிய ஞானமாகிய உணர்வரிய மெய்ஞ் ஞானமும். உணர்வான் - திருவருண் ஞானம் குழைத்து அளித்த அம்பிகையின் திருமுலைப்பால் குடித்த அந்நிலையில் (ஓதாது) உணர்ந்தவர். தேன் - நால்வகை வண்டுள் ஒன்று. திருப்பாசூர்க் கானம் - என்பதை நோக்கின் 'பைங்கான்' (பா-4) என்புழிக் காடென்னும் பொருள் ஏற்றதாதலறிக. ஊனம் - பிறப்பிறப்பாகிய குறைகள். உம்பர் வானத்து - வானோர்க் குயர்ந்த உலகத்தில்.

# 61 திருவெண்காடு

## 197 பதிகவரலாறு

பதிகம் 184 இல் பார்க்க.

### பண் - காந்தாரம்

### திருச்சிற்றம்பலம்

உண்டாய் நஞ்சை யுமையோர் பங்கா வென்றுள்கித்
தொண்டாய்த் திரியு மடியார் தங்க டுயரங்கள்
அண்டா வண்ண மறுப்பா னெந்தை யூர்போலும்
வெண்டா மரைமேற் கருவண் டியாழ்செய் வெண்காடே. 1

நாத னம்மை யாள்வா னென்று நவின்றேத்திப்
பாதம் பன்னாள் பணியு மடியார் தங்கண்மேல்
ஏதந் தீர விருந்தான் வாழு மூர்போலும்
வேதத் தொலியாற் கிளிசொற் பயிலும் வெண்காடே. 2

---

1. நஞ்சை உண்டாய் உமையோர்பங்கா என்று உள்கி - நஞ்சினை அமுதாக உண்டு தேவர் முதலியோரைக் காத்த தலைவரே! அம்மையப்பரே! என்று உள்ளத்தில் தியானம் புரிந்து. தொண்டாய்த்திரியும் அடியார் தங்கள் - தொண்டராகி உலவும் அடியவர்களுடைய. அண்டாவண்ணம் அறுப்பான் - மீண்டும் அண்டாதவாறு அறத் தீர்த்தருள்பவன். வெண் டாமரை மலர்மேல் கருவண்டுகள் யாழ் (ஒலியைச்) செய்யும் வளத்தையுடைய திருவெண்காடு எந்தை ஊர்போலும். மேலும் இவ்வாறே கொள்க. (பா - 2, 4, 5, 6, 8. 9, நோக்குக).

2. நம்மை நாதன் ஆள்வான் என்று நவின்று ஏத்திப் பல்நாள் பாதம்பணியும் அடியார் தங்கள்மேல் ஏதம்தீர இருந்தான் - நம்மை நம்பெருமான் ஆளாக்கொண்டு காப்பான் என்று கருத்திற்கொண்டு வாயால் பயின்று துதித்துப் பல நாளும் வணங்குகின்ற அடியவர்களிடத்தில் (அணுகும்) துன்பங்கள் தீர்ந்தொழியும் பொருட்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமான். 'பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும் பயின் றோதும் ஓசைகேட்டு வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள்

தண்முத் தரும்பத் தடமூன் றுடையான் றனையுன்னிக்
கண்முத் தரும்பக் கழற்சேவடிகை தொழுவார்கள்
உண்முத் தரும்ப வுவகை தருவா னூர்போலும்
வெண்முத் தரும்பிப் புனல்வந் தலைக்கும் வெண்காடே. 3

நரையார் வந்து நாளுங் குறுகி நணுகாமுன்
உரையால் வேறு வுள்கு வார்க ளுள்ளத்தே
கரையா வண்ணங் கண்டான் மேவு மூர்போலும்
விரையார் கமலத் தன்ன மருவும் வெண்காடே. 4

---

பொருட்சொல்லும் மிழலை' (1. 132 - 1) கிளிகள் வேதத்தின் ஒலியாற் சொற்பயிலும். 'பண்மொழியால் அவன் நாமம் பலவோதப் பசுங்கிள்ளை வெண்முகில்சேர் கரும்பெணைமேல் வீற்றிருக்கும் வெண்காடே' (பதி - 184. பா - 6).

3. தண் முத்து - தண்ணிதாகிய முத்துக்கள். அரும்ப - அரும்பு போலத் தோன்ற. தடம் மூன்று - மூன்று திருக் குளங்களை; 'முக்குளம்'. உன்னி - தியானம் புரிந்து. கண் முத்து அரும்ப - கண்களில் ஆனந்த பாஷ்பம் முத்துக்களைப் போலச் சொட்ட. கழல் சே அடி - கழலைப் பூண்ட செய்ய திருவடிகளை. உள் - உள்ளத்தே. முத்து அரும்ப - முத்துப் போலும் வெளிதான நிலை (அகளங்கம் ஆன தூய தன்மை) தோன்ற. உவகை தருவான் - இம்மை மறுமை இன்பங்களும் பேரின்பமும் அருள்பவர். வெண்முத்து அருவி - வெளிய முத்தினை ஒத்த அருவி. புனல் - நீர்.

4. நரையார் - வெளுத்த மயிர். 'தென்றலார் புகுந்துலவும் திருத்தோணி புரத்துறையுங் கொன்றைவார் சடையார்' 1-60-7 'கொண்டலார் கொணர்ந்து அங்கு உலவுந் திகழ்கோட்டாற்றில் தொண்டெலாம் துதிசெய்ய' (பதிகம். 188. 8). நரியார் - (7 - 91) நாளும் குறுகி - உயிர் உடம்பின் நீங்கும் நாளும் நெருங்கி, இனி வாழ்நாளும் சுருங்கி எனலுமாம். நணுகுதல் - நாளின் வினை. உரையால் வேறு - வாயுரையால் வேறுபடாத படி. உள்குவார்கள் - தியானிப்பவர்களது. கரையாவண்ணம் - கரைந்து ஒழியாதவாறு நிலைத்து நிற்கும் வகை. இறக்கும் முன் இறைவனை அகத்தில் நினைந்தும், வாயால் வழுத்தியும்

பிள்ளைப் பிறையும் புனலுஞ் சூடும் பெம்மானென்
றுள்ளத் துள்ளித் தொழுவார் தங்க ளுறுநோய்கள்
தள்ளிப்போக வருளுந் தலைவ னூர்போலும்
வெள்ளைச் சுரிசங் குலவித் திரியும் வெண்காடே. 5

ஒளிகொண் மேனி யுடையா யும்ப ராளீயென்
றளிய ராகி யழுதுற் றூறு மடியார்கட்
கெளியா னமரர்க் கரியான் வாழு மூர்போலும்
வெளிய வுருவத் தானை வணங்கும் வெண்காடே. 6

---

வழிபடுவார் உள்ளத்தில் அவனது திருவருளுருவம் கரையாது நிற்கும் என்றவாறு. விரை - மணம். கமலத்து - தாமரைமலரில். அன்னம் - அன்னப்பறவை மருவும் - பொருந்தி வாழும்.

5. பிள்ளைப்பிறை - இளம்பிறை. புனல் - கங்கை நீர். பெம்மான் - பெருமகனென்பதன் மரூஉ. உள்ளத்து உள்ளி தொழுவார் தங்கள் - மனத்தில் நினைந்து வழிபடும் அடியார்களுடைய. உறு நோய்கள் - மிக்க நோய்களை. தள்ளி - உந்தி. போக - போயொழிய. போகத்தள்ளியருளும் எனலுமாம். வெள்ளைச்சுரி சங்கு உலவித் திரியும் - வெண்ணிறமுடைய சுரிந்த சங்குகள் உலாவித் திரியும்.

6. ஒளி கொள் மேனி உடையாய்! உம்பராளீ என்று - ஞானப்பிரகாசத்தைக் கொண்ட திருமேனி உடையவரே, தேவர்களை ஆள்பவரே என்று துதித்து. அளியர் ஆகி - அன்பின் முதிர்ச்சியை உடையராகி. அழுது உற்று ஊறும் அடியார்கட்கு எளியான் - உள்ளுருகியும், கண்ணீர் சொரிந்தும், (மெய்யன்பு) மிக்குத்திருவருளில் ஊறிய அடியவர்கட்கு எளியவன். அமரர்க்கு அரியான் - அழியும் இன்பத்தை விரும்பும் தேவர்கட்கு அரியவன். வெளிய உருவத்து ஆனை - வெண்ணிறத்தைப்பெற்ற வடிவத்தை உடையயானை. 'அடைந்து அயிராவதம் பணிய மிக்கு அதனுக்கு அருள் சுரக்கும் வெண்காடு' 'வெள்ளானை தவஞ்செய்யும் மேதகு வெண்காட்டான்' (2 - 184 - 7. 9).

கோள்வித் தனைய கூற்றந் தன்னைக் குறிப்பினுன்
மாள்வித் தவனை மகிழ்ந்தங் கேத்த மாணிக்காய்
ஆள்வித் தமர ருலக மளிப்பா னூர்போலும்
வேள்விப் புகையால் வான மிருள்கூர் வெண்காடே. 7

வளையார் முன்கை மலையாள் வெருவ வரையூன்றி
முளையார் மதியஞ் சூடி யென்று முப்போதும்
இளையா தேத்த விருந்தா னெந்தை யூர்போலும்
விளையார் கழனிப் பழனஞ் சூழ்ந்த வெண்காடே. 8

கரியா னேடு கமல மலரான் காணுமை
எரியாய் நிமிர்ந்த வெங்கள் பெருமா னென்பார்கட்
குரியா னமரக் கரியான் வாழு மூர்போலும்
விரியார் பொழிலின் வண்டு பாடும் வெண்காடே. 9

---

7. கோள் - கொலை. கோள் வித்து - கொலைக்கு விதை. அனைய - போன்ற. கூற்றம்தன்னை - கூற்றுவனை, எமனை. குறிப்பினுல் - சிவத்தியானத்தால்; 'மறிதிகழ் கையினன் வான வர்கோனை மனமகிழ்ந்து குறித்தெழு மாணி' (4 - 107 - 4). மாள் வித்து - மாளச்செய்து. அவனை - அச்சிவபெருமானை. மாணி - பிரமசாரி. சுவேதகேது முனிவர் (2 - 48 - 5 பார்க்க). அமரர் உலகம் ஆள்வித்து அளிப்பான் - தேவலோகத்தை ஆளச்செய்து அருள் செய்வான். அளித்தல் அன்பின் முதிர்தல். வேள்விப் புகை - யாகத்தீயிலிருந்து எழும் புகை. இருள் கூர் - இருள் மிகும். 'முனிவர்கள் தொக்குமிக்க மறையோர்கள் ஓமம் வளர் தூமம் ஓடி அணவிக் குனிமதி மூடி நீடும் உயர்வான் மறைத்து நிறைகின்ற கொச்சைவயமே' (2 - 83 - 5).

8. வளை ஆர் முன்கை - வளையல் பொருந்திய முன்கையை உடைய. மலையாள் - இமாசலகுமாரி. வெருவ - அலற. வரை - கயிலைமலை. முளையார் மதியம் - முளைத்தல் பொருந்திய இளம் பிறை. முப்போது - காலை, பகல், மாலை. 'வானோர்கள் முப் போது முடிசாய்த்துத் தொழ நின்ற முதல்வனை' (4 - 7 - 3). இளையாது - (மனம்) இளைப்புருமல். விளை - விளைவு. ஆர் - நிறைந்த. கழனி - வயல். பழனம் - நீர் நிலம். 'செந்நெலங் கழனிப்பழனத்து அயல்' (2 - 1 - 1).

9. கரியான் - மாயன். கமல மலரான் - தாமரையில் வாழும் பிரமன். காணுமை - காணமாட்டாத வகை. எரி - தீப்பிழம்பு. என்பார்கட்கு - என்று துதிக்கும் அடியவர்களுக்கு.

பாடு மடியார் பலருங் கூடிப் பரிந்தேத்த
ஆடு மரவ மசைத்த பெருமா னறிவின்றி
மூட முடைய சமண்சாக் கியர்க ளுணராத
வேட முடைய பெருமான் பதியாம் வெண்காடே. 10

விடையார் கொடியான் மேவி யுறையும் வெண்காட்டைக்
கடையார் மாடங் கலந்து தோன்றுங் காழியான்
நடையா ரின்சொன் ஞானசம் பந்தன் றமிழ்வல்லார்க்
கடையா வினைக ளமர லோக மாள்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

**உரியான் - அருளும் உரிமை உடையவன். 'அமரர்க்கு அரியான்' (பா - 6). விரி - விரிவு. பொழிலின் - சோலைக்கண்.**

**10. பாடும் அடியார் - பண்ணொன்ற இசை பாடும் அடியார்கள். அரவம் - பாம்பு. அசைத்த - கட்டிய. உணராத வேடம் - உணரமாட்டாத சிவஞான வேடம்.**

**11. விடை ஆர்கொடியான் - எருது எழுதிய கொடியை உடையவன். மேவி - விரும்பி. உறையும் - எழுந்தருளியிருக்கும். கடை ஆர் மாடம் - கடைவாயில் பொருந்திய மாடம். இது காழிக்கு அடை. நடை - ஒழுக்கம். ஞானசம்பந்தன் வெண் காட்டைத் 'தொழுத' தமிழ் என்று ஒரு சொல்வருவித்தியைக்க. வல்லார்க்கு வினைகள் அடையா. வல்லார் அமரலோகம் ஆள்வார்.**

---

கட்டது வேகொண்டு கள்ளுண்டு நுங்கைக
ளாற்சுணங்கை
இட்டது வேயன்றி எட்டனைத் தான்இவள்
உள்ளுறுநோய்
விட்டது வேயன்றி வெங்குரு நாதன்றன்
பங்கயத்தின்
மட்டவிழ் தார்கொண்டு சூட்டுமின் பேதை
மகிழ்வுறவே. —அந்தாதி 57

# 62 திருமீயச்சூர்

## 198 பதிகவரலாறு

மண்ணெலாம் உய்யவந்த பண்ணவராகிய சண்பை வேந்தர், திருநல்லத்தில் எழுந்தருளிய மாமணியின் சேவடியை இன்றமிழால் வழிபட்டுத் திருவழுந்தூர்க்குச் செல்லு மிடையில் இத்திருப்பதியை எய்திப் பாடிப்பணிந்தது இத்திருப்பதிகம்.

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

காயச் செவ்விக் காமற் காய்ந்து கங்கையைப்
பாயப் படர்புன் சடையிற் பதித்த பரமேட்டி
மாயச் சூரன் றறுத்த மைந்தன் றாதைதன்
மீயச் சூரைத் தொழுது வினையை வீட்டுமே. 1

---

1. காயம் - உடம்பு. செவ்வி - அழகு. காமன் - மன்மதன் (உடலழகையுடைய மன்மதன்). காமற்காய்ந்து - காமனைக் கோபித்து. இரண்டன்தொகை. படர் புன் சடையில் பாயக் கங்கையைப் பதித்த பரமேட்டி - படர்ந்த பொன்போலுஞ் செஞ்சடைமேல் விரைந்து பாயும் வண்ணம் கங்கையாற்றைப் பதியச்செய்த பரமேட்டி. பரமேட்டி-தனக்குமேல் ஒன்றில்லாத உயர்ந்த இடத்திலிருப்பவன். மாயச்சூர் - வஞ்சத்தையுடைய சூரபதுமனை. சூர்மாய என்று மாற்றிச் சூரபத்மன் மாயும்படி என்றலும் பொருந்தும். மைந்தன் - முருகப்பிரான். தாதை - தந்தை (சிவபிரான்). வீட்டும் - அழிமின். சிவபிரானுடைய மீயச்சூர் என்னும் சிவதலத்தை வழிபட்டுப் பிறவிக்கு ஏதுவாகிய வினையைத் தீர்த்தொழியுங்கள் என்று உபதேசித் தருளியவாறு.

பூவார் சடையின் முடிமேற் புனல ரனல்கொள்வர்
நாவார் மறையர் பிறையர் நறவெண் டலையேந்தி
ஏவார் மலையே சிலையாக் கழியம் பெரிவாங்கி
மேவார் புரமுன் றெரித்தார் மீயச் சூராரே. 2

பொன்னேர் கொன்றை மாலை புரளு மகலத்தான்
மின்னேர் சடைக ளுடையான் மீயச் சூரானைத்
தன்னேர் பிறரில் லானைத் தலையால் வணங்குவார்
அந்நே ரிமையோ ருலக மெய்த ற்கரிதன்றே. 3

---

2. பூ - கொன்றைப்பூ. அன்பர் அர்ச்சிக்கும் பல்வேறு மலர்களும் ஆம். புனலர் - கங்கையை அணிந்தவர். அனல் கொள்வர் - தீயேந்துபவர். நா ஆர் மறையார் - வேதங்களை அருளிய நாவினர். பிறையர் - பிறைசூடியவர். நற வெண்தலை - நாற்றத்தையுடைய வெளிய பிரமகபாலத்தை. ஏ - அம்பு. மலை - மேருமலை. சிலையா - வில்லாக. கழியம்பு - கோல் அம்பு. எரி - அக்கினி. திருமால் அம்பாகவும் அக்கினி அவ்வம்பின் நுனியாகவும்கொண்ட வரலாற்றை நினைக்க. 'எரி காற்று ஈர்க்கு அரி கோல் வாசுகி நாண் கல் வில்' (1. 11. 6.). மேவார் - பகைவரது. புரம்மூன்று - திரிபுரத்தை, புனலரும், கொள்வரும், மறையரும், பிறையரும், ஏந்தி வாங்கி எரித்தாரும் ஆகிய சிவபிரானார், மீயச்சூரில் திருக்கோயில்கொண்டு எழுந்தருளி யுள்ளார்.

3. பொன் ஏர் கொன்றை - பொன்போலும் அழகிய கொன்றை. கொன்றையைப் பலபட அருளிய வகையெல்லாம் ஆசிரியரது திருமுறையுள் ஆங்காங்கு நோக்கி உணர்தல் நன்று. 'வம்பரு வரிவண்டு மணம்நாற மலரும் மதுமலர் நற்கொன்றை யான்அடியலால் பேணா எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்' என்றதில் கொன்றையான் என்று சிவபிரானைக் குறித்ததன் கருத்து அறியத்தக்கது. அதற்கு ஆதாரமானது இத்திருப்பாடல்:- 'கொன்றை சூடி நின்ற தேவை அன்றி ஒன்றும் நன்று இலோம்'. இதனை ஆசிரியரே அருளியதால் அவரது குறிக்கோளை நன்கு அறிந்துகொள்ளலாம். அகலத்தான் - திருமார்புடையவன். மின் ஏர் சடைகள் - மின்போலும் ஒளிர்கின்ற சடைகளை. தன் நேர் பிறர் இல்லானை - தனக்குவமையாகப் பிறர் இல்லாத தலைவனை. அவனுக்கு அவனே

வேக மதநல் லியானை வெருவ வுரிபோர்த்துப்
பாக முமையோ டாகப் படிதம் பலபாட
நாக மரைமே லசைத்து நடமா டியநம்பன்
மேக முரிஞ்சும் பொழில்சூழ் மீயச் சூரானே. 4

விடையார் கொடியார் சடைமேல் விளங்கும் பிறைவேடம்
படையார் பூதஞ் சூழப் பாட லாடலார்
பெடையார் வரிவண் டணையும் பிணைசேர் கொன்றையார்
விடையார் நடையொன் றுடையார் மீயச் சூராரே. 5

---

ஒப்பாம் என்று, அநந்நிய உவமை உணர்த்தியவாறு. தலையால் வணங்குவார்(க்கு) இமையோருலகம் எய்தல் (ஆனது) அரிதன்று, மிக எளிது என்றவாறு. அ+நேர்+இமையோர். உலகம் - அந்த நேர்மையுடைய தேவருலகத்தை. 'எய்தலரிதன்றே' என்ற பாடமும் உண்டு.

4. வேகம் - விரைவுடைய நடை. மதவேகமுமாம். நல்லியானை (நன்மை+யானை):- '......உயர்திணை அஃறிணை ஆயிரு மருங்கின், ஐம்பால் அறியும் பண்புதொகு மொழியும்...மருவின் பாத்திய புணரியல் நிலையிடை உணரத்தோன்று' (தொல். 482.) என்றவாறு, நல்லதாகிய யானை என்று விரித்துரைத்தற் பாலது. நன்னூற் சூத்திரப்படி, பண்பைவிளக்கும் மொழி தொக்கதாகக்கொண்டு, விரித்துரைத்தல் குணகுணிபேதம் அறியாக் குற்றமுடையதாகும். உரி - தோல். பாகம் - இடப் பாகம். படிதம் - வல்லபை, துதி என்றுரும் உளர். அவர், சந்தர்ப்பத்திற்கேற்பத் தாமே கருதி எழுதியது அப்பொருள் என்று தோன்றுகின்றது. நாகம் - பாம்பு. அரை - திரு அரை. அசைத்து - கட்டி. நடம் - திருக்கூத்து. நம்பன் - சிவபிரான். நம்பு - நசை. எல்லா உயிர்களும் விரும்புதற்குரியவன்.

5. விடை ஆர் கொடியார் (197 - 11. பார்க்க). பிறை வேடம் - பிறையை அணிந்த வேடம். சடைமேல் பிறைவேடம் விளங்கும். படை ஆர் பூதம்-படையாகப் பொருந்திய பூதங்கள். பாடல் ஆடலார் - பாடுதலும் ஆடுதலும் உடையார். பெடை - பெண் வண்டு. பிணை - மாலை. பிணையல் - கொன்றைப்பிணை. விடை ஆர் நடை - 'ஏறுபோல் பீடுநடை' (குறள்).

குளிருஞ் சடைகொண் முடிமேற் கோல மார்கொன்றை
ஒளிரும் பிறையொன் றுடையா னொருவன் கைகோடி
நளிரும் மணிசூழ் மாலை நட்ட நவினம்பன்
மிளிரும் மரவ முடையான் மீயச் சூரானே. 6

நீல வடிவர் மிடறு நெடியர் நிகரில்லார்
கோல வடிவு தமதாங் கொள்கை யறிவொண்ணார்
காலர் கழலர் கரியி னுரியர் மழுவாளர்
மேலர் மதியர் விதியர் மீயச் சூராரே. 7

---

6. கோலம் - அழகு. ஒளிரும் - விளங்கும். சடை முடி மேல் கொன்றையும் பிறையும் உடையான் என்க. கைகோடி - கையை வளைத்து. நட்டம் நவில் நம்பன் - திருக்கூத்தாடும் சிவபெருமான். நளிரும் - குளிரும். மிளிரும் - விளங்கும். அரவம் - பாம்பு.

7. நீலவடிவர் மிடறு-திருநீலகண்டர். நெடியர்-நீண்டவர். (உயர்ந்தோங்கிய நிலையின் எல்லையில்லாதவர்.) 'உம்பராலும் உலகின்னவராலும் தம்பெருமை அளத்தற்கரியான்' (1-29. 5). 'நுண்ணியான் மிகப்பெரியான்'. (1 61. 6). நிகரில்லார் - (அதுலர்) 'ஒப்பிலியப்பன்' கோலவடிவு தமது ஆம் கொள்கை அறிவு ஒண்ணார். பல உருவன் (1. 13. 2). 'நானுவித உருவாய் நமையாள்வான். பல பல வேடமாகும் பரன், தன்மை யாரும் அறிவாரில்லை (2. 6. 2). ஓ தி யாரும் அறிவார் இல்லை - ஆர்க்கும் அறிவரியான். காலர் கழலர் - கழலணிந்த திருவடி உடையார். காலர் - காலரூபர், வாயுரூபர் எனலும், கூற்றை உதைத்தவ ரெனலும் ஆம். கரியின் உரியர் - யானைத்தோல் உடையவர். மழுவாளர் - மழுவை ஆள்பவர், மழுவாளை உடையவர். மேலர் மதியர் - பிறையைச் சடைமேல் அணிந்தவர். மேலானவரும் ஞான சொரூபரும் ஆம். காலர் கழலர் மேலர் மதியர்:- வட நூலார் மதம்பற்றி அடைமொழிக்கும் அடைகொளியின் விகுதி கொடுத்துக் கூறியனவாக் கொள்ளலும் ஆம். 'நுண் ணறிவால் வழிபாடுசெய்யுங் காலுடையான்' (1. 5. 4). 'கால னுயிர் செற்ற காலன்' (1. 45. 4) எனலும் அமையும். பவமலி தொழிலது நினை விதியர்:- படைப்பவரானவர். 'அரியானை...

புலியி னுரிதோ லாடை பூசும் பொடிநீற்றர்
ஒலிகொள் புனலோர் சடைமேற் கரந்தா ருமையஞ்ச
வலிய திரடோள் வன்க ணரக்கர் கோன்றன்னை
மெலிய வரைக்கீ ழடர்த்தார் மீயச் சூராரே. 8

காதின் மிளிருங் குழையர் கரிய கண்டத்தார்
போதி லவனு மாலுந் தொழப்பொங் கெரியானார்
கோதி வரிவண் டறைபூம் பொய்கைப் புனல்மூழ்கி
மேதி படியும் வயல்சூழ் மீயச் சூராரே. 9

---

கரியானை நான்முகனை......பிறவானாளே' (6. 1. 1). 'படைத்தளித் தழிப்ப மும்மூர்த்திகளாயினை' (1. 128. 4). 'அயனவனுய்' (1. 13. 5). 'வேதவிதியானை' (7. 388). 'எனதுள்ளம் விடகிலா விதியே' (7. 385). 'பவமலி தொழிலது நினைவோடு பதுமன்நன் மலரது மருவிய சிவன்' (1. 21. 1) என்பதில், பிரமனது இதய கமலத்திலிருந்து சிவபிரான் படைப்பித்தருள்வதாக் குறித்த உண்மை உணர்க.

8. உரிதோலாடை நீற்றர் - உரித்ததோலாகிய ஆடையையும் பூசும் திருநீற்றுப்பொடியையும் உடையவர். ஒலிகொள் புனல் - முழக்கத்தைக் கொண்ட கங்கை வெள்ளத்தை. ஓர் சடை - ஒப்பற்ற சடை, ஓர்தற்குரிய ஞானமாகிய சடை எனலுமாம். 'பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன் சடை பின்றயங்க ஆடுவாய்' (310 - 6). 'நுண்சிகை ஞானமாம்' (திருமந்திரம்) கரந்தார் - மறைத்தவர். உமை - உமா தேவியார். திரள் தோள் - திரண்ட புயங்களையும். வன்கண் - அகத்திலுள்ள வலிமையைப் புறத்தே காட்டும் கண்களையும் உடைய, அரக்கர்கோன் - அரக்கர்க்குக் கோமகன். அவனை அடர்த்தார் - வரையின் கீழ் மெலிய அடர்த்தார். அடைத்தவர் மீயச்சூரிலுள்ளார்.

9. மிளிரும் - விளங்கும். குழையார் - குழையை அணிந்தவர். குழை - தழை, ஓலை, குழை என்பன பண்டைய வழக்கத்திற் காரணப்பெயராயிருந்தன; 'மரக்கால்' போல. பொற்கலனுனபின்னும் குழை என்ற பெயராலே வழங்கப்படுகின்றது. இருப்புத் தகட்டாலான பின்னும் 'மரக்கால்' என வழங்கப்

கண்டார் நாணும் படியார் கலிங்க முடைபட்டைக்
கொண்டார் சொல்லைக் குறுகா ருயர்ந்த கொள்கையார்
பெண்டான் பாக முடையார் பெரிய வரைவில்லா
விண்டார் புரமூன் றெரித்தார் மீயச் சூராரே. 10

வேட முடைய பெருமா னுறையு மீயச்சூர்
நாடும் புகழார் புகலி ஞானசம் பந்தன்
பாட லாய தமிழீ ரைந்து மொழிந்துள்கி
ஆடு மடியா ரகல்வா னுலக மடைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

படுவதுபோல, 'பத்திரம் எழுதினுன்' என்பது முதலியவற்றை யும் நோக்குக. கரியகண்டத்தார் - திருநீலகண்டர். போது - பூ. போது இ(ல்)லவனும் - தாமரைப் பூவை இல்லமாக உடைய பிரமனும். பொங்கு எரி - மிக்க தீ. வண்டு கோதி அறை பூ என்க. பொய்கை - குளம். மேதி - எருமை.

*10.* கண்டார் நாணும்படியார் - திகம்பர சைனர். ஆடையில்லாதவர். கலிங்கம்...கொண்டார் - ஆடை உடைய தேரர். முடை என்று கொண்டு நாற்றம் எனலுமாம். கலிங்கமாகிய பட்டுடையை என்றலே பொருத்தம். உயர்ந்த கொள்கையார் (சைவர்) அவ்விருதிறத்தவர் சொல்லைக் குறுகார் என்க. பெண்தான்பாகம் - மங்கைபங்கு. விண்டார் - பகைவர்.

*11.* வேடம் - 'பலபல வேடம்' 'ஒன்றும் பலவும் ஆய வேடத்து ஒருவர்' (1 - 68 - 5) (ஞானவேடம்). மீயச்சூர் நாடும் புகழ்ஆர் - திருமீயச்சூரை விரும்பும் புகழ் நிறைந்த (ஞானசம்பந்தர்). 'புகழார்' சிவபிரானைக்கொண்டு, அவரது புகலி எனலும் பொருந்தும். பாடல் ஆய தமிழ் ஈரைந்தும் என்றது இத்தமிழ்த் திருப்பதிகத்தை உணர்த்திற்று. உள்கி - நினைத்து. அடியவர், உள்ளம் உரை உடல் மூன்றாலும் முறையே முறையே மொழிந்தும் உள்கியும் ஆடியும் இத்தமிழால் சிவபிரானை வழிபட்டால் வீடு பெறுதல் திண்ணம் என்றவாறு.

## 63 திருவரிசிற்கரைப்புத்தூர்

### 199 பதிகவரலாறு

காழிவேந்தர் அரதைப்பெரும்பாழி முதலாகத் திருச்சேறை, திருநாலூர், திருக்குடவாயில், திருநறையூர் என்னும் தலங்களை வழிபட்டு வந்த போது இத் திருப்புத்தூரை நயந்து இறைஞ்சிப்புனைந்து இறைவன் திருவடிக்குச் சார்த்திய நீடு தமிழ்த் தொடையாகும் இத்திருப்பதிகம்.

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

மின்னுஞ் சடைமே விளவெண் டிங்கள் விளங்கவே
துன்னுங் கடனஞ் சிருடோய் கண்டர் தொன்மூதூர்
அன்னம் படியும் புனலா ரரிசி லலைகொண்டு
பொன்னும் மணியும் பொருதென் கரைமேற் புத்தூரே. 1

---

1. சடைமேல் திங்கள் விளங்க (இருள்) தோய்கண்டர் என்று இயைக்க. சடைமேல் வெள்ளொளியும் கழுத்தில் காரிருளும் ஆக உள்ள முரணும் புலப்படக்கூறியவாறு. விளங்கத் துன்னும் என்றியையாது. துன்னுதல் (-நெருங்குதல்) கடலின் வினை. தோய்தல் - இருளின் வினை. திங்கள் விளங்க இருள் தோய்ந்தது. திங்கள் பகலின் விளங்காதன்றோ? இருளின் தோய்வு திங்களின் விளக்கத்திற்கு இன்றியமையாதது. கழுத்திலுள்ள காரிருள் சடைமேலுள்ள திங்கள் விளக்கம் நன்கு தோன்றத் துணையாயிற்று. கடல் நஞ்சு இருள் - பாற்கடலின் எழுந்த நஞ்சினாலான கருப்பு. அன்னம் - பறவை. ஆர் - நிறைந்த. அரிசில் - அரிசிலாறு. பொரு - மோதுகின்ற. தென்கரைமேல் உள்ள புத்தூர். தொன்மூதூர் புத்தூர் என்க. தொன்மை, முதுமை இரண்டும் ஒருங்குவரல் அறியத்தக்கது.

தொன்மை காலத்தைப்பற்றியது. முதுமை அக்காலத்தோடு அதில் நிகழும் வளர்ச்சியையும் பற்றியது. தோன்றி நெடிது நிலைபெற்றுவருவது தொன்மைக்கும் முதுமைக்கும் உரியதாகும். முன்னொருகால் தோன்றியிருந்து அழிந்த பொருளை நெடுங் காலங் கழிந்த பின்னர்த் தொல்பொருள் எனலாம். முது பொருள் எனலாகாது. காலத்தின் நெடுமையும் இடத்தின் நீட்சியும் தொன்மை எனும் வழக்கிற்கொவ்வும். தொல்லோன், தொலைந்தான், 'ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும் புதுவதன்று இவ்வுலகத்தியற்கை' (புறம்- 86). தொலைவு. (2 - 250 - 8) தோல்வி, தொல்லை என்பவற்றை ஆராய்க. முன்னொருகால் தோன்றியிருந்த குழந்தையைப் பின்னொருகால் தொல் குழந்தை எனலாம். முது குழந்தை எனலாகாது. கிழவனேல் 'தொல்லோன்' 'முதியோன்' எனலாம். 'பல்நீர்மை குன்றிச்செவி...நரை தோன்றும் காலம்' (1-59-6) என்றதிற் குறித்த முதுமை, நெடுங்காலமாக உள்ளனவும் காலம் அல்லா தனவும் ஆன பிறபொருள் இடம் முதலியவற்றில் இல்லை. அவற்றில் தொன்மையே உண்டு. திருஞானசம்பந்தமூர்த்திநாய ஞர் தொல்லோர் ஆவரேயன்றி, முதியோராகார். திருநாவுக் கரசரோ தொல்லோருமாவர்; முதியோருமாவர். தொன்மையைப் புராதனம் புராணம்முதலியவற்றாலும் முதுமையை வார்தக்யம், விருத்தாப்பியம் முதலியவற்றாலும் வடமொழியிற் குறிப்பர். புராதனமும் விருத்தாப்பியமும் ஒன்றாகா. 'தொன்மூதாலத்துப் பொதியில்' என்றகுறுந்தொகை15உம் 'தொன்மூதாலம்' என்ற நெடுந்தொகை 70+251உம்இக்கருத்தில்உரைக்கப்பட்டனவோ? அவற்றின் உரைகளைக் காண்க. யாண்டு முதுமை ஆண்டுத் தொன்மை எனலாம். யாண்டுத்தொன்மை ஆண்டு முதுமை எனல் ஒவ்வாது. இப்பாட்டில், 'தொன்மூதூர்......புத்தூரே' என்று முரண்டொடையாய் அமைந்த நயம் அறிந்து மகிழ்தற் பாலது. புதுமையும் தொன்(பழ)மையும் ஒன்றற்கு ஒன்று மறுதலை, இளமையும் முதுமையும் ஒன்றற்கொன்று மறுதலை. தொன்மைக்கு இளமையும் முதுமைக்குப் புதுமையும் மறுதலையாகா. நெடுங்காலமாக உள்ள வெற்றிடத்தைத் தொன்மையது எனலாம். அங்குத் தோன்றி நெடுங்காலமாக இருக்கும் ஒன்றனை முதுமையதெனலுமாம். ஆகவே, தொல் மூதூர் என்றதற்கு மிகப் பழைய ஊர் என்று பொருள் கோடல் குற்றமாம்.

மேவா வசுரர் மேவெயில் வேவ மலைவில்லால்
ஏவா ரெரிவெங் கணையா லெய்தா னெய்துமூர்
நாவா னாத னாம மோதி நாடோறும்
பூவா னீராற் பூசுரர் போற்றும் புத்தூரே. 2

பல்லார் தலைசேர் மாலை சூடிப் பாம்பும்பூ
ணெல்லா விடமும் வெண்ணீ றணிந்தோ ரேறேறிக்
கல்லார் மங்கை பங்க ரேனுங் காணுங்கால்
பொல்லா ரல்ல ரழகியர் புத்தூர்ப் புனிதரே. 3

---

2. மேவா அசுரர் - விரும்பாத (பகைமையுடைய) திரிபுரத்தசுரர். மேவு எயில் - மேவிய மதில். வேவ - தீய. மலைவில் - மேருவில். ஏ - உணர்ச்சி. கணை எனப்பின் உள்ள தால் அம்பு எனப் பொருள்படாது. எரிகணை - அக்கினியை முனையிலுடையது. வெம்மை - தீ வெப்பம். எய்தான் - எய்த சிவபிரான். எய்தும் திருக்கோயில்கொண்டெழுந்தருளியிருக்கும். ஊர் - புத்தூர் என்க. நாவால் நாதன் நாமம் ஓதி நாள்தோறும் பூவால் நீரால் பூசுரர் போற்றும் புத்தூர் என்றது ஆசிரியர் அங்கு அடைந்த காலத்தில், அவ்வூர்ச் சிவ வேதியர்கள் ஒரு நாளும் தவறுமல் சிவ நாமங்களை நாவாரச் சொல்லி நீரால் ஆட்டிப் பூவால் போற்றி வழிபட்ட உண்மை உணர்த்திய வாறு. 'நல்லவாறே உன்றன் நாமம் நாவில் நவின்று ஏத்த வல்லவாறே வந்து நல்காய்' (1 - 50 - 1). உன்றன் நாமம் நாளும் நவிற்றுகின்றேன்.' (ஷி 4).

3. தலைமாலையைத் தலையிற் சூடியுள்ளார் இறைவர். அத்தலைகளில் பற்களின் வரிசை கெடாது இருக்கின்றன என்பார் 'பல்ஆர்தலை' என்றார். 'தலைமாலை தலைக்கணிந்து தலையாலே பலிதேருந்தலைவன்'. எல்லா இடமும் வெண்ணீறு அணிந்து - 'மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியன்' (4 - 5 - 1) 'நீற்றினை நிறையப்பூசி' (4. 49. 2, 4. 64. 8). 'நீரலைத்ததிருவுரு' (6. 75. 3). ஓர் ஏறு ஏறிக்கல்லார் மங்கை பங்கர் - ஒப்பற்ற எருதேறியூர்ந்து அம்பிகையை இடப்பங்கில் உடையவர். ஏறி என்னும் வினையெச்சம் 'பங்கர்' என்னும் வினைக்குறிப்பைக்கொண்டது. பொல்லார் - பொலிவில்லாதவர், அழகியவர். கல்லார் மங்கை:- கல் - இமயமலை. செழுங்கல் வேந்தன் செல்வி (1-53 - 5). இமாசலகுமாரி. மங்கையென்பது இத்தலத்தின் அம்பிகைக்குரிய திருப்பெயராகிய 'அழகம்மை' என்பதைக் குறித்ததுமாம்.

வரியேர் வளையா ளரிவை யஞ்ச வருகின்ற
கரியே ருரிவை போர்த்த கடவுள் கருதுமூர்
அரியேர் கழனிப் பழனஞ் சூழ்ந்தங் கழகாய
பொரியேர் புன்கு சொரிபூஞ் சோலைப் புத்தூரே. 4

என்போ டரவ மேனத் தெயிறோ டெழிலாமை
மின்போற் புரிநூல் விரவிப் பூண்ட மணிமார்பர்
அன்போ டுருகு மடியார்க் கன்ப ரமருமூர்
பொன்போ தலர்கோங் கோங்கு சோலைப் புத்தூரே. 5

வள்ளி முலைதோய் குமரன் றாதை வான்றோயும்
வெள்ளி மலைபோல் விடையொன் றுடையான் மேவுமூர்
தெள்ளி வருநீ ரரிசிற் றென்பால் சிறைவண்டும்
புள்ளு மலிபூம் பொய்கை சூழ்ந்த புத்தூரே. 6

---

*4.* வரி - நிறம். ஏர் - எழுச்சி(யை உடைய). வளையாள் - வளையலை அணிந்த அம்பிகை. கரி - கரத்தையுடைய யானை. ஏர் - அழகு. உரிவை - தோல். அரி - தவளை, வண்டு, நெல்லரி எனலுமாம். பழனம் - மருதநிலம். புன்கு சொரி பொரி ஏர் பூஞ்சோலை - புன்கமரங்கள் சொரிகின்ற பொரி போன்ற அழகிய பூக்களையுடைய சோலை. சோலை சூழ்ந்த புத்தூர்.

*5.* என்பு - எலும்பு. அரவம் - பாம்பு. ஏனத்து எயிறு - பன்றிக் கொம்பு. எழில் - அழகு. மின்னைப்போலும் முப்புரி நூல். விரவி - கலந்து. மணி - அழகிய. ரத்நமாலை எனலுமாம். சிவபிரானை அன்போடு உருகும் அடியார்க்கு அன்பர் என்றது எல்லாருள்ளத்திலும் பதியத்தக்கது. 'தீர்ந்த அன்பாய அன்பர்க்கு அவரினும் அன்ப போற்றி' (திருவாசகம் - திருச்சதகம் - 69). 'நேசன்காண் நேசர்க்கு' (6. 65. 2.). 'அன்பின் நிலையே அது' (திருவருட்பயன்). 'அன்பேசிவம்' (திருமந்திரம்). பொன்போது-பொன்னைப்போல அலரும் பூக்கள். அலர்கோங்கு-பூக்கும் கோங்கமரம். கோங்கு ஓங்கு சோலைகளையுடைய புத்தூர்.

*6.* வள்ளி முலை தோய் குமரன் :- 'குறவி தோள் மணந்த செல்வக் குமரவேள்' (4 - 60 - 3). 'வள்ளிவளைத்தோள் முதல்வன்' (6. 3. 2). 'நம் செந்தில் மேய வள்ளி மணாளற்குத் தாதை' (6. 23. 4). வான் - விண்ணிடம். வான்றோயும் மலை.

நிலந்த ணீரோ டனல்கால் விசும்பி னீர்மையான்
சிலந்தி செங்கட் சோழ னாகச் செய்தானூர்
அலந்த வடியா னற்றைக் கன்றோர் காசெய்திப்
புலர்ந்த காலை மாலை போற்றும் புத்தூரே. 7

இத்தே ரேக விம்மலை பேர்ப்ப னென்றேந்தும்
பத்தோர் வாயான் வரைக்கீ ழலறப் பாதந்தான்
வைத்தா ரருள்செய் வரதன் மருவும் மூரான
புத்தூர் காணப் புகுவார் வினைகள் போகுமே. 8

---

விடை - எருது. வெண்ணிறத்தால் ஒப்புணர்த்த வெள்ளிமலை எனப்பட்டது. தெள்ளி - தெளிந்து. தென்கரை. (பா. 1). 'வண்டும் புள்ளும் மலிபூம் பொய்கை சூழ்ந்த புத்தூர்' என்று வளங்கூறிய சிறப்புணர்க.

7. நிலம், தண் (குளிர்ந்த)நீர், அனல்(-தீ),கால்(-காற்று,) விசும்பு (-ஆகாயம்) என்னும் ஐம்பெருங் காரண பூதங்களின் இயல்பையுடையான். நீர்மை - இயல்பு. சிலந்திப் பூச்சி, சிவ பூஜைப் பயனாகக் கோச்செங்கட் சோழநாயனாராகிய வரலாறு உணர்க. அலந்த - சிவபூஜை முட்டுப்படத் துயருற்ற. அன்றைக்கு-அன்று. அந்நாட்கு - அந்நாள். அன்றாடம் ஒருகாசு எய்தி, பொழுது புலர்ந்த காலையிலும் மாலையிலும் போற்றும் புத்தூர். செய்தான் ஊர் புத்தூர் என்க. 'அடியான்' என்றது 'செருவிலிபுத்தூர்மன்னுஞ்சிவமறையோராகிய...நிகரில்லா(ப்) புகழ் நீடு புகழ்த்துணையார்'. (பெரியபுராணம் ஷ நாயனார். 1).

8. தேர் ஏக - தேர் தடையின்றிச் செல்லற்பொருட்டு. இம்மலை - இக் கயிலைமலையை. பேர்ப்பன் - பெயர்த்திடுவேன். ஓர் பத்து வாயான் - ஒரு பத்து வாயுடையவன். அக் கயிலை மலையின் கீழ், பத்து வாயாலும் அலறினான். அதனால் இரங்கி முன் வைத்த பாதம் வாங்கியருளினான். வரதன் - வரத்தைக் கொடுப்பவன். நாளும் வாளும் பெருந்தேரும் கொடுத்தவரம் ஆங்காங்குணர்க. மருவும் ஊர் ஆன புத்தூர் - எழுந்தருளிய நகராகிய புத்தூர். புத்தூர் காணப் புகுவார் வினை - தல தரிசனம் செய்ய நுழையும் அடியார்களுடைய வினைகள் (ஆகாமியம்).

முள்ளார் கமலத் தயன்மான் முடியோ டடிதேட
ஒள்ளா ரெரியா யுணர்தற் கரியா னூர்போலும்
கள்ளார் நெய்தல் கழுநீ ராம்பல் கமலங்கள்
புள்ளார் பொய்கைப் பூப்பல தோன்றும் புத்தூரே. 9

கையார் சோறு கவர்குண் டர்களுந் துவருண்ட
மெய்யார் போர்வை மண்டையர் சொல்லு மெய்யல்ல
பொய்யா மொழியா லந்தணர் போற்றும் புத்தூரில்
ஐயா வென்பார்க் கையுறவின்றி யழகாமே. 10

---

*9.* முள் ஆர் கமலத்து - ('முட்டாட்டாமரை') முட்கள் நிறைந்த தாமரையில் வாழும். அயன்மால் முடி அடி: முறை நிரல் நிறை. ஒள் - ஒண்மை, ஒளி. எரி - தீப்பிழம்பு, அயன் மால் உணர்தற்கு அரியான். உணர்தற்கே அரியவன் என்றால் ஓதற்கும் எளியன் அல்லன் என்பது சொல்லல்வேண்டா. 'உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்' (பெரியபுராணம் மங்கலம்). 'அன்பராகி மற்றருந்தவமுயல்வார் அயனுமாலும் மற்றழலுருமெழுகாம் என்பராய் நினைவார்' (திருவாசகம் செத்திலாப் பத்து 4). கள் - தேன், நெய்தல், கழுநீர், ஆம்பல், கமலங்கள். புள் - பறவைகள். பூக்களும் புட்களும் பொருந்திய பொய்கை ( - குளம்).

*10.* கை ஆர் சோறு - கையில் நிறைந்த சோறு. 'கையி லுண்ணுங்கையர்' (3. 53. 1). மெய் ஆர் போர்வை - உடம்பைப் பொருந்தப்போர்த்த போர்வை; துவர் உண்ட போர்வை. மண்டையர் - பனங்குடையில் உண்ணுமவர். சொல்லு - சொற்கள். மெய்யல்ல - பொய். பொய்யாமொழியால் - மெய்யாகிய வேதவாக்குகளால். ஐயா:- 'வேதங்கள் ஐயா என ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே' ('திருவாசகம்' 1). ஐயுறவு - சந்தேகம். அழகு - சிவப்பொலிவு. இம்மை மறுமைக்கான அழகுகளும் கொள்ளலாம். சொல் + து = சோறு. சொல் - நெல். 'சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் தோற்றம்போல் மெல்லவே கருவிருந்தீன்று மேலலார் செல்வமே போல் தலைநிறுவித்தேர்ந்த நூற் கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே'. என்னும் (சிந்தாமணி 53) செய்யுளில், சொல் என்றது நெல் என்று நச்சினார்க்கினியர் எழுதிய பொருளையும் அறிக. சோறு என்பதன் பொருள் சொல்லால் ஆனது என்பதாம்.

நறவங் கமழ்பூங் காழி ஞான சம்பந்தன்
பொறிகொ ளரவம் பூண்டா ணுண்ட புத்தூர்மேல்
செறிவண் டமிழ்செய் மாலை செப்ப வல்லார்கள்
அறவன் கழல்சேர்ந் தன்போ டின்ப மடைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

**11.** நறவம் - தேன். மணம். பொறி - புள்ளிகள். பூண்டான் - பூண்ட சிவபிரான். செறி - சொல்லும் பொருளும் செறிந்த. வண்தமிழ் செய்மாலை - வளவிய தமிழாற் செய்த இப்பாமாலையை, அறவன் - 'அறவாழியந்தணன்' 'அறத்தானை அறவோனை' (6 - 80 - 7). 'தருமாபோற்றி' (6 - 5 - 10). 'தயா மூலதன்மம் என்னும் தத்துவத்தின்வழி நின்று...நலம் கொடுக்கும் நம்பி', 'தயாமூலதன்மவழி எனக்கு நல்கி' (6 - 20; 40 - 6). அன்போடு இன்பம் - அன்பும் இன்பும்: 'அன்பெனும் பாசம் வைத்தார்' (4 - 30 - 3). 'அன்பலால் பொருளும் இல்லை' (4-40 6). 'அன்பினில் விளைந்த ஆரமுது' 'அன்பினால் இன்பம் ஆர்வர்' 'இன்ப அன்பு'.

---

உறவும் பொருளும்ஒண் போகமுங் கல்வியுங்
கல்வியுற்ற
துறவுந் துறவிப் பயனும் எனக்குச்
சுழிந்தபுனற்
புறவும் பொழிலும் பொழில்சூழ் பொதும்புந்
ததும்பும்வண்டின்
நறவும் பொழில்எழிற் காழியர் கோன்திரு
நாமங்களே. —அந்தாதி 58

# 64. திருமுதுகுன்றம்

## 200 பதிகவரலாறு

வெங்குரு வேந்தர், செங்கண் விடையவர் திருமுது குன்றினைத் தொழுது சென்று அணைந்து, 'முதுகுன்றடை வோம்' என்று சொன்மலர்மாலை இசையொடும் புனைந்து ஏத்தி, அடைந்து, வலங்கொண்டு, தமிழ்ச் சொல்லிருக்குக் குறள் மொழிந்து, திருக்கோயிலின் உள் புகுந்து, கொன்றை யார் சேவடியில் தாழ்ந்து எழுந்து, தமிழ்த் தொடைசார்த்திய வற்றுள் ஒன்று இத்திருப்பதிகம்.

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

தேவா சிறியோம் பிழையைப் பொறுப்பாய் பெரியோனே
ஆவா வென்றங் கடியார் தங்கட் கருள்செய்வாய்
ஓவா வுவரி கொள்ள வுயர்ந்தா யென்றேத்தி
மூவா முனிவர் வணங்குங் கோயின் முதுகுன்றே. 1

---

1. தேவா! பெரியோனே! சிறியோம் பிழையைப் பொறுப் பாய்! அடியார் தங்கட்கு ஆ ஆ என்று அங்கு அருள் செய்வாய்! ஓவா உவரிகொள்ள உயர்ந்தாய்! என்று ஏத்தி வணங்கும் கோயில் முதுகுன்றே என முடிக்க.

தேவா - சிவமாந்தன்மைப் பெருவாழ்வினனே. 'அயன் திருமால் செல்வமும் ஒன்றோ என்னத் தேவு செய்யும்.' எனக் கொண்டு கூட்டி, தேவு என்பதற்கு ஆசிரியர் மாதவச்சிவஞான யோகிகள் 'சிவமாந்தன்மைப் பெருவாழ்வு' எனப் பொருள் உரைத்தருளியதறிக. சிறியோம் என்று மூவாமுனிவர்கள் சொல்லிக்கொள்வாராயின், அடியோம் அதனினும் இழிந்த சொல் பெறவழியில்லை. 'நின்னையான் அகன்று ஆற்றுவனோ' (திருக்கோவையார், 12.) என்புழி, அதன் உரையாசிரியர் கூறிய கருத்து ஈண்டுச் சிறுமை பெருமைகட்குங் கொள்க. ஆவா என்று:- 'ஆவா என அரக்கன் அலற அடர்த்திட்டுத்,

எந்தை யிவனென் றிரவி முதலா விறைஞ்சுவார்
சிந்தை யுள்ளே கோயிலாகத் திகழ்வானை
மந்தி யேறி யினமாய் மலர்கள் பலகொண்டு
முந்தித் தொழுது வணங்குங் கோயின் முதுகுன்றே. 2

---

தேவா என அருளார் செல்வம் கொடுத்திட்ட கோவே' (1. 89 8) 'ஆவா' என்றதன்பின், 'என்' எனும் பகுதியடியாத் தோன்றிய வினைச் சொல் வருதல் உண்டு, 'ஆவா என்று எனக்கு அருளாய்' என்ற பொருளது கொம்பொடிந்து பிழைத்தது (திருவாசகம் போற்றித் திருவகவல், 99) 'ஆஆ செத்தேன்' (ஷி, 3:- 165) என்பது போலும் இடத்தில் அவ்வினைச்சொல் தொடர்தல் வேண்டா, 'ஆவா என்ன ஆசைப் பட்டேன்' (திருவாசகம், 418) 'ஆவா என்ற நீர்மையெல்லாம்' (ஷி. 440) 'ஆவா என்றருளிச் செடிசேருடலைச் சிதையாதது எத்துக்கு எங்கள் சிவலோகா' (ஷி. 495) 'ஆவா என்னப் பட்டு. (ஷி. 603) 'ஆவ என்றருளி' (ஷி. 405), ஓவா உவரி - ஒழியாத கடல். தலவரலாறு காண்க, மூவா - மூத்த லில்லாத, (அழியாத என்றவாறு.) 'மூவாமுதலா' என்றதறிக. 'கோயில் முதுகுன்று' என்றதால், மலையே சிவபிரான் என் றுணர்க; திருவண்ணுமலையே சிவபிராணுகும் அச்சிறப்பு இத் தலத்துக்கும் உண்டு.

2 எந்தை - என் அப்பன், (தந்தை- தன் அப்பன், நுந்தை நுன் அப்பன் என்பது பழைய வழக்கு). இவன் எந்தை - இவனே (சிவபிரானே) என் அப்பன், என்று இறைஞ்சுவார் சிந்தையுள்ளே திகழ்வானை மந்தி மலர் கொண்டு வணங்குங் கோயில் என்க. கிரியாவிதிப்படி சிவபூஜை செய்வோர் முதலில் சூரிய பூஜை செய்வராதலின் 'இரவிமுதலா இறைஞ்சுவார்' என்றூர். இறைஞ்சுவார் - வினையாலணையும் பெயர். இரவி - சூரியன். திகழ்வான் - 'ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச் சோதிக்க வேண்டா சுடர்விட்டுளன் எங்கள் சோதி'. மந்தி - குரங்கு. ஈண்டு இனத்தைக் குறித்தது. குரங்கு களும் மலரினம் பல கொண்டு மக்கள் தொழுவதற்கு முந்தி வழிபடும் சிறப்பு உணர்த்தப்பட்டது. இது சிவபூஜை செய்யாத மாக்களை நாணுறுத்தும்.

நீடு மலரும் புனலுங்கொண்டு நிரந்தரம்
தேடு மடியார் சிந்தை யுள்ளே திகழ்வானைப்
பாடுங் குயிலி னயலே கிள்ளை பயின்றேத்த
மூடுஞ் சோலை முகிறேய் கோயில் முதுகுன்றே. 3

தெரிந்த வடியார் சிவனே யென்று திசைதோறும்
குருந்த மலருங் குரவி னலருங் கொண்டேந்தி
இருந்து நின்று மிரவும் பகலு மேத்துஞ்சீர்
முரிந்து மேகந் தவழுஞ் சோலை முதுகுன்றே. 4

வைத்த நிதியே மணியே யென்று வருந்தித்தம்
சித்த நைந்து சிவனேயென்பார் சிந்தையார்
கொத்தார் சந்துங் குரவும் வாரிக் கொணர்ந்துந்து
முத்தா றுடைய முதல்வர் கோயில் முதுகுன்றே. 5

---

3. நீடு - மிகுதி. நிரந்தரம் - எப்பொழுதும். தேடும் - ஆராயும். 'தேடிக் கண்டு கொண்டேன். (4 - 20 - 10) திருமாலொடு நான்முகனும் தேடித்தேடொணாத் தேவனை என்னுள்ளே தேடிக்கண்டு கொண்டேன்''. (அப்பர்; 4. 5. 12) ''ஓட்டற்று நின்ற உணர்வு பதிமுட்டித் தேட்டற்று நின்ற இடம் சிவமாம் - நாட்டற்று. நாடுமிடமெல்லாம் நாளுவிதமாகத் தேடுமிடமன்று சிவம்'' திருக்களிற்றுப்படியார். (5. 98. 1. 10 பார்க்க). கிள்ளை - கிளி. பயின்று - பழகி. 'மூடும்......குன்று' - மலையைச் சோலையும் முகிலும் மூடியிருக்கின்றன. மூடுதல் - பொதுவினை. தேய்தல் - முகிலின் (சிறப்பு) வினை.

4. தெரிந்த - சிவபிரானே வழிபாட்டிற்குரியனாகி வீடு பேறளிக்க வல்லவன் என்று ஆராய்ந்து அறிந்த. குருந்தம் என்னும் மரங்களின் மலர்களைக்கொண்டு நின்றும் இருந்தும் இரவும் பகலும் ஏத்தி வழிபடும் சீரையுடைய முதுகுன்று. முரிந்து - மேகங்கள் வளைந்து. மேகம் முரிந்து தவழும் சோலையையுடைய முதுகுன்று.

5. வைத்தநிதி - சேமவைப்பாகவைக்கப்பெற்ற செல்வம். 'வைச்சபொருள் நமக்கு ஆகும் என்று எண்ணி நமச்சிவாய அச்சம் ஒழிந்தேன்' (1. 80. 4) 'வைத்த பொருள் நமக்கு ஆம்

வம்பார் கொன்றை வன்னி மத்த மலர்தூவி
நம்பா வென்ன நல்கும் பெருமா னுறைகோயில்
கொம்பார் குரவு கொகுடி முல்லை குவிந்தெங்கும்
மொய்ம்பார் சோலை வண்டு பாடு முதுகுன்றே. 6

* * * 7

வாசங் கமழும் பொழில்சூ ழிலங்கை வாழ்வேந்தை
நாசஞ் செய்த நங்கள் பெருமா னமர்கோயில்
பூசைசெய்து வடியார் நின்று புகழ்ந்தேத்த
மூசி வண்டு பாடுஞ் சோலை முதுகுன்றே. 8

---

என்று சொல்லி மனத்து அடைத்துச் சித்தம் ஒருக்கிச் சிவாய நம என்றிருக்கின்........அத்தன் அருள் பெறலாம்........ நெஞ்சே' (1. 94. 5) 'வைத்தமாடு' (2. 72. 1, 77. 7). மணி - மாணிக்கம். வருந்தி - வழிபடாது கழிந்த காலத்தை எண்ணி வருந்தி. கட்டு வீடு இரண்டிலும் உபகரித்துவரும் பரசிவனை மறவாது வழிபட முயன்று. சித்தம் - சிந்திக்கும் மனம். நைந்து - மெலிந்து. சிவனே என்பார் சிந்தையார் - சிவசிவா என்று திரிகரண சுத்தியுடன் அழைத்திடும் அடியவர் சித்தத்தில் வாழ்பவர். சந்து - சந்தனமரம். குரவு - குராமரம். உந்தும் முத்தாறு - தள்ளுகின்ற (மணி) முத்த நதி. மணியாலும் முத்தாலும் கலந்து ஓடும் ஆறு மணிமுத்தாறு. திருமுதுகுன்றத்தருகில் ஓடும் ஆற்றின் பெயர் குறிக்கப்பட்டது.

6. வம்பு - மணம். வன்னி - சிறந்த பத்திரம் ஆகக் கொள்ளப்பட்ட வன்னிமரத்திலை. மத்தம் - ஊமத்தை. தூவி - அருச்சித்து. நம்பா என்று - நம்பனே என்று பூரண பக்தியுடன் அழைக்க. நல்கும் - வேண்டுவார் வேண்டுவதே ஈந்தருளும். கொகுடிமுல்லை என்பது முல்லை விசேடம். "கொய்ம்மாவின் மலர்ச்சோலைக் குயில்பாட மயிலாடுங் கொகுடிக் கோயில்" (7:- 299) எனத் திருக்கருப்பறியலூர் திருப்பதிகத்தில், நம்பியாரூரார் அருளியதுணர்க. மொய்ம்பு - வன்மை. மரச்செறிவு, உயர்ச்சி, உறுதி முதலியவற்றால் சோலைக்கு வன்மை கொள்ளப்படும். மொய்ப்பு (- நெருக்கம்) என்றதன் மெலித்தல் எனல் சிறந்ததன்று.

8. வாசம் - மணம். வேந்தை - அரசனாகிய இராவணனை. வேந்து :- சொல்லால் அஃறிணை, பொருளால் உயர்திணை

அல்லி மலர்மே லயனு மரவி னணையானும்
சொல்லிப் பரவித் தொடர வொண்ணுச் சோதியூர்
கொல்லை வேடர் கூடி நின்று கும்பிட
முல்லை யயலே முறுவல் செய்யு முதுகுன்றே. 9

கருகு முடலார் கஞ்சி யுண்டு கடுவேதின்
றுருகு சிந்தை யில்லார்க்கயலா னுறைகோயில்
திருகல் வேய்கள் சிறிதே வளையச் சிறுமந்தி
முருகின் பணைமே லிருந்து நடஞ்செய் முதுகுன்றே. 10

---

ஒற்று முதலியனவும் அன்னவையே. பூசை செய்த அடியார் நின்று புகழ்ந்து ஏத்த வண்டுமூசிப் பாடுஞ் சோலையை உடைய முது குன்று என்க. செய்த அடியார் என்று இறந்த காலத்தாற் கூறியதால், செய்யாதிருந்த காலமும் உண்டோ என்று ஐயுறலாகாது. அடியவர்கள் சிவபெருமானைப் பூஜை செய்ததும் எழுந்து நின்று திருமுன் மலர்களைத்தூவி, துதிபாடியேத்தி, வேர்த்தும் புரண்டும் விழுந்தும் எழுந்து' வழிபடும் கடமையுடையவர்கள்.

9. அல்லி - அகவிதழ்கள். அரவின் அணை - பாம்பாகிய படுக்கை. பிரமனும் விண்டுவும் என்றவாறு, சொல்லி - தோத்திரம் புரிந்து. பரவி - வாழ்த்தி, தொழ - வழிபட. ஒண்ணு - ஒன்றாத, பொருந்தப் புண்ணியஞ் செய்யாதவராயினர் என்றவாறு. சோதி - தீப்பிழம்பாய்த் தோற்றிய சிவபிரான் சோதியினது ஊர் முதுகுன்று என்க. முல்லை - (குறிஞ்சியை அடுத்த)முல்லைத்திணை. அயல் - பக்கம். முறுவல் - புன்னகை. முது குன்று - குறிஞ்சி, அதனை அடுத்துள்ள முல்லை, தன்பால் பூத்த முல்லைப்பூக்கள் ஆகிய பற்களைக்காட்டிப் புன்சிரிப்புச் செய்யுந்தோற்றத்தையுடையது.

10. கருகும் உடலார் - கரிய உடம்பினர், 'காரமண் கலிங்கத்துவராடையர்' (1 - 54 - 10) கடு - கடுக்காய். உருகு சிந்தை இல்லார் - இரங்கும் உள்ளம் வாய்க்காதவர், வன்னெஞ்சரென்றபடி. (அஃது) இல்லார்க்கு அயலான் என்றது அக் கனியும் மனம் இல்லாத சமணர் கொள்கைகளுக்கு எட்டாமல் வேருய் வேதாகமக்கொள்கைக்கு எட்டுமவன் பரமேச்சுவரன் என்றவாறு திருகல் - கோணல்.

அறையார் கடல்சூ ழந்தண் காழிச் சம்பந்தன்
முறையான் முனிவர் வணங்குங் கோயின் முதுகுன்றைக்
குறையாப் பனுவல் கூடிப் பாட வல்லார்கள்
பிறையார் சடையெம் பெருமான் கழல்கள் பிரியாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

வேய்கள் - மூங்கில்கள். முருகு - அகில் மரம். பணை - கிளை. சிறியமந்திகள் அகில் மரக் கிளைமேலிருந்து சிறிது வளைந்த வேய்களில் தாவிக் குதித்து ஆடும் என்க.

11. அறை - முழக்கம். அம்தண்காழி - அழகும் குளிர்ச்சியுமுடைய சீகாழி. முறையான் - வேதாகமமுறைப்படி. குறையாப்பனுவல் - நிறைவுறப்பாடிய இத் திருப்பதிகத்தை, கூடிப்பாடவல்லவர்கள் சந்திரசேகரனாகிய எம்பெருமானுடைய திருவடி நிழலைப் பிரியாதிருந்து பேரின்பம் நுகர்வர் என்றவாறு. அப்பேரின்பமே கொடுத்தலால், உலகின்பம் வேண்டுவார்க்கும் அதைக்கொடுத்தல் இப்பனுவலுக்கு மிக எளிதின் இயலுவதொன்று எனக்கொள்க.

---

நாம்உகந் தேத்திய ஞானசம் பந்தனை
நண்ணலர்போல்
ஏமுக வெஞ்சரஞ் சிந்திவல் இஞ்சி
இடிபடுக்கத்
தீமுகந் தோன்றிகள் தோன்றத் தளவ
முகையரும்பக்
காமுகம் பூமுகங் காட்டிநின் றார்த்தன
காரினமே. —அந்தாதி 59

# 65 திருப்பிரமபுரம்

## 201 பதிகவரலாறு

137-வது பதிகத்தலைப்பிற் காண்க.

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

கறையணி வேலிலர் போலுங் கபாலந் தரித்திலர் போலும்
மறையு நவின்றிலர் போலு மாசுண மார்த்திலர் போலும்
பறையுங் கரத்திலர் போலும் பாசம் பிடித்திலர் போலும்
பிறையுஞ் சடைக்கிலர் போலும் பிரம புரமமர்ந்தாரே. 1

---

1. கறை - குருதிபட்டுலர்ந்த கறுப்பு. வேல்; பகைவர் உடம்பிற் பாய்ந்து உற்ற ரத்தம் உலர்ந்து கறுப்பாகும், வேலுக்குச் சாதியடை. கபாலம் - பிரமகபாலம். தரித்திலர் - தாங்கிலர். மறை - வேதம். மாசுணம் - பாம்பு. பறை - உடுக்கை. (டமருகம்). பாசம் - கயிறு. முதற்பத்துப் பாக்களிலும் வரும் இலர்போலும் என்பது ஈற்றுப்பாட்டில் அண்ணல் செய்யாதன எல்லாம் அறிந்து வகை வகையாலே...நவின்றன'. என்ற கருத்திற் கேற்றவாறு பொருள் கொளற்பாலது. பரமசிவன் உண்மை (சொரூபநிலை) யில் இவை ஒன்றும் இல்லாத சச்சிதா நந்த சொரூபியாதலின் 'செய்யாதன' என்று எதிர்மறையில் கூறப்பட்டன. தடத்த நிலையாகிய பொதுவில், உயிர்களுக்கு ஐந்தொழிலும், அருட்டொழிலேயாகச்செய்யும் பொருட்டு, இவையெல்லாம் இறைவனுக்கு உள்ளன ஆதலின் 'இலர்' என உடையான் வினையாக்கியும் 'போலும்' என ஐயப்பொருட் டாக்கியும் உரைத்தருளினார். 'இலர் போலும்' என்பது உள்ளவர் என்னும் குறிப்புணர்த்துவது, இஃது இன்றும் உலக வழக்கில் இருக்கின்றது. செல்வரை, 'வறியர்போலும்' எனக் குறிப்புப்பொருள் உணர்த்தக் கூறுதல் முதலியன 'வேலிலர்' 'தரித்திலர்' 'சடைக்கிலர்' என்ற மூன்று வகை வாய்பாட்டில் அடங்குமாறும் அறிக. சிவபிரான் செய்தனவாக உள்ள அத்தனையும் உண்மை ஞானம் பெற்றார்க்குச் செய்யா தனவாய்த் தோற்றும். அவற்றைச் செய்தனவாகக் கொண்டு

கூரம் பதுவிலர் போலுங் கொக்கி னிறகிலர் போலும்
ஆரமும் பூண்டிலர் போலு மாமை யணிந்திலர் போலுந்
தாருஞ் சடைக்கிலர் போலுஞ் சண்டிக் கருளிலர் போலும்
பேரும் பலவிலர் போலும் பிரம புரமமர்ந் தாரே. 2

சித்த வடிவிலர் போலுந் தேசந் திரிந்திலர் போலுங்
கத்தி வருங்கடுங் காளி கதங்க டவிர்த்திலர் போலும்
மெய்த்த நயன மிடந்தார்க் காழி யளித்திலர் போலும்
பித்த வடிவிலர் போலும் பிரம புரமமர்ந் தாரே. 3

நச்சர வாட்டிலர் போலு நஞ்ச மிடற்றிலர் போலுங்
கச்சுத் தரித்திலர் போலுங் கங்கை தரித்திலர்போலும்
மொய்ச்சவன் பேயிலர் போலு முப்புர மெய்திலர் போலும்
பிச்சை யிரந்திலர் போலும் பிரம புரமமர்ந் தாரே. 4

---

வழிபடுவார்க்கே உண்மை ஞானம் உண்டாகும். ஆதலின் அவற்றைப் பொய்யெனலாகாது.

2. கூர் அம்பு - கூரியபாணம். கொக்கினது இறகு. ஆரம் - மணிமாலே. ஆமை - 'முற்றலாமை' (1 - 1 - 1). தார் - (கொன்றை) மாலே. சண்டி - சண்டேசுரர். பேர் - திருநாமம்; பெயர் என்பதன் மரூஉவாகும்.

3. சித்தவடிவு - சித்தருருவம் போலும் உருவம்; சித்துக்களில் வல்லவரென்பதை உணர்த்தும் திருமேனி. தேசம் - நாடு. கதங்கள் - கோப(ாவேச)ம். தவிர்த்திலர் - நீக்கிலர். மெய்த்த - மெய்யி(உடம்பி)லுள்ள. எய்த்த எனப் பிரித்துப் பொருள் கொள்ளல் சிறந்தது, நயனம் - கண். இடந்தார்க்கு - போர்த்(து ஆயிரம் பூவென நிறைத்)த திருமாலுக்கு. ஆழி - சக்கிராயுதம். பித்தவடிவு - பித்தர் வடிவு போலும் வடிவாம்.

4. நச்சு அரவு - நஞ்சமுடைய பாம்பு (நஞ்சு - நச்சு, விஷம்). கச்சு - அரையிற்கட்டும் கச்சு. மொய்ச்ச - மொய்த்த. வன்பேய் - வலியபேய்கள். பிச்சை இரத்தல் - பிச்சையிடுக என்று யாசித்தல்.

தோடு செவிக்கிலர் போலுஞ் சூலம் பிடித்திலர் போலும்
ஆடு தடக்கை வலிய யானை யுரித்திலர் போலும்
ஓடு கரத்திலர் போலு மொள்ளழல் கையிலர் போலும்
பீடு மிகுத்தெழு செல்வப் பிரம புரமமர்ந் தாரே. 5

விண்ணவர் கண்டிலர் போலும் வேள்வி யழித்திலர் போலும்
அண்ண லயன்றலை வீழ வன்று மறுத்திலர் போலும்
வண்ண வெலும்பினொ டக்கு வடங்க டரித்திலர் போலும்
பெண்ணின மொய்த்தெழு செல்வப் பிரம புரமமர்ந் தாரே. 6

பன்றியின் கொம்பிலர் போலும் பார்த்தற் கருளிலர் போலுங்
கன்றிய காலனை வீழக் கால்கொடு பாய்ந்திலர் போலுந்
துன்று பிணஞ்சுடு காட்டி லாடித் துதைந்திலர் போலும்
பின்றியும் பீடும் பெருகும் பிரம புரமமர்ந் தாரே. 7

---

5 செவிக்குத் தோடு இலர்போலும் என்க. ஆடுகை. தடக்கை. துதிக்கை ஆடுதலும் பரியதாதலும் வெளிப்படை. வலிய ஆனையை உரித்தல் செய்யாதவர் போலும்.

6. விண்ணவர் - விண்ணிடத்திலுள்ள தேவர். வேள்வி - தக்கன் யாகம். அண்ணல் - படைத்தற் கடவுள்; பெருமையுமாம். அயன் - பிரமன். வண்ணம் - அழகு. அக்கு - உருத்திராக்கம். பெண்ணினம் - மகளிர்கூட்டம். ஈண்டுப் பெண்ணென்னும் அஃறிணைப் பெயர் பெண்டிர் என்னும் உயர்திணைப் பொருட்டாய் நின்றது. பெண்கள், ஆண்கள் என்னும் பிழை வழக்குப் பயிற்சியை நோக்குக. 'சோர்விலாள் பெண்' என்ற வள்ளுவர் காலத்துக்கு முன்னேயே இவ்வாறு வழங்கியது போலும். மொய்த்து - (கூடி) நெருங்கி.

7. பன்றியின் கொம்பு - ஏனக்கொம்பு, 'ஏனமுளைக் கொம்பு' (1 - 1 - 2). பார்த்தற்கு - அருச்சுனனுக்கு. கன்றிய - கோபித்த. காலன் - எமன். காலனைக் கால்கொடுபாய்ந்திலர், வீழப்பாய்ந்திலர் என்க. துன்று - நெருங்கிய. துதைந்திலர் - நெருங்கிலர். பின்றி - பிந்தி. 'பின்றா நேசத்தால்' (திருவாசகம்). பீடு - பெருமை.

பரசு தரித்திலர் போலும் படுதலை பூண்டிலர் போலும்
அரச னிலங்கையர் கோனை யன்று மடர்த்திலர் போலும்
புரைசெய் புனத்திள மானும் புலியி னதளிலர் போலும்
பிரச மலர்ப்பொழில் சூழ்ந்த பிரம புரமமர்ந் தாரே. 8

அடிமுடி மாலயன் றேட வன்று மளப்பிலர் போலுங்
கடிமல ரைங்கணை வேளைக் கனல விழித்திலர் போலும்
படிமலர்ப் பாலனுக் காகப் பாற்கட லீந்திலர் போலும்
பிடி நடை மாதர் பெருகும் பிரம புரமமர்ந் தாரே. 9

வெற்றரைச் சீவரத் தார்க்கு வெளிப்பட நின்றிலர் போலும்
அற்றவ ரானிழ லல்வர்க் கறங்க ளுரைத்திலர் போலும்
உற்றல ரொன்றிலர் போலு மோடு முடிக்கிலர் போலும்
பெற்றமு மூர்ந்திலர் போலும் பிரம புரமமர்ந் தாரே. 10

---

8. பரசு - மழு. படுதலை - கபாலம். கோன் - இராவணன். அடர்த்திலர் - தாக்கிலர். புரை - பன்னசாலை. அதள் - தோல். பிரசம் - தேன்.

9. கடி - மணம். மலர் ஐங்கணை - ஐந்து பூங்கணை. வேள் - (கரு) வேள்; மன்மதன். கனல - தீப்பொறி பறக்க. பாலன் - உபமன்யுமுனிவர். 'பாலுக்குப் பாலகன் வேண்டி யழுதிடப் பாற்கடலீந்த பிரான்'. பிடி - பெண் யானை.

10. வெறுமை அரை சீவரத்தார் - ஆடையில்லாச்சமணர். சீவரம் - பழுப்பேறிய ஆடை. 'துவர் ஊட்டின சீலை'யும் ஆம். 'சீவரம் போர்த்தல் மத்திம தேசத்தார் ஆசாரம் அன்றோ மூத்தோர் முன் இளையார் போர்வை வாங்குவது போல' (நீலகேசி 3: - 13. உரை). அற்றவர் - பற்று ஒன்றுமில்லாதவர். 'அற்றவர்க்கு அற்ற சிவன்' பெம்மாற்கு அற்றிலாதவரை கண்டால் அம்ம நாம் அஞ்சுமாறே' (திருவா - 514). நால்வர் - சனகாதியர். அலர் - பழி. முடிக்கு - சடைமுடிக்கு. ஓடு - தலையோடு. 'தலைமாலை தலைக்கணிந்து.' பெற்றம் - எருது.

பெண்ணுரு வாணுரு வல்லாப் பிரம புரநகர் மேய
அண்ணல்செய் யாதன வெல்லா மறிந்து வகைவகை யாலே
நண்ணிய ஞானசம் பந்த னவின்றன பத்தும்வல் லார்கள்
விண்ணவ ரோடினி தாக வீற்றிருப் பாரவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

*11.* 'பெண்ணுரு .........அண்ணல்' பெண்ணுருவமும் ஆணுருவமும் அல்லாத அண்ணல். 'ஆணலார் பெண்ணும் அல்லார் அதிகை வீரட்டனுரே' (4. 27. 8). 'பெண் அல்லே ஆண் அல்லே பேடும் அல்லே' (6. 45. 9). பிரமபுரநகர் மேய அண்ணல் - பிரமபுரத்தில் எழுந்தருளிய தலைவர். 'செய்யா தன எல்லாம்' என்றதால் முற்பாக்களில் உரைத்தவை சிவபிரான் செய்யாதவை என்றும்; பொருள்சேர் புகழ் என்றும் உணர்த்தினர். வல்லவர்களாகிய அவர் வீற்றிருப்பார் என்று இயைக்க. நண்ணிய - விரும்பிய.

---

காரங் கணைபொழிற் காழிக் கவுணியர்
தீபன்நல்லூர்ச்
சீரங் கணைநற் பெருமணந் தன்னிற்
சிவபுரத்து
வாரங் கணைகொங்கை மாதொடும் புக்குறும்
போதுவந்தார்
ஆரங் கொழிந்தனர் பெற்றதல் லால்அவ்
அரும்பதமே. —அந்தாதி 60

அரும்பத மாக்கும் அடியரோ டஞ்சலித்
தார்க்கரிய
பெரும்பதம் எய்தலுற் றீர்வந் திறைஞ்சுமின்
பேர்அரவம்
வரும்பத நான்மறைக் காழித் தலைவன்
மலர்க்கமலத்
தரும்பத ஞானசம் பந்தன்என் னானைதன்
தாளிணையே. —அந்தாதி 61

# 66 திருவாலவாய்

## 202 பதிகவரலாறு

மதுரையில், அருகர்கூடி, தம்திருமடத்தில் இட்டதீயை, புகலிவேந்தர், இனி அரசன் எய்தும் வெப்பு அகலற்பொருட்டு, தீண்டி, வெண்ணீறு இடுதற்குரிய பேறு உடையன் ஆதலின், பேரருளினுல் 'பையவே செல்க' என்று ஏவப்பட்ட வெப்பு நோய் தென்னனை மேவிற்று. முயன்ற பலராலும் தீர்க்க முடியாதிருந்தது. திருஞானசம்பந்தப் பிள்ளையார் கடைக் கண்ணோக்கம் பெற்றுல் பிறவிநோயே ஒழியும் எனின், இந்நோய் ஒழிவதில் ஐயமில்லை என்று குலச்சிறையார் கூறினர். ஞானசப்பந்தர் என்ற திருப்பெயரைக் கேட்டதே பாண்டியனுக்கு ஓரளவு இன்பம் உண்டாக்கிற்று. அதனுல், அழைத்துவர அவன் வேண்டினுன். சென்று வணங்கி வேண்டி அழைத்தனர் அமைச்சர் முதலோர். திருவுளம் பற்றிப் பிள்ளையார் எழுந்தருளினர். நோக்கும் புண்ணிய ஞனுன் காக்கும் பாண்டியன். அவன் வெப்பு நோயை விலக்கப் பாடியருளியது இத் திருநீற்றுப் பதிகம்.

### திருநீற்றுப்பதிகம்

### பண் - கரந்தாரம்

திருச்சிற்றம்பலம்

மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் றிருவால வாயன் றிருநீறே. 1

---

*1.* திருநீறு மந்திரம் போல நினைத்ததைக் கொடுக்கும். நினைத்தவரைக் காக்கும். வானவர் - சிவலோகத்திலுள்ளவர். சிவமானவர். மேலது - திருமேனியில் பூசப்பட்டது. சுந்தரம் - அழகு; சிவப்பொலிவு. துதிக்கப்படுவது என்பதற்கு இத் திருப்பதிகமே சான்று. தந்திரம் - ஆகமம். சிவாகமத்தில்

வேதத்தி லுள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு
போதந் தருவது நீறு புன்மை தவிர்ப்பது நீறு
ஓதத் தகுவது நீறு வுண்மையி லுள்ளது நீறு
சீதப் புனல்வயல் சூழ்ந்த திருவால வாயான் றிருநீறே. 2

முத்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு
சத்திய மாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு பரவ வினியது நீறு
சித்தி தருவது நீறு திருவால வாயான் றிருநீறே 3

---

சிறப்பாகச் சொல்லப்படுவது. சமயத்திலுள்ளது - சிவசமயத்தில் அழியாத பொருளாவது பதி, பசு பாசம் என்னும் முப்பொருள். பாசம் - பசுவின் கண் இருந்து பதியால் நீருக்கப்பட்ட உண்மையை உணர்த்துவது. உள்ளது - சிவம். 'ஓர்த்து உள்ளம் உள்ளது உணரின்' — (திருக்குறள்) திருநீறே சிவம். துவர் - பவளம். பங்கன் - பாகன். திரு ஆல வாயான் - மதுரைத் தலத்தில் திருவாலவாய்க்கோயிலுள் எழுந்தருளியிருப்பவன். திருவாலவாயான்றிருநீறு என்பது ஆறன்தொகையாதல் அறிவார்க்குத் திருநீறே சிவகதி தரும் என்னும் உண்மை இனிது புலப்படும். 'கங்காளன் பூசும் கவசத்திருநீற்றை...பூசி மகிழ்வாரே யாமாகில்...சாரும் சிவகதி...' (திருமந்திரம்).

2. திருநீறு வேதத்தில் சிறக்க எடுத்தோதப் பெற்றது. கொடிய பிறவித் துயரம் முதலியவற்றைத் தீர்ப்பது. சிவஞானத்தைத் தருவது. அறியாமை முதலிய புன்மைகளை நீக்குவது. ஆசிரியர் மாணுக்கர்க்கு ஓதத்தகும் அளவு பெருமை உடையது. ஓதும்போது அணியத் தகுதியுடையது. உண்மையில் நிலைபெற்றிருப்பது. உண்மை - மெய்ப்பொருளுமாம். சீதம் - குளிர்ச்சி. புனல் - நீர்.

3. வீட்டை அளிப்பது; எல்லாச் செல்வங்களையும் வெறுத்தவர் முனிவர். முனிவு - வெறுப்பு; கோபம். முனிவர் (முநிவர்) - மநநசீலர் எனலுமாம். அணிவது - அழகு செய்வது. பூண்பதுமாம். சத்தியம் - எப்பொழுதும் உள்ளது. தக்கோர் - சிவனடியார். பத்தி - திருவடிக்கன்பு. பரவ - வாழ்த்த. சித்தி- எண்வகைச் சித்தி. அணிமா முதலியன.

காண வினியது நீறு கவினைத் தருவது நீறு
பேணி யணிபவர்க் கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு
மாணந் தகைவது நீறு மதியைத் தருவது நீறு
சேணந் தருவது நீறு திருவால வாயான் றிருநீறே. 4

பூச வினியது நீறு புண்ணிய மாவது நீறு
பேச வினியது நீறு பெருந்தவத் தோர்களுக் கெல்லாம்
ஆசை கெடுப்பது நீறு அந்தம தாவது நீறு
தேசம் புகழ்வது நீறு திருவால வாயான் றிருநீறே. 5

அருத்தம தாவது நீறு அவல மறுப்பது நீறு
வருத்தந் தணிப்பது நீறு வான மளிப்பது நீறு
பொருத்தம தாவது நீறு புண்ணியர் பூசும்வெண் ணீறு
திருத்தகு மாளிகை சூழ்ந்த திருவால வாயான் றிருநீறே. 6

---

**4.** பால் வெண்ணீறாய், தன்னை அணிந்தோரைப் பிறர் கண்ணுக்கு அழகராயளித்துக் கருத்திற்கு இனிமை விளைப்பது. கவினைத் தருவது-அணிவோர்க்குச் சிவப்பொலிவு தருவது. பேணி-விரும்பி. பெருமை - திருவருட்சிறப்பு. மாணம் - இறப்பு. நீள் என்னும் பகுதி அம் என்னும் விகுதியோடு சேர்ந்து நீளம் என்று ஆகின்றது. நிகள் என்பதன் முதல் நீட்சியே நீள் என்பது. துகள் தூள் என்பதுபோல. அது போல; மாள் + அம் மாளம். ளகரம் ணகரமாதல் இயல்பு; 'நீணுதல் செய்தொழியந் நிமிர்ந்தான்' (1 - 1 - 9) என்பதில் னகரம் ணகரமானதைக் காண்க. பெள் - பெண். எள் - எண். தகைவது - தடுப்பது. மதி - இயல்பான அறிவு. 'மதிநுட்பம் நூலோடு உடையார்' (திருக்குறள்). சேணம் - உயர்வு. பாசத்தார்க்குத் தூரத்த தாகிய வீடுமாம்.

**5.** பூசப்பூச இனிமையாக்குவது, சிவ புண்ணியத்தை வளர்ப்பது. பெருமையைப் பேசப் பேச இனிமை உண்டாக்குவது. பெரிய தவத்தோரெல்லார்க்கும் பற்றொழிப்பது. முடிவான பேரின்ப நிலையைத் தருவது. அந்தம் - அழகுமாம். தேசங்களெல்லாம் புகழப்பெறுவது.

**6.** செல்வமாவது. துன்பம் போக்குவது, வருத்தம் ஒழிப்பது. வானம் - துறக்கம்; சிவலோகம். அளிப்பது - கொடுப்பது. சிறப்பாகச் சைவசமயத்தார்க்கும் பொதுவாக

மதுரையில் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்




'தென்னன் உடல் உற்ற தீப்பிணி' தீர்த்தது

எயிலது வட்டது நீறு விருமைக்கு முள்ளது நீறு
பயிலப் படுவது நீறு பாக்கியமாவது நீறு
துயிலைத் தடுப்பது நீறு சுத்தம தாவது நீறு
அயிலைப் பொலிதரு சூலத் தால வாயான் றிருநீறே. 7

இராவணன் மேலது நீறு வெண்ணத் தகுவது நீறு
பராவண மாவது நீறு பாவ மறுப்பது நீறு
தராவண மாவது நீறு தத்துவ மாவது நீறு
அராவணங் குந்திரு மேனி யால வாயான் றிருநீறே. 8

---

எல்லாச்சமயத்தார்க்கும் பொருத்தமாயிருப்பது திருநீறு. சிவ புண்ணியத்தை உடையவரும் பசு புண்ணியத்தை உடையவரும் ஆகிய சைவர் பூசுகின்ற வெண்ணீறு. திருத்தகு மாளிகை - அழகு தக்க மாளிகைகள்.

7. எயில் - திரிபுரம். அட்டது - எரித்தது. அது என்பது பகுதிப்பொருள் விகுதி. இருமை - இம்மை மறுமை. பயிலப் படுவது - திருநீற்றை அணிந்து அணிந்து பழகினாலன்றி அதன் பயனை எய்துவதரிது. பாக்கியம் - செல்வம், அருள். துயிலை - கேவலத்தையும் சகலத்தையும். சுத்தமதாவது - சுத்தாவத்தையாய் விளங்குவது. அயில் - கூர்மை. பொலிதரு - விளக்கம் செய்கின்ற.

8. இராவணன் மேலது - திரிலோக சஞ்சாரியாகிய இராவணன் தனக்கு வாய்த்த செல்வப்பெருக்கத்தை மதித்துத்திருநீற்றையவமதிக்காமல் அணிந்து சிவபிரானருளைப்பெற்றான் என்னும் உண்மை எல்லா நன்மக்களாலும் எண்ணத்தக்கது. திருநீறே வீடு பேறளிக்கும் என்னும் உண்மை எண்ணத் தக்கது. பராவண்ணம் ஆவது - பராசக்தி சொரூபமானது. அதனால் உயிர்களின் பாவம் போக்குவதாகின்றது. தராவண்ணம் - தத்துவம்; மெய்ப்பொருள். அரா - பாம்பு. வணங்கும் - வளையும்; தாழும். அணங்கும் எனின் அழகுசெய்யும் என்க.

மாலொ டயனறி யாத வண்ணமு முள்ளது நீறு
மேலுறை தேவர்க டங்கண் மெய்யது வெண்பொடி நீறு
ஏல வுடம்பிடர் தீர்க்கு மின்பந் தருவது நீறு
ஆலம துண்ட மிடற்றெம் மால வாயான் றிருநீறே. 9

குண்டிகைக் கையர்க ளோடு சாக்கியர் கூட்டமுங் கூடக்
கண்டிகைப் பிப்பது நீறு கருத வினியது நீறு
எண்டிசைப் பட்ட பொருளா ரேத்துந் தகையது நீறு
அண்டத் தவர்பணிந் தேத்து மால வாயான் றிருநீறே. 10

ஆற்ற லடல்விடை யேறு மால வாயான்றிரு நீற்றைப்
போற்றிப் புகலி நிலாவும் பூசுரன் ஞானசம் பந்தன்
தேற்றித் தென்ன னுடலுற்ற தீப்பிணி யாயின தீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

9. மேல் - விண்ணுலகம். உறை - வாழ்கின்ற. தேவர்கள். தங்கள் மெய்யது - தேவர்களுடைய உடம்பிற் பூசப்பட்டது. பொடி - நீறு. ஒரு பொருட் பல்பெயர். உடம்பு இடர் ஏலத் தீர்க்கும் இன்பம் - உடம்பெடுக்கும் துன்பத்தைப் பொருந்தப் போக்கும் இன்பம். உடம்பிலுள்ள இட்ருமாம். ஆலமது நஞ்சு. மிடறு - திருக்கழுத்து.

10. குண்டிகை - கமண்டலத்தை ஏந்திய. கையர்கள் - கீழ்மக்கள். கண் திகைப்பிப்பது-கண் திகைக்கச்செய்வது. கருத- தியானிக்க. எண் திசைப்பட்ட பொருளார் - எட்டுத் திசை யிலும் பொருந்திய சிவமாகிய மெய்ப்பொருளை அடைந்தவரும், விரும்பினவரும், வழிபடுபவருமாகிய சைவர். அவர் ஏத்தும் தன்மையுடையது. அண்டத்தவர் - மேலுலகத்தவர்.

11. ஆற்றல் - வலிமை. அடல் - கொலை. இரண்டும் உடையது விடை. ஆலவாயான் திருநீற்றைப் போற்றி - முதற் பத்துப்பாக்களால் திரு வாலவாய்ச் சிவனுடைய திருநீற்றைத் துதித்து. புகலி - சீகாழி. பூசுரன் - பூமியிலுள்ள தேவர். தேற்றி - சைவத்தின் மாண்பைத் தெரிவித்து. தென்னன் - கூன்பாண்டியன். தீ பிணி - தீமையை விளைவிக்கும் நோய்கள். வல்லவர் எழுவாய்; நல்லவர் பயனிலை.

# 67 திருப்பெரும்புலியூர்

## 203 பதிகவரலாறு

திருவையாற்றை நண்ணி வழிபடும் திருஞானசம்பந்தர் திருத்தொண்டர்களோடு அடைந்து பணிந்த தலங்களுள் முதலாவது இத் திருப்பெரும்புலியூர். அங்குள்ள திருக் கோயிலை அணைந்து போற்றிப் புனைந்த தமிழ்த்தொடை இத்திருப்பதிகம்.

### பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

மண்ணுமோர் பாக முடையார் மாலுமோர் பாக முடையார்
விண்ணுமோர் பாக முடையார் வேத முடைய விமலர்
கண்ணுமோர் பாக முடையார் கங்கை சடையிற் கரந்தார்
பெண்ணுமோர் பாக முடையார் பெரும்புலி யூர்பிரி யாரே. 1

துன்னு கடற்பவ ளஞ்சேர் தூயன நீண்ட திண்டோள்கள்
மின்னு சுடர்க்கொடி போலு மேனியி னுளொரு கங்கைக்
கன்னி களின்புனை யோடு கலைமதி மாலை கலந்த
பின்னு சடைப்பெரு மானூர் பெரும்புலி யூர்பிரி யாரே. 2

---

*1.* சிவபெருமானது விசுவரூபத்தில் ஒவ்வொரு பாகம் மண்ணும், அம்மண்ணைப் படைக்கும் பிரமனும், காக்கும் மாலும், விண்ணும், கண்ணும், பெண்ணும் உடையவர். வேதத்தை(ச் செய்யுட்கிழமையாக) உடைய நிமலர். கங்கையைச் சடையில் ஒளித்தவர். உடையாரும், விமலரும், கரந்தாருமாகிய சிவபெருமான் புலியூர் பிரியார் என்க. உடையார் எழுவாய், பிரியார் பயனிலை. பெரும்புலியூர் செயப்படுபொருள். மேலும் இங்கனமே கொள்க.

*2.* துன்னு - நெருங்கிய. பவளம் சேர் தோள்கள் - கடலிலுள்ள பவளத்தை ஒத்த தோள்கள். தூயன தோள்கள். நீண்ட தோள்கள். திண்மை - உறுதி. சுடர்க்கொடி போலும் மேனியினுள் - சோதிக்கொடிபோன்ற திருமேனியுடையவள்

கள்ள மதித்த கபாலங் கைதனி லேமிக வேந்தித்
துள்ள மிதித்துநின் ருடுந் தொழில ரெழின்மிகு செல்வர்
வெள்ள நகுதலை மாலை விரிசடை மேன்மிளிர் கின்ற
பிள்ளை மதிப்பெரு மானுர் பெரும்புலி யூர்பிரி யாரே. 3

ஆட லிலைய முடையா ரருமறை தாங்கியா றங்கம்
பாட லிலைய முடையார் பன்மை யொருமைசெய் தஞ்சும்
ஊட லிலைய முடையார் யோகெனும் பேரொளி தாங்கிப்
பீட லிலைய முடையார் பெரும்புலி யூர்பிரி யாரே. 4

---

கங்கைக் கன்னிகள் புனையோடு - கங்கை நதியின் கிளைகளின் நீரொடு. நதிகளைப் பெண்பாலாக்கொள்ளுதல் மரபு. நதிபதி எனக் கடலைக் கொள்ளுதலால் கன்னி என்பது பெண் ணென்னும் பொருட்டு. புனை - நீர். 'அனைவரு கானகத்து அமுதளாவிய புனை வர உயிர் வரும் உலவை' (கம்பர். அகத் தியப் - 4). கலைமதிமாலை - பதினறு கலைகளுடைய திங்கட் கண்ணி, சிவபெருமான் சடைமேலுள்ளது பிறையேயாயினும் மதிக்குரிய அடை கொடுத்துக் கூறுதல் உண்டு. சாதியடை. திருமுறையுள் ஆண்டாண்டுக் காண்க. புனையோடுமாலை கலந்த சடை. பின்னு சடை. சடையையுடைய பெருமானுர்.

3. கள்ள மதித்த கபாலம் - கள்ளத்தைக் கருதிய பிரமனது கபாலம். முதல் வினை சினைமேல் ஏற்றப்பட்டது. அதைக் கையில் ஏந்தித் துள்ள மிதித்து நின்று ஆடும் தொழி லுடையவர் என்று சிவபெருமான் நடனமாடுங்காலத்துக் கபாலத்தைத் தாங்கியிருந்த உண்மை கூறப்பட்டது. எழில்மிகு செல்வர் - சென்று அடையாமையாகிய அழகுமிக்க செல்வத்தை உடையவர். வெள்ளம் - கங்கை. நகு தலை மாலை - சிரிக்கின்ற தலைகளின் வரிசை. பிள்ளைமதி - இளம்பிறை.

4. ஆடல் இலயம் - நடன லயம். ஆறு அங்கம் - சிக்கை, கற்ப சூத்திரம், வியாகரணம், நிருத்தம், சந்தோவிசிதி, சோதிடம் என்பன. பாடல் இலயம் - சங்கீதலயம். பன்மை ஒருமை செய்து - அநேகம் ஏகம் என்னும் நிலைமைகளைத் தோற்றி. அஞ்சும் - ஐம்பொறிகளும். ஊடலில் - ஊடுத லாலே. (ஐம்பொறி அடக்கம் இல்லாமையால்.) ஐயம் உடை யார் - மெய்ப்பொருள் நிச்சயமின்றி ஐயப்படுதலுக்குரியார்.

தோடுடை யார்குழைக் காதிற் சுடுபொடி யாரன லாடக்
காடுடை யாரெரி வீசுங் கையுடை யார்கடல் சூழ்ந்த
நாடுடை யார்பொரு ளின்ப நல்லவை நாளு நயந்த
பீடுடை யார்பெரு மானுர் பெரும்புலி யூர்பிரி யாரே. 5

கற்ற துறப்பணி செய்து காண்டுமென் பாரவர் தங்கள்
முற்றி தறிதுமென் பார்கண் முதலியர் வேதபு ராணர்
மற்றி தறிதுமென் பார்கண் மனத்திடை யார்பணி செய்யப்
பெற்றி பெரிது முகப்பார் பெரும்புலி யூர்பிரி யாரே. 6

---

யோகு - யோகம். யோகநெறி; ஒளிநெறியாதலின் யோகெனும் பேரொளி என்ருர். பீடு அல் - பெருமையுடைய நள்ளிரவில். இலயமுடையார் - நட்டம் பயிலுதலுடையார். நள்ளிருளில் நட்டம் பயின்ருடும் ஆற்றல் யோகெனும் பேரொளி தாங்கியிருத்தல் கொண்டே 'உறைந்ததோர் ஒளியதாக்கி ஒடுங்கிடின் யோகபூசை' (ஞானபூசாகாரணம்-14) என்பதும், ஞானி யோகி கிரியாவான் முறையே அறிவிற்கறிவாகவும் அறிவில் ஒளியாகவும் அறிவில் மூர்த்தியாகவும் தியானிப்பர் என்பதும், 'மூன்றும் பெறின்புறப் பூசையாமே' (ஞான - 14) என்பதும் 'மூன்றும் உணர்வும் ஒளியும் மூர்த்தியும்' என்பதும் தருமையாதீனத்து முனிவருள் ஒருவராகிய ஸ்ரீமத் சட்டைநாதத் தம்பிரான் சுவாமிகள் குறிப்புரையால் உணரத்தக்கன. இதனுல் யோகியர் யோகெனும் பேரொளி தாங்கும் உண்மை புலப்படும்.

5. குழையணிந்ததொரு காதில். தோடணிந்ததொரு காதில். காதில் திருநீறணிதல் உணர்த்தப்பட்டது. காட்டில் தீயில் ஆடுபவர். கையில் எரி ஏந்தியவர். கடல் சூழ்ந்த நாடெல்லாம் உடையவர். பொருள் இன்பம் ஆகிய நல்லவற்றை நாள்தோறும் விரும்பி, அடியார்க்கருளும் பெருமை உடையார்.

6. கற்றது உறப் பணி செய்து காண்டும் என்பார் அவர் தம் கண் - கற்றதனுலாய பயன் தம்மைப்பொருந்தத் திருப்பணி செய்து கடவுளைக் காண்போம் என்பார்க்கு அவர் தம் கண்ணுயுள்ளார். முற்று இது அறிதும் என்பார்கள் முதலியர் - இதனை முற்றும் அறிவோம் என்பவர்களுக்கு முதல்வராயிருப்பவர். வேதபுராணர் - வேதமும் புராணமுமாயிருப்பவர்.

மறையுடை யாரொலி பாடன் மாமலர்ச் சேவடி சேர்வார்
குறையுடை யார்குறை தீர்ப்பார் குழகர ழகர்நஞ் செல்வர்
கறையுடை யார்திகழ் கண்டங் கங்கை சடையிற் கரந்தார்
பிறையுடை யார்சென்னி தன்மேற் பெரும்புலியூர்பிரி யாரே. 7

உறவியு மின்புறு சீரு மோங்குதல் வீடெளி தாகித்
துறவியுங் கூட்டமுங் காட்டித் துன்பமு மின்பமுந் தோற்றி
மறவியஞ் சிந்தனை மாற்றி வாழவல் லார்தமக் கென்றும்
பிறவி யறுக்கும் பிரானுர் பெரும்புலி யூர்பிரி யாரே 8

சீருடை யாரடி யார்கள் சேடரொப் பார்சடை சேரும்
நீருடை யார்பொடிப் பூசு நினைப்புடை யார்விரி கொன்றைத்
தாருடை யார்விடை யூர்வார் தலைவரைந் நூற்றுப்பத் தாய
பேருடை யார்பெரு மானுர் பெரும்புலி யூர்பிரி யாரே. 9

---

வேதத்தால் உணர்த்தப்படும் பழையோர். மற்று இது அறிதும் என்பார்கண் மனத்திடையார் - இதைப் பின்னே அறிவோம் என்பாருடைய மனத்தில் இருப்பவர். பணி செய்யப் பெற்றி பெரிதும் உகப்பார் - திருத்தொண்டு செய்துவரின் அத் தொண்டின் தன்மையையும் தொண்டர் தன்மையையும் மிக விரும்பி அருள் செய்வார்.

7. வேதங்களுடையவரும், ஒலிக்கின்ற பாடல்களாலே அழகிய தாமரை மலர்போலும் சிவந்த திருவடிகளை இடைவிடாது நினைப்பவர்களும், மனக்குறை உடையவர்களும் ஆகிய எத்திறத்தாருடைய குறைகளையும் தீர்ப்பார். இளைஞர். சொக்கர். நம் செல்வர். நீலகண்டர். கங்கைச் சடையர். சந்திரசேகரர்.

8. உறவியும் இன்புறு சீரும் ஓங்குதல் - உறவும் இன்பம் மிக்க சிறப்பும் உயர்தல். எளிதாகி - வீடு எளிதாகி. பற்றற்றொழிதல் எளியதாகி. துறவியும் கூட்டமும் காட்டி - முத்தியும் பந்தமும் காட்டி. துன்பமும் இன்பமும் தோற்றி - துக்கமும் சுகமும் ஆக்கி. மறவி அம் சிந்தனை மாற்றி - மறத்தல் உடைய கருத்தை ஒழித்து. வாழ வல்லவர் தமக்கு பிறத்தல் என்றும் இல்லாமல் போக்கும் பிரானுர். இத் திருப்பாடல் எல்லாருள்ளத்தும் என்றும் நிற்கத்தக்கது.

9. சீர் - கனம். உடையார் - சுவாமி. அடியார்கள் சேடர் ஒப்பார் - அடியார்களுக்கெல்லாம் பெரியோரைப் போல்வார்.

உரிமை யுடையடி யார்க ளுள்ளுற வுள்கவல் லார்கட்
கருமை யுடையன காட்டி யருள்செயு மாதி முதல்வர்
கருமை யுடைநெடு மாலுங் கடிமல ரண்ணலுங் காணாப்
பெருமை யுடைப்பெரு மானார் பெரும்புலி யூர்பிரி யாரே. 10

பிறைவள ரும்முடிச் சென்னிப் பெரும்புலி யூர்ப்பெரு மானை
நறைவள ரும்பொழிற் காழி நற்றமிழ் ஞானசம் பந்தன்
மறைவள ருந்தமிழ் மாலை வல்லவர் தந்துயர் நீங்கி
நிறைவளர் நெஞ்சின ராகி நீடுல கத்திருப் பாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சடைசேரும் கங்கை உடையார். திருநீறு பூசும் திருவுள்ளம் உடையார். விரிந்த கொன்றைமாலை அணிந்தவர். எருது ஊர்வார். எவ்வுலகிற்கும் எவ்வுயிர்க்கும் தலைவர். ஐயாயிரம் பேர் உடையார்.

*10.* உரிமை உடைய...முதல்வர் - திருவருள் உரிமை உடைய அடியவர்களின் உள்ளத்தில் மிக நினைக்க வல்லவர் கட்குக் காண்டற்கருமையுடையனவற்றைக் காட்டி அருள் செய்யும் அநாதி முதல்வன். ஆதிமுதல்வன் என்பது ஆதிக்கும் ஆதியாய அநாதி முதல்வரை உணர்த்திற்று. மாயோனும் மலரவனும் காணாத தீப்பிழம்பாகிய பெருமை உடைய பெருமான்.

*11.* பிறை தளர்தலின்றி வளர்ந்துகொண்டேயிருக்கும் சடைமுடியைக் கொண்ட தலையையுடைய பெருமான். நறை - தேன். பொழில் - சோலை. நற்றமிழ் - திருப்பதிகங்கள். மறை வளரும் தமிழ்மாலை - இத் திருப்பதிகம். வல்லவர் எழுவாய். இருப்பார் - பயனிலை. அவர்க்குத் துயர் நீக்கமும், நெஞ்சுவளர் நிறையும் உளவாகும்.

---

# 68 திருக்கடம்பூர்

## 204 பதிகவரலாறு

வாழ்கொளிபுத்தூரில் வழிபட்டுவந்த திருஞானசம்பந்தர் பார்புகழ் பதிகங்கள்பாடி வார்பொழிற் கடம்பையும்வணங்கி மகிழ்ந்தபொழுது அருளியது இத்திருப்பதிகம்.

**பண் - காந்தாரம்**

**திருச்சிற்றம்பலம்**

வானமர் திங்களு நீரு மருவிய வார்சடை யானைத்
தேனமர் கொன்றையி னானைத் தேவர் தொழப்படு வானைக்
கானம ரும்பிணை புல்கிக் கலைபயி லுங்கடம் பூரில்
தானமர் கொள்கையி னானைத் தாடொழ வீடெளி தாமே. 1

அரவினொ டாமையும் பூண்டு வந்துகில் வேங்கை யதளும்
விரவுந் திருமுடி தன்மேல் வெண்டிங்கள் சூடி விரும்பிப்
பரவுந் தனிக்கடம் பூரிற் பைங்கண்வெள் ளேற்றண்ணல் பாதம்
இரவும் பகலும் பணிய வின்ப நமக்கது வாமே. 2

---

1. வான் - ஆகாயத்தில். அமர் - பொருந்திய. திங்களும் - பிறையும். நீரும் - கங்கையும். மருவிய - கலந்த. வார் - நீண்ட. தேவர் தொழப்படுவானை :- 'தொழப்படுந் தேவர் தொழப் படுவானைத் தொழுதபின்னைத் தொழப்படுந் தேவர் தம்மால் தொழுவிக்கும் தன் தொண்டரையே' (4-112-5). என்றவாறு, தன் அடியாரையும் தேவர் தொழுவர் எனின், தன் (பரமசிவ) னைத் தொழுதலில் ஐயமுண்டோ?. கான் - காடு. பிணை - பெண் மான். கலை - ஆண்மான். கடம்பூர் - கடம்பு மரம் உள்ளவூர்; தலவிருட்சம். 'கானமரும் பிணைபுல்கிக் கலைபயிலுங் கடம்பூர்'. என்றதால் கடப்பங்காடும் ஆகும்.

2. அரவு - பாம்பு. ஆமை:- 'முற்றலாமை இளநாகமொடு ஏனமுளைக் கொம்பவைபூண்டு'. அம் துகில் வேங்கை அதள் - அழகிய புலித்தோலாகிய ஆடை. முடிமேல் திங்கள் சூடி விரும்பிப் பரவுங் கடம்பூர் என்க. அம்பிகைக்குரிய துகிலும், அரனுக்குரிய அதளும் விரவும் (- கலக்கும்.) எனலுமாம்

இளிபடு மின்சொலி னார்க ளிருங்குழன் மேலிசைந் தேறத்
தெளிபடு கொள்கை கலந்த தீத்தொழிலார்கடம் பூரில்
ஒளிதரு வெண்பிறை சூடி யொண்ணுத லோடுட னாகிப்
புலியத ளாடை புனைந்தான் பொற்கழல் போற்றுது நாமே. 3

---

பரவும் - எழுந்தருளிய. சூடிவிரும்பி எழுந்தருளிய கடம்பூர் என்று கொள்ளாக்கால், வினைமுடிபு பொருந்தாது. பரவுதல் - வாழ்த்துதல், துதித்தல் என்று பொருள்படுதல் ஈண்டுப் பொருந்தாது. இதில், சூடுதலும் விரும்புதலும் பரவுதலும் இறைவன் வினையாதல் வேண்டும். சூடி என்பதைப் பெயராகக் கொண்டு கூறலாம் எனினும், பூண்டு சூடி விரும்பிப் பரவும் என்று தொடர்தலால் இடையில் ஒரு வினையெச்சத்தைமட்டும் பெயராக்கோடல் யாங்கனம்? அதளும் விரவும் முடி எனல் விளங்கிற்றிலது. பைங்கண் வெள்ளேறு - பசிய கண்களை யுடைய வெள் விடை. ஏற்றண்ணல் - எருதூரும் பெருமானார். இரவும் பகலும் பாதம் பணிய நமக்கு இன்பமது ஆம் என்க. விரும்பிச்சூடி - அதளும் விரும்பி என்று பொருத்தினும் பொருந்தல் இல்லை. அதளும் விரவும் திருமுடி என்று கொண்டு அரையில் உடுத்த புலித்தோல் முடியையும் மறைத்துச் சுற்றி யிருந்ததோ என்று எண்ணுவாரும் உளர்.

3. இளி - (யாழின் நரம்புகளுள் ஒன்று.) ஏழிசையுள் ஒன்று. சொல்லினிமையும் இளி என்னும் இசையினிமையும் வேறுபடாது இருக்கும் என்றபடி. (சொல்லினிமைக்கு ஒவ்வாது இளியும் படும் எனலும் ஆம்). குழல் - கூந்தல். குழல்மேல் புகை இசைந்து ஏறத் தீத்தொழில் ஆர்கடம்பூர் எனலுமாம். ஏற என்னும் வினையெச்சம், ஆர் என்னும் வினைப்பகுதி யொடு முடிந்தது. கலந்த என்பதனொடு முடித்தலும் கூடும். ஏறக் கொள்(ளும்) கை எனல் வலிந்து பொருள் கொள்வதாகும். ஏறத் தெளி(த்தல்) என்று பொருத்தலுங் கூடும். யாகத்தில் இருபத்தேழு நட்சத்திரப் பெண்டிர்க்கும் தீவழி உதவும் வேதவுண்மை குறிக்கப்பட்டது. தெளிபடு கொள்கை - தெளிவு பொருந்திய கோட்பாடு; வேதக்கொள்கை. தீத்தொழில் - வேள்வி. ஆர் - பொருந்திய. தீத்தொழிலார் - வேள்வியாளர் எனலுமாம். ஒளிதருபிறை - வெண்பிறை. ஒள் நுதல் - ஒளியதாகிய நெற்றியை உடைய உமாதேவியார்.

பறையொடு சங்க மியம்பப் பல்கொடி சேர்நெடு மாடம்
கறையுடை வேல்வரிக் கண்ணார் கலையொலி சேர்கடம் பூரில்
மறைபொலி கூடிய பாடன் மருவிநின் றுடன் மகிழும்
பிறையுடை வார்சடை யானைப் பேணவல் லார்பெரி யோரே. 4

---

பண்புத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை. 'பண்பு தொகவரூஉம் கிளவியானும்.........ஈற்று நின்றியலும் அன்மொழித் தொகையே' (தொல். சொல். 902). 'பண்புத் தொகை படவும்...........அச்சொற் றொக்கபின் அத்தொகை அன்மொழித் தொகையாகாமையின், தொகுவதன்முன் அவற் றிற்கு நிலைக்களமாகிய சொற்பற்றிவரும்' (பிரயோக விவேகம்:- 24. உரை). ஓடு உடன் இரண்டனுள் ஒன்று மூன்றனுருபின் நீட்சி. (தொல்காப்பியர் 'ஒடு' என்றே கூறினர்). மற்றொன்று உடனுதல் (ஒருசேர இருத்தல்) குறித்தது. 'எங்கேனும் இருந்து உன் அடியேன் உனை நினைந்தால் அங்கே வந்து என் னொடும் உடனாகி நின்றருளி' (7:- 230) என்புழிக் காண்க. ஓடுடன் கூடி என்றலும் உண்டு. கூடி உடனாகிப் புனைந்தான் என்றியைக்க. புலி அதள் ஆடை - புலித்தோலுடையை. புனைந்தான் - அணிந்த சிவபிரான். பொன் கழல் - பொன் போலுஞ் சேவடி. கழல் - ஆகுபெயர். நாம் கழலைப் போற்று தும் (- போற்றுவோம்). 'கள்' வண்டு என்பாருமுளர். இதன் பொருளமைதி புலப்பட்டிலது.

4. பறை - வாத்தியம். சங்கம் - சங்குகள். இயம்ப - ஒலிக்க. கறை - குருதிக் கறை. கறுப்பு. வேல், பிறருடம்பிற் பட்டு, இரத்தம் தோய்ந்து உலர்ந்து கறுப்புறுதல் கூறப் பட்டது. சாதியடை, கண்ணுக்குச் செவ்வேல், அதன் கொடு மையும் கூர்மையும் செம்மையும் பற்றி ஒப்பாகும். கலை - மேகலை; மாடங்களில் மகளிர் ஆடுதலால் உண்டாகும் ஒலி. மறை ஒலி - வேத முழக்கம். பாடல் - வேத கீதம்; ஆடல் மகிழும் சடையான். வார் - நீண்ட. பேணவல்லார் - விரும்பி வழிபடவல்லவர். பெரியோர் - திருவருட்பெருமையுடையோர். பேணவல்லார்:- 'வித்தும் அதன் அங்குரமும் போன்றிருக்கும் மெய்ஞ்ஞானம், வித்தும் அதன் அங்குரமும் மெய் உணரில் - வித்ததனிற் காணமையால், அதனைக் கைவிடுவர். கண்டவர்கள், பேணமையால் அற்றார் பேறு.' (திருக்களிற்றுப்படியார். 57.)

தீவிரி யக்கழ லார்ப்பச் சேயெரி கொண்டிடு காட்டில்
நாவிரி கூந்தனற் பேய்க ணகைசெய்ய நட்ட நவின்றோன்
காவிரி கொன்றை கலந்த கண்ணுத லான்கடம் பூரில்
பாவிரி பாடல் பயில்வார் பழியொடு பாவ மிலாரே. 5

தண்புன னீள்வய றோறுந் தாமரை மேலனம் வைகக்
கண்புணர் காவில்வண் டேறக் கள்ளவி ழுங்கடம் பூரில்
பெண்புனை கூறுடை யானைப் பின்னு சடைப்பெரு மானைப்
பண்புனை பாடல் பயில்வார் பாவமி லாதவர் தாமே. 6

---

என்னும் உண்மைநூலின்கண் பேணுமை யாலாம் பெருமை கூறுமுகத்தான் பேணவல்லார் பெருமை உணர்த்தப்பட்டமை விளங்கும்.

5. தீவிரியக் கழல் ஆர்ப்பச் சேய் எரி கொண்டு இடு காட்டில் நட்டம் நவின்றோன் - தீப்போலும் சடை விரியவும் கழல் ஒலிக்கவும் செந்தீயைக் கையில் கொண்டு, உலகனைத்தும் கற்பொடியென அழியுஞ் சருவசங்காரகாலத்தில், அகண்டாகாரப் பெருவெளியில், தான் தனியனுகி இலங்கித், திருநடம் பயிலுஞ் சிவபெருமான். நாவிரிகூந்தல் நல்பேய்கள் நகைசெய்ய-நீட்டிய நாக்கையும் பரந்த கூந்தலையும் உடைய நல்ல பேய்கள் நகுதலைச் செய்ய (நட்டம் நவின்றோன்). காவிரி கொன்றை - சோலைகளில் மலர்ந்த கொன்றை மலர்கள். கண்ணுதலான் - நெற்றிக்கண்ணன். பாவிரிபாடல் - ஓசை(யின்பம்) பெருகிய பாட்டு. பா - பரந்து செல்வதோரோசை. '(தொல்). பயில்வார் - பயிற்சிசெய்வார். பழியொடு பாவம் இலார் - (புகழும் புண்ணியமும் உள்ளவராய்ப்) பழியும் பாவமும் இல்லாதவராவர்.

6. தண்புனல் - குளிர்ந்ததாகிய நீர். அனம் - அன்னப் புள். கண்புணர்கா - கண்கள் தாமே சென்று புணர்தற்குத் தக்க அழகுமிக்க சோலை. கள் - தேன். அவிழும் - அலரும். வண்டுகள் ஏறுதலால் மலர்கள் தேன்நெகிழ அலரும் என்றபடி, பெண்புனை கூறு உடையான் - 'மாதியலும் பாதியன்' அர்த்தநாரீச்சுவரன். பின்னுசடை - பின்னியசடை. பண்புனை பாடல் - பண்களால் அழகு செய்யப்பெற்ற பாடல்கள். 'பண்ணின் பயனும் நல்லிசை' (பெரிய. 1219). கலந்த பாடல் 'என்றவாறு. 'பாவம் இலாதவர்' - என்றதற்கு மேற்பாட்டில் உரைத்தாங்கு உரைத்துக்கொள்க.

பலிகெழு செம்மலர் சாரப் பாடலொ டாட லருத
கலிகெழு வீதி கலந்த கார்வயல் சூழ்கடம் பூரில்
ஒலிதிகழ் கங்கை கரந்தா னொண்ணுத லாளுமை கேள்வன்
புலியத ளாடையி னான்றன் புனைகழல் போற்றல் பொருளே. 7

பூம்படு கிற்கயல் பாய்யப் புள்ளிரி யப்புறங் காட்டில்
காம்படு தோளியர் நாளுங் கண்கவ ருங்கடம் பூரில்
மேம்படு தேவியொர் பாக மேவியெம் மானென வாழ்த்தித்
தேம்படு மாமலர் தூவித் திசைதொழத் தீய கெடுமே. 8

---

7. பலி - பூஜை. (சேது புராணம்). செம்மலர் - செய்ய பூக்கள். பலிகெழுமலர் - பூஜைக்குப் பொருந்திய பூக்கள். சார - அடைய. பாடலொடு ஆடல் - பாட்டும் ஆட்டும். அருத - நீங்காத. கலி - ஒலி. கடம்பூர் வீதியிலுள்ளார் சிவபூஜைக்குப் பொருந்திய பூக்கள் கொண்டுவந்து பூசித்துப் பாடுதலும் ஆடுதலும் செய்வர் என்றவாறு. செம்மலர் என்பதற்குப் பெருமையிற் சிறந்தோர் எனலுமாம். பாடலாடலருத கலிகெழு வீதி கலந்தகடம்பூர். வயல்சூழ்கடம்பூர். செம்மல்லர் என்று பொருள் கொள்ளின். பலி என்பது (அம்மல்லரது மெய்வலிமை குறிக்க) மாமிசம் என்றாகும். புலி அதள் ஆடை :- (பா. 3, பார்க்க.) புனை - அழகுறுத்தப்பட்ட. கழல் - கழலணிந்த திருவடிகளை. போற்றல் - துதித்தல், பொருள்-உடம்பின் பயன். போற்றாமை- உடம்பெடுத்ததன் பயனின்மை என்றவாறு. பிறவிப் பயன் ஆகமங்களை உணர்ந்து, சிவபிரான் திருவடி மலர்களை எப்பொழுதும் இடைவிடாமல் போற்றுதலேயன்றிப் பிறிதில்லை. 'எப்போதும் இனியானை என்மனத்தே வைத்தேனே'.

8. படுகு - படுகர், நீர்நிலை. வண்டு - வண்டர். சிறகு - சிறகர், சுரும்பு - சுரும்பர் எனவருதல் போல்வது இது. பூம்படுகரில் கயல்மீன்கள் பாயவும் புட்(பறவை)கள் இரிய(ஓட)வும் புறங்காட்டில் தோளியர் கண்கவரும் என்க. காம்பு அடுதோள் - மூங்கிலை நீ எனக்கு ஒப்பாகாய் என்று கொல்லும் தோள். அடுதல் - கொல்லுதல். கண்களை ஒவ்வாது தோற்றோடிக் கயல் படுகரிற்பாய்தலும் புள் (வண்டு) இரிதலும் கூறப்பட்டன, 'கயலஞ்சப் பிறழ்கண்ணாள்' (கம்பர். மிதிலைக். 26) 'புள்ளுறைகமலவாவிப் பொருகயல் வெருவியோட

திருமரு மார்பி லவனுந் திகழ்தரு மாமல ரோனும்
இருவரு மாயறி வொண்ணு வெரியுரு வாகிய வீசன்
கருவரை காலி லடர்த்த கண்ணுத லான்கடம் பூரில்
மருவிய பாடல் பயில்வார் வானுல கம்பெறு வாரே. 9

ஆடை தவிர்த்தறங் காட்டு மவர்களு மந்துவ ராடைச்
சோடைக ணன்னெறி சொல்லார் சொல்லினுஞ் சொல்லல கண்டீர்
வேடம் பலபல காட்டும் விகிர்தனம் வேத முதல்வன்
காட தனினட மாடுங் கண்ணுத லான்கடம் பூரே. 10

---

வள்ளுறை கழிந்த வாள்போல் வரியுற வயங்கு கண்ணுள்' (ஷி உண்டாட்டு 20). 'நறைபாய் வனமலர்வாய் அளிபடரச் சேல்பாய்வனகயல்பாய்வன செங்கால் மடவன்னம், போல்பாய் புனல்மடவார் படிநெடுநாடு' (ஷி. கங்கைப். 8). இதன் பொரு ளமைதி புலப்பட்டிலது.

9. திருமார்பிலவனும் - திருமகள் மருவிய மார்பினை யுடைய திருமாலும். திருமறுமார்பன் என்பது வேறு. அதில் ஸ்ரீவத்ஸம் என்பது திருமறு எனப்பட்டது. மாமலரோன் - செந்தாமரை மலரில் வாழ்கின்ற பிரமன். ஆகிய இருவரும் என்று ஒரு சொல் வருவிக்க. அறிவொண்ணு - அறிதற்கு ஒன்ருத. எரி உரு - தீப்பிழம்பு வடிவம். கருவரை - கரியமலை போலும் இராவணனை. காலில் அடர்த்த - கயிலையை எடுத்த போது திருவடிப் பெருவிரலூன்றி நெருக்கிய. காலனைக் காலாற் கடிந்த கண்ணுதலான் எனலுமாம். பிற திருப்பதிகங் களுள், ஒன்பதாவது பாட்டில், அடிமுடி தேடிய வரலாற்றை யொட்டி இராவணன் கயிலை யெடுத்த வரலாற்றைக் கூறக் காணும். சில பதிகங்களுள் இரண்டுங்கூறப்பட்டில ஆயினும், இவ்வாறு வரலாற்றை முன்பின் ஆகக் கூறவில்லை.

10. ஆடை தவிர்த்து அறம்காட்டுமவர்களும் - ஆடை உடுக்காமல் தர்மோபதேசம் செய்யும் அமணர்களும். அம்துவர் ஆடைச்சோடைகள்:- சிவப்பு ஊட்டிய உடைகளைத் தரித்த வறட்சியர் (பொருளில்லாத பேச்சுடையார் என்றவாறு). நல்நெறி - நல்லவழி (ஞானமார்க்கம்). சொல்லினும் சொல் அல - சொல்லினாலும் அவை மெய்ச்சொற்கள் அல்ல. வேடம் பலபல காட்டும் விகிர்தன்:- 'பல பல வேடமாகும் பரன்

விடைநவி லுங்கொடி யானை வெண்கொடி சேர்நெடு மாடம்
கடைநவி லுங்கடம் பூரிற் காதலனைக்கடற் காழி
நடைநவின் ஞானசம் பந்த னன்மையா லேத்திய பத்தும்
படைநவில் பாடல் பயில்வார் பழியொடு பாவ மிலாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

நம் வேத முதல்வன். காடதனில் - காட்டில். 'கள்ளிமுது காட்டில் ஆடிகண்டாய்'.

11. விடை நவிலும் கொடியானை - எருது பயின்ற கொடியை உடையவனை. வெண்கொடி - வெள்ளைத் துணிக் கொடி. கடை - வாயில், இடமும், அங்காடியுமாம். காதலன் - உயிர்கட்கு அருட்காதல் விளைப்பவன், அன்புருவானவன் எனலுமாம். 'அன்பே சிவம்'. நடை - ஞானசாரம். நன்மை - மங்களம். படைநவில் பாடல் - திருவருட்சாதனமாக நவின்ற பாடல்கள். படை - சாதனம். அல்லற்பட்டு.....செல்வத்தைத் தேய்க்கும் படை (குறள். 555). படை - நிவேதனமுமாம். இறைவன் புகழொடு படுக்கும் பாடல் என்றார் கோவை சிவக் கவிமணி முதலியாரவர்கள். பழியொடுபாவம் இலர் (பா. 5ல்) உரைத்தாங்கு உரைத்துக்கொள்க.

---

தாளின் சரணந் தருஞ்சண்பை நாதன்
 தரியலர்போற்
கீளின் மலங்க விலங்கே புகுந்திடுங்
 கெண்டைகளும்
வாளுந் தொலைய மதர்த்திரு காதின்
 அளவும்வந்து
மீளுங் கருங்கண்ணி மின்புரி யாவைத்த
 மென்னகையே.
—அந்தாதி 62.

# 69 திருப்பாண்டிக்கொடுமுடி

## 205 பதிகவரலாறு

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் திருக்கொடிமாடச் செங்குன்றூரில்தங்கி வழிபட்ட காலத்தில், அக்கொங்கு நாட்டில், 'பயின்றதனுல் பனித்தருளிர் முன்னுன பிணிவந்து மூள்வதுபோல் மூடுகுதலும்' பரிசனங்கள் அதை அவர்க்கு அறிவித்து இறைஞ்சினர். திருவருளைத்தொழுது, திருநீல கண்டத்தின் தியானவுறைப்பால் அக்குளிர்நோய் அடியாரை வருத்தாமல், 'அவ்வினைக்கு இவ்வினை ஆம்' எனத் தொடங்குந் திருப்பதிகம் பாடியருளித்தடுத்தார், அந்நாட்டினர் எல்லோர்க்கும் அந்நோய் பற்றுது நீங்கிற்று, பின் பல தலங்களைப் பணிந்து சென்று, திருப்பாண்டிக்கொடுமுடியை அடைந்து வழிபட்டுப் பாடி மகிழ்ந்து சார்த்தியது இவ்வளத் தமிழ்மாலை.

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

பெண்ணமர் மேனியி னரும் பிறைபுல்கு செஞ்சடை யாருங்
கண்ணமர் நெற்றியி னருங் காதம ருங்குழை யாரும்
எண்ணம ருங்குணத் தாரு மிமையவ ரேத்தநின் றூரும்
பண்ணமர் பாடலி னரும் பாண்டிக் கொடுமுடி யாரே. 1

---

1. பெண் அமர் மேனியினர் - அர்த்தநாரீச்சுவரர். பிறை புல்கு செஞ்சடையார் - சந்திரசேகரர். கண்ணமர் நெற்றியினர் - பாலநேத்திரர். காது அமரும் குழையார் - குழைக் காதனர். எண் அமரும் குணத்தார் - எண்குணத்தார். இமையவர் ஏத்த நின்ருர் - தேவர் தொழப்படுவார். பண் அமர் பாடலினர்:- 'பண்ணின் இசையாகி நின்ருய்போற்றி' (6-5-57). 'பண் துளங்கப் பாடல் பயின்ருய்போற்றி' (6, 5, 7.). 'பண்ணினர் பாடலாகிப் பழத்தினில் இரதமாகி...அனைத்தும் ஆகி' (4. 70. 4.). இத்தலத்தின் தேவியார் திருநாமம் 'பண்மொழியம்மை'. 'வேதமே பண்ணுளார்' என (2. 28. 3). முற்போந்ததும் ஈண்டறியத்தக்கது.

தணக்கணி மாமலர் கொண்டு தாடொழு வாரவர் தங்கள்
வினைப்பகை யாயின தீர்க்கும் விண்ணவர் விஞ்சையர் நெஞ்சில்
நினைத்தெழு வார்துயர் தீர்ப்பார் நிரைவளை மங்கை நடுங்கப்
பனைக்கைப் பகட்டுரி போர்த்தார் பாண்டிக் கொடுமுடி யாரே. 2

சடையமர் கொன்றையி னருஞ் சாந்தவெண் ணீறணிந் தாரும்
புடையமர் பூதத்தி னரும் பொறிகிளர் பாம்பசைத் தாரும்
விடையம ருங்கொடி யாரும் வெண்மழு மூவிலைச் சூலப்
படையமர் கொள்கையி னரும் பாண்டிக் கொடுமுடி யாரே. 3

நறைவளர் கொன்றையி னரு ஞாலமெல் லாந்தொழு தேத்தக்
கறைவளர் மாமிடற் றருங் காடரங் காக்கன லேந்தி
மறைவளர் பாடலி னேடு மண்முழ வங்குழன் மொந்தை
பறைவளர் பாடலி னரும் பாண்டிக் கொடுமுடி யாரே. 4

---

2. கணி-கொன்றை. விண்ணவர்-சிவபெருமான். தன்னைக் கொன்றையின் சிறந்த அழகிய மலர்கொண்டு திருவடிப் பூஜை புரிவார்களுடைய வினையாகிய (வீட்டுப்) பகையைத் தீர்க்கும் விண்ணவன் என்றவாறு. விண்ணவர் என்றதற்கு ஏற்பத் தமை என்று இருத்தல் வேண்டுமாயினும், ஒருமைக்கும் பன்மைக்கும் உரிய கடவுளைக்கூறலின் குற்றமாகாது. 'கொன்றைசூடி நின்ற தேவை அன்றி ஒன்றும் நன்று இலோம்' என்ற ஆசிரியர், நமக்கும் அதையே உபதேசித்தருள்வதுணர்க. விஞ்சையர் துயர்-நெஞ்சில் நினைத்து எழுவார் துயர் தீர்ப்பார். விஞ்சையர் - வித்தியாதரர். சிவபெருமானைக் குறித்ததாகக்கொண்டு ஞான சொரூபர் எனலும் ஆம். விஞ்சை - வித்தை. ஞானம். நிரைவளை மங்கை - வரிசையுற்ற வளையல் அணிந்த உமாதேவியார். பனை கை பகடு - பனைபோலும் துதிக்கையை உடைய யானை. உரி - தோல்.

3. சாந்தம் வெண்ணீறு - 'சாந்தமென நீறணிந்த சைவர்' (207:- 8). புடை - பக்கம். பூதத்தினர் - பூதகணங்களை உடையவர். பொறி - புள்ளிகள். கிளர் - விளங்குகின்ற. அசைத்தார் - கட்டியவர். விடை - எருது. கொடியார் - துவசம் ஏந்தியவர். இடபத்துவசம் உயர்த்தியவர். மழுவும் மூவிலைச் சூலப்படையும். அமர் கொள்கையினர் - விரும்புங் கோட்பாடுடையவர்.

4. நறை - தேன். ஞாலம் - பூமி. கறை - நச்சுக்கறுப்பு. மா - கரிய; அழகுமாம். மிடற்றர் - கண்டத்தையுடையவர்.

போகமு மின்பமு மாகிப் போற்றியென் பாரவர் தங்கள்
ஆகமு றைவிட மாக வமர்ந்தவர் கொன்றையி னேடும்
நாகமுந் திங்களுஞ் சூடி நன்னுதன் மங்கைதன் மேனிப்
பாகமு கந்தவர் தாமும் பாண்டிக் கொடுமுடி யாரே. 5

கடிபடு கூவிள மத்தங் கமழ்சடை மேலுடை யாரும்
பொடிபட முப்புரஞ் செற்ற பொருசிலை யொன்றுடை யாரும்
வடிவுடை மங்கைதன் னேடு மணம்படு கொள்கையி னரும்
படிபடு கோலத்தி னரும் பாண்டிக் கொடுமுடி யாரே. 6

---

அரங்கு ஆ - நாடகசபையாக. கனல் - தீ. மறைவளர் பாடல் - வேதப்பாடல். மண்முழவம் - மார்ச்சனையையுடைய முழா. குழல்-வேய்ங்குழல். மொந்தை-ஒரு கட்பறை. பறை-வாத்தியம். சொல் எனலுமாம்.

5. போகமும் இன்பமும் ஆகி - பெத்தத்தில், தநுகரண புவனங்களொடு சேர்த்து நான்காவதாக எண்ணப்படும் போகமும், அப்போகாநுபவம்பற்றி உயிர்க்கு எய்தும் சிற்றின்பமும், முத்தியில் சிவபோகமாம் சிவாநந்தமும் ஆகி. ஆகம் - சுத்தியால் ஓங்கிய தேகம். உறைவு இடம் - வாழ்தலையுடைய இடம், கோயில். 'ஊன் உடம்பு ஆலயம்' (திருமந்திரம்). 'ஓங்குடலம் திருக்கோயில்' (ஞான பூஜாவிதி, 9). நாகம்-பாம்பு. நல்நுதல் மங்கை - அழகிய நெற்றியையுடைய உமாதேவியார். மேனிப்பாகம் - திருமேனியிற்பாதி. உகந்தவர் - விரும்பியவர்.

6. கடி - மணம். கூவிளம் - வில்வம். மத்தம் - ஊமத்தை. கமழ் - மணக்கின்ற. செற்ற - அழித்த. பொருசிலை - போர்வில். 'வடிவுடைமங்கை', படிபடுகோலத்தினர்-படியாகப் பொருந்திய கோலம். எல்லாவுருவங்களுக்கும் காரணவுருவம் இறைவனுடையதே. 'யாதேனும் காரணத்தால் எவ்வுலகில் எத்திறமும் மாதேயும் பாகம் இலச்சினையே ஆதலினால்', (திருக்களிறு. 82). காரியமான எல்லாப் படிக்கும் இறைவனது கோலமே காரணப் படியாயிற்று. படி - ஒப்பு; பிரதிச்சந்தம்.

ஊனமர் வெண்டலை யேந்தி யுண்பலிக் கென்றுழல் வாரும்
தேனம ரும்மொழி மாது சேர்திரு மேனியி னாரும்
கானமர் மஞ்ஞைக ளாலுங் காவிரிக் கோலக் கரைமேல்
பானல நீறணி வாரும் பாண்டிக் கொடுமுடி யாரே. 7

புரந்தரன் றன்னொடு வானோர் போற்றியென் றேத்தநின் றாரும்
பெருந்திறல் வாளரக் கன்னைப் பேரிடர் செய்துகந் தாரும்
கருந்திரை மாமிடற் றாருங் காரகில் பன்மணி யுந்திப்
பரந்திழி காவிரிப் பாங்கர்ப் பாண்டிக் கொடுமுடி யாரே. 8

திருமகள் காதலி னானுந் திகழ்தரு மாமலர் மேலைப்
பெருமக னும்மவர் காணப் பேரழ லாகிய பெம்மான்
மருமலி மென்மலர்ச் சந்து வந்திழி காவிரி மாடே
பருமணி நீர்த்துறை யாரும் பாண்டிக் கொடுமுடி யாரே. 9

---

7. ஊன் - மாமிசம். தலை - பிரமகபாலம். பலி - பிச்சை. உழல்வார் - திரிவார். தேன் அமரும் மொழிமாது :- 'பண்மொழி யம்மை' இத்தலத்துத் தேவியின் திருநாமம். தேன்...திருமேனி யினார் - அர்த்தநாரீச்சுர வடிவுடையவர். கான் - காடு. மஞ்ஞைகள் - மயில்கள். கோலம் - அழகு. பால் நலம் நீறு - பால்போலும் நன்மைகளையுடைய நீறு.

8. புரந்தரன் - இந்திரன். வானோர் - தேவர். இந்திரனோடு தேவர்கள் சிவபிரானைப் போற்றி போற்றி என்று ஏத்தும் முதன்மை உணர்த்தப்பட்டது. பெருந்திறல் - மிக்க வலிமை. வாள் - கொடுமை. வாளை ஏந்திய அரக்கன் (- இராவணன்) எனலுமாம். பேர் இடர் - மலையைப் பேர்க்கும் துன்பம், பெரிய துன்பம். கருந்திரை - கரிய கடல் நஞ்சு, திரை என்பது கடலுக்குச் சினையாகு பெயர். கடல் என்பது நஞ்சுக்கு இடவாகு பெயர். திரை இருமடியாகு பெயர். மா - கரிய, அழகிய. மிடற்றார் - கண்டத்தினர். கார் அகில் - கரிய அகில் மரத்தினையும். பல்மணி - பல மணிகளையும். உந்தி - செலுத்தி. பரந்து - பரவி. இழி - ஒழுகும். பாங்கர் - பக்கம்.

9. திருமகள் காதலினான் - இலக்குமி காதலரான திருமால். திகழ்தரு - விளங்குகின்ற. மாமலர் - தாமரைப்பூ. மேலை - மேலிருத்தலையுடைய. பெருமகன் - பிதாமகன் (பிரமன்).

புத்தரும் புந்தியி லாத சமணரும் பொய்ம்மொழி யல்லான்
மெய்த்தவம் பேசிட மாட்டார் வேடம் பலபல வற்றால்
சித்தருந் தேவருங் கூடிச் செழுமலர் நல்லன கொண்டு
பத்தர்க டாம்பணிந் தேத்தும் பாண்டிக் கொடுமுடி யாரே. 10

கலமல்கு தண்கடல் சூழ்ந்த காழியுண் ஞானசம் பந்தன்
பலமல்கு வெண்டலை யேந்திப் பாண்டிக் கொடுமுடி தன்னைச்
சொலமல்கு பாடல்கள் பத்துஞ் சொல்லவல் லார்துயர் தீர்ந்து
நலமல்கு சிந்தைய ராகி நன்னெறி யெய்துவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

அழல் - தீ. மரு - மணம். மலி - மிக்க. சந்து - சந்தனமரம். மாடு - பக்கம். பரு - பருத்த. மணித்துறை - நீர்த்துறை. துறைமணி உம் என்றும் துறை ஆரும் என்றும் கொள்ளலாம். பெம்மான் கொடுமுடியாரே என்க. துறை ஆரும் பாண்டிக் கொடிமுடி.

10. புந்தி - அறிவு. மாட்டார் - வன்மையில்லாதவர். வேடம்பலபலவற்றால் - சிவமூர்த்தம், மகேசுரமூர்த்தம் எனப் பற்பலவற்றால். சித்தர்-சித்துக்களில் வல்லவர். செழுமையுடைய நல்ல மலர்களைக்கொண்டு பத்தர் (அன்பர்), சித்தர், தேவர் எல்லோரும் ஏத்தும் தலம்.

11. கலம் - மரக்கலம். கடலில் தோணியாக மிதந்த காழியாதலின் 'கடல் சூழ்ந்தகாழி' என்றார். பலம் - பயன், வலிமையுமாம். தலை - பிரமகபாலம். சொல - சொல்ல, பாட. சொல்லச் சொல்ல மல்கும் பாடல்கள். நலம் - பேரின்பம். நன்னெறி - ஞானமார்க்கம்.

## 70 திருப்பிரமபுரம்

### 206 பதிகவரலாறு

சைவசமயத்தின் பரமாசாரியரான வண்டமிழ் விரகர் குலச்சிறையாரும் மங்கையர்க்கரசியாரும் உடன் வரச் சென்று, தண்டமிழ் நாட்டு மன்னனை உய்யக்கொண்டருளும் போது, அவ்வேந்தன், வானகத்தினின்றும் மண்ணகத்திருளை நீக்கி வந்த செழுங்கலைத் திங்களைப் போன்ற ஞானசம்பந்தப் பெருமானைக் கண்ணுரக் கண்டு கையாரத்தொழுது தன் தலைப்பால் பொற்பீடங்காட்டி எழுந்தருள்வித்தான், அப் பீடங்காட்டிய குறிப்பாலும் அதில், பெருமான் அமர்ந்த குறிப்பாலும் அமணர்க்கு உள்ளே அச்சம் உண்டாயிற்று. அருட் பிள்ளையார் தெருட்பார்வையால், செழியன், பிணி சிறிது ஒழியவும் உள்ளம் ஒழுங்குறவும் நோக்கி, தேவரீர் திருப்பதி யாது என்று விருப்புடன் கேட்டான். அப் பொழுது, பொன்னிவளநாட்டுக் கன்னிமதிற்கழுமலம் நாம் கருதும் ஊர் என்று சிறந்த பன்னிருபெயரும் உணர்த்துவது இத் திருப்பதிகம்.

**பண் - காந்தாரம்**

**திருச்சிற்றம்பலம்**

பிரமனூர் வேணுபுரம் புகலி வெங்குருப் பெருநீர்த் தோணி
புரமன்னு பூந்தராய் பொன்னஞ் சிரபுரம் புறவஞ் சண்பை
அரன்மன்னு தண்காழி கொச்சைவய முள்ளிட்டங் காதி யாய
பரமனூர் பன்னிரண்டாய் நின்றதிருக் கழுமலநாம் பரவு மூரே. 1

---

1. 1. பிரமபுரம், 2. வேணுபுரம், 3. புகலி, 4. வெங்குரு, 5 தோணிபுரம், 6. பூந்தரைவாய், 7. சிரபுரம், 8. புறவம், 9. சண்பை, 10. காழி, 11. கொச்சைவயம், 12. கழுமலம். ஆகிய திருப்பெயர்களை இம்முறையே தனித்தனி முதலிற் கொண்டு தொடங்கும் திருப்பாடல் இப்பதிகத்திற் காணப் படுகின்றன. ஈற்றுப்பாடல் மட்டும், 'கழுமலத்தின் பெயரை'

வேணுபுரம் பிரமனூர் புகலிபெரு வெங்குரு வெள்ளத் தோங்குந்
தோணிபுரம் பூந்தராய் தூநீர்ச் சிரபுரம் புறவங் காழி
கோணிய கோட்டாற்றுக் கொச்சை வயஞ்சண்பை கூருஞ் செல்வங்
காணிய வையகத்தா ரேத்துங் கழுமலநாங் கருது மூரே. 2

---

என்றுரைக்கும் காரணம் பற்றியும் ஒவ்வொரு பாட்டிலும் 'கழுமலம்' என்று வருதல் பற்றியும் கழுமலம் என்று தொடங்கிற்றிலது. இம்முறையே, சேக்கிழார் சுவாமிகளும்,

"பிரமபுரம் வேணுபுரம் புகலிபெரு வெங்குருநீர்ப்
பொருவில்திருத் தோணிபுரம் பூந்தராய் சிரபுரமுன்
வருபுறவம் சண்பைநகர் வளர்காழி கொச்சைவயம்
பரவுதிருக் கழுமலமாம் பன்னிரண்டு திருப்பெயர்த்தால்".

(பெரிய. திருஞான. 14). என அருளியிருக்கின்றார். பதிகம்: 209, 210 பார்க்க. மன்னு - நிலைபெற்ற. பொன் அம் - பொன்னையும் அழகையும் உடைய. அரன் மன்னு தண் காழி - சிவபிரான் எழுந்தருளிய குளிர்ந்த காளீச்சரம், உள்ளிட்டு - உட்பட்டு. அங்கு ஆதி ஆய பரமன் ஊர், பன்னிரண்டாய் நின்ற திருக்கழுமலம் நாம் பரவும் ஊர். ஊர் பன்னிரண்டே அன்றி ஓர் ஊர்க்குப் பேர் பன்னிரண்டல்ல. இவ்வுண்மை அறியாதார் ஒரே ஊர்க்குப் பன்னிரண்டு பெயர் உள்ளன என்று எழுதியும் பேசியும் தொன்மையை அழித்தனர். தலபுராணத்திலும் தொன்மை மாறாத உண்மை உணர்த்தப்பட்டது.

2 வெள்ளத்து ஓங்கும் தோணிபுரம் - பிரளய வெள்ளத்துள் மேல் ஓங்கி மிதந்து விளங்கிய தோணிபுரம். தூநீர் - பரிசுத்த ஜலத்தையுடைய. கோணிய - வளைந்த. கோட்டாறு .- இன்றும் உளது. 'கோட்டாறு சூழ் கொச்சை' (3 - 89 - 1) கூரும் - மிகும். காணிய - காண. வையகத்தார் - (வையாலாகிய வீடு என்னும் பொருள்படும் வையகம் பெருகிய உலகிற்கு ஆகுபெயர்) உலகர். (2 - 102 - 5. கோட்டாறு).

புகலி சிரபுரம் வேணுபுரஞ் சண்பை புறவங் காழி
நிகரில் பிரமபுரங் கொச்சைவய நீர்மே னின்ற மூதூர்
அகலிய வெங்குருவோ டந்தண் டராயமரர் பெருமாற் கின்பம்
பகரு நகர்நல்ல கழுமலநாங் கைதொழுது பாடு மூரே. 3

வெங்குருத் தண்புகலி வேணுபுரஞ் சண்பை வெள்ளங் கொள்ளத்
தொங்கிய தோணிபுரம் பூந்தராய் தொகுபிரம புரந்தொல் காழி
தங்கு பொழிற்புறவங் கொச்சை வயந்தலைபண் டாண்ட மூதூர்
கங்கை சடைமுடிமே லேற்றான் கழுமலநாங் கருது மூரே. 4

தொன்னீரிற் றோணிபுரம் புகலி வெங்குருத் துயர்தீர் காழி
இன்னீர வேணுபுரந் தராய் பிரமனூ ரெழிலார் சண்பை
நன்னீர பூம்புறவங் கொச்சை வயஞ்சிலம்ப னகரா நல்ல
பொன்னீர புன்சடையான் பூந்தண் கழுமலநாம் புகழு மூரே. 5

---

3. நிகர் - ஒப்பு. இல் - இல்லாத. நீர் மேல் நின்ற மூதூர் - தோணிபுரம். அகலிய - அகன்ற இடத்தையுடைய. அம் தண் தராய் - பூந்தருவராய். அமரர் பெருமாற்கு - தேவர் பிரானுக்கு. பகரும் - கூறும். 'நாம் கைதொழுது பாடும் ஊர்' என்றதால், நாம் பாடும்போதும் கைதொழுதல் இன்றியமையாதது என்பது விளங்கும். இத் தமிழ்மறையைப் போற்றும் அருளொழுக்கம் புலப்படும். பா. 6. குறிப்புரை பார்க்க.

4. தண் - குளிர்ந்ததாகிய. வெள்ளம் கொள்ளத்தொங்கிய தோணிபுரம் என்றதால், தோணி தொங்குதல் உணர்த்தப்பட்டது. தொகு - கூடிய. தொல் - பழைய. பொழில் - சோலை தலைபண்டு ஆண்ட மூதூர் - சிரபுரம். ஏற்றான் - ஏற்ற சிவபிரான்.

5. தொல் நீர் - பழைய பிரளய வெள்ளம். துயர் - பிறவித் துயர் (பிறதுயர்கள் இதனுள் அடக்கம்) இன்னீர் - இனிய நீரினையுடைய. எழில் - அழகு. நல்நீர - நல்ல நீரினையுடைய. சிலம்பன் நகர் - சிரபுரம்.

தண்ணந் தராய்புகலி தாமரையா னூர்சண்பை தலைமு னண்ட
வண்ண னகர்கொச்சை வயந்தண் புறவஞ்சீ ரணியார் காழி
விண்ணியல்சீர் வெங்குருநல் வேணுபுரந் தோணிபுர மேலாலேந்து
கண்ணுதலான் மேவியநற் கழுமலநாங் கைதொழுது கருது மூரே. 6

சீரார் சிரபுரமுங் கொச்சைவயஞ் சண்பையொடு புறவ நல்ல
ஆராத் தராய்பிரம னூர்புகலி வெங்குருவொ டந்தண் காழி
ஏரார் கழுமலமும் வேணுபுரந் தோணிபுர மென்றென் றுள்கிப்
பேரா னெடியவனு நான்முகனுங் காண்பரிய பெருமா னூரே. 7

புறவஞ் சிரபுரந் தோணிபுரஞ் சண்பைமிகு புகலி காழி
நறவ மிகுசோலைக் கொச்சை வயந்தராய் நான்முகன்றனூர்
விறலாய வெங்குருவும் வேணுபுரம் விசயன் மேலம் பெய்து
திறலா லரக்கனைச் செற்றான்றன் கழுமலநாஞ் சேரு மூரே. 8

---

6. தண் அம்தராய் - பூந்தராய். தாமரையான் ஊர் - பிரமபுரம். தலைமுன் ஆண்ட அண்ணல் நகர் - சிரபுரம். விண் - ஆகாயம். இயல் - செல்லும். சீர் - கனம், புகழ். மேலார் - தேவர், மேன்மையுடைய ஞானியர் முதலோர், மேவிய - விரும்பி எழுந்தருளியுள்ள. தியானம் புரியும் போது கை தொழுத வண்ணம் இருத்தல்வேண்டும். 'அஞ்சலி செய்திருந்து' (ஞான பூசா விதி - 8). பா. 3. குறிப்புரை பார்க்க.

7. சீர் ஆர் - புகழ் நிறைந்த. கனம் மிக்க எனலுமாம். நல்ல ஆராத்தராய் - நல்ல தெவிட்டாத பூந்தராய். ஏர் - அழகு. என்று என்று :- அடுக்கு இடைவிடாமை மேலது. உள்கி - நினைத்து. பேரான் - பெயராதவனாய். பேரான் என்பது இருவர்க்கும் பொதுவாய்த் தனித்தனி அமையும். பேரானைக் காண்பு என்க.

8. நறவம் - தேன். நான்முகன்றன் ஊர் - பிரமபுரம். விறல் - பெருமை. விசயன் - அருச்சுனன். திறல் - திறன். அரக்கன் - இராவணன். செற்றான் - அழித்தான்.

சண்பை பிரமபுரந் தண்புகலி வெங்குருநற் காழி சாயாப்
பண்பார் சிரபுரமுங் கொச்சை வயந்தராய் புறவம் பார்மேல்
நண்பார் கழுமலஞ்சீர் வேணுபுரந் தோணிபுர நாணி லாத
வெண்பற் சமணரொடு சாக்கியரை வியப்பழித்த விமல னூரே. 9

செழுமலிய பூங்காழி புறவஞ் சிரபுரஞ்சீர்ப் புகலி செய்ய
கொழுமலரா னன்னகரந் தோணிபுரங் கொச்சைவயஞ் சண்பை யாய
விழுமியசீர் வெங்குருவொ டோங்குதராய் வேணுபுர மிகுநன் மாடக்
கழுமலமென் றின்னபெயர்பன்னிரண் டுங்கண் ணுதலான்கருதுமூரே.

கொச்சை வயம்பிரம னூர்புகலி வெங்குருப் புறவங் காழி
நிச்சல் விழவோவா நீடார் சிரபுரநீள் சண்பை மூதூர்
நச்சினிய பூந்தராய் வேணுபுரந் தோணிபுர மாகி நம்மேல்
அச்சங்க ளீர்த்தருளு மம்மான் கழுமலநா மமரு மூரே. 11

காவி மலர்புரையுங் கண்ணூர் கழுமலத்தின் பெயரை நாளும்
பாவியசீர்ப் பன்னிரண்டு நன்னூலாப் பத்திமையாற் பனுவன் மாலை
நாவி னலம்புகழ்சீர் நான்மறையான் ஞானசம் பந்தன் சொன்ன
மேவியிசை மொழிவார் விண்ணவரி லெண்ணுதலை விருப்பு ளாரே. 12

திருச்சிற்றம்பலம்

---

9. சாலாப் பண்பு - அழியாக்குணம். பண்பார் - குணத்தார் எனினுமாம். நாண் - நாணம். வியப்பு - பெருமை. விமலன் - அநாதிமலமுத்தன்.

10. செழுமலிய - செழிப்பு மலிதலையுடைய. செய்ய கொழுமலரான் நன்னகரம் - பிரமபுரம். விழுமிய சீர் - மிக்க புகழ். பன்னிரண்டும் ஊர் என்றது ஈண்டும் காண்க.

11. நிச்சல் - நாடோறும். விழவு - திருவிழாக்கள். ஓவா - ஒழியாத. நீடு ஆர் - காலத்தாலும் இடத்தாலும் நெடுமை பொருந்திய. நச்ச இனிய - விரும்புதற்கு இனிய. அச்சங்கள் - பிறப்பச்சம் முதலியவை. அம்மான் - அருமகன் என்பதன் மரூஉ. பெருமகன் என்பது பெம்மான் என்று வருதல்போல.

12. காவி - நீலோற்பலம், கருங்காவி. புரையும் - ஒக்கும் பாவிய - பரவிய. பத்திமை - அன்பு, மை விகுதி 'தமிழ் பத்திமையால் பணிந்து'. (6-54-3). தலைவிருப்பு - தலையன்பு.

# 71 திருக்குறும்பலா

## 207 பதிகவரலாறு

சிரபுரத்து வந்தருளும் செல்வர் சிலநாளிருந்து திருப்புத்தூரை வழிபட்டு; பூவணத்தைப்போற்றிக் கானப்பேரைக் கைதொழுது சுழியலை வணங்கிக் குற்றாலம் குறும்பலாக் கும்பிட்டேத்தியது இத்திருப்பதிகம்.

**பண் - காந்தாரம்**

திருச்சிற்றம்பலம்

திருந்த மதிசூடித் தெண்ணீர் சடைக்கரந்து தேவிபாகம்
பொருந்திப் பொருந்தாத வேடத்தாற் காடுறைதல் புரிந்தசெல்வர்
இருந்த விடம்வினவி லேலங்கமழ் சோலையின வண்டியாழ்செய்
குருந்த மணநாறுங் குன்றிடஞ்சூழ் தண்சாரற் குறும்பலாவே. 1

நாட்பலவுஞ் சேர்மதியஞ் சூடிப் பொடியணிந்த நம்பானம்மை
ஆட்பலவுந் தானுடைய வம்மா னிடம்போலு மந்தண்சாரல்
கீட்பலவுங் கீண்டு கிளைகிளையன் மந்திபாய்ந் துண்டுவிண்ட
கோட்பலவின் றீங்கனியை மாக்கடுவ னுண்டுகளுங்குறும்பலாவே 2

---

1. திருந்தச் சூடிக்கரந்து பொருந்திப் பொருந்தாத வேடத்தால் உறைதல்புரிந்த செல்வர் என்று இயைக்க. மதி - பிறை. தெள்நீர் - தெளிந்த கங்கைநீர். சடைகரந்து - சடையில் மறைத்து. தேவி பாகம் பொருந்தி - தேவியினது பாகத்தைத் தான் பொருந்தி. பொருந்தாத வேடத்தால் - காட்டில் உறைவதற்கு ஒவ்வாத கோலத்தால். புரிந்த-விரும்பிய. ஏலம்-வாசனைப் பொருள்களுள் ஒன்று. 'தக்கோலம் தீம்பூத் தகைசால் இலவங்கம்...கப்பூரம் சாதியோடு ஐந்து'. யாழ்செய் - யாழோசைபோலும் இன்னோசைசெய்கின்ற. குருந்தம்-குருந்தமரம். குறும்பலா என்பது பலா வகைகளுள் ஒன்று. குற்றாலம், குறும்பலா இரண்டும் திருக்குற்றால மலையிலுள்ள தலவிருட்சம். 'வம்பார் குன்றம் ....குற்றாலம்' என்றும், 'குன்றிடஞ்சூழ் தண்சாரற் குறும்பலா' என்றும் இருவேறு திருப்பதிகம் அருளியவாறு உணர்தற்பாலது.

2. நாள்பலவும் சேர்மதியம் - பூரண சந்திரன். பிள்ளை மதியும் புனலும்சூடி' எனப் (7) பின்வருதலறிக. நம்பான் -

வாடற் றலைமாலை சூடிப் புலித்தோல் வலித்துவீக்கி
ஆட லரவசைத்த வம்மா னிடம்போலு மந்தண்சாரல்
பாடற்பெடைவண்டுபோதலர்த்தத் தாதவிழ்ந்து பசும்பொனுந்திக்
கோடன் மணங்கமழுங் குன்றிடஞ்சூழ் தண்சாரற் குறும்பலாவே. 3

பால்வெண் மதிசூடிப் பாகத்தோர் பெண்கலந்து பாடியாடிக்
கால னுடல்கிழியக் காய்ந்தா ரிடம்போலுங் கல்சூழ்வெற்பில்
நீல மலர்க்குவளை கண்டிறக்க வண்டரற்று நெடுந்தண்சாரல்
கோல மடமஞ்ஞை பேடையொ டாட்டயருங் குறும்பலாவே. 4

தலைவாண் மதியங் கதிர்விரியத் தண்புனலைத் தாங்கித்தேவி
முலைபாகங் காதலித்த மூர்த்தி யிடம்போலு முதுவேய்சூழ்ந்த
மலைவா யசும்பு பசும்பொன் கொழித்திழியு மல்குசாரல்
குலைவாழைத் தீங்கனியு மாங்கனியுந் தேன்பிலிற்றுங் குறும்பலாவே

---

சிவபெருமான். 'நம்பான் மேயநன்னகர்' (1. 99. 1). 'நடம் பயிலும் நம்பானே'. 'நல்லூர்ப் பெருமணம்மேய நம்பானே'. (3 - 125 - 1). ஆட்பலவும் - ஆளாகும் பலவகையும். கீள் பல - பிளத்தற்குரிய பலா. கீண்டு - பிளந்து, (கிழி - கீழ் - கீள், கிழிந்து - கீழ்ந்து - கீண்டு). கிளை கிளையல் - கிளை கிளையாக. கிளையின் என்றிருந்ததோ? மந்தி - பெண்குரங்கு. விண்ட - (நீங்கிய) பிளந்த. கோள் - குலை. கடுவன் - ஆண்குரங்கு. உகளும் - துள்ளும். இது பலாவிற்கேற்ற வருணனை.

3. வாடல் - வற்றுதல். வலித்து வீக்கி - உறுதியாகக் கட்டி. அசைத்த - கட்டிய, ஆட்டிய எனலுமாம். போது - மலரும் பருவத்தது. அலர்த்த - அலரச்செய்ய. கோடல் - வெண்காந்தள்.

4. பிறை சூடியும், உமை மங்கையை இடப்பால் கொண்டும் பாடியும் ஆடியும் எமனை உதைத்தும் நின்ற சிவபெருமான் இடம். கல் ஆம் வெற்பு - கற்கள் சூழ்ந்த மலை. குவளைகள் கண்போல் திறக்க. அரற்றும் - ஒலிக்கும். கோலம் - அழகு. மடம் - அழகு; மென்மை. மஞ்ஞை - மயில். பேடை - பெண்மயில். ஆட்டு - ஆட்டம். அயரும் - செய்யும்.

5. தலை மதியம், வான்மதியம். வான் - ஒளி. தலையில் மதியம் கதிர்விரிய, புனலைத்தாங்கி, பாகங் காதலித்த மூர்த்தி

நீற்றே துதைந்திலங்கு வெண்ணூலர் தண்மதியர் நெற்றிக்கண்ணர்
கூற்றேர் சிதையக் கடிந்தா ரிடம்போலுங் குளிர்சூழ்வெற்பில்
ஏற்றேன மேன மிவையோ டவைவிரவி யிழிபூஞ்சாரற்
கோற்றே னிசைமுரலக் கேளாக் குயில்பயிலுங் குறும்பலாவே. 6

பொன்ரெத்த கொன்றையும் பிள்ளை மதியும் புனலுஞ்சூடிப்
பின்ரெத்த வார்சடையெம் பெம்மா னிடம்போலும் பிலயந்தாங்கி
மன்றத்து மண்முழவ மோங்கி மணிகொழித்து வயிரமுந்திக்
குன்றத் தருவி யயலே புனறதும்புங் குறும்பலாவே. 7

---

என்க. முதுவேய் - முதிய மூங்கில். அசும்பு - பொசியுநீர். பிலிற்றும் - துளிக்கும்.

6. நீற்றே - திருநீற்றிலே. வெள் நூல் - வெளிய முப்புரி நூல். கூற்று - எமன். ஏர் - எழுச்சி. சிதைய - கெட. ஏர் சிதைய - அழகுகெட எனலுமாம். ஏறு + ஏனம். ஏற்றேனம் - ஆண்பன்றி. ஏனம் - (பெண்)பன்றி. இவையோடு அவை விரவி - இவ்விலங்கு முதலியவற்றினினத்தொடு அவ்விலங்கு முதலியவற்றினினம் கலந்து. இழி - கீழிறங்குகின்ற. கோல் தேன் - கொம்புத்தேன். கேளா - கேட்டு.

7. பொன் தொத்த - பொன்போலும் பூங்கொத்துக்களை யுடைய. பிள்ளைமதி - இளம்பிறை. புனல் - கங்கை. பின் தொத்த - பின்கூடிய. பிலயம் - பிரளயம். 'கற்பமுறு பிரளயம் வந்து உலக மூன்றையும் அழிக்குங்காலமேனும் தற்பரரின் திரிகூடம்போல் எனக்கும் அழியாமை தருதல்வேண்டும்' (திருக் குற்ருலத் தலபுராணம், குறும்பலாச் சருக்கம். 17). திருக்குற் ருலத்தின் வீழும் அருவிகள் பிரளய வெள்ளம் போல்கின்ற பெருக்கைத் தாங்குவன. மன்றத்தில் (மண் - ) மார்ச்சனையை உடைய முழவம்போல்கின்ற ஓசை மிக்கன. மணிகளைக் கொழிப்பன. வயிர மணிகளை உந்தி (- செலுத்தித் தள்ளி) வருவன. அவ்வருவிநீர், அயலிலுள்ள குறும்பலாவின் பால் ததும்பும்.

ஏந்து திணிதிண்டோ ளிராவணனை மால்வரைக்கீ ழடரவூன்றிச்
சாந்தமென நீறணிந்த சைவ ரிடம்போலுஞ் சாரற்சாரல்
பூந்த ணறுவேங்கைக் கொத்திறுத்து மத்தகத்திற் பொலியவேந்திக்
கூந்தற் பிடியுங் களிறு முடன்வணங்குங் குறும்பலாவே. 8

அரவி னணையானு நான்முகனுங் காண்பரிய வண்ணல்சென்னி
விரவி மதியணிந்த விகிர்தர்க் கிடம்போலும் விரிபூஞ்சாரல்
மரவ மிருகரையு மல்லிகையுஞ் சண்பகமு மலர்ந்துமாந்தக்
குரவ முறுவல்செய்யுங் குன்றிடஞ்சூழ் தண்சாரற் குறும்பலாவே. 9

---

8. திணி - நெருங்கிய. திண் - திண்ணிய, உறுதியுடைய. மால்வரை - பெரிய கயிலைமலை. சாந்தம் என நீறு அணிந்த:- 'சாந்தம் ஈது என்று எம்பெருமான் அணிந்த நீறு' (1 - 52 - 7). சாரல் சாரல் - மழைச்சாரலையுடைய மலைச்சாரலில். சாரல் தோறும் எனல் சிறவாது. வேங்கைப் பூக்கள் தண்மை (குளிர்ச்சி)யும் நறுமை (நன்மை)யும் உடையன. (நறுநாற்றம் - நன்னாற்றம்). இறுத்து - முறித்து. பிடி - பெண்யானை. பெண்யானைக்குக் கூந்தல் உண்டென்பது மரபு. 'கூந்தல்மாலைக் குமரிப் பிடிக்குழாம் (சிந்தா - 858). 'கூந்தற்பிடிக்குழாம்' (பா. 10, 44, 54). நறைக்கூந்தற்பிடி' (62,464) எனக் குமரகுருபரமுனிவர் காலத்திலும் இவ்வழக்கம் இருந்தது. களிறு(ஆண் யானையு)ம், பிடியும் வேங்கைப் பூக்களைப் பறித்து, சிவ பூஜைக்குரிய நெறியில் மத்தகத்தில் ஏந்திக்குறும்பலா நாதரை வழிபடுகின்றன. அவ்விலங்குகட்குள்ள சிவ பத்தி மக்கட் பிறப்பெய்தியும் அடியேற்கு இல்லை. எப்பிறப்பில் உறுமோ?

9. அரவின் அணையான் - பாம்பின் படுக்கையையுடைய திருமால். காண்பு அரிய - காண்டற்கு அருமையாயுடைய. அண்ணல் - சிவபெருமான். சென்னி - தலை. விரவி - கலந்து. மரவம் - குங்குமமரம். மாந்த - உண்ண, குடிக்க. குரவம் - குராமரம். முறுவல் செய்ய - பற்களைப்போலப் பூக்க. (சிரிக்க என்ற பொருளும் தொனித்தல் அறிக).

மூடிய சீவரத்தர் முன்கூறுண் டேறுதலும் பின்கூறுண்டு
காடி தொடுசமணைக் காய்ந்தா ரிடம்போலுங் கல்சூழ்வெற்பில்
நீடுயர் வேய்குனியப் பாய்கடுவ னீள்கழைமே னிருத்தஞ்செய்யக்
கூடிய வேடுவர்கள் குய்விளியாக் கைமறிக்குங் குறும்பலாவே. 10

கொம்பார் பூஞ்சோலைக் குறும்பலா மேவிய கொல்லேற்றண்ணல்
நம்பா னடிபரவு நான்மறையான் ஞானசம் பந்தன் சொன்ன
இன்பாய பாட லிவைபத்தும் வல்லார் விரும்பிக்கேட்பார்
தம்பால தீவினைகள் போயகல நல்வினைக ளாராவன்றே. 11

திருச்சிற்றம்பலம்

---

10. சீவரத்தார் - துவர் ஊட்டின சீலையை உடுத்தவர். உண்டு - உட்கொண்டு. முன்கூறு பின்கூறு :- 'அறுசுவை யுண்டி, அமர்ந்து இல்லாள் ஊட்ட மறுசிகை நீக்கி உண்டார்' என்றது சைனர்கூற்று. காடி - காடி நீர். சமண் - சமணர். வேய் - மூங்கில். குனிய - வளைய. கடுவன் - ஆண் குரங்கு. கழை - மூங்கிலின் கழை. நிருத்தம் - கூத்து. கூவி - அழைத்து. 'குய்விளியாக்' 'கூய் விளியாக்' என்று பாடாந்தரம் உண்டு. (சுவாமிநாத பண்டிதர் தலமுறைப் பதிப்பு. பக்கம். 911 பார்க்க). வேடர்கள் 'குய்' என விளித்தல் உண்டு. கைமறிக்கும்:- கைகவிக்கும். 'தக்கார் போற் கைம்மறித்த காந்தள் அந்தோ தகாது எனவே' (சிந்தா. 1227).

11. 'கொம்பார் சோலை' (திருக்குற்றலப் பதிகம். 1. பார்க்க). ஏற்றண்ணல் - எருதூரும் பெருமான். நம்பான்:- (பா. 2. பார்க்க). நம்பன் - உயிர்களின் நசைக்கு உரியவன். 'நம்பும் மேவும் நசையாகும்மே' (தொல். சொல். உரிச். 33). இன்பு ஆய பாடல் - பேரின்பமயமான திருப்பாக்கள். தம்பால - தம் இடத்திலுள்ள. தளரா - தளராமல் வளரும்.

# 72 திருநணா

## 208 பதிகவரலாறு

ஆளுடைய பிள்ளையார் கொங்கிற் குடபுலம் சென்று பல சிவதலங்களை வணங்கிக் கொடிமாடச் செங்குன்றூர்க்கு அடியவரும் ஏனையரும் சிறப்புற வரவேற்கச் சென்றடைந்து வழிபட்டு இனிதிருந்தார். அதன் புறத்துள்ள சிவதலங்களை வணங்குங்கால் திருநணாவினை இறைஞ்சிப் பரவிப் பாடியருளியது இத்திருப்பதிகம்.

### பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

பந்தார் விரன்மடவாள் பாகமா நாகம்பூண் டேறதேறி
அந்தா ரரவணிந்த வம்மா னிடம்போலு மந்தண் சாரல்
வந்தார் மடமந்தி கூத்தாட வார்பொழிலில் வண்டுபாடச்
செந்தேன் றெளியொளிரத் தேமாங் கனியுதிர்க்குந் திருநணாவே. 1

---

1. பந்து ஆர் விரல் மடவாள் - 'பந்தார் விரலி' 'பந்தமரும் விரல் மங்கைநல்லாள்' 'பந்தார் விரலுமையாள்' 'பந்துலாவிரற் பவளவாய்த் தேன்மொழிப் பாவை' 'பந்துசேர் விரலாள்' எனப் பிற இடத்திலும் அருளியிருத்தலறிக. பாகம் - இடப்பக்கம். நாகம் - பாம்பு. ஏறது - இடப்வாகனம். அம்தார் அரவு அணிந்த - அழகிய பாம்புகளை மாலைபோல் அணிந்த. அம்மான் - அருமகன் என்பதன் மரூஉ. அம்மஹாந் என்பதன் திரிபெனல் பிழை. 'பெம்மான்' என்பது பெருமஹாந் என்பதன் திரிபெனல் இல்லை. 'எம்மான்', 'தம்மான்', 'கோமான்' என்பவற்றில் மகன் என்பதே திரிந்தது. வந்து - காற்று. மந்தி - குரங்கு. தெளி - தெளிவு. தேமா - தித்திக்கும் மா:- எழுவாய். கனி:- செயப்படு பொருள். உதிர்க்கும்:- பயனிலை.

நாட்டம் பொலிந்திலங்கு நெற்றியினன் மற்றொருகை வீணையேந்தி
ஈட்டுந் துயரறுக்கு மெம்மா னிடம்போலு மிலைசூழ்கானில்
ஓட்டந் தருமருவி வீழும் விசைகாட்ட முந்தூழோசைச்
சேட்டார் மணிக ளணியுந் திரைசேர்க்குந் திருநணாவே. 2

நன்றாங் கிசைமொழிந்து நன்னுதலாள் பாகமாய் ஞாலமேத்த
மின்றாங்கு செஞ்சடையெம் விகிர்தர்க் கிடம்போலும் விரைசூழ் வெற்பில்
குன்றோங்கி வன்றிரைகண் மோத மயிலாலுஞ் சாரற்செவ்வி
சென்றோங்கி வானவர்க ளேத்தி யடிபணியுந் திருநணாவே. 3

கையின் மழுவேந்திக் காலிற் சிலம்பணிந்து கரித்தோல்கொண்டு
மெய்யின் முழுதணிந்த விகிர்தர்க்கிடம்போலு மிடைந்துவானோர்
ஐய வரனே பெருமா னருளென்றென் றுதரிக்கச்
செய்ய கமலம் பொழிதே னளித்தியலுந் திருநணாவே. 4

---

2. நாட்டம் - கண், தீவிழி. வீணையேந்தி:- 'மிக நல்ல வீணைதடவி' (பதிகம். 221:- 1). ஈட்டும் துயர் - ஆகாமிய கன்மம் (சஞ்சிதமாய்ப் பிராரப்தம்) ஆகுந்துயரம். கான் - காடு. விசை - வேகம். முந்தூழ் - மூங்கில். சேடு ஆர் - (மலையின்) உயரத்தில் பொருந்திய. திரை - அருவியின் அலைகள்.

3. நன்று ஆங்கு இசைமொழிந்து - நன்றாக இசையுடைய சாமவேதத்தைப் பாடியருளி. வேதங்களைத் தோற்றுவித்தருளி எனலும், இசையைத் தோற்றியருளி எனலும் ஆம். மொழிந்து ஆய் ஏத்தத்தாங்கு செஞ்சடை விகிர்தர் என்று இயைக்க. நன்னுதலாள் - உமாதேவியார். ஞாலம் - பூமியிலுள்ளோர், உலகோர் எனலுமாம். மின் - ஒளி. விரை - மணம். வெற்பு - மலை. குன்று ஓங்கி வல்திரை (அலை)கள் மோத மயில் ஆலும் சாரல். செவ்வி - அழகு.

4. கரி - கரத்தையுடையது, யானை. யானைத்தோலை உடம்பு முழுதும் மறையப்போர்த்தார் என்றவாறு. கைம்மழு, காற்சிலம்பு, மெய்ப்போர்வை. மிடைந்து - நெருங்கி. 'ஐயனே'. அரனே! பெருமானே! அருள் என்று வானோர் விரும்பிப் போற்ற. செய்யகமலம் - செந்தாமரை. பொழில் - சோலை. கமலமும் சோலையும் தேன் தரும் என்றபடி.

முத்தேர் நகையா ளிடமாகத் தம் மார்பில் வெண்ணூல் பூண்டு
தொத்தேர் மலர்சடையில் வைத்தா ரிடம்போலுஞ் சோலைசூழ்ந்த
அத்தே னளியுண் களியா லிசைமுரல வாலத்தும்பி
தெத்தே யெனமுரலக் கேட்டார் வினைகெடுக்குந் திருநணாவே. 5

வில்லார் வரையாக மாநாக நாணாக வேடங்கொண்டு
புல்லார் புரமூன் றெரித்தார்க் கிடம்போலும் புலியுமானும்
அல்லாத சாதிகளு மங்கழன்மேற் கைகூப்ப வடியார்கூடிச்
செல்லா வருநெறிக்கே செல்ல வருள்புரியுந் திருநணாவே. 6

கானார் களிற்றுரிவை மேன்மூடி யாடரவொன் றரைமேற்சாத்தி
ஊனார் தலையோட்டி லூணுகந்தான் றானுகந்த கோயிலெங்கும்
நானா விதத்தால் விரதிகணன் னாமமே யேத்திவாழ்த்தத்
தேனார் மலர்கொண் டடியா ரடிவணங்குந் திருநணாவே. 7

---

5. முத்து ஏர் நகையாள் - முத்தினைப்போலும் பற்களை யுடைய உமாதேவியார். திருமார்பிற் பூணூநூல் பூண்டிருப்பது முன்னும் பின்னும் சிற்சில பதிகங்களிற் கூறப்படுகின்றது. தொத்து - (பூங்)கொத்து. ஏர் - அழகு. மலர் - கொன்றை (யும் பிறவும்). 'சடையமர் கொன்றையினார்' (205:3). 'கடிபடு கூவிளமத்தங் கமழ்சடை மேலுடையார்' (ஷை.6). அளி - வண்டுகள். களி - கள்ளுண்ட (மயக்கம்) களிப்பு. ஆல - ஒலிக்க. 'தெத்தே' என்பது அநுகரணம். கேட்டார் வினைகெடுக்கும் - செவிமடுத்த நல்வினையாளரது தீவினையைப்போக்கும்.

6. வில் ஆர் வரை ஆக - மேருமலை வில்லாகப் பொருந்த. மாநாகம் நாண் ஆக - பெரிய பாம்பு விற் கயிருக. புல்லார் - தழுவாத (பகை)வர். புலி, மான் இரண்டும் பகை நீங்கி நட்புற்று வழிபடுதல் போல, அவை அல்லாத விலங்கினங் களும் திருவடியைக் கைகுவித்து வழிபடுகின்றன. அதுவே அன்றி, அடியார்கட்கு அச்சம் முதலியன உளவாகாவண்ணம், அவர்கள் போகாத வழியிலே போகின்றன. சிவபக்தியும் உடைய விலங்கினங்கட்குள்ள நல்வினை அடியேனுக்கில்லையே; இவ்வுயரிய மக்கட் பிறப்பை எய்தியும், அவனருளாலே அவன் தாள் வணங்க அவனருள் செய்தல் வேண்டும். அதற்கு நாம் பெருந்தவம் புரிதல் வேண்டும். கழல் - திருவடிக்கு ஆகுபெயர்.

7. கான் - காடு. ஆர் - பொருந்திய, நிறைந்த. களிறு உரிவை - யானைத்தோல். மேல்மூடி - உடம்பின்மேல் போர்த்து

மன்னீ ரிலங்கையர்தங் கோமான் வலிதொலைய விரலாலூன்றி
முந்நீர்க் கடனஞ்சை யுண்டார்க் கிடம்போலு முனைசேர்சீயம்
அன்னீர் மைகுன்றி யழலால் விழிகுறைய வழியுமுன்றிற்
செந்நீர் பரப்பச் சிறந்து கரியொளிக்குந் திருநணுவே. 8

மையார் மணமிடறன் மங்கையோர் பங்குடையான் மனைகடோறும்
கையார் பலியேற்ற கள்வ னிடம்போலுங் கழல்கணேடிப்
பொய்யா மறையானும் பூமியளந்தானும் போற்றமன்னிச்
செய்யா ரெரியா முருவ முறவணங்குந் திருநணுவே. 9

---

மறைத்து. ஆடு அரவு - ஆடும் பாம்பு. சாத்தி - சார்த்தி (கட்டி). ஊன் ஆர் தலை ஓட்டில் - மாமிசத்தொடு கூடிய பிரமகபாலத்தில். ஊண் - உண்ணுதலை. உகந்தான் - விரும் பினவன். உகந்த - விரும்பி எழுந்தருளியுள்ள. நானு விதத் தால் - பலவகையால். விரதிகள் - தவத்தோர்கள், யாகத்தோர் கள். நல்நாமமே - பிறவிப்பிணிக்கு மருந்தாகிய திருவைந் தெழுத்தையே. பேர் ஆயிரமே - பேர் ஐயாயிரமே. அடியார்அடி:- எழுவாய்த்தொடரும் ஆறன்றொகைநிலைத் தொடரும் ஆம்.

8. மன்நீர் - மிக்க நீர். நிலைபெற்ற நீர் (கடல்). முனை - பகை. சீயம் - சிங்கம். அல் - இரவு. நீர்மை - தன்மை. குன்றி - குறைந்து. அழல் - நெருப்பு. முன்றில் - முற்றம். செந்நீர் - இரத்தம். கரி - யானை. சிங்கத்தின் தொலைவும் யானையின் வெற்றியும் குறிக்கப்பட்டன.

9. மை ஆர் மணிமிடறன் - கருமை நிறைந்த நீலமணி போலும் திருக்கழுத்துடைய சிவபிரான். மேகத்தைப்போலும் அழகிய கண்டன் எனலுமாம். நேடி - தேடி. பொய்யாமறை - வேதம். மன்னி - நிலைத்து. செய் - செம்மை. எரியாம் உருவம் - தீப்பிழம்பு வடிவம். விடமுண்ட ஆற்றலுடையவன் பலியேற்று உண்ணல் வேண்டா. மங்கைபங்கன், தன்பால் இரப்பவர்க்கு ஈதல் வேண்டும். அவன், மனைகள் தோறும் சென்று இரப்பது, மங்கையுடைமைக்கு ஏலாது. தன்கோலத் திற்கு ஒவ்வாத செயலை மேற்கொண்டதால் அதற்கு ஓர் ஏது வெளிப்படாதிருத்தலைக் குறிக்கக் கள்வன் என்றார்.

ஆடை யொழித்தங் கமணே திரிந்துண்பா ரல்லல்பேசி
முடுமுருவ முகந்தா ருரை யகற்று மூர்த்திகோயில்
ஓடு நதிசேரு நித்திலமு மொய்த்தகிலுங் கரையிற்சாரச்
சேடர் சிறந்தேத்தத் தோன்றி யொளிபெருகுந் திருநணுவே. 10

கல்வித் தகத்தாற் றிரைசூழ் கடற்காழிக் கவுணிசீரார்
நல்வித் தகத்தா லினிதுணரு ஞானசம் பந்தனெண்ணும்
சொல்வித் தகத்தா லிறைவன் றிருநணு வேத்துபாடல்
வல்வித் தகத்தான் மொழிவார் பழியிலரிம் மண்ணின்மேலே. 11

திருச்சிற்றம்பலம்

---

*10.* ஆடை......உண்பார் என்பது திகம்பர சைனரையும் மூடும் உருவம் உகந்தார்' என்பது சுவேதாம்பர சைனரையும் தேரரையும் குறித்தன. நித்திலம் - முத்து. அகில் - அகில் மரம். சேடர் - பெரியோர். தோன்றி - செங்காந்தள். 'கொய்ம்மலர தோன்றி போற்சூட்டுடைய சேவலும்' (சீவகசிந்தாமணி, 73).

*11.* கல் வித்தகத்தால் - 'கல்லயங்குதிரை சூழநீள் கலிக் காழி' (ப. 211:-4). கற்சாதுரியத்தால் என்பதுபொருளாயினும் ஈண்டுப் பொருந்தாது. வித்தகம் - பெருமை; சிற்பம் முதலிய சிறந்த தொழில், அதிசயம் என்னும் பொருள்களுள் ஏதேனும் பொருந்தும், காழிச்சிறப்பாகும். 'திரைசூழ்கடல்' என்பது காழிக்கு அடையாதல் கடலில் மிதந்ததும் கடலருகிலிருந்ததும் பற்றி. நல்வித்தகத்தால் - நல்ல ஞானத்தால். எண்ணும் சொல்வித்தகத்தால் - கருதிய சொற்சாதுரியத்தால். வல்வித் தகத்தால் - இசையில், பொருளில், அன்பில் வலிய சாதுரியத்தால். இம்மண்மேல் பழி இல்லாதவர் ஆவர்.

# 73 திருப்பிரமபுரம்

## 209 பதிகவரலாறு

திருநாவுக்கரசு நாயனாரும் திருஞானசம்பந்த மூர்த்திகளும் சீகாழியில் மின்னார்சடை அண்ணலை வணங்கி, சொல்மாலைகள்சார்த்திமகிழ்வெய்தி, சிலநாள் உடனிருந்து திருவருள் வாழ்வை நடாத்தினர். பின்னர், அரசர் பலபலதலங்களை வழிபடச் சென்றார். சீகாழியில் உறைகின்ற நாளில் செந்தமிழ் மாலை விகற்பச் செய்யுட்களால் மொழிமாற்று, மாலைமாற்று ஏகபாதம் முதலியவற்றைப்பாடுங்கால் அருளியது திருச்சக்கர மாற்று என்னும் இத்திருப்பதிகம்.

### திருச்சக்கரமாற்று

### பண் - காந்தாரம்

### திருச்சிற்றம்பலம்

விளங்கியசீர்ப் பிரமனூர் வேணுபுரம்
    புகலிவெங் குருமேற்சோலை
வளங்கவருந் தோணிபுரம் பூந்தராய்
    சிரபுரம்வண் புறவமண்மேல்
களங்கமிலூர் சண்பைகமழ் காழிவயங்
    கொச்சைகழு மலமென்றின்ன
விளங்குமரன் றன்னைப்பெற் றிமையவர் தம்
    பகையெறிவித் திறைவனூரே. 1

---

1. இப்பதிகத்திலும் அடுத்த பதிகத்திலும் 206-ஆவது பதிகத்தின் முதற்பாட்டிலுள்ள முறையே பன்னிரு திருப்பெயரும் அமைந்திருத்தல் அறிதற்பாலது. மேற்சோலை வளம் கவரும் தோணிபுரம் என்றது, உயர்ந்தோங்கிய சோலைகளினும் மேலோங்கி விளங்குவதால், சோலை வளத்தைத் தோணிமலை கவர்ந்து திகழ்வதாயிற்றென்றபடி. இளங்குமரன் - முருகக் கடவுள், பாலசுப்பிரமண்ணியர். பெற்று - ஐந்து முகத்தோடு அதோமுகமும் கொண்டு. சேந்தனை முன் பயந்துலகில் தேவர்கள் தம்பகை கெடுத்தோன் திகழுமூரே. (210:- 6.) பகை - பகையாய அசுரர்களை. எறிவித்த - எறியச் செய்த. பெயரெச்சத்தகரம் தொக்கது.

திருவளருங் கழுமலமே கொச்சை
 தேவேந்திரனூ ரயனூர்தெய்வத்
தருவளரும் பொழிற்புறவஞ் சிலம்பனூர்
 காழிதகு சண்பையொண்பா
வுருவளர்வெங் குருப்புகலி யோங்குதராய்
 தோணிபுர முயர்ந்ததேவர்
வெருவவளர் கடல்விடம துண்டணிகொள்
 கண்டத்தோன் விரும்புமூரே. 2

வாய்ந்தபுகழ் மறைவளருந் தோணிபுரம்
 பூந்தராய் சிலம்பன்வாழூர்
ஏய்ந்தபுற வந்திகழுஞ் சண்பையெழிற்
 காழியிறை கொச்சையம்பொன்
வேய்ந்தமதிற் கழுமலம்விண் ணோர்பணிய
 மிக்கயனூ ரமரர்கோனூர்
ஆய்ந்தகலை யார்புகலி வெங்குருவ
 தரனுறை மமருமூரே. 3

மாமலையாள் கணவன்மகிழ் வெங்குருமாப்
 புகலிதராய் தோணிபுரம்வான்
சேமமதில் புடைதிகழுங் கழுமலமே
 கொச்சைதேவேந் திரனூர்சீர்ப்
பூமகனூர் பொலிவுடைய புறவம்விறற்
 சிலம்பனூர் காழிசண்பை
பாமருவு கலையெட்டெட் டுணர்ந்தவற்றின்
 பயனுகர்வோர் பரவுமூரே. 4

---

2. அயனூர் - பிரமபுரம். தெய்வத்தரு - கல்பகவிருக்ஷாதி. சிலம்பனூர் - சிரபுரம். நாகநாதசுவாமியைச் சிலம்பன் என்றருளினர் போலும். நாகம் - மலை. ஒள்பா உருவளர் - அறிவொளியுடைய அருட்பாக்கள் வடிவில் வளர்கின்ற. வெருவ - அஞ்சியலற.

3. மறை - வேதம். சிலம்பன் வாழ்ஊர் - சிரபுரம். நாகநாதசுவாமிகோயில்.

4. மாமலையாள் - இமாசல குமாரீயான உமாதேவியார். சேமம் - காவல். பூமகனூர் - பிரமபுரம். பொலிவு - விளக்கம். விறல் - வலிமை, வெற்றி. கலை எட்டெட்டு - அறுபத்து நான்கு கலைகள். நுகர்வோர் - அநுபவிக்கும் அறிஞர்கள்.

தரைத்தேவர் பணிசண்பை தமிழ்க்காழி
வயங்கொச்சை தயங்குபூமேல்
விரைச்சேருங் கழுமலமெய் யுணர்ந்தயனூர்
விண்ணவர்தங் கோனூர்வென்றித்
திரைச்சேரும் புனற்புகலி வெங்குருச்
செல்வம்பெருகு தோணிபுரஞ்சீர்
உரைச்சேர்பூந் தராய்சிலம்ப னூர்புறவ
முலகத்தி லுயர்ந்தவூரே. 5

புண்டரிகத் தார்வயல்சூழ் புறவமிகு
சிரபுரம்பூங் காழிசண்பை
எண்டிசையோ ரிறைஞ்சியவெங் குருப்புகலி
பூந்தராய் தோணிபுரஞ்சீர்
வண்டமரும் பொழின்மல்கு கழுமலநற்
கொச்சைவா னவர்தங்கோனூர்
அண்டயனூ ரிவையென்ப ரருங்கூற்றை
யுதைத்துகந்த வப்பனூரே. 6

வண்மைவளர் வரத்தயனூர் வானவர்தங்
கோனூர்வண் புகலியிஞ்சி
வெண்மதிசேர் வெங்குருமிக் கோரிறைஞ்சு
சண்பைவியன் காழிகொச்சை
கண்மகிழுங் கழுமலங்கற் றோர்புகழுந்
தோணிபுரம் பூந்தராய்சீர்ப்
புண்மலியுஞ் சிரபுரம்பார் புகழ்புறவம்
பால்வண்ணன் பயிலுமூரே. 7

---

5. தரைத்தேவர் - பூசுரர், அந்தணர். தமிழ்க்காழி என்றதால் ஸ்ரீகாளிபுரம் என்றதன் திரிபென்ற கூற்று ஆராயத் தக்கது. விரை - மணம். மெய் உணர்ந்த அயன் என்க. அயனூர் - பிரமபுரம். விண்ணவர்தம் கோன் ஊர் - வேணுபுரம். திரை - அலை. உரை - (புகழ்) மொழி.

6. புண்டரிகத்து ஆர்வயல் - தாமரை மலர்களால் நிறைந்த கழனி. இறைஞ்சிய - வணங்கிய. வானவர் கோனூர் - வேணுபுரம். அண்ட அயனூர் - பிரமதேவனூர், பிரமபுரம். காலசங்காரகர்த்தா என்க.

7. வண்மை - கொடை. வரத்து - மேன்மையையுடைய இஞ்சி - மதில். மிக்கோர் - ஞானம், தவம், தொண்டு, பூஜை

மோடிபுறங் காக்குமூர் புறவஞ்சீர்ச்
சிலம்பனூர் காழிமூதூர்
நீடியலுஞ் சண்பைகழு மலங்கொச்சை
வேணுபுரங் கமலநீடு
கூடியய னூர்வளர்வெங் குருப்புகலி
தராய்தோணி புரங்கூடப்போர்
தேடியுழ லவுணர்பயி றிரிபுரங்கள்
செற்றமலைச் சிலையனூரே. 8

இரக்கமுடை யிறையவனூர் தோணிபுரம்
பூந்தராய் சிலம்பன்றன்னூர்
நிரக்கவரு புனற்புறவ நின்றதவத்
தயனூர்சீர்த் தேவர்கோனூர்
வரக்கரவாப் புகலிவெங் குருமாசி
லாச்சண்பை காழிகொச்சை
அரக்கன்விற லழித்தருளி கழுமலமந்
தணர்வேத மருதவூரே. 9

---

முதலியவற்றால் மேம்பட்டவர். கற்றோர் - சிவபிரானை வழி படும் நெறியை உணர்ந்தோர். வேதாகமங்களைக் கற்றவர் எனலுமாம். பார் - உலகம்.

8. மோடி - துர்க்கை. புறங்காக்கும் - காவல் செய்யும். மோடி புறங்காக்கும் ஊராகிய புறவம் என்க. (210:- 8) சீர்ச்சிலம்பன் ஊர் - சிரபுரம். கமல நீடுகூடியவன் ஊர் - பிரமபுரம். (தாமரையில் வாழ்பவன்). போர்......புரங்கள் செற்றமலை சிலையன் - திரிபுரத்தசுரரை அழித்த மேருவில்லி யாகிய சிவபிரான்.

9. இரக்கம் உடை இறையவன் - கருணையே உருவமாகிய சிவபிரான். நிரக்க வருபுனல் என்றது நீரின் பெருக்கத்தையும் விரைவையும் உணர்த்தும். தவத்து அயன் - தவத்தையுடைய பிரமன். புகல் என்றெண்ணி வரக் கரவாத புகலி. மாசு - குற்றம். அரக்கன் - இராவணன். விறல் - வலி. அருளி - சிவன்.

மேலோதுங் கழுமலமெய்த் தவம்வளருங்
கொச்சையிந் திரனூர்மெய்மை
நூலோது மயன்றனூர் நுண்ணறிவார்
குருப்புகலி தராய்தூநீர்மேல்
சேலோடு தோணிபுரந் திகழ்புறவஞ்
சிலம்பனூர் செருச்செய்தன்று
மாலோடு மயனறியான் வண்காழி
சண்பைமண்ணோர் வாழ்த்துமூரே. 10

ஆக்கமர்சீ ரூர்சண்பை காழியமர்
கொச்சைகழு மலமன்பானூர்
ஓக்கமுடைத் தோணிபுரம் பூந்தராய்
சிரபுரமொண் புறவநண்பார்
பூக்கமலத் தோன்மகிழூர் புரந்தரனூர்
புகலிவெங் குருவுமென்பர்
சாக்கியரோ டமண்கையர் தாமறியா
வகைநின்றான் றங்குமூரே. 11

---

10. மெய்த்தவம் - உண்மைத் தவம் (தபசு). மெய்ம்மை நூல் - சத்தியமான வேதங்கள், நுண் அறிவு ஆர் குரு - நுட்பமான அறிவு பொருந்திய குரு, வெங்குரு. சேல் - மீனினம். செரு - போர்.

11. ஆக்கு - ஆக்கம். 'ஆக்கம்மிக்க ஊர்' (பதிகம். 210:- 8: பார்க்க). (மன்று மன்றம் இன்பு இன்பம். நீட்டு நீட்டம். பாட்டு பாட்டம் என்பவைபோல் அம்முப்பெற்றது). ஆக்கம் அமர் சீர் ஊர் என்க. அன்பான் ஊர் - அன்புருவான சிவபிரான் ஊர். அன்பானூராகிய தோணிபுரம். 'அன்பே சிவம்'. கமலத்தோன் - பிரமதேவன். புரந்தரன் - இந்திரன். ஓக்கம் - உயர்ச்சி. ஓங்குவது ஓக்கம். நீங்குவது நீக்கம். தேங்குவது தேக்கம். அடங்குவது அடக்கம். தொடங்குவது தொடக்கம். பழக்கம், பழகு. ஙகரவொற்றில்லை. இறக்கம் - இறங்கு. ஙகர வொற்றிருக்கின்றது. பகுதியில் அவ்வொற்றிருப்பினும் இன்றாயினும் வல்லொற்றுடைமை காண்க.

அக்கரஞ்சேர் தருமனூர் புகலிதராய்
தோணிபுர மணிநீர்ப்பொய்கை
புக்கரஞ்சேர் புறவஞ்சிர்ச் சிலம்பனூர்
புகழ்க்காழி சண்பைதொல்லூர்
மிக்கரஞ்சீர்க் கழுமலமே கொச்சைவயம்
வேணுபுர மயனூர் மேவிச்
சக்கரஞ்சீர்த் தமிழ்விரகன் ருன்சொன்ன
தமிழ்தரிப்போர் தவஞ்செய்தோரே. 12

திருச்சிற்றம்பலம்

---

*12. அக்கரம் (அக்ஷரம்) - அழிவின்மை. க்ஷரம் - அழிவு. அழியாத தருமனூர் என்றது வெங்குருவினை. தருமன் - இயம தருமன் "..........பூவைபாகன். அன்பழுத்தும் அறமகற்கு இவ்வருள் பழுத்து.............பின்பழிச்சி ஒரு தருமன் தன் பதத்தின் இனிதிருக்கப்பெற்ருன்" (சீகாழித் தலபுராணம் 7:- 38 - 9. பார்க்க). புக்கரம் - தீர்த்தம். தொல்லூர் - (புராதனபுரி). பழமையதாகிய ஊர். மிக்கரஞ்சீர் - மிக்கு அரன் சீர் என்றதாகக் கொண்டுரைக்கலாம். நன்கு புலப் பட்டிலது. இச்சக்கிரம் எனச்சுட்டியதால், இப்பதிகம் சித்திர கவியுள் ஒன்ருன சக்கிர பந்தம் என்றறிந்து. முன்னோர் தலைப்பிற் குறித்தனர்.*

---

*நகுகின்ற முல்லைநண் ணூர்எரி கண்டத்*
*தவர்கவர்ந்த*
*மிகுகின்ற நன்னிதி காட்டின கொன்றை*
*விரவலரூர்*
*புகுகின்ற தீயெனப் பூத்தன தோன்றி*
*புறவமன்கைத்*
*தகுகின்ற கோடல்கள் அன்பரின் றெய்துவர்*
*கார்மயிலே.* —அந்தாதி 63

# 74 திருப்பிரமபுரம்

## 210 பதிகவரலாறு

முன் பதிக வரலாற்றைக் காண்க.

### திருக்கோமூத்திரி அந்தாதி

### பண் - காந்தாரம்

### திருச்சிற்றம்பலம்

பூமகனூர் புத்தேளுக் கிறைவனூர்
குறைவிலாப் புகலிபூமேன்
மாமகளூர் வெங்குருநற் றேணிபுரம்
பூந்தராய் வாய்ந்தவிஞ்சிச்
சேமமிகு சிரபுரஞ்சீர்ப் புறவநிறை
புகழ்ச்சண்பை காழிகொச்சை
காமனைமுன் காய்ந்தநுதற் கண்ணவனூர்
கழுமலநாங் கருதுமூரே. 1

கருத்துடைய மறையவர்சேர் கழுமலமெய்த்
தோணிபுரங் கனகமாட
உருத்திகழ்வெங் குருப்புகலி யோங்குதரா
யுலகாருங் கொச்சைகாழி
திருத்திகழுஞ் சிரபுரந்தே வேந்திரனூர்
செங்கமலத் தயனூர்தெய்வத்
தருத்திகழும் பொழிற்புறவஞ் சண்பைசடை
முடியண்ண றங்குமூரே. 2

---

1. பூமேல் மாமகளூர் வெங்குரு - திருமகள் பரவும் ஊராகிய வெங்குரு, அவள் வாழும் ஊர் எனலுமாம், செல்வம் பற்றியது. இஞ்சி - மதில். சேமம் - காவல். காமனை-மன்மதனை. நுதல் - நெற்றி.

2. கனகம் - பொன். திரு - இலக்குமி, அழகு. தரு - மரம், கற்பகம் முதலியவை.

ஊர்மதியைக் கதுவவுயர் மதிற்சண்பை
யொளிமருவு காழிகொச்சை
கார்மலியும் பொழில்புடைசூழ் கழுமலமெய்த்
தோணிபுரங் கற்றோரேத்துஞ்
சீர்மருவு பூந்தராய் சிரபுரமெய்ப்
புறவமய னூர்பூங்கற்பத்
தார்மருவு மிந்திரனூர் புகலிவெங்
குருக்கங்கை தரித்தோனூரே. 3

தரித்தமறை யாளர்மிகு வெங்குருச்சீர்த்
தோணிபுரந் தரியாரிஞ்சி
எரித்தவன்சேர் கழுமலமே கொச்சைபூந்
தராய்புகலி யிமையோர்கோனூர்
தெரித்தபுகழ்ச் சிரபுரஞ்சீர் திகழ்காழி
சண்பைசெழு மறைகளெல்லாம்
விரித்தபுகழ்ப் புறவம்விரைக் கமலத்தோ
னூருலகில் விளங்குமூரே. 4

விளங்கயனூர் பூந்தராய் மிகுசண்பை
வேணுபுர மேகமேய்க்கும்
இளங்கமுகம் பொழிற்றோணி புரங்காழி
யெழிற்புகலி புறவமேரார்
வளங்கவரும் வயற்கொச்சை வெங்குருமாச்
சிரபுரம்வன் னஞ்சமுண்டு
களங்கமலி களத்தவன்சீர்க் கழுமலங்கா
மன்னுடலங் காய்ந்தோனூரே 5

---

3. ஊர்மதி - விண் ஊர்ந்துசெல்லும் சந்திரன். கதுவ - பற்ற கற்பத்தார் - கற்பகப்பூமாலை. தரித்தோன் - தாங்கியவன்.

4. தரியார் - பகைவர். இஞ்சி - மும்மதில், திரிபுரம். இமையோர்கோன் - இந்திரன். விரை - மணம்.

5. மேகம் ஏய்க்கும் - மேகமண்டலத்தை ஒன்ற ஓங்கும். கமுகம் - பாக்குமரம். எழில் - அழகு. ஏர் ஆர் வளம் - அழகு நிறைந்த வளமை. வல்நஞ்சம் - வலியவிடம். களங்கம்-குற்றம். களத்தவன் - (திருநீல)கண்டன். காமன் - மன்மதன். காய்ந் தோன் - காயவிழித்தவன், கோபித்தவன்.

காய்ந்துவரு காலனையன் றுதைத்தவனூர்
கழுமலமாத் தோணிபுரஞ்சீர்
ஏய்ந்தவெங் குருப்புகலி யிந்திரனூ
ரிருங்கமலத் தயனூரின்பம்
வாய்ந்தபுற வந்திகழுஞ் சிரபுரம்பூந்
தராய்கொச்சை காழிசண்பை
சேந்தனைமுன் பயந்துலகிற் றேவர்கடம்
பகைகெடுத்தோன் றிகழுமூரே. 6

திகழ்மாட மலிசண்பை பூந்தராய்
பிரமனூர் காழிதேசார்
மிகுதோணி புரந்திகழும் வேணுபுரம்
வயங்கொச்சை புறவம்விண்ணோர்
புகழ்புகலி கழுமலஞ்சீர்ச் சிரபுரம்வெங்
குருவெம்போர் மகிடற்செற்று
நிகழ்நீலி நின்மலன்றன் னடியிணைகள்
பணிந்துலகி னின்றவூரே. 7

நின்றமதில் சூழ்தருவெங் குருத்தோணி
புரநிகழும் வேணுமன்றில்
ஒன்றுகழு மலங்கொச்சை யுயர்காழி
சண்பைவளர் புறவமோடி
சென்றுபுறங் காக்குமூர் சிரபுரம்பூந்
தராய்புகலி தேவர்கோனூர்
வென்றிமலி பிரமபுரம் பூதங்க
டாங்காக்க மிக்கவூரே. 8

---

6. காய்ந்து - கோபித்து. காலனை - இயமனை. சேந்தனை - முருகப்பிரானை. பயந்து - பெற்று. பகை - சூரன்படை. (பதிகம். 209. பா. 1. பார்க்க).

7. மலி-மலிந்த, மிக்க. தேசு-ஒளி. மகிடற்செற்று-மகிடாசுரனைக் கொன்று. மகிடம் - எருமைக்கடா. நீலி - மாயோள், (துர்க்கை) கறுப்பாயி.

8. மன்றில் - பொதியில், புரம் என்னும் பொருளது. மன்றில் ஒன்று எனல்பொருந்து மேற்கொள்க. மோடி-துர்க்கை (பதிகம். 209. பா. 8. பார்க்க). வென்றி - வெற்றி. பூதங்கள் தாங்கு ஆக்கம் மிக்க ஊர். (பதிகம். 210. பா. 11. பார்க்க).

மிக்ககம லத்தயனூர் விளங்குபுற
வஞ்சண்பை காழிகொச்சை
தொக்கபொழிற் கழுமலந்தூத் தோணிபுரம்
பூந்தராய் சிலம்பன்சேரூர்
மைக்கொள்பொழில் வேணுபுர மதிற்புகலி
வெங்குருவல் லரக்கன்றிண்டோள்
ஒக்கவிரு பதுமுடிக ளொருபதுமீ
டழித்துகந்த வெம்மானூரே. 9

எம்மான்சேர் வெங்குருச்சீர்ச் சிலம்பனூர்
கழுமலநற் புகலியென்றும்
பொய்ம்மாண்பி லோர்புறவங் கொச்சைபுரந்
தரனூர்நற் றோணிபுரம்போர்க்
கைம்மாவை யுரிசெய்தோன் காழியய
னூர்தராய் சண்பைகாரின்
மெய்ம்மால்பூ மகனுணரா வகைதழலாய்
விளங்கியவெம் மிறைவனூரே. 10

இறைவனமர் சண்பையெழிற் புறவமய
னூரிமையோர்க் கதிபன்சேரூர்
குறைவில்புகழ்ப் புகலிவெங் குருத்தோணி
புரங்குணமார் பூந்தராய்நீர்ச்
சிறைமலிநற் சிரபுரஞ்சீர்க் காழிவளர்
கொச்சைகழு மலந்தேசின்றிப்
பறிதலையோ டமண்கையர் சாக்கியர்கள்
பரிசறியா வம்மானூரே. 11

---

*9.* தூ - தூய்மையுடைய. எல்லாவுயிர்க்கும் பற்றுக் கோடாகிய. மை - மேகம், கருமையுமாம். பொழில் - சோலை. அரக்கன் - இராவணன். ஈடு - வலிமை, பெருமையுமாம். எம்மான் - எம்பெருமான்.

*10.* பொய்ம்மாண்பிலோர் - மெய்ப்புகழுடையோர். புரந்தரன் - இந்திரன். கைம்மா - துதிக்கையையுடைய யானை. காரின் மெய்மால் - மேகம்போலும் திருமேனியையுடைய திருமால். பூமகன் - பிரமன். தழல் - தீ.

*11.* இறைவன் - சிவபிரான். அமர் - விரும்பியெழுந்தருளிய. எழில் - அழகு. அதிபன் - இந்திரன். சிறை - அணை.

அம்மான்சேர் கழுமலமாச் சிரபுரம்வெங்
குருக்கொச்சை புறவமஞ்சீர்
மெய்ம்மானத் தோண்புகலி மிகுகாழி
தோணிபுரந் தேவர்கோனூர்
அம்மான்மன் னுயர்சண்பை தராயயனூர்
வழிமுடக்கு மாவின்பாச்சல்
தம்மானென் றியஞான சம்பந்தன்
றமிழ்கற்போர் தக்கோர்தாமே. 12

திருச்சிற்றம்பலம்

---

தேசு - ஒளி. கையர் - கீழோர். பரிசு - சிவமாம்பெற்றி, சிவன் இயல்பு.

12. மா - பெருமை, இலக்குமியுமாம். மானத்து - பெருமையையுடைய. ஒள் - ஒளி. அம்மால் - அழகிய திருமால் (கிருட்டிணமூர்த்தி), சிவபிரானுமாம். வழிமுடக்கும் ஆவின் பாச்சல்;- கோமூத்திரி என்னுஞ் சித்திரபந்தத்தினியல்பு கூறப் பட்டது. தம்மான் - தம்பிரான். 'தன்னடைந்தார் தம்பிரான் ஆவான்' (176:- 1). தம்மானை ஒன்றிய என்று இரண்டனுருபு விரித்து, சிவபிரானொடு அத்துவிதமுற்ற என்று பொருள் கொள்க. தமிழ் - 'சைவமும் தமிழும்' என்ற தொடர்க்கண் உள்ள தமிழ்மறை.

---

மயிலேந் தியவள்ளல் தன்னை யளிப்ப
மதிபுணர்ந்த
வெயிலேந் தியசண்பை நாதன்உலகத்
தெதிர்ப்பவர்யார்
குயிலேந் தியபொழிற் கொங்கேந் தியகொம்பின்
அம்புதழீஇ
அயிலேந் தியமலர் கண்டுள ளுய்வந்த
அண்ணலுக்கே, —அந்தாதி 64

## 75 சீகாழி

### 211 பதிகவரலாறு

137 ஆவது பதிகத் தலைப்பைக்காண்க.

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

விண்ணியங்கு மதிக்கண்ணியான் விரியுஞ்சடைப்
பெண்ணயங்கொ டிருமேனியான் பெருமானனற்
கண்ணயங்கொ டிருநெற்றியான் கலிக்காழியுண்
மண்ணயங்கொண் மறையாளரேத்து மலர்ப்பாதனே. 1

வலியகாலனுயிர் வீட்டினன் மடவாளொடும்
பலிவிரும்பியதொர் கையினன் பரமேட்டியான்
கலியைவென்ற மறையாளர்தங் கலிக்காழியுள்
நலியவந்தவினை தீர்த்துகந்த வெந்நம்பனே. 2

சுற்றலாநற் புலித்தோலசைத் தயன்வெண்டலைத்
துற்றலாயதொரு கொள்கையான் சுடுநீற்றினன்
கற்றல்கேட்ட லுடையார்கள்வாழ் கலிக்காழியுண்
மற்றயங்குதிர டோளெம்மைந்த னவனல்லனே. 3

---

1. விண் இயங்கும் மதிக்கண்ணியான் - ஆகாயத்தில் சஞ்சரிக்கும் திங்களாகிய தலைமாலையை அணிந்த சிவபிரான். பெண் நயம் கொள் திருமேனியான் - அர்த்தநாரீச்சுவர வடிவினன். அனல்கண் நயம்கொள் திருநெற்றியான் - நெருப்புக் கண்ணைக்கொண்ட அழகிய நெற்றியை உடையவன். மண் நயம் கொள் - மண்ணோர் நலமாக்கொண்ட.

2. மடவாள் - உமாதேவியார். பரமேட்டியான் - தனக்கு மேலான தொன்றில்லாத ஸ்தாநத்தையுடைய முழுமுதற் பொருள். ஆன் விகுதி தமிழ். கலியை - வறுமை முதலிய துன்பங்களை. உகந்த - உயர்ந்த. எம் நம்பன் - எம் விருப்பா யுள்ளவன்.

3. சுற்றல் ஆம் புலித்தோல்:- சுற்றுதல் - அரையிற் சுற்றி உடுத்தல். அசைத்து - கட்டி. துற்றல் - உண்ணல்.

பல்லயங்குதலை யேந்தினன் படுகானிடை
மல்லயங்குதிர டோள்களார நடமாடியுங்
கல்லயங்குதிரை சூழநீள் கலிக்காழியுட்
டொல்லயங்குபுகழ் பேண நின்ற சுடர்வண்ணனே. 4

தூ நயங்கொடிரு மேனியிற் பொடிப்பூசிப்போய்
நா நயங்கொண்மறை யோதிமா தொருபாகமாக்
கானயங்கொள்புனல் வாசமார் கலிக்காழியுட்
டேனயங்கொண்முடி யானைந்தாடிய செல்வனே. 5

சுழியி லங்கும்புனற் கங்கையாள்சடை யாகவே
மொழியி லங்கும்மட மங்கைபாக முகந்தவன்
கழியி லங்குங்கடல் சூழுந்தண்கலிக் காழியுட்
பழியிலங்குந்துய ரொன்றிலாப் பரமேட்டியே. 6

---

(சுடுநீறு - பதி. 214:- 2. பார்க்க) மல் - வலிமை. தயங்கு விளங்குகின்ற. மைந்தன் - வலியன், வீரன்.

4. அயங்கு - அசங்கிய, நிலைகுலைந்த, (பதிகம். 140:- 3). மல்......தோள் - வலிமையால் அசைந்த தோள். 'மற்றயங்கு திரடோள்' என்றதை மேற்பாட்டிற் காண்க. தோள்கள் ஆர நடமாடுதல். 'கல் அயங்குதிரை சூழ':- 'கற்களில் அசங்கிய அலை. 'கல் வித்தகத்தால் திரை சூழ் கடற்காழி' (பதிகம், 208:- பா. 11). தொல்புகழ், அயங்குபுகழ் - (எங்கும்) பரவிய கீர்த்தி. பேண - அடியவர் விரும்பிப் புகல. 'பொருள் சேர் புகழ் புரிந்தார்' சுடர் வண்ணன்:- 'அந்தி வண்ணன் அழல் வண்ணன்' என்பன அவன் திருநாமங்கள்.

5. தூ - பரிசுத்தம். நயம் - நன்மை. நாநயம்கொள் மறை - நாவினது நற்பயனைக் கொண்ட வேதம். நாவாலுள்ள தாயநயம். 'நாநலம்' - நாவாலுளதாய நலம்' (குறள். 641. உரை). பூசிப்போய்க் கொள்மறையோதி என்றியைக்க. ஓதி - பெயர். தேன் கொள்முடி - தேனுட்டப்படும் திருமுடி. அம் முடியில் ஆனைந்து ஆடிய செல்வன். ஆனைந்து:- பால், தயிர், நெய்; பிற சேரா.

6. சுழி - நீர்ச்சுழி. 'கொவ்வைத்துவர் வாயார் குடைந் தாடுந் திருச்சுழியல்' (7:- 834). மொழி இலங்கும் மடமங்கை

முடியிலங்கும்முயர் சிந்தையான் முனிவர்தொழ
வடியிலங்குங்கழ லார்க்கவே யனலேந்தியுங்
கடியிலங்கும்பொழில் சூழுந்தண் கலிக்காழியுட்
கொடியிலங்கும்மிடை யாளொடுங் குடிகொண்டதே. 7

வல்லரக்கன்வரை பேர்க்கவந் தவன்றோண்முடி
கல்லரக்கிவ்விறல் வாட்டினான் கலிக்காழியுள்
நல்லொருக்கியதோர் சிந்தையார் மலர்தூவவே
தொல்லிருக்கும்மறை யேத்துகந் துடன்வாழுமே. 8

மருவுநான்மறை யோனுமா மணிவண்ணனும்
இருவர்கூடியிசைந் தேத்தவே யெரியான்றனூர்
வெருவநின்றதிரை யோதம்வார் வியன்முத்தவை
கருவையார்வயற் சங்குசேர் கலிக்காழியே. 9

---

பாகம் உகந்தவன் - 'மாதியலும் பாதியன்'. கங்கையைச் சடையிலும், உமைநங்கையை வாமபாகத்திலும் உடையவன். பழி இலங்கும் துயர் - நிந்தையால் தோன்றும் துயரம். ஒன்று - சிறிதும் என்னும் பொருட்டு.

7. முடி இலங்கும் உயர் சிந்தையால் முனிவர் தொழ அடி இயங்கும் கழல் ஆர்க்க - துவாதசாந்தத் தலத்தில் விளங்கும் உயர்ந்த தியானத்தால் மனனசீலர்கள் வழிபடத் திருவடியில் பிரகாசிக்கும் கழல்கள் ஒலிக்க, கொண்டது முடி இலங்கும் என்று இயைத்துப்பொருள் கூறலும் ஆம். கொடி இலங்கும் இடையாள் - மின்னல் கொடிபோலத் திகழும் மெல்லிடை யுடைய உமாதேவியார். தொழ ஆர்க்க ஏந்தியும் காழியுட் குடிகொண்டதோ என்று அறிவினா வாக்குக.

8. நல்சிந்தை, ஒருக்கியதோர் சிந்தை - ஒற்றுமையாக்கிய தொரு மனம். சிவனோடொற்றுமை. அத்துவிதம், மலர்தூவ - பூக்களைத்தூய்வழிபட. தொல் - தொன்மை. இருக்கும் மறை - விரித்தல் விகாரமாக்கொண்டு இருக்கு வேதம் எனல் சிறந்தது, இருக்கும் எனில் அழியாது நிலைபெறும் என்க. மறையேத்து - வேதஸ்துதியை. உடன் - அம்பிகையுடன்.

9. எரியான்தன் ஊர் - தீப்பிழம்பாக நின்றவனதூர். வியல் முத்தவை - அகன்று பரவிய முத்துக்கள். கரு வை - கரிய

நன்றியொன்றுமுண ராதவன் சமண்சாக்கியர்
அன்றியங்கவர் சொன்னசொல் லவைகொள்கிலான்
கன்றுமேதியிளங் கானல்வாழ் கலிக்காழியுள்
வென்றி சேர்வியன் கோயில்கொண்ட விடையாளனே. 10

கண்ணுமூன்றுமுடை யாதிவாழ் கலிக்காழியுள்
அண்ணலந்தண்ணருள் பேணிஞான சம்பந்தன்சொல்
வண்ணமூன்றுந்தமி ழிற்றெரிந் திசைபாடுவார்
விண்ணுமண்ணும்விரி கின்றதொல் புகழாளரே. 11

திருச்சிற்றம்பலம்

---

வைக்கோல். கருவேல மரமுமாம். முத்தவையும் சங்கும் சேர் காழி என்க.

*10.* நன்றி - நன்மை. ஒன்றும் - சிறிதும். அன்றி - பகைத்து. கானல் - கடற்கரைச்சோலை. வென்றி - வெற்றி. வியன் கோயில் - பெரிய கோயில். விடை ஆளன் - எருதை (ஊர்தியாக) ஆள்பவன்.

*11.* கண்ணு மூன்றும் - முக்கண்ணும். உடை - உடைய' ஆதி - முதல்வன். உம்மை இனைத்தென அறிந்த சினைக்கு வினைப்படு தொகுதியின் வேண்டுவது. (தொல். சொல். 33). உடை - குறிப்புவினை. வண்ணம் மூன்றும் - மெலிவு, சமன். வலிவு என்பவை. இசைபாடுவார், இம்மூன்றும் தெரியாது பாடுவரேல் அவ்விசை, கேட்பவரை எழுப்பும் விசையுடைய தாகும்.

---

அண்ணன் மணிவளைத் தோளரு காசனி
சண்பையன்ன
பெண்ணின் அமிர்தநல் லாள்குழல் நாற்றம்
பெடையொடும்பூஞ்
சுண்ணந் துதைந்தவண் டேகண்ட துண்டுகொல்
தூங்கொலிநீர்த்
தண்ணம் பொழில்எழிற் காசினி பூத்தமென்
தாதுகளே.

—அந்தாதி 65

# 76 திருவகத்தியான்பள்ளி

## 212 பதிகவரலாறு

திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர் திருமறைக்காட்டினின்றும் சிவிகைமீதேறி, சிவனடியை முடியிற்கொண்டு வணங்கி அடியவர் கூட்டம் கடலொலிபோல அரகர முழக்கஞ் செய்யவும், மங்கல தூரியம் தழைக்கவும் மறைமுழங்கவும், சங்கபடகம் முதலிய வாத்தியங்கள் எங்கும் இயம்பவும், மலர் மாரி பொழியவும், மங்கல வாழ்த்திசைக்கவும், பூரணகும்பம் முதலியவை பொலியவும், அடியார் எதிர்கொள்ளவும் சென்று, பல தலங்களை வணங்கித் தெண்டிரை சூழ்கடற் கானற்றிரு வகத்தியான்பள்ளியில் அண்டர்பிரான் கழல் வணங்கிப்பாடிய அருந்தமிழ் மாமறை இத்திருப்பதிகம்.

**பண் - காந்தாரம்**

**திருச்சிற்றம்பலம்**

வாடியவெண்டலை மாலை சூடிமயங்கிருள்
நீடுயர்கொள்ளி விளக்கு மாகநிவந்தெரி
ஆடியவெம்பெரு மானகத்தி யான்பள்ளியைப்
பாடியசிந்தையி னார்கட்கில்லை யாம்பாவமே. 1

துன்னங்கொண்டவுடையான் றுதைந்த வெண்ணீற்றினன்
மன்னுங்கொன்றைமதமத்தஞ் சூடி னன்மாநகர்
அன்னந்தங்குபொழில்சூ ழகத்தி யான்பள்ளியை
உன்னஞ்செய்தமனத்தார்க டம் வினையோடுமே. 2

---

1. வாடிய - வற்றிய. தலைமாலை, 'தலைமாலை தலைக் கணிந்து'. மயங்கு இருள் - செறிந்த இருள். கொள்ளி - தீக் கொள்ளி. கொள்ளி விளக்கொளி செய்ய என்றபடி. நிவந்த - உயர்ந்த, வளர்ந்த, அகரம் தொகுத்தல் விகாரம். எரி ஆடிய - தீயில் ஆடிய. 'அனலாடி' 'தீயாடி' என்பவை சிவநாமங்கள். பாவம் இல்லையாம் என்க.

2. துன்னம் - தைத்தல். துதைந்த - நெருங்கிய. முற்றப் பூசிய, 'முழுநீறுபூசிய மூர்த்தி போற்றி' (6, 219, 3). 'முழுநீறு

உடுத்ததுவும்புலித்தோல் பலி திரிந்துண்பதுங்
கடுத்துவந்தகழற்காலன் றன்னை யுங்காலினல்
அடுத்ததுவும்பொழில்சூ ழகத்தி யான்பள்ளியான்
றெடுத்ததுவுஞ்சர முப்புரந் துகளாகவே. 3

காய்ந்ததுவு மன்றுகாமனை நெற்றிக்கண்ணினல்
பாய்ந்ததுவுங்கழற்காலனைப் பண்ணி னன்மறை
ஆய்ந்ததுவும்பொழில்சூ ழகத்தி யான்பள்ளியான்
ஏய்ந்ததுவுமிமவான் மக ளொருபாகமே. 4

போர்த்ததுவுங்கரியின் னுரி புலித்தோலுடை
கூர்த்ததோர்வெண்மழு வேந்திக் கோளரவம்மரைக்
கார்த்ததுவும்பொழில்சூ ழகத்தி யான்பள்ளியான்
பார்த்ததுவும்மரணம் பட ரெரிமூழ்கவே. 5

தெரிந்ததுவுங்கணையொன்று முப் புரஞ்சென்றுடன்
எரிந்ததுவுமுன்னெழிலார் மல ருறைவான்றலை
அரிந்ததுவும்பொழில்சூ ழகத்தி யான்பள்ளியான்
புரிந்ததுவும்முமையாளோர் பாகம் புனைதலே. 6

---

பூசிய முனிவர்'. உன்னம் - தியாகம். மனத்தார்கள் தம் வினை - மனத்தையுடையவர் வினைகள்.

3. உடுத்ததும் தோல், உண்பதும் பலி, காலினல் அடுத்ததும் காலனை, முப்புரம் துகளாகத் தொடுத்ததும் சரம் என்க. கடுத்து - கோபித்து.

4. அன்று நெற்றிக்கண்ணல் காய்ந்ததும் மன்மதனை, பாய்ந்ததும் இயமனை, பண்ணினல் ஆராய்ந்ததும் வேதத்தை, பொருந்தியதும் இமாசல குமாரி பாகத்தை.

5. போர்த்ததும் யானைத்தோல். உடை - புலித்தோல். உடை என்பது தொழிலாகு பெயர். அது (உடுத்தது) வினையாலணையும் பெயர்ப் பொருளில் எழுவாய் நின்று புலித்தோலென்னும் பெயர்ப்பயனிலை கொண்டது. மழுவை ஏந்தி அரைக்கு ஆர்த்ததும் அரவம் (-பாம்பு) என்க. பார்த்ததும் படர்ந்த எரியில் அரணம் (மும்மதில்) மூழ்க.

6. தெரி (ஆராய்)ந்ததும் கணை (-பாணம்). ஒன்றை ஒருசேரச்சென்று எரிந்ததும் திரிபுரத்தை, முன் அரிந்ததும்

ஓதியெல்லாமுலகுக்கொ ரொண்பொ ருளாகிமெய்ச்
சோதியென்றுதொழுவா ரவர் துயர்தீர்த்திடும்
ஆதியெங்கள்பெருமா னகத்தி யான்பள்ளியை
நீதியாற்றொழுவா ரவர் வினைநீங்குமே. 7

செறுத்ததுவுந்தக்கன் வேள்வியைத் திருந்தார்புரம்
ஒறுத்ததுவுமொளிமாமல ருறைவான்சிரம்
அறுத்ததுவும்பொழில்சூ ழகத்தி யான்பள்ளியான்
இறுத்ததுவுமரக்கன்றன் றோள்க ளிருபதே. 8

சிரமுநல்லமதிமத்தமுந் திகழ்கொன்றையும்
அரவுமல்குஞ்சடையா னகத்தி யான்பள்ளியைப்
பிரமனேடுதிருமாலுந் தேடிய பெற்றிமை
பரவவல்லாரவர்தங்கண் மேல்வினை பாறுமே. 9

---

அழகு பொருந்திய பூவில் வாழும் பிரமன் தலையை, புரிந்தது (விரும்பிக்கொண்டது)ம் உமாதேவியார் ஒரு பாகத்தைப் புனை தலை, அப்பனது ஒரு பாகத்தை அம்மை அழகு செய்ததனாற்றான் உயிர்கட்கு அவ்வழகு உண்டாயிற்று. 'அவளால் வந்த ஆக்கம் இவ்வாழ்க்கையெல்லாம்' (சித்தியார் சூ. 1:- 69).

7. எல்லாம் ஓதி - வேதங்களையெல்லாம் ஓதியருளியவனே! உலகுக்கு ஓர் ஒண்பொருள் ஆகி - உலகங்களுக்கு ஒப்பற்ற ஒளிர்பொருளானவனே! மெய்ச்சோதி - உண்மை யொளியே! என்று தொழுபவர் துயர்களைத் தீர்த்திடும் ஆதியாகிய பெருமானது பள்ளியைத் தொழுவார் வினை நீங்கும் என்க.

8. செறுத்ததும் தக்கன்யாகத்தை. செறுத்தல் - கோபித்தல், அழித்தல். ஒறுத்தல் - கடிதல், வருத்துதல். ஒறுத்ததும் பகைவர் திரிபுரத்தை. திருந்தார் - பகைவர். திருந்தியவர் நண்பராவர். அறுத்ததும் ஒளியை உடைய தாமரைப்பூவில் வாழும் பிரமன் தலையை, இறுத்ததும் (-முறித்ததும்). இராவணனுடைய இருபது தோள்களையும்.

9. சிரமும் - தலைமாலையும். நல்லமதி (உம்) - அழகிய பிறையும். மத்தமும் - ஊமத்தம் பூவும். 'மத்தங்கமழ்சடை' (205). அரவும் - பாம்பும். 'அரவம்' என்ற பாடம் பிழை என்பது முதலடியாலே விளங்கும். பெற்றிமை - தன்மை. பாறும் - ஓடும்.

செந்துவராடையினரும் வெற்றரையேதிரி
புந்தியிலார்களும் பேசும்பேச்சவை பொய்ம்மொழி
அந்தணனெங்கள்பிரா னகத்தியான் பள்ளியைச்
சிந்திமினும்வினை யானவை சிதைந்தோடுமே. 10

ஞாலமல்குந்தமிழ் ஞானசம் பந்தன்மாமயில்
ஆலுஞ்சோலைபுடைசூ ழகத்தி யான்பள்ளியுள்
சூலநல்லபடையா னடி தொழுதேத்திய
மாலைவல்லாரவர்தங்கண் மேல்வினை மாயுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

*10.* செந்துவர் ஆடை - செங்காவித்துணி. பேசும் பேச்சவை - சொல்லும் பரசமயக்கோள்கள். அந்தணன் - சிவன். சிந்திமின் - தியாநம் புரியுங்கோள், நும் வினையானவை சிதைந்து ஓடும்.

*11.* ஆலும் - ஆடும். புடை - பக்கம். நல்ல சூலப்படையான் என்றும் சூலமாகிய நல்ல படையான் என்றும் கூறலாம். 'நல்ல பாம்பு'. மாலை - இத்திருப்பதிகம். மேல்வினை :- ஆகாமிய கன்மம் என்றலும் பொருந்தும்.

---

தாதுகற் றோய்த்தநஞ் சன்னசி யார்சட
லம்படுத்துத்
தூதையிற் சிக்கங் கரஞ்சேர்த்து வாளா
துலுக்குகின்றீர்
போதியிற் புத்தர்கள் வம்மின் புகலியர்
கோன்அன்னநாட்
காதியிட் டேற்றுங் கழுத்திறம் பாடிக்
களித்திடவே. —அந்தாதி 66

# 77 திருவறையணிநல்லூர்

## 213 பதிகவரலாறு

திருஆமாத்தூரையும் திருக்கோவல்வீரட்டத்தையும் வழிபட்டு, திருஅறையணிநல்லூரை அணைந்துஏத்தி அடியார் அன்பின் மேன்மையை உலகம் அறிந்துய்யப் பாவலர்ந்த செந்தமிழ் கொண்டு பரவியது இத்திருப்பதிகம்.

**பண் - காந்தாரம்**

திருச்சிற்றம்பலம்

பீடினாற்பெரி யோர்களும் பேதைமைகெடத் தீதிலா
வீடினாலுயர்ந் தார்களும் வீடிலாரிள வெண்மதி
சூடினார்மறை பாடினார் சுடலைநீறணிந் தாரழல்
ஆடினாரறை யணிநல்லூ ரங்கையாற்றொழு வார்களே. 1

இலையினார்சூல மேறுகந் தேறியேயிமை யோர்தொழ
நிலையினாலொரு காலுறச் சிலையினான்மதி லெய்தவன்
அலையினார்புனல்சூடிய வண்ணலாரறை யணிநல்லூர்
தலையினாற்றொழு தோங்குவார் நீங்குவார்தடு மாற்றமே. 2

---

1. பீடு - பெருமை. பேதைமை - அறியாமை. ஈண்டுப் பண்பாகு பெயராய் ஆணவத்தையும் இனம்பற்றி மாயை கன்மங்களையும் உணர்த்திநின்றது. தீதிலா வீடு - முற்றத் துறந்து பற்றற்ற நிலை. 'ஒருபற்றிலாமையும் கண்டிரங்காய்' வீடினால் - விடுதலால். வீடுஇலார் - (அழிவில்லாத) நித்தியர். இளமதி, வெண்மதி - பிறை. சுடலைநீறு - மகாசங்கார காலத்தில் அனைத்துலகையும் அழித்துப் பொடித்த பொடி. அழல் - தீயில். பெரியோர்களும் உயர்ந்தார்களும் ஆவார் எவர் என்னில், அறையணிநல்லூரைத் தொழுபவர்களே என்று இயைத்துணர்க. வீடிலாரும் சூடினாரும் பாடினாரும் ஆடினாரும் ஆகிய சிவபெருமானது ஊர் என்க.

2. இலையின்ஆர்சூலம்:- 'மூவிலைவேல்' 'இலையாருஞ் சூலத்தாய்' (அப்பர் திருத்தாண்டகம்) 'இலைமலிந்த வேல்நம்பி

என்பினர்கனல் சூலத்தா ரிலங்குமாமதி யுச்சியான்
பின்பினுற்பிறங்குஞ் சடைப்பிஞ்ஞகன் பிறப்பிலியென்று
முன்பினர்மூவர் தாந்தொழு முக்கண்மூர்த்திதன் ருள்களுக்
கன்பினரறை யணிநல்லூ ரங்கையாற்ரொழு வார்களே. 3

விரவுநீறுபொன் மார்பினில் விளங்கப்பூசிய வேதியன்
உரவுநஞ்சமு தாகவுண் டுறுதிபேணுவ தன்றியும்
அரவுநீள்சடைக் கண்ணியா ரண்ணலாரறை யணிநல்லூர்
பரவுவார்பழி நீங்கிடப் பறையுந்தாஞ்செய்த பாவமே. 4

---

யெறிபத்தர்' (திருத்தொண்டத்தொகை). தடுமாற்றம் - பிறவிக் குழியில் விழுந்தடுமாற்றம், ஓங்குவார் தடுமாற்றம் நீங்குவார் என்க. 'ஆரூர் தம் கையினல் தொழுவார் தடுமாற்றறுப்பாரே' (1. 105. 6).

3. என்பினர் - எலும்பணிந்தவர். கனல்சூலத்தார் - கனலும் (தீய்க்கும்) சூலப்படை ஏந்தியவர். மதியுச்சியான் - சந்திரசேகரன். பின்பு இன் ஆல் - பின்பினல், பின்புறத்தில். பின் - பின்புறத்தில், பின்னல் - பின்னலால் எனலும் பொருந்தும். 'பின்ருழ்சடை' (1. 71. 4 + 80. 2) 'பின்னுசடைகள்' (1. 74. 6) 'பின்னிய தாழ்சடையார்' (1. 8. 10), பிறங்கும் - விளங்கும். பிஞ்ஞகன் என்பது சடையை அடையாக்கொண்டு நின்றதால் முடியன் என்ற மட்டில் அமைந்தது. முன்பினர் - வலிமை, பழமையுடையார். நீனத்தலையுடையவர் எனலுமாம். முன் பின் ஆர் என்று பிரித்துக் காலத்தையும் இடத்தையும் குறித்துக் கூறலுமாம். என்பினர் சூலத்தார் உச்சியான் பிஞ்ஞகன் பிறப்பிலி என்று கையால் தொழுவாரே மூவரும் தொழும் முக்கண் மூர்த்தி திருவடிக்கு அன்பராவர்.

4. மார்பில் நீறு பூசிய வேதியன் என்றது சிவபிரானை. உரவு - கடல். அரவு - பாம்பு. கண்ணியார் - தலைமாலையுடையார். பரவுவார் - வாழ்த்திவணங்குபவர். பழிநீங்கப் பாவம் ஓடும்.

தீயினார்திகழ் மேனியாய் தேவர்தாந்தொழு தேவன்நீ
ஆயினாய்கொன்றை யாயன லங்கையாயறை யணிநல்லூர்
மேயினார்தம தொல்வினை வீட்டினாய்வெய்ய காலனைப்
பாயினாயதிர் கழலினாய் பரமனேயடி பணிவனே. 5

விரையினார்கொன்றை சூடியும் வேகநாகமும் வீக்கிய
அரையினாரறை யணிநல்லூ ரண்ணலாரழ காயதோர்
நரையினார்விடை யூர்தியார் நக்கனார்நறும் போதுசேர்
உரையினாலுயர்ந் தார்களு முரையினாலுயர்ந் தார்களே. 6

---

5. தீயின் ஆர் திகழ் மேனியாய் - தீயைப்போலப் பொருந்திய பிரகாசிக்குந் திருமேனியை உடையாய். தேவர் தாம் தொழு தேவன் நீ ஆயினாய், கொன்றையினாய், அனல் அங்கையாய், வீட்டினாய், பாயினாய் கழலினாய், பரமனே என மனமுருக வாய்குளிர அழைத்து, அடிபணிவன் என்றது பக்திசாகரத்தில் அழுத்துகின்றது. தம - தம்முடைய. பாயினாய் - பாய்ந்தாய்.

6. வேகம் - விடவேகம். பத்துவேகம் 'பத்துக்கொலாம் அவர் பாம்பின்கண் பாம்பின்பல்' (4. 18. 10). நாகம் - பாம்பு. வீக்கிய - கட்டிய. அரையில் நாகம் வீக்கினார் என்க. நரையின் ஆர் விடை - வெண்ணிறத்தினைப் பொருந்திய எருது. நறும் போது - நறுமணம் கமழும் பூக்கள். உரையினால் - 1. தோத்திரங்களால். 2. புகழால், பூவால் அருச்சித்து வாயால் தோத்திரம்புரிதல்பற்றிப், 'போதுசேர் உரை' என்றார். 'உரை மாலையெல்லாம் உடைய அடி (6. 6. 7) உரையாலுணரப் படாத அடி' 'உரையாரும் புகழானே' (6. 62. 6) 'உரைப்பார் உரை உகந்து உள்கவல்லார்தங்கள் உச்சியாய்' (7:– 936). 'உரையார் தமிழ்மாலை' (1. 84. 11) 'உரைப்பார் உரைப்பவை யெல்லாம் இரப்பார்க் கொன்றீவார்மேல் நிற்கும் புகழ்' (குறள்.) அர்ச்சனையில் உயர்வது புகழில் உயர்வதாகும் என்றவாறு. வழிபாட்டால் வரும்புகழேயன்றி மற்றைய வழிகளால் வரும் புகழ் உயர்வுடையதன்று. 'உரையார் பொருளுக் குலப்பிலான்' (6. 11. 7). என்பதற்கேற்பப் பொருள் உரைத்தலுமாம்.

வீரமாகிய வேதியர் வேகமாகளி யானையின்
ஈரமாகிய வுரிவைபோர்த் தரிவைமேற்சென்ற வெம்மிறை
ஆரமாகிய பாம்பினு ரண்ணலாரறை யணிநல்லூர்
வாரமாய்நினைப் பார்கடம் வல்வினையவை மாயுமே. 7

தக்கனூர்பெரு வேள்வியைத் தகர்த்துகந்தவன் றாழ்சடை
முக்கணன்மறை பாடிய முறைமையான்முனி வர்தொழ
அக்கினோடெழி லாமைபூ ணண்ணலாரறை யணிநல்லூர்
நக்கனூரவர் சார்வலா னல்குசார்விலோ நாங்களே. 8

வெய்யநோயிலர் தீதிலர் வெறியராய்ப்பிறர் பின்செலார்
செய்வதேயலங் காரமா மிவையிவைதேறி யின்புறில்
ஐயமேற்றுணுந் தொழிலரா மண்ணலாரறை யணிநல்லூர்ச்
சைவனூரவர் சார்வலால் யாதுஞ்சார்விலோ நாங்களே. 9

---

7. வீரம் - ஞானம். ஞானவேதியர் - சிவபிரான். அட்ட வீரட்டம் (எட்டு வீரத்தலம்) நோக்கின் சிவபிரானுக்குப் பொருந்தும். (வீரம் ஆகிய வேதியர் -) தக்கயாகத்திலிருந்தவர்களும் ஆம். வேகமாகளியானை - அவர்கள் வேகத்துடன் போதர ஏவிய பெரிய மதக்களிப்பையுடைய யானை. யானையின் ஈரம் ஆகிய உரிவை - அந்த யானை ஈரிய தோல். அரிவை - உமாதேவியார். பாம்புமாலையணிந்தவர். வாரம் - அன்பு. நினைப்பார்கள் தம் வல்வினை மாயும் - தியானம் புரிபவர்களுடைய தீவினை அழியும்.

8. தக்கனூர் - தக்ஷன். முக்கணன் - 'திரிநேத்திரன்'. அக்கு - எலும்பு, உருத்திராக்கமுமாம். ஆமைபூண்ட அண்ணலார். அவர்சார்வு - அச்சிவபிரான்றிருவடிச்சார்பு. நாங்கள் அவர் சார்வு அல்லால் பேரின்பம் பயக்கும் சார்பு வேறிலோம். அடுத்த பாடலின் ஈற்றடியும் ஈதேயாதல் அறிக. பதிகம் 180:- 3; 3. 54. 5; 7:- 872; 6. 98. 5 காண்க.

9. வெய்ய - வெம்மையுடைய. வெறியராய் - வெறிபிடித்தவர்போல. செய்வதே அலங்காரம் ஆம் இவை இவை என்பது செய்வனவே அழகாக்கும் பெற்றிபோலும். அவர் 'கொண்டதே கோலம்' என்றலும் அமையும். எருக்கு முதலிய அணிதல், பாம்பணிதல் முதலியவை நோக்கின், சிவபிரானுக்கு அன்றிப்

வாக்கியஞ்சொல்லி யாரொடும் வகையலாவகை செய்யன்மின்
சாக்கியஞ்சம ணென்றிவை சாரேலும்மர ணம்பொடி
ஆக்கியம்மழு வாட்படை யண்ணலாரறை யணிநல்லூர்ப்
பாக்கியங்குறை யுடையீரேற் பறையுமாஞ்செய்த பாவமே. 10

கழியுலாங்கடற் கானல்சூழ் கழுமலமமர் தொல்பதிப்
பழியிலாமறை ஞானசம் பந்தனல்லதோர் பண்பினூர்
மொழியினாலறை யணிநல்லூர் முக்கண்மூர்த்திதன் றாடொழக்
கெழுவினாரவர் தம்மொடுங் கேடில்வாழ்பதி பெறுவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பிறர்க்கு அவை அலங்காரமாதல் இன்மை விளங்கும். சைவன் - சிவபிரான். 'சைவாபோற்றி' திருவாசகம். 'மான்மறிமழுவொன் றேந்துஞ் சைவன்' (4. 62. 4). 'சைவத்தசெவ்வுருவன் திருநீற் றன்' (7:- 838).

10. வாக்கியம் - பொருள் முற்றுப்பெற்ற சொற்றொடர். சாரேலும் - சாராதீர்கள். சாராதேயுங்கோள். சாரேல்:- ஒருமை. அதனொடு 'உம்' சேர்த்து முன்னிலைப் பன்மை யேவலாக்கினர். இது திருமுறையில் பல இடத்தில் காணப்படும். 255 10; 349. 10 காண்க. அரணம் - திரிபுரம். ஆக்கிய மழு. மகர மெய் விரித்தல் விகாரம். பாக்கியம் குறை - பாக்கியமாகிய இன்றி யமையாப் பொருள். பாக்கியம் - தெய்வம். (குறள். 1141). எதுவந்தால் முடிவுறும்? அஃது, இல்லாமல் குறையாகி அவாவப் படும். படவே குறை என்பதற்கு முடிக்கப்படும் பொருள், இன்றியமையாப் பொருள் என்று பொருளுரைத்தனர் சான் றோர். (குறள். 612 680. 908).

11. பழி இல்லாமை மறைக்கு அடை. பண்பின் ஆர் மொழியினால் - இத்திருப்பதிகத்தால். கெழுவினார் - பொருந் தினவர். கேடுஇல்வாழ்பதி - சிவலோகம். தம்மொடும் பதி பெறுவர் என்றதால், தம்மையும் பெறுவர், பதியையும் பெறுவர் என்க. தம்மைப் பெறுதல் - 'தம்மையுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்'. (சிவஞான. அவையடக்கம்) என்றவாறு தம்மையுணர்தல். 'தன்னுயிர்தானறப் பெற்றானை ஏனைய மன்னுயிரெல்லாந் தொழும்' (குறள். 268). பதி - சிவம்.

# 78 திருவிளநகர்

## 214 பதிகவரலாறு

சிரபுரத்துவள்ளலார் திருச்செம்பொன் பள்ளியை வணங்கி மெய்த்தகாதலால் விளநகர் விடையவர் பாதம் பத்தரோடு பணிந்து பாடியருளிய இசைப்பதிகம் ஈதாகும்.

### பண் - காந்தாரம்

### திருச்சிற்றம்பலம்

ஒளிரிளம்பிறை சென்னிமே லுடையர்கோவண வாடையர்
குளிரிளம்மழை தவழ்பொழிற் கோலநீர்மல்கு காவிரி
நளிரிளம்புனல் வார்துறை நங்கைகங்கையை நண்ணினுர்
மிளிரிளம்பொறி யரவினுர் மேயதுவிள நகரதே. 1

அக்கரவ்வணி கலனென வதனெடார்த்ததொ ராமைபூண்
டுக்கவர்சுடு நீறணிந் தொளிமல்குபுனற் காவிரிப்
புக்கவர்துயர் கெடுகெனப் பூசுவெண்பொடி மேவிய
மிக்கவர்வழி பாடுசெய் விளநகரவர் மேயதே. 2

---

1\. ஒளிர் - பிரகாசிக்கின்ற. சென்னிமேல் பிறை உடையர், கோவணம் ஆகிய ஆடை உடுத்தவர். குளிர் மழைக்கு இளமை, பெய்து வெளிருமை. நளிர் - குளிர்ச்சி. துறைநதிசாதியடை. மிளிர் - பிறழ்கின்ற. புரள்கின்ற, விளங்குகின்ற. பொறி - பாம்பின் படத்திலுள்ள புள்ளிகள். 'பொறியரவம்' (1. 132. 2) 'பொறிகிளர் அரவம்' (3. 92. 3) 'பொறிகிளர் பாம்பு' (3. 101. 2) 'பொறியரவு' (4. 35. 6) என்று பயின்ற ஆட்சியாயிருந்தும், ஆகரங்காட்டிய அகராதியில் அராப்பொறி இராப்பொறியாயிற்று.

2\. அக்கு அரவு அணிகலன் என அதனெடு ஆர்த்தது. ஓர் ஆமைபூண்டு - எலும்பும் பாம்பும் (அழகுற) அணியும் ஆபரணம் என்ன, அவ்வாபரணத்தொடு கட்டியதோராமை அணிந்து, அணிகலனைச் சுட்டாமல் அக்கரவு:- சுட்டிற்றெனில் அவற்ருெடு எனல் வேண்டும். அக்கர் எனின், வலிந்து பொருள்

வாளிசேரடங் கார்மதி ளூலையநூறிய வம்பின்வேய்த்
தோளிபாகமமர்ந்தவ ருயர்ந்ததொல்கட னஞ்சுடன்
காளமல்கிய கண்டத்தர் கதிர்விரிசுடர் முடியினர்
மீளியேறுகந் தேறினர் மேயதுவிள நகரதே. 3

---

கொள்ளலாம். உக்கவர் - அழிந்தவர். சுடுநீறு:- முற்பதிகத்தின் முதற்பாட்டுரையிற் பார்க்க. (211:- 3) 'ஒளிமல்கு புனல் காவிரி' என்றது இன்றும் கண்கூடு. பூண்டு அணிந்து அவர் மேயது விளநகர் என்க. காவிரிப்புக்கவர் என்பது சிவபிரானைக் குறித்ததாக்கொள்ளின், அணிந்து புக்கவர் என்க. காவிரிப் புக்கவர் - காவிரி நீரிற் புகுந்து முழுகியவர், இது சிவபிரான் தீர்த்தம் அருளற்பொருட்டு எழுந்தருளும் உண்மை குறித்தது. 'துயர்கெடுக' எனச்சங்கற்பஞ்செய்து திருநீறு பூசுதல் வேண்டும். துயர் - பிறவித்துன்பம், துயர்க்கேடு - பாசநீக்கம். 'துயர் கெடுக' என்றார்க்கு இன்புறுக என்றலும் உட்கோளாகும். அவ் வின்பாக்கம் - சிவப்பேறு. இவ்விரண்டும் சேர்ந்ததே ஆன்மலாபமாகிய முத்தி. "பாசவீடும் சிவப்பேறும் எனப் பயன் இருவகைப்படும். அவ்விரண்டனுள் பாசவீடாகிய பயனைப்பெறுமாறு உணர்த்து.........தல் பயனோத்தின் முதற் பாதமாகிய இப்பத்தாஞ் சூத்திரத்தின் கருத்து என்க" (சிவ ஞானபோதம், சூ. 10. மாபாடியம்) "ஆன்மலாபம் இரண்டனுள் முடிவாய் எஞ்சிநின்ற சிவப்பேறு கூடுமாறுணர்த்...... துதல் பயனோத்தின் இரண்டாம் பாதமாகிய பதினோராஞ் சூத்திரத்தின் கருத்து என்க" "ஆன்மலாபம் எனப்படும் பயன் இரண்டனுள் பாசநீக்கம் உணர்த்திய பின்னர்ச் சிவப்பேறு உணர்த்துதல் முறைமை" (ஷை. சூ. 11). இவ்விரண்டும் "சிவாயநம என்று நீறணிந்தேன்" என்று, "திருவருளால்" வந்த தேவாரத்தில் உள்ளன. 'துயர்கெடுகெனப்பூசுவெண் பொடி' என்றதால், பூசும்பொழுது திருவைந்தெழுத்தோதாது பூசுவது தகாது. மிக்கவர் - மேலான அடியவர். வழிபாடு - அருள் வழிபடுஞ் சிவதரிசனம் முதலியவை. 'நிலைநிலையாப் பொருளுணர்ந்து பற்றிகந்து கரணம் ஒரு நெறியே செல்லப் புலனெறி நீத்து அருள் வழிபோ'தல் வழிபாடு. (திருவிளை யாடற் புராணம்.)

3. வாளி - அம்பு. அடங்கார் - பகைவர். மதில் - மும் மதில். நூறிய - அழித்த. வம்பின் வேய்த்தோளி - புதிய

காலவிளங்கெரி கழலினர் கையிலங்கிய வேலினர்
நூல்விளங்கிய மார்பினர் நோயிலார்பிறப் பும்மிலார்
மால்விளங்கொளி மல்கிய மாசிலாமணி மிடறினர்
மேல்விளங்குவெண் பிறையினர் மேயதுவிள நகரதே. 4

பன்னினர்மறை பாடினர் பாயசீர்ப்பழங் காவிரித்
துன்னுதண்டுறை முன்னினர் தூநெறிபெறு வாரெனச்
சென்னிதிங்களைப் பொங்கராக் கங்கையோடுடன் சேர்த்தினர்
மின்னுபொன்புரி நூலினர் மேயதுவிள நகரதே. 5

---

மூங்கிலை ஒத்த தோள்களையுடைய உமாதேவியார், இரண்டு கணுக்கட்கும் இடைப்பகுதியே தோளுக்கு ஒப்பு. வம்பு - புதுமை. உயர்ந்த கடல். தொல்கடல்:- பாற்கடல். நஞ்சு - விஷம். காளம் - கருமை. மல்கிய - நிறைந்த. காளமல்கிய கண்டத்தர்:- திருநீலகண்டர். கதிர் - செவ்வொளி. விரி - விரியும். சுடர்முடியினர் - நெருப்பைப்போலும் சடைமுடி யுடையவர். 'அலரும் எரிசெஞ்சடை' (பதி. 37) 'எரிதருசடை' (122) 'எரியார்சடை' (154) 'அனல்நிகர்சடை' (123) 'கனல் செய்தகமழ்சடை' (121) 'தீச்செய்தசடை' (119) 'நெருப்பினுற் குவித்தாலொக்குநீள்சடை' (5. 30. 7) 'நெருப்பராய் நிமிர்ந்தா லொக்கும் நீள்சடை' (ஷி. 9). என்னும் திருமுறைச்சான்று கொண்டு இப்பொருள் எழுதப்பட்டது. மீளி - வலிமை, பெருமையுமாம். ஏறு - விடை, எருது. உகந்து - விரும்பி, உயர்ந்து. மேயது - எழுந்தருளியிருப்பது.

4. நூல் - பூணு நூல். நோய் (உம்) இலார் பிறப்பும் இலார் - நோகுந்துன்பமும் இல்லார் பிறத்தலும் இல்லார். மால் - கருமை. மால் விளங்கிய மிடறினர் - திருநீலகண்டர். விளங்குஒளி மல்கிய மிடறு. மாசிலா மணிமிடறு - குற்றம் இல்லாத நீலமணிபோலும் மிடறு, அழகிய மிடறுமாம். மால் விளங்கு என்பதற்கு - 'இடமால் தழுவிய பாகம்' (4. 2. 4) (4. 22. 4). (4. 37. 7). (4. 62. 8). (4. 66. 8). (4. 78. 7) (6. 24. 5). (4. 40. 5). (4. 24. 7).

5. பன்னினர் - சொன்னர், ஆராய்ந்தார். 'மறை' இடைநிலை விளக்கு. பாய - பரவிய. சீர்க்காவிரி, பழங்காவிரி, காவிரித்துறை. முன்னினர் - அணுகினவர். தூநெறி - தூய

தேவரும்மம ரர்களுந் திசைகண்மேலுள தெய்வமும்
யாவரும்மறி யாததோ ரமைதியாற்றழ லுருவினர்
மூவரும்மவ ரென்னவு முதல்வரும்மிவ ரென்னவும்
மேவரும்பொரு ளாயினர் மேயதுவிள நகரதே. 6

சொற்றருமறை பாடினர் சுடர்விடுஞ்சடை முடியினர்
கற்றருவடங் கையினர் காவிரித்துறை காட்டினர்
மற்றருதிர டோளினர் மாசில்வெண்பொடிப் பூசினர்
விற்றருமணி மிடறினர் மேயதுவிள நகரதே. 7

---

(சிவ) கதி. (பா. 11. பார்க்க). திங்களை அராவோடும் கங்கையோடும் உடன் சேர்த்தவர், 'ஓடு உடன்' இரண்டும் ஒருசேர நின்றதறிக.

6. தேவர் அமரர் என்பர் வெவ்வேறு எனல் காண்க. தேவர் - தெய்வமாவார். அமரர் - மரணமில்லாதவர். அமரார் என்றிருந்து, கால் குறைந்ததுபோலும், மரணமில்லாமையுடையவராய்த் தெய்வமாகாதவர் அமரர். தெய்வமாகி மரணம் உடையார் தேவர். 'நூறுகோடி பிரமர்கள் நொந்தினர்' (5. 100. 3) என மூதலுந் தேவாரத்தால் தேவர்க்கு மரணம் உண்மை வெள்ளிடைமலை. 'செத்துச் செத்துப் பிறப்பதேவென்று பத்திசெய் மனப்பாறைகட்கு ஏறுமோ' (5. 100. 2). திசைகள் மேல்உள தெய்வமும் - அஷ்டதிக் பாலகர்களும். யாவரும் அறியாதது ஓர் அமைதி:- "ஏனையாவரும் எய்திடல் உற்று மற்று இன்னது என்று அறியாத தேனை......சிவனை ......க்குறுகிலேன்" (திருவாசகம். திருச்சதகம். 38) மூவரும் இவரே எனவும் முதல்வரும் இவரே எனவும் மேவ அரும் பொருள் ஆயினர். இத்திருப்பாடலில் சிவபரத்துவம் உணர்த்தப்பட்டதறிக. மேவ - அடைய.

7. சொல்தரும் மறை - 'எழுதாக்கிளவி' யாதலின் கண் வழியே காணும் எழுத்தாலன்றிச், செவிவழியே கேட்டு உணரச் சொல்லால் தரும் உயர்வுடைய வேதம். 'சொற்றருமறை முதல் தொன்மை நூல்முறை கற்றுளிர் சிவப்பிரகாச நூல்புகல் கொற்றவன் குடிவரு குரவன்' (சிவபுண்ணியத்திரட்டு.) கல் தருவடம் - செபமணி மாலை. தருவ்வடம் - வகரம் விரித்தல்

படர்தருஞ்சடை முடியினர் பைங்கழலடி பரவுவார்
அடர்தரும்பிணி கெடுகென வருளுவா ரரவரையினர்
விடர்தரும்மணி மிடறினர் மின்னுபொன்புரி நூலினர்
மிடறரும்படை மழுவினர் மேயதுவிள நகரதே. 8

கையிலங்கிய வேலினர் தோலினர்கரி காலினர்
பையிலங்கர வல்குலாள் பாகமாகிய பரமனர்
மையிலங்கொளி மல்கிய மாசிலாமணி மிடறினர்
மெய்யிலங்குவெண் ணீற்றினர் மேயதுவிள நகரதே. 9

---

விகாரம். மல் - வலிமை. திரள்தோளினர், பொடிப்பூசினர் - திருநீற்றை யணிந்தவர். ஒற்றுமிகை. வில் - ஒளி. தரும்மணி.- நீலரத்நம். முதலடியில் தருதல் துணைவினை யாதலும் கூடும்.

8. படர்தரும் - படரும். பைங்கழல் அடி - பசிய கழலை அணிந்த திருப்பாதம். ஒற்று விரித்தல் விகாரம். அடர்தரும் - தாக்கும். பிணிகெடுக என அருளுவார். 'துயர் கெடுக என' (பா. 2). இவ்வீரிடத்தும் வியங்கோள்வினையின் ஈற்றுயிர் கெட்டது. அரவு அரையினர் - பாம்பைக் கச்சாகக்கட்டிய திருவரையுடையவர். விடர் - மலைப்பிளப்பு. மலைகளில் மணி கிடைத்தல்பற்றிக் கூறியது. மின்னுபொன்புரி நூலினர்:- பா. 5.

9. கைஇலங்கிய வேலினர்:- பா. 4. தோலினர் கரிகாலினர் என்பது காலினர் கரித்தோலினர் என்றிருந்து பிறழ்ந்தது போலும். தோலினர் - யானைத்தோலும் புலித்தோலும் தரித்தவர். கரிகாலினர் - எல்லாம் வெந்து கரிந்துபோகுஞ் சருவசங்கார காலத்தில் தாம் ஒருவரே என அழியாது நிற்பவர். கரிதல் - 'வெந்து கரியான காமன்'. கால் - காலம். பை - படம். பின்புறத்தில் இடுப்பிற்கும் புறங்காலிற்கும் இடைப்பகுதி படம் விரித்த பாம்பின் தோற்றம் இருத்தலால், அல்குலுக்கு அரவு ஒப்பாயிற்று. அல்குலைக் குறி எனல் குற்றம். திருமுறையில் அஃது ஒவ்வாது. மெய் - திருமேனி. உண்மையுமாம். 'உண்மையிலுள்ளது நீறு.' 'சத்தியமாவது நீறு', 'தத்துவமாவது நீறு' (பதி. 202).

உள்ளதன்றனைக் காண்பன்கீ ழென்றமாமணி வண்ணனும்
உள்ளதன்றனைக் காண்பன்மே லென்றமாமல ரண்ணலும்
உள்ளதன்றனைக் கண்டிலா ரொளியார் தருஞ்சடை முடியின்மேல்
உள்ளதன்றனைக் கண்டிலா வொளியார் விளநகர் மேயதே. 10

மென்சிறைவண் டியாழ்முரல் விளநகர்த்துறை மேவிய
நன்பிறைநுத லண்ணலைச் சண்பைஞானசம் பந்தன்சீர்
இன்புறுதமி ழாற்சொன்ன வேத்துவார்வினை நீங்கிப்போய்த்
துன்புறுதுய ரம்மிலர் தூநெறிபெறு வார்களே. 11

திருச்சிற்றம்பலம்

---

10. கீழ்உள்ளதைக் காண்பன் என்ற மாமணிவண்ணன் - திருமால். மேல்உள்ளதைக் காண்பன் என்ற மாமலர் அண்ணல் - பிரமன். இவ்வாறு கொள்ளாமல், எங்கும் உள்ள தன்னைக் கீழ் காண்பன் மேல்காண்பன் என்றதாக்கொள்ளுதல் சிறப்புடையது. வண்ணனும் அண்ணலும் கண்டிலார் என்க. உள்ளது + அன் + தன் + ஐ = உள்ளதன்றனை எனக்கொண்டு, சிவபிரானை என்று பொருளுரைத்தல் மிக்க பொருத்தமுடைய தாம். 'ஓர்த்து உள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப் பேர்த்து உள்ள வேண்டா பிறப்பு' என நீதிநூலும் உள்ளது என்னும் வினைப் பெயரால் சச்சிதாநந்தப் பொருளை உணர்த்துகின்றது. 'உன்னும் உளது ஐயம் இலது' எனச் சிவாகமமும் (திருவருட்பயன். 10). உணர்த்திற்று. உள்ளது - சத்து. சத்தெனவே அவிநாபாவமாகிய சிதாநந்தமும் பெறப்படும். சர்வ வியாபகவஸ்துவே உள்ளது எனப்பட்டது.

11. வண்டுகள் யாழோசையைச் செய்கின்ற துறை என்று வளங்கூறப்பட்டது. சண்பை - சீகாழித் தலங்களுள் ஒன்று. சீர் இன்பு - சீரும் இன்பமும். துன்பு உறும் துயரம் - துன்பமும் அடையும் துயரமும். அண்ணலைச் சொன்னவற்றை ஏத்துவார் தூநெறி பெறுவார்கள்.

---

# 79 திருவாரூர்

## 215 பதிகவரலாறு

திருவாரூரிற் புற்றிடங்கொண்டருளும் பொற்றியாக ராசரைத், திருநீற்றடைவே மெய்ப்பொருளின்ப வாழ்வு என்று அறிந்து, அநுபவித்து விளங்கும் திருத்தொண்டர் களுடன் இருந்தருளி, வழிபட்டுவருந் திருஞானசம்பந்த சுவாமிகள், திருப்புகலூரில் எழுந்தருளியிருக்கும் திருநாவுக் கரசு சுவாமிகளைக் காண விரும்பினார்கள். ஆரூர்ப்புறத்தே போந்தார்கள். போந்ததும் ஆரூரையே நோக்கி நின்றார்கள். திருப்புகலூர் வருக என்று அழைக்கின்றது. திருவாரூர் செல்லவொட்டாது தடுக்கின்றது. பிள்ளையார் உள்ளம், இடையில் ஒன்றும் துணியாது நிற்கின்றது. அந்நிலையை நோக்கி, அவ்வுள்ளத்தை அறிவுறுத்தும்போது, **அவம் இல்லாத நெஞ்சமே!** நீ அஞ்சாதே. உய்யும்வகையை உணர் வாய்நீ, செம்பொற் புற்றின் மாணிக்கச் செழுஞ்சோதியை நேர்தொழுஞ் சீலத்தை மறவாதே.' தொழுதெழுந்து வழிபடு என்றருளியவராய்ப் பாடியது இத்திருப்பதிகம்.

**பண் - காந்தாரம்**

திருச்சிற்றம்பலம்

பவனமாய்ச் சோடையாய் நாவெழாப் பஞ்சுதோய்ச் சட்ட வுண்டு
சிவனதாட் சிந்தியாப் பேதைமார் போலநீ வெள்கி னயே
கவனமாய்ப் பாய்வதோ ரேறுகந் தேறிய காள கண்டன்
அவனதா ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்ச னெஞ்சே. 1

---

1. நெஞ்சே! மரணமுறுங்காலத்தில் சிவனடியைச் சிந்திக் கும் பாக்கியமில்லாத அஞ்ஞானிகளைப்போல நாணினையே. விடையின்மேல் ஏறிவந்தருளும் திருநீலகண்டப் பெருமா னுடைய திருவாரூரைத்தொழுது உய்யலாகும் மையல்கொண்டு அஞ்சாதே. ஆரூரைத் தொழப்பெறுதே கழியுமோ என்று கருதி மயங்கி அஞ்சாதே. மீண்டும்போந்து தொழப்பெறலாம் என்பது கருத்து. கொண்டு அஞ்சேல் என்பது காரணப் பொருட்டாய

தந்தையார் போயினர் தாயரும் போயினர் தாமும் போவார்
கொந்தவேல் கொண்டொரு கூற்றத்தார் பார்க்கின்ருர் கொண்டு
போவார்
எந்தநாள் வாழ்வதற் கேமனம் வைத்தியா லேழை நெஞ்சே
அந்தணு ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்ச னெஞ்சே. 2

---

வினையெச்சம். கொண்டு என்பது அஞ்சு என்னும் முதனிலை கொண்டது. பவனம் - காற்று. (पवन:) இறக்குங்கால், பிராண வாயு உடலின் நீங்கும் பொருட்டுப் பெருகும். அது 'மேல்மூச்சு வாங்குகின்றது' என்ற வழக்கினுலும் அறியப்படும். நாக்கு உலர்ந்துபோம். சோடை - வறட்சி शोष: நாக்கு உலர்ந்து போதலோடு, அதன்கண் எய்தும் உணவை உட்செலுத்த எழமாட்டாமலும் போம். நா எழாது என்பதில் துவ்விகுதி கெட்டது. ஒருமையாதலின் வல்லெழுத்து மிக்கது. பன்மை யாயின், 'காக்கை கரவா கரைந்துண்ணும்' (குறள்) என்பது போன்று இயல்பாகும். நாவானது பால் முதலியவற்றை உட் செலுத்தமாட்டாது (வலிகுன்றியது) பற்றி, அருகில் இருப்பவர் அப்பாலையோ பிறிதோருணவையோ பஞ்சில் தோய்த்து உட்புகுமாறு பிழிவர். அப்பிழிவை உயிரை ஓம்புதற்பொருட்டு, இரையை எண்ணிப் பழகிய பழக்கத்தால் இறையை எண்ணுத பேதையர் தம்மை அறியாதே உட்செலுத்தப் பெறுவர். பஞ்சு தோய்ச்சு அட்ட உண்டு சிந்தியாப்பேதைமார் என்க. தோய்த்து என்பதன் மரூஉ, தோய்ச்சு என்பது போலி என்பாருமுளர். காய்தல் முதலியவும் இவ்வாறு மருவியுள. சிவன்+அ=சிவன அ:- ஆறனுருபு. தாளிரண்டாதலின் பன்மையுருபு நின்றது, 'நுன கழலிணே' (திருவிசைப்பா. 7). அட்ட - பிழிந்து ஒழுக்க. கவனம் - விரைவு, கண்டனவன் எனப் பிரிக்காமல் கொள்வதே பொருத்தம். பிரித்துச் சுட்டுதல், வேண்டாதது. உய்யலாம் மையல் என்க. மையல் கொண்டஞ்சல் உய்யலாம் என்பாரு முளர். பேதைமார் போலாமையை 'அவமிலாநெஞ்சமே' (518). எனச் சேக்கிழார் சுவாமிகள் விளக்கியதுணர்க.

2. தந்தையர் தாயர் என்பன பலர்பால். தாமும் போவார் என்னும் பன்மைநோக்கி நின்றன. கொந்த - குத்த. 'கொந்தி அயில் அகல் அம்பால் குட்டமிட்டுக் கொழுப்பரிந்து' (பெரிய. கண்ணப்பர். 145). எரிய என்றுமாம். 'கொந்தழல்' (சிந். 1499). கூற்றத்தார் - இயமதூதர் (உடம்பும் உயிரும் கூறுபடு

நிணங்குடர் தோனரம் பென்புசே ராக்கைதா னிலாயதன்றால்
குணங்களார்க் கல்லது குற்றநீங் காதெனக் குலுங்கி னுயே
வணங்குவார் வானவர் தானவர் வைகலு மனங்கொ டேத்தும்
அணங்கனு ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்ச னெஞ்சே. 3

---

தலைச் செய்பவர்). கொண்டு போவாராய்ப் பார்க்கின்றார். வைத்தி.- வைப்பாய்?. எந்தநாள் வாழ்வதற்கு மனம் வைத்தி.' என்று வினவியருளினார். மனம் 'வாழாத நெஞ்சம்' எனப் படும். 'வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே வல்வினைப்பட்டு ஆழ்கின்றாய் ஆழாமல் காப்பானை ஏத்தாதே, சூழ்கின்றாய் கேடுனக்குச் சொல்கின்றேன் பல்காலும், வீழ்கின்றாய் நீ அவலக் கடலாய வெள்ளத்தே' என்பது திருவாசகம். வாழ்க்கை, 'உரித் தன்று உனக்கு இவ்வுடலின் தன்மை உண்மை உரைத்தேன் விரதம் எல்லாம் தரித்தும் தவமுயன்றும் வாழாநெஞ்சே' (6. 42. 10). என்றதிற் குறித்தது. தம்முன்னோர் எல்லாரும் இறந்தவாறே தாமும் இறப்பது திண்ணம். மாய்க்க மறலி தூதர் சித்தமாயுள்ளனர். இறப்பு அண்மையில் இருக் கின்றதால், இறவாமல் என்றும் வாழ்வதற்கு எந்தநாள் மனம் வைப்பாய்? வாழ்வது - திருவடி நிழலில் அழியாத இன்பத்தைத் துய்த்துக் கொண்டிருப்பது. ஆரூர் தொழுது உய்யலாம். நெஞ்சே மையல்கொண்டு அஞ்சாதே. முதலாவது விளி அதன் போக்கை உணர்த்த. இரண்டாவது விளி அதற்கு அபயம் அளிக்க.

3. யாக்கை ( - கட்டப்பட்டது, உடம்பு) ஆக்கை என்று ஆயிற்று. யகரமெய் முதலிற்கொண்ட சொற்கள் அதனை ஊர்ந்த ஆமுதலாய் வழங்கப்படுதல், யாறு-ஆறு, யாமை-ஆமை, யாய் - ஆய். யாண்டு - ஆண்டு, யானை - ஆனை முதலியவற்றிற் காணப்படும். நிலாயது-நிலாவியது. 'குடம்பை தனித்தொழியப் புட்பறந்தற்றே உடம்போடுயிரிடை நட்பு' (குறள்.) நல்ல குணங்களுடையார்க்கே குற்றம் நீங்கும் அல்லாதார்க்கு (தீய குணங்களையுடையவர்க்கு)க் குற்றம் நீங்காது. குலுங்கினாய் - நடுங்கினாய். சுராசுரர் எல்லாரும் நாடோறும் வணங்குவராய் மணம் (தூபம் முதலியவற்றைக்) கொண்டு ஏத்தும் கடவுள். 'மனம் என்ற பாடம்' கழகப் பதிப்பில் உளது. மனம் கொடு - இயானித்து. அணங்கு-தெய்வத்தன்மை. அணங்கன்-சிவபிரான்'

நீதியால் வாழ்கிலை நாள்செலா நின்றன நித்த நோய்கள்
வாதியா வாதலா லுநா ளின்பமே மருவி னுயே
சாதியார் கின்னரர் தருமனும் வருணர்க ளேத்து முக்கண்
ஆதியா ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்ச னெஞ்சே. 4

பிறவியால் வருவன கேடுள வாதலாற் பெரிய வின்பத்
துறவியார்க் கல்லது துன்பநீங் காதெனத் தூங்கி னுயே
மறவனீ மார்க்கமே நண்ணினுய் தீர்த்தநீர் மல்கு சென்னி
அறவனு ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்ச னெஞ்சே. 5

---

குணம் குற்றம் இரண்டும் உடைமை குறிக்கச் சுராசுரரைக் குறித்தார்போலும்.

4. நெஞ்சே, நீதிவழியே வாழவில்லை, காலம்பல வீணே கழிக்கின்றனை. நாளும் நோய்கள் வருத்தா. நோய்கள் வாதியா நாள்செலா நின்றன என்று கொண்டு கூட்டுக. வாதியா - வாதித்து, வருத்தி, இதற்கு வாதிப்பனவாயின என்றுரைப்பது எவ்வாறு? நாளும், நாளும் இன்பத்தையே பொருந்தினுய். சாதி - குலம். ஆர் - பொருந்திய. கின்னரரும் தருமனும் வருணனும் வழிபட்டனரென்று குறித்தார். ஆதியாரூர் என்றது காவிரிநாட்டிடைத் தொன்மையில் மிக்கது. திசையெட்டும் தெரிப்பதற்கு முன்னே பின்னே திருவாரூர் கோயிலாக்கொண்ட நாளே என்ற கருத்தைக் குறித்தது. ஆதியின் ஆரூர் என்றலுமாம். 'ஆதிபாதமே ஓதி உய்ம்மினே' (1. 90. 3).

5. அவமிலா நெஞ்சம் (பெரியபுராணம்) உயிர்க்குப்பிறத்தலும் இறத்தலும் பெருந்துன்பங்கள். மற்றையெல்லாத் துன்பங்களும் அவற்றிடை விளைவன. இறத்தலும் பிறத்தலால் உண்டாவதே, 'தோற்றம் உண்டேல் மரணம் உண்டு' 7. 63 'பிறந்தால் பிணிப்பட வாய்ந்தசைந்துடலம் புகுந்து நின்று இறக்குமாறுளதே இழித்தேன் பிறப்பினை நான்' (4. 20. 8.) 'கெடுவது இப்பிறவி சீசீ' (4. 76. 10). துறவு வீடு பேரின்பத்தைக் கொடுப்பது. அத்துறவு பிறவியால் விளையும் கேடுகளை உணர்ந்தவர்க்கே உண்டாகும், ஆதலின், பிறவியால் கேடு வருவன உள. ஆதலின் பெரிய இன்பத் துறவியாரானுர் என்றருளினுர். துறவியார்க்கே துன்பம் நீங்கும். துறவாதார்க்குத்

செடிகொ ணோயாக்கையைம்பாம்பின்வாய்த்தேரைவாய்ச்சிறுபறவை
கடிகொள்பூந் தேன்சுவைத் தின்புற லாமென்று கருதி னாயே
முடிகளால் வானவர் முன்பணிந் தன்பரா யேத்து முக்கண்
அடிகளா ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்ச னெஞ்சே. 6

---

துன்பம் நீங்காது என்று சோர்ந்தது நெஞ்சு. தூங்குதல் - சோர்தல். நெஞ்சே! துன்பம் நீங்காது எனச் சோர்ந்தாய். சோர்வு வேண்டா. நீ ஆரூரை மறவல் (-மறவாதே). மார்க்கமே நண்ணினாய் - சன்மார்க்கத்தினையே சேர்ந்தாய். 'மார்க்கர்கண்ட நூலோதி வீடு காதலிப்பவர்' (சித்தியார்.) என்புழிப்போல நின்றது. 'தயாமூலதன்மம்' என்னும் தத்துவத்தின் வழிநின்று தாழ்ந்தோர்க்கெல்லாம் நலங்கொடுக்கும் நம்பி' (6. 20. 6). யாயிருத்தலாலும் 'தயாமூலதன்மவழி எனக்கு நல்கி மனந்திருத்தும் மழபாடி வயிரத்தூண்' என்றதில் அடியார்க்கு நல்கும் 'தயாமூலதன்மவழி' யுடையனுதலாலும் அறவாழி யந்தணன் சிவனே. அறப்பெருஞ் செல்வி சிவையே. அவன் கல்லாற் கீழிருந்து உரைத்தருளிய அறத்தின் ஏகதேசமே ஏனையோர்பால் இருப்பது. 'பிறவி அறுப்பீர்காள்'. அறவனாரூரை மறவாதேத்துமின் துறவியாகுமே' என்றதை (1. 91. 2). மறவல் நெஞ்சமே' (1. 90. 8). என்பதனோடு ஒப்புநோக்கியுணர்க. மறவன் என்று பிரிப்பது மறமன்றி அறமாகாது.

6. செடி - பாவம், துன்பம், தீநாற்றமும் ஆம். (2. 93. 2). (6. 82. 7). (திருவாலவாயுடையார் புராணம். 54:- 19). நோயையுடைய யாக்கை. (பா. 3. பார்க்க). 'ஐம்பாம்பு' என்ற பாடமே மதுரை - ஞானசம்பந்தப்பிள்ளை அவர்கள் பதிப்பிலுளது. அம்பாம்பு என்ற பாடம் சிறவாது. 'பாம்பின்வாய்த் தேரைபோலப் பலபல நினைக்கின்றேனை ஓம்பிநீ உய்யக் கொள்ளாய் ஒற்றியூருடைய கோவே.' (4. 47. 1). பாம்பின் வாயில் தேரை. தேரையின் வாயில் சிறுபறவை (வண்டு). அவ்வண்டின் வாயில் மலர்த்தேன் துளி. அதைச் சுவைத்துக் கொண்டிருக்கும் அச்சிறு பறவைக்கும், அதை உண்ணும் தேரைக்கும், அதை விழுங்கும் பாம்பிற்கும் அவ்வவ்வுணவால் எய்தும் இன்பத்தின் சிறுமையும் தாம் உற்ற துன்பத்தின் பெருமையும் உவமை. உயிர்கள் விரும்பும் உலக இன்பத்தின் சிறுமையும் அதனைவிழைந்து முயன்று தேடிப்பெறும் பொருட்டு

உயர்ந்த பிறவியைப் பயன்படுத்தித் திருவருளிற் செலுத்தாமையால், அடையப்பெருத உண்மை யின்பத்தின் பெருமையும் உவமேயம். சிறு பறவை முதலிய மூன்றற்கும் உள்ளது போல்வதொரு பெருங்கேடு யாக்கையின் செடி கொள்நோய். நோய் பாம்பைக்கொல்லும், பாம்பு தேரையைக்கொல்லும் தேரை வண்டைக்கொல்லும். அந்நிலையில் பாம்பு முதலிய மூன்றும் தேரை, வண்டு, தேன்றுளியால் முறையாகச் சிறிது இன்புறும் செயலால், பின் உள்ள பெருந்துயரை அறியாதுள்ளன. இந்நிலைமையை நெஞ்சிற்கு அறிவுறுத்தி, நிலைத்த பொருளை நாடுவித்தலே இதன் உட்கோள்.

"அடுகரி தொடர வீழ ஐந்தலை நாகங் காண
இடிகிணற் றறுகின் வேரைப் பற்றிநான் றிட அவ் வேரைக்
கடுகலூர் எலியும் வந்து கறித்திட அதில்நின் றூறுனுக்
கிடைதுளி தேன்நக் கின்பம் போலுமிப் பிறவி யின்பம்."

"கொண்டு விண்படர் கருடன்வாய்க் கொடுவரி நாகம்
விண்ட நாகத்தின் வாயினில் வெருண்டவன் றேரை
மண்டு தேரையின் வாய்தனில் அகப்படு தும்பி
வண்டு தேன்நுகர் இன்பமே மானிடர் இன்பம்."

என்னும் தனிப்பாடல்களையும் 'வனப்பாழ்ங்கிணற்றுள் வெம்பாம்பு பற்றும் விடத் தேரை வாய்வண்டு தேன் வேட்டல் போல் விசித்துக் கொடுபோய்விட........கூற்றை எண்ணாது எண்ணும் வேட்கை யெல்லாம் விட........ அரங்கன் திருத்தாளில் விழு நெஞ்சமே' (திருவரங்கத்தந்தாதி. 93) என்பதையும் துன்பத்துள் துன்பமான உலக வாழ்க்கையில் இருந்து கொண்டே தனக்கு உடனே வரக்கடவதாகிய துன்பத்தைச் சிறிதும் நினையாமல் இன்பத்தையே மேன்மேல் அவாவும் பேதைமையியல்புக்கு,......கானகத்தில் நீரற்ற பாழ்ங் கிணற்றிலே பாம்பின் வாய்ப்பட்டு நஞ்சு தலைக்கு ஏறிய தேரையின் வாயில் அகப்பட்டதொரு வண்டு தேனை விரும்புதலை உவமை கூறினர்' என்னும் அதன் விளக்கத்தையும் நோக்கி உணர்க. இதற்குப் பிறர் எழுதியது பொருந்துமா என்று ஆய்க.

ஏறுமால் யானையே சிவிகையந் தளகமீச் சோப்பி வட்டின்
மாறிவா முடம்பினர் படுவதோர் நடலைக்கு மயங்கி நீயே
மாறிலா வன்முலை மங்கையோர் பங்கினர் மதியம் வைத்த
ஆறனா ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்ச னெஞ்சே. 7

என்பினாற் கழிநிரைத் திறைச்சிமண் சுவரெறிந் திதுநம் மில்லம்
புன்புலா நாறுதோல் போர்த்துப்பொல் லாமையான்முகடு கொண்டு
முன்பெலா மொன்பது வாய்தலார் குரம்பையின் மூழ்கிடாதே
அன்பனா ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்ச னெஞ்சே. 8

---

7. ஏகாரம் எண்ணுப் பொருட்டு, சிவிகை - பல்லக்கு. அந்தளகம் - கவசம். (தமிழ் லெக்ஸிகன்: பக்கம், 82. பார்க்க.) ஈச்சோப்பி - ஈயோட்டி. விருது என்றுருமுளர், வட்டின்மாறி வாழ் உடம்பு:- உடையை மாற்றுவதுபோல் உடம்பினை மாற்றுவது அவ்வுடம்பினை எடுக்கச்செய்யும் வினைப்பயனாக உயிர்க்கு நிகழ்வது. வட்டு - உடை. வட்டின் - வட்டுப்போல. உடம்பில் மாறி வாழ்தல் ஆவது எடுத்த உடம்பினை விடுத்துப் புதியதோருடம்பிற்புகுதல். யானை, சிவிகை, அந்தளகம், ஈச்சோப்பி என்பவற்றை உடையவர் அருள்வாழ்வு பெறாராயின், அழியாத பேற்றை அடைவாரல்லார். மாறிவாழ் உடம்பினரேயாவர். அவர் அந்நடலையே படுவர். நடலை - பொய். அதை நன்று என்று மயங்கிப் பற்றின் பிறவிதொலையாது. அல்லியங்கோதையார் பாகராகிய தியாகராயரைத் தொழுது பிறவித் துன்பத்தினின்றும் உய்தி அடையலாம். நெஞ்சே மையல் கொண்டு அஞ்சாதே என்க. செல்வராயிருந்தபோது யானை மீதும் சிவிகை மீதும் சென்றவர், வறியரானபோது, ஈயோட்டும் இழிநிலையும் உண்ணும் வட்டில் மாறும் நிலையும் அடைவது பற்றிக் கூறியதாகக் கொள்ளலும் பொருந்தும்.

8. எறிந்து - நீளக்கட்டி. முகடு - மேல்மூடு. ஒன்பது வாய்தல் - நவத்துவாரம். குரம்பை - உடற்குடில். (4. 33. 4). அன்பன் - சிவபிரான். 'அன்பே சிவம்'. கால்கொடுத்தெலும்பு ......கூரை (4. 6713) ஊன் உடுத்தி ஒன்பது வாசல் வைத்து ஒள்ளெலும்பு தூணா உரோமம் மேய்ந்து தாம் எடுத்த கூறை'. (6. 12. 1) முகடு என்பது மூடு என மரூஉவாகும். ஒன்பது வாய்தல்.- 'புழுப் பெய்த பண்டிதன்னைப் புறம் ஒரு தோலான் மூடி ஒழுக்கு அறா ஒன்பது வாய் ஒற்றுமை ஒன்றும் இல்லை

தந்தைதாய் தன்னுடன் றோன்றினர் புத்திரர் தாரமென்னும்
பந்தநீங் காதவர்க் குய்ந்துபோக் கில்லெனப் பற்றி னையே
வெந்தநீ றுடியா ராதியார் சோதியார் வேதகீதர்
எந்தையா ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்சனெஞ்சே. 9

நெடியமால் பிரமனு நீண்டுமண் ணிடந்தின்ன நேடிக் காணப்
படியனர் பவளம்போ லுருவனர் பனிவளர் மலையாள் பாக
வடிவனர் மதிபொதி சடையனர் மணியணி கண்டத் தெண்டோள்
அடிகளா ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்சனெஞ்சே. 10

---

*(4. 52 2)* குரம்பை.- *(4:- 31. 2; 3; 42. 1; 54. 3; 67. 8;).* 'புலால் கமழ்பண்டம்' *(4. 67. 8).*

9. நெஞ்சே, நீ, அஞ்சாதே, தந்தை, தாய், சகோதரர், புத்திரர், மனைவி என்னும் பற்று நீங்காதவர்க்குப் பிறவித் துன்பத்தினின்றும் உய்தி அடையும் உபாயம் இல்லை என்று தெளிந்து, திருவாரூர்த் தியாகராசப் பெருமான் திருவடியே கதி எனப்பற்றிக் கொண்டாய். ஆரூர் தொழுது உய்யலாம் மையல் கொண்டாய். 'தந்தையார்தாயாருடன் பிறந்தார், தாரமார் புத்திரரார்தாந்தாமாரே, வந்தவாறெங்ஙனேபோமாறேதோ மாயமாமிதற்கேதுமகிழவேண்டா, சிந்தையீருமக்கொன்று சொல்லக்கேண்மின், திகழ்மதியும்வாளரவுந்திளைக்குஞ்சென்னி யெந்தையார்திருநாமநமச்சிவாய வென்றெழுவார்க்கிருவிசும்பி லிருக்கலாமே'. 'உடலைத் துறந்து உலகேழுங் கடந்து உலவாத துன்பக் கடலைக் கடந்து உய்யப் போயிடலாகும்......... ......சுடலைப் பொடிக் கடவுட்கு அடிமைக்கண் துணி நெஞ்சமே'. 6. 93-10, 4. 112-2 பார்க்க.

10. நெடியமால் மண் (பூமியை) இடந்தான் - பேர்த்தான் பிரமன் (வானில் உயர) நீண்டான், பறந்தான். நீண்டு. இடந்து இன்னம் நேடிக் காணப் படியனர் என்க. படி - பண்பு. உருவம் எனில் ஈண்டுத் தீப்பிழம்புருவம் ஆகும். 'இப்படியன் இந் நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன் என்று எழுதிக் காட்டொணாதே' (6. 97. 10) என்பதில் காட்சிக்குரியது எனல் உணர்க. பாகவடிவு - அர்த்தநாரீச்சுரரூபம். மணி - நீலரத்நம்.

பல்விதழ் மாதவி யல்லிவண் டியாழ்செயுங் காழி யூரன்
நல்லவே நல்லவே சொல்லிய ஞானசம் பந்த னூர்
எல்லியம் போதெரி யாடுமெம் மீசனை யேத்து பாடல்
சொல்லவே வல்லவர் தீதிலா ரோதநீர் வைய கத்தே. 11

திருச்சிற்றம்பலம்

---

*11. யாழ் - யாழொலியை. 'நல்லவே நல்லவே' என்ற அடுக்கும் ஏகாரமும் ஆசிரியர் திருவாய் மலர்ச்சியின் எய்தும் ஆன்மலாபத்தை உறுதிப்படுத்தி நின்றன. 'ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாவே தீய வழுக்கியும் வாயாற்சொலல்' (குறள். 139) என்றதனுரையில் பரிமேலழகர் எழுதிய தாற்பரியம் ஈண்டுக் கருதற்பாலது. எல்லியம்போது - இரவு. ஓதம் - கடல். வையகத்தே பாடல் சொல்லவல்லவர் தீது இலர் என்க. இத் திருப்பதிகம் நித்திய பாராயணத்திற்குரியவற்றுள் ஒன்றாகும்.*

---

*களியுறு தேன்தார்க் கவுணியர் தீபன்*
*கருதலர்போல்*
*வெளியுறு ஞாலம் பகல்இழந் தால்விரை*
*யார்கமலத்*
*தளியுறு மென்மலர்த் தாதனைந் தாழி*
*அமைப்பவருந்*
*துளியுறு வாடையி தாம்மட மானைத்*
*துவள்விப்பதே.* —அந்தாதி 67

*தேறும் புனற்றில்லைச் சிற்றம் பலத்துச்*
*சிறந்துவந்துள்*
*ஊறும் அமிர்தைப் பருகிட் டெழுவிதொர்*
*உட்களிப்புக்*
*கூறும் வழிமொழி தந்தெனை வாழ்வித்*
*தவன்கொழுந்தேன்*
*நாறும் அலங்கல் தமிழாகரன் என்னும்*
*நன்னிதியே.* —அந்தாதி 68

## 80 திருக்கடவூர்மயானம்

### 216 பதிகவரலாறு

காழியார் வாழவந்தருளிய மறைவேந்தர் திருநாவுக்கரசு நாயனுரொடு திருஅம்பர் மாகாளம் முதலியவற்றை வழி பட்டுத் தொண்டர்களோடு திருக்கடவூரை யடைந்து காலனை யுதைத்த கால்மலர் வணங்கிச் "சடையுடையான்" எனத் தொடங்கிப் பாடிப்பரவி அரிதிற்போந்து நண்புடைய குங்கிலியக்கலயநாயனுர் திருமனையடைந்து விருந்தமர்ந்த நாளில் திருமயானத்தையும் பணிந்து பாடியருளியது இத் திருப்பதிகம்.

திருச்சிற்றம்பலம்

பண் - காந்தாரம்

வரியமறையார் பிறையார் மலையோர் சிலையா வணக்கி
எரியமதில்க ளெய்தா ரெறியுமுசல முடையார்
கரியமிடறு முடையார் கடவூர்மயான மமர்ந்தார்
பெரியவிடைமேல் வருவா ரவரெம்பெருமா னடிகளே. 1

மங்கைமணந்த மார்பர் மழுவாள்வலனேன் றேந்திக்
கங்கைசடையிற் கரந்தார் கடவூர்மயான மமர்ந்தார்
செங்கண்வெள்ளே றேறிச் செல்வஞ்செய்யா வருவார்
அங்கையேறிய மறியா ரவரெம்பெருமா னடிகளே. 2

---

1. வரிய மறையார் - வரிகளையுடைய வேதியர். வரிய - சிரேட்டமுடைய எனலும் பொருந்தும், மலையை ஒரு சிலையாக வணக்கி என்க. சிலை - வில். வணக்கி - வளைத்து. மதில்கள் எரிய எய்தவர். எறியும் முசலம் - வீசும் உலக்கை. மிடறு - கழுத்து.

2. மங்கை மணந்த மார்பர் - உமாதேவியாரை இடப்பால் உடையவர். மார்பு இடப்பக்கத்தது. 'போகமார்த்த பூண் முலையாள் தன்னேடும் பொன்னகலம் பாகமார்த்த...அண்ணல்'

ஈடலிடப மிசைய வேறிமழுவொன் றேந்திக்
காடதிடமா வுடையார் கடவூர்மயான மமர்ந்தார்
பாடலிசைகொள் கருவி படுதம்பலவும் பயில்வார்
ஆடலரவ முடையாரவரெம்பெருமா னடிகளே. 3

இறைநின் றிலங்கு வளையா ளிளையாளொருபா லுடையார்
மறைநின் றிலங்கு மொழியார் மலையார்மனத்தின் மிசையார்
கறைநின் றிலங்கு பொழில்சூழ் கடவூர்மயான மமர்ந்தார்
பிறைநின் றிலங்கு சடையா ரவரெம்பெருமா னடிகளே. 4

வெள்ளையெருத்தின் மிசையார் விரிதோடொருகா திலங்கத்
துள்ளுமிளமான் மறியார் சுடர்பொற்சடைக துளங்கக்
கள்ள நகுவெண் டலையார் கடவூர்மயான மமர்ந்தார்
பிள்ளைமதிய முடையா ரவரெம்பெருமா னடிகளே. 5

---

வலன் - வலக்கையில். கரந்தார் - மறைத்தார். செல்வம்-அடியார்கட்குத் திருவருட்காட்சி கிடைக்கும் பாக்கியம். செய்யா - செய்து. மறி - மான்கன்று. பா. 5. அதை ஏந்தியதால் அங்கை ஏறிய மறியார் என்றார்.

3. ஈடு + அல் = ஈடல். தன்னொடு பிறிதொன்று ஒப்பு அல்லாத இடபம். காடது இடமாக உடையவர். பாடல் இசை - பாடுதலில் இசை. படுதம் - கூத்து. 'பாகம் உமை யோடாகப் படிதம் பலபாட' (198 ஆம் பதிகம். 4.) என்பதில் 'படிதம்' என்றுள்ளதறிக.

4. இறை - முன்கை. வளையாள் - வளையலையுடையவள். இளையாள் - தேவியாரைக் குறித்தவை. மறை...மொழியார் - வேதவாக்கியப் பொருளாயுள்ளவர். மலையார் - மலைத்தல் இல்லாதவர், தெளிந்தவர். அவர் மனத்தின் மிசையார். மனம் ஊர்தி. சிவபிரான் - ஊர்பவர். 'அன்பர் மனமாங்குதிரை'. கறை - கறுப்பு நிறம். மரச்செறிவால் இருள்மிக்க சோலை.

5. ஒளிவிரியும் தோடு ஒருகாதிலும் குழை ஒருகாதிலும் விளங்க. மான்மறி:- பா. 2. துலங்க - ஒளிசெய்ய. பிள்ளை மதியம் - இளம்பிறை.

பொன்றுதுதிரு மணங்கொள் புனைபூங்கொன்றை புனைந்தார்
ஒன்றுவெள்ளே றுயர்த்த துடையாரதுவே யூர்வார்
கன்றுவினஞ்சூழ் புறவிற் கடவூர்மயான மமர்ந்தார்
பின்றுழ்சடைய ரொருவ ரவரெம்பெருமா னடிகளே. 6

பாசமான களைவார் பரிவார்க்கமுத மனையார்
ஆசைதீரக் கொடுப்பா ரலங்கல்விடைமேல் வருவார்
காசைமலர்போன் மிடற்றூர் கடவூர்மயான மமர்ந்தார்
பேசவருவா ரொருவ ரவரெம்பெருமா னடிகளே. 7

---

6. பொன்தாது உதிரும் கொன்றை, மணம்கொள் கொன்றை. புனைகொன்றை. பூங்கொன்றை என்று இயைத்துக்கொள்க. புனை - அழகுசெய்யும். புனைந்தார் - அணிந்தார். வெள்ளேறு-வெளியவிடை. ஒன்று - ஒன்றாக, சிறப்புடையதாக. உயர்த்தது - தூக்கியது. அதுவே - அவ்விடையே. கன்று ஆ இனம் - கன்றுகளையுடைய பசுக்கூட்டம். புறவு - காடு.

7. பாசம் ஆன களைவார் - மலம் ஆயின ஐந்தையும் போக்குவார். ஆணவம், மாயை, கன்மம் என்று மும்மலமும், அவற்றையே மாயேயம், திரோதான சத்தியுடன் கூட்டி ஐம்மலமும் உண்டு என்பர். சிவஞானமாபாடியம். சூ. 2. அதி. 2. பார்க்க. 'மலங்கள் ஐந்தாற் சுழல்வன்' திருவாசகம் 133. ஆன - வினைப்பெயர். பரிவார்க்கு - அன்பர்க்கு. பரிவு - அன்பு. அமுதம் அனையார் - அமிர்தத்தைப் போல்பவர். ஆசைதீர - மூவாசையும் (மண், பொன், பெண்) ஒழிய. அலங்கல் - மாலை. காசைமலர் - காயாம்பூ. திருநீலகண்டத்துக்கு ஒப்புரைப்பது மரபு. 19—4—54 திங்கட்கிழமை இரவு 7 மணிமுதல் 8–5 வரையில் இத்தருமை ஆதீனத்து 25 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமண்யதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள், தரிசனார்த்தமாகவந்த எழுத்தாளர் பலர்க்குக் காட்சிகொடுத்து, செவியறிவுறுத்தி யருளியவற்றுள், இடையில் இத்திருப்பாடலை எடுத்துக்காட்டி, நயம்பல கூறிய போது, அடியேம் மெய்ம்மறந்து உருகினின்றேம். 'ஆசைதீரக் கொடுப்பார்' என்றதற்குக் கூறிய நயம், அக்குருநாதர் திருக்கை வழங்கப்பெற்ற அடியேங்களுக்கு அநுபவப் பொருளாயிருந்தது.

செற்றவரக்க னலறத் திகழ்சேவடிமேல் விரலாற்
கற்குன்றடர்த்த பெருமான் கடவூர்மயான மமர்ந்தார்
மற்றொன்றிணையில் வலிய மாசில் வெள்ளி மலைபோல்
பெற்றொன்றேறி வருவா ரவரெம்பெருமா னடிகளே. 8

வருமாகரியி னுரியார் வளர்புன்சடையார் விடையார்
கருமானுரிதோ லுடையார் கடவூர்மயான மமர்ந்தார்
திருமாலொடுநான் முகனுந் தேர்ந்துங்காணமுன் னொண்ணுப்
பெருமானெனவும் வருவா ரவரெம்பெருமா னடிகளே. 9

தூயவிடைமேல் வருவார் துன்னாருடைய மதில்கள்
காயவேவச் செற்றார் கடவூர்மயான மமர்ந்தார்
தீயகருமஞ் சொல்லுஞ் சிறுபுன்றேர ரமணர்
பேய்பேயென்ன வருவா ரவரெம்பெருமா னடிகளே. 10

---

*8. செற்ற - கோபத்தையுடைய. கற்குன்று - கயிலைமலை. மற்று ஒன்று இணை இல்லாத வலிய மாசு (- குற்றம்) இல்லாத வெள்ளிமலைபோலும் பெற்று (-எருது) ஒன்று ஏறிவருவார் என்க. பெற்றம் - பெற்று என்று நின்றது.*

*9. மான் உரிதோல் - மானை உரித்த தோல் 'மானினது உரியாகிய தோல்' எனலுமாம். முன்னது வினைத்தொகை. பின்னது பண்புத்தொகையாதல் உரித்தோல் என்று நிற்புழி. ஒண்ணு - ஒன்றாத. மரூஉ. கன்று - கண்ணு, மூன்று - மூணு முதலியவைபோல.*

*10. துன்னார் - பகைவர். செற்றார் - கோபித்தார். தீய கருமம் - கெட்ட செயல்கள். இறையை, 'பேய் பேய்' என்பார் தேரரும் அமணரும், சிறுமை புன்மை இரண்டும் பொது அடை. தீயகருமஞ்செய்தல் சிறுமை. சொல்லுதல் புன்மை 'சிறுமை யுறுபசெய்பறியலரே' (நற்றிணை, 1.)*

மரவம்பொழில்சூழ் கடலூர் மன்னுமயான மமர்ந்த
அரவமசைத்த பெருமா னகலமறிய லாகப்
பரவுமுறையே பயிலும் பந்தன்செஞ்சொன் மாலை
இரவும்பகலும் பரவி நினைவார்வினைக ளிலரே. 11

திருச்சிற்றம்பலம்

---

**11.** மரவம் - குங்குமமரம். அசைத்த - கட்டிய. அகலம் - வியாபகம். அறியல் ஆக - அறிவது இசையும்படி. பரவுமுறையே பயிலுதல் ஆசிரியர்க்கே இருந்ததெனின், நம்மனோர்க்கு அதன் இன்றியமையாமை கூறல்வேண்டுமோ?.

---

நிதியுறு வார்அறன் இன்பம்வீ டெய்துவர்
என்னவேதந்
துதியுறு நீள்வயற் காழியர் கோனைத்
தொழார்இனைய
நதியுறு நீர்தெளித் தஞ்சல் எனஅண்ணல்
அன்றோஎன
மதியுறு வாள்நுதல் பாதம் பணிந்தனள்
மன்னனையே. —அந்தாதி 69

மன்னங் கனைசெந் தமிழா கரன்வெற்பில்
வந்தொருவர்
அன்னங்கள் அஞ்சன்மின் என்றடர் வேழத்
திடைவிலங்கிப்
பொன்னங் கலைசா வகைஎடுத் தாற்கிவள்
பூண்அமுந்தி
இன்னந் தமும்புள வாம்பெரும் பாலும்அவ்
வேந்தலுக்கே. —அந்தாதி 70

# 81 திருவேணுபுரம்

## 217 பதிகவரலாறு

137-ம் பதிகத் தலைப்பிற்காண்க.

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

பூதத்தின் படையினீர் பூங்கொன்றைத் தாரினீர்
ஓதத்தி னொலியொடு மும்பர்வா னவர்புகுந்து
வேதத்தி னிசைபாடி விரைமலர்கள் சொரிந்தேத்தும்
பாதத்தீர் வேணுபுரம் பதியாகக் கொண்டீரே. 1

---

1. பூதகணங்களை உடையீர், கொன்றைப்பூ மாலையை அணிந்தீர். கடல் முழக்கத்தொடும் உம்பரும் வானவரும் உட்புகுந்து வேதமுழக்கஞ்செய்து மணமலர்களைத் தூவி வழி படும் திருவடியை உடையீர். வேணுபுரத்தைத் திருப்பதியாகக் கொண்டு எழுந்தருளியிருக்கின்றீர், பூதகணம், கொன்றைப் பூமாலை சிவபிரானுக்குள்ளவை. வேணுபுரம் கடலிடத்த தாகலின் ஓதத்தின் ஒலியொடும் வேதத்தின் இசைபாடி எனப் பட்டது. 'உம்பர், வானவர்' உம்பரும் வானவரும். உம்மைத் தொகை. 'உம்பரும் வானவரும் உடனே நிற்கவே எனக்குச் செம்பொனைத் தந்தருளி, 7. 25. 2. 'ஏரொளியை இருநிலனும் விசும்பும் விண்ணும் எழுலகுங் கடந்தண்டத் தப்பால்நின்ற பேரொளியைப் பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாள் எல்லாம் பிறவாநாளே' 6 - 1 - 10. 'அண்டர் வாழ்வும் அமரர் இருக்கையும் கண்டு வீற்றிருக்கும் கருத்து ஒன்றிலோம்' 5 - 39 - 3. 'மண்ணினூர் ஏத்த வானுளார் பரச அந்தரத்து அமரர்கள் போற்றப் பண்ணினூர் எல்லாம்' 3 - 118 - 4. 'தாரன்மாலையன் தண்ணறுங்கண்ணியன்' 5. 12. 7. என்பதால் இருபாலும் ஒவ்வொரு பூவைத்துத் தொடுக்கும் தார், ஒருபால் காம்பும் ஒருபால் மலரும் அமையத்தொடுக்கும் கண்ணிக்கும், பன்மலர் மாலைக்கும் வேறுபட்டது எனல் விளங்கும். ஓதம் . கடல்.

சுடுகாடு மேவினீர் துன்னம்பெய் கோவணந்தோல்
உடையாடை யதுகொண்டீ ருமையாளை யொருபாகம்
அடையாள மதுகொண்டீ ரங்கையினிற் பரசுவெனும்
படையாள்வீர் வேணுபுரம் பதியாகக் கொண்டீரே. 2

கங்கைசேர் சடைமுடியீர் காலனைமுன் செற்றுகந்தீர்
திங்களோ டிளவரவந் திகழ்சென்னி வைத்துகந்தீர்
மங்கையோர் கூறுடையீர் மறையோர்க ணிறைந்தேத்தப்
பங்கயஞ்சேர் வேணுபுரம் பதியாகக் கொண்டீரே 3

நீர்கொண்ட சடைமுடிமே னீண்மதியம் பாம்பினொடும்
ஏர்கொண்ட கொன்றையினோ டெழின்மத்த மிலங்கவே
சீர்கொண்ட மாளிகைமேற் சேயிழையார் வாழ்த்துரைப்பக்
கார்கொண்ட வேணுபுரம் பதியாகக் கலந்தீரே. 4

ஆலைசேர் தண்கழனி யழகாக நறவுண்டு
சோலைசேர் வண்டினங்க ளிசைபாடத் தூமொழியார்
காலையே புகுந்திறைஞ்சிக் கைதொழமெய் மாதினொடும்
பாலையாழ் வேணுபுரம் பதியாகக் கொண்டீரே. 5

---

2. துன்னம் - துளைத்தல், தைத்தல். கோவணம் தோல் உடையாடை:- 'புலியதள் கோவணங்களுடை யாடையாக உடையான்' பதி - 219-பா. 6. அங்கை - அகங்கை, உள்ளங்கை, அழகிய கையும் ஆம். பரசு எனும் படை - மழு என்னும் ஆயுதம்.

3. செற்று - அழித்து. அரவம் - பாம்பு. சென்னி - தலை. பங்கயம் - தாமரை.

4. நீர் - கங்கைநீர். அபிடேக நீரும் ஆம். மதியம் - பிறை. மத்தம் - ஊமத்தை. மாளிகை - நகரிலுள்ள உயரிய வீடுகளும் தோணியப்பர் மலைக்கோயிலும் ஆம். கார்கொண்ட வேணுபுரம் என்றதனால் மூங்கிலின் உயர்ச்சி விளங்கும்.

5. ஆலை-கரும்பாலை, கரும்பு. நறவு - தேன். தூ-தூய்மை. 'காலையே ... ... கைதொழ' :- என்றதால் பண்டு மகளிர் நாள் தோறும் காலையில் தவறாமல் கோயிலுக்குச் சென்று வழிபட்ட உண்மை புலப்படுகின்றது. பாலையாழ்:- நாற்பெரும் பண்ணுள்

மணிமல்கு மால்வரைமேன் மாதிரெடு மகிழ்ந்திருந்தீர்
துணிமல்கு கோவணத்தீர் சுடுகாட்டி லாட்டுகந்தீர்
பணிமல்கு மறையோர்கள் பரிந்திறைஞ்ச வேணுபுரத்
தணிமல்கு கோயிலே கோயிலாக வமர்ந்தீரே. 6

நீலஞ்சேர் மிடற்றினீர் நீண்டசெஞ் சடையினீர்
கோலஞ்சேர் விடையினீர் கொடுங்காலன் றனைச்செற்றீர்
ஆலஞ்சேர் கழனியழகார்வேணு புரமமருங்
கோலஞ்சேர் கோயிலே கோயிலாக்கொண்டீரே 7

இரைமண்டிச் சங்கேறுங் கடல்சூழ்தென் னிலங்கையர்கோன்
விரைமண்டு முடிநெரிய விரல்வைத்தீர் வரைதன்னிற்
கரைமண்டிப் பேரோதங் கலந்தெற்றுங் கடற்கவினார்
விரைமண்டு வேணுபுர மேயமர்ந்து மிக்கீரே. 8

தீயோம்பு மறைவாணர்க் காதியாந் திசைமுகன்மால்
போயோங்கி யிழிந்தாரும் போற்றரிய திருவடியீர்
பாயோங்கு மரக்கலங்கள் படுதிரையான் மொத்துண்டு
சேயோங்கு வேணுபுரஞ் செழும்பதியாத் திகழ்ந்தீரே. 9

---

ஒன்று, பாலையாழ். 'அராகம் நோக்கிறம் உறுப்புக் குறுங்கலி ஆசான் ஐந்தும் பாலையாழ்த்திறனே' என்பது பிங்கலந்தை 1381. பார்க்க. நோக்கிறத்தின் மறுதலை செந்திறம். 'கைக்கிளை செந்திறம் பெருந்திணை நோக்கிறம்' தொல். அகத். 55. உரை இளம்பூரணம்.

6. 'மணிமல்கு.........இருந்தீர்' தோணிபுரம் எனப்படும் மலைக்கோயிலில் அம்மையப்பராக வீற்றிருந்தீர். அக்கோயில் 'நாலைந்து புள்ளினம் ஏந்தின' 4-82-1. அமைப்புடையது. துணி - துண்டு. ஆட்டு - கூத்து. பரிந்து - அன்புகொண்டு.

7. நீலஞ்சேர் மிடற்றினீர் - திருநீலகண்டத்தீர். கோலம் - அழகு. ஆலம் - நீர், கலப்பையும் ஆம். கோலம் - வளைவு.

8. மண்டி - மேற்சென்று, நெருங்கியும் ஆம். விரை - நறுமணம். கவின் - அழகு. ஓதம் - நீர். எற்றும் - மோதும்.

9. தீயோம்பு........முகன்:- பிராமணர்க்கு முதல்வன் பிரமன் என்னும் உண்மை உணர்த்தப்பட்டது. மால்- திருமால்.

நிலையார்ந்த வுண்டியினர் நெடுங்குண்டர் சாக்கியர்கள்
புலையாணு ரறவுரையைப் போற்ருதுன் பொன்னடியே
நிலையாகப் பேணீநீ சரணென்ருர் தமையென்றும்
விலையாக வாட்கொண்டு வேணுபுரம் விரும்பினையே. 10

* * * 11

திருச்சிற்றம்பலம்

---

ஓங்குதல் - பிரமன் செயல். இழிதல் - மால்வினை. போற்ற அரிய திருவடி எனத் திருவடிச்சிறப்பு உணர்த்தப்பட்டது. பாய் ......வேணுபுரம்:- பண்டு சீகாழியில் மரக்கலங்கள் (கடற் றுறையுள்) இருந்தமை தெளிவாகும். சேய்...புரம்:- விண்ணில் ஓங்கிய உயர்ச்சியைக் குறிப்பது.

10. நிலையார்ந்த உண்டியினர் - நின்று உண்பவர். அடுத்த பதிகத்தில் ஒவ்வொரு பாட்டிலும் ஈற்றில் அருளிய திறத்தை நோக்கினுல் உன்பொன்னடியே நிலையாகப்பேணி நீ(யே) சரண் என்ருரை, என்றும் விலையாக ஆட்கொள்ளும் திறம் வாய்மை யாதல் விளங்கும்.

---

ஏந்தும் உலகுறு வீர்எழில் நீலநக்
  கற்கும்இன்பப்
பூந்தண் புகலூர் முருகற்கும் தோழனைப்
  போகமார்ப்பைக்
காந்தும் கனலிற் குளிர்படுத் துக்கடற்
  கூடலின்வாய்
வேந்தின் துயர்தவிர்த் தானை எப் போதும்
  விரும்புமினே. —அந்தாதி 71

# 82 திருத்தேவூர்

## 218 பதிகவரலாறு

திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசரோடும் திருவாரூர் முதலிய தலங்களை வழிபட்ட காலத்து இத் திருத்தேவூரை அணைந்து பாடியருளியதும் முற்பதிகத்தின் ஈற்றில் அருளிய வாறே தமது சிவபக்தியின் உறைப்பை இதன்கண் ஒவ்வொரு திருப்பாட்டின் ஈற்றிலும் விளங்கவைத்துப் பாடியருளிச், சைவர் எல்லோரும் சிவபெருமான் திருவடியே சேரப்பெறுமா றுணர்த்துவதும் ஆகும் இத்திருப்பதிகம்.

### பண் - காந்தாரம்

### திருச்சிற்றம்பலம்

பண்ணி லாவிய மொழியுமை பங்கனெம் பெருமான்
விண்ணில் வானவர் கோன்விம லன்விடை யூர்தி
தெண்ணி லாமதி தவழ்தரு மாளிகைத் தேவூர்
அண்ணல் சேவடி யடைந்தன மல்லலொன் றிலமே. 1

ஓதி மண்டலத் தோர்முழு துய்யவெற் பேறு
சோதி வானவன் றுதிசெய மகிழ்ந்தவன் றூநீர்த்
தீதில் பங்கயந் தெரிவையர் முகமலர் தேவூர்
ஆதி சேவடி யடைந்தன மல்லலொன் றிலமே. 2

---

1. 'பண்ணிலாவிய மொழியுமைபங்கன்' என்றதில், இத் தலத்தின் தேவிக்கு வழங்கிய திருப்பெயர் குறிக்கப்பட்டுள்ளது. இதைப் பின்னோர் 'மதுரபாடணியம்மை' என்று மாற்றினர். விண்ணில் வானவர் என்பது தேவகணம் எல்லாவற்றையும் குறித்தது. கோன் - சிவபெருமான். விமலன் - மலரகிதன். விடையூர்தி - எருதூர்பவன். தெள்நிலா - தெளிந்த நிலவுடைய. மதி - பூரணசந்திரன், பிறையுமாம். அண்ணல் - பெரியோன், சிவன். அடைந்தது காரணம். அல்லல் இன்மை காரியம். அல்லல் - பிறவித்துன்பம். பிறப்பில் எய்தும் துன்பம் எனலும் பொருந்தும். ஒன்று இலம் - ஒன்றும் இல்லேம். சிறிதும் இல்லேம் எனலுமாம்.

2. மண்தலத்தோர் ஓதி முழுது உய்ய - மண்ணிடத்து வாழும் மக்கள் திருப்புகழ்களை ஓதிப்பூரணமான உய்வைப்

மறைக ளான்மிக வழிபடு மாணியைக் கொல்வான்
கறுவு கொண்டவக் காலனைக் காய்ந்தவெங் கடவுள்
செறுவில் வாளைகள் சேலவை பெருவயற் றேவூர்
அறவன் சேவடி யடைந்தன மல்லலொன் றிலமே. 3

முத்தன் சில்பலிக் கூர்தொறு முறைமுறை திரியும்
பித்தன் செஞ்சடைப் பிஞ்ஞகன் றன்னடி யார்கள்
சித்தன் மாளிகை செழுமதி தவழ்பொழிற் றேவூர்
அத்தன் சேவடி யடைந்தன மல்லலொன் றிலமே. 4

பாடு வாரிசை பல்பொருட் பயனுகந் தன்பால்
கூடு வார்துணைக் கொண்டதம் பற்றறப் பற்றித்
தேடு வார்பொரு ளானவன் செறிபொழிற் றேவூர்
ஆடு வானடி யடைந்தன மல்லலொன் றிலமே. 5

---

பெற. வெற்பு ஏறு சோதிவானவன் - உதயகிரியில் ஏறி ஒளிர்கின்ற சூரியதேவன். துதிசெய - வழிபட. மகிழ்ந்தவன் - உவந்து அருள்புரிந்த சிவபிரான், தேவூரில், நீரில், குற்றம் இல்லாத தாமரைப்பூக்கள் மகளிருடைய முகம் போலப் பூக்கும் என்பது நீர் நிலவளம் உணர்த்திற்று. தேவூர் ஆதி - தேவூரில் கோயில் கொண்டெழுந்தருளிய முதல்வன்.

3. மாணி - பிரமசாரி. மார்க்கண்டேயர். கறுவு - கோபம். எம்கடவுள். செறுவில் - சேற்றில். பொரு - போர்செய்கின்ற. அறவன் - தருமரூபி. சிவபிரான், 'அறவாழியந்தணன்' (குறள்).

4. முத்தன் - அநாதிமுத்தன், இயல்பாகவே பாசங்கள் இல்லாதவன். எண்குணத்துள் ஒன்று. சடைப்பிஞ்ஞகன் - மயிர்முடியினன். தன் அடியார்கள் சித்தன் - தன் அடியை வழிபடுவோரது சித்தத்தில் இருபபன். சித்தன்:- அறிவுக்கறிவாயிருப்பவன் என்றலும் அமையும். 'மதிதவழ்பொழில்' சோலையின் உயர்ச்சியைக் குறித்தது.

5. பாடுவாரும் கூடுவாரும் தேடுவாருமான அடியார் கட்குப்பேறுயுள்ள பொருளானவன் தேவூர்த் திருக்கூத்தன் என்றவாறு. இசைபாடுவார். சிவபிரானைத் துணையாக்கொண்டவர்கள், தங்கள் பற்றுக்கள் எல்லாம் அற்றொழிய அச்சிவபிரானையே பற்றாகப் பற்றித் தேடுவார்கள். அவர்களுக்கு

பொங்கு பூண்முலைப் புரிகுழல் வரிவளைப் பொருப்பின்
மங்கை பங்கினன் கங்கையை வளர்சடை வைத்தான்
திங்கள் சூடிய தீநிறக் கடவுடென் றேவூர்
அங்க ணன்றனை யடைந்தன மல்லலொன் றிலமே. 6

வன்பு யத்தவத் தானவர் புரங்களை யெரியத்
தன்பு யத்துறத் தடவரை வளைத்தவன் றக்க
தென்ற மிழ்க்கலை தெரிந்தவர் பொருந்திய தேவூர்
அன்பன் சேவடி யடைந்தன மல்லலொன் றிலமே. 7

தருவு யர்ந்தவெற் பெடுத்தவத் தசமுக னெரிந்து
வெருவ வூன்றிய திருவிர னெகிழ்த்துவாள் பணித்தான்
தெருவு தோறுநற் றென்றல்வந் துலவிய தேவூர்
அரவு சூடியை யடைந்தன மல்லலொன் றிலமே. 8

---

அவனன்றி வேறு பொருள் இல்லையாதலின், 'தேடுவார் பொருளானவன்' என்றார். துணையாகக்கொண்ட தமது பற்று அற எனலுமாம், முன்துணையெனப்பற்றப்பட்டது பின் பொய்யாய்த் தோன்ற, மெய்த்துணை உயிர்த்துணையாகிய சிவபிரானே எனல் விளங்கும். விளங்கின் அதையே பற்றுதலும் தேடுதலும் நிகழும். 'ஆடுவான்' என்றது எல்லாத் தலங்களிலும் ஒரு ஞானக்கூத்தனே எழுந்தருளியிருக்கும் உண்மை பற்றியது, இச்சித்தாந்தவுண்மை யுணராமல் உரைப்பவை பொருந்தா. பதிகம், 152. பா. 1. பார்க்க.

6. பூண் - ஆபரணம். குழல் - கூந்தல். பொருப்பின் மங்கை - இமாசலகுமாரி. தீநிறக்கடவுள் - அழல்வண்ணனாகிய சிவபிரான். அங்கணன் - கருணாகடாக்ஷன். 'கண்ணுக்கு அழகு கருணை'

7. வல்புயத்த அத் தானவர் - வலிய புஜங்களையுடைய அந்த அசுரர். அ - பண்டறிசுட்டும் உலகறி சுட்டுமாம். புயத்து அவம் எனப்பிரித்துரைத்தலும் அமையும். வரை - மேருமலை. தேவூரில் தமிழ்ப்புலவர் இருந்த உண்மை உணர்த்தப்பட்டது. அன்பன் - 'அன்பே சிவம்'.

8. தசமுகன் - இராவணன். தேவூர்த்தெருக்களின் நலம் கூறப்பட்டது. சூடி - அணிந்த சிவன்.

முந்திக் கண்ணனு நான்முக னும்மவர் காணா
எந்தை திண்டிற லிருங்களி றுரித்தவெம் பெருமான்
செந்தி னத்திசை யறுபத முரறிருந் தேவூர்
அந்தி வண்ணனை யடைந்தன மல்லலொன் றிலமே. 9

பாறு புத்தருந் தவமணி சமணரும் பலநாள்
கூறி வைத்ததோர் குறியினைப் பிழையெனக் கொண்டு
தேறி மிக்கநஞ் செஞ்சடைக் கடவுடென் றேவூர்
ஆறு சூடியை யடைந்தன மல்லலொன் றிலமே. 10

அல்ல லின்றிவிண் ணுள்வர்கள் காழியர்க் கதிபன்
நல்ல செந்தமிழ் வல்லவன் ஞானசம் பந்தன்
எல்லை யில்புகழ் மல்கிய வெழில்வளர் தேவூர்த்
தொல்லை நம்பனைச் சொல்லிய பத்தும்வல் லாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

9. களிற்றிற்குத் திண்மையும் திறலும் இருமையும் அடைகளாயின. செந்து - பெரும்பண்களுள் ஒன்று. 'செந்து மண்டலி' பிங்கலந்தை. செந்து இனத்து இசை - செந்து என்னும் பண்வகையைச் சார்ந்த இசையை. 'செந்திலங்கு மொழியவர்' (2. 3. 10) 'செந்துநேர்மொழியார்' (2. 51. 11) 'நல்ல செந்திசை பாடல்' (1. 114. 11). அறுபதம் - வண்டு. முரல் - ஒலிக்கும், 'திருத்தேவூர்' என்று ஆசிரியரே சிவதலங்களை வழங்குமாறு உபதேசித்தருளியவாறுணர்க.

10. பாறுபுத்தர் - ஓடுகின்ற புத்தர்கள். பாறல் - ஓடுதல். தவம் அணி - தவக்கோலம் அணிந்த. குறி:- 'குண்டர் சாக்கியர் கூறியதாம் குறியின்மையே சொலீர்' (பதிகம். 137. பா. 10). தேறி - தெளிந்து.

11. அல்லல் இன்றி விண்ணுள்வர்கள் வல்லார் என்க. முற்பாக்களில் 'யாம் அல்லல் ஒன்று இலம்' என்றருளி, இதில், இப்பத்தும் வல்லார் அல்லல் இலராவர் என்ற உண்மை உணர்த்தப்பட்டது. இத் திருப்பதிகத்தை நாடோறும் நியமமாகப் பாராயணம் செய்பவர் அல்லல் அடையார் என்பது திண்ணம். அதிபன் - தலைவன்.

# 83 திருக்கொச்சைவயம்

## 219 பதிகவரலாறு

*137-ஆவது தலைப்பிற்காண்க.*

**பண் - பியந்தைக்காந்தாரம்**

**திருச்சிற்றம்பலம்**

நீலநன்மாமிடற்ற னிறைவன்சினத்த
நெடுமாவுரித்தநிகரில்
சேலன்கண்ணிவண்ண மொருகூறுருக்கொ
டிகழ்தேவன்மேவுபதிதான்
வேலனகண்ணிமார்கள் விளையாடுமோசை
விழவோசைவேதவொலியின்
சாலநல்வேலையோசை தருமாடவீதி
கொடியாடுகொச்சைவயமே.

விடையுடையப்பனொப்பி னடமாடவல்ல
விகிர்தத்துருக்கொள்விமலன்
சடையிடைவெள்ளெருக்க மலர்கங்கைதிங்க
டகவைத்தசோதிபதிதான்
மடையிடையன்னமெங்கு நிறையப்பரந்து
கமலத்துவைகும்வயல்சூழ்
கொடையுடைவண்கையாளர் மறையோர்களென்றும்
வளர்கின்ற கொச்சைவயமே. 2

---

*1. நீலநன்மாமிடற்றன் - திருநீலகண்டத்தர். சினத்த - கோபத்தை உடைய. மா - யானை. சேல் அன்ன கண்ணி - சேல் மீன்போன்ற கண்களையுடைய உமாதேவியார். கூறு - பாகம். உருகொள் திகழ்தேவன் என்க. கண்ணுக்கு வேல் ஒப்பு. மகளிர் விளையாட்டோசையும், விழாவினோசையும், வேத முழக்கமும், கடலோசையும் உடைய வீதிகள், பதிதான் கொச்சைவயம் என்க. முதல் 9. பாக்கட்கும் இவ்வாறே கொள்க.*

*2. ஒப்பு இல் நடம் - உவமை இல்லாத ஞானத்திருக் கூத்து. விகிர்தம் - மாறுபாடு (பா. 10.) சடையிடை,*

படவரவாடுமுன்கை யுடையானிடும்பை
களைவிக்குமெங்கள்பரமன்
இடமுடைவெண்டலைக்கை பலிகொள்ளுமின்ப
னிடமாயவேர்கொள்பதிதான்
நடமிடமஞ்ஞைவண்டு மதுவுண்டுபாடு
நளிர்சோலைகோலுகனகக்
குடமிடுகூடமேறி வளர்பூவைநல்ல
மறையோதுகொச்சைவயமே. 3

எண்டிசைபாலரெங்கு மிகலிப்புகுந்து
முயல்வுற்றசிந்தை முடுகிப்
பண்டொளிதீபமாலை யிடுதூபமோடு
பணிவுற்றபாதர்பதிதான்
மண்டியவண்டன்மிண்டி வருநீரபொன்னி
வயல்பாயவாளை குழுமிக்
குண்டகழ்பாயுமோசை படைநீடதென்ன
வளர்கின்றகொச்சைவயமே. 4

---

வெள்ளெருக்கமலர்:- 'வெள்ளெருக்கஞ் சடைமுடியான் வெற்பு' (கம்பர், யுத்தகாண், இராவணன் வதைப். 239). தக - தகுமாறு; பொருந்த. சோதிபதி:- ஆறன்றெகை, அன்னம்பரந்து கமலத்து வைகும் வயல். கொடையுடை வண்கையாளர்:- 'கொடையில் ஓவார் குலமும் உயர்ந்தம் மறையோர்கள்' 2. 122. 1 'உரவார் கலையின் கவிதைப் புலவர்க்கு ஒருநாளும் கரவாவண்கைக் கற்றவர் சேரும் கலிக்காழி, 1. 102. 1.

3. மஞ்ஞை - மயில். மயில் ஆட வண்டு பாடும். நளிர் - குளிர்ச்சி. கூடத்தின் மிசைக் குடம் இடுதல் முன்பே இருந்தது. பூவை - நாகணவாய்ப்புள், கூடம் ஏறி மறை ஓதும் கொச்சை வயம் என்க,

4. பாலர் - பாலகர். இகலி - பகைத்து. வழிபடு முறையுட்சிறிது உணர்த்திற்று. ஒளி தீபமாலை - தீபாவளி. பாதர் - திருவடியுடையவர். குண்டு - ஆழம்.

பனிவளர்மாமலைக்கு மருகன்குபேர
னொடுதோழமைக்கொள்பகவன்
இனியவைவல்லவற்றை யினிதாகநல்கு
மிறைவன்னிடங்கொள்பதிதான்
முனிவர்களொடொக்குமிக்க மறையோர்களோமம்
வளர்தூமமோடியணவிக்
குனிமதிமூடிநீடு முயர்வான்மறைத்து
நிறைகின்றகொச்சைவயமே. 5

புலியதள்கோவணங்க ளுடையாடையாக
வுடையானினைக்குமளவில்
நலிதருமுப்புரங்க ளெரிசெய்தநாத
னலமாவிருந்தநகர்தான்
கலிகெடவந்தணாளர் கலைமேவுசிந்தை
யுடையார்நிறைந்துவளரப்
பொலிதருமண்டபங்க ளுயர்மாடநீடு
வரைமேவுகொச்சைவயமே. 6

* * 7

மழைமுகில்போலுமேனி யடல்வாளரக்கன்
முடியோடுதோள்களெரியப்
பிலமுகெடமாமலர்ப்பொன் னடிவைத்தபேயொ
டுடனடிமேயபதிதான்

---

5. பனி......மலைக்கு - இமாசலராசனுக்கு. குபேரன் சிவபிரானுக்குத் தோழனாதல் பிரசித்தம். இனிக்காதவற்றை யும் இனியவாகச் செய்தருளும் பெருமான். பிறப்பு இன்னாதது என்பது சர்வமதசம்மதம். அதனை இனியதாகப் பலவுயிரும் விரும்புகின்றன. அவ்விருப்பம் மீண்டும் பிறப்பதற்கு உரிய வினையாகின்றது. இது திருவருட் செயல். அணவி - கிட்டி. 'வேள்விப்புகையால் வானம் இருள்கூர் வெண்காடே' பதி. 197. பா. 7.

6. அதள் - தோல். உடையாடை:- பதி. 217:- 2. கலி வறுமை. அந்தணாளர் - அழகும் தண்மையும் ஆள்பவர். கலை - வேத முதலிய கலைகள்.

இழைவளரல்குன்மாத ரிசைபாடியாட
விடுமுசலன்னகமுகின்
குழைதருகண்ணிவிண்ணில் வருவார்கடங்க
ளடிதேடுகொச்சைவயமே. 8

வண்டமர்பங்கயத்து வளர்வானும்வைய
முழுதுண்டமாலுமிகலிக்
கண்டிடவொண்ணுமென்று கிளறிப்பறந்து
மறியாதசோதிபதிதான்
நண்டுணநாரைசெந்நெ னடுவேயிருந்து
விரைதேரபோதுமதுவிற்
புண்டரிகங்களோடு குமுதம்மலர்ந்து
வயன்மேவுகொச்சைவயமே 9

கையினிலுண்டுமேனி யுதிர்மாசர்குண்ட
ரிடுசீவரத்தினுடையார்
மெய்யுரையாதவண்ணம் விளையாடவல்ல
விகிர்தத்துருக்கொள்விமலன்
பையுடைநாகவாயி லெயிற்றுரமிக்க
குரவம்பயின்றுமலரச்
செய்யினினீலமொட்டு விரியக்கமழ்ந்து
மணநாறுகொச்சைவயமே. 10

---

**8.** மழை முகில் - மழையைப் பொழியும் மேகம். அரக்கன் - இராவணன். இராவண்ணன் என்றவாறு. பிழை - மதியாது மலையெடுத்த குற்றம். இழை - மேகலை முதலியன. கண்ணி - வலை, புட்களைப் படுக்கும் முடிப்புக்கயிறுமாம். கமுகின்குழை (- தளிர்) தருகண்ணி, விண்ணில் வருவோர் காலைச்சிக்கச் செய்யும் என்றதால், அதன் உயர்ச்சிகூறிற்று.

**9.** வளர்வான் - பிரமன். மால் கிளறி, வளர்வான் பறந்தும், நண்டு உண்ண, நாரை இரையைத் தேர (-ஆராய). புண்டரிகம் - தாமரை. குமுதம் - ஆம்பல்.

**10.** மாசர் - அழுக்கர். புறப்புறச்சமயத்தார்க்குச் சமயாதீதனை பரசிவத்தின் மெய் புலப்படாமை கூறிற்று. எயிறு - பல். பயின்று - மிகுதியாய். செய் - கழனி. (மொட்டு - அரும்பு). கமழ்ந்து - பரந்து. வியலிடம் கமழ் (புற நா. 50.)

இறைவனையொப்பிலாத வொளிமேனியானை
யுலகங்களேழுமுடனே
மறைதருவெள்ளமேவி வளர்கோயின்மன்னி
யினிதா விருந்தமணியைக்
குறைவிலஞானமேவு குளிர்பந்தன்வைத்த
தமிழ்மாலைபாடுமவர்போய்
அறைகழலீசனாளு நகர்மேவியென்று
மழகாவிருப்பதறிவே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. ஒப்பு இலாத ஒளி மேனியான் - உவமையில்லாத பிரகாசத்தையுடைய திருமேனியை உடையவன். 'அங்கு இங்கு என்னாதபடி எங்கும் பிரகாசமாய்' (தாயுமானவர். 1.) விளங்குவது வேறொன்றில்லாமையால் ஒப்பின்மை தெளிவாம். மறைக்கும் வெள்ளம் ஊழிப்பிரளயம்.

---

விரும்பும் புதல்வனை மெய்யரிந் தாக்கிய
இன்னமிர்தம்
அரும்பும் புனற்சடை யாய்உண் டருள் என்
றடிபணிந்த
விரும்பின் சுடர்க்களிற் றான்சிறுத் தொண்டனை
ஏத்துதிரேல்
சுரும்பின் மலர்த் தமிழாகரன் பாதத்
தொடர்வெளிதே. —அந்தாதி 72

எளிவந்த வாளழிற் பூவாரை ஞாண்மணத்
தார்சழுங்கத்
துளிவந்த கண்பிசைந் தேங்கலும் எங்கள்
அரன் துணையாங்
கிளிவந்த சொல்லிபொற் கிண்ணத்தின் ஞான
அமிர்தளித்த
அளிவந்த பூங்குஞ்சி இன்சொற் சிறுக்கன்ற
னூர்அருளே. —அந்தாதி 73

# 84 திருநனிபள்ளி

## 220 பதிகவரலாறு

திருஞானசம்பந்தர் திருவருள்பெற்றுச் சீகாழியில் எழுந்தருளியுள்ள உண்மையைக் கேட்டறிந்தனர். உலகோர் பலர் 'தாவில் சராசரங்களெல்லாம் சிவம் பெருக்கும் பிள்ளையாரை' மணிவயிற்றில் உலகுய்ய வைத்து வழங்கிய பகவதியார் திரு அவதாரம்செய்த தலமாகிய திருநனிபள்ளியின் மறையவரும் அதைக் கேட்டுணர்ந்தனர். அதன்பின் சீகாழியை அடைந்தனர். ஆளுடை பிள்ளையார் அடிமலர் வணங்கினர். தாம் வாழும் திருப்பதிக்கு எழுந்தருளும்படி வேண்டினர் நாயனாரும் அதற்கு இசைந்து புறப்பட்டுத் திருநனிபள்ளியை அணுகினார். எதிரே தோன்றும் இத்திருப்பதி யாது? என்று வினவினார். அவரை யருளிய சிவபாதவிருதயர் அதுதான் திருநனிபள்ளி என்றனர். அதுகேட்ட ஞானப்பிள்ளையார் இத்திருப்பதிகத்தைப் பாடி, அத்தலத்தை அடைந்து திருக்கோவிலினுட்புகுந்து வழிபட்டார், இத்திருப்பதிகமே பாலையாயிருந்த அத்திரு நனிபள்ளியை நெய்தலாக்கிற்று என்பர் பெரியோர். ''ஒண்கெழுவு ஞாலத்தினரறிய மன்னு நனிபள்ளியது, பாலைதனை நெய்தலாக்கியும்'' என நம்பியாண்டார் நம்பிகள் அருளிய திருஉலா மாலையிலும் "ஓடஞ் சிவிகை உலவாக்கிழியடைக்கப், பாடல் பனைதாளம் பாலை நெய்தல்'' எனத் திருக்களிற்றுப்படியாரிலும் (70) உள்ளமை அறிக.

பண் - பியந்தைக்காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

காரைகள்கூகைமுல்லை களவாகையீகை
 படர்தொடரிகள்ளிகவினிச்
சூரைகள்பம்மிவிம்மு சுடுகாடமர்ந்த
 சிவன்மேயசோலை நகர்தான்

தேரைகளாரைசாய மிதிகொள்ளவாளை
குதிகொள்ளவள்ளை துவள
நாரைகளாரல்வாரி வயன்மேதிவைகு
நனிபள்ளிபோலுநமர்காள். 1

சடையிடைபுக்கொடுங்கி யுளதங்குவெள்ளம்
வளர்திங்கள்கண்ணியயலே
இடையிடைவைத்ததொக்கு மலர்தொத்துமாலை
யிறைவன்னிடங்கொள்பதிதான்
மடையிடைவாளைபாய முகிழ்வாய்நெரிந்து
மணநாறுநீலமலரும்
நடையுடையன்னம்வைகு புனலம்படப்பை
நனிபள்ளிபோலுநமர்காள். 2

பெறுமலர்கொண்டுதொண்டர் வழிபாடுசெய்ய
லொழிபாடிலாதபெருமான்
கறுமலர்கண்டமாக விடமுண்டகாளை
யிடமாயகாதனகர்தான்
வெறுமலர்தொட்டுவிட்ட விசைபோனகொம்பின்
விடுபோதலர்ந்தவிரைசூழ்
நறுமலரல்லிபுல்லி யொலிவண்டுறங்கு
நனிபள்ளிபோலுநமர்காள். 3

---

1. காரைமுதலிய தாவரங்கள் சுடுகாட்டில் மிக்குள்ளன. 'முட்காற்காரை' புறம். 258. கள - களா. 'கருவையிலும் சிங்கையிலும் களவாண்டான்'. (தனிப்பாடல்) ஈகை-இண்டஞ் செடி. ஈங்கை - புலிதொடக்கி எனலுமுண்டு. 'இண்டுபடர்ந்த இருள்சூழ்மயானத்து' தொடரி - முட்செடி. 'கடுவும் தான்றியும் கொடுமுள் தொடரியும்'. சூரை :- 'கான்றையும் சூரையும் கள்ளியும் அடர்ந்து' மணிமேகலை. 6:- 81. பம்மி - செறிந்து. 'குளத்தினில் ஆரைபடர்ந்து' திருமந்திரம். 2911. 'மகளிர் வள்ளை கொய்யும்' பதிற். 29.- 2.

2. உள்ள + தங்கு + வெள்ளம் எனப் பிரிக்க. படப்பை - தோட்டம். பக்கம் எனலுமாம். அன்னத்தின் நடைஉவமிக்குஞ் சிறப்புடையதுஆதலின், நடையுடை யன்னம் எனப்பட்டது.

3. தேனை விரும்பிய வண்டுகள் முன்னரே பூத்து மணம் நீங்கிய வறும்பூக்களைத் தொட்டுத் தங்கியதால் தாழ்ந்து

குளிர்தருகங்கைதங்கு சடைமாடிலங்கு
தலைமாலையோடுகுலவி
ஒளிர்தருதிங்கள்சூடி யுமைபாகமாக
வுடையானுகந்தநகர்தான்
குளிர்தருகொம்மலோடு குயில்பாடல்கேட்ட
பெடைவண்டுதானுமுரல
நளிர்தருசோலைமாலை நரைகுருகுவைகு
நனிபள்ளிபோலுநமர்காள். 4

தோடொருகாதனுகி யொருகாதிலங்கு
சுரிசங்குநின்றுபுரளக்
காடிடமாகநின்று கனலாடுமெந்தை
யிடமாயகாதனகர்தான்
வீடுடனெய்துவார்கள் விதியென்றுசென்று
வெறிநீர்தெளிப்பவிரலால்
நாடுடனாடுசெம்மை யொலிவெள்ளமாரு
நனிபள்ளிபோலுநமர்காள். 5

---

எழுந்து விட்டதால் ஓங்கி எழுந்து விசையுடன் சென்ற மலர்க் கொம்புகளில், அவ்வண்டுகள் தொடாது விட்ட போதுகள் பூத்தமையால் மணம் பரவிற்று. பரவிய அம்மணத்தால், பூத்த மலர்களின் அகவிதழ்களைப் பொருந்தி வண்டுகள் ஒலி அடங்கித் தேனுண்டு உறங்கின, இவ்வியற்கையை ஆசிரியர் அருளிய திறத்தை உணர்ந்து மகிழ்க.

4. மாலையோடு குலவிப் பிரகாசிக்கும் பிறை சூடி. கொம்பில் என்றே மதுரைத் திருஞானசம்பந்தப்பிள்ளை பதிப்பில் உள்ளது. சுவாமிநாத பண்டிதரும் வேறு சிலரும் பதித்தவற்றுள், கொம்மல் என்றுள்ளது. அது கெதாநு கெதிகநயம் பற்றியதொரு பிழையாகும். குளிர்ச்சியைத்தரும் கும்மிப்பாடலொடு குயிலின் பாடலைக்கேட்ட வண்டு என்று கூறுவதினும் கொம்பு என்னும் இசைக்கருவியின் ஒலியொடு குயிலின்பாடலைக் கேட்ட வண்டு எனக்கூறுவது சிறந்தது.

5. ஒருகாதில் சங்கத் தோடும் ஒருகாதில் சங்கக் குழையும் அணிந்தமை குறிக்கப் பட்டது. கனல் - தீயில். வீடுடன் எய்துவார்கள் பேரின்ப வீட்டை விரைந்துஎய்தும் வைதிக சைவர்கள்

மேகமொடோடுதிங்கண் மலராவணிந்து
மலையான்மடந்தைமணிபொன்
ஆகமோர்பாகமாக வனலாடுமெந்தை
பெருமானமர்ந்தநகர்தான்
ஊகமொடாடுமந்தி யுகளுஞ்சிலம்ப
வகிலுந்தியொண்பொனிடறி
நாகமொடாரம்வாரு புனல்வந்தலைக்கு
நனிபள்ளிபோலுநமர்காள். 6

தகைமலிதண்டுசூல மனலுமிழுநாகங்
கொடுகொட்டிவீணைமுரல
வகைமலிவன்னிகொன்றை மதமத்தம்வைத்த
பெருமானுகந்தநகர்தான்
புகைமலிகந்தமாலை புனைவார்கள்பூசல்
பணிவார்கள்பாடல்பெருகி
நகைமலிமுத்திலங்கு மணல்சூழ்கிடக்கை
நனிபள்ளிபோலுநமர்காள். 7

---

மனைவியுடன் நீராடச் சென்று அடையும் வைதிகர்கள் எனலுமாம். விரலால் தெளித்தல்:- கை(விரல்)களால் அர்க்கியங்கொடுத்தல். நாடுடன்நாடு வெள்ளம் ஆரும் குடகுநாட்டில் தோன்றிக் கொங்குநாட்டில் பாய்ந்து சோழநாட்டில் கடலை அடைவது நோக்கின் நாடுடன்நாடு காவிரி வெள்ளம் நிறையும். மேதினிக்கு வளம் நிறைத்துக் குறைந்த நீருடைமையால், கடல் வயிறு நிறையாத காவிரி ஆயிற்று (பெரிய. திருமூல 8.) என்றனர். 'பொன்னி' என்றது நீரின் செம்மையும் மணலின் பொன்மையும்பற்றி வழங்கிய காரணப்பெயர். நாடுடன் ஆடு வெள்ளம் என்றுகொண்டு, கங்கையிற் புனிதமாய காவிரியில் நாட்டினர் ஒருசேரப்போந்து நீராடுதலைக் குறித்ததாகக் கொள்ளலும் ஆகும்.

6. ஊகம் - கருங்குரங்கு, குரங்குமாம். மந்தி - பெண் குரங்கு. உகளும் - பாயும், குதிக்கும். இடறி - எற்றி, தள்ளி. நாகம் - நாகமரம். ஆரம் - சந்தனமரம். பாம்பும் (நாகரத்நமும்) முத்தும் ஆம். வாருபுனல் - கொழிக்கும்நீர்.

7. தகை - தடை. தண்டு - தண்டாயுதம். சிவிகையுமாம். கொடுகொட்டி - திரிபுரதகனகாலத்திற் சிவபிரான் ஆடிய திருக்கூத்து. கந்தம் - மணம். நகை - வெண்மை.

வலமிகுவாளன்வேலன் வளைவாளெயிற்று
மதியாவரக்கன்வலியோ
டுலமிகுதோள்களொல்க விரலாலடர்த்த
பெருமானுகந்தநகர்தான்
நிலமிகுகீழுமேலு நிகராதுமில்லை
யெனநின்றநீதியதனை
நலமிகுதொண்டர்நாளு மடிபரவல்செய்யு
நனிபள்ளிபோலுநமர்காள். 8

நிறவுருவொன்றுதோன்றி யெரியொன்றிநின்ற
தொருநீர்மைசீர்மைநினையார்
அறவுறுவேதநாவ னயனேடுமாலு
மறியாதவண்ணனகர்தான்
புறவிரிமுல்லை மௌவல் குளிர்ப்பிண்டிபுன்னை
புனைகொன்றைதுன்றுபொதுளி
நறவிரிபோதுதாது புதுவாசநாறு
நனிபள்ளிபோலுநமர்காள். 9

அனமிகுசெல்குசோறு கொணர்கென்றுகையி
லிடவுண்டுபட்டவமணும்
மனமிகுகஞ்சிமண்டை யதிலுண்டுதொண்டர்
குணமின்றிநின்றவடிவும்

---

8. வாளன் - சிவபிரான் அருளிய வாளை உடையவன் (இராவணன்). வாள்ன் வேலன் இரண்டும் சிவபிரானைக் குறித்தவை எனலும் ஆம். உலம் - கற்றூண், திரண்டகல். ஆதும் - யாதும். 'ஆதும் சுவடுபடாமல் ஐயாறடைகின்ற போது' (4. 3. 1) இதில், பிறபத்தும் நோக்காதார் 'யாதும்' என்று எழுதிவிட்டனர். 'சென்று ஆது வேண்டிற்று ஒன்று ஈவான்' (6. 20. 9).

9. முதலீரடியில் அரியும் அயனும் அடிமுடி தேடிய வரலாறு குறிக்கப்பட்டது. பின்னீரடியில் முல்லை மௌவல் முதலியவற்றின் மணம் வீசும் சிறப்பு நனிபள்ளிக்கு உண்டென்பது கூறப்பட்டது. புற - புறவம். 'குறியதன்கீழாக்குறுகல்' (நன்னூல்).

விணமிகுவேதநான்கும் விரிவித்தநாவின்
விடையானுகந்தநகர்தான்
நனமிகுதொண்டர்நாளு மடிபரவல்செய்யு
நனிபள்ளிபோலுநமர்காள். 10

கடல்வரையோதமல்கு கழிகானல்பானல்
கமழ்காழியென்றுகருதப்
படுபொருளாறுநாலு முளதாகவைத்த
பதியானஞானமுனிவன்
இடுபறையொன்றவத்தர் பியன்மேலிருந்தி
னிசையாலுரைத்தபனுவல்
நடுவிருளாடுமெந்தை நனிபள்ளியுள்க
விணகெடுதலாணை நமதே. 11

திருச்சிற்றம்பலம்

---

*10.* செல்கு - செல்லும். செல்குசோறு:- வினைத்தொகை. கொணர்க - கொண்டுவருக. மண்டை - பனைமட்டையாலான உண்கலம். சிவபிரான் வேதங்களை அருளியவன் என்பது இங்கும் உணர்த்தப்பட்டது. நன - நனவு, தெளிவு.

*11.* ஆறும் நாலும் - ஆறங்கங்களும் நால்வேதங்களும். 2. 6. 3. பார்க்க, அத்தர்பியல்மேல் இருந்து - தந்தையார் திருத் தோள்மிசை அமர்ந்து. ஆணைநமதே:- 2. 85. 11;3. 78. 11; 3. 118. 11; 2. 52. 7 பார்க்க.

---

அருளுந் தமிழா கரன்நின் அலங்கல்தந்
தென்பெயரச்
சுருளுங் குழலியற் கிந்திலை யேமுன்பு
தூங்குகரத்
துருளுங் களிற்றினொ டோட்டரு வானை
அருளியன்றே
மருளின் மொழிமட வாள்பெயரென்கண்
வருவிப்பதே. —அந்தாதி 74

## 221 பதிகவரலாறு

மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் திருமறைக் காட்டில் பாலருவாயர் எழுந்தருளியிருப்பதை அறிந்து விடுத்த ஏவலர் போற்றிச் செய்துகொண்ட விண்ணப்பத் திற்கு அவர் இசைந்தார். புகலிமன்னர், மொழிமன் னர்க்குத், தென்னாடுற்ற செயலையும் அதைப் பாண்டிமா தேவியாரும் அமைச்சரும் உரைத்துவிட்ட வார்த்தையையும் புகன் றருளிக் கன்னி நாட்டிற்கு எழுந்தருளத் துணிந்தார். அப்பொழுது நாவரசப் பெருந்தகையார் 'பிள்ளாய்' அந்த அமண் கையர் வஞ்சனைக்கு ஓர் அவதி (எல்லை) இல்லை. உரை செய்வது உளது. உறு கோள் தாமும் தீய. எழுந்தருள உடன்படுவது ஒண்ணாது என்றருளினார். அது கேட்ட புகலிவேந்தர், 'பரசுவது நம் பெருமான் கழல்கள் என்றால். பழுது அணையாது' எனப் பகர்ந்து பரமர்தாள்போற்றி வேயுறு தோளியை விளம்பியது இத்திருப்பதிகம்.

### பண் - பியந்தைக்காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

வேயுறுதோளிபங்கன் விடமுண்டகண்டன்
மிகநல்ல வீணைதடவி
மாசறுதிங்கள்கங்கை முடிமேலணிந்தெ
னுளமே புகுந்தவதனால்
ஞாயிறுதிங்கள்செவ்வாய் புதன்வியாழம்வெள்ளி
சனிபாம் பிரண்டுமுடனே
ஆசறுநல்லநல்ல வவைநல்லநல்ல
வடியா ரவர்க்குமிகவே. 1

---

1. வேய்உறுதோளிபங்கன் - மூங்கிலின் இரு கணுக்களுக்கும் இடைப்பட்ட பகுதியைப்போலும் தோள்களையுடைய உமாதேவியாரை இடப்பால் உடையவர். ஞாயிறு......பாம்பு இரண்டும் - சூரியன் முதலிய ஒன்பதுகோள் (கிரகங்)களும்,

என்பொடுகொம்பொடாமை யிவைமார்பிலங்க
வெருதேறி யேழையுடனே
பொன்பொதிமத்தமாலை புனல்சூடிவந்தெ
னுளமே புகுந்தவதனால்
ஒன்பதொடொன்றொடேழு பதினெட்டோடாறு
முடனாய நாள்களவைதாம்
அன்பொடுநல்லநல்ல வவைநல்லநல்ல
வடியா ரவர்க்குமிகவே. 2

---

ஆசு அறு நல்ல நல்ல - குற்றம் அற்ற நலத்தைச் செய்வன. அவை அடியார்களுக்கு மிக நல்லன நல்லன. பாம்பு இரண்டு இராகுவும் கேதுவும்.

2. கொம்பு - பன்றிக்கொம்பு. ஆமை - முற்றலாமையோடு. ஏழை - உமாதேவியார். 'ஏழை பங்காளனையே பாடேலோ ரெம்பாவாய்' ஒன்பது:- அசுவினி முதலாகக்கொண்டு எண்ணின் ஒன்பதாவது நட்சத்திரம் ஆயிலியம். ஒன்பதோடொன்று:- பத்து - மகம். ஒன்பதொடேழு:- பதினாறு-விசாகம். பதினெட்டு. கேட்டை. ஆறு:- திருவாதிரை. உடனாய நாள்கள் மற்றயவை. அவை:- பரணி, கார்த்திகை. பூரம், சித்திரை, சுவாதி, பூராடம், பூரட்டாதி, நாள்கள் என்றதால், ஆகாத திதிகளும் கிழமைகளும் அடங்கின. இவ்வுண்மையை,

ஆதிரை பரணி ஆரல் அயில்ய முப்பூரம் கேட்டை
தீதுறு விசாகம் சோதி சித்திரை மகமீ ராறும்
மாதனம் கொண்டார் தாரார் வழிநடைப் பட்டார் மீளார்
பாய்தனில் படுத்தார் தேரார் பாம்பின்வாய்த் தேரை தானே.

என்னுஞ் சோதிடநூற் பாட்டாலுணர்க. கயப்பாக்கம் சதாசிவச் செட்டியார் அவர்கள் எழுதிய அகத்தியர் தேவாரத் திரட்டின் உரையில் உள்ளதும் தமிழ்ப்பொழில்:- துணர் 7. 8. 9-ல் பண்டித அ. கந்தசாமிப் பிள்ளை அவர்களும் (M. S பூரணலிங்கம்பிள்ளை அவர்களும்) எழுதிய கட்டுரைகளால் ஐயந் தீர்த்து முடிவு செய்யப்பட்டதுமான உரையே இதில் குறிக்கப் பட்டதாகும், ஆயினும் சிவபெருமானுக்குரிய திருவாதிரையை முதலாக்கொண்டு, அதற்கு ஒன்பது சித்திரை. அதனொடு ஒன்று சுவாதி. அதிலிருந்து முன் ஏழு ஆயில்யம். அதற்குப்

உருவளர்பவளமேனி யொளிநீறணிந்து
வுமையோடும்வெள்ளைவிடைமேல்
முருகலர்கொன்றைதிங்கண் முடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனால்
திருமகள்கலையதூர்தி செயமாதுபூமி
திசைதெய்வமானபலவும்
அருநெதிநல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே. 3

மதிநுதன்மங்கையோடு வடபாலிருந்து
மறையோதுமெங்கள்பரமன்
நதியொடுகொன்றைமாலை முடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனால்
கொதியுறுகாலனங்கி நமனோடுதூதர்
கொடுநோய்களானபலவும்
அதிகுணநல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே. 4

---

பதினெட்டு பூரட்டாதி. அதற்குமுன் ஆறு பூராடம் என்றும் உடனுய நாள்கள்:- பரணி, கார்த்திகை, மகம், பூரம், விசாகம். கேட்டை என்றும் உரைப்பாருமுளர்.

3. உருவளர் பவளமேனி - அழகுவளரும் பவளம்போன்ற செம்மேனியில். கலையதூர்தி - துர்க்கை. நெதி - திரவியம்,

4. வடபால் - ஆலின்கீழ். வடம் - ஆலமரம். 'கல்லால் நிழற்கீழ் வாடாமுலை மங்கையும் தானும் மகிழ்ந்து ஈடா உறைகின்ற இடைமருது' 1-321. வடபக்கம் என்பாருமுளர். கொதி - கோபம், உக்கிரம். காலன் - 'காளமேகந் நிறக்காலனோடு அந்தகன்' 2. 119. 6. அங்கி-அக்கினி. நமனொடுதூதர்-இயமனும் இயமதூதரும், 'மண்ணிடைக் குரம்பைதன்னை மதித்து நீர் மையல் எய்தில் விண்ணிடைத் தருமராசன் வேண்டினால் விலக்குவார் ஆர்? 4. 31. 2. 'தருமராசற்காய்வந்த கூற்றினைக் குமைப்பர்' 4. 49. 2. என்பவற்றால், நமன் (தருமராசன்) வேறு நமனுடைய தூதராகிய கூற்றுவர் வேறு என்றும் 'சூலத்தால் அந்தகனைச் சுருளக்கோத்துக் தொல்லுலகில் பல்லுயிரைக் கொல்லுங்கூற்றைக் காலத்தால் (-காலால்) உதைசெய்து' 6. 83. 9. என்பதில் அந்தகன் வேறு கூற்று வேறு என்றும் உணர்த்தல் அறிக.

நஞ்சணிகண்டனெந்தை மடவாடனேடும்
விடையேறுநங்கள்பரமன்
துஞ்சிருள்வன்னிகொன்றை முடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனல்
வெஞ்சினவவுணரோடு முருமிடியுமின்னு
மிகையானபூதமவையும்
அஞ்சிடுநல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே. 5

வாள்வரியதளதாடை வரிகோவணத்தர்
மடவாடனேடுமுடனய்
நாண்மலர்வன்னிகொன்றை நதிசூடிவந்தெ
னுளமேபுகுந்தவதனல்
கோளரியுழுவையோடு கொலையானைகேழல்
கொடுநாகமோடுகரடி
ஆளரிநல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே. 6

செப்பிளமுலைநன்மங்கை யொருபாகமாக
விடையேறுசெல்வனடைவார்
ஒப்பிளமதியுமப்பு முடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனல்
வெப்பொடுகுளிரும்வாத மிகையானபித்தும்
வினையானவந்துநலியா
அப்படிநல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே. 7

---

5. துஞ்சிருள்வன்னி:- வன்னிமரத்தின் இலைகள் மிகுந்தும் அடர்ந்தும் தழைத்திருத்தலால் இருள் துஞ்சும் நிலையினது. உளத்திற்கு ஏற்றினும் அமையும்.

6. வரி - கீற்றுக்களை உடைய புலியினது. வாள்வரி:- அன்மொழித்தொகை. கோள் - வலிமை. அரி - குரங்கு. கோளு (வலிமை, கொலையு)ம் அரி (-பகை)யும் உடைய உழுவை (-புலி) எனலுமாம். ஆளரி - சிங்கம். 'ஆளரியேறனையான்' (பெரிய. திருஞான. 474).

7. செப்பு - செம்பு. அடைவு ஆர் - அடைதலுற்ற. அப்பு - கங்கை. வெப்பு - வெம்மை. சுரநோய் சிலேத்துமம். வாதம்-வளி.

வேள்படவிழிசெய்தன்று விடைமேலிருந்து
மடவாடனோடுமுடனாய்
வாண்மதிவன்னிகொன்றை மலர்சூடிவந்தெ
னுளமேபுகுந்தவதனால்
ஏழ்கடல்சூழிலங்கை யரையன்றனோடு
மிடரானவந்துநலியா
ஆழ்கடனல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே. 8

பலபலவேடமாகும் பரனாரிபாகன்
பசுவேறுமெங்கள்பரமன்
சலமகளோடெருக்கு முடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனால்
மலர்மிசையோனுமாலு மறையோடுதேவர்
வருகாலமானபலவும்
அலைகடன்மேருநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே. 9

கொத்தலர்குழலியோடு விசையற்குநல்கு
குணமாயவேடவிகிர்தன்
மத்தமுமதியுநாக முடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனால்

---

பித்து - பித்தம். 'மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர் வளி முதலா எண்ணிய மூன்று' (குறள். 941).

8. விழிசெய்து - நெற்றிவிழி திறந்து எரித்து. வாள் - ஒளி. அரையன் - அரசன், இராவணன். இடர்ஆன - துன்பமானவை. கடல்நல்ல.

9. 'வேடம் பலவாகி நின்ற பரமன்' 2. 87. 6. ஒருவனுமே பலவாகி நின்றதொரு வண்ணமே' 3. 10. 8. ஒன்றொடொன்று ஒவ்வாவே' 3. 102. 6. 'ஒன்றோடொன்றொவ்வா வேடம் ஒருவனே தரித்துக்கொண்டு நின்றனன்' சித்தியார் 71. நாரி - உமாதேவியார். மலர்மிசையோன் - செந்தாமரைமேலிருக்கும் பிரமன். காலம்ஆன - கெட்டகாலங்களானவை.

புத்தரொடமணவாதி லழிவிக்குமண்ண
 றிருநீறுசெம்மைதிடமே
அத்தகுநல்லநல்ல வவைநல்லநல்ல
 வடியாரவர்க்குமிகவே. 10

தேனமர்பொழில்கொளாலை விளைசெந்நெறுன்னி
 வளர்செம்பொனெங்குநிகழ
நான்முகனாதியாய பிரமாபுரத்து
 மறைஞானஞானமுனிவன்
தானுறுகோளுநாளு மடியாரைவந்து
 நலியாதவண்ணமுரைசெய்
ஆனசொன்மாலையோது மடியார்கள்வானி
 லரசாள்வராணைநமதே. 11

திருச்சிற்றம்பலம்

---

10. விசையற்கு - அர்ச்சுனனுக்கு. வேடவிகிர்தன் - வேடனாக மாறியவன். வாதில் - மதுரையில் நடந்த அனற்போர் புனற்போர்களிலும் போதிமங்கைக்கருகில் புத்தருடன் நடந்த போரிலும்.

11. மறைஞான ஞானமுனிவன் - அபரஞானமும் பரஞானமும் ஆகிய இரண்டையும் உடைய முனிவர். பெரிய, திருஞான. 'சிவனடியே சிந்திக்கும் சிவஞானம் (ஆகிய) உணர்வரிய விஞ்ஞானம் பவம்......அறமாற்றும்......ஓங்கிய ஞானம் (ஆகிய) உவமையிலாக் கலைஞானம் தவமுதல்வர் சம்பந்தர் ......உணர்ந்தார்'. கோளும் - சூரியன்முதலிய கிரகங்களும். நாளும் - அசுவினி முதலிய நட்சத்திரங்களும்.

---

வருவார் உருவின் வழிவழி வைத்த
 வனமருந்துந்
திருவார் இருந்த செழுநகர்ச் செவ்வித்
 திருவடிக்காள்
தருவான் தமிழா கரன்கரம் போற்சலம்
 வீசக்கண்டு
வெருவா வணங்கொண்டல் கள்மிண்டி வானத்து
 மின்னியமே —அந்தாதி 75

# 86 திருநாரையூர்

## 222 பதிகவரலாறு

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் திருக்கடம்பையை வழிபட்டபிறகு நலந்திகழ் நாரையூரை நண்ணி நம்பரைக் கும்பிடும் விருப்பொடு குறுகி வணங்கிப் பாடியருளிய செந் தமிழ் மாலே இத்திருப்பதிகம்.

### பண் - பியந்தைக்காந்தாரம்

### திருச்சிற்றம்பலம்

உரையினில்வந்தபாவ முணர்நோய்களும்ம
செயறீங்குகுற்றமுலகில்
வரையினிலாமைசெய்த வவைதீரும்வண்ண
மிகவேத்திநித்தநினேமின்
வரைசிலேயாகவன்று மதின்முன்றெரித்து
வளர்கங்குனங்கைவெருவத்
திரையொலிநஞ்சமுண்ட சிவன்மேயசெல்வத்
திருநாரையூர்கைதொழவே. 1

---

1. உரையினில் வந்த பாவம் - வாக்கால் வந்த தீவினைகள். உணர்நோய்கள் - (மனத்தால்) நினேப்பால் உண்டான தீவினே கள். செயல்தீங்குகுற்றம் - (காயத்தால்) தீச்செயல்களால் வந்த தீவினேகள். தீங்கு செயல் என மாற்றுக. பாவம், நோய் கள், குற்றம் மூன்றற்கும் 'உம்ம' என்னும் ஆறனுருபு ஏற்ற சொல் பொதுவாய் நின்றது. உம்முடைய பாவம் நோய்கள் குற்றம் என்க. செயல் தீங்கு குற்றம் - செயலது தீங்காலாகும் குற்றமென விரித்தலும் ஆகும். வரையினிலாமை - அளவில் லாமை, அளவில் நில்லாமை. ('மை') எதிர்மறைவினேயெச்சமும் பெயரும் ஆம். கைதொழுதால், செய்த அவை தீரும், அவை - உம்முடைய உரையால் வந்த பாவமும் உணர்நோய்களும் தீச் செயலான குற்றமும்.

ஊனடைகின்றகுற்ற முதலாகியுற்ற
பிணிநோயொருங்குமுயரும்
வானடைகின்ற வெள்ளை மதிசூடுசென்னி
விதியானவேதவிகிர்தன்
கானிடையாடிபூதப் படையானியங்கு
விடையானிலங்குமுடிமேல்
தேனடைவண்டுபாடு சடையண்ணனண்ணு
திருநாரையூர்கைதொழவே. 2

ஊரிடைநின்றுவாழு முயிர் செற்றகாலன்
றுயருற்ற தீங்குவிரவிப்
பாரிடைமெள்ளவந்து பழியுற்றவார்த்தை
யொழிவுற்றவண்ணமகலும்
போரிடையன்றுமூன்று மதிலெய்தஞான்று
புகழ்வானுளோர்கள் புணரும்
தேரிடைநின்றவெந்தை பெருமானிருந்த
திருநாரையூர்கைதொழவே. 3

தீயுறவாயவாக்கை யதுபற்றிவாழும்
வினைசெற்றவுற்றவுலகின்
தாயுறுதன்மையாய தலைவன்றனும
நிலையாகநின்றுமருவும்

---

2. ஊன் - உடம்பு, ஆகுபெயர். ஒருங்கும் - கெடும். உயரும்வான். வான் அடைகின்றமதி. வெள்ளைமதி என்க. ஆடி:- பெயர். இயங்குவிடையான் - சஞ்சரிக்கும் இடபவாகனன்.

3. இத்திருப்பாட்டின் முற்பகுதியில் காலன் தீங்கு விரவிப் பாரிடைவந்து பழியுற்ற வார்த்தை ஒழிவுற்ற வரலாறு கூறப்பட்டது. அது திருநாரையூர்ப் புராணத்தில் காணப்பட வில்லை. ஞான்று:- நாளன்று என்பதன் மரூஉ. இது கல்வெட்டுக்களில் பயின்றுள்ளது. 'நாளன்று போகி' (புறம் 124) என்புழிப்படும் பொருள் ஈண்டுக் கொள்ளலாகாது. நாளாகிய அன்று, அந்நாள், பொழுது என்னும் பொருளில் ஆளப்படுகின்றது. 'திருமுடியூர் ஆற்றுத் தளிப்பெருமானடிகளுடைய .........திருக்கற்றளியாக அமைப்பித்து, இவ்வாட்டை மகர ஞாயிற்றுச் சனிக்கிழமை பெற்ற இரேவதி ஞான்று கும்பதாரை' (Archacological Survey of India, Annual Report 1905 - 6. PP. 182 - 3.)

பேயுறவாயகானி னடமாடிகோல
விடமுண்டகண்டன்முடிமேல்
தேய்பிறைவைத்துகந்த சிவன்மேயசெல்வத்
திருநாரையூர்கைதொழவே. 4

வசையபராதமாய வுவரோதநீங்குந்
தவமாயதன்மைவரும்வான்
மிசையவராதியாய திருமார்பிலங்கு
விரிநூலர்விண் ணுநிலனும்
இசையவராசிசொல்ல விமையோர்களேத்தி
யமையாதகாதலொடுசேர்
திசையவர்போற்றநின்ற சிவன்மேயசெல்வத்
திருநாரையூர்கைதொழவே. 5

உறைவளருனிலாய வுயிர்நிற்கும்வண்ண
முணர்வாக்குமுண்மையுலகில்
குறைவுளவாகிநின்ற குறைதீர்க்குநெஞ்சி
னிறைவாற்றுநேசம்வளரும்
மறைவளர்நாவன்மாவி னுரிபோர்த்தமெய்ய
னரவார்த்தவண்ணல்கழலே
திறைவளர்தேவர்தொண்டி னருள்பேணநின்ற
திருநாரையூர்கைதொழவே. 6

---

**4.** செற்ற - நெருங்கிய, பின்னிய. செற்றவுலகு என்று இயைக்க. செற்ற என்பதற்கு அழித்த என்று பொருள் கொள்ளின் தலைவன் என்பதோடியையும். 'உலகின் தாய்' "தாயாய் முலையைத் தருவானே" (திருவாசகம் ஆனந்த - 5) 2. 24. 8. குறிப்புரை காண்க. நடமாடி:- பெயர். தேய்பிறை என்றது இயல்படை. சிவபெருமான் திருமுடியில் உள்ள பிறைக்குத் தேய்தலும் வளர்தலும் இல்லை. தொழுமருவும் என்க.

**5.** உவரோதம் - உபரோதம். இடையூறு. உவர் ஓதம் என்னும் தொடர் உப்பு நீர்க்கடல் என்னும் பொருளதுமாம். வசை ஆம் அபராதமாய உவரோதம் என்பதற்குக் கடல் அளவு குற்றமாம்.

**6.** வேதம் வள்ரும் திருநாவினன், யானை உரி போர்த்த திருமேனியன், பாம்பைக் கச்சாகக்கட்டிய தலைவன் ஆகிய

தனம்வருநன்மையாகுந் தகுதிக்குழந்து
வருதிக்குழன்றவுடலின்
இனம்வளரைவர்செய்யும் வினயங்கள்செற்று
நினைவொன்றுசிந்தைபெருகும்
முனமொருகாலமூன்று புரம்வெந்துமங்கச்
சரமுன்றெரிந்தவவுணர்
சினமொருகாலழித்த சிவன்மேயசெல்வத்
திருநாரையூர்கைதொழவே. 7

உருவரைகின்றநாளி லுயிர்கொள்ளுங்கூற்ற
நனியஞ்சுமாதலுறநீர்
மருமலர்தூவியென்றும் வழிபாடுசெய்ம்மி
னழிபாடிலாதகடலின்
அருவரைசூழிலங்கை யரையன்றன்வீர
மழியத்தடக்கைமுடிகள்
திருவிரல்வைத்துகந்த சிவன்மேயசெல்வத்
திருநாரையூர்கைதொழவே. 8

---

சிவபெருமான் திருவடிகளையே தேவர்கள் திருத்தொண்டின் எய்தும் திருவருளால் விரும்பநின்ற திருநாரையூர். திறைவளர் தேவர் - சிவபிரானுக்குத் திறையாக வளர்கின்ற தேவர்கள். திறையாதல்-தம்மை அர்ப்பணம் செய்தல். அடைக்கலமும் ஆம். தெறுதல் - தெறை - திறை. "ஒன்னார்த்தெறுபொருள் - பகைவரைத் திறையாகக்கொள்ளும் பொருள். தெறுதலான் வரும் பொருள் எனவிரியும்" (குறள் 756. உரை).

7. திருநாரையூரைத் தொழுதால் செல்வம் வரும். நலங்கள் உளவாகும். மேன்மை பெறுதற்கு முயன்று திசையெல்லாம் சுழன்ற உடம்பில் கூட்டமாக வளர்கின்ற ஐம்புலக் கள்வர் செய்கின்ற வஞ்சகங்களை அழித்து, சிவபெருமான் திருவடிக்கே பதித்த சிந்தை வளரும்.

8. திருநாரையூரைத் தொழ உடம்பு நீங்கும் காலத்தில் உயிரைக் கொள்ளும் கூற்றுவன் மிக அஞ்சுவன் ஆதலால் நீர் மிகுதியாக மணமலர்களைத் தூவி எப்பொழுதும் சிவ வழிபாடு செய்மின். அழிதலில்லாத கடல் நடுவே மலைகள் ஆழப்பெற்ற இலங்கைக்கு வேந்தனாகிய இராவணனது வீரம் அழியவும்

வேறுயர்வாழ்வுதன்மை வினைதுக்கமிக்க
பகைதீர்க்குமேயவுடலில்
தேறியசிந்தைவாய்மை தெளிவிக்கநின்ற
கரவைக்கரந்துதிகழும்
சேறுயர்பூவின்மேய பெருமானுமற்றைத்
திருமாலுநேடவெரியாய்ச்
சீறியசெம்மையாகுஞ் சிவன்மேயசெல்வத்
திருநாரையூர்கைதொழவே. 9

மிடைபடுதுன்பமின்ப முளதாக்குமுள்ளம்
வெளியாக்குமுன்னியுணரும்
படையொருகையிலேந்திப் பலிகொள்ளும்வண்ண
மொலிபாடியாடிபெருமை
உடையினைவிட்டுளோரு முடல்போர்த்துளோரு
முரைமாயும்வண்ணமழியச்
செடிபடவைத்துகந்த சிவன்மேயசெல்வத்
திருநாரையூர்கைதொழவே. 10

---

பத்துத் தலைகளும் இருபது கைகளும் நசுங்கவும் ஒரு திருக்காற் பெருவிரலை ஊன்றி உயர்ந்த சிவபெருமான் எழுந்தருளிய செல்வத்தை உடைய திருநாரையூர்.

*9.* சேற்றில் தோன்றி உயர்ந்த தாமரைப்பூவில் மேவிய பெரியோனாகிய பிரமனும் திருமாலும் தேடத் தீப்பிழம்பாகிக் கனன்ற செம்மையாகும் சிவபெருமான் எழுந்தருளிய செல்வத்தை உடைய திருநாரையூரைக் கைதொழுதால் பிறந்திறந்துழலும் துன்பவாழ்விற்கு வேறாய் உயர்ந்த பேரின்ப வாழ்வாகிய சகச நிலை திகழும். வினையும் அதனால் வரும் துக்கமும் மிக்க பகையைத்தீர்க்கும் பொருந்திய உடலில் தெளிந்த சிந்தையும் உண்மையும் தெளியச் செய்யநின்ற தனது மறைவை ஒழித்து விளங்கும். தன்மை-சகசம், சுபாவம், இயல்பு. வினையாகிய துக்கம்மிக்க பகை. வினையைப் பகை என்றல் திருமுறையில் பயிலக்காணலாம். 'கரப்பர்கரிய மனக்கள்வர்க்கு உள்ளம் கரவாதே தம் நினையகிற்பார் பாவம்துரப்பர்'. 6. 17. 5.

*10.* வெளியாக்கும் - ஒளியை ஆக்கும், "அடியார்கள் உளமான வெளியாகும் வலிதாய வினைகூட நினையாவே"

எரியொருவண்ணமாய வுருவானையெந்தை
 பெருமானையுள்கிநினையார்
திரிபுரமன்றுசெற்ற சிவன்மேயசெல்வத்
 திருநாரையூர்கைதொழுவான்
பொருபுனல்சூழ்ந்தகாழி மறைஞானபந்த
 னுரைமாலைபத்துமொழிவார்
திருவளர்செம்மையாகி யருள்பேறுமிக்க
 துளதென்பர்செம்மையினரே. 11

திருச்சிற்றம்பலம்

---

(சிவப்பிரகாசம் - காப்பு) உன்னி உணரும் - தியானித்து உணருங்கள். முன்னி எனப்பிரித்தலும் ஆம். அதற்கு நினைந்து என்றும் முந்தி என்றும் கொள்க. உணரும்:- நிகழ்காலஉம்மீறு அன்று. எதிர்காலம் உணர்த்தும் முன்னிலைப் பன்மை. சிவக. 808. உரை:- சமணசாக்கிய சமயங்களின் கொள்கைகள். செடி - குணம் இல்லாமை. கைதொழ வெளியாக்கும் அதனால் ஆடியின் பெருமையை உன்னி உணரும் என்று இயைக்க.

11. எரி...உருவானை' - தீயைப் போலும் ஒப்பற்ற அழகியதாய நிறத்தை உடையவனை, 'அழல்வண்ணன்' என்பது திருநாமம். எந்தை பெருமானை உள்கித் திருநாரையூரைக் கைதொழுவான் ஆகிய மறைஞானசம்பந்தன் உரை(த்த) மாலை பத்தும் மொழிவார் செம்மையாகிப் பேறுமிக்கதுள்ளது என்பராய்ச் செம்மையினர் ஆவர் என ஆக்கம் விரித்து முடிக்க. உள்குதல் கைதொழுதல் இரண்டும் மொழிவார்க்கு ஏற்றி உரைத்தலும் பொருந்தும். அப்பொருட்குத் தொழுவான் என்பது வினையெச்சமாகும். முன்னைய பொருளுக்கு வினையாலணையும் பெயர்.

# 87 திருநறையூர்ச்சித்தீச்சரம்

## 223 பதிகவரலாறு

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் அரதைப் பெரும் பாழி, சேறை, நாலூர், குடவாயில் என்பவற்றை வணங்கித் திருநறையூரைச் சார்ந்து, சித்தீச்சரத்தைப் போற்றிப் பாடியருளியது இத்திருப்பதிகம்.

### பண் - பியந்தைக்காந்தாரம்

### திருச்சிற்றம்பலம்

நேரியனுகுமல்ல னொருபாலுமேனி
யரியான்முனுயவொளியான்
நீரியல்காலுமாகி நிறைவானுமாகி
யுறுதீயுமாயநிமலன்
ஊரியல்பிச்சைபேணி யுலகங்களேத்த
நல்குண்டுபண்டுசுடலை
நாரியொர்பாகமாக நடமாடவல்ல
நறையூரினம்பனவனே. 1

இடமயிலன்னசாயன் மடமங்கைதன்கை
யெதிர்நாணிபூணவரையில்
கடுமயிலம்புகோத்து வெயில்செற்றுகந்து
வமரர்க்களித்ததலைவன்
மடமயிலூர்திதாதை யெனநின்றுதொண்டர்
மனநின்றமைந்தன்மருவும்
நடமயிலாலநீடு குயில்கூவுசோலை
நறையூரினம்பனவனே. 2

---

1. நேரியன் - நுண்ணியன், தோன்றுபவன். சித்தி. 280. முன் ஆய ஒளியான்-அநாதியாகிய சிவப்பிரகாசன். திருமால்முன் சோதிப்பிழம்பு ஆனவன் எனலும்ஆம். அல்லன்-நேரியனல்லாத பரியன். நீரியல்...நிமலன்-நீர், காற்று, விண், தீ ஆகிய விமலன். நல்குண்டு - நல்க உண்டு. அகரம் (தொகுத்தல் விகாரம்).

2. நாணி - வில்லின்நாண். வரை - மேருவாகிய வில். கடும் அயில் அம்பு - கடிய கூரிய கணை. மயிலூர்தி - முருகப்பெருமான். நின்று நின்றமைந்தன் எனக் கூட்டுக.

சூடகமுன்கைமங்கை யொருபாகமாக
வருள்காரணங்கள் வருவான்
ஈடகமானநோக்கி யிடுபிச்சைகொண்டு
படுபிச்சனென்றுபரவத்
தோடகமாயோர்காது மொருகாதிலங்கு
குழைதாழவேழவுரியன்
நாடகமாகவாடி மடவார்கள்பாடு
நறையூரினம்பனவனே. 3

சாயனன்மாதொர்பாகன் விதியாயசோதி
கதியாகநின்றகடவுள்
ஆயகமென்னுள்வந்த வருளாயசெல்வ
னிருளாயகண்டனவனித்
தாயெனநின்றுகந்த தலைவன்விரும்பு
மலையின்கண்வந்துதொழுவார்
நாயகனென்றிறைஞ்சி மறையோர்கள்பேணு
நறையூரினம்பனவனே. 4

நெதிபடுமெய்யெமைய னிறைசோலைசுற்றி
நிகழம்பலத்தினடுவே
அதிர்படவாடவல்ல வமரர்க்கொருத்த
னெமர்சுற்றமாயவிறைவன்
மதிபடுசென்னிமன்னு சடைதாழவந்து
விடையேறியில்பலிகொள்வான்
நதிபடவுந்திவந்து வயல்வாளைபாயு
நறையூரினம்பனவனே. 5

---

3. சூடகம் - வளையல். ஈடு அகம் ஆன - பெரிய வீடுகள் ஆனவற்றைநோக்கித் தோடும் குழையும் இருவேறு திருச்செவியிலும் அணிந்தது முன்னும் குறிக்கப்பட்டது. 2. 84. 5.

4. கதியாகநின்ற கடவுள் - சிவகதியாக நிற்கும் பரமேச்சுவரன். அவனித்தாய் 'தாயவன்காண் உலகிற்கு' 6. 64. 4. மலையின்கண் வந்து தொழுவார் நாயகன்: - மலையினிருந்து வந்து வழிபடுகின்ற சித்தர்க்கு ஈசுவரன் என்று மறையோர்கள் இறைஞ்சிப் பேணும் நறையூர் என்க. பா. 'சித்தர் பேண',

5. நெதிபடுமெய் - நிதியாகப்படுகின்ற மெய்(ப்பொருள்). அமரர்க்கு ஒருத்தன் - தேவாதி தேவர்க்கெல்லாம் தலைவன்.

கணிகையொர்சென்னிமன்னு மதுவன்னிகொன்றை
மலர்துன்றுசெஞ்சடையினன்
பணிகையின்முன்னிலங்க வருவேடமன்னு
பலவாகிநின்றபரமன்
அணுகியவேதவோசை யகலங்கமாறின்
பொருளானவாதியருளான்
நணுகியதொண்டர்கூடி மலர்தூவியேத்து
நறையூரினம்பனவனே. 6

ஒளிர்தருகின்றமேனி யுருவெங்குமங்க
மவையாரவாடலரவம்
மிளிர்தருகையிலங்க வனலேந்தியாடும்
விகிர்தன்விடங்கொண்மிடறன்
துளிதருசோலையாலை தொழின்மேவவேத
மெழிலாரவென்றியருளும்
நளிர்மதிசேருமாட மடவார்களாரு
நறையூரினம்பனவனே. 7

---

அமரரால் அமரப்படுவான்-7. 384. எமர்சுற்றம் ஆய இறைவன்-எம்மவராகிய அடியார்களுக்கு உறவாய கடவுள். இல் - வீடுதோறும்.

6. கணிகை - கங்கை. கணிகையொர் சென்னி - தியானிப்போர் பிரமரந்திரம் எனல் பொருந்தாது. சென்னியில் வன்னியும் கொன்றைமலரும் துன்றிய செஞ்சடை உடையவன். பணிகையின் முன் - வணங்குதற்கு முன்னரே பணிகின்ற கை என்ன வினைத்தொகையாகக் கொள்ளலும் பொருந்தும். அணுகிய வேத ஓசை - தன்னை அடையவேண்டும் என்று தேடிக்கிட்டிய வேத முழக்கம். அகல் அங்கம் ஆறின்பொருள் - விரிந்த ஆறங்கங்களின் பொருள்.

7. மேனி - நிறம். துளிதரல் - தேன்துளித்தல். வேதம் எழில் ஆர - வேத முழக்கத்தின் எழுச்சி நிறைய. மதிசேரும் மாடம்:- வண்கொண்டல் விட்டு மதிமுட்டுவன மாடம்' (கம்பர்).

அடலெருதேறுகந்த வதிருங்கழற்க
ளொதிருஞ்சிலம்பொடிசையக்
கடலின்ட நஞ்சமுண்டு கனிவுற்றகண்டன்
முனிவுற்றிலங்கையரையன்
உடலொடுதோளனைத்து முடிபத்திறுத்து
மிசைகேட்டிரங்கியொருவாள்
நடலைகடீர்த்துநல்கி நமையாளவல்ல
நறையூரினம்பனவனே. 8

குலமலர்மேவினானு மிகுமாயனானு
மெதிர்கூடிநேடிநினைவுற்
றிலபலவெய்தொணாமை யெரியாயுயர்ந்த
பெரியானிலங்குசடையன்
சிலபலதொண்டர்நின்று பெருமைக்கள்பேச
வருமைத்திகழ்ந்தபொழிலின்
நலமலர்சிந்தவாச மணநாறுவீதி
நறையூரினம்பனவனே. 9

துவருறுகின்றவாடை யுடல்போர்த்துழன்ற
வவர்தாமுமல்லசமணும்
கவருறுசிந்தையாள ருரைநீத்துகந்த
பெருமான்பிறங்குசடையன்

---

8. கழல்கள் என்றபாலது கழற்கள் எனத் திரிந்தது. அரையன்-அரசன், இராவணன். உடல் தோள் முடி அனைத்தும் இறுத்தும் கேட்டு, இரங்கி, தீர்த்து (வாள்) நல்கி என்க. நல்கி ஆளவல்ல நம்பன்.

9. மேவினான்; பிரமன். மிகுமாயன் - மாயம் மிக்கவன். நேடி - தேடி. நினைவுற்றில பல - நினைப்பில் உற்றில்லாதன பலவாய். பெருமைகள் - பொருள்சேர்புகழ்கள். 'பெருமைக்கள்' என்பதில் கவ்வொற்று இசைப்பொருட்டு விரித்தலாயிற்று. அருமை-அரிய மேகம். வரும்மை, அருமை என லுமாம். பொழில் இனிய நல்ல மலர்களைச்சிந்த. வாசமணம். ஒருபொருளிருசொல்.

தவமலிபத்தர்சித்தர் மறையாளர்பேண
முறைமாதர்பாடிமருவும்
நவமணிதுன்றுகோயி லொளிபொன்செய்மாட
நறையூரினம்பனவனே. 10

கானலுலாவியோத மெதிர்மல்குகாழி
மிகுபந்தன்முந்தியுணர
ஞானமுலாவுசிந்தை யடிவைத்துகந்த
நறையூரினம்பனவனை
ஈனமிலாதவண்ண மிசையாலுரைத்த
தமிழ்மாலைபத்துநினைவார்
வானநிலாவவல்லர் நிலமெங்குநின்று
வழிபாடுசெய்யுமிகவே. 11

திருச்சிற்றம்பலம்

---

10. துவர் உறுகின்ற ஆடை - துவர் (காவி) ஊட்டிய துணி. அல்ல - (தேரர்) அல்லாத. கவர் உறு சிந்தையாளர் - பல தலையாய் உற்ற மனம் உடையவர். பலதலை - ஐயம். தவம்மலி பத்தர் சித்தர் மறையாளர் பேண - தவத்தின் மிகுந்த அன்பரும் சித்துவல்லாரும் வேதியரும் விரும்பிவழிபட. பா. 4இல் 'மலையின் கண் வந்து தொழுவார்' என்றது இதிற்குறித்த சித்தரையே.

11 ஞானம் உலாவு சிந்தை - திருப்பெருகு சிவஞானம் உலாவுகின்ற திருவுள்ளத்தில் சிந்திக்கும் வண்ணம்.

---

மின்னார் குடுமி நெடுவெற் பகங்கொங்கில்
வீழ்பனிநோய்
தன்னார் வழிகெட் டழிந்தமை சொல்லுவர்
காணிறையே
மன்னார் பரிசனத் தோர்மேற் புகலும்
எவர்க்கும்மிக்க
நன்னா வலர்பெரு மான்அரு காசனி
நல்கிடவே. —அந்தாதி 76

### 224 பதிகவரலாறு

திருவெண்காட்டில் மெய்ப்பொருளாயினுரை வழிபட்ட முத்தமிழ்விரகர் பத்தராம் அடியார் சூழத் திருமுல்லைவாயில் நித்தனுரை வணங்கிப் பாடிச் சார்த்திய செந்தமிழ் மாலை இத்திருப்பதிகம்.

**பண் - பியந்தைக்காந்தாரம்**

**திருச்சிற்றம்பலம்**

துளிமண்டியுண்டு நிறம்வந்தகண்ட
 ண்டமன்னுதுன்னுசுடரோன்
ஒளிமண்டியும்ப ருலகங்கடந்த
 வுமைபங்கனெங்களரனூர்
களிமண்டுசோலை கழனிக்கலந்த
 கமலங்கடங்குமதுவிற்
றெளிமண்டியுண்டு சிறைவண்டுபாடு
 திருமுல்லைவாயிலிதுவே. 1

பருவத்தில்வந்து பயனுற்றபண்ப
 னயனைப்படைத்த பரமன்
அரவத்தொடங்க மவைகட்டியெங்கு
 மரவிக்கநின்றவரனூர்
உருவத்தின்மிக்க வொளிர்சங்கொடிப்பி
 யவையோதமோதவெருவித்
தெருவத்தில்வந்து செழுமுத்தலைக்கொ
 டிருமுல்லைவாயிலிதுவே. 2

---

1. துளி - விஷத்துளி. நிறம்:- ஈண்டுக் கருமை. தெளி - தெளிவு, தேறல். ஊர்:- எழுவாய். (திருமுல்லைவாயிலாகிய) இது:- பயனிலை, இதுவே அரனூர் எனலுமாம்.

2. பருவத்தில் வந்து பயன் உற்ற பண்பன் என்பது இருவினை யொப்பும் மலபரிபாகமும் சத்திநிபாதமும் நிகழப் பெற்று, குருவருளால் சிவஞானம் வளரலுற்று, பழமலம்

வாராதநாடன் வருவார்தம்வில்லி
னுருமெல்கிநாளுமுருகில்
ஆராதவின்ப னகலாதவன்ப
னருண்மேவிநின்றவரனூர்
பேராதசோதி பிரியாதமார்பி
னலர்மேவுபேதைபிரியாள்
தீராதகாத னெதிநேரநீடு
திருமுல்லைவாயிலிதுவே. 3

ஒன்றொன்றொடொன்று மொருநான்கொடைந்து
மிருமூன்றொடேழுமுடனாய்
அன்றின்றொடென்று மறிவானவர்க்கு
மறியாமைநின்றவரனூர்
குன்றொன்றொடொன்று குலையொன்றொடொன்று
கொடியொன்றொடொன்றுகுழுமிச்
சென்றொன்றொடொன்று செறிவானிறைந்த
திருமுல்லைவாயிலிதுவே. 4

---

பற்றறுத்து, சிற்றறிவு தீர்ந்து, திருவடி அடையும் பருவத்தில் எழுந்தருளி வந்து, பயனாகப் பொருந்திய எண்குணத்தன். அரவிக்க - ஒலிக்க. தெருவம் - தெரு. முத்து + அலை + கொள் எனப்பிரிக்க. அலை - அலைதல். சங்கும் இப்பியும் முத்துக்களை ஈன்ற குறிப்புணர்த்தப்பட்டது.

3. வாராத நாடன் - மீண்டு வாராத பேரின்ப நாடுடையவன். வில்லின் உரு - வானவில்லைப்போலத் தோன்றி விரைந்து மறையும் உடம்பு, 'வாங்குசிலைபுரையும் உடல்' நால்வர் நான் மணிமாலை. வில்லைப்போலக் கூனிக் கெடும் உடம்பெனலுமாம். நாளும் உருகில் ஆராத இன்பன் - நாள்தோறும் பக்தியால் உருகித் தற்போதம் அற்றுச் சிவபோதம் உற்றால், அமையாத பேரின்பமாக விளங்குபவன். "உள்ளம் உருகில் உடனாவார்" (2. 111. 3.) கௌத்துவமணி நீங்காத திருமால் மார்பின்கண் வீற்றிருக்கும் திருமகள். மலர்மகள் பிரியாது, நீங்காத காதலுடன் செல்வம் தோன்ற நீடுகின்ற திருமுல்லைவாயில் என்னும் பொருளும் உரியதாகும்.

4. ஒன்று......ஏழும் உடனாய் - இருபத்தைந்தும் உடனாகி. தத்துவம் இருபத்தைந்தும் இவ்வாறு (1+1+1+4+5+6+7) தொகுத்து உரைக்கப்பட்டன. 1. மூலப்பகுதி (குணதத்துவ

கொம்பன்னமின்னி னிடையாளொர்கூறன்
விடை நாளுமேறுகுழகன்
நம்பன்னேன்மன்பன் மறைநாவன்வானின்
மதியேறுசென்னியரனூர்
அம்பன்னவொண்க ணவராடரங்கி
னணிகோபுரங்களழகார்
செம்பொன்னசெவ்வி தருமாடநீடு
திருமுல்லைவாயிலிதுவே. 5

---

காரணம்) 2. புத்தி. 3. அகங்காரம். 4. மனம். 5. செவி. 6. மெய் (துவக்கு) 7. கண். (நோக்கு) 8. வாய். (நாக்கு) 9. மூக்கு. 10. வாக்கு. 11. பாதம். 12. பாணி. 13. பாயு. 14. உபத்தம். 15. சத்தம். 16. பரிசம். 17. உருவம். 18. இரதம். 19. கந்தம். 20. ஆகாயம். 21. வாயு. 22. தேயு. 23. அப்பு. 24. பிருதிவி. என்னும் இருபத்துநான்கும் ஆன்மதத்துவங்களாகும். அவற்றுள், பிருதிவியை முதலாகக்கொண்டு எண்ணின், எண்ணப்பட்ட இருபத்துநான்கின் வேருய் எண்ணுகின்ற கர்த்தா ஒன்று உண்டு. அதுவே ஆன்மா. அவ்வான்மாவே கடவுள் என மயங்கி, அம்மயக்கத்தைத் தெளிவெனக் கொண்டவர்க்கு பரமான்மா வேறென்று உண்டு எனப் புலப்படாது. அவர், ஆன்மாக்களின் வேருய், அவற்றிற்கு உயிராய், உடனுய் இருக்கின்ற மெய்ப்பொருள் வேறு; இருபத்துநான்கு தத்துவங்களையும் கொண்டு நிற்கும் ஆன்மாக்கள் வேறு; அவ்வுண்மையை யறியாதார் பசுவைப் பதியாக் கொள்ளும் மயக்கம் மயக்கமே; தெளிவன்று; அது பாதகம் என்று உண்மையுணர்த்துவது சமய குரவர்க்குக் கடனுதலின், இத்திருப்பாட்டின் முன்னீரடியினும் தமது கடனாற்றினர் நமது சமயத்தின் ஆசிரியர். புருடதத்துவம் இருபத்தைந்தாவது. அதையே முடிவான பொருள் எனக்கொள்ளும் சமயமும் உண்டு. குறள். 27. உரை பார்க்க. சிவதருமோத்தரத்துள், 10-ஆவது சிவஞான யோகவியலின் 32-ஆவது செய்யுளுரைக்கீழ் பௌராணிகர் மதத்தின்படி கூறியுள்ளதும் அதன் உரையில், ஐயஞ்சின் அப்புறத்தானும் ஆரூரமர்ந்த அம்மானே. (4. 4. 10.) என்று மேற்கோள் காட்டியதும் உணர்க.

5. பூங்கொம்பு உமாதேவியார்க்கும் மின் இடுப்பிற்கும் கொள்ளலாம். குழகன் - இளைநன்; அழகன். கணவர் - கண்ணுடைய மகளிர். பொன்ன - பொன்னினுடைய.

ஊனேறுவேலி னுருவேறுகண்ணி
யொளியேறுகொண்டவொருவன்
ஆனேறதேறி யழகேறுநீற
னரவேறுபூணுமரனூர்
மானேறுகொல்லை மயிலேறிவந்து
குயிலேறுசோலைமருவித்
தேனேறுமாவின் வளமேறியாடு
திருமுல்லைவாயிலிதுவே. 6

நெஞ்சாரநீடு நினைவாரைமூடு
வினைதேயநின்றநிமலன்
அஞ்சாடுசென்னி யரவாடுகைய
னனலாடுமேனியரனூர்
மஞ்சாருமாட மனைதோறுமைய
முளதென்றுவைகிவரினுஞ்
செஞ்சாலிநெல்லின் வளர்சோறளிக்கொ
டிருமுல்லைவாயிலிதுவே. 7

வரைவந்தெடுத்த வலிவாளரக்கன்
முடிபத்துமிற்றுநெரிய
உரைவந்தபொன்னி னுருவந்தமேனி
யுமைபங்கனெங்களரனூர்

---

6. கண்ணி:- உமாதேவியார். அழகு ஏறும் நீறன் - 'சுந்தர மாவது நீறு' 'கவினைத்தருவது நீறு'; அழகு ஏறுதலால் 'கண் திகைப்பிப்பது நீறு' கொல்லையில் மானும், சோலையில் மயிலும் குயிலும் ஏறுதல் இயல்பு. மா - வண்டு. தேன் - மலர்கள். முல்லை மாவின் வளத்தில் ஏறியாடும் என்றால் மா-மரத்தையும், மாவின்வளம் முல்லையில் ஏறியாடும் என்றால் மா வண்டினையும் குறித்ததாக் கொள்க.

7. நெஞ்சார நீடு நினைவாரை மூடுவினை - உள்ளத் தாமரையில் சிவபெருமான் திருவடியே அன்றி மற்று எதையும் எண்ணமல், இடைவிடாது கருதிப்பணிகின்ற மெய்யடியரைச் சூழும் இருவினையும். தேய அவரைப் பற்ருது முற்றும் தேய்ந் தொழிய. நின்ற நிமலன் - அவர் உள்ளத்தாமரையில் நிலைத் தருளிய பரசிவன். ஈயப்படும் பொருளின் உயர்வு விளங்கச் செஞ்சாலிநெல்லின் வளர்சோறு எனக் குறிக்கப்பட்டது.

வரைவந்தசந்தொ டகிலுந்திவந்து
மிளிர்கின்றபொன்னிவடபாற்
றிரைவந்துவந்து செறிதேறலாடு
திருமுல்லைவாயிலிதுவே. 8

மேலோடிநீடு விளையாடன்மேவு
விரிநூலன்வேதமுதல்வன்
பாலாடுமேனி கரியானுமுன்னி
யவர்தேடநின்றபரனூர்
காலாடுநீல மலர்துன்றிநின்ற
கதிரேறுசெந்நெல்வயலிற்
சேலோடுவாளை குதிகொள்ளமல்கு
திருமுல்லைவாயிலிதுவே. 9

பணைமல்குதிண்கை மதமாவுரித்த
பரமன்னநம்பனடியே
நினைவன்னசிந்தை யடையாததேர
ரமண்மாயநின்றவரனூர்
வனமல்குகைதை வகுளங்களெங்கு
முகுளங்களெங்குநெரியச்
சினைமல்குபுன்னை திகழ்வாசநாறு
திருமுல்லைவாயிலிதுவே. 10

---

8. உரைவந்த பொன்னின் உருவந்தமேனி உமை - கட்டளைக்கல்லில் மாற்று உரைக்கப்பெற்ற சிறந்த பொன்னிறம் பொருந்திய திருமேனியை உடைய உமாதேவியார். தேறல் - தெளிதேன்.

9. 'மேலோடி....நூலன்'.- திருமார்பில் அணிந்த முப்புரி நூல் அவனது திருமேனியில் திருத்தோள்மேல் ஓடி நீடும் விளையாடுதல் மேவுதலை உணர்த்திற்று. விரிநூலன் என்பது சிவபிரான் என்னும் பொருட்டாய் நின்றதென்றும், அவன் விளையாடல் மேவியவன் என்றும் கொள்ளலும் பொருந்தும்.

10. 'பணை...கை':- 'பணைக்கை மும்மதவேழம்' பரமன் நம் நம்பன். நம்பன் அடியே நினைவு அன்னசிந்தை - சிவபெருமான் திருவடியே நினைக்கும் அத்தகைய சித்தத்தை. வகுளங்கள் - மகிழமரங்கள். முகுளங்கள் - மொட்டுக்கள்.

அணிகொண்டகோதை யவணன்றுமேத்த
வருள்செய்தவெந்தைமருவார்
திணிகொண்டமூன்று புரமெய்தவில்லி
திருமுல்லைவாயிலிதன்மேற்
றணிகொண்டசிந்தை யவர்காழிஞான
மிகுபந்தனெண்டமிழ்களின்
அணிகொண்டபத்து மிசைபாடுபத்த
ரகல்வானமாள்வர்மிகவே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. அணிகொண்ட கோதையவள் என்பது இத்தலத்து அம்பிகையின் திருப்பெயர். தணிகொண்ட சிந்தையவர் - விருப்பு வெறுப்புக்களால் உண்டாகும் வெப்பம் தணிதலை உடைய உள்ளத்தவர் 1 - 57 - 4. 7 - 8 - 7. சித்தியார் - 181. என்பவற்றில் குறிக்கப்பட்ட மனமே தணி கொண்டதாகும்.

---

நல்கென் றடியின் இணைபணி யார்சண்பை
நம்பெருமான்
பல்கும் பெரும்புகழ் பாடகில் லார்சிலர்
பாழ்க்கிறைத்திட்
டொல்கும் உடம்பின ராய்வழி தேடிட்
டிடறிமுட்டிப்
பில்கும் இடமறி யார்கெடு வார்உறு
பேய்த்தனமே. —அந்தாதி 77

தனமே தருபுகழ்ச் சைவ சிகாமணி
தன்னருள்போல்
மனமே புகுந்த மடக்கொடி யேமலர்
மேலிருந்த
வனமே அமிர்தக் குமுதச்செவ் வாயுங்க
ளாயம்என்னும்
இனமே பொலியவண் டாடெழிற் சோலையுள்
எய்துகவே. —அந்தாதி 78

# 89 திருக்கொச்சைவயம்

## 225 பதிகவரலாறு

137 - ஆவது பதிகத்தலைப்பைக் காண்க.

பண் - பியந்தைக்காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

அறையும் பூம்புன லோடு மாடர வச்சடை தன்மேற்
பிறையுஞ் சூடுவர் மார்பிற் பெண்ணொரு பாக மமர்ந்தார்
மறையி னெல்லொலி யோவா மந்திர வேள்வி யருத
குறைவி லந்தணர் வாழுங் கொச்சை வயமமர்ந் தாரே. 1

சுண்ணத்தர் தோலொடு நூல்சேர் மார்பினர் துன்னிய பூதக்
கண்ணத்தர் வெங்கன லேந்திக் கங்குனின் றாடுவர் கேடில்
எண்ணத்தர் கேள்விநல் வேள்வி யருதவர் மாலெரி யோம்பும்
வண்ணத்த வந்தணர் வாழுங் கொச்சை வயமமர்ந் தாரே. 2

பாலை யன்னவெண் ணீறு பூசுவர் பல்சடை தாழ
மாலை யாடுவர் கீத மாமறை பாடுதன் மகிழ்வர்
வேலை மால்கட லோதம் வெண்டிரை கரைமிசை விளங்குங்
கோல மாமணி சிந்துங் கொச்சை வயமமர்ந் தாரே. 3

---

1. அறையும் - ஒலிக்கும். மறையின் ஒல்ஒலி - வேதங்களை ஓதுவதால் உண்டாகும் ஒல்லென்னும் ஒலி. குறைவு இல் அந்தணர் - வேதாத்தியயனத்திலும், வைதிகாசாரத்திலும், யாககிருத்தியங்களிலும் குறைபாடில்லாத அழகும் குளிர்ச்சியும் உடையவர். வேதாந்தத்தை அணவுவார் அந்தணர் என்றார் நச்சினார்க்கினியர்.

2. சுண்ணத்தர் (திருநீற்றுப்) பொடியர். பூதக்கண்ணத்தர் என்பதில், ணகரமெய் எதுகை நோக்கி விரிந்தது. பூதகணத்தையுடையவர் என்பது பொருள். கேள்வி - சுருதி.

3. பாலை அன்னவெண்ணீறு:- "பவளம்போல் மேனியிற் பால் வெண்ணீறு" மாலை - இரவு. கீதம்......பாடுதல் மகிழ்வர். 4. 77. 3, 6. 34. 8, 2. 43. 5. மாமணி - உத்தமரத்நம், அழகிய முத்தும் நீலமணியும் ஆம்.

கடிகொள் கூவிள மத்தங் கமழ்சடை நெடுமுடிக் கணிவர்
பொடிகள் பூசிய மார்பிற் புனைவர்நன் மங்கையொர் பங்கர்
கடிகொ ணீடொலி சங்கி னொலியொடு கலையொலி துதைந்து
கொடிக ளோங்கிய மாடக் கொச்சை வயமமர்ந் தாரே. 4

ஆடன் மாமதி யுடையா ராயின பாரிடஞ் சூழ
வாடல் வெண்டலை யேந்தி வையக மிடுபலிக் குழல்வார்
ஆடன் மாமட மஞ்ஞை யணிதிகழ் பேடையொ டாடிக்
கூடு தண்பொழில் சூழ்ந்த கொச்சை வயமமர்ந் தாரே. 5

மண்டு கங்கையு மரவு மல்கிய வளர்சடை தன்மேற்
றுண்ட வெண்பிறை யணிவர் தொல்வரை வில்லது வாக
விண்ட தானவ ரரணம் வெவ்வழ லெரிகொள விடைமேற்
கொண்ட கோலம துடையார் கொச்சை வயமமர்ந் தாரே. 6

* * * 7

அன்ற வானிழ லமர்ந்து வறவுரை நால்வர்க் கருளிப்
பொன்றி னார்தலை யோட்டி லுண்பது பொருகட லிலங்கை
வென்றி வேந்தனை யொல்க வூன்றிய விரலினர் வான்றோய்
குன்ற மன்னபொன் மாடக் கொச்சை வயமமர்ந் தாரே. 8

---

4. மத்தம் கமழ்சடை. மார்பில் புனைதல்:- முதற்பாட்டின் குறிப்பிற் காண்க. கடி - மணம் (விவாகம்). கலை - வேதம் முதலிய கலை. துதைந்து - நெருங்கி

5. பாரிடம் - பூதம். வையகம் - பூமியோர். இடவாகு பெயர். உழல்வார் - சுழல்வார், தடுமாறுவார். இடுபலிக்கு வையகத்தில் திரிவார் எனலுமாம்.

6. மண்டு - மிக்குச்செல்லும், கங்கையும் பாம்பும் மல்கிய சடை, வளர்சடை. துண்டப்பிறை, வெண்பிறை. தானவர் - அசுரர்.

8. அன்று அ ஆல் நிழல் என்று பிரிக்க. பொன்றினார் தலை - இறந்த அயனார்தலை. வான்தோய் குன்றம் அன்னமாடம். பொன்மாடம். சீகாழியின் செல்வநெடுமாடம் சென்று சேணோங்கிய சிறப்புணர்த்திற்று.

சீர்கொண் மாமல ரானுஞ் செங்கண்மா லென்றிவ ரேத்த
ஏர்கொள் வெவ்வழ லாகி யெங்கு முறநிமிர்ந் தாரும்
பார்கொள் விண்ணழல் காணீர்ப் பண்பினர் பான்மொழி யோடுங்
கூர்கொள் வேல்வல னேந்திக் கொச்சை வயமமர்ந் தாரே. 9

குண்டர் வண்டுவ ராடை போர்த்ததொர் கொள்கையி னூர்கள்
மிண்டர் பேசிய பேச்சு மெய்யல மையணி கண்டன்
பண்டை நம்வினை தீர்க்கும் பண்பின ரொண்கொடி யோடுங்
கொண்டல் சேர்மணி மாடக் கொச்சை வயமமர்ந் தாரே. 10

கொந்த ணிபொழில் சூழ்ந்த கொச்சை வயநகர் மேய
அந்த ணனடி யேத்து மருமறை ஞானசம் பந்தன்
சந்த மார்ந்தழ காய தண்டமிழ் மாலைவல் லோர்போய்
முந்தி வானவ ரோடும் புகவலர் முனைகெட வினையே. 11

திருச்சிற்றம்பலம்

---

9 பார்கொள்விண் அழல்கால் நீர்ப்பண்பினர் - நிலம், வான், தீ, வளி, புனல் என்னும் ஐம்பெரும் பூதத்தின் இயல்பை உடையவர். "மண்ணிற்றிண்மை", "நீரில் இன்சுவை", "தீயின் வெம்மை", "காலின் ஊக்கம்", "வானிற்கலப்பு" இவற்றினைத் தோற்றியவன் இறைவனாதலின், அப்பண்புகள் அவனுடைமையல்லவோ? 'எல்லாம் உன் உடைமையே' (தாயுமானவர் பாடல்) பால்மொழி:- உமாதேவியார்.

10. துவர்க்கு வண்மை அடையாதலின் அதனது துவர் நிறத்தின் மிகுதி புலப்படும். பார்ப்பவர் கண்ணுக்கும் கருத்திற்கும் முறையே தோற்றத்தாலும் நினைப்பாலும் வெறுப்பை விளைக்கும் வண்டுவர் ஆடையில் ஊட்டப்பட்டது என்க. பேசிய பேச்சு மெய்யல்லாதவை, பொய்ப்பேச்சு.

11. அந்தணன் - தோணியப்பர். 'அறவாழி அந்தணன்' 'அந்தணர் என்போர் அறவோர்' 'அந்தணர் நூல்' என்பவற்றால் திருவள்ளுவர் குறிக்கும் பொருளை உணர்க. அருமறை ஞான சம்பந்தன்:- மறையின் அருமையும், அம்மறையால் எய்தும் ஞானமும், அந்தஞானத்தொடு தமக்குள்ள சம்பந்தமும் உணர்த்திப் பெயர்க்காரணம் புலப்படுத்தியவாறு. இத்திருப்பதிகம் சந்தம் நிறைந்தும் அழகுடையதாயும் உள்ள தமிழ் மாலை. அழகு - சொல்லழகு, பொருளழகு, தொடையழகு. திருவருட்பொலிவு. வினைகெடமுனை (முன்பு) புகவல்லவர்என்க.

# 90 திருநெல்வாயிலரத்துறை

## 226 பதிகவரலாறு

திருமுதுகுன்று, திருப்பெண்ணுகடம் பணிந்து திருவரத் துறை வரும்போழ்து, (ஒவ்வொருகால், தந்தையார் தோள் மேல் ஏறிவரும்) பிள்ளையார் பாததாமரை நோதலையும் நோக்காது பையநடந்தார். சிவனருளால் கனவிற் கண்டவாறு அரத்துறை அந்தணர் திருக்கோயிலில் கண்ட ஞானவேந்தர் ஏற முத்துச் சிவிகையும், அவர்க்குநிழலிட முத்துக்குடையும், 'தென்தமிழ் விளங்கவந்த திருக்கழுமலத்தான் வந்தான்... வந்தான்' என்று ஊத முத்துச் சின்னங்களும் இருந்தன. அன்பர் பலரோடும் சென்று அவற்றை ஆளுடைய பிள்ளை யாரிடம் கொடுத்தனர். அவர் மன்றுளார் அருள் என்று வணங்கினர். 'எந்தையீசன்' என எடுத்து 'இவ்வருள் வந்தவாறு மற்று எவ்வண்ணமோ' என்று சிந்தைசெய் தருளியதே இத்திருப்பதிகம்.

### பண் - பியந்தைக்காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

எந்தை யீசனெம் பெருமா னேறமர் கடவுளென் றேத்திச்
சிந்தை செய்பவர்க் கல்லாற் சென்றுகை கூடுவ தன்றால்
கந்த மாமல ருந்திக் கடும்புன னிவாமல்கு கரைமேல்
அந்தண் சோலை நெல்வாயி லரத்துறை யடிகடம் மருளே. 1

---

1. இத்திருப்பதிகம் முத்துச் சிவிகையில் ஏறுவதன் முன்னர், திருவருட் சிறப்புணர்த்தப் பாடியருளியது. அப் பொழுது ஆங்கு இருந்த அன்பர் அனைவர்க்கும் ஆண்டவன் திருவருளைப் பெறுவதற்கு வேண்டும் வழிபாட்டை வற்புறுத் துவதை ஒவ்வொரு பாடலிலும் உணரலாம். எட்டாவது திருப் பாட்டில் அருளைச் செயப்படுபொருளாகக் கொள்ளல்வேண்டும். ஏனைய ஒன்பது பாக்களிலும் அருள் எழுவாயாக நிற்றலறிக. ஈற்றுப்பாட்டில், அருளைச்சொன்ன பாடல் என்றதுணர்க. எந்தை, ஈசன், எம்பெருமான், ஏறமர்கடவுள் 2. 92. 5. என்று

ஈர வார்சடை தன்மே லிளம்பிறை யணிந்தவெம் பெருமான்
சீருஞ் செல்வமு மேத்தாச் சிதடர்க டொழச்செல்வ தன்றால்
வாரி மாமலர் நுந்தி வருபுன னிவாமல்கு கரைமேல்
ஆருஞ் சோலை நெல்வாயி லரத்துறை யடிகடம் மருளே. 2

பிணி கலந்தபுன் சடைமேற் பிறையணி சிவனெனப் பேணிப்
பணி கலந்துசெய் யாத பாவிக டொழச் செல்வ தன்றால்
மணி கலந்துபொன் னுந்தி வருபுன னிவாமல்கு கரைமேல்
அணி கலந்தநெல் வாயி லரத்துறை யடிகடம் மருளே. 3

துன்னவாடையொன் றுடுத்துத் தூயவெண் ணீற்றின ராகி
உன்னி நைபவர்க் கல்லா லொன்றுங்கை கூடுவ தன்றால்
பொன்னு மாமணி யுந்திப் பொருபுன னிவாமல்கு கரைமேல்
அன்ன மாருநெல் வாயி லரத்துறை யடிகடம் மருளே. 4

வெரு குரிஞ்சுவெங் காட்டி லாடிய விமலனென் றுள்கி
உருகி நைபவர்க் கல்லா லொன்றுங்கை கூடுவ தன்றால்
முரு குரிஞ்சுபூஞ் சோலை மொய்ம்மலர் சுமந்திழி நிவாவந்
தரு குரிஞ்சுநெல் வாயி லரத்துறை யடிகடம் மருளே. 5

---

எடுத்து வாக்கால் ஓதி மனத்தால் சிந்தித்து, (காயத்தால் வழிபாடு) செய்பவர்க்கே அடிகள் திருவருள் கைகூடுவது. சென்று - மலவழி மலநடை கொள்ளாது நீக்கி அருள்வழியில் அருணடைகொண்டு. நிவா:- ஆற்றின்பெயர். அரத்துறை:- அறத்துறை என்பதன் மரூஉ. அரன் துறை என்பது சிறவாது. றகரம் ரகரமாக ஒலித்தல் பல சொற்களிற் காணலாம்.

2. ஈரம் - குளிர்ச்சி. 'குளிருஞ்சடை' 2.62.6. 'குளிர்ந்தார் சடையன்' 1. 134. 3. சிதடர் - குருடர், பேதையர்.

3. பிணி - பிணிப்பு. சடையாதற்குப் பிணிப்பு இன்றியமையாதது. கலந்து - திரிகரணங்களும் ஒற்றுமையுற்று. பணிசெய்யாத பாவிகள். மணிகளையும் பொன்னையும் உந்தி(த் தள்ளி)க்கொண்டு வரும் நீர்.

4. துன்ன ஆடை - தைத்தலையுடைய ஆடை. அன்னம் - பறவை. திருஞானசம்பந்தர் காலத்தில் அன்னப்புள் இருந்த உண்மை இதனாலும் புலனாயிற்று.

5. வெருகு - காட்டுப்பூனை. உரிஞ்சு - தேய்க்கின்ற. உருகி நைபவர் - உள்ளம் உருகி இதுகாறும் இறைவனை வழிபட மறந்தமைக்கு வருந்துவோர். இழி - இறங்குகின்ற.

உரவு நீர்ச்சடைக் கரந்த வொருவனென் றுள்குளிர்ந் தேத்திப்
பரவி நைபவர்க் கல்லாற் பரிந்துகை கூடுவ தன்றுல்
குரவ நீடுயர் சோலைக்குளிர்புன னிவாமல்கு கரைமேல்
அரவ மாறு நெல்வாயி லரத்துறை யடிகடம் மருளே. 6

நீல மாமணி மிடற்று நீறணி சிவனெனப் பேணும்
சீல மாந்தர்கட் கல்லாற் சென்றுகை கூடுவ தன்றுல்
கோல மாமல ருந்திக் குளிர்புன னிவாமல்கு கரைமேல்
ஆலுஞ் சோலை நெல்வாயி லரத்துறை யடிகடம் மருளே. 7

செழுந்தண் மால்வரை யெடுத்த செருவலி யிராவண னலற
அழுந்த வூன்றிய விரலான் போற்றியென் பார்க்கல்ல தருளான்
கொழுங்க னிசுமந் துந்திக் குளிர்புன னிவாமல்கு கரைமேல்
அழுந்துஞ் சோலை நெல்வாயி லரத்துறை யடிகடம் மருளே. 8

நுணங்கு நூலயன் மாலுமிருவரு நோக்கரி யானை
வணங்கி நைபவர்க் கல்லால் வந்துகை கூடுவ தன்றுல்
மணங் கமழ்ந்துபொன் னுந்தி வருபுன னிவாமல்கு கரைமேல்
அணங்குஞ் சோலை நெல்வாயி லரத்துறை யடிகடம் மருளே. 9

---

6. உரவுநீர் - பரந்தகங்கை. 'ஊரங்கணநீர் உரவுநீர் சேர்ந்தக்கால் பேரும் பிறிதாகித் தீர்த்தமாம்' நாலடி. 175 என்பதில் பரந்த கடல்நீரைக் குறித்தல் அறிக. பரவி - வணங்கி வாழ்த்தி. 'பரவுவார் பிணிகளைவாய்' என்பதில் வணக்கமும், 'வாழ்த்துவதும்......யானும் உன்னைப் பரவுவனே' (திருவாசகம் 20). என்பதில் வாழ்த்தும் உணர்த்துவது உணர்க.

7. சீலமாந்தர் - ஞானியர். அவரே சிவனெனப்பேணும் உண்மைநிலை உணர்ந்தவர். 'திருநீலகண்டா! நீறணிமுதல்வா! சிவபெருமானே! எனப் போற்றும் மனிதரும் ஆம்.

8. விரலான்:- அண்மை விளி. அருளான்-அருள்செய்யான். அருள் அருளான் என்று இயைக்க. அடிகள் தம் அருளை, போற்றி என்பார்க்கு அல்லது அருளான்.

9. நுணங்கும் நூல்:- நூற்பொருளின் நுண்மை நூலின் மேல் ஏற்றிக்கூறப்பட்டது 'நுணங்கிய கேள்வியர்' குறள்.419. என்பதற்கு, 'கேட்கப்படுகின்ற பொருளினது நுண்மை கேள்வி

சாக்கி யப்படு வாருஞ் சமண்படு வார்களு மற்றும்
பாக்கியப்படு கில்லாப் பாவிக டொழச்செல்வ தன்றால்
பூக்க மழ்ந்துபொன் னுந்திப் பொருபுன னிவாமல்கு கரைமேல்
ஆர்க்குஞ் சோலை நெல்வாயி லரத்துறை யடிகடம் மருளே. 10

கறையி னார்பொழில் சூழ்ந்த காழியுண் ஞானசம் பந்தன்
அறையும் பூம்புனல் பரந்த வரத்துறை யடிகடம் மருளை
முறைமை யாற்சொன்ன பாடன் மொழியு மாந்தர்தம் வினைபோய்ப்
பறையு மையுற வில்லைப் பாட்டிவை பத்தும்வல் லார்க்கே. 11

திருச்சிற்றம்பலம்

---

மேலேற்றப்பட்டது' என்ற பரிமேலழகர் உரையை நோக்குக. அவன் வேதம் நுணங்கிய நூல், நோக்க அரியான் - நோக்கரியான். நான்கன் ஞுருகையாக்கலும் ஆம். கமழ்ந்து - தோற்றி. கமழ்ந்து உந்தி வருபுனல் என்றியைத்துக்கொள்க. அணங்கும்- அழகு செய்யும்.

10. சாக்கியப்படுவார் - சாக்கியமதத்தில் விழுபவர். சமண்படுவார் - சமண மதத்தில் விழுபவர். மற்றும் பாக்கியப்படகில்லாப் பாவிகள் - சாக்கியரும் சமணரும் அல்லாத வேறு மதங்களில் விழுந்து, சைவசமயம் புகும் பாக்கியத்தை அடைய மாட்டாத தீயவினையின் பயனை நுகர்பவர்கள். ஆர்க்கும் - ஒலிக்கும்.

11. பொழில் (சோலை), மரச்செறிவால் கதிரொளி புகப் பெறாது, இருண்டு கிடக்கும் நிலைபற்றிக் கறுப்பு நிறம் உரித்தாயிற்று. நிழல் என்பதற்கு ஒளி என்பது பொருளாதலின், பொழிலின் நிழல் காரொளியுடையதாதல் வேண்டும். அவ்வாறின்றி, உட்புக இயலாமல், தாவரச்செறிவு கறுத்த நிழலைச் செய்திருக்கின்றது என்றவாறு. மாந்தராகிய வல்லார்க்கு அவர் தம் வினைபோய்ப் பறையும். அதற்கு ஐயம் இல்லை. பறைதல் - அழிதல். வினை பறைவதில் வல்லார்க்கு ஐயம் இல்லை எனலுமாம். மொழிவதும் வன்மையுறுவதும் ஒன்றாகா. இத்திருப்பதிகத்துள், திருவருளைக் கூடவேண்டின் சிவநாமங்களை எடுத்தோதியும் அவன் சீரும் செல்வமும் சொல்லிப் போற்றியும், உருகிப்பரவி நைந்தும், பேணிப்பணிகள் செய்தும் வழிபடுவது இன்றியமையாதது என்பது உணர்த்தப்பட்டது.

# 91 திருமறைக்காடு

## 227 பதிகவரலாறு

திருவாய்மூரில் சிவபிரான் திருவடியைப் பணிந்துபாடி அங்கு வைகி, கூடும் மெய்யன்பு பொங்க, திருநாவுக்கரசு நாயனாரும் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரும் சேர்ந்து, மீண்டும், திருமறைக் காடுற்றனர். அத்தமிழ்மொழித் தலைவரோடு சண்பைநாடுடைய பிள்ளை அம்மறைக்காட்டுறையும் மணாளன்மலரடிகளை வணங்கிக்கொண்டு வாழ்ந்திருந்த காலத்தில் பாடியருளியது இத்திருப்பதிகம்.

### பண் - பியந்தைக்காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

பொங்கு வெண்மணற் கானற் பொருகடற் றிரைதவழ் முத்தம்
கங்கு லாரிருள் போழுங் கலிமறைக் காடமர்ந் தார்தாம்
திங்கள் சூடின ரேனுந் திரிபுர மெரித்தன ரேனும்
எங்கு மெங்கள் பிரானார் புகழல திகழ்பழி யிலரே. 1

கூனி ளம்பிறை சூடிக் கொடுவரித் தோலுடை யாடை
ஆனி லங்கிள ரைந்து மாடுவர் பூண்பது மரவம்
கான லங்கழி யோதங் கரையொடு கதிர்மணி ததும்பத்
தேன லங்கமழ் சோலைத் திருமறைக் காடமர்ந்தாரே. 2

---

1. போழும் - பிளக்கும். கலி - ஒலி. மறைக்கு அடை; காட்டிற்கு அன்று திங்களைச்சூடியதும் திரிபுரத்தை எரித்ததும் புகழே அன்றிப் பழியாகாது. இகழ்பழி:- வினைத்தொகை. இகழாகிய பழி எனலும் பொருந்தும்.

2. ஆனில் அம் கிளர்ஐந்து:- 2. 10. 5. 'நாயன்மார் ஆனைந்தில் இரண்டுபேர் உரையார் நவையெனமற்று இரண்டொன்று நயந்துளது ஆன்மூலைக்கண்' என்னும் ஞானபூசாவிதி 14 ன் உரைக்கண். கோமயம் கோசலம் இரண்டும் ஆகா என்று இவையிற்றில்பேர் ஐந்து என்ற திருப்பாட்டுக்களில் அருளிச்செய்யாமல் அடக்கியருளிச் செய்தார்கள். நின்ற நெய்

நுண்ணி தாய்வெளி தாகி நூல்கிடந் திலங்குபொன் மார்பில்
பண்ணி யாழென முரலும் பணிமொழி யுமையொரு பாகன்
தண்ணி தாயவெள் ளருவி சலசல நுரைமணி ததும்பக்
கண்ணி தானுமோர் பிறையார் கவிமறைக் காடமர்ந் தாரே. 3

ஏழை வெண்குரு கயலே யிளம்பெடை தனதெனக் கருதித்
தாழை வெண்மடற் புல்குந் தண்மறைக் காடமர்ந் தார்தாம்
மாழை யங்கய லொண்கண் மலைமகள் கணவன தடியின்
நீழ லேசர ணாக நினைபவர் வினை நலி விலரே. 4

அரவம் வீக்கிய வரையு மதிர்கழ றழுவிய வடியும்
பரவ நாஞ்செய்த பாவம் பறைதர வருளுவர் பதிதான்
மரவ நீடுயர் சோலை மழலைவண் டியாழ்செயு மறைக்காட்
டிரவு மெல்லியும் பகலு மேத்துதல் குணமென லாமே. 5

---

பால் தயிருமாக அஞ்சையும் ஒரு பாத்திரத்திலே கூட்டி உண்டாக்கிவைத்து என்று எழுதியிருத்தலை உணர்க. 60. 99. 8, 5. 49. 10, 7. 5. 1,

3. மார்பில் அணியும் நூல் நுண்மையும் வெண்மையும் உடையதாயிருத்தல்வேண்டும். அதுகொண்டு முதுகின் அழுக்காற்றுவார்க்கு இதுதெரியுமே? பண் + யாழ் = பண்ணியாழ். மாதர்பிறைக் கண்ணியான். 4. 3. 1.

4. வேதாரணியத்தில் ஏழைவெண்ணுரையானது தாழை மடலைத் தனது நற்றுணைப்பேடை என்றுகருதித் தழுவுமென்க. (நாரை)இது தாழை இதுபேடை எனப்பகுத்தறியும் அறிவு இல்லாமையால் ஏழைநாரை என்றார். புல்குதல் - கூடுதல். மாழை - அழகு, இளமை. அடியின் நீழலே சரணாநினைபவர் என்றதால், சிவனடியார்கள் சிந்தனைக் குரியது சிவனடியே அன்றிப்பிறிது யாதும் இல்லை என்றுணரலாம். 'காதலால் அவை இரண்டுமே செய்கருத்து உடையார்' (திருநீலநக்கர் 5) என்புழி அருச்சித்தல் பணிதல் என்று தொழிலால் இரண்டாயினும் சிந்தனையால் ஒன்றே ஆதல் உணர்க.

5. வீக்கிய - கட்டிய அரை - திருவரை (- இடுப்பு). கழலடி. அரையையும் அடியையும் பரவினால் பாவம் அழியும் வண்ணம் அருள்செய்யும் பரசிவன். மரவம் - குங்குமமரம்.

பல்வி லோடுகை யேந்திப் பாடியு மாடியும் பலிதேர்
அல்லல் வாழ்க்கைய ரேனு மழகிய தறிவரெம் மடிகள்
புல்ல மேறுவர் பூதம் புடைசெல வுழிதர்வர்க் கிடமாம்
மல்கு வெண்டிரை யோத மாமறைக் காடது தானே. 6

நாகந் தான்கயி றாக நளிர்வரை யதற்குமத் தாகப்
பாகந் தேவரொ டசுரர் படுகட லளறெழக் கடைய
வேக நஞ்செழ வாங்கே வெருவொடு மிரிந்தெங்கு மோட
ஆகந் தன்னில்வைத் தமிர்த மாக்குவித் தான்மறைக் காடே. 7

---

இரவும் எல்லியும் பகலும் - 'இரவும் எல்லியும் ஏத்தித் தொழுமினே' 5. 74. 9. 'எல்லியும் பகலும் இசைவானவா சொல்லிடீர்' 5. 75. 6. 'எல்லியும் பகலும் உள்ளே ஏகாந்தமாக ஏத்தும்' 4. 41. 3. 'எல்லியும் பகலும் பணியது செய்வேன்' 7. 69. 7. இரவும் எல்லியும் பகலும் ஏத்துவார் 'எம்மையும் ஆளுடையாரே' 7. 75, 8. என்பவற்றை ஆராய்ந்தால் இரவுக்கும் பகலுக்கும் வேறாயது எல்லி என்று புலனாகும். ஆயின், அவ்விரண்டினும் வேறாய் நிற்பது அவ்விரண்டன் சந்தியேயன்றி வேறில்லை. இரவொடு பகலும், பகலொடு இரவும் சந்திக்கும் இரண்டிலும் எல் (ஒளி) இருப்பதால் 'எல்லி' என்ற பெயர் பெற்றது. எல் - ஒளி, சூரியன், பகல். எல்லியை இரவென்னும் பொருளில் வழங்குதல் பயின்றுளது.

6. பல் இல் (லாத) ஓடு. பலிதேரும் வாழ்க்கை அல்லலை ஆக்குவதேனும் அடிகளுக்கு அழகியது. அதனையும் அவரே அறிவார். புல்லம் - (புல்லைமேயும்) எருது. 'புல்வாய்' என மானைக்குறித்தல் காண்க. உழிதர்வர் - உழிதருவர். பா. 10. பார்க்க. திரிவர். 'உழிதருகால்' (திருவாசகம்) திரிதருவர் - திரிதர்வர், திரிதவர், 'தேவர் என்றே இறுமாந்து என்னபாவம் திரிதவரே' (ஷ).

7. வரை - மந்திரமலை. தேவாசுரர் பாற்கடல் கடைந்த வரலாறு. வெருவ - வாய்பிதற்றல். ஆகம் - மார்பு, உடம்பு, உடம்பாயின், உடம்பினுள் என்றும், மார்பாயின் அதன்மேல் ஆதேயமான கழுத்தில் என்றும் கருதுக.

தக்கன்வேள்வியைத்தகர்த்தோன்றனதொருபெருமையையோரான்
மிக்கு மேற்சென்று மலையை யெடுத்தலு மலைமக ணடுங்க
நக்குத் தன்றிரு விரலா லூன்றலு நடுநடுத் தரக்கன்
பக்க வாயும்விட் டலறப் பரிந்தவன் பதிமறைக் காடே. 8

விண்ட மாமல ரோனும் விளங்கொளி யரவணை யானும்
பண்டுங் காண்பரி தாய பரிசின னவனுறை பதிதான்
கண்ட லங்கழி யோதங் கரையொடு கதிர்மணி ததும்ப
வண்ட லங்கமழ் சோலை மாமறைக் காடது தானே. 9

பெரிய வாகிய குடையும் பீலியு மவைவெயிற் கரவாக்
கரிய மண்டைகை யேந்திக் கல்லென வுழிதருங் கழுக்கள்
அரிய வாகவுண் டோது மவர்திற மொழிந்துநம் மடிகள்
பெரிய சீர்மறைக் காடே பேணுமின் மனமுடை யீரே. 10

மையு லாம்பொழில் சூழ்ந்த மாமறைக் காடமர்ந் தாரைக்
கையி னூற்றெழு தெழுவான் காழியுண் ஞானசம் பந்தன்
செய்த செந்தமிழ் பத்துஞ் சிந்தையுட் சேர்க்கவல் லார்போய்ப்
பொய்யில் வானவ ரோடும் புகவலர் கொளவலர் புகழே 11

திருச்சிற்றம்பலம்

---

8. தனது பெருமையை ஓரான்:- தன்பெருமைதான் அறியாத் தன்மையன்' (திருவாசகம்) ஓரான்:- உணரான் என்பதன் மரூஉவாகும் நக்கு - சிரித்து. நடுநடுத்து - நடுநடுங்கி பரிந்தவன் - இரங்கியவன்.

9. விண்ட - (பூத்த) இதழ்கள் விள்ள லுற்ற. அரவு - அணை - சர்ப்பசயனம்; பண்டும் என்றதால் இன்றும் காணாமை எனப்படும். கண்டல் - தாழை, நீர்முள்ளியும் ஆம்.

10. பெருங்குடையும் மயிற்பீலியும் உடைய அப் புறப் புறச் சமயத்தவர். மண்டை - உள்கலம். உண்டு - உணவு கொண்டு. 'உண்டாம் இல்லையாம்' என்பன முதலியவை.

11. மை - மேகம். பொய்யில்வானவர் - அழியாத வீட்டுல கினர்.

# 92 திருப்புகலூர்வர்த்தமானீச்சரம்

## 228 பதிகவரலாறு

திருப்புகலூர்த் தொண்டர்களொடும் செம்மை முருகனர் எதிர்கொள்ள வந்து, வேதமுதல்வர் திருக்கோயிலை எய்திப் புகுந்து பூமலிமுன்றிற் புடைவலங்கொண்டு ஒருப்படு சிந்தையொடும் அணைந்த திருஞானசம்பந்தமூர்த்திநாயனர், பணிந்து சார்த்திய தமிழ்த்தொடை மாலை இத்திருப்பதிகம்.

பண் - பியந்தைக்காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

பட்டம் பானிற மதியம் படர்சடைச் சுடர்விடு பாணி
நட்ட நள்ளிரு ளாடு நாதன் நவின்றுறை கோயில்
புட்டன் பேடையொ டாடும் பூம்புக லூர்த்தொண்டர் போற்றி
வட்டஞ் சூழ்ந்தடி பரவும் வர்த்தமா னீச்சரத் தாரே. 1

முயல்வ ளாவிய திங்கள் வாண்முகத் தரிவையிற் றெரிவை
இயல்வ ளாவிய துடைய வின்னமு தெந்தையெம் பெருமான்
கயல்வ ளாவிய கழனிக் கருநிறக் குவளைகண் மலரும்
வயல்வ ளாவிய புகலூர் வர்த்தமா னீச்சரத் தாரே. 2

தொண்டர் தண்கய மூழ்கித் துணையலுஞ் சாந்தமும் புகையும்
கொண்டு கொண்டடி பரவிக் குறிப்பறி முருகன்செய் கோலம்
கண்டு கண்டுகண் குளிரக் களிபரந் தொளிமல்கு கள்ளார்
வண்டு பண்செயும் புகலூர் வர்த்தமா னீச்சரத் தாரே. 3

---

1. பட்டம்-உத்தரீயம். பாணி - கங்கை. 'பாணி மூவுலகும் புதைய மேல்மிதந்த' தோணிபுரத்துறைந்தனே' 1. 128. 'விண்ணியல்பாணியன்' பொன்வண். 30. 'நள்ளிருளில் நட்டம் பயின்றாடும்நாதன்' புள் - பறவை. பேடை - பெண்பறவை.

2. முயல்-களங்கம். திங்கள் (-சந்திரன்) இடத்திருப்பது. அரிவை தெரிவை இரண்டும் மாதர் பருவத்தின் வேறுபாட்டாற் பெற்ற பெயர்கள். கண்மலரும் - கண்போல் பூக்கும். குவளைகள் பூக்கும் எனலுமாம்.

3. கயம் - நீர்நிலை- துணையல் - மாலை. 'கொண்டு' இரண்டனுள், ஒன்று துணையல் முதலியவற்றைக்கொண்டு என்றும்

பண்ண வண்ணத்த ராகிப் பாடலொ டாடல ருத
விண்ண வண்ணத்த ராய விரிபுக லூரரொர் பாகம்
பெண்ண வண்ணத்த ராகும் பெற்றியொ டாணிணை பிணைந்த
வண்ண வண்ணத்தெம் பெருமான் வர்த்தமா னீச்சரத்தாரே. 4

ஈச னேறமர் கடவு ளின்னமு தெந்தையெம் பெருமான்
பூசு மாசில் வெண் ணீற்றர் பொலிவுடைப் பூம்புக லூரில்
மூசுவண் டறை கொன்றை முருகன்முப் போதுஞ்செய் முடிமேல்
வாச மாமல ருடையர் வாத்தமா னீச்சரத் தாரே. 5

தளிரி ளங்கொடி வளரத் தண்கய மிரியவண் டேறிக்
கிளரி ளம்முழை நுழையக் கிழிதரு பொழிற்புக லூரில்
உளரி ளஞ்சுனை மலரு மொளிதரு சடைமுடி யதன்மேல்
வளரி ளம்பிறை யுடையார் வர்த்தமா னீச்சரத் தாரே. 6

---

மற்றொன்று அடியை உளங்கொண்டு என்றும் கொள்ள நின்றமை உணர்க. குறிப்பு அறிமுருகன்:- முருகநாயனர் சிறப் புணர்த்திற்று. அவரது குறிப்பு அறியும் ஆற்றலே, தமக்கு நண்பருமாம் பெருமைதந்த பிள்ளையாரே அறிவார். பூக்கள் திறக்கும் அநுபவ மிகுதியால், அவற்றைக்கொள்ளும் சமயக் குறிப்பும் ஆம்.

4. பண்ண வண்ணத்தர் - பண்ணிசை மயமான சிவ பெருமான். 'ஏழிசையாய் இசைப்பயனாய்'. விண்ணவண்ணத்தர்- ஆகாசரூபர். பாகம் பெண்ணவண்ணத்தர் - அம்மையப்பர். அர்த்தநாரீச்சுரர். ஆண் இணை பிணைந்தவண்ண வண்ணத்து எம்பெருமான் என்றது அறியத்தக்கது.

5. இதன் முதலடியோடு ஒத்தது முன் 2. 90. 1. உணர்ந் தது. பூச - பூசுதற்கு. நீற்றர் - நீறுடையவர். பூச என்னும் எச்சம் நீற்றர் என்னும் வினைக்குறிப்பில் உடையர் என்பதோடு முடிந்தது.

6. இளமுழை - இளமான். உளர் - அசைகின்ற; சுழல் கின்ற. தளிர்களையுடைய கொடி, இளங்கொடி. தண்கயம் - குளிர்ந்த நீர்நிலையில். இரிய - சாய. சுனைமலரும் ஒளிதருஞ் சடை. சடைமுடிமேல் பிறை உடையார்.

தென்சொல்விஞ்சமர் வடசொற்றிசைமொழி யெழினரம்பெடுத்துத்
துஞ்சு நெஞ்சிரு ணீங்கத் தொழுதெழு தொல்புக லூரில்
அஞ்ச னம்பிதிர்ந் தனைய வலைகடல் கடையவன் றெழுந்த
வஞ்ச நஞ்சணி கண்டர் வர்த்தமா னீச்சரத் தாரே. 7

சாம வேதமொர் கீதமோ தியத் தசமுகன் பரவும்
நாம தேயம துடையார் நன்குணர்ந் தடிகளென் றேத்தக்
காம தேவனை வேவக் கனலெரி கொளுவிய கண்ணர்
வாம தேவர்தண் புகலூர் வர்த்தமா னீச்சரத் தாரே. 8

சீர ணங்குற நின்ற செருவுறு திசைமுக னோடு
நார ணன்கருத் தழிய நகைசெய்த சடைமுடி நம்பர்
ஆரணங்குறு முமையை யஞ்சுவித் தருளுதல் பொருட்டால்
வார ணத்துரி போர்த்தார் வர்த்தமா னீச்சரத் தாரே. 9

---

7. தென்சொல் - தமிழ். விஞ்சுதல் - மிகுதல். வடசொல் - ஆரியபாடை. திசைமொழி - ஏனைய மொழிகளினின்று தமிழில் வந்து வழங்கும் சொற்கள். சிவதோத்திரம் பாடும் பாஷைகள் குறிக்கப்பட்டன. நெஞ்சு இருள் - நெஞ்சிலுள்ள (அகத்து) இருள். எழில் நரம்பெடுத்தலாவது:- இசை எழுச்சியையுடைய யாழ்நரம்பில் அமைத்துப் பாடுதல். அஞ்சனம் - மை. நஞ்சுக் குவமை.

8. தசமுகன் (இராவணன்) சாமவேத கீதம்பாடி நலம் உற்றான். நாமதேயம் - பெயராற் சுட்டப்படுவது. கண்ணர் - நெற்றிக் கண்ணினர். வாமதேவர் - பஞ்சப்பிரம மந்திரரூப மூர்த்திகளுள் ஒன்றாய் விளங்கும் சிவபிரான் சதாசிவருடைய ஐந்துமுகத்தில் நான்காவது வாமதேவம்.

9. அணங்கு - தெய்வம், அழகுமாம். செரு - இருவரும், சிவபிரானைக் காண்பேன் என்று சொல்லி நிகழ்த்திய போர். 'அவனொடு நாராயணனும் கருத்தழிய நம்பர் நகைசெய்தார்.' அஞ்சுவித்து - அஞ்சச்செய்து. வாரணத்து உரி - யானைத்தோல்.

கையி லுண்டுழல் வாருங் கமழ்துவ ராடையி னுற்றம்
மெய்யைப் போர்த்துழல் வாரு முரைப்பன மெய்யென விரும்பேல்
செய்யில் வாளைக ளோடு செங்கயல் குதிகொளும் புகலூர்
மைகொள் கண்டத்தெம் பெருமான் வர்த்தமா னீச்சரத்தாரே. 10

பொங்கு தண்புனல் சூழ்ந்து போதணி பொழிற்புக லூரில்
மங்குன் மாமதி தவழும் வர்த்தமா னீச்சரத்தாரைத்
தங்கு சீர்திகழ் ஞான சம்பந்தன் றண்டமிழ் பத்தும்
எங்கு மேத்தவல் லார்க ளெய்துவ ரிமையவ ருலகே. 11

திருச்சிற்றம்பலம்

---

*10.* ஆடையினால் தம் உடம்பைப் போர்த்து உழல்வார் தேரர். உரைப்பன - உரைக்கும் புறப்புறச் சமயக் கொள்கைகளை. மெய் - வாய்மை. விரும்பேல் - விரும்பாதே. செய் - கழனி. வாளையும் கயலும் மீன்கள் மை - கருநிறம்.

*11.* போது - பூவின் முன்னைய பருவத்தது. மங்குல் - ஆகாயம். மதிதவழும் ஈச்சுரம் என்றுகொண்டு, அத்திருக் கோயிலின் உயர்ச்சியைக் கருதுக. ஈச்சரத்தாருக்கு ஏற்றின் பிறையணிந்த வரலாறு குறித்ததாம். தங்குசீர் - நிலைத்த சீர்த்தி. 'தண்டமிழ்' என்றது இத்திருப்பதிகத்தை.

---

உகட்டித்து மோட்டு வரால்இனம் மேதி
முலையுரிஞ்ச
அகட்டிற் சொரிபால் தடநிறை கொச்சை
வயத்தரசைத்
தகட்டில் திகழ்மணிப் பூண்தமி ழாகரன்
தன்னையல்லால்
பகட்டிற் பொலியினும் வேண்டேன் ஒருவரைப்
பாடுதலே,
—அந்தாதி 79

# 93 திருத்தெங்கூர்

## 229 பதிகவரலாறு

திருஞானசம்பந்த நாயனார், திருவாரூர், திருக்காறுயில், தேவூர், திருநெல்லிக்கா, திருக்கைச்சினம் ஆகிய தலங்களை வழிபட்டு வந்தகாலத்தில், தெங்கூரை அணைந்து பரவிப் பாடியது இத்திருப்பதிகம்.

### பண் - பியந்தைக்காந்தாரம்

### திருச்சிற்றம்பலம்

புரைசெய் வல்வினை தீர்க்கும் புண்ணியர் விண்ணவர் போற்றக்
கரைசெய் மால்கட னஞ்சை யுண்டவர் கருதலர் புரங்கள்
இரைசெய் தாரழ லூட்டி யுழல்பவ ரிடுபலிக் கெழில்சேர்
விரைசெய் பூம்பொழிற் றெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரே. 1

சித்தந் தன்னடி நினைவார் செடிபடு கொடுவினை தீர்க்குங்
கொத்தின் றாழ்சடை முடிமேற் கோளெயிற் றரவொடு பிறையன்
பத்தர் தாம்பணிந் தேத்தும் பரம்பரன் பைம்புனல் பதித்த
வித்தன் றாழ்பொழிற் றெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரே. 2

அடையும் வல்வினை யகல வருள்பவ ரனலுடை மழுவாட்
படையர் பாய்புலித் தோலர் பைம்புனற் கொன்றையர் படர்புன்
சடையில் வெண்பிறை சூடித் தார்மணி யணிதரு தறுகண்
விடையர் வீங்கெழிற் றெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரே. 3

---

1\. ஆரழலுக்கு இரையாச் செய்து ஊட்டி, இடுபலிக்கு உழல்பவர் அமர்ந்தார் என்றார். தென்கு (தெங்கு)+ஊர்= தெங்கூர்.

2\. தன் அடி சித்தம் நினைவார் வினை என்றியைக்க. சித்தத்தில் நினைவார். செடிபடு-பாவத்தாலுண்டான. பிறையன் என்பது சிவனென்னும் பெயரளவாய் நின்று. தீர்க்கும் எனு மெச்சத்தைக் கொண்டது. கோள் - வலிமை, கொலை. புனல் பதித்த வித்தன் - நீரில் பதியச்செய்த விதையானவன். 60. 15. 2. திருவாசகம் 253. காண்க.

3\. வினை அகல அருள்பவர். விடை எருதுக்கு அதன் கழுத்தில் மணிகட்டுதல் உண்மையான், மணி அணிதரு விடை

பண்டு நான்செய்த வினைகள் பறையவோர் நெறியருள் பயப்பார்
கொண்டல் வான்மதி சூடிக் குரைகடல் விடமணி கண்டர்
வண்டு மாமலை ரூதி மதுவுண விதழ்மறி வெய்தி
விண்ட வார்பொழிற் றெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரே. 4

சுழித்த வார்புனற் கங்கை சூடியொர் காலனைக் காலால்
தெழித்து வானவர் நடுங்கச் செற்றவர் சிறையணி பறவை
கழித்த வெண்டலை யேந்திக் காமன துடல்பொடி யாக
விழித்த வர்திருத் தெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந்தாரே. 5

தொல்லை வல்வினை தீர்ப்பார் சுடலைவெண் பொடியணி சுவண்டர்
எல்லி சூடிநின் றாடு மிறையவ ரிமையவ ரேத்தச்
சில்லை மால்விடை யேறித் திரிபுரந் தீயெழச் செற்ற
வில்லி னார்திருத் தெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரே. 6

---

எனப்பட்டது. தறுகண் - கொடுமை; அஞ்சத் தக்கவற்றிற்கு அஞ்சாமை. 'தறுகணன்' (நன்னூல்) கண் என்பதன் முன் சில முதனிலைகள் சேர்ந்து வெவ்வேறு பொருள் பயத்தலை - அலக்கண், புண்கண், இடுக்கண் (இடுங்குகண்) வன்கண் முதலியவற்றிற் காண்க.

4. பறைய - அழிய, பயப்பார். கொண்டல் - மேகம். வானிற்கு அடை. குரைகடல் - முழங்கும் கடல். வண்டு... விண்டபொழில் - இயற்கை உணர்த்திற்று.

5. சுழித்த - சுழற்சியைச் செய்த, தெழித்து - கோபித்து, சிறையணிபறவை கழித்த வெண்டலை - பிரமகபாலம். அன்னப் பறவையான காரணம் பற்றியது.

6. தொல்லை வினை - பூர்வகர்மம், பிராரப்தம், சஞ்சிதம் இரண்டும், சுவண்டர்:- சு=அண்டர் நல்லதேவர் எனவும் இடனில்லை. 'சுந்தரராய்த் தூமதியம் சூடுவது சுவண்டே 7 470. என்பது கொண்டு முன்பொருத்தம் என்றேம். அது இங்குப் பொருந்தாது. எல்லி - தண்ணொளியுடைய திங்கள். எல் - ஒளி. இல்லை - இழிவு. பாசக்கடற்குளே வீழ்கின்றதே இழிவு. வில்லினார் - மேருமலையாகிய வில்லையுடையார்.

நெறிகொள் சிந்தைய ராகி நினைபவர் வினைகெட நின்றார்
முறிகொண் மேனிமுக் கண்ணர் முளைமதி நடுநடுத் திலங்கப்
பொறிகொள் வாளர வணிந்த புண்ணியர் வெண்பொடிப் பூசி
வெறிகொள் பூம்பொழிற் றெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரே.

எண்ணி லாவிற லரக்க னெழிறிகழ் மால்வரை யெடுக்கக்
கண்ணெ லாம்பொடிந் தலறக் கால்விர லூன்றிய கருத்தர்
தண்ணு லாம்புனற் கண்ணி தயங்கிய சடைமுடிச் சதுரர்
விண்ணு லாம்பொழிற் றெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந்தாரே. 8

தேடித் தானயன் மாலுந் திருமுடி யடியிணை காணார்
பாடத் தான்பல பூதப்படையினர் சுடலையிற் பலகால்
ஆடத் தான்மிக வல்ல ரருச்சுனற் கருள்செயக் கருதும்
வேடத் தார்திருத் தெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரே. 9

சடங்கொள் சீவரப் போர்வைச் சாக்கியர் சமணர்சொற் றவிர
இடங்கொள் வல்வினை தீர்க்கு மேத்துமி னிருமருப் பொருகைக்
கடங்கொண் மால்களிற் றுரியர் கடல்கடைந் திடக்கனன் றெழுந்த
விடங்கொள் கண்டத்தர் தெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரே.

---

7. நெறி - திருநெறி. முறி - தளிர். முளைமதி - பிறை. வெறி - மணம்.

8. எண் - கணக்கு. விறல் - வலிமை. கருத்தர் தலைவர் வினைமுதல்வர். கண்ணி - கங்கை. பிறைக்கண்ணியுமாம். விண் உலாம் பொழில்:- சோலையுயர்வு குறித்தது.

9. அயனும் மாலும் முறையே திருமுடியையும் திருவடி யிணையையும் தேடித்தான் காணார். இணை-ஒத்தன (இரண்டும்,) பாட...படையினர்:- பாட என்னும் வினையெச்சம் படையை உடையவர் என்பதில் உள்ள உடையவர் எனும் வினைக் குறிப்பைக் கொண்டது. ஆடவல்லர். வேடத்தார் - வேட்டுவக் கோலத்தார்-

10. சடம் - உடம்பு, பொய், இடம் கொள் - மாயையைப் பற்றுக் கோடாகக்கொண்ட. இருமருப்பு - இரண்டு (பெருங்) கொம்பு. கடம் - மதநீர். களிற்றுரியர் - யானைத்தோலர், கனன்று - வெம்மை வீசி.

வெந்த நீற்றினர் தெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரைக்
கந்த மார்பொழில் சூழ்ந்த காழியுண் ஞானசம் பந்தன்
சந்த மாயின பாடற் றண்டமிழ் பத்தும்வல் லார்மேல்
பந்த மாயின பாவம் பாறுத றேறுதல் பயனே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. சந்தம் ஆயின பாடல் - சந்தப்பாடல். பந்தம் ஆயின பாவம் - வினைப்பற்று உண்டாவதற்கு ஏதுவான பாவங்கள். பாறுதல் - ஓடுதல். தேறுதல் - தெளிதல்.

---




பாடிய செந்தமி ழாற்பழங் காசு
பரிசில்பெற்ற
நீடிய சீர்திரு ஞானசம் பந்தன்
நிறைபுகழான்
நேடிய பூந்திரு நாவுக் கரசோ
டெழின்மிழலைக்
கூடிய கூட்டத்தி னல்உள தாய்த்திக்
குவலயமே.

—அந்தாதி 80

வலையத் திணிதோள் மிசைமழ வேற்றி
மனைப்புறத்து
நிலைஎத் தனைபொழு தோகண்ட தாரனை
நீதிகெட்டார்
குலையக் கழுவின் குழுக்கண்ட வன்திகழ்
கொச்சையன்ன
சிலையொத்த வாணுதல் முன்போல் மலர்க
திருக்கண்களே.

—அந்தாதி 81

## 230 பதிகவரலாறு

காழிவேந்தர், திருப்பந்தணைநல்லூரையும், திருவோமாம் புலியூரிலுள்ள வடதளியையும் வழிபட்டு, 'அலர்ந்த செந் தமிழ்ச் சொற்றொடை' பாடி, பிரியா விடைபெற்று, மதில் சூழ்ந்த பொற்பதியாகிய வாழ்கொளிபுத்தூர் அடைந்து போற்றிப் புனைந்தவற்றுள் ஒன்று இத்திருப்பதிகம்.

### பண் - பியந்தைக்காந்தாரம்

### திருச்சிற்றம்பலம்

சாகை யாயிர முடையார் சாமமு மோதுவ துடையார்
ஈகை யார்கடை நோக்கி யிரப்பதும் பலபல வுடையார்
தோகை மாமயி லனைய துடியிடை பாகமு முடையார்
வாகை நுண்டுளி வீசும் வாழ்கொளி புத்தூ ருளாரே. 1

எண்ணி லீரமு முடையா ரெத்தனை யோரிவ ரறங்கள்
கண்ணு மாயிர முடையார் கையுமொ ராயிர முடையார்
பெண்ணு மாயிர முடையார் பெருமையொ ராயிர முடையார்
வண்ண மாயிர முடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. 2

---

1. சாகை - வேதநூற்பிரிவு. சாமம் - சாமவேதம். ஈகை - வினைத்தொகை. வார்ந்த நஞ்சு அயின்று வானோர்க்கு அமுதம் ஈ வள்ளல் போற்றி, திருவாசகம். 73. 'இட்டும் அட்டியும் ஈ தொழில் பேணில் என்? 5. 99. 3. என்பவற்றில் உள்ள வினைத்தொகையை நோக்குக.

2. எண் இல் ஈரம் - 'அளவுபடாததோர் அன்பு' 4. 3, 10. எண்ணில் - ஆராய்ந்தால் எனலுமாம். இவர் அறங்கள் எத்தனையோர் என்று கொள்க. அறங்கள் எத்தனை? எத்தனை(யுடை)யோர்? இவர் எத்தனையோர்? தனை - அளவு ஆயிரங்கண்ணர். ஆயிரங்கையர். பெண்ணும் ஆயிரம் உடையார்:- சிவசக்தியை உடையது சிவம். சிவமும் சத்தியும் உருவம் முதலியவை இல்லாத உயர்வின. அவற்றில் ஆண் பெண் என்ற

நொடியொ ராயிர முடையார் நுண்ணிய ராமவர் நோக்கும்
வடிவு மாயிர முடையார் வண்ணமு மாயிர முடையார்
முடியு மாயிர முடையார் மொய்குழ லாளையு முடையார்
வடிவு மாயிர முடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. 3

பஞ்சி நுண்டுகி லன்ன பைங்கழற் சேவடி யுடையார்
குஞ்சி மேகலை யுடையார் கொந்தணி வேல்வல னுடையார்
அஞ்சும் வென்றவர்க் கணியா ரானையி னீருரி யுடையார்
வஞ்சி நுண்ணிடை யுடையார் வாழ்கொளி புத்தூருளாரே. 4

பரவு வாரையு முடையார் பழித்திகழ் வாரையு முடையார்
விரவு வாரையு முடையார் வெண்டலைப் பலிகொள்வ துடையார்
அரவம் பூண்பது முடையா ராயிரம் பேர்மிக வுடையார்
வரமு மாயிர முடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. 5

---

பேதம் இல்லை. ஆற்றலைப் பெண்மையாயும் ஆற்றலுடையதை ஆண்மையாயும் உருவகித்தமையால், உண்மையிற் பெண் என்றும் அஃது ஆயிரம் என்றும் கொண்டு, நினைப்பென்னும் நெடுங்கிணற்றில் விழுதல் பெரும்பாவமாகும். சிவசக்தியும் சிவமும், அவ்வச்சத்திகட்கு இடமாய விந்துவும் முறையே பலவேறு வகையான் விருத்திப்பட்டும் நிற்கும். சிவஞான பாடியத்தில் சூ. 2. அதி 2. காண்க.

3. நுண்ணியர் :- 'நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே' திருவாசகம். 1:- 76.

4. சேவடியின் மென்மை உணர்த்தப்பட்டது. குஞ்சி மேகலையுடையார்:- சைவத் துறவியர் சடைமுடி மறைக்கும் கல்லாடையைக் குறித்ததுபோலும். குஞ்சிமேற் கலையுடையார் என்றிருந்ததோ? மகளிர் இடையில் அணிவது மேகலை. இங்குக் குஞ்சி (தலைமயிர்) மேல் உடையது மேகலை என்று குறிக்கின்றது. கொந்து-கோபம். (ஞானமிர்தம்). அஞ்சும்வென்றவர்:- 'பொறிவாயில் ஐந்தவித்தார்'. இடைக்கு உவமை வஞ்சிக்கொடி.

5. விரவுவார்:- மெய்யன்புடைய அடியார். 'பரவுவார் இமையோர்கள் ... விரவுவார் மெய்யன்பின் அடியார்கள்' திருவாசகம். 21. விரவுதல். 'கலந்துநின் அடியாரோடு அன்று

தண்டுந் தாளமுங் குழலுந் தண்ணுமைக் கருவியும் புறவில்
கொண்ட பூதமு முடையார் கோலமும் பலபல வுடையார்
கண்டு கோடலு மரியார் காட்சியு மரியதோர் கரந்தை
வண்டு வாழ்பதி யுடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. 6

மான வாழ்க்கைய துடையார் மலைந்தவர் மதிற்பரி சறுத்தார்
தான வாழ்க்கைய துடையார் தவத்தொடு நாம்புகழ்ந் தேத்த
ஞான வாழ்க்கைய துடையார் நள்ளிருண் மகளிர்நின் றேத்த
வான வாழ்க்கைய துடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. 7

ஏழு மூன்றுமோர் தலைக ளுடையவ னிடர்பட வடர்த்து
வேழ்வி செற்றதும் விரும்பி விருப்பவர் பலபல வுடையார்
கேழல் வெண்பிறை யன்ன கெழுமணி மிடறுநின் றிலங்க
வாழி சாந்தமு முடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. 8

---

வாளா களித்திருந்தேன்' திருவாசகம். 483. 'எனைக்கலந்து' ஷ. 84. 'கருணையினால் கலந்து ஆண்டுகொண்ட விடையவனே' ஷ, 105.

6. தண்டு, தாளம், குழல், தண்ணுமைக்கருவி, பூதம், பலபல கோலம், காட்சியருமை, கண்டு கொள்ளலருமை ஆகிய வற்றை இறைவன் உடையவன். தண்டு-வீணை சிவிகை என்றும் பொருள் உண்டு. அஃது இங்குப் பொருந்தாது. தாளம் முதலிய இன்னிசைக் கருவிகளாகிய இனம்பற்றி வீணை என்பதே. 'வேயுறு தோளிபங்கன்...மிக நல்ல வீணை தடவி' 2. 85. 1. கரந்தைப்பூவில் வண்டு வாழ்கின்ற வளமுடையபதி. 'செஞ் சடைசேர் கரந்தையான்' 1. 61. 3. அவர் காட்சி கொடுப்பதும் அரிது; அவரைக் கண்டு கொள்வதும் அரிது என்பதன் உண்மை அத்துவிதமாய் நின்றுணர்வோர்க்கே விளங்கும்.

7. மலைந்தவர் - மாறுபட்ட (பகை)வர். தவத்தொடு ஞானவாழ்க்கை உடையவர். புகழ்ந்து ஏற்றற்குரியது ஞான வாழ்வு ஒன்றே. மற்றைய வாழ்வெலாம் இகழ்ந்து ஒதுக்கற் பாலன. நள்ளிருள் மகளிர் நின்று ஏத்த வானவாழ்க்கைய துடையார் 'அல்லிய...குழலார்...பரவ...வல்லார்' என்பதொடு பொருத்திக்காண்க.

8. பத்துத் தலையுடையவன், வேழ்வி - வேள்வி. தக்கன் செய்த யாகம். எதுகைநோக்கி ளகரம் ழகரமாயிற்று. விரும்பிச்

வென்றி மாமல ரோனும் விரிகடற் றுயின்றவன் றானும்
என்று மேத்துகை யுடையா ரிமையவர் துதிசெய விரும்பி
முன்றின் மாமலர் வாச முதுமதி தவழ்பொழிற் றில்லை
மன்றி லாடல துடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. 9

மண்டை கொண்டுழ றேரர் மாசுடை மேனிவன் சமணர்
குண்டர் பேசிய பேச்சுக் கொள்ளன்மின் றிகழொளி நல்ல
துண்ட வெண்பிறை சூடிச் சுண்ணவெண் பொடியணிந் தெங்கும்
வண்டு வாழ்பொழில் சூழ்ந்த வாழ்கொளி புத்தூ ருளாரே. 10

நலங்கொள் பூம்பொழிற் காழி நற்றமிழ் ஞானசம் பந்தன்
வலங்கொள் வெண்மழு வாளன் வாழ்கொளி புத்தூ ருளானை
இலங்கு வெண்பிறை யானை யேத்திய தமிழிவை வல்லார்
நலங்கொள் சிந்தைய ராகி நன்னெறி யெய்துவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

செற்றதும் உடையார் என்றும் அவர் பலபல விருப்புடையார் என்றும் இயைக்க. கேழல் - பன்றிக்கொம்பு. 'ஏனக்கொம்பு' 2. 102. 2. அன்ன - அவைபோல்வ(ன; ஆமை, நாகம், தலை யோடு முதலிய)ன. மிடறு - திருக்கழுத்து. சாந்தம் - சந்தனம்; பொறுமையுமாம். அட்ட புட்பத்துள் ஒன்று.

9. ஏத்துகை - துதிக்கை; வினைத்தொகையும். பா. 1. ஈகை. பார்க்க. துதி - (தோத்திரம்) புகழ்ச்சி மலர்வாசம் பொழில், மதிதவழ் பொழில். ஆடலது - திருக்கூத்தாடுதலை.

10. பிறைக்கு அடை திகழொளியும் நன்மையும் துண்டமும், வெண்மையும், சுண்ணப்பொடி என்பதினும் சுண்ணமும் பொடியும் எனல் சிறந்தது. சுண்ணம்:- திருப்பொற் சுண்ணம்.

11. நலம் - குறைவிலாமங்கலம். நன்னெறி - சரியை யாதியின் பயனாகிய ஞானம்.

---

# 95 திருவரசிலி

## 231 பதிகவரலாறு

கவுணியர் வேந்தர், அச்சிறுபாக்கம் முதலிய தலங்களை வணங்கி வழிபட்டகாலத்தில், வேறுபல நதியும் காடும்கடந்து அரசிலியை அடைந்தார். இது தொண்டை நாட்டிற்குச் சென்று மீண்ட காலத்து நிகழ்ச்சி. சேக்கிழார் சுவாமிகள், திருவரசிலியை மீளுங்கால் எடுத்தோதியதாலும் செல்லுங் கால் குறிப்பாகவும் காட்டாமையாலும் மீண்டருளும்போது பாடப்பட்டதாகும் இத்திருப்பதிகம்.

**பண் - பியந்தைக்காந்தாரம்**

**திருச்சிற்றம்பலம்**

பாடல் வண்டறை கொன்றை பான்மதி பாய்புனற் கங்கை
கோடல் கூவிள மாலை மத்தமுஞ் செஞ்சடைக் குலாவி
வாடல் வெண்டலை மாலை மருவிட வல்லியந் தோண்மேல்
ஆடன் மாசுண மசைத்த வடிகளுக் கிடமர சிலியே. 1

ஏறு பேணிய தேறி யிளமதக் களிற்றினை யெற்றி
வேறு செய்தத னுரிவை வெண்புலால் கலக்கமெய் போர்த்த
ஊறு தேனவ னும்பர்க் கொருவனல் லொளிகொளொண் சுடராம்
ஆறு சேர்தரு சென்னி யடிகளுக் கிடமர சிலியே. 2

---

1. செஞ்சடையில் குலாவுவன - கொன்றை, பிறை, கங்கை. கோடல் (- வெண்காந்தள்), கூவிள (- வில்வ) மாலை, ஊமத்தம்பூ. தலைமாலை. வல்லி - உமாதேவியார். மாசுணம் - பாம்பு. நிலத்திலூர்ந்தும் புரண்டும் மாசு உண்ணுங் காரணத் தாற்பெற்ற பெயர். அழுக்கு அடையும் ஆடைக்கு மாசுணி என்ற பெயர் உள்ளமை அறிக. 'பிறர் உடுத்த மாசுணியும் தீண்டார்' (ஆசாரக்கோவை,) 'வல்லியந்தோல்' என்றிருந்து, லகரம் ளகரம் ஆகிய பிழைபோலும். வல்லியம் - புலி.

2. களிறு:- களிப்புடையது என்னுங் காரணப் பொருட் டாய், ஆண் யானையைக் குறிப்பது. உரிவை - தோல், புலால்

கங்கை நீர்சடை மேலே கதமிகக் கதிரிள வனமென்
கொங்கை யாளொரு பாக மருவிய கொல்லைவெள் ளேற்றன்
சங்கை யாய்த்திரி யாமே தன்னடியார்க் கருள் செய்து
அங்கை யாலன லேந்து மடிகளுக் கிடமர சிலியே. 3

மிக்க காலனை வீட்டி மெய்கெடக் காமனை விழித்துப்
புக்க வூரிடு பிச்சை யுண்பது பொன்றிகழ் கொன்றை
தக்க நூறிகழ் மார்பிற் றவளவெண் ணீறணிந் தாமை
அக்கி னாரமும் பூண்ட வடிகளுக் கிடமர சிலியே. 4

---

கலக்க மெய்யிற்போர்த்த இனியன். யானையை உரித்துப் போர்த்தவன் இன்னாதவன் என்று கொள்ளுதல் பொருந்தாமை உணர்த்த. ஊறுதேனவன் (-'சிறந்து அடியார் சிந்தனையுள் தேன் ஊறிநின்று பிறந்த பிறப்பு அறுக்கும்' இனியவன்) என்றருளினார். ஆணவமல நாசஞ்செய்வதே யானையுரி வரலாற்றின் தாற்பரியம். உம்பர்க்கு ஒருவன் -'அமரரால் அமரப்படுவான்'. சுடர் - சிவம். ஒளி - சத்தி.

3. கதம் - வேகம். வனம் - அழகு. சங்கை - சந்தேகம். அடியார்கள் 'நமக்கு ஆண்டவன் அருள்வானோ அருளானோ' என்னும் ஐயுறவுகொண்டு திரிந்து, வீண்காலம் போக்கும் அவப்பொழுது நேராது சிவப்பொழுது போக்குமாறு அவர்கட்கு அருள்வான் என்பது கருத்து. திரியாமே அருள்செய்து அனல் ஏந்தும் அடிகள் என்க. எருதேறித் திரியும் இறைவன் எனினும் அடியார்க்கு அருள்செய்யத் தவறான் என்றும். சங்கை - ஐயம். ஐயம் - பிச்சை. இரப்போர்க்கு இன்று நாம் இறப்பது சிறக்கக் கிடைக்குமோ கிடைக்காதோ என்ற ஐயம்பற்றிய காரணப் பெயர். பிச்சைக்காரனாய்த் திரியும் ஒன்றே செய்யாமல் அடியார்க் கருள்வதையும் செய்து என்றும், பிச்சையெடுத் தாலும் அடியார்க்கு அருளும் பெருஞ்செல்வன் என்றும் கொள் ளும்பொருள் வலிந்து கொள்வனவேயாம்.

4. மிக்ககாலன் - இன்னான் இனியான் என்று கருதாது, உரிய காலத்தில் கூறுபடுத்தும் அறத்தில் மேம்பட்ட தரும ராசன். தக்கநூல் - வேதாந்தம் என்னத் தக்க பூணூல், 'நூலது வேதாந்தம் நுண்சிகை ஞானமாம்' (திருமந்திரம்). அக்கின் ஆரம் - எலும்புமாலை. இனமல்லாமையால் ஆமை யோடும் உருத்திராக்க மாலையும் எனல் ஒவ்வாது.

மான்அஞ் சும்மட நோக்கி மலைமகள் பாகமு மருவித்
தானஞ் சாவரண் மூன்றுந் தழலெழச் சரமது துரந்து
வானஞ் சும்பெரு விடத்தை யுண்டவன் மாமறை யோதி
ஆனஞ் சாடிய சென்னி யடிகளுக் கிடமர சிலியே. 5

பரிய மாசுணங் கயிறாப் பருப்பத மதற்குமத் தாகப்
பெரிய வேலையைக் கலங்கப் பேணிய வானவர் கடையக்
கரிய நஞ்சது தோன்றக் கலங்கிய வவர்தமைக் கண்டு
அரிய வாரமு தாக்கு மடிகளுக் கிடமர சிலியே. 6

* * * 7

வண்ண மால்வரை தன்னை மறித்திட லுற்றவல் லரக்கன்
கண்ணுந் தோளுநல் வாயு நெரிதரக் கால்விர லூன்றிப்
பண்ணின் பாடல்கைந் நரம்பாற் பாடிய பாடலைக் கேட்டு
அண்ண லாயருள் செய்த வடிகளுக் கிடமர சிலியே. 8

---

**5.** மான் அஞ்சும் மடநோக்கியாகிய மலைமகள். நோக்கி- (கண்ணி) நோக்கத்தையுடையவள். மானினது கண்போன்ற கண் என்னாது, அக்கண்ணினது நோக்கம்போன்ற நோக்கம் எனல் முன்னோர் கருத்து, 'மான்விழி' என்பதும் மான் கண் என்பதும் ஒன்றாகா, விழிப்பது விழி. கண்ணுவது கண், விழித்தல் - இமைதிறத்தல். கண்ணுதல் - மனம் கருதல். இமை திறந்தும் திறவாதும் கருதல் செய்யலாம். திறக்கக் கருதினலன்றி இமைதிறத்தல் நிகழாது. வான் - வானோர், அசுரர். ஓதி:- பெயர்.

**6.** பரிய - பெரிய. அரிய அமுது எனலே அமையும். 'அரிய ஆரமுது' என்றது பெரிய பேராசிரியர் (மகாமகோபாத்தியார்) என்ற (ஆன்மாக்களின் அகங்காரத்தை வளர்க்கும்) பட்டப்பெயர் போல்வது. ஆருயிர் - காருடல் என்பனபோல ஆரமுதும் பண்புத்தொகை. அரிய:- நஞ்சு அமுது ஆதல் முன் இன்மை குறித்தது. ஆர் - முன் இல்லாத அஃது இப்பொழுது (அமுதாக்கிய சமயம்) விளங்குதலைக் குறித்தது. அருமை - இன்மை, விளக்கம்.

**8.** வண்ணமால்வரை - கயிலைமலை. மறித்திடல் - கீழ் மேலாக்குதல், கண், தோள், வாய் நெரிய என்க. கைந்நரம்பு - இராவணன் கையிலிருந்த யாழ். பண்ணின் பாடல் நரம்புக்கு

குறிய மாணுரு வாகிக் குவலய மளந்தவன் ருனும்
வெறிகொ டாமரை மேலே விரும்பிய மெய்த்தவத் தோனும்
செறிவொ ணுவகை யெங்குந் தேடியுந் திருவடி காண
அறிவொ ணுவுரு வத்தெம் மடிகளுக் கிடமர சிலியே. 9

குருளை யெய்திய மடவார் நிற்பவே குஞ்சியைப் பறித்துத்
திரளை கையிலுண் பவருந் தேரருஞ் சொல்லிய தேறேல்
பொருளைப் பொய்யிலி மெய்யெம் நாதனைப் பொன்னடி வணங்கும்
அருளை யார்தர நல்கு மடிகளுக் கிடமர சிலியே. 10

---

அடை. பாடிய பாடல் - அங்கரம்பாற் பாடிய பாடல். அண்ண லாய் - நாளும் வாளும் அருளிய பெருமையிற் சிறந்தவனுகி; இன்னுசெய்தாற்கும் இனியவே செய்யும் பெருமையனுகி.

9. குறிய மாணுரு - வாமனுவதாரம், 'குறுமாணுருவன்' 1. 101. 5. வெறி - மணம். மெய்த்தவத்தோன் - பிரமன். செறிவு ஒணு - செறிதல் ஒன்ரு. செறிதல் - பொருந்துதல். அறிவொணு வுருவம் - ஐம்பொறிகளாலும், மனுதியாலும், ஜீவபோதத் தாலும் அறிதல் ஒன்ருத ஞானசொரூபம். 'பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத்தாலே நேசமொடும் உள்ளத்தே நாடிப் பாதநீழற்கீழ்' நின்று அறியப் படும் திருவருவம் அது. 'அறிவினில் அருளான்மன்னி' (சித்தியார்).

10. உண்பவர் - சமணர். சொல்லிய - சொன்னதம் சமயக் கொள்கைகளை. வினையாலணையும் பெயர். பொருள் - 'உயர் பொருள்' 1. 13. 5. 'உரமென்னும் பொருள்' 7 - 86. 5. 'பல்கலைப் பொருள்' 7. 69. 10. 'மெய்ப்பொருள்' 4. 74. 9. 'கொன்றைத் தொங்கலான் அடியவர்க்குச் சுவர்க்கங்கள் பொருளலவே' 241 - 7. என்றதால் ஆன்மாக்களுக்குப் பொருளாவது சிவபரம் பொருளே என்றறிக. குருளை என்பது ஈண்டு இளமையைக் குறித்தது. இளமகளிரை வாழ்க்கைத்துணையாகப் பெற்றிருந் தும், தலைமயிரைப் பறித்து விடுவது பொருத்தமாகாமையை உணர்த்துவதுடன், அதற்கு ஏதுவாவது அமிதபோஜனப்ரியம் என்றுங் குறித்தார்.

அல்லி நீள்வயல் சூழ்ந்த வரசிலி யடிகளைக் காழி
நல்ல ஞானசம் பந்த னற்றமிழ் பத்திவை நாளும்
சொல்ல வல்லவர் தம்மைச் சூழ்ந்தம ரர்தொழு தேத்த
வல்ல வானுல கெய்தி வைகலு மகிழ்ந்திருப் பாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. அல்லி - அகவிதழ். (இரவில் பூக்கும் பூக்கள்) நற்றமிழ் - பிறவிப்பிணிக்கு மருந்தாகிய தமிழாகிய இத்திருப் பதிகம். 'நாளும் சொல்ல வல்லவர் வைகலும் மகிழ்ந்திருப்பார்' ஒருநாள் தவறின் அன்று மகிழ்ந்திரார் என்பது அவரவர் அநுபவத்தால் உணரப்படும்.

---

கண்ணார் திருநுத லோன்கோலக் காவிற்
கரநொடியாற்
பண்ணார் தரப்பாடு சண்பையர் கோன்பாணி
நொந்திடுமென்
றெண்ணார் எழுத்தஞ்சும் இட்டபொற் றாளங்கள்
ஈயக்கண்டு
மண்ணார் சிலர்சண்பை நாதனை ஏத்தார்
வருந்துவதே. —அந்தாதி 82

வருந்துங் கொலாங்கழல் மண்மிசை ஏகிடில்
என்றும்என்றார்த்
திருந்தும் புகழ்ச்சண்பை ஞானசம் பந்தற்குச்
சீர்மணிகள்
பொருந்துஞ் சிவிகை கொடுத்தனன் காண்புண
ரித்திகழ்நஞ்
சருந்தும் பிரான்நம் அரத்துறை மேய
அரும்பொருளே. —அந்தாதி 83

## 232 பதிகவரலாறு

*137 - வது பதிகத்தலைப்பிற் காண்க.*

### பண் - பியந்தைக்காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

பொங்கு வெண்புரி வளரும் பொற்புடை மார்பனெம் பெருமான்
செங்க ணாடர வாட்டுஞ் செல்வனெஞ் சிவனுறை கோயில்
பங்க மில்பல மறைகள் வல்லவர் பத்தர்கள் பரவுந்
தங்கு வெண்டிரைக் கானற் றண்வயற் காழிநன் னகரே. 1

தேவர் தானவர் பரந்து திண்வரை மால்கட னிறுவி
நாவ தாலமிர் துண்ண நயந்தவ ரிரிந்திடக் கண்டு
ஆவ வென்றரு நஞ்ச முண்டவ னமர்தரு மூதூர்
காவ லார்மதில் சூழ்ந்த கடிபொழிற் காழிநன் னகரே. 2

கரியின் மாமுக முடைய கணபதி தாதைபல் பூதந்
திரிய வில்பலிக் கேகுஞ் செழுஞ்சுடர் சேர்தரு மூதூர்
சரியின் முன்கைநன் மாதர் சதிபட மாநட மாடி
உரிய நாமங்க ளேத்து மொலிபுனற் காழிநன் னகரே. 3

---

1. வெண்புரி - வெண்ணிறத்தையுடைய நூலாலாகிய முப்புரி. பங்கம் - தோல்வி; மறைப்பொருள்கள் வேறு எந்நூற் பொருள்களுக்கும் தோல்வி அடையாமைகுறிக்க, பங்கம் இல் மறைகள். அழியாமை குறித்ததுமாம். வேதம் நித்தியம், வல்லவர்களும் பத்தர்களும் பரவும் காழி நன்னகர் என்க.

2. நிறுவி - மத்தாக நிறுத்தி, நாவதால் - நாக்கால்; அது பகுதிப் பொருள்விகுதி. இரிந்திட - சாய. ஆவ என்று - ஆஆ என்று இரங்கி, இத்தொடர் திருமுறைகளில் பயின்றுள்ளதை ஆங்காங்கு நோக்குக. காவல் ஆர் மதில்சூழ்ந்த நகர்; பொழிலை யுடைய காழி நகர்.

சங்க வெண்குழைச் செவியன் றண்மதி சூடிய சென்னி
அங்கம் பூணென வுடைய வப்பனுக் கழகிய வூராந்
துங்க மாளிகை யுயர்ந்த தொகுகொடி வானிடை மிடைந்து
வங்க வாண்மதி தடவு மணிபொழிற் காழிநன் னகரே. 4

மங்கை கூறமர் மெய்யான் மான்மறி யேந்திய கையான்
எங்க ளீசனென் றெழுவா ரிடர்வினை கெடுப்பவற் கூராஞ்
சங்கை யின்றிநன் னியமந் தாஞ்செய்து தகுதியின் மிக்க
கங்கை நாடுயர் கீர்த்தி மறையவர் காழிநன் னகரே. 5

---

3. கரத்தைஉடையது கரிஎனப்பட்டது. பூதகணங்களோடு பலிக்கு ஏகினார் எனல் அறிக. செழுஞ்சுடர்:- அழியாததும் அறியும் ஆன்மாக்களிடத்தில் வளர்வதுமாகிய ஒளி - 'செழுஞ் சுடரே செழுஞ்சுடர் நற்சோதி மிக்கவுருவே' அப்பர். 'ஒளிவளர் விளக்கே' திருவிசைப்பா. சரி - வளையல். சதிபட மாநடம் ஆடல். தண்ணுமை விளங்கலுறு தாளம் இசையெல்லாம் வண்ணமலர்மெல்லடி வழிச்சதியில் நிற்பக் கண்ணிணை கொள் பல்வளைய கைவழி நடப்ப, பிரபுலிங்க-மாயை பூசைகதி 52. நடித்தல். செப்பமைந்த தண்ணுமை யிசை தாளம் மென் சிறுதாட் டுப்பமைந்த வொண்சதிதழீஇச்சுவைய பல்காய முப்பமைந்தவின் கறியென நடித்தல் பிரபு. கைலாச 31. உரியநாமங்கள் ஓதி என்றதால், அக்காலத்து மகளிர்க்குச் சிவநாமம் ஓதும் உரிமையை ஆசிரியர் உணர்ந்து மகிழ்ந்து பாட்டிலும் நாட்டிய உண்மை புலப்படும். இக்கால மகளிர் பலர், இறைவனை ஏத்த உரியநாமங்களை உணராமைக்குக் காரனத்தை ஆராய்ந்து கண்டு, போக்குதல். சமயவளர்ச்சிக்கு வழி கோலுவதாம். மகளிரே சமயம் வளர்க்கத்தக்கார்.

4. அங்கம் - எலும்பு. துங்கம் - உயர்ச்சி. தொகு கொடி - தொக்க கொடிகள். வினைத்தொகை. மிடைந்து - நெருங்கி வங்கமதி - வெள்ளியைப் போன்ற திங்கள்.

5. உண்மை வடிவானவன் என்பது பொருந்துமேல் கொள்க. எழுவார்:- விழித்து எழுதல், மூலாதாரத்திலிருந்து சுழுமுனை நாடி வழியாகத் தியானித்து எழுதல். இடர்வினை. இரண்டன் உருபும் பயனும் உடன் தொக்க தொகையாயும்

நாறு கூவிள மத்த நாகமுஞ் சூடிய நம்பன்
ஏறு மேறிய வீச னிருந்தினி தமர்தரு மூதூர்
நீறு பூசிய வுருவர் நெஞ்சினுள் வஞ்சமொன் றின்றித்
தேறு வார்கள்சென் றேத்துஞ் சீர்திகழ் காழிநன் னகரே. 6

நடம தாடிய நாத னந்திதன் முழவிடைக் காட்டில்
விடம மர்ந்தொரு காலம் விரித்தற முரைத்தவற் கூராம்
இடம தாமறை பயில்வா ரிருந்தவர் திருந்தியம் போதிற்
குடம தார்மணி மாடங் குலாவிய காழிநன் னகரே. 7

---

உம்மைத் தொகையாயும் கொள்ளலாம். வினைகொடுப்பவன் - வினைகளைப் போக்கிப் பிறவியை ஒழித்துப் பேரின்பம் அருளும் சிவபெருமான். சங்கை - ஐயம். தகுதி - ஒழுக்கத்தால் உயர்தல் மிக்கமறையவர். கீர்த்தியை உடைய மறையவர். உயர்கீர்த்தி வினைத்தொகை. கங்கைநாடு:- கங்காநதி பாயும் நாட்டினின்றும் வந்த மறையவர் என்றேனும் அந்நாடு வரையிலும் பரவிய கீர்த்தியையுடையமறையவர் என்றேனும் கொள்க.

6. ஏறும் ஏறிய ஈசன் - என்பதிலுள்ள உம்மை ஏற்றின் அடங்காமையையும் அதை அடக்கிய ஈசன் ஆற்றலையும் குறித்தது. பசுக்களுக்கு எல்லாம் பதியாதலை உணர்த்துவதே அதன் உண்மைக்கருத்து. இருந்து அமர்தரும் ஊர் என்றதால் நிலைத்திருக்கையும் மிக்க விருப்பமும் புலப்படும்.

7. நடமது - திருக்கூத்து. நடனமாகியமது எனக்கொண்டுரைத்தலுமாம். ஆனந்த நடனம் என்பதை நடமது எனப் பொருந்தும் மதுவை உண்டு அடையும் இன்பத்தை மது எனலாம். ஆனந்தத்தைக் குறிக்க அச்சொல்லை ஆள்வது பொருந்தும். நந்தி மத்தளம் வாசிக்க நடமாடினார் என்னும் வரலாறு இதில் குறிக்கப்பட்டது. ஒருகாலம் அறம்விரித்து உரைத்தவற்கு என்பதில் சநகாதியார்க்குக் கல்லாலின்கீழ் இருந்து உபதேசித்த உண்மை குறிக்கப்பட்டது. இடம் - பரப்பு. வேதப்பொருளின் விரிவைக் குறித்தது. இருந்தவர் - பெருந்தவத்தோர்.

கார்கொண் மேனியவ் வரக்கன் றன்கடுந் திறலினைக் கருதி
ஏர்கொண் மங்கையு மஞ்ச வெழின்மலை யெடுத்தவ னெரியச்
சீர்கொள் பாதத்தோர் விரலாற் செறுத்தவெஞ் சிவனுறை கோயில்
தார்கொள் வண்டினஞ் சூழ்ந்த தண்வயற் காழிநன் னகரே. 8

மாலு மாமல ரானு மருவிநின் றிகலிய மனத்தாற்
பாலுங் காண்பரி தாய பரஞ்சுடர் தன்பதி யாகுஞ்
சேலும் வாளையுங் கயலுஞ் செறிந்துதன் கிளையொடு மேய
ஆலுஞ் சாலிநற் கதிர்க ளணிவயற் காழிநன் னகரே. 9

புத்தர் பொய்மிகு சமணர் பொலிகழ லடியிணை காணுஞ்
சித்த மற்றவர்க் கிலாமைத் திகழ்ந்தநற் செழுஞ்சுடர்க் கூராஞ்
சித்தரோடுநல் லமரர் செறிந்தநன் மாமலர் கொண்டு
முத்த னேயரு ளென்று முறைமைசெய் காழிநன் னகரே. 10

ஊழி யானவை பலவு மொழித்திடுங் காலத்தி லோங்கு
* * * * 11

திருச்சிற்றம்பலம்

---

8. ஏர் கொள்மங்கை - அழகுடைய உமாதேவியார். எழில் மலை - அழகிய கயிலை, உயர்ச்சியைக் குறித்த எழுச்சியு மாம். தார் - பூ.

9. பாலும் காண்பு அரிதாய பரஞ்சுடர் - தனது பக்கத் தையும் காண்டற்கு எளிதல்லாத மெய்யொளி. சேல், வாளை, கயல் என்பன வெவ்வேறு வகைமீன்களாதலை அறியாமல் எழுதியுள்ள இடம் பலஉள. ஆலும்சாலி - ஆடுகின்ற நெல்.

10. 'பொய்மிகு' என்பது இடைநிலை விளக்கு. பொலிகழல் இணைகாணும் சித்தம் அற்றவர்க்கு - பொன்போல் ஒளிசெய்யும் கழல் அணிந்த இரண்டு திருவடிகளையும் உணரும் உள்ளம் ஒழிந்த அப்புத்தர்க்கும் சமணர்க்கும். இல்லாமை - பெறுதல் இல்லாதபடி, திகழ்ந்த நல் செழுஞ்சுடர்க்கு - சிவனடியார்க்கு விளங்கிய நல்ல செழித்த ஒளியாகிய சிவபிரானுக்கு. சித்தரோடு அமரர் மலர்கொண்டு வழிபாடு செய்யும்போது 'முத்தனே அருள்' என்று முறையிட்டுக் கொண்டனர் என்றபடி. குறை யிரந்து முறைமை செய்தல், அரசர் முதலியவர்பால் குடிகள் முதலியார்க்கு உள்ளது.

## 233 பதிகவரலாறு

137 ஆவது தலைப்பைக் காண்க.

### திருவிராகம் பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

நம்பொரு ணம்மக்களென்று நச்சியிச்சை செய்துநீர்
அம்பர மடைந்துசால வல்லலுய்ப்ப தன்முனம்
உம்பர்நாத னுத்தமன் னொளிமிகுந்த செஞ்சடை
நம்பன்மேவு நன்னகர் நலங்கொள்காழி சேர்மினே. 1

பாவமேவு முள்ளமோடு பத்தியின்றி நித்தலும்
ஏவமான செய்துசாவ தன்முனம்மி சைந்துநீர்
தீபமாலை தூபமுஞ் செறிந்தகைய ராகிநந்
தேவதேவன் மன்னுமூர் திருந்துகாழி சேர்மினே. 2

---

1. பொருட்பற்றும் மக்கட் பற்றும், லோகாந்தரம் சேர்ந்து, துன்பம் அடைதற்கு முன்னமே சீகாழியைச்சேருங்கள் நீங்கள் என்று உபதேசம் புரிந்தருள்வதை உணர்க. அம்பரம் அடைதல்:- நாதனுர் ஆணை உய்க்க நரகொடு சுவர்க்கம் போய்ச் சேர்தல்.

2. நல்வினை தீவினை என்பன கன்மங்கள். அவை ஆகாமியவினை. அவ்விரண்டும் அறமும் மறமும் ஆகும் நிலைமையில் சஞ்சிதம் எனப்படும். அறம் - புண்ணியம், மறம் - பாபம். அப்புண்ணிய பாவம் இரண்டும் அநுபவத்திற்கு வந்து சுக துக்கங்களை ஆக்கும், அப்போது அவ்விரண்டும் பிராரப்தம் எனப்படும். புண்ணியம் பசுபுண்ணியம், சிவபுண்ணியம் என இருவகைப்படும். அவற்றுள் ஈண்டுச் சிவபுண்ணியத்துள் அடங்கும் சிவபூஜையைக் கருதவேண்டும். "புண்ணியஞ் செய் வார்க்குப் பூவுண்டு நீருண்டு" என்பது திருமந்திரம். அப் புண்ணியத்தைச் செய்க என விதிப்பாராய், "நீர், தீபம், மாலை, தூபம் என்பவை செறிதல் வேண்டும்" என்றருளினர். நீர்

சோறுகூறை யின்றியே துவண்டுதூர மாய்நுமக்
கேறுசுற்ற மெள்கவே யிடுக்கணுய்ப்ப தன்முனம்
ஆறுமோர் சடையினு ளுதியானை செற்றவன்
நாறுதேன் மலர்ப்பொழி னலங்கொள்காழி சேர்மினே. 3

நச்சிநீர் பிறன்கடை நடந்துசெல்ல நாளையும்
உச்சிவம் மெனும்முரை யுணர்ந்துகேட்ப தன்முனம்
பிச்சர்நச் சரவரைப் பெரியசோதி பேணுவார்
இச்சைசெய்யு மெம்பிரா னெழில்கொள்காழி சேர்மினே. 4

கண்கள்காண் பொழிந்துமேனி கன்றியொன்ற லாதநோய்
உண்கிலாமை செய்துநும்மை யுய்த்தழிப்ப தன்முனம்
விண்குலாவு தேவருய்ய வேலைநஞ் சமுதுசெய்
கண்கண்மூன் றுடையவெங் கருத்தர்காழி சேர்மினே. 5

---

என்பது முன்னிலைப் பெயராயினும் பொருத்தமாயிருத்தலின் வழிபாட்டிற்குரிய பொருள்களுள் ஒன்றாகவும் கருதப்பட்டது.

3. இடுக்கண் என்பது மரூஉ. அலக்கண், தறுகண், வன்கண், புன்கண் முதலியவை உள்ளேயுற்ற நிலையை வெளியேதோற்றும் கண்ணென்னும் உறுப்பைப் பற்றித் தோன்றிய பெயர்களாதல் அறிக. ஆறும்-சுவதந்திரம் முதலிய அறுகுணங்களும் எனக் கொண்டு, அவற்றால் ஓர்தற்குரிய சடையுடையான் எனல் சிறக்கும். சடைஞானமயமாகும், "நுண்சிகைஞானமாம்" (திருமந்திரம்).

4. இரப்பவர் பிறர் கடைவாயில் நின்று "இடுக" என்று இரக்க அவர் "நாளை நண் பகலில் வருக" என்று சொல்லும் சொல்லைக் கேட்டுணர்ந்து வருந்தும் நிலையெய்தும் முன்னரே சிவபிரான் திருக்காழியைச்சேருங்கள்.

5. காண்பு - காட்சி, "காண்பரிதாய பரசுடர்" "காண்பி னெடுநேத்திரங்கள் பணித்தருளவேண்டும் "காண்பினிய மணி மாடம்" (7. 46-2, 3.) "கண்கள் காண்பொழிந்து"

அல்லல்வாழ்க்கை யுய்ப்பதற் கவத்தமேபிறந்துநீர்
எல்லையில் பிணக்கினிற் கிடந்திடா தெழும்மினோ
பல்லில்வெண் டலையினிற் பலிக்கியங்கு பான்மையான்
கொல்லையேற தேறுவான் கோலக்காழி சேர்மினே. 6

* * * * 7

பொய்மிகுந்த வாயராய்ப் பொருமையோடு சொல்லுநீர்
ஐமிகுந்த கண்டரா யடுத்திரைப்ப தன்முனம்
மைமிகுந்த மேனிவா ளரக்கனை நெரித்தவன்
பைமிகுந்த பாம்பரைப் பரமர்காழி சேர்மினே. 8

காலினோடு கைகளுந் தளர்ந்துகாம நோய்தனல்
ஏலவார் குழலினா ரிகழ்ந்துரைப்ப தன்முனம்
மாலினோடு நான்முகன் மதித்தவர்கள் காண்கிலா
நீலமேவு கண்டனார் நிகழ்ந்தகாழி சேர்மினே. 9

நிலைவெறுத்த நெஞ்சமொடு நேசமில் புதல்வர்கள்
முலைவெறுத்த பேர்தொடங்கி யேமுனிவ தன்முனந்
தலைபறித்த கையர்தேரர் தாந்தரிப் பரியவன்
சிலைபிடித் தெயிலெய்தான் றிருந்துகாழி சேர்மினே. 10

---

6\. அவத்தம் - (அபத்தம்) தவறு, பொய். பலிக்கு இயங்கு பான்மையான், இயங்குதல் - நடத்தல்,

8\. ஐ மிகுந்த கண்டர் - கோழை பெருகிய கழுத்தினர். இரைப்பது என்பது கோழைகட்டியபின் பேசமுடியாமல் மூச்சுடன் வரும் ஒலி.

9\. காலுங் கையுந்தளர்ந்து, நோய்மிகப் பெற்றமையால். அன்பொடு உபசாரங்கள் செய்து போற்றிவந்த மனைவியரும் இகழ்ந்துரைக்கும் இழிவை அடையும் முன்னரே காழிசேர்மின் என்க. ஏலம் - மயிர்ச்சாந்து.

10\. பெற்றவரை வழிபட்ட மக்களும் பலநாள்படுக்கையிற் கிடந்து வருந்தும் அப்பெற்றோர்க்கு அவ்வப்போது வேண்டுவனசெய்து சலித்து, வெறுத்து. இவ்வாறுகிடந்து தாமும் துன்புற்று நம்மையும் துன்புறுத்தும் இவர்கள்

தக்கனார் தலையரிந்த சங்கரன் றனதரை
அக்கினோ டரவசைத்த வந்திவண்ணர் காழியை
ஒக்கஞான சம்பந்த னுரைத்தபாடல் வல்லவர்
மிக்கவின்ப மெய்திவீற் றிருந்துவாழ்தன் மெய்ம்மையே. 11

திருச்சிற்றம்பலம்

---

இருப்பதினும் இறப்பதே நன்று என முன்னைய நிலையை வெறுப்பர். அதனை 'நிலைவெறுத்தநெஞ்சம்' என்றார். வெறுத்தல் செறிதல், நெருங்கல்.

*11.* தலையரிந்தசங்கரன் என்றதால், தலை அரிந்தகொடுமை செய்தல் கடவுட்குத்தகுமோ? என்பார்க்கு சுகத்தைச்செய்பவன் அசுகத்தை விளைக்குமளவு மிக்க அபராதங்களைத் தக்கன் செய்தான் என்றும் ஆண்டும் சிவபிரான் மறக்கருணையால் ஆண்டு சுகத்தையே பின்விளைவாகச் செய்தான் என்றும் உணர்க.

---

பொருளென என்னைத்தன் பொற்கழல் காட்டிப்
புகுந்தெனக்கிங்
கருளிய சீர்த்திரு ஞானசம் பந்தன்
அருளிலர்போல்
வெருளின மானின்மென் நோக்கியை விட்டு
விழுநிதியின்
திரளினை யாதரித் தானன்று சாலஎன்
சிந்தனைக்கே, —அந்தாதி 84

சிந்தையைத் தேனைத் திருவா வடுதுறை
யுள்திகழும்
எந்தையைப் பாடல் இசைத்துத் தொலையா
நிதியம்எய்தித்
தந்தையைத் தீத்தொழில் மூட்டிய கோன்சரண்
சார்விலரேல்
நிந்தையைப் பெற்றொழி யாதிரந் தேகரம்
நீட்டுவரே. —அந்தாதி 85

# 98 திருத்துருத்தி

## 234 பதிகவரலாறு

ஆளுடைய பிள்ளையார் அழுந்தூர் மாடக்கோயிலின் வான்பொருளினை வணங்கிப்பரவி மீண்டு, திருத்துருத்தியின் இறைவராகிய சொன்னவாறறிவாரைத் தொழுது பாடியருளியது இத்திருப்பதிகம்.

### திருவிராகம் பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

வரைத்தலைப் பசும்பொனோ டருங்கலன்க ளுந்திவந்
திரைத்தலைச் சுமந்துகொண் டெறிந்திலங்கு காவிரிக்
கரைத்தலைத் துருத்திபுக் கிருப்பதே கருத்தினாய்
உரைத்தலைப் பொலிந்துனக் குணர்த்துமாறு வல்லமே. 1

அடுத்தடுத் தகத்தியோடு வன்னிகொன்றை கூவிளம்
தொடுத்துடன் சடைப்பெய்தாய் துருத்தியாயோர் காலனைக்
கடுத்தடிப் புறத்தினா னிறத்துதைத்த காரணம்
எடுத்தெடுத் துரைக்குமாறு வல்லமாகி னல்லமே. 2

---

1. காவிரியிலிருந்து கிளைத்த விக்ரமம் என்னும் ஆறு செல்ல அவற்றைச் சார்ந்திருத்தலின் துருத்தி எனப்பட்ட இத்தலத்தின் இறைவன் திருப்பெயர் சொன்னவாறறிவார் என்பது. அது கருதி, உரைத்தலைப்பொலிந்த - சொன்னவாறறிதலில் விளங்கிய உனக்கு உணர்த்துமாறு வல்லோமோ? வல்லோம் அல்லோம். அறிவார்க்கு அறிவிப்பது எப்படி என்றவாறு. பொலிந்த உனக்கு என்பதில் பெயரெச்சத்து அகரம் தொக்கது. சொன்ன வாறு அறியவல்ல உனக்கு உரைத்தலைப் பொலிந்து உணர்த்து மாறு வல்லமோ யாம்? வெளிப்படச் சொல்லாத முன்பே அன்பர் நினைத்தவற்றைச் சொன்னவாறு அறியும் உனக்கு யாம் உணர்த்தும் வன்மையுடையோமோ? இல்லை. எனலுமாம்.

2. சிவபிரான் சடையில், அகத்திப்பூ, வன்னியிலை, கொன்றைமலர், வில்வம் என்பவற்றை அடுத்தடுத்து வைத்துத் தொடுத்த மாலையை அணிந்துள்ளான் என்னும் உண்மை வேறு யாண்டும் காண்டல் அரிது.

கங்குல்கொண்ட திங்களோடு கங்கைதங்கு செஞ்சடைச்
சங்கிலங்கு வெண்குழை சரிந்திலங்கு காதினய்
பொங்கிலங்கு பூணநூ லுருத்திரா துருத்திபுக்
கெங்குநின் னிடங்களா வடங்கிவாழ்வ தென்கொலோ. 3

கருத்தினெலோர் காணியில் விருத்தியில்லை தொண்டர்தம்
அருத்தியாற்றம் மல்லல்சொல்லி யையமேற்ப தன்றியும்
ஒருத்திபால் பொருத்திவைத் துடம்புவிட்டி யோகியாய்
இருத்துநீ துருத்திபுக் கிதென்னமாய மென்பதே. 4

---

3. பூண நூல் உருத்திரா-முப்புரி நூலைப்பூண்ட உருத்திர மூர்த்தியே. துருத்திபுக்கு எங்கும் நின் இடங்களா அடங்கி வாழ்தல் என்கொல்.- புக்கது துருத்தியாயினும் எல்லா இடங்களும் சிவப்பிரகாசத்தால் உன் நிறைவையே உணர்த்துகின்றன. அவ்வாறு ஓரிடத்திருந்து பலவிடத்தும் காட்சி தரும் ஆற்றல் இருந்தவாறென்னே! என்றபடி. துருத்தியில் இன்றும் அத்திருக்கோயில் பொலிவு அத்தலம் முழுதும் விளங்கக் காணலாம்,

4. பா. 8. ல் பார்க்க. யோகியாயிருந்த உண்மை உணர்த்தியவாறு ஒருகாணி நிலம் உடையவனுகி, அதிற் பயிரிட்டு ஜீவனம்புரிதல் இல்லை. தம் வறுமைத்துன்பம் உரைத்துப் பிச்சை எடுப்பது. 'பகலிடம் புகலிடம்...துருத்தியார், இரவிடத்துறைவர் வேள்விக்குடியே' என்று முதலிற் கூறியதுமன்றிப் பாடல்தொறும் அதனைத் தெரிவித்திருப்பதாலும். 3. 90. 1. 'ஒருத்திபால் பொருத்திவைத்து உடம்புவிட்டுத் துருத்திபுக்கு இருத்தி, இது என்னமாயம் என்பதோ?' என்று இங்கு வினவியதாலும் 'காப்பது வேள்விக்குடி தண்துருத்தி யெங்கோன் அரைமேல் ஆர்ப்பது நாகம்' என்றதாலும் ஆளுடைய பிள்ளையார் காலத்துக்கும் முன்பே, பகலில் துருத்திவாசமும் இரவில் வேள்விக்குடிவாசமும் உண்டு என்ற வரலாறு வழங்கப்பட்டமை விளங்கும். இவை இல்லையேல் இரண்டு தலங்களையும் ஒருங்கு பாடார் என்க. 'வட்டக்குண்டத்தில் எரிவளர்த்தோம்பி மறைபயில்வார் அட்டக்கொண் டுண்பதறிந்தோமேல் நாம் இவர்க்கு ஆட்படோம்' என்றதில் 'வேள்விக்குடி' என்னும் பெயர்க்காரணம் உள்ளதறிக. மான்தோல் ஒன்றை உடுத்துப்

துறக்குமா சொலப்படாய் துருத்தியாய் திருந்தடி
மறக்குமா றிலாதவென்னை மையல்செய்திம் மண்ணின்மேல்
பிறக்குமாறு காட்டினாய் பிணிப்படு முடம்புவிட்
டிறக்குமாறு காட்டினாய்க் கிழுக்குகின்ற தென்னையே. 5

வெயிற்கெதிர்ந் திடங்கொடா தகங்குளிர்ந்த பைம்பொழில்
துயிற்கெதிர்ந்த புள்ளினங்கண் மல்குதண் டுருத்தியாய்
மயிற்கெதிர்ந் தணங்குசாயன் மாதொர்பாக மாகமூ
வெயிற்கெதிர்ந் தோரம்பினா லெரித்தவில்லி யல்லையே. 6

கணிச்சியம்ப டைச்செல்வா கழிந்தவர்க் கொழிந்தசீர்
துணிச்சிரக் கிரந்தையாய் கரந்தையாய் துருத்தியாய்
அணிப்படுந் தனிப்பிறைப் பனிக்கதிர்க் கவாவுநல்
மணிப்படும்பை நாகநீ மகிழ்ந்தவண்ண லல்லையே. 7

---

புலித்தோல் பியற்கும் இட்டு யானைத்தோல் போர்ப்பதறிந்தோமெனில் நாம் இவர்க்கு ஆட்படோம் 7. என்பதில் துருத்தியோகியை வினையூட்டினாரென்பர்.

5. துருத்தியில் எழுந்தருளிய முதல்வனே, பகலில் துறவி போல வேடங்கொண்டு இரவில் வேள்விக்குடியில் மணவாளக் கோலம்பூண்டு, தழும்பும் உற இணை விழைச்சுடையாய்; துறக்கும் ஆறு சொல்லப்படாய், உன் திருந்திய திருவடிகளை மறக்கும் மாறுபாடு சிறிதும் இல்லாத என்னை, மையல்செய்து, இம்மண்ணுலகில் பிறக்குமாறு காட்டியருளினை. நோய்களுக்கு இடமாகும் உடம்பைத்தவிர்த்து, இறக்குமாறு காட்டியருளினை; இவ்வாறு பிறப்பும் இறப்பும் நீ காட்ட நான் உனக்குச்செய்த இழுக்கு யாது? மறக்கும் ஆறு எனலும் உண்டு. நான்கடியிலும் ஆறு என்றே கொள்ளல் ஏலாததன்று. 'பிணிப்படும் உடம்பு'- 'இடும்பைக் கிடும்பை' (மூதுரை) என்றதுணர்க.

6. துருத்தியில் உள்ள சோலைவளம் கூறியவாறு. வெய்யிலுக்கு எதிர்த்து இடம் கொடாது குளிர்ந்த சோலை இப்பொழுதும் உண்டு. அணங்கு - அழகு.

7. கணிச்சி படை - கணிச்சியம்படை, மழுப்படை. கழிந்தவர் = நூறுகோடி பிரமர்கள் நொந்தினர், ஆறு கோடி

சுடப்பொடிந் துடம்பிழந் தநங்கனுய மன்மதன்
இடர்ப்படக் கடந்திடந் துருத்தியாக வெண்ணினுய்
கடற்படை யுடையவக் கடலிலங்கை மன்னனை
அடற்பட வடுக்கலில் லடர்த்தவண்ண லல்லையே. 8

களங்குளிர்ந் திலங்குபோது காதலானு மாலுமாய்
வளங்கிளம்பொ னங்கழல் வணங்கிவந்து காண்கிலார்
துளங்கிளம்பி றைச்சென்னித் துருத்தியாய் திருந்தடி
உளங்குளிர்ந்த போதெலா முகந்துகந்துரைப்பனே. 9

புத்தர்தத் துவமிலாச் சமணுரைத்த பொய்தனை
உத்தம மெனக்கொளா துகந்தெழுந்து வண்டினம்
துத்தநின்று பண்செயுஞ் சூழ்பொழிற் துருத்தியெம்
பித்தர்பித்த னைத்தொழப் பிறப்பறுத்தல் பெற்றியே. 10

---

நாராயணர் அங்கனே, ஏறுகங்கை மணல் எண்ணில் இந்திரர், 'ஈறிலாதவன் ஈசன் ஒருவனே, 5. 100, 3. என்றதிற் குறித்தவர்கள். துணி சிரம் கிரந்தை - துணிந்த தலைமுடிச்சு; தலைமாலையை அணிந்தவனே; கரந்தையாய் - சிவகரந்தையைச் சூடியவனே'.

8. நெற்றிக்கண்ணால் சுட்டொழிக்க, சாம்பராகி மெய்யிழந்த உருவிலியாகிய மன்மதன், இடர்ப்படும்படி வென்று, துருத்தி இடம் ஆகத் திருவுள்ளம் கொண்டருளினை. கடல் போலும் பெரும்படையை உடைய அப் பிரசித்திபெற்ற கடலின் நடுவே உள்ள இலங்கைக்கு வேந்தனை, கொலை உறத் திருக்கயிலை மலையை அழுத்தி அடர்த்த இறைவன் அல்லையோ?.

9. கள் அம்குளிர்ந்து இலங்குபோது காதலான்-தேனுடைய அழகிய குளிர்வுற்று விளங்கும் தாமரைப்பூவை விரும்புமவன். களம் இடமுமாம். போது ஆகிய களம், களமாகியபோது. களம்போது ஆகக் காதலிப்பவன்.

10. உத்தமம் எனக் கொள்ளாது மேகம் துத்தம் - ஏழிசையுள் ஒன்றானது. பித்தர் பித்தன்:- பித்தர்க்கெல்லாம் பித்தனுயிருப்பவனைத் தொழுதலால் பிறவிப் பெருங்கடலைத் தீர்த்தலே பெற்றிமையாகும்.

கற்றுமுற்றி னார்தொழுங் கழுமலத் தருந்தமிழ்
சுற்றுமுற்று மாயினா னவன்பகர்ந்த சொற்களால்
பெற்றமொன் றுயர்த்தவன் பெருந்துருத்தி பேணவே
குற்றமுற்று மின்மையிற் குணங்கள்வந்து கூடுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. சுற்றும் முற்றும் ஆயினான் - சுற்றிலும் முற்றிலும் ஆகிய சிவபிரான். பெற்றம் - எருது எழுதிய கொடிக்கு ஆகு பெயர்.

---

நீட்டுவ ரோதத்தொ டேறிய சங்க
நெகுமுளரித்
தோட்டுவெண் முத்தஞ் சொரிசண்பை நாதற்
றொழா தவரில்
வேட்டுவர் வேட்டதண் ணீரினுக் குண்ணீர்
உணக்குழித்த
காட்டுவர் ஊறல் பருகுங் கொலாம்எங்
கனங்குழையே. —அந்தாதி 86

குழைக்கின்ற கொன்றைபொன் போல மலரநுங்
கூட்டமெல்லாம்
அழைக்கின்ற கொண்டல் இயம்பொன் னிலையகன்
றூர்வரவு
பிழைக்கின் றதுகொலென் றஞ்சியொண்
சண்பைப் பிரான்புறவத்
திழைக்கின்ற கூறல் முடியளண் ணுத
இளங்கொடியே. —அந்தாதி 87

## 99 திருக்கோடிகா

### 235 பதிகவரலாறு

திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர் திருவேள்விக்குடி திருத்துருத்தி என்னும் தலங்களைப்பரவி மணவாளக்கோலத்தைத் தழும்பிய தன்மையும்கூடப்பாடித், திருக்கோடிகாவில் தேவர் சிகாமணியைப் பாடியது இத்திருப்பதிகம்.

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

இன்றுநன்று நாளைநன் றென்றுநின்ற விச்சையால்
பொன்றுகின்ற வாழ்க்கையைப் போகவிட்டுப் போதுமின்
மின்றயங்கு சோதியான் வெண்மதி விரிபுனல்
கொன்றைதுன்று சென்னியான் கோடிகாவு சேர்மினே. 1

அல்லன்மிக்க வாழ்க்கையை யாதரித் திராதுநீர்
நல்லதோர் நெறியினை நாடுதுந் நடம்மினோ
வில்லையன்ன வாணுதல் வெள்வளையொர் பாகமாங்
கொல்லைவெள்ளை யேற்றினுன் கோடிகாவு சேர்மினே. 2

துக்கமிக்க வாழ்க்கையின் சோர்வினைத் துறந்துநீர்
தக்கதோர் நெறியினைச் சார்தல்செய்யப் போதுமின்
அக்கணிந் தரைமிசை யாறணிந்த சென்னிமேல்
கொக்கிற கணிந்தவன் கோடிகாவு சேர்மினே. 3

---

**1.** இத்திருப்பதிகம் முழுதும் உள்ள உபதேசத்தை உணர்ந்தொழுகுக. பொய் வாழ்க்கையைப் போக்கி, மெய் வாழ்க்கையைப் பெறும் அன்புற்று வம்மின் உலகீர், சிவ பெருமான் எழுந்தருளிய திருக்கோடிகாவைச் சேர்மின். **5 - 78 - 2, 6.** ஐயடிகள் க்ஷேத்திரவெண்பா. 6.

**2.** துன்பம் மிக்க வாழ்க்கையை விரும்பியிராமல், நல்லதொருகதியை நாடுவோம். வம்மின். வெள்ளேற்றண்ணலது திருக்கோடிகாவைச் சேர்மின்.

**3.** துக்கம் மிக்க வாழ்க்கையினுல் வரும் இளைப்பை ஒழித்து. தக்கதொருகதியை அடையத் திருக்கோடிகாவைச் சேர்மின்.

பண்டுசெய்த வல்வினை பற்றறக் கெடும்வகை
உண்டுமக் குரைப்பனா னெல்லைநீ ரெழுமினோ
மண்டுகங்கை செஞ்சடை வைத்துமாதொர் பாகமாக்
கொண்டுகந்த மார்பினன் கோடிகாவு சேர்மினே. 4

முன்னைநீர்செய் பாவத்தான் மூர்த்திபாதஞ் சிந்தியா
தின்னநீரி டும்பையின் மூழ்கிறீ ரெழும்மினோ
பொன்னைவென்ற கொன்றையான் பூதம்பாட வாடலான்
கொன்னவிலும் வேலினன் கோடிகாவு சேர்மினே. 5

ஏவமிக்க சிந்தையோ டின்பமெய்த லாமெனப்
பாவமெத் தனையுநீர் செய்தொரு பயனிலைக்
காவன்மிக்க மாநகர் காய்ந்துவெங் கனல்படக்
கோவமிக்க நெற்றியான் கோடிகாவு சேர்மினே. 6

ஏணழிந்த வாழ்க்கையை யின்பமென் றிருந்துநீர்
மாணழிந்த மூப்பினால் வருந்தன்முன்னம் வம்மினோ
பூணல்வெள் ளெலும்பினன் பொன்றிகழ் சடைமுடிக்
கோணல்வெண் பிறையினன் கோடிகாவு சேர்மினே. 7

மற்றிவாழ்க்கை மெய்யெனும் மனத்தினைத் தவிர்ந்துநீர்
பற்றிவாழ்மின் சேவடி பணிந்துவந் தெழுமினோ
வெற்றிகொ டசமுகன் விறல்கெட விருந்ததோர்
குற்றமில் வரையினன் கோடிகாவு சேர்மினே. 8

---

4. முற்பிறவியில் செய்த வினை பசையறக் கெடும்படி திருக்கோடிகாவைச் சேர்மின்.

5. முற்பிறவியில் செய்த பாவத்தால், சிவமூர்த்தியின் திருவடியைச் சிந்தை செய்யாமல் துன்பத்தில் முழுகுகின்றீர், எழுமின், சிவபிரானது திருக்கோடிகாவைச் சேர்மின்.

6. ஏவம் - இகழ்ச்சி, குற்றம். காவல் மிக்க மாநகர்:- திரிபுரம். மூப்படைந்து, அதனால்தளர்ச்சி எய்தி, வருந்துவதன் முன்னரே, வம்மின்; திருக்கோடிகாவைச் சேர்மின்.

7. ஏண் - பெருமை. பொன்போலும் சடையில் வெண் பிறையைச் சூடியவன்.

8. இது மெய்வாழ்க்கை அன்று என்று நீக்கித் திருக்கோடிகாவைச் சேர்மின்.

மங்குநோ யுறும்பிணி மாயும்வண்ணஞ் சொல்லுவன்
செங்கண்மா றிசைமுகன் சென்றளந்துங் காண்கிலா
வெங்கண்மால் விடையுடை வேதியன் விரும்புமூர்
கொங்குலாம் வளம்பொழிற் கோடிகாவு சேர்மினே. 9

தட்டொடு தழைமயிற் பீலிகொள் சமணரும்
பட்டுடை விரிதுகிலி னார்கள்சொற் பயனிலை
விட்டபுன் சடையினன் மேதகும் முழவொடும்
கொட்டமைந்த வாடலான் கோடிகாவு சேர்மினே. 10

கொந்தணி குளிர்பொழிற் கோடிகாவு மேவிய
செந்தழ லுருவனைச் சீர்மிகு திறலுடை
அந்தணர் புகலியு ளாயகேள்வி ஞானசம்
பந்தன தமிழ்வல்லார் பாவமான பாறுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

9. நோய் அடைதற்கு ஏதுவாகிய கட்டு, உடலையும் அதைச் சார்ந்து உயிரையும் பிணித்தலால் பிணி எனப்பட்டது. பிறவிப்பிணி அழியும் வகை சொல்வேன். திருமாலும் நான்முகனும் சென்று அளந்தும் காணமாட்டாத பெருமையன்.

10. சொல்லுஞ் சொல் பயனில்லை. தொங்கவிட்ட பொன்னார் செஞ்சடை.

11 திருக்கோடிகாவை மேவிய அந்தணர் வாழும் திருப்புகலியுள் ஆய்ந்த மறையாகிய கேள்வியையுடைய திருஞானசம்பந்தருடைய இத்தமிழ் மாலை பாட வல்லவர் பாவம் போக்குவர். கொந்து - பூங்கொத்து. கேள்வி - சுருதி. அந்தணர் புகலி என்றதால் அங்கு அக்காலத்தில் சிவபத்தியிற் சிறந்த அந்தணர் பலர் இருந்தமையும், அதிற் சிறவாதாரைக் கூறார் என்பதும், கூறியது கொண்டு அவரை நாமும் இப்பொழுது நினைந்து பணிந்து நலம் பெறலாயிற்று என்பதும் உணர்க.

# 100 திருக்கோவலூர்வீரட்டம்

## 236 பதிகவரலாறு

திருமறைச் சிறுவர் திருவாமாத்தூரை அணைந்து போற்றித் திருக்கோவலூரைச் சேர்ந்து ஏத்திப் பாடியது இத்திருப்பதிகம்.

### திருவிராகம் பண் - நட்டராகம்

#### திருச்சிற்றம்பலம்

படைகொள்கூற்றம் வந்துமெய்ப் பாசம்விட்ட போதின்கண்
இடைகொள்வா ரெமக்கிலை யெழுகபோது நெஞ்சமே
குடைகொள்வேந்தன் மூதாதை குழகன்கோவ லூர்தனுள்
விடையதேறுங் கொடியினன் வீரட்டானஞ் சேர்துமே. 1

கரவலாளர் தம்மனைக் கடைகடோறுங் கானிமிர்த்
திரவலாழி நெஞ்சமே யினியதெய்த வேண்டினீ
குரவமேறி வண்டினங் குழலொடியாழ்செய் கோவலூர்
விரவிநாறு கொன்றையான் வீரட்டானஞ் சேர்துமே. 2

---

1. பாசம் - கயிறு; எமபாசம். நெஞ்சமே எழுக, போதுக. ஆழி நெஞ்சம் - கடலாழத்தினும் காண்டற்கரிய ஆழமுடைய நெஞ்சமே! நினைப்பென்னும் நெடுங்கிணறு. வெண்கொற்றக் குடையைக்கொண்ட மலையமான் முது தாதையாகிய குழகன் சிவபிரான். குழகன் இத்தலத்தின் இறைவன் திருப்பெயர்; பா. 3. 6. 9. பார்க்க. விடையது - அது பகுதிப்பொருள் விகுதி. விரட்டானம், வீரஸ்தாநம்.

2. கரப்பவர் வீடுகளின் கடைவாயில் தோறும், கால் நிமிர்த்து (நடந்து) இரப்பதைச் செய்யாதே; நெஞ்சமே! இனியதை எய்தவேண்டினால், சிவபெருமான் வீரட்டானத்தைச் சேர்வோம்.

உள்ளத்தீரே போதுமின் னுறுதியாவ தறிதிரேல்
அள்ளற்சேற்றிற் காலிட்டிங் கவலத்துள் ளழுந்தாதே
கொள்ளப்பாடு கீதத்தான் குழகன்கோவ லூர்தனில்
வெள்ளந்தாங்கு சடையினன் வீரட்டானஞ் சேர்துமே. 3

கனைகொளிருமல் சூலைநோய் கம்பதாளி குன்மமும்
இனையபலவு மூப்பினோ டெய்திவந்து நலியாமுன்
பனைகளுலவு பைம்பொழிற் பழனஞ்சூழ்ந்த கோவலூர்
வினையைவென்ற வேடத்தான் வீரட்டானஞ் சேர்துமே. 4

உளங்கொள்போக முய்த்திடா ருடம்பிழந்த போதின்கண்
துளங்கிநின்று நாடொறுந் துயரலாழி நெஞ்சமே
வளங்கொள்பெண்ணை வந்துலா வயல்கள்சூழ்ந்த கோவலூர்
விளங்குகோவ ணத்தினன் வீரட்டானஞ் சேர்துமே. 5

கேடுமூப்புச் சாக்காடு கெழுமிவந்து நாடொறும்
ஆடுபோல நரைகளா யாக்கைபோக்க தன்றியும்
கூடிநின்று பைம்பொழிற் குழகன்கோவ லூர்தனுள்
வீடுகாட்டு நெறியினன் வீரட்டானஞ் சேர்துமே. 6

---

3. நல்ல உள்ளத்தை உடையவரே உயிர்க்கு உறுதி யாவதை அறிதிர் என்னில் திருக்கோவலூர் வீரட்டானம் சேர்வோம். அள்ளற்சேறு - நரகம்.

4. கம்பதாளி - தாள்நடுங்கும் ஒருவகை நோய்; கம்பம் - நடுக்கம்; தாளி - கால்களைப்பற்றுவது. 'பெண்ணை' என்றதற்கேற்பப் பனந்தோப்பு மிக்கிருக்கும் நாடு. இருவினையையும் போக்கிய சிவவேடத்தை உடையவன்.

5. ஆழி நெஞ்சமே! - ஆழ்தலையுடைய மனமே! மனத்தில் விரும்பப்பட்ட போகங்களை அநுபவிக்கச் செய்யும் புண்ணியம் இல்லாதவர்கள் கட்டையை விட்டகன்ற சமயத்தில், தளர்ந்து நின்று நாள்தோறும் துயரம் அடையாதே.

6. கேடும் முதுமையும் இறப்பும் பொருந்திவந்து நாள் தொறும் ஆடுகளைப்போல நரைகளாகி உடம்பு அழிதலுடையது. பேரின்பவீட்டைக்காட்டும் திருநெறி. நெறியினன்- திருநெறியில் சென்று அடையப்பெறும் சிவபிரான்.

உரையும்பாட்டுந் தளர்வெய்தி யுடம்புமூத்த போதின்கண்
நரையுந்திரையுங் கண்டெள்கி நகுவர்நமர்க ளாதலால்
வரைகொள்பெண்ணை வந்துலா வயல்கள்சூழ்ந்த கோவலூர்
விரைகொள்சீர்வெண் ணீற்றினன் வீரட்டானஞ் சேர்துமே. 7

ஏதமிக்க மூப்பினோ டிருமலீளை யென்றிவை
ஊதலாக்கை யோம்புவீ ருறுதியாவ தறிதிரேல்
போதில்வண்டு பண்செயும் பூந்தண்கோவ லூர்தனுள்
வேதமோது நெறியினன் வீரட்டானஞ் சேர்துமே. 8

ஆறுபட்ட புன்சடை யழகனாயி ழைக்கொரு
கூறுபட்ட மேனியான் குழகன்கோவ லூர்தனில்
நீறுபட்ட கோலத்தா னீலகண்ட னிருவர்க்கும்
வேறுபட்ட சிந்தையான் வீரட்டானஞ் சேர்துமே. 9

குறிகொளாழி நெஞ்சமே கூறைதுவரிட் டார்களும்
அறிவிலாத வமணர்சொல் லவத்தமாவ தறிதிரேல்
பொறிகொள்வண்டு பண்செயும் பூந்தண்கோவ லூர்தனில்
வெறிகொள்கங்கை தாங்கினன் வீரட்டானஞ் சேர்துமே. 10

---

7. உரையும் பாட்டும் - பேச்சும் பாடலும். 'பாட்டும் உரையும் பயிலாதன இரண்டோட்டைச் செவியும் உள'

8. ஈளை - சிலேட்டும தோடத்தால் வரும் நோய் வகையுள் ஒன்று. ஊதல் ஆக்கை - பருத்தலையுடைய உடம்பு. உறுதி- ஆன்ம லாபம். அறிதிர் ஏல் - அறிவீர் எனில். வேதம் ஓதும் நெறியினன் - வேதநெறியை அருளியவன்.

9. ஆயிழை - உமாதேவியார். திருவெண்ணீறு சண்ணித்த மேனியழகினன். இருவர் - மாலும் அயனும், வேறுபட்ட சிந்தைக்கு ஏதுவாயிருந்தவன். 'அந்தணர் தம் சிந்தையானை' 'வாயானை, மனத்தானை, மனத்துள் நின்ற கருத்தானை.'

10. 'ஆழி நெஞ்சமே'. நீராழங்கண்டாலும் நெஞ்சாழம் காணமுடியாது. அவத்தம் - பொய். பொறி - வரி. வெறி-மணம்.

கழியொடுலவு கானல்சூழ் காழிஞான சம்பந்தன்
பழிகடீரச் சொன்னசொற் பாவநாச மாதலால்
அழிவிலீர்கொண் டேத்துமின் னந்தண்கோவ லூர்தனில்
விழிகொள்பூதப் படையினன் வீரட்டானஞ் சேர்துமே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. பழிகள் தீரச்சொன்ன சொல். பாவநாசம் - பழிகள் ஒழியப் பாடியருளிய இத்திருப்பதிகத்தினை ஓதுவார்க்குப் பாவங்கள் அழியும். கொண்டு - இத்திருப்பதிகப் பொருளை உள்ளத்திற்கொண்டு.

---

கொடித்தேர் அவுணர் குழாம்அனல் ஊட்டிய
குன்றவில்லி
அடித்தேர் கருத்தின் அருகா சனியை
அணிஇழையார்
முடித்தேர் கமலங் கவர்வான் முரிபுரு
வச்சிலையால்
வடித்தேர் நயனக் கணையிணை கோத்து
வளைத்தனரே. —அந்தாதி 88

வளைபடு தண்கடற் கொச்சை வயவன்
மலர்க்கழற்கே
வளைபடு நீண்முடி வார்புன லூரன்ற
னீரிலங்கு
வளைபடு கண்ணியர் தம்பொதுத் தம்பல
நாறும்இந்த
வளைபடு கிங்கிணிக் கால்மைந்தன் வாயின்
மணிமுத்தமே. —அந்தாதி 89

# 101 திருவாரூர்

## 237 பதிகவரலாறு

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருப்புகலூரிலிருந்து, திருவாரூரைத் தரிசிக்க, அதன் அருகில் வரும்போது, ஒரு பேரொளிமயமாக ஆரூர் தோன்றிற்று. அதுகண்டு பாடியது இத்திருப்பதிகம்.

### திருவிராகம் பண் - நட்டராகம்

#### திருச்சிற்றம்பலம்

பருக்கையானை மத்தகத் தரிக்குலத் துகிர்ப்புக
நெருக்கிவாய நித்திலந் நிரக்குநீள் பொருப்பனூர்
கருக்கொள்சோலை சூழநீடு மாடமாளி கைக்கொடி
அருக்கன்மண்ட லத்தணவு மந்தணாரு ரென்பதே. 1

விண்டவெள் ளெருக்கலர்ந்த வன்னிகொன்றை மத்தமும்
இண்டைகொண்ட செஞ்சடை முடிச்சிவ னிருந்தவூர்
கெண்டைகொண் டலர்ந்தகண்ணி னார்கள்கீத வோசைபோய்
அண்டரண்ட மூடறுக்கு மந்தணாரு ரென்பதே. 2

கறுத்தநஞ்ச முண்டிருண்ட கண்டர்கால னின்னுயிர்
மறுத்தமாணி தன்றனக்கம் வண்மைசெய்த மைந்தனூர்
வெறித்துமேதி யோடிமூசு வள்ளைவெள்ளை நீள்கொடி
அறுத்துமண்டி யாவிபாயு மந்தணாரு ரென்பதே. 3

---

1. மத்தகம் - தலை, நெற்றி. அரி - சிங்கம். அருக்கன் - சூரியன். அணவும் - கிட்டும். ஆரூர் - 'ஆத்தி' பற்றிவந்த காரணப்பெயர். அது சோழமன்னரது தார்.

2. இண்டை - திங்கள் வட்டம்போலத் திரட்சியுற்ற பத்திரபுட்பங் கலந்த மாலைவகை. சிவலிங்கத்திற்கு இண்டை இன்றியமையாதது. அண்டம் - மேலுலகம்.

3. 'பாலாகித்தோன்றிப் பருகினராவிகொள்ளும் ஆலாலம்' கந்தபுராணம் - வளளியம்மையார். மாணி - பிரமசாரி; மார்க்கண்டேய முனிவர், வண்மை - கொடைமை, வன்மை என்றும் பாடம் இருத்தல் கூடும். வெறித்து - மயங்கி, கலங்கி. வள்ளை என்பது ஒரு கொடி. ஆவி - குளம்.

அஞ்சுமொன் றியாறுவீசி நீறுபூசி மேனியில்
குஞ்சியார வந்திசெய்ய வஞ்சலென்னி மன்னுமூர்
பஞ்சியாரு மெல்லடிப் பணைத்தகொங்கை நுண்ணிடை
அஞ்சொலா ரரங்கெடுக்கு மந்தணாரூ ரென்பதே. 4

சங்குலாவு திங்கள்சூடி தன்னையுன்னு வார்மனத்
தங்குலாவி நின்றவெங்க ளாதிதேவன் மன்னுமூர்
தெங்குலாவு சோலைநீடு தேனுலாவு செண்பகம்
அங்குலாவி யண்டநாறு மந்தணாரூ ரென்பதே. 5

கள்ளநெஞ்ச வஞ்சகக் கருத்தைவிட் டருத்தியோ
டுள்ளமொன்றி யுள்குவா ருளத்துளா னுகந்தவூர்
துள்ளிவாளை பாய்வயற் சுரும்புலாவு நெய்தல்வாய்
அள்ளனாரை யாரல்வாரு மந்தணாரூ ரென்பதே. 6

---

4. அஞ்சும் ஒன்றுதல் - ஐம்பொறிகளும் தத்தம் புலன்களைக் கொள்வதில் சிவபெருமான் திறத்திலன்றி மற்றெத் திறத்திலும் ஈடுபடாமை. 'ஐந்துபேரறிவும் கண்களே கொள்ள' ஆறு வீசுதல் - காமக்குரோதலோபமோகமதமாற்சரியம் அறு பகையும் செற்று ஐம்புலனும் அடக்கி நிற்றல். குஞ்சி - தலைமயிர். ஈண்டுத்தலைக்கு ஆகுபெயர்: குஞ்சி ஆர - தலையார. வந்தி - வந்தனை. தலையாரக்கும்பிட்டு. அஞ்சல் என்னி - அஞ்சாதே என்னும் சிவபிரான். பஞ்சியாருமெல்லடி - பஞ்சுலாவிய மெல்லடி. 2. 105. 9. அடியின் மென்மைக்குப் பஞ்சி ஒப்பு. மகளிர் அரங்கில் ஏறி நடஞ்செய்யும் திறம் அவையோரால் எடுத்துப் புகழ்ந்து பாராட்டும் அளவுடையதாகும்.

5. சங்கு உலாவு திங்கள் - சங்கினைப்போலும் வெண்டிங்கள். சூடி - சூடிய சிவபிரான். எங்கள் ஆதிதேவன் என்று உரைக்கும் உரிமை ஆசிரியர்க்கு உண்டு.

6. கள்ளநெஞ்ச வஞ்சகக்கருத்து - நெஞ்சத்தின் இயல்பும் அதுகாரணமாகத் தோன்றும் வஞ்சகமாகிய காரியமும், அக்காரியத்தின் விளைவான தீயகருத்தும் உணர்த்தப்பட்டன. அத்தீயகருத்து உள்ளவரை அருள்பெறலரிது. அக்கருத்தை ஒழித்து, அன்பொடு, உள்ளம் ஒன்றியிருந்து, தியானம் புரிபவர்

கங்கைபொங்கு செஞ்சடைக் கரந்தகண்டர் காமனை
மங்கவெங்க ணல்விழித்த மங்கைபங்கன் மன்னுமூர்
தெங்கினூடு போகிவாழை கொத்திறுத்து மாவின்மேல்
அங்கண்மந்தி முந்தியேறு மந்தணாரு ரென்பதே. 7

வரைத்தலம் மெடுத்தவன் முடித்தலம் முரத்தொடும்
நெரித்தவன் புரத்தைமுன் னெரித்தவன் னிருந்தவூர்
நிரைத்தமாளி கைத்திருவி னேரனார்கள் வெண்ணகை
அரத்தவாய் மடந்தைமார்க ளாடுமாரு ரென்பதே. 8

இருந்தவன் கிடந்தவன் னிடந்துவிண் பறந்துமெய்
வருந்தியு மளப்பொணாத வானவன் கிடந்தவூர்
செருந்திஞாழல் புன்னைவன்னி செண்பகஞ் செழுங்குரா
அரும்புசோலை வாசநாறு மந்தணாரு ரென்பதே. 9

---

உள்ளத்தில் உள்ள சிவபெருமான். வாளைகள் துள்ளிப்பாய்கின்ற வயல். வயலில் நாரை ஆரும் ஆரூர். நெய்தற் பூக்களைச் சூழ்ந்து வண்டுகள் உலாவும். அள்ளல் - சேறு. நெய்தற்கண் உள்ள ஆரல் மீன்கள்.

7. கங்கைநீர் பொங்குஞ் செஞ்சடை. கங்கையைக்கரந்த அகண்டர். அகண்டர் - சருவவியாபகர். மந்தி - பெண்குரங்கள். தெங்கினூடுபோய், வாழைக்குலையை ஒடித்து, மாமரத்தின் மேல் ஏறும் வளமுடைய.

8. உரத்தொடும் - மார்பொடும், வலியுடன், நிரைத்த - வரிசையுற்ற. திருவின் நேரனார்கள் - திருமகளை நேரொத்தவர்கள். அரத்தவாய் - செவ்வாய்.

9. நான்முகன் திருமால் இடந்தும் பறந்தும் வருந்தியும் அளப்பதற்கு ஒன்றாத உம்பரான். செருந்தி - ஒருவகைமரம்.

பறித்தவெண் டலைக்கடுப் படுத்தமேனி யார்தவம்
வெறித்தவேடன் வேலைநஞ்ச முண்டகண்டன் மேவுமூர்
மறித்துமண்டு வண்டல்வாரி மிண்டுநீர் வயற்செநெல்
அறுத்தவா யசும்புபாயு மந்தணரு ரென்பதே. 10

வல்லிசோலை சூதநீடு மன்னுவீதி பொன்னுவா
அல்லிமா தமர்ந்திருந்த வந்தணரு ராதியை
நல்லசொல்லு ஞானசம் பந்தனுவி னின்னுரை
வல்லதொண்டர் வானமாள வல்லர்வாய்மையாகவே. 11

திருச்சிற்றம்பலம்

---

*10.* பறிகொள்தலையினகை கடுப்படுத்த மேனி, கடுப்பொடி யுடற்கவசர். 'கடுவேதின்று' மெய்ப்பொடியட்டி. வெறித்த வேடன் - அஞ்சிய சிவவேடமுடைய சிவபிரான். அச்சம் - நெறியல்லா நெறியிற் செல்வதுபற்றி தோன்றுவது. மறித்து - தடுத்து, திருப்பி. அசும்பு - நீர்ப்பொசிவு.

*11.* சூதம் - மாமரம். பொன்னுலாவல்லிமாது - 'அல்லியங் கோதை' தேவியின் திருநாமம். நல்ல - ஞான நன்னெறியுணர்த் துஞ் சொற்களை. இன்னுரை - பேரின்பப்பாடல். வானம் - தேன்வந்த முதின்றெளிவி னொளிவந்தவான்' திருவாசகம். *178.* 'வானுக்குள் ஈசனைத் தேடும் மதி இலீர்' திருமந்திரமாலை. முத்தி நிச்சயம். பக்கம். *139.* வாய்மை - வாயின் (நாவின்) பொய்யாமொழி. 'வாய்மை எனப்படுவது யாதெனின்' என்று ஒரு வினவை ஏறிட்டுக்கொண்டு, அதற்கு விடையிறுக்கும் ஆசிரியர், 'யாதொன்றும் தீமை இலாத(வற்றைச்) சொலல்' என்றார், செயல் என்றோ எணல் என்றோ உரைத்தாரல்லர், அதனல், வாய்மை சொற்களைப் பற்றியதாதல் விளங்கும். உள் - உள்ளம். உள்ளத்தின் தன்மை உண்மை, உள்ளுதலின் பொய்யாமை குறித்து. 'உள்ளத்தாற் பொய்யாதொழுகின் உலகத்தார் உள்ளத்துள் எல்லாம் உளன்'. மெய்ம்மை - மெய்யாற்செய்யுஞ் செயலின் பொய்யாமை. உண்மையும் முறையே எண்ணம் செய்கை இரண்டனையும்பற்றிய காரணப் பெயர்களாம்.

# 102 திருச்சிரபுரம்

## 238 பதிகவரலாறு

சீகாழிக்குரிய பதிகங்களுள் ஒன்று. பாடப்பட்ட காலம், இடம் முதலியன குறிக்கப்பட்டில,

### பண் - நட்டராகம்

### திருச்சிற்றம்பலம்

அன்ன மென்னடை யரிவையோ டினிதுரை
யமரர்தம் பெருமானார்
மின்னு செஞ்சடை வெள்ளெருக் கம்மலர்
வைத்தவர் வேதாந்தம்
பன்னு நன்பொருள் பயந்தவர் பருமதிற்
சிரபுரத் தார்சீரார்
பொன்னின் மாமல ரடிதொழு மடியவர்
வினையொடும் பொருந்தாரே. 1

கோல மாகரி யுரித்தவ ரரவொடு
மேனக்கொம் பிளவாமை
சாலப் பூண்டுதண் மதியது சூடிய
சங்கர னார் தம்மைப்
போலத் தம்மடி யார்க்குமின் பளிப்பவர்
பெருகடல் விடமுண்ட
நீலத் தார்மிடற் றண்ணலார் சிரபுரந்
தொழவினை நில்லாவே. 2

---

1. அன்னப்பறவையின் நடைபோல மெல்லிய நடையுடையஉமாதேவியார். அடியவர் வினையொடும் பொருந்தார். இத் திருப்பதிக முழுதும் பாராயணம் புரிவாரது வினை தீர்க்கும் உண்மையை அனுபவித்துணர்க.

2. சால - அமைய, சங்கரன் - சுகத்தைச் செய்பவன், நித்தியசுகம். பேரின்ப வடிவினனாகிய பரமசிவன் தன் அடி அடைந்தவர்க்குத் தனது பேரின்பவடிவினை அருள்கின்றான். (முத்திநிச்சயப் பேருரை:- பக்கம் - 74, 177. பார்க்க).

மானத்திண்புய வரிசிலைப் பார்த்தனைத்
தவங்கெட மதித்தன்று
கானத் தேதிரி வேடனா யமர்செயக்
கண்டருள் புரிந்தார்பூந்
தேனைத் தேர்ந்துசேர் வண்டுக டிரிதருஞ்
சிரபுரத் துறையெங்கள்
கோனைக் கும்பிடு மடியரைக் கொடுவினை
குற்றங்கள் குறுகாவே. 3

மாணி தன்னுயிர் மதித்துண வந்தவக்
காலனை யுதைசெய்தார்
பேணி யுள்குமெய் யடியவர் பெருந்துயர்ப்
பிணக்கறுத் தருள்செய்வார்
வேணி வெண்பிறை யுடையவர் வியன்புகழ்ச்
சிரபுரத் தமர்கின்ற
ஆணிப் பொன்னினை யடிதொழு மடியவர்க்
கருவினை யடையாவே. 4

பாரு நீரொடு பல்கதி ரிரவியும்
பனிமதி யாகாசம்
ஓரும் வாயுவு மொண்கனல் வேள்வியிற்
றலைவனு மாய்நின்றார்

---

**3.** மானம் - பெருமை, வலி. பார்த்தன் அர்ச்சுனன். புருதையின் புதல்வன் என்னும் பொருளது. மதித்து-அறிந்து. கானத்தே திரிவேடன் - வனசரன். அமர் - விரும்பிச் செய்யும் போர். பகைத்துச்செய்யும் போரன்று. களிப்புமிகுதி குறிக்கின் றுழி 'அமர்க்களம்' என்பது உலகவழக்கு.

**4.** முனிவர் உயிரை அறிந்துகொள்ளவந்த அக்கூற்றுவனை 'பெறுமவற்றுள் யாமறிவதில்லை' (குறள்) என்பதில் பரிமேலழகர் மதிப்பது என்றுரைத்தார். உண்மை அடியவர்க்குத் திருவடி வேட்கையும், சதாகால தியானமும் இன்றியமையாதவை. துயர்ப்பிணக்கு - துயரத்தைத்தரும்மாறுபாடு.

சேருஞ் சந்தன மகிலொடு வந்திழி
செழும்புனற் கோட்டாறு
வாருந் தண்புனல் சூழ்சிர புரந்தொழு
மடியவர் வருந்தாரே. 5

ஊழி யந்தத்தி லொலிகட லோட்ட ந்திவ்
வுலகங்க ளவைமூட
ஆழி யெந்தையென் றமரர்கள் சரண்புக
வந்தரத் துயர்ந்தார்தாம்
யாழி னேர்மொழி யேழையோ டினிதுறை
யின்பனெம் பெருமானுர்
வாழி மாநகர்ச் சிரபுரந் தொழுதெழ
வல்வினை யடையாவே. 6

பேய்கள் பாடப்பல் பூதங்க டுதிசெயப்
பிணமிடு சுடுகாட்டில்
வேய்கொ டோளிதான் வெள்கிட மாநட
மாடும்வித் தகனுரொண்
சாய்க டான்மிக வுடையதண் மறையவர்
தகுசிர புரத்தார்தாந்
தாய்க ளாயினுர் பல்லுயிர்க் குந்தமைத்
தொழுமவர் தளராரே. 7

---

5. வேள்வித்தலைவன்-இயமானன். "இருநிலனுய்த் தீயாகி நீருமாகி இயமனுய் எறியுங் காற்றுமாகி அருநிலைய திங்களாய் ஞாயிருகி ஆகசமாய் அட்டமூர்த்தியாகி" (அப்பர்) சிவனை நினையாத உயிர்கள் அவ்வெட்டுருவங்களுள் சிறந்த ஒன்று ஆமோ? கோட்டாறு:- 'கோணிய கோட்டாற்றுக் கொச்சை 2. 70. 2. 'கோட்டாறுசூழ் கொச்சை 3. 89. 1.

6. யுகாந்தகாலத்தில் வெள்ளம் உலகங்களைமூடி அழிக்கும்போது தேவர்கள் சிவபெருமானைச் சரண்புகுந்தனர். என்பது வரலாறு. ஓட்டந்து - ஓட்டம்தந்து. ஆழி - அருட்கடல். அந்தரம் - வானம். இன்பன் - ஆனந்தரூபன், மாநகர் - பெருங் கோயில்.

7. பேய்கள் பாடவும் பூதங்கள் துதிக்கவும் காளி நாணவும் மகாதாண்டவம் ஆடிய ஞான சொரூபர். சாய்கள் - புகழ்கள் "இந்திரன் சாயப்பெருஞ்சாய் கெடத் தாம்புகளால்

இலங்கு பூண்வரை மார்புடை யிராவண
னெழில்கொள்வெற் பெடுத்தன்று
கலங்கச் செய்தலுங் கண்டுதங் கழலடி
நெரியவைத் தருள்செய்தார்
புலங்கள் செங்கழு நீர்மலர்த் தென்றன்மன்
றதனிடைப் புகுந்தாருங்
குலங்கொண் மாமறை யவர்சிர புரந்தொழு
தெழவினை குறுகாவே. 8

வண்டு சென்றணை மலர்மிசை நான்முகன்
மாயனென் றிவரன்று
கண்டு கொள்ளவோ ரேனமோ டன்னமாய்க்
கிளறியும் பறந்துந்தாம்
பண்டு கண்டது காணவே நீண்டவெம்
பசுபதி பரமேட்டி
கொண்ட செல்வத்துச் சிரபுரந் தொழுதெழ
வினையவை கூடாவே. 9

பறித்த புன்றலைக் குண்டிகைச் சமணரும்
பார்மிசைத் துவர்தோய்ந்த
செறித்த சீவரத் தேருந் தேர்கிலாத்
தேவர்கள் பெருமானார்

---

தடந்தோள் போய் ஆர்த்தவன்" (கம்ப - யுத்த - நாக 21.) 'தாய்களாயினார் பல்லுயிர்க்கும்:- (தாயவன்காண் உலகிற்கு,) (அப்பர்) பல்லுயிர்க்கும் தாய்களாயினார் தமைஎன்றுமாற்றிக் கூட்டிச்சிவபெருமானை எனப்பொருளுரைக்க.

8. நெரியக் கழலடியைவைத்து என்க. புலன்கள் - வயல்கள். கள்தேனுமாம். மன்றில் தென்றல்புகுந்து என மாற்றுக. குலம் - கூட்டம். மா - பெருமை.

9. பண்டுகண்டது காண்டல்-புதிதாக ஒன்றுங்காணாமை. அறியுந்தோறும் அறியாமைகாண்பது புதுக்காட்சி. அறியாமை விலகாதிருப்பதே பண்டுகண்டது காண்டலாகும்.

முறித்து மேதிகள் கரும்புதின் ருவியின்
மூழ்கிட விளவாளை
வெறித்துப் பாய்வயற் சிரபுரந் தொழவினை
விட்டிடு மிகத்தானே. 10

பரசு பாணியைப் பத்தர்க ளத்தனைப்
பையர வோடக்கு
றிரைசெய் பூண்டிரு மார்புடை நிமலனை
நித்திலப் பெருந்தொத்தை
விரைசெய் பூம்பொழிற் சிரபுரத் தண்ணலை
விண்ணவர் பெருமானைப்
பரவு சம்பந்தன் செந்தமிழ் வல்லவர்
பரமனைப் பணிவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*10.* மேதிகள் கரும்பை முறித்துத் தின்று குளத்தில் மூழ்க வாளை கலங்கிப்பாயும் வயல், ஆவி - குளம். வெறித்து - கலங்கி, அஞ்சி.

*11.* பரசுபாணி - மழுவேந்தியகையன். பத்தர்கள் அத்தன் - மெய்யன்புடையார்க்கு இறைவன். அத்தன் - கையகப்படு வோன் எனலுமாம். அக்கு - எலும்பு.

---

முத்தன வெண்ணகை யார்மயல் மாற்றி
முறைவழுவா
தெத்தனை காலம்நின் றேத்தும் அவரினும்
என்பணிந்த
பித்தனை எங்கள் பிரானை அணைவ
தெளிதுகண்டீர்
அத்தனை ஞானசம் பந்தனைப் பாதம்
அடைந்தவர்க்கே. —அந்தாதி 90

# 103 திருஅம்பர்மாகாளம்

## 239 பதிகவரலாறு

அம்பர்மாநகர்மாகாளத்தை வழிபட்ட திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் திருநாவுக்கரசுநாயனருடன் வாழ்ந்திருந்தபொழுது பாடிய திருப்பதிகங்களுள் ஒன்று இத்திருப்பதிகம்.

### பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

புல்கு பொன்னிறம் புரிசடை நெடுமுடிப் போழிள மதிசூடிப்
பில்கு தேனுடை நறுமலர்க் கொன்றையும் பிணையல்செய் தவர்மேய
மல்கு தண்டுறை யரிசிலின் வடகரை வருபுனன் மாகாளம்
அல்லு நண்பக லுந்தொழு மடியவர்க் கருவினை யடையாவே. 1

அரவ மாட்டுவ ரந்துகில் புலியத ளங்கையி லனலேந்தி
இரவு மாடுவ ரிவையிவர் சரிதைக ளிசைவன பலபூதம்
மரவந் தோய்பொழி லரிசிலின் வடகரை வருபுனன் மாகாளம்
பரவி யும்பணிந் தேத்தவல் லாரவர் பயன்றலைப் படுவாரே. 2

குணங்கள் கூறியுங் குற்றங்கள் பரவியுங் குரைகழ லடிசேரக்
கணங்கள் பாடவுங் கண்டவர் பரவவுங் கருத்தறிந் தவர்மேய
மணங்கொள் பூம்பொழி லரிசிலின் வடகரை வருபுனன் மாகாளம்
வணங்கு முள்ளமோ டணையவல் லார்களை வல்வினை யடையாவே.

---

1. அரிசிலாற்றின் வடகரையில் மாகாளத்தை இராப்பகல் இடைவிடாமல் வழிபடும் அடியார்களுக்கு நீக்குதற்கு அரிய வினைகள் நீங்கிப்போம். அவை மீண்டும் அவரை அடைய வல்லன அல்ல. 'அல்லும் நண்பகலும் தொழும் அடியவர்' :- 'கங்குலும் பகலும் தொழும் அடியவர்' பா. 4.

2. பாம்பாட்டுபவர். புலித்தோல் உடுப்பவர். கையில் எரி ஏந்துவர். ஏந்தி இரவில் ஆடுவர். இவர் சரிதைகள் இவை. இசைவன - இசைபாடுவன. தலைப்படுவார் - அடைவார்.

3. கணங்கள் பாடவும், தரிசித்தோர் வாழ்த்தவும் அவரவர் கருத்தை அறிந்து அருளும் சிவபிரான் எழுந்தருளிய அரிசிற்

எங்கு மேதுமோர் பிணியிலர் கேடில ரிழைவளர் நறுங்கொன்றை
தங்கு தொங்கலுந் தாமமுங் கண்ணியுந் தாமகிழ்ந் தவர்மேய
மங்கு ரேய்பொழி லரிசிலின் வடகரை வருபுனன் மாகாளம்
கங்கு லும்பக லுந்தொழு மடியவர் காதன்மை யுடையாரே. 4

நெதிய மென்னுள போகமற் றென்னுள நிலமிசை நலமாய
கதிய மென்னுள வானவ ரென்னுளர்கருதிய பொருள்கூடில்
மதியந் தோய்பொழி லரிசிலின் வடகரை வருபுனன் மாகாளம்
புதியபூவொடுசாந்தமும்புகையுங்கொண்டேத்துதல்புரிந்தோர்க்கே.

கண்ணு லாவிய கதிரொளி முடிமிசைக் கனல்விடு சுடர்நாகம்
தெண்ணி லாவொடு திலதமு நகுதலை திகழவைத் தவர்மேய
மண்ணு லாம்பொழி லரிசிலின் வடகரை வருபுனன் மாகாளம்
உண்ணி லாநினைப் புடையவரி யாவரிவ் வுலகினி லுயர்வாரே. 6

தூசு தானரைத் தோலுடைக் கண்ணியஞ் சுடர்விடு நறுங்கொன்றை
பூசு வெண்பொடிப் பூசுவ தன்றியும் புகழ்புரிந் தவர்மேய
மாசு லாம்பொழி லரிசிலின் வடகரை வருபுனன் மாகாளம்
பேசு நீர்மையரி யாவரிவ் வுலகினிற் பெருமையைப் பெறுவாரே. 7

---

கரைப்புத்தூர் மாகாளத்தை வணங்கும் உள்ளத்தொடும் சேர வல்லவர்களை அடையும் வன்மை வினைகளுக்கு இல்லை.

4. எவ்விடத்தும் ஒருசிறிதும் பிணி எய்திலர். கெடுதலிலர். தொங்கல் - மாலை. தாமம் - தார். காதன்மை - காதலின் இயல்பு.

5. நெதியம் - நிதியம். மதியம் - தோய்புனல். கதியம் - வழி. மாகாளத்துப் பரசிவனைப் புதுப்பூக்கள் சந்தனம் தூபம் (முதலியவை) கொண்டு ஏத்தி வழிபடும் சிவபுண்ணியத்தை உடையவர்க்கு அச்சிவபூஜையால் எய்தும் திருவருளினும் நிதியம் சுகபோகம் வேறு என்ன இருக்கின்றன?

6. கண் உலாவிய கதிர் ஒளிமுடி: - செஞ்சடை முடியின் ஒளியை உணர்த்திற்று. திலதம் - திலகம். வைத்தவர் - சிவபிரானார். உள் - மனத்தில். நிலாம் - நிலாவுகின்ற.

7. தூசு - உடை. அரையில் தோலுடையே தூசு. கொன்றையே - கண்ணி. பூசுவது வெண்பொடி, புரிந்தவர் - விரும்பினவர். மாசு - மேகம். யாவர்? அவர் பெருமை பெறுவார் என்க.

பவ்வ மார்கட லிலங்கையர் கோன்றனைப் பருவரைக் கீழூன்றி
எவ்வந் தீரவன் றிமையவர்க் கருள்செய்த விறையவ னுறைகோயில்
மவ்வந் தோய்பொழி லரிசிலின் வடகரை வருபுனன் மாகாளம்
கவ்வை யாற்றொழு மடியவர் மேல்வினை கனவிடைச் செதிளன்றே.

உய்யுங் காரண முண்டென்று கருதுமி னொளிகிளர் மலரோனும்
பைகொள் பாம்பணைப் பள்ளிகொ ளண்ணலும் பரவநின் றவர்மேய
மையுலாம்பொழி லரிசிலின் வடகரை வருபுனன் மாகாளம்
கையி னாற்றொழு தவலமும் பிணியுந்தங் கவலையுங் களைவாரே 9

பிண்டி பாலரு மண்டைகொ டேரரும் பீலிகொண் டுழல்வாரும்
கண்ட நூலருங் கடுந்தொழி லாளருங் கழறநின் றவர்மேய
வண்டு லாம்பொழி லரிசிலின் வடகரை வருபுனன் மாகாளம்
பண்டு நாஞ்செய்த பாவங்கள் பற்றறப் பரவுதல் செய்வோமே. 10

---

8. பவ்வம் ஆர் (கடல்) - நீர்க்குமிழி நிறைந்த நுரையும் ஆம். 'நுரைமொக்குள் பௌவத்தோடு நொவ்விய புற்புதங்கள் திரைகொள் நீர்க்குமிழி ஐந்தாம்' (சூடாமணி நிகண்டு. 5. பெயர்ப்பிரிவு. 2 - 5). மவ்வம் - மேகம். அழகு (தோய்பொழில்) எனல் பொருந்தாது. தமிழ் லெக்ஸிகன் பக்கம். 3112. பார்க்க. கவ்வை - தோத்திர முழக்கம். தீயிற்பட்ட மரத்தூள்போல வினை அழியும்.

9. அவலமும். பிணியும், கவலையும் (ஆக்கும் பிறவியைக்) களைவார் மாகாளத்தைத் தொழுவாரே. அடியார்க்கே அவற்றைக்களையும் நிலைமை உண்டு. உய்யும் காரணம் அவர்க்கு உண்டு என்று நீவிர் கருதுமின்.

10. பிண்டிபாலர்-தலையிலே பீலி கட்டப்பட்டு, எறிகின்ற படையான பிண்டிபாலத்தை ஏந்திய சமணர், "பெருவலியதனை நோனுன் பிண்டிபாலத்தை யேந்தி" சிந்தா. 2269. என்பதன் உரையில் நச்சினார்க்கினியர் எழுதியதைக் காண்க.

மாறு தன்னொடு மண்மிசை யில்லது வருபுனன் மாகாளத்
தீறு மாதியு மாகிய சோதியை யேறமர் பெருமானை
நாறு பூம்பொழிற் காழியுண் ஞானசம்பந்தன தமிழ்மாலை
கூறு வாரையுங் கேட்கவல் லாரையுங் குற்றங்கள் குறுகாவே. 11

திருச்சிற்றம்பலம்

---

**11.** மண்மிசை தன்னொடு மாறு இல்லது - இப்பூமியில் தன்னுடன் ஒப்புக்கூறத் தக்கது வேறு யாதும் இல்லாதது. ஈறும் ஆதியும்-அநாதி நித்தமுத்த சுத்த சித்துருவாகிய பரசிவம் உயிர்கட்கு அருளற்பொருட்டு ஆதியும் அந்தமும் ஆகி உபகரித்தல் குறித்தது. 'ஆதியும் அந்தமும் ஆயினுர்' திருவாசகம் 214. இறைவன் ஏறுவதால் ஏறு எனப் பெயர்பெற்றது எனல் இதுபோலும் இடங்களில் பொருந்துவதே.

---

அடைத்தது மாமறைக் காடர்தங் கோயிற்
கதவினையன்(று)
உடைத்தது பாணன்றன் யாழின் ஒலியை
உரகவிடங்
துடைத்தது தோணி புரத்துக் கிறைவன்
சுடரொளிவாய்ப்
படைத்தது தண்மையை நள்ளாற் றரசு
பணித்திடவே. —அந்தாதி 91

பணிபடு நுண்ணிடை பாதம் பொருபல
காதமென்று
தணிபடு மின்சொற்க ளாற்றவிர்த் தேற்குத்
தழலுமிழ்கான்
மணிபடு பொற்கழல் ஞானசம் பந்தன்
மருவலர்போல்
துணிபடு வேலன்ன கண்ணியென் ேனாவந்து
தோன்றியதே. —அந்தாதி 92

# 104 திருக்கடிக்குளம்

## 240 பதிகவரலாறு

தோணிபுரத்தோன்றலார் அருந்தமிழ் மாமறைபாடிக் கோடிக்குழகரைக் கும்பிட்டுத் தொண்டர்களோடு திருக்கடிக்குளம் புகுந்து பரவியது இத்திருப்பதிகம்,

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

பொடிகொண் மேனிவெண் ணூலினர் தோலினர்
புலியுரி யதளாடை
கொடிகொ ளேற்றினர் மணிகிணி னெனவரு
குரைகழல் சிலம்பார்க்கக்
கடிகொள் பூம்பொழில் சூழ்தரு கடிக்குளத்
துறையுங்கற் பகத்தைத்தம்
முடிகள் சாய்த்தடி வீழ்தரு மடியாரை
முன்வினை மூடாவே. 1

விண்க ளார்தொழும் விளக்கினைத் துளக்கிலர்
விகிர்தனை விழவாரும்
மண்க ளார்துதித் தன்பரா யின்புறும்
வள்ளலை மருவித்தம்
கண்க ளார்தரக் கண்டுநங் கடிக்குளத்
துறைதரு கற்பகத்தைப்
பண்க ளார்தரப் பாடுவார் கேடிலர்
பழியிலர் புகழாமே. 2

---

1. கடிக்குளத்தில் எழுந்தருளிய கற்பகத்தைத் தலை சாய்த்துத் திருவடியை வணங்கும் அடியார்களை வினைகள் சூழ மாட்டா. கற்பகம் - இத்தலத்தில் இறைவன் திருநாமம்.

2. விண்ணோர் தொழும் விளக்கு. துளக்கு - தளர்ச்சி. விகிர்தன் - முரணுறுசெயலினன். திருவிழாக்கள் நிறைந்த மண்ணுலகில் வாழ்வோர் அன்பராகிப் பேரின்பம்பெற ஈந்தருளும் வள்ளல். அவ்வள்ளலைச்சேர்ந்து கண்ணாரக்கண்டு

பொங்கு நற்கரி யுரியது போர்ப்பது
புலியத ளழனுகம்
தங்க மங்கையைப் பாகம துடையவர்
தழல்புரை திருமேனிக்
கங்கை சேர்தரு சடையினர் கடிக்குளத்
துறைதரு கற்பகத்தை
எங்கு மேத்திநின் றின்புறு மடியாரை
யிடும்பைவந் தடையாவே. 3

நீர்கொ ணீள்சடை முடியனை நித்திலத்
தொத்தினை நிகரில்லாப்
பார்கொள் பாரிடத் தவர்தொழும் பவளத்தைப்
பசும்பொனை விசும்பாரும்
கார்கொள் பூம்பொழில் சூழ்தரு கடிக்குளத்
துறையுங்கற் பகந்தன்னைச்
சீர்கொள் செல்வங்க ளேத்தவல் லார்வினை
தேய்வது திணமாமே. 4

சுரும்பு சேர்சடை முடியினன் மதியொடு
துன்னிய தழனுகம்
அரும்பு தாதவிழ்ந் தலர்ந்தன மலர்பல
கொண்டடி யவர்போற்றக்

---

பண்ணுரைப்பாடிப் பணிவார் கேடும் பழியும் இலராவர், புகழ் உளராவர். தரிசனமும் கீதமும் திருந்தவும் முற்றவும்செய்தால் எய்தும்பயன்கள் உணர்த்தப்பட்டன.

3. கடிக்குளத்து எழுந்தருளும் கற்பகத்தை எவ்விடத்தும் வழிபட்டு இன்பத்தை அடையும் அடியார்களை இடும்பைகள் வந்து அடையமாட்டா.

4. திருக்கடிக்குளத்தில் எழுந்தருளும் கற்பகத்தின் செல்வங்களைப் புகழவல்லவருடைய வினைகள் தேய்ந்தொழிவது உறுதி. செல்வங்கள்:- "அவளால்வந்த ஆக்கம் இவ்வாழ்க்கை யெல்லாம்". (சித்தியார் 89).

கரும்பு கார்மலி கொடிமிடை கடிக்குளத்
துறைதரு கற்பகத்தை
விரும்பு வேட்கையோ டுளமகிழ்ந் துரைப்பவர்
விதியுடை யவர்தாமே. 5

மாதி லங்கிய பாகத்தன் மதியமொ
டலைபுன லழனுகம்
போதி லங்கிய கொன்றையு மத்தமும்
புரிசடைக் கழகாகக்
காதி லங்கிய குழையினன் கடிக்குளத்
துறைதரு கற்பகத்தின்
பாதங் கைதொழு தேத்தவல் லார்வினை
பற்றறக் கெடுமன்றே. 6

குலவு கோலத்த கொடிநெடு மாடங்கள்
குழாம்பல குளிர்பொய்கை
புலவு புள்ளின மன்னங்க ளாவிடும்
பூவைசே ருங்கூந்தல்
கலவை சேர்தரு கண்ணியன் கடிக்குளத்
துறையுங்கற் பகத்தைச்சீர்
நிலவி நின்றுநின் றேத்துவார் மேல்வினை
நிற்ககில் லாதானே. 7

மடுத்த வாளரக் கன்னவன் மலைதன்மேன்
மதியிலா மையிலோடி
எடுத்த லும்முடி தோள்கர நெரிந்திற
விறையவன் விரலூன்றக்

---

5. அரும்புகள் தாது அவிழ்ந்த விரிந்த பல மலர்களைக் கொண்டு அடியவர்கள் வழிபடக் கடிக்குளத்து எழுந்தருளும் கற்பகம். கரும்புகளும் மேக மண்டிலத்தை அளாவிய கொடிகளும் பின்னிய கடிக்குளம். மனமகிழ்ந்து தோத்திரம்சொல்லும் அடியவர்கள் செல்வமுடையவராவார்கள். விதி - செல்வம்.

6. கற்பகத்தின் திருவடியைக் கைகூப்பித் தொழவல்லவர் வினைகள் முழுதும் கெட்டொழியும்.

7. பூவைசேரும் கூந்தற்கலவையென்பது வாமபாகத்தைக் குறித்தது. கற்பகத்தை ஏத்துவார்பால் வினைகள் நிற்கமாட்டா.

கடுத்து வாயொடு கையெடுத் தலறிடக்
கடிக்குளந் தனின்மேவிக்
கொடுத்த பேரருட் கூத்தனை யேத்துவார்
குணமுடை யவர்தாமே. 8

நீரி னார்கடற் றுயின்றவ னயனெடு
நிகழடி முடிகாணார்
பாரி னார்விசும் புறப்பரந் தெழுந்ததோர்
பவளத்தின் படியாகிக்
காரி னார்பொழில் சூழ்தரு கடிக்குளத்
துறையுங்கற் பகத்தின்றன்
சீரி னார்கழ லேத்தவல் லார்களைத்
தீவினை யடையாவே. 9

குண்டர் தம்மொடு சாக்கியர் சமணருங்
குறியினி னெறிநில்லா
மிண்டர் மிண்டுரை கேட்டவை மெய்யெனக்
கொள்ளன்மின் விடமுண்ட
கண்டர் முண்டநன் மேனியர் கடிக்குளத்
துறைதரு மெம்மீசர்
தொண்டர் தொண்டரைத் தொழுதடி பணிமின்க
டூநெறி யெளிதாமே. 10

---

*8.* படுத்த - (பகைவர் உடம்பின்) உட்புகுத்திய. இற - முரிய. அருட்கூத்தன் - ஞானநாடகமாடும்பிரான். குணம் - எண்குணம்.

*9.* கடல் துயின்றவன் - பாற்கடலில் யோக நித்திரை செய்யும் திருமால். விசும்பு - ஆகாயம். படி - உருவம். கற்பகத்தின் கழல் ஏத்தவல்லவர்களுக்கு வினை இல்லை.

*10.* குறி - குறிக்கோள். தொண்டர்தொண்டர் - தொண்டர்க்குத்தொண்டர். தூநெறி - திருநெறி, சிவநெறி.

தனமலிபுகழ் தயங்குபூந் தராயவர்
மன்னனற் சம்பந்தன்
மனமலிபுகழ் வண்டமிழ் மாலைகண்
மாலதாய் மகிழ்வோடும்
கனமலி கட லோதம்வந்துலவிய
கடிக்குளந் தமர்வானை
இனமலிந்திசை பாடவல்லார்கள்போ
யிறைவனோ டுறைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. செல்வமும் மிக்க புகழும். மாலது - அன்பு. கனம் - மேகம். இனம் - அடியார்கூட்டம்.

---

தோன்றல்தன் னோடுடன் ஏகிய சுந்தரப்
பூண்முலையை
ஈன்றவ ரேஇந்த ஏந்திழை யாரவர்
இவ்வளவில்
வான்றவர் சூழுந் தமிழா கரன்றன்
வடவரையே
போன்றபொன் மாடக் கழுமல நாடு
பொருந்துவரே. —அந்தாதி 93

பொருந்திடு ஞானத் தமிழா கரன்பதி
பொற்புரிசை
திருந்திய தோணி புரத்துக் கிறைவன்
திருவருளாற்
கருந்தட நீரெழு காலையிற் காகூ
கழுமலமென்
றிருந்திட வாம்என்று வானவ ராகி
இயங்கியதே. —அந்தாதி 94

## 105 கீழ்வேளூர்

### 241 பதிகவரலாறு

நாகைக் காரோணத்தை வழிபட்டுவருங் காழிவேந்தர் கீழ்வேளூர் விமலரையுந் தரிசித்துப் பாடியது இத்திருப் பதிகம்.

**பண் - நட்டராகம்**

திருச்சிற்றம்பலம்

மின்னுலாவிய சடையினர் விடையினர்
மிளிர்தரு மரவோடும்
பன்னுலாவிய மறையொலி நாவினர்
கறையணி கண்டத்தர்
பொன்னுலாவிய கொன்றையந் தாரினர்
புகழ்மிகு கீழ்வேளூர்
உன்னுலாவிய சிந்தையர் மேல்வினை
யோடிட வீடாமே. 1

நீருலாவிய சடையிடை யரவொடு
மதிசிர நிரைமாலை
வாருலாவிய வனமுலை யவளொடு
மணிசிலம் பவையார்க்க
ஏருலாவிய விறைவன துறைவிட
மெழிறிகழ் கீழ்வேளூர்
சீருலாவிய சிந்தைசெய் தணைபவர்
பிணியொடு வினைபோமே. 2

---

1. உன் - உன்னுதல். திருக்கீழ்வேளூரை நினைப்பவர்க்கு வினையில்லை, வீடுண்டு என்று அருளியது, இவ்வூர்ப்பெருமான் திருப்பெயர் கேடிலியப்பர் என்பதன் உண்மைப் பொருளை உலகோர்க்கு உணர்த்துவதாகும்.

2. திருக்கீழ்வேளூரைச் சிந்திப்பவர்கட்குப் பிணிகளும் வினைகளும் போம்.

வெண்ணிலாமிகு விரிசடை யரவொடு
வெள்ளெருக் கலர்மத்தம்
பண்ணிலாவிய பாடலோ டாடலர்
பயில்வுறு கீழ்வேளூர்ப்
பெண்ணிலாவிய பாகனைப் பெருந்திருக்
கோயிலெம் பெருமானை
உண்ணிலாவிநின் றுள்கிய சிந்தையா
ருலகினி லுள்ளாரே. 3

சேடுலாவிய கங்கையைச் சடையிடைத்
தொங்கவைத் தழகாக
நாடுலாவிய பலிகொளு நாதனூர்
நலமிகு கீழ்வேளூர்ப்
பீடுலாவிய பெருமையர் பெருந்திருக்
கோயிலுட் பிரியாது
நீடுலாவிய நிமலனைப் பணிபவர்
நிலைமிகப் பெறுவாரே. 4

துன்றுவார்சடைச் சுடர்மதி நகுதலை
வடமணி சிரமாலை
மன்றுலாவிய மாதவ ரினிதியன்
மணமிகு கீழ்வேளூர்
நின்றுநீடிய பெருந்திருக் கோயிலி
னிமலனை நினைவோடும்
சென்றுலாவிநின் றேத்தவல் லார்வினை
தேய்வது திணமாமே. 5

---

**3.** கீழ்வேளூரில் பெருந்திருக்கோவிலில் எழுந்தருளிய அம்மையப்பரை உள்கும் பயிற்சி உடையார் எவ்வுலகில் இருப்பினும் சிவலோகத்தில் இருப்பவரேயாவர். 'நரகம்புகினும் திருவருளாலே யிருக்கப்பெறின் உள்ளேன் பிறதெய்வம் உன்னையல்லாது எங்கள் உத்தமனே' திருவாசகம். 6 - 2.

**4.** சேடு - பெருமை. பீடு - வலிமை. நீடு - அழியாமை. கீழ்வேளூர்ப் பெருமானார் பெருந் திருக்கோயிலை வழிபடுவோர் நிலைத்த பேரின்பவாழ்வு மிகப் பெறுவர்.

**5.** நகுதலை - பிரமகபாலம். வடம் - கயிறு. சிரம் - தலைகள். திருக்கோயில் மன்றத்துள் மாதவத்தோர் உலாவிய சிறப்பு

கொத்துலாவிய குழறிகழ் சடையனைக்
கூத்தனை மகிழ்ந்துள்கித்
தொத்துலாவிய நூலணி மார்பினர்
தொழுதெழு கீழ்வேளூர்ப்
பித்துலாவிய பத்தர்கள் பேணிய
பெருந்திருக் கோயின்மன்னு
முத்துலாவிய வித்தினை யேத்துமின்
முடுகிய விடர்போமே. 6

பிறைநிலாவிய சடையிடைப் பின்னலும்
வன்னியுந் துன்னும்
கறைநிலாவிய கண்டரெண் டோளினர்
காதல்செய் கீழ்வேளூர்
மறைநிலாவிய வந்தணர் மலிதரு
பெருந்திருக் கோயின்மன்னு
நிறைநிலாவிய வீசனை நேசத்தா
னினைபவர் வினைபோமே. 7

மலைநிலாவிய மைந்தனம் மலையினை
யெடுத்தலு மரக்கன்றன்
தலையெலாநெரிந் தலறிட வூன்றின
னுறைதரு கீழ்வேளூர்க்

---

உணர்த்திற்று. சிராமலையையுடையவரும் மன்றுள் நடமாடிய வரும் ஆகிய மாதர் எனச் சிவபெருமானைக் குறித்ததாயின் நிமலன் என்னும் ஒருமைக்கு ஏலாது.

6. கொத்து - பூங்கொத்துக்கள். தொத்து - கூடுதல். பித்து - திருவடிப்பற்று. முத்து......வித்து - 'முத்தினைப் பவளத்தை' 'வித்தாம் முளையாகும் வேரேதானும்'.

7. 'மறைநிலாவிய அந்தணர் மலிதரு பெருந்திருக்கோயில்' என்றதால், அக்காலத்து வேதியர் சிறப்பும் அவர்க்குள்ள கோயில் வாழ்வும் புலப்படும். நிறை - 'குறைவிலா நிறைவு'. அவ்வத்தேவரை அவ்வப்புவனத்தில் அவரவர்க்கு உரிய தொழிலில் நிறுத்துவதுமாம்.

கலைநிலாவிய நாவினர்கா தல்செய்
பெருந்திருக் கோயிலுள்
நிலைநிலாவிய வீசனை நேசத்தா
னினையவல் வினைபோமே. 8

மஞ்சுலாவிய கடற்கிடந் தவனெடு
மலரவன் காண்பொண்ணுப்
பஞ்சுலாவிய மெல்லடிப் பார்ப்பதி
பாகனைப் பரிவொடும்
செஞ்சொலார்பலர் பரவிய தொல்புகழ்
மல்கிய கீழ்வேளூர்
நஞ்சுலாவிய கண்டனை நணுகுமின்
னடலைக னணுகாவே. 9

சீறுலாவிய தலையினர் நிலையிலா
வமணர்கள் சீவரார்
வீறிலாதவெஞ் சொற்பல விரும்பன்மின்
சுரும்பமர் கீழ்வேளூர்
ஏறுலாவிய கொடியனை யேதமில்
பெருந்திருக் கோயின்மன்னு
பேறுலாவிய பெருமையன் றிருவடி
பேணுமின் றவமாமே. 10

---

8. மைந்தன் - வீரன், அழகன், வலியன். மலைநிலாவிய மைந்தன் - மலைபோலுந் தோற்றமுடைய (ஞான) வீரன். பத்துத் தலைகளும் என்னத் 'தலையெலாம்' என்று குறித் தருளினார். கலை நிலாவிய நாவினர் - வேதாகமாங்க புராணேதி காசாதி சகல கலைகளுமுணர்ந்த நாவினர்.

9. கடல் - பாற்கடல். காண்பு - பார்வை. 'காண்பினொடு நேத்திரங்கள் பணித்தருளவேண்டும்' 'கண்கள் காண்பு ஒழிந்து'. 2-97-5.

10. சீறு - முதனிலைத் தொழிலாகுபெயர். சீவரார் - துவருட்டிய சீலையர் (தேரர்). வீறு - பெருமை, வெற்றியுமாம். பேறு - ஆன்மாக்களுக்குரிய பேறு (சிவாநந்தம்). பேறு உலாவிய பெருமையன்-ஆநந்தம் நிகழும் பெருமையையுடைய பரமசிவன்

குருண்டவார்குழற் சடையுடைக் குழகனை
யழகமர் கீழ்வேளூர்த்
திரண்டமாமறை யவர்தொழும் பெருந்திருக்
கோயிலெம் பெருமானை
இருண்டமேதியி னினமிகு வயன்மல்கு
புகலிமன் சம்பந்தன்
தெருண்டபாடவல் லாரவர் சிவகதி
பெறுவது திடமாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. 'குருண்டவார் குழற்சடைக் குழகன்' - 'குருள்குஞ்சி' 2. 116. 4. குழகன் - இளையன்; அழகன். புகலி - சீகாழி. மன் - இறைவன். தெருண்ட - தெளிந்த.

---

இயலா தனபல சிந்தைய ராய்இய
லுங்கொல்என் று
முயலா தனவே முயன்றுவன் மோகச்
சுழியழுந்திச்
செயலார் வரைமதிற் காழியற் கோன்திரு
நாமங்களுக்
கயலார் எனப்பல காலங்கள் போக்குவர்
ஆதர்களே. —அந்தாதி 95

ஆதர வும்பயப் பும்இவள் எய்தினள்
என் றயலார்
மாதர வஞ்சொல்லி என்னை நகுவது
மாமறையின்
ஓதர வம்பொலி காழித் தமிழா
கரனொடன்றே
தீதர வம்பட அன்னைஎன் னேபல
செப்புவதே. —அந்தாதி 96

## 106 திருவலஞ்சுழி

### 242 பதிகவரலாறு

திருநல்லூரில் மீண்டும் வந்து அணைந்து வணங்கி மகிழ்ந்த திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருவலஞ்சுழியில் எழுந்தருள்வதை அறிந்த அத்தலத்து மெய்யன்பர்கள் எதிர் கொண்டனர். சூழ்ந்தனர். அச்சூழல் வெண்மதியை வெண் மேகக்கூட்டம் சூழ்ந்த காட்சிபோலிருந்தது. கலந்தஅன்பர்கள் தொழுதெழுந்தனர். கவுணியர் தலைவர் கும்பிட்டுக்கொண்டே திருவலஞ்சுழிக் கோபுரத்தை இறைஞ்சிக் கோயிலுள் புகுந் தார். புக்க அப்பெரியோர் சிவபிரானை வினவும் பொரு ளுடையதாகப் பாடியது ஊனமில்லாத இசையுடன்விளக்கிய இத்திருப்பதிகம்.

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

என்னபுண்ணியஞ் செய்தனைநெஞ்சமே
யிருங்கடல்வையத்து
முன்னநீபுரி நல்வினைப்பயனிடை
முழுமணித்தரளங்கள்
மன்னுகாவிரி சூழ்திருவலஞ்சுழி
வாணனைவாயாரப்
பன்னியாதரித் தேத்தியும்பாடியும்
வழிபடுமதனாலே. 1

---

1. நெஞ்சமே! நீ (இவ்) வையத்து, திருவலஞ்சுழி வாணனை வாயாரப்பன்னி ஆதரித்து ஏத்தியும் பாடியும் வழிபடும் அதனாலே என்ன புண்ணியஞ் செய்தனை? புண்ணியஞ் செய்ததா அன்று என்னும் ஐயம் இல்லை. பல்வகைப் புண்ணியத்துள் இவ்வழிபாட்டிற்குரிய புண்ணியம் யாதென்பதே ஐயம். 'நல்வினைப் பயன்' என்று கொண்ட முடிவே அதற்குச் சான்றாயிற்று. அந்நல்வினையுள் யாது என்பது கருத்து இத்திருமுறையுள் 79 ஆவது திருப்பதிகத்துள்

விண்டொழிந்தன நம்முடைவல்வினை
　　விரிகடல்வருநஞ்சம்
உண்டிறைஞ்சுவா னவர்தமைத்தாங்கிய
　　விறைவணையுலகத்தில்
வண்டுவாழ்குழன் மங்கையொர்பங்கனை
　　வலஞ்சுழியிடமாகக்
கொண்டநாதன்மெய்த் தொழில்புரிதொண்டரோ
　　டினிதிருந்தமையாலே. 2

திருந்தலர்ர்புரந் தீயெழச்செறுவன
　　விறலின்கணடியாரைப்
பரிந்துகாப்பன பத்தியில்வருவன
　　மத்தமாம்பிணிநோய்க்கு
மருந்துமாவனமந்திரமாவன
　　வலஞ்சுழியிடமாக
இருந்தநாயக னிமையவரேத்திய
　　வினையடித்தலந்தானே 3

---

வரும் பல திருப்பாடலுள் 'பேதைமார்போலநீ வெள்கினையே' 'மறவல்நீ மார்க்கமே நண்ணினாய்' என்றுள்ள சிறப்பையும் அவ்வுண்மையைக் குறித்தருளக் கருதிய ஸ்ரீ சேக்கிழார் பெருமானார், 'அவமிலா நெஞ்சமே அஞ்சல் நீ உய்யுமாறு அறிதி' என்று அருளியதையும் உணர்ந்தால், நல்வினைபற்றிய ஐயம் இல்லாமையும் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருடைய திருவுள்ளத்தை நாம் உணரத்தகும் முறைமையும் தெளிவாகும். வாயாரப் பன்னுதல் பாடுதல் - வாக்கின்வினை. ஆதரித்தல் - மனத்தின்றொழில். ஏத்துதல் - காயத்தின் செயல்.

2. இனி திருந்தமையாலே விண்டொழிந்தன வல்வினை. விண்டு - நீங்கி. கடல் - பாற்கடல். இறைஞ்சு வானவர் - வழிபடும் விண்ணவர். தாங்கிய - நஞ்சுண்டு காத்தருளிய. 'வண்டார் குழலி' - தேவியார் திருப்பெயர். அவை கோட்டாறு, கோளிலி, பிரமபுரம், மருகல் என்பவை. மெய்த்தொழில் - உண்மைத் தொண்டு.

3. திருந்தலார் - பகைவர். வீறல் - பெருமை, வெற்றி. பரிந்து - இரங்கி. பத்தி - சிவபக்தி, 'பத்திவலையிற் படுவோன் காண்க.' மத்தம் - மயக்கம். பிணியும் நோயும் மயக்கத்தால்

கறைகொள்கண்டத்தர் காய்கதிர் நிறத்தன
ரறத்திறமுனிவர்க்கன்
றிறைவராலிடை நீழலிலிருந்துகந்
தினிதருள்பெருமானுர்
மறைகளோதுவர் வருபுனல்வலஞ்சுழி
யிடமகிழ்ந்தருங்கானத்
தறைகழல்சிலம் பார்க்கநின்ருடிய
வற்புதமறியோமே. 4

மண்ணர் நீரர்விண் காற்றினராற்றலா
மெரியுருவொருபாகம்
பெண்ணராணெனத் தெரிவரும்வடிவினர்
பெருங்கடற்பவளம்போல்
வண்ணராகிலும் வலஞ்சுழிபிரிகிலார்
பரிபவர்மனம்புக்க
எண்ணராகிலு மெணப்பலவியம்புவ
ரிணையடிதொழுவாரே. 5

ஒருவராலுவ மிப்பதையரியதோர்
மேனியர்மடமாதர்
இருவராதரிப் பார்பலபூதமும்
பேய்களுமடையாளம்

---

வருவனவே. தெளிவு நோயை விளைவிக்காது. இணையடித் தலந்தான் புரம்செறுவன, அடியாரைக்காப்பன, பத்தியில் வருவன. நோய்க்கு மருந்தாவன, மந்திரமாவன என்க, அப்பர் அருளிய 'சிந்திப்பரியன' என்பது முதலிய இருபது திருவிருத்தங் களையும் இங்கு எண்ணுக.

4. கறை - நஞ்சாலாய கறுப்பு. கதிர் - சூரியன். அறத் திறம் - தருமங்களின் வகைகளும் வேதாகம நூற்பொருளின் கூறுபாடும். கழல் சிலம்பு - உம்மைத்தொகை.

5. சிவபிரான் ஐம்பெரும் பூதரூபமாக உள்ளவர். அட்ட மூர்த்தங்களுள் முதல் ஐந்து அம்மையப்பர்; அர்த்தநாரீச்சுவரர். பவளவண்ணர். நீங்காது வாழ்பவர்.

அருவராததோர் வெண்டலைகைப்பிடித்
தகந்தொறும்பலிக்கென்று
வருவரேலவர் வலஞ்சுழியடிகளே
வரிவளைகவர்ந்தாரே. 6

குன்றியூர்குட மூக்கிடம்வலம்புரங்
குலவியநெய்த்தானம்
என்றிவ்வூர்களி லோமென்றுமியம்புவ
ரிமையவர்பணிகேட்பார்
அன்றியூர்தமக் குள்ளனவறிகிலோம்
வலஞ்சுழியரனார்பால்
சென்றவூர்தனிற் றலைப்படலாமென்று
சேயிழைதளர்வாமே. 7

குயிலினேர்மொழிக் கொடியிடைவெருவுறக்
குலவரைப்பரப்பாய
கயிலையைப்பிடித் தெடுத்தவன்கதிர்முடி
தோளிருபதுமூன்றி
மயிலினேரன சாயலோடமர்ந்தவன்
வலஞ்சுழியெம்மானைப்
பயிலவல்லவர் பரகதிகாண்பவ
ரல்லவர்காணாரே. 8

---

6. இறைவன் திருமேனிக்கு ஒப்புரைக்கவேறு யாதும் இல்லாமையால் 'ஒருவரால் உவமிப்பதை அரியதோர் மேனியர்' என்க. 'இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன் என்று எழுதிக் காட்டொணாதே' (அப்பர்) அருவராதது - அறுவறுக்காதது. முறுமுறுப்பு, சுறுசுறுப்பு, கிறுகிறுப்பு முதலியவற்றைப்போல 'அறுவறுப்பு' என்பதும் உண்டு, மனத்தை அறுப்பதுபற்றிய பெயர், அஃது இடையெழுத்தாக மருவிற்று. 'அஞ்சனம்சேர் கண்ணார் அருவருக்கும் அப்பதமாய்க் குஞ்சி வெளுத்துடலம் கோணுமுன் நெஞ்சமே ... சாய்க்காடு கைதொழு நீ சார்ந்து' (க்ஷேத்திரவெண்பா, 15.)

7. இதிற் குறித்த குன்றியூர் எங்குளதோ? தெரிந்திலது, 'வலம்' என்றதால் 'இடம்' இருத்தல் வேண்டும். தலைப்படல் - சேர்தல். 'தம்மிற்றலைப்பட்டார்' (திருக்களிறு. 2-) சேயிழை - தலைவி.

8. கொடியிடையும் மயிலை நேரொத்த சாயலும் உமாதேவியாரைக் குறித்தன. வல்லவர் காண்பவர். அல்லவர்காணார்.

அழலதோம்பிய வலர்மிசையண்ணலு
மரவணைத்துயின்றானும்
கழலுஞ்சென்னியுங் காண்பரிதாயவர்
மாண்பமர்தடக்கையில்
மழலைவீணையர் மகிழ்திருவலஞ்சுழி
வலங்கொடுபாதத்தால்
சுழலுமாந்தர்கடொல்வினையதனொடு
துன்பங்கள்களைவாரே. 9

அறிவிலாதவன் சமணர்கள்சாக்கியர்
தவம்புரிந்தவஞ்செய்வார்
நெறியலாதன கூறுவர்மற்றவை
தேறன்மின்மாறுநீர்
மறியுலாந்திரைக் காவிரிவலஞ்சுழி
மருவிய பெருமானைப்
பிறிவிலாதவர் பெறுகதிபேசிடி
லளவறுப்பொண்ணாதே. 10

மாதொர்கூறனை வலஞ்சுழிமருவிய
மருந்தினைவயற்காழி
நாதன்வேதியன் ஞானசம்பந்தன்வாய்
நவிற்றியதமிழ்மாலை

---

9. அழலது - தீ. 'கற்றாங்கு எரியோம்பிக் கலியைவாராமே செற்றார்'. அண்ணல் - பிரமன். அரவணை - பாம்பாகிய படுக்கை. துயின்றான் - திருமால். ஆயவர் - சிவபிரான். மழலை வீணையர் - 'மிக நல்ல வீணைதடவி'. பாதத்தால் சுழலும் மாந்தர்கள் - திருக்கோயிலை வலம் வரும் அன்பர்கள். தொல்வினை - சஞ்சித கர்மம்.

10. தவம் புரிந்து அவம் செய்தல் - மேற்கொண்ட தவத்திற்கு ஒவ்வாத பாவச்செய்கையை உடையராதல். நெறி அல்லாதவற்றைப் போதிப்பர். தேறல்மின் - தெளியத்தக்கன அல்ல என்று தெளியாது ஒழிமின். பிறிவு இல்லாதவர் :- இடைவீடாமல் வழிபடும் அடியர்.

ஆதரித்திசை கற்றுவல்லார்சொலக்
கேட்டுகந்தவர்தம்மை
வாதியாவினை மறுமைக்குமிம்மைக்குழ்
வருத்தம்வந்தடையாவே. 11

திருச்சிற்றம்பலம்

---

**11.** கூறன் - பாகத்தன். மருந்து - பிறவிநோய் தீர்க்கும் மருந்து. தீராநோய் தீர்த்தருளவல்ல மருந்து. 'வருந்துயரந் தீர்க்கும்மருந்து' 'காழிநாதன்' 'வேதியன்' என்பன ஆசிரியர் சிறப்புணர்த்தின. நவிற்றிய - திருவருள் நவிலச்செய்த 'பித்தம் நோய்கள் வாதியா, 2. 79. 4. வாதித்தல் - வருத்துதல்

---

செப்பிய என்ன தவமுயன் றேன்நல்ல
செந்தமிழால்
ஒப்புடை மாலைத் தமிழா கரனை
உணர்வுடையோர்
கற்புடை வாய்மொழி ஏத்தும் படிகத
றிட்டிவர
மற்படு தொல்லைக் கடல்புடை சூழ்தரு
மண்ணிடையே. —அந்தாதி 97

மண்ணில் திகழ்சண்பை நாதனை வாதினில்
வல்அமணைப்
பண்ணைக் கழுவின் நுதிவைத்தெம் பந்த
வினையறுக்குங்
கண்ணைக் கதியைத் தமிழா கரனைஎங்
கற்பகத்தைக்
திண்ணற் றுடையல் கவுணியர் தீபனைச்
சேர்ந்தனமே. —அந்தாதி 98

# 107 திருக்கேதீச்சுரம்

## 243 பதிகவரலாறு

ஞானவேந்தர் திருவிராமேச்சுரத்தை நண்ணிப் பாண்டிய னும் மங்கையர்க்கரசியம்மையாரும் மெய்ம்மை மந்திரியாரும் சூழ வழிபட்டுக் கொண்டு பலநாட்கள் இருந்தனர். வழக்கம் போலக் கடற்கரையில் இனிதிருந்த ஒருநாள் ஈழநாட்டுத் திருக்கோணமலையைப் பாடிப் பணிந்தார். அப்போது மாதோட்டத்திலுள்ள திருக்கேதீச்சுரத்தைப் பரவினர். அதுவே இத்திருப்பதிகம்.

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

விருதுகுன்றமா மேருவினாணர வாவனலெரியம்பாப்
பொருதுமூவெயில் செற்றவன்பற்றிநின் றுறைப்பதியெந்நாளும்
கருதுகின்றவூர் கனைகடற்கடிகமழ் பொழிலணிமாதோட்டம்
கருதநின்றகே தீச்சரங்கைதொழக் கடுவினையடையாவே. 1

பாடல்வீணையர் பலபலசரிதைய ரெருதுகைத்தருநட்டம்
ஆடல்பேணுவ ரமரர்கள்வேண்ட நஞ் சுண்டிருள்கண்டத்தர்
ஈடமாவது இருங்கடற்கரையினி லெழிறிகழ்மாதோட்டம்
கேடிலாதகே தீச்சரந்தொழுதெழக் கெடுமிடர்வினைதானே. 2

---

1. விருது - வெற்றி. அடையாளம் மாமேருகுன்றம் வில் ஆ - மகாமேருமலை வில்லாக. மாதோட்டம் என்பது தலப்பெயர் கேதீச்சுரம் என்பது திருக்கோயில். மகாதுவட்டாபுரம் என்பதன் திரிபன்று. அங்குப்பொழிலணி மாதோட்டம் உளது. இக்கேதீச்சுரத்தில் 'கேது' இருப்பதை இன்றுங்காணலாம். இத்தலத்தை வழிபடுவோர் வினைகளும் நோய்களும் தீரப்பெற் றின்புறுவர் என்பது திண்ணம்.

2. சரிதையர் - ஒழுக்கத்தவர். உகைத்து - செலுத்தி. இருள் - இருண்ட ஈடம்:- முதல் நீட்சி

பெண்ணெணார்பாகத்தர்பிறைதவழ்சடையின ரறைகழல்சிலம்பார்க்கச்
சுண்ணமாதரித் தாடுவர்பாடுவ ரகந்தொறுமிடுபிச்சைக்
குண்ணலாவதோ ரிச்சையினுழல்பவ ருயர்தருமாதோட்டத்
தண்ணனண்ணுகே தீச்சரமடைபவர்க் கருவினையடையாவே. 3

பொடிகொண்மேனியர் புலியதளரையினர் விரிதருகரத்தேந்தும்
வடிகொண்மூவிலை வேலினர்நூலினர் மறிகடன்மாதோட்டத்
தடிகளாதரித் திருந்தகேதீச்சரம் பரிந்தசிந்தையராகி
முடிகள் சாய்த்தடி பேணவல்லார்தம்மேன் மொய்த்தெழும்
[வினைபோமே. 4

நல்லராற்றவு ஞானநன்குடையர் தம் மடைந்தவர்க்கருளீய
வல்லர்பார்மிசை வான்பிறப்பிறப்பிலர் மலிகடன்மாதோட்டத்
தெல்லையில்புக ழெந்தைகேதீச்சர மிராப்பகனினைந்தேத்தி
அல்லலாசறுத் தரனடியிணைதொழு மன்பராமடியாரே. 5

பேழைவார்சடைப் பெருந்திருமகடனைப் பொருந்தவைத்தொரு
பாகம்
மாழையங்கயற் கண்ணிபாலருளிய பொருளினர்குடிவாழ்க்கை
வாழையம்பொழின் மந்திகள்களிப்புற மருவியமாதோட்டக்
கேழல்வெண்மருப் பணிந்தநீண்மார்பர்கே தீச்சரம்பிரியாரே. 6

---

3. சுண்ணம் - திருவெண்ணீறு. பிச்சைக்கு இச்சை:- 'தந்ததுன்றன்னைக் கொண்டதென்றன்னை' என்றகருத்தும் ஈண்டுப் பொருந்தும்.

4. பொடி - திருநீறு. இலைவேல் - முத்தலைச் சூலம். அடிகள் - சிலபெருமானை. பரிந்த - அன்பு கொண்ட.

5. ஆற்றவும் - மிகவும். அருள்ஈய வல்லர். பார்மிசைவான்- மண்ணிலும் விண்ணிலும். எல்லை - அளவு. அல்லல் - துன்பம். ஆசு - குற்றம்.

6. பேழை ;- பெருமை. 'பேழைப் பெருவயிற்றோடும் புகுந்து என் உளம்பிரியான்' (மூத்தநாயனார் 4) பெருந்திரு மகள் - கங்கை. மாழை - அழகு. 'அங்கயற்கண்ணி' அம்பிகையின் திருப்பெயர்) இங்கு மாதோட்டம் என்பதன் விளக்கம் உளது. கேழல் - பற்றி. மருப்பு - கொம்பு.

பண்டுநால்வருக் கறமுரைத்தருளிப்பல் லுலகினிலுயிர்வாழ்க்கை
கண்டநாதனர் கடலிடங்கைதொழக் காதலித்துறைகோயில்
வண்டுபண்செயுமாமலர்ப்பொழின்மஞ்ஞை நடமிடுமாதோட்டம்
தொண்டர்நாடொறுந் துதிசெயவருள்செய்கே தீச்சரமதுதானே. 7

தென்னிலங்கையர் குலபதிமலை நலிந்தெடுத் தவன்முடிதிண்டோள்
தன்னலங்கெட வடர்த்தவர்க்கருள்செய்த தலைவனர்கடல்வாயப்
பொன்னிலங்கிய முத்துமாமணிகளும் பொருந்தியமாதோட்டத்
துன்னியன்பொடு மடியவரிறைஞ்சுகே தீச்சரத்துள்ளாரே. 8

பூவுளானுமப் பொருகடல்வண்ணனும் புவியிழந்தெழுந்தோடி
மேவிநாடிநுன் னடியிணைகாண்கிலா வித்தகமென்னுகும்
மாவும்பூகமுங் கதலியுநெருங்குமா தோட்டநன்னகர்மன்னித்
தேவிதன்னெடுந் திருந்துகேதீச்சரத் திருந்தவெம்பெருமானே. 9

புத்தராய்ச்சில புனைதுகிலுடையவர் புறனுரைச்சமணர்
எத்தராகிநின் றுண்பவரியம்பிய வேழைமைகேளேன்மின்
மத்தயானையை மறுகிடவுரிசெய்து போர்த்தவர்மாதோட்டத்
தத்தர்மன்னுபா லாவியின்கரையிற்கே தீச்சரமடைமின்னே. 10

---

7\. பல உலகங்களிலும் உடம்போடு உயிர்வாழ்க்கையை, அவ்வவ்வுயிர்களின் கன்மத்திற்கேற்ப அருளிய முதல்வன் பரமசிவனே என்றதாம். பண் - பண்ணிசை. மஞ்ஞை - மயில்

8\. குலபதி - குலத்திற்குத் தலைவன். நலிந்து - நெருக்கி. அடர்த்து அவனுக்கு அருள் செய்த தலைவனர். உன்னி - தியானித்து.

9\. பூவுளான் - பிரமன். புவி - பூமி. இடந்து - பேர்த்து. இடந்தவன் மாயன். ஓடியவன் அயன். நுன் அடியிணை - உன்னுடைய திருவடிகளிரண்டும். வித்தகம் - சாதுரியம். மா, பூகம்(-பாக்கு), கதலி எல்லாம் உள்ளது அம்மாதோட்டம். தேவி :- 'அங்கயற்கண்ணி'. பா. 5.

10\. ஆதர் - அறிவிலார், எத்தர் - ஏமாற்றுவோர். விரகுள்ளவர். ஏழைமை - அறியாமை தோற்றும் சொற்கள். மறுகிட - கலங்க. பாலாவி - அத்தலத்தின் தீர்த்தம். அது மிகப்பெரியது.

மாடெலாமண முரசெனக்கடலின தொலிகவர்மாதோட்டத்
தாடலேறுடை யண்ணல்கேதீச்சரத் தடிகளை யணிகாழி
நாடுளார்க்கிறை ஞானசம்பந்தன்சொ னவின்றெழுபாமாலைப்
பாடலாயின பாடுமின்பத்தர்கள் பரகதிபெறலாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

*11.* மணமுரசு;- வீரமுரசு, தியாகமுரசு என்னும் மூவகையுள் ஒன்று. 'இமிழ்குரல் முரசம் மூன்றுஉடன் ஆளும் தமிழ்கெழுகூடல் தண்கோல்வேந்து' (புறம் 58) 'வம்மின்எனப் புலவோரை அளித்திடுவண் கொடைமுரசு... மணமுரசு... திறல்முரசு' (முத்துக்குமாரசுவாமிபிள்ளைத்தமிழ். 89) ஆடல்- வெற்றி. காழிநாடுளார்க்கிறை' ஆசிரியர். பரகதி - சிவானந்தப் பேறு அடையும் நெறி.

---

சேரும் புகழ்த்திரு ஞானசம் பந்தனை
யானுரைத்த
பேருந் தமிழ்ப்பா இவைவல்லவர் பெற்ற
இன்புலகம்
காருந் திருமிடற் றாய்அரு ளாய்என்று
கைதொழுவர்
நீரும் மலருங்கொ ளாநெடு மாலும்
பிரமனுமே, —அந்தாதி 99

பிரமா புரம்வெங் குருசண்பை தோணி
புகலிகொச்சை
சிரமார் புரநற் புறவந்த ராய்காழி
வேணுபுரம்
வரமார் பொழில்திரு ஞானசம் பந்தன்
பதிக்குமிக்க
பரமார் கழுமலம் பன்னிரு நாமம்இப்
பாரகத்தே. —அந்தாதி 100

# 108 திருவிற்குடிவீரட்டம்

## 244 பதிகவரலாறு

நாவரசரும் ஞானவேந்தரும் திருப்புகலூரில் வழிபட்ட காலத்தில் பிள்ளையார் திருவிற்குடி வீரட்டஞ் சென்று மேவிப்பணிந்து பற்பல ஆயிரம்தொண்டரோடும் போற்றிப் பாடியருளியது இத்திருப்பதிகம்.

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

வடிகொண்மேனியர் வானமாமதியினர் நதியினர்மதுவார்ந்த
கடிகொள்கொன்றையஞ் சடையினர்கொடியின ருடைபுலிய
[தளார்ப்பர்
விடையதேறுமெம் மானமர்ந்தினிதுறை விற்குடிவீரட்டம்
அடியராகிநின் றேத்தவல்லார்தமை யருவினையடையாவே. 1

களங்கொள்கொன்றையுங்கதிர்விரிமதியமுங்கடிகமழ்சடைக்கேற்றி
உளங்கொள்பத்தர்பா லருளியபெருமையர் பொருகரியரிபோர்த்து
விளங்குமேனிய ரெம்பெருமா னுறை விற்குடிவீரட்டம்
வளங்கொண்மாமல ரானினைந்தேத்துவார் வருத்தமதறியாரே. 2

கரியகண்டத்தர் வெளியவெண்பொடியணி மார்பினர்வலங்கையில்
எரியர்புன்சடை யிடம்பெறக்காட்டகத் தாடியவேடத்தர்
விரியுமாமலர்ப் பொய்கைசூழ்மதுமலி விற்குடிவீரட்டம்
பிரிவிலாதவர் பெருந்தவத்தோரெனப் பேணுவருலகத்தே. 3

---

1. வடி - தெளிவு, மது - தேன். கொடி - உமாதேவியார் அருவினை அடையாமைக்கு வேண்டுவது அடியாராகின்று ஏத்தும் வன்மை.

2. கதிர் - நிலவு. கடி - மணம். பத்தியை உள்ளத்திற் கொண்டவரிடத்தில் சிவனருள் விளங்கும். கரி - யானை. மலரால் வழிபட்டு மனத்தில் நினைத்து வாயால் துதிப்பார்.

3. வலங்கை :- வலக்கை இடக்கையென்றலே குற்றமில்லாதது. வேடம் - சிவவேடம். பிரிவிலாதவர் - மனத்தாலும்

பூதஞ்சேர்ந்திசை பாடலராடலர் பொலிதர நலமார்ந்த
பாதஞ்சேரிணைச் சிலம்பினர்கலம்பெறு கடலெழுவிடமுண்டார்
வேதமோதிய நாவுடையானிடம் விற்குடிவீரட்டம்
சேருநெஞ்சினர்க் கல்லதுண்டோபிணி தீவினைகெடுமாறே. 4

கடியவேற்றினர் கனலனமேனிய ரனலெழவூர்மூன்றும்
இடியமால்வரை கால்வளைத்தான்றன தடியவர்மேலுள்ள
வெடியவல்வினை வீட்டுவிப்பானுறை விற்குடிவீரட்டம்
படியதாகவே பரவுமின்பரவினுற் பற்றறுமருநோயே. 5

பெண்ணொர்கூறினர் பெருமையர்சிறுமறிக் கையினர்மெய்யார்ந்த
அண்ணலன்புசெய் வாரவர்க்கெளியவ ரரியவரல்லார்க்கு
விண்ணிலார்பொழின் மல்கியமலர்விரி விற்குடிவீரட்டம்
எண்ணிலாவிய சிந்தையினர்தமக் கிடர்கள்வந்தடையாவே. 6

* * * * 7

---

வாக்காலும் மெய்யாலும் நீக்கமின்றி நினைத்தும் போற்றியும் வழிபட்டும் வரும் அடியார்.

4. பாடுதலுடையார், ஆடுதலுடையார். மரக்கலம். வேதங்களை அருளிச்செய்த முதல்வன். இடைவிடாது நினைக்கும். சேர்தல் - இடைவிடாது நினைத்தல் குறள், 3. உரை. பிணியும் வினையும் கெடுமாறு, வீரட்டம்சேரும் நெஞ்சினர்க்கே உண்டு. சேரும் என்பது எதுகைத் தொடைக்கு ஏலாது.

5. ஏற்றினர் - எருதுடையவர். கனல் அன்ன மேனியர்:- 'தீவண்ணர் திறம் ஒருகால் செப்பாராகில்'. ஊர் மூன்றும் - திரிபுரங்களும். வரை - மேரு. வெடிய - பகையாகிய. கேடாகிய, அச்சத்தினைச் செய்யும். வீட்டுவிப்பான் - கொல்விப்பவன். படி - பண்பு. நோய் பற்று அறும்.

6. கூறு - பாகம், மறி - மான். அன்பர்க்கு எளியவர் அல்லார்க்கு அரியவர். 'அளவறுப்பதற்கு அரியவன் இமையவர்க்கு, அடியவர்க்கு எளியான்' 'மெய்யடியவர்க்கு எண்மையனே என்றும் சேயாய் பிறர்க்கு'. (திருவாசகம்) விண்ணில் ஆர் பொழில் என்க. எண் - எண்ணுதல்.

இடங்கொண்மாகட லிலங்கையர்கோன்றனை யிகலழிதரவூன்று
திடங்கொண்மால்வரை யானுரையார்தரு பொருளினனிருளார்ந்த
விடங்கொண்மாமிட றுடையவனுறைபதி விற்குடிவீரட்டம்
தொடங்குமாறிசை பாடிநின்றார்தமைத் துன்பநோயடையாவே. 8

செங்கண்மாலொடு நான்முகன்றேடியுந் திருவடியறியாமை
எங்குமாரெரி யாகியவிறைவனை யறைபுனன்முடியார்ந்த
வெங்கண்மால்வரைக் கரியுரித்துகந்தவன் விற்குடிவீரட்டம்
தங்கையாற்றொழு தேத்தவல்லாரவர் தவமல்குகுணத்தாரே. 9

பிண்டமுண்டுழல் வார்களும்பிரிதுவ ராடையரவர்வார்த்தை
பண்டுமின்றுமோர் பொருளெனக்கருதன்மின் பரிவுறுவீர்கேண்மின்
விண்டமாமலர்ச் சடையவனிடமெனில் விற்குடிவீரட்டம்
கண்டுகொண்டடி காதல்செய்வாரவர் கருத்துறுங்குணத்தாரே. 10

விலங்கலேசிலை யிடமெனவுடையவன் விற்குடிவீரட்டத்
திலங்குசோதியை யெம்பெருமான்றனை யெழிறிகழ்கழல்பேணி
நலங்கொள்வார்பொழிற் காழியுண்ஞானசம் பந்தனற்றமிழ்மாலை
வலங்கொடேயிசை மொழியுமின்மொழிந்தக்கான் மற்றதுவரமாமே.

திருச்சிற்றம்பலம்

---

*8.* இகல் - வலி. மிடறு - திருக்கழுத்து. தொடங்கும் ஆறு - வீரட்டத்தைத் தொடங்கும் நெறி. சிவசம்பந்தமான இசைப்பாட்டு என்றவாறு. துன்பநோய் - துன்பத்தைத் தரும் நோய்கள்.

*9.* அறியாமை - அறியாதவாறு. ஆர் எரி - நிறைந்த தீ. வரைக்கரி - மலைபோலும் யானை.

*10.* வார்த்தையை ஒரு பொருள் என்று கருதாதீர்கள். பரிவு உறுவீர் - அன்புமிக்கீரே! அடி - திருவடிகளை.

*11.* விலங்கலே (- மேருமலையே) சிலையெனவும் (கயிலை மலையே) இடமெனவும் உடைய சிவன். எழில் - அழகு. நலம்- அழகு. செறிவு முதலிய நலங்கள்.

# 109 திருக்கோட்டூர்

## 245 பதிகவரலாறு

சண்பை வேந்தர் மொழி வேந்தரோடு கூடியிருந்து, வற்கடம்போக்கி நாட்டை வாழ்வித்த பின்னர், திருவாஞ்சியம் முதலியவற்றைப்போற்றிக் கோட்டூரில் ஏத்திப்பாடியது இத்திருப்பதிகம்.

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

நீலமார்தருகண்டனே நெற்றியோர்
கண்ணனேயொற்றைவிடைச்
சூலமார்தருகையனே துன்றுபைம்
பொழில்கள்சூழ்ந்தழகாய
கோலமாமலர் மணங்கமழ்கோட்டூர் நற்
கொழுந்தேயென்றெழுவார்கள்
சாலநீடல மதனிடைப்புகழ்மிகத்
தாங்குவர்பாங்காவே. 1

பங்கயம்மலர்ச் சீறடிப்பஞ்சுறு
மெல்விரலரவல்குல்
மங்கைமார்பலர் மயில்குயில்கிளியென
மிழற்றியமொழிபார்மென்
கொங்கையார்குழாங் குணலைசெய்கோட்டூர் நற்
கொழுந்தேயென்றெழுவார்கள்
சங்கையொன்றில ராகிச்சங்கரன்திரு
வருள்பெறலெளிதாமே. 2

---

1. நீலம் - நீலநிறமுடைய ஆலகாலவிடம். கோலம் - அழகு. கொழுந்து என்பது இறைவன் திருப்பெயர். சாலநீள் தலம் - சிவலோகம்,

2. பங்கயம் - தாமரை. மயிலும் மொழிக்கு ஒப்பாக் கூறுவது உண்டுபோலும். 'குயில்மொழி' 'மயில்மொழி' என்பனபோல மயில் மொழி என்று கேட்டிலோம். மிழற்றிய- மெல்லச் சொல்லிய. குணலை-கூத்துள் ஒன்று. சங்கை-சந்தேகம்.

நம்பனுர் நல மலர்கொடுதொழுதெழு
மடியவர் தமக்கெல்லாம்
செம்பொனுர் தரு மெழிறிகழ்முலையவர்
செல்வமல்கியநல்ல
கொம்பனுர்தொழு தாடியகோட்டூர் நற்
கொழுந்தேயென்றெழுவார்கள்
அம்பொனுர் தரு முலகினிலமரரோ
டமர்ந்தினிதிருப்பாரே. 3

பலவுநீள்பொழிற் றீங்கனிதேன்பலா
மாங்கனிபயில்வாய
கலவமஞ்ஞைக ணிலவுசொற்கிள்ளைக
ளன்னஞ்சேர்ந்தழகாய
குலவுநீள்வயற் கயலுகள்கோட்டூர் நற்
கொழுந்தேயென்றெழுவார்கள்
நிலவுசெல்வத்த ராகிநீணிலத்திடை
நீடியபுகழாரே. 4

உருகுவாருள்ளத் தொண்சுடர்தனக்கென்று
மன்பராமடியார்கள்
பருகுமாரமு தெனநின்றுபரிவொடு
பத்திசெய்தெத்திசையும்
குருகுவாழ்வயல் சூழ்தருகோட்டூர் நற்
கொழுந்தேயென்றெழுவார்கள்
அருகுசேர்தரு வினைகளுமகலும்போ
யவனருள்பெறலாமே. 5

---

**3.** அடியவர் தமக்கு எல்லாம் நம்பனுர். பொன்னுலகில் தேவரொடும் இனிதிருப்பர்.

**4.** பலவு - பல மரஞ்செடி கொடிகளும். கலவம் - தோகை. மஞ்ஞை - மயில். கிள்ளை - கிளி. நிலவு செல்வத்தர் - அழியாத ஐசுவரியமுடையவர். நீடிய - அழியாத.

**5.** உள்ளம் உருகுவார்க்கு ஒளிவளர் விளக்கு, அன்புடையடியார்க்கு உண் ஆரமுது பரிவும் பக்தியும்செய்து கோட்டூர் நற்கொழுந்தே என்று எழுவார் வினைகள் விலகும். திருவருள் வாய்க்கும்.

துன்றுவார்சடைத் தூமதிமத்தமுந்
துன்னெருக்கார்வன்னி
பொன்றினார் தலைக் கலனெடுபரிகலம்
புலியுரியுடையாடை
கொன்றைபொன்னென மலர்தருகோட்டூர்நற்
கொழுந்தேயென்றெழுவாரை
என்றுமேத்துவார்க் கிடரிலைகேடிலை
யேதம்வந்தடையாவே. 6

மாடமாளிகை கோபுரங்கூடங்கண்
மணியரங்கணிசாலை
பாடுசூழ்மதிற் பைம்பொன்செய்மண்டபம்
பரிசொடுபயில்வாய
கூடுபூம்பொழில் சூழ்தருகோட்டூர்நற்
கொழுந்தேயென்றெழுவார்கள்
கேடதொன்றில ராகிநல்லுலகினிற்
கெழுவுவர்புகழாலே. 7

ஒளிகொள்வாளெயிற் றரக்கனவ்வுயர்வரை
யெடுத்தலுமுமையஞ்சிச்
சுளியவூன்றலுஞ் சோர்ந்திடவாளொடு
நாளவற்கருள்செய்த
குளிர்கொள்பூம்பொழில் சூழ்தருகோட்டூர்நற்
கொழுந்தினைத்தொழுவார்கள்
தளிர்கொடாமரைப் பாதங்களருள்பெறுந்
தவமுடையவர்தாமே. 8

---

6. கோட்டூர் நற்கொழுந்தே என்று எழும் அடியவரை என்றும் வழிபடுவார்க்கு இடரும் கேடும் ஏதமும் இல்லை.

7. மாளிகை, கோபுரம், கூடம், மணி அரங்கம், சாலை, பொன்மண்டபம், மதில், பொழில், எல்லாம் கோட்டூர்ச் சிறப்பை உணர்த்தின. கேடில்லாதவராய் உலகெலாம் விளங்கிய புகழ் உடையராவர்.

8. வாள் எயிறு - வாள்போலும் கோரைப்பல். சுளிய - சுளிக்க. வாளொடுநாள் - வாட்படையும் ஆயுளும். தளிர்கொள் தாமரைப் பாதங்கள். அருளைப் பெறுதற்குரிய தவம்.

பாடியாடுமெய்ப் பத்தர்கட்கருள்செயு
முத்தினைப்பவளத்தைத்
தேடிமாலயன் காணவொண்ணுதவத்
திருவினைத் தெரிவைமார்
கூடியாடவர் கைதொழுகோட்டூர்நற்
கொழுந்தேயென்றெழுவார்கள்
நீடுசெல்வத்த ராகியிவ்வுலகினி
னிகழ்தருபுகழாரே. 9

கோணல்வெண்பிறைச் சடையனைக்கோட்டூர்நற்
கொழுந்தினைச் செழுந்திரளைப்
பூணல்செய்தடி போற்றுமின்பொய்யிலா
மெய்யனல்லருளென்றும்
காணவொன்றிலாக் காரமண் டேரர்குண்
டாக்கர்சொற்கருதாதே
பேணல்செய்தர னைத்தொழுமடியவர்
பெருமையைப்பெறுவாரே. 10

பந்துலாவிரற் பவளவாய்த்தேன்மொழிப்
பாவையோடுருவாரும்
கொந்துலாமலர் விரிபொழிற்கோட்டூர்நற்
கொழுந்தினைச்செழும்பவளம்
வந்துலாவிய காழியுண் ஞானசம்
பந்தன்வாய்ந்துரைசெய்த
சந்துலாந்தமிழ் மாலைகள்வல்லவர்
தாங்குவர்புகழாலே. 11

திருச்சிற்றம்பலம்

---

*9.* பாடி ஆடுகின்ற உண்மையடியார்க்கு அருளும் முத்து. அரி அயன் அறியாத திரு. மகளிரும் ஆடவரும் கூடித்தொழும் கோட்டூர்க் கொழுந்தே என்று எழுவார்க்கு நீடிய செல்வமும் உலகெலாம் நிகழும் புகழும் உண்டாம்.

*10.* பூணல் மலர்களாலும் ஆடை ஆபரணங்களாலும் அலங்கரித்தல், அரனைப் பேணல்செய்து தொழும் அடியவர். பேணல் - பக்தி.

*11.* தேன்மொழிப்பாவை - இத்தலத்தில் உள்ள தேவியார் திருப்பெயர். இதனை மதுரவசனி என்று பின்னோர் மொழி பெயர்த்தனர். கொந்து-பூங்கொத்து. சந்து-சந்தம். பாவண்ணம்.

**246 பதிகவரலாறு**

*சைவமுதல்மறையோர் அன்பிலாலந்துறைமுன்னவனைத் தொழுது பதியும் பணிந்து வடகரை மாந்துறை அணைந்தார். வலஞ்செய்து உள்புக்குத்தாழ்ந்து, பரிதி மதி மருத்துக்கள் தொழுது வழிபாடு செய்ய நின்ற நிலையைச் சிறப்பித்துப் பாடியருளியது இத்திருப்பதிகம்.*

**பண் - நட்டராகம்**

திருச்சிற்றம்பலம்

செம்பொனார்தரு வேங்கையுஞாழலுஞ் செருந்திசெண்பகமானைக்
கொம்புமாரமு மாதவிசுரபுனை குருந்தலர் பரந்துந்தி
அம்பொனேர்வரு காவிரிவடகரை மாந்துறையுறைகின்ற
எம்பிரானிமை யோர்தொழுபைங்கழ லேத்துதல்செய்வோமே. 1

விளவுதேனொடு சாதியின் பலங்களும் வேய்மணிநிரந்துந்தி
அளவிநீர்வரு காவிரிவடகரை மாந்துறையுறைவானத்
துளவமான்மக னைங்கணைக்காமனைச் சுடவிழித்தவனெற்றி
அளகவாணுத லரிவைதன்பங்கனை யன்றி மற்றறியோமே. 2

கோடுதேன்சொரி குன்றிடைப்பூகமுங் கூந்தலின் குலைவாரி
ஓடுநீர்வரு காவிரிவடகரை மாந்துறையுறைநம்பன்
வாடினார் தலையிற் பலிகொள்பவன் வானவர் மகிழ்ந்தேத்தும்
கேடிலாமணியைத் தொழலல்லது கெழுமுதலறியோமே. 3

---

*1. வேங்கை பொன்போல் பூக்கும். வேங்கைமுதலியவை காவிரி வெள்ளத்தால் உந்தப்பட்டுவருவன. ஆரம் - சந்தனம். பொன் நேர்வருகாவிரி :— "பொன்னி."*

*2. விளவு - விளா. வேய்மணி - மூங்கில்முத்து. துளவ மால் மகன் - துழாய் அணிந்த திருமாலுக்கு மகனான. அளகம் - கூந்தல். ஈற்றடியைச் சைவர் மறத்தல் கூடாது. (பா. 3, 4 பார்க்க.)*

*3. வாடினார்தலை :— பிரம கபாலம். கேடிலாமணி - இத்தலத்து இறைவர் திருப்பெயர். மாந்துறைமணி என்பன முன் வழங்கியவை. கெழுமுதல் - நிறைவு, பொருத்தம்.*

இலவஞாழலு மீஞ்சொடுசுரபுன்னை யிளமருதிலவங்கம்
கலவிநீர்வரு காவிரிவடகரை மாந்துறையுறைகண்டன்
அலைகொள்வார்புன லம்புலிமத்தமு மாடரவுடன்வைத்த
மலையைவானவர் கொழுந்தினையல்லது வணங்குதலறியோமே. 4

கோங்குசெண்பகங் குருந்தொடுபாதிரி குரவிடைமலருந்தி
ஓங்கிநீர்வரு காவிரிவடகரை மாந்துறையுறைவானைப்
பாங்கினாலிடுந் தூபமுந்தீபமும் பாட்டவிம்மலர்சேர்த்தித்
தாங்குவாரவர் நாமங்கணுவினிற் றலைப்படுந்தவத்தோரே. 5

பெருகுசந்தனங் காரகில்பீலியும் பெருமரநிமிர்ந்துந்திப்
பொருதுகாவிரி வடகரை மாந்துறைப் புநிதனெம்பெருமானைப்
பரிவினாலிருந் திரவியுமதியமும் பார்மன்னர் பணிந்தேத்த
மருதவானவர் வழிபடுமலரடி வணங்குதல்செய்வோமே. 6

நறவமல்லிகை முல்லையுமௌவலு நாண்மலரவைவாரி
இறவில்வந்தெறி காவிரிவடகரை மாந்துறையிறையன்றங்
கறவனாகிய கூற்றினைச்சாடிய வந்தணன்வரைவில்லால்
நிறையவாங்கியே வலித்தெயிலெய்தவ னிரைகழல்பணிவோமே. 7

---

4. இலவம் முதலியவை மரங்கள். ஈஞ்சு - ஈந்து; போவி. கண்டன் - தலைவன். புனல் - கங்கை. அம்புலி - பிறை. மலை.— "அருள் நிதிதரவரும் ஆனந்த மலையே" திருப்பள்ளியெழுச்சி.

5. குரவு - குராமரம். பாங்கு - சிவாகம விதி. பாட்டு - தோத்திரம். அவி - நிவேதனம். தாங்குவார் - சிவபூஜாதுரந்தரர். தலைப்படல் - சேர்தல்

6. பரிவு - பக்தி. இரவி - சூரியன். மருதவானவர் - மருத்துக்கள். இதில். இத்தலத்தை வழிபட்டவர்களை உணர்த்தியருளினார்.

7. நறவம் - தேன், மணம். மௌவல் - காட்டு மல்லிகை. இறவில் - மிகுதியில். அறவனாகிய கூற்று - தருமராசன். வரைவில் - மேருவாகியவில், வாங்கி - வளைத்து. எயில் - திரிபுரம்.

மந்தமார்பொழின் மாங்கனிமாந்திட மந்திகண்மாணிக்கம்
உந்திநீர்வரு காவிரிவடகரை மாந்துறையுறைவானை
நிந்தியாவெடுத் தார்த்தவல்லரக்கனை நெரித்திடுவிரலானைச்
சிந்தியாமனத் தாரவர்சேர்வது தீநெறியதுதானே. 8

நீலமாமணி நித்திலத்தொத்தொடு நிரைமலர்நிரந்துந்தி
ஆலியாவரு காவிரிவடகரை மாந்துறை யமர்வானை
மாலுநான்முகன் றேடியுங்காண்கிலா மலரடியிணைநாளும்
கோலமேத்திநின் றாடுமின்பாடுமின் கூற்றுவனலியானே. 9

நின்றுணுஞ்சமண் டேரருநிலையிலர் நெடுங்கழைநறவேலம்
நன்றுமாங்கனி கதலியின்பலங்களு நாணலினுரைவாரி
ஒன்றிநேர்வரு காவிரிவடகரை மாந்துறையொருகாலம்
அன்றியுள்ளழிந் தெழும்பரிசழகிது வதுவவர்க்கிடமாமே. 10

வரைவளங்கவர் காவிரிவடகரை மாந்துறையுறைவானைச்
சிரபுரம்பதி யுடையவன்கவுணியன் செழுமறைநிறைநாவன்
அரவெனும்பணி வல்லவன்ஞானசம் பந்தனன்புறுமாலை
பரவிடுந்தொழில் வல்லவரல்லலும் பாவமுமிலர்தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

8. மந்தம் - தென்றல். நிந்தியா - நிந்தித்து. சிந்தியா மனத்தார் - சிந்திக்காத மனமுடையவர். தீநெறி - நரகிற் செலுத்தும் தீயகதி.

9. நித்திலத்தொத்து - முத்துக்கொத்து. ஆலியா - துளித்து. இணை - இரண்டு. நாளும் - நாடோறும். கோலம் - சிவக்கோலம். நலியான் - வருத்தமாட்டான்.

10. கழை - மூங்கில். கரும்பு. நறவு - மணம், கதலி - வாழை. பலம் - பழம். ஒருகாலம் அன்றி :— எக்காலத்தும். உள் அழிந்து எழும்பரிசு - நெஞ்சுருகி எழுகின்ற தன்மை. அது - அப்பரமானந்தநிலை.

11. வரைவளம் - மலைவளங்களை, மறை நிறைநாவன் - வேதங்கள் நிறைந்த நாவினர். அர:—அரகர என்னும் முழக்கம். இப்பணியில் வல்லமை நல்லுயிர்க்கே உண்டாகும்.

# 111 திருவாய்மூர்

## 247 பதிகவரலாறு

சிவபிரான் சண்பை வேந்தர்க்குத் திருவாய்மூரில் அம்பிகையுடனே கூட மன்னிய ஆடல் காட்டினுர்: அதை அவர் மொழிவேந்தர்க்கும் காட்டிப் போற்றிப் பாடியருளியது இத்திருப்பதிகம்.

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

தளிரிளவளரென வுமைபாடத்
தாளம்மிடவோர் தழல்வீசிக்
கிளரிளமணியர வரையார்த்
தாடும்வேடக் கிறிமையார்
விளரிளமுலையவர்க் கருணல்கி
வெண்ணீறணிந்தோர் சென்னியின்மேல்
வளரிளமதியமொ டிவராணீர்
வாய்மூரடிகள் வருவாரே. 1

வெந்தழல்வடிவினர் பொடிப்பூசி
விரிதருகோவண வுடைமேலோர்
பந்தஞ்செய்தரவசைத் தொலிபாடிப்
பலபலகடைதொறும் பலிதேர்வார்

---

1. இப்பதிகத்தில் அகத்துறை அமைந்தமை உணர்க. உமையம்மையார் 'தளிர் இளவளர்' எனப் பாடவும் தாளம் இடவும் ஒரு தாள் எடுத்து ஆடும் கிறிமையார். கிறிமை - பொய்ம்மை. விளர் - கொழுப்பு. 'மன்னிய ஆடல்காட்ட' எனச் சேக்கிழார் சுவாமிகள் அருளியதை நோக்கின், இவர் காணீர் என்று இருத்தல்வேண்டும் எனத் தோன்றுகின்றது. அதில் ககர உயிர்மெய் ஏட்டில் கெட்டிருக்க ரகர ஆகாரமாகக் கொண்டனர்போலும்.

சிந்தனைபுகுந்தெனக் கருணல்கிச்
செஞ்சுடர்வண்ணர்தம் மடிபரவ
வந்தனைபலசெய விவராணீர்
வாய்மூரடிகள் வருவாரே. 2

பண்ணிற்பொலிந்த வீணையர்
பதினெண்கணமு முணராநஞ்
சுண்ணப்பொலிந்த மிடற்றின
ருள்ளமுருகி லுடனுவார்
சுண்ணப்பொடிநீ றணிமார்பர்
சுடர்பொற்சடைமேற் றிகழ்கின்ற
வண்ணப்பிறையோ டிவராணீர்
வாய்மூரடிகள் வருவாரே. 3

எரிகிளர்மதியமொ டெழினுதன்மே
லெறிபொறியரவினெ டாறுமூழ்க
விரிகிளர்சடையினர் விடையேறி
வெருவவந்திடர்செய்த விகிர்தனர்
புரிகிளர்பொடியணி திருவகலம்
பொன்செய்தவாய்மையர் பொன்மிளிரும்
வரியரவரைக்கசைத் திவராணீர்
வாய்மூரடிகள் வருவாரே. 4

---

2. இறைவர் என் சிந்தனையுட்புகுந்து எனக்கு அருள் நல்கித் தன்னைப் பரவச்செய்ய வருவார் காணீர் என்க.

3. பண் - பண்ணிசை. வீணையர் - பா. 8. பார்க்க. பதினெண்கணம்-பதினெட்டுத் தேவர்கூட்டம். நஞ்சு உண்ணப் பொலிந்த மிடற்றினர் - நஞ்சு உண்டும் சாவா ஒருவன் என்ற கருத்தை உணர்த்திற்று. 'உள்ளம் உருகில் உடனுவர்' என்னும் பரமாப்தவசனத்தைத் திருவுந்தியாரில் (7) அமைத்து, 'உள்ளம் உருகில் உடனுவர் அல்லது தெள்ள அரியர் என்று உந்தீபற, சிற்பரச் செல்வர் என்று உந்தீபற' என்றருளியது காண்க. சுண்ணம் - சுவர்ணம், திருநீற்றுப் பொற்சுண்ணம். பொன் போலச் சுடருஞ் சடை.

4. பொறி - படப்பொறி. அகலம் - மார்பு. பா. 7. பார்க்க. வாய்மையர்-சத்தியரூபர். வாய்மையரூர் என்பதன் மரூஉவோ வாய்மூர்? அரவு அரைக்கு அசைத்து வருவார் இவர் காணீர் என்க.

அஞ்சனமணிவண மெழினிறமா
வகமிடறணிகொள வுடறிமில
நஞ்சினையமரர்க ளமுதமென
நண்ணியநறுநுத லுமைநடுங்க
வெஞ்சினமால்களி யானையின்றோல்
வெருவுறப்போர்த்தத னிறமுமதே
வஞ்சனைவடிவினொ டிவராணீர்
வாய்மூரடிகள் வருவர்ரே. 5

அல்லியமலர்புல்கு விரிகுழலார்
கழலிணையடிநிழ லவைபரவ
எல்லியம்போதுகொண் டெரியேந்தி
யெழிலொடுதொழிலவை யிசையவல்லார்
சொல்லியவருமறை யிசைபாடிச்
சூடிளமதியினர் தோடுபெய்து
வல்லியந்தோலுடுத் திவராணீர்
வாய்மூரடிகள் வருவாரே. 6

கடிபடுகொன்றைநன் மலர்திகழுங்
கண்ணியர்விண்ணவர் கனமணிசேர்
முடிபில்குமிறையவர் மறுகினல்லார்
முறைமுறைபலிபெய முறுவல்செய்வார்
பொடியணிவடிவொடு திருவகலம்
பொன்னெனமிளிர்வதொ ரரவினொடும்
வடிநுனைமழுவினொ டிவராணீர்
வாய்மூரடிகள் வருவாரே. 7

---

**5.** நீலமணிபோலும் மேனியர். அஞ்சனம் - கருநிறம், மணிவண்ணம்போலும் அழகிய நிறம். அகம் மிடறு - கழுத்திடம். திமிலம் - பேரொலி.

**6.** இதன் முதலீரடியொடும் 'நள்ளிருள் மகளிர் நின்று ஏத்த வானவாழ்க்கையது உடையார்' 2. 94. 8. என்பதைப் பொருத்திக்காண்க. மகா சங்கார தாண்டவத்தைப் பல்வேறு கூறுபாடுற்ற சத்திகள் ஒருங்குசேர்ந்து காணும் உண்மை உணர்த்திற்று. வல்லியம் - புலி.

**7.** கண்ணியர்-தலையிற்சூடும் மாலையர், மணிமுடி. பில்கும்-(ஒளி) சிதறும், பா. 4. பார்க்க. பொடி - திருநீறு. வடி-கூர்மை.

கட்டிணைபுதுமலர்க் கமழ்கொன்றைக்
கண்ணியர்வீணையர் தாமுமஃதே
எட்டுணைசாந்தமொ டுமைதுணையா
விறைவனுறைவதொ ரிடம்வினவில்
பட்டிணையகலல்குல் விரிகுழலார்
பாவையர்பலியெதிர் கொணர்ந்துபெய்ய
வட்டணையாடலொ டிவராணீர்
வாய்மூரடிகள் வருவாரே. 8

ஏனமருப்பினொ டெழிலாமை
யிசையப்பூண்டோ ரேறேறிக்
கானமதிடமா வுறைகின்ற
கள்வர்கனவிற் றுயர்செய்து
தேனுணமலர்க ளுந்திவிம்மித்
திகழ்பொற்சடைமேற் றிகழ்கின்ற
வானநன்மதியினொ டிவராணீர்
வாய்மூரடிகள் வருவாரே. 9

சூடல்வெண்பிறையினர் சுடர்முடியர்
சுண்ணவெண்ணீற்றினர் சுடர்மழுவாட்
பாடல்வண்டிசைமுரல் கொன்றையந்தார்
பாம்பொடுநூலவை பசைந்திலங்கக்
கோடனன்முகிழ்விரல் கூப்பிநல்லார்
குறையுறுபலியெதிர் கொணர்ந்துபெய்ய
வாடல்வெண்டலைபிடித் திவராணீர்
வாய்மூரடிகள் வருவாரே. 10

---

8. கட்டிணை புதுமலர் - இணை இணையாகக் கட்டப்படும் புதிய பூக்கள். எட்டுணை - (எண் + துணை) எண்மடங்கு. பட்டு இணைந்த - 'பட்டிசைந்த'. பாவையர் - தாருகவனத்து மகளிர். வட்டணை - வட்டம். தாளம் போடுதலுமாம்.

9. ஏனம் - பன்றி. மருப்பு - கொம்பு, பன்றிக்கொம்பும் ஆமையோடும் பூண்டவர் என்று திருமுறைகளில் பல இடங்களில் இருத்தல் வெளிப்படை.

10. பசைந்து - பற்றி, பசுமையுற்று. கோடல் - வெண் காந்தள். ஈண்டுக் காந்தளையுணர்த்தி, மகளிர் செவ்விரல் களுக்கு ஒப்பாயிற்று. முகிழ் - அரும்பு.

திங்களொடருவரைப் பொழிற்சோலைத்
தேனலங்கானலந் திருவாய்மூர்
அங்கமொடருமறை யொலிபாட
வழனிறவண்ணர்தம் மடிபரவி
நங்கடம்வினைகெட மொழியவல்ல
ஞானசம்பந்தன் றமிழ்மாலை
தங்கியமனத்தினற் றெழுதெழுவார்
தமர்நெறியுலகுக்கோர் தவநெறியே. 11

திருச்சிற்றம்பலம்

---

*11.* வரைப்பொழில் - மலையிலுள்ள சோலைகள். மறையொலி - வேதமுழக்கம். நங்கள் தம்வினை. எழுவார் நெறி, எழுவார்க்குத் தமர்நெறி, உலகுக்கு ஒரு தவநெறி.

---

பாரகலத் துன்பங் கடந்தமர ராற்பணியும்
ஏரகலம் பெற்றாலும் இன்னாதாற்—காரகிலின்
தூமங் கமழ்மாடத் தோணி புரத்தலைவன்
நாமஞ் செவிக்கிசையா நாள். —அந்தாதி 101

# 112 திருவாடானை

## 248 பதிகவரலாறு

திருவிராமேச்சுரத்திலிருந்து திருக்கேதீச்சரத்தைநினைந்து போற்றிய ஞானச்செல்வர் வடதிசைமேற் செல்வாராய், பல சிவதலம் பணிந்து, கடற்கரைவாய் தவிரப் போந்து, திருவாடானை சேர்ந்து சார்த்திய செந்தமிழ்மாலை இத்திருப் பதிகம்.

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

மாதோர்கூறுகந் தேறதேறிய
ஆதியானுறை யாடானை
போதினாற்புனைந் தேத்துவார்தமை
வாதியாவினை மாயுமே. 1

வாடல்வெண்டலை யங்கையேந்திநின்
றாடலானுறை யாடானை
தோடுலாமலர் தூவிக்கைதொழ
வீடுநுங்கள் வினைகளே. 2

---

*1.* அம்பிகைபாகனுகி விடைமேலேறியருளும் முதல்வன் திருவாடானையைப் போது (அரும்பு, பூக்)களால் அலங்கார மும் அருச்சனையும் புரிந்து பூசிப்பவரை வினைகள் வருத்த மாட்டாதனவாய் மாய்ந்துவிடும். இப்பதிகமுழுதும் அருச்சனை யின்பயன் உணர்த்தப்பட்டமை அறிக.

*2.* வற்றிய பிரமகபாலத்தையேந்தி நின்று ஆடுதலை யுடைய சிவபிரான் ஆடானையை மலர்தூவித் தொழுதால் வினைகள் அழியும். தோடு - பூவிதழ்.

மங்கைகூறினன் மான்மறியுடை
அங்கையானுறை யாடானை
தங்கையாற்றொழு தேத்தவல்லவர்
மங்குநோய்பிணி மாயுமே. 3

சுண்ணநீறணி மார்பிற்றோல்புனை
அண்ணலானுறை யாடானை
வண்ணமாமலர் தூவிக்கைதொழ
எண்ணுவாரிட ரேகுமே. 4

கொய்யணிம்மலர்க் கொன்றைசூடிய
ஐயன்மேவிய வாடானை
கையணிம்மல ரால்வணங்கிட
வெய்யவல்வினை வீடுமே. 5

வானிளம்மதி மல்குவார்சடை
ஆனஞ்சாடல னாடானை
தேனணிம்மலர் சேர்த்தமுன்செய்த
ஊனமுள்ள வொழியுமே. 6

---

3. மங்கைபங்கன், மான்கன்றேந்திய திருக்கரத்தன். ஆடானையைத் தம்கைகளால் தொழுது ஏத்தவல்லவர் நோயும் பிணியும் மாயும். மங்குதல் - கெடுதல்.

4. தோல்:— மான்றோல் பூணுநூலொடு சேர்த்துத்தரித்துக்கொள்வது. 1. 28. 2, 1. 133. 4, 1. 80. 9, 1. 6. 3. வண்ணம்- அழகு. எண்ணுவார் - தியாநம்புரிவார். பா. 8 பார்க்க.

5. கொய் - கொய்த. ஐயன் - தலைவன், பிதா.

वागर्थाविव संपृक्तौ वागर्थप्रतिपत्तये ।
जगतः पितरौ वन्दे पार्वती परमेश्वरौ ॥

தலந்தொறும் கைநிறையப் பூக்களைக்கொண்டு தூவிவழிபடுவது சைவர்க்குரிய நன்னெறியாதலைப் பெரியபுராணத்துட்காண்க.

6. பிறைமல்கு நீள்சடை, பஞ்சகௌவியம், அஞ்சு - ஐந்து. போலி, அணிமலர் சேர்த்தலால் பழவினை பற்றறும். 'உள்ளத்தே புகுந்தளிப்பன் ஊனம் எலாம் ஓட'.

துலங்குவெண்மழு வேந்திச்சூழ்சடை
அலங்கலானுறை யாடானை
நலங்கொண்மாமலர் தூவிநாடொறும்
வலங்கொள்வார்வினை மாயுமே. 7

வெந்தநீறணி மார்பிற்றோல்புனை
அந்தமில்லவ னாடானை
கந்தமாமலர் தூவிக்கைதொழும்
சிந்தையார்வினை தேயுமே. 8

மறைவலாரொடு வானவர்தொழு
தறையுந்தண்புன லாடானை
உறையுமீசனை யேத்தத்தீவினை
பறையுநல்வினை பற்றுமே. 9

மாயனும்மல ரானுங்கைதொழ
ஆயவந்தண னாடானை
தூயமாமர் தூவிக்கைதொழத்
தீயவல்வினை தீருமே. 10

---

*7. சடையசைதலையும் ஒளிர்தலையும் மாலையையும் கூறலாம். நலம் - அழகு. வலங்கொள்ளல் வழிபாட்டின் உறுப்புக்களுள் ஒன்று.*

*8. பா. 4, பார்க்க. 'ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெருஞ்சோதி' சிந்தையார் வினை - சிந்தனையை உடையவரது வினை.*

*9. வலார் - வல்லவர்; பூசுரர். வானவர் - சுரர். ஆடானையில் எழுந்தருளும் உடையவனை. பறையும் - அழியும். பறைவது தீவினை. பற்றுவது நல்வினை.*

*10. ஆய - ஆகிய. தீயவினை; வல்வினை. அந்தணன்:— சிவபிரான். மலர்தூவிக் கையால் தொழ வினை தீரும்.*

வீடனார்மலி வேங்கடத்துநின்
ருடலானுறை யாடானை
நாடிஞானசம் பந்தன்செந்தமிழ்
பாடநோய்பிணி பாறுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. வீடினார் - இறந்தவர். வேங்கடம் - வேகுங்காடு. 'கள்ளிமுதுகாட்டிலாடி'. பாடலால் நோயும் பிணியும் அழியும்.

---

பாலித் தெழில்தங்கு பார்முகம் உய்யப் பறிதலையோர்
மாலுற் றழுந்த அவதரித் தோன்மணி நீர்க்கமலத்
தாலித் தலர்மிசை அன்னம் நடப்ப அணங்கிதென்னுச்
சாலித் தலைபணி சண்பையர் காவலன் சம்பந்தனே.

—ஆளுடையபிள்ளையார் திருச்சண்பை விருத்தம். 1

கொங்குதங் குங்குஞ்சி கூடாப் பருவத்துக் குன்றவில்லி
பங்குதங் கும்மங்கை தன்னருள் பெற்றவன் பைம்புணரிப்
பொங்குவங் கப்புனல் சேர்த்த புதுமணப் புன்னையின்கீழ்ச்
சங்குதங் கும்வயற் சண்பையர் காவலன் சம்பந்தனே.

—திருச்சண்பை விருத்தம் 2

குவளைக் கருங்கட் கொடியிடை துன்பந் தவிர அன்று
துவளத் தொடுவிடந் தீர்த்த தமிழின் தொகைசெய்தவன்
திவளக் கொடிக்குன்ற மாளிகைச் சூளிகைச் சென்னியின்வா
தவளப் பிறைதங்கு சண்பையர் காவலன் சம்பந்தனே. [ய்த்

—திருச்சண்பை விருத்தம் 3

# 113 சீகாழி

## 249 பதிகவரலாறு

*137 ஆவது பதிகத் தலைப்பைக் காண்க.*

பண் - செவ்வழி

திருச்சிற்றம்பலம்

பொடியிலங்குந் திருமேனி யாளர் புலியதளினர்
அடியிலங்குங் கழலார்க்க வாடும் மடிகள்ளிடம்
இடியிலங்குங் குரலோத மல்கவ் வெறிவார்திரைக்
கடியிலங்கும் புனன்முத் தலைக்குங்கடற் காழியே. 1

மயலிலங்குந் துயர்மாசறுப்பா னருந்தொண்டர்கள்
அயலிலங்கப் பணிசெய்ய நின்ற வடிகள்ளிடம்
புயலிலங்குங் கொடையாளர் வேதத்தொலி பொலியவே
கயலிலங்கும் வயற்கழனி சூழுங்கடற் காழியே. 2

கூர்விளங்குந் திரிசூலவேலர் குழைக்காதினர்
மார்விலங்கும் புரிநூலுகந்த மணவாளனூர்
நேர்விலங்கல்லன திரைகண்மோதந் நெடுந்தாரைவாய்க்
கார்விலங்கல்லெனக் கலந்தொழுகுங் கடற்காழியே. 3

---

1. இலங்கும் - விளங்கும். கடல் அலையொலி இடியொலி போலுள்ளதாம். கடி - விரைவு, மிகுதி. அடிகள் இடம் கடற்காழி என்றவாறே மேலும் இயைத்துக் கொள்க.

2. துயர்மாசு - உம்மைத்தொகை. 'கைம்மாறு வேண்டா கடப்பாடுமாரி மாட்டு என் ஆற்றுங்கொல்லோ உலகு' (குறள்). கொடையாளர் - அந்தணர்.

3. திரிசூலமாகிய வேலுடையவர், மார்வு - மார்பு. உகந்த மணவாளன். விலங்கல் - மலை. தாரை - நீரொழுக்கு, பெரு மழை.

குற்றமில்லார் குறைபாடு செய்வார் பழிதீர்ப்பவர்
பெற்றநல்ல கொடிமுன் னுயர்த்த பெருமானிடம்
மற்றுநல்லார் மனத்தா லினியார் மறைகலையெலாங்
கற்றுநல்லார் பிழைதெரிந் தளிக்குங்கடற் காழியே. 4

விருதிலங்குஞ் சரிதைத் தொழிலார் வீரிசடையினர்
எருதிலங்கப் பொலிந்தேறு மெந்தைக் கிடமாவது
பெரிதிலங்கும்மறை கிளைஞரோதப் பிழைகேட்டலாற்
கருதுகிள்ளைக் குலந்தெரிந்து தீர்க்குங்கடற் காழியே. 5

தோடிலங்குங் குழைக்காதர் வேதர்சுரும் பார்மலர்ப்
பீடிலங்குஞ் சடைப்பெருமை யாளர்க் கிடமாவது
கோடிலங்கும் பெரும்பொழில்கண் மல்கப் பெருஞ்செந்நெலின்
காடிலங்கும் வயல்பயிலு மந்தண்கடற் காழியே. 6

மலையிலங்குஞ் சிலையாக வேகம்மதின் மூன்றெரித்
தலையிலங்கும் புனற்கங்கை வைத்தவடி கட்கிடம்
இலையிலங்கும் மலர்க்கைதை கண்டல்வெறி விரவலாற்
கலையிலங்குங் கணத்தினம் பொலியுங்கடற் காழியே. 7

---

4. குற்றம் இல்லார். குறைபாடு செய்பவரது பழியைத் தீர்ப்பவர். நல்லார்; இனியார்; கலையெல்லாம் கற்று நல்லாரானவர் என்று அந்தணரைக் குறித்தல் அறிக. அளிக்கும் - தலையளிசெய்யும்.

5. சரிதை - ஒழுக்கம். சீகாழியில் வேதியர்கள் வேதத்தை ஓதுங்கால் பிழைகளைக் கேட்டுணர்ந்து, முன்புற்ற கேள்வி வன்மையால், கிளியினங்கள் அப்பிழைகளைத் திருத்தும் அற்புதம் உணர்த்தப்பட்டது.

6. தோடும் குழையும் இலங்கும் காதர். வேதர் - வேதத்தையுடையவர். கோடு - கொம்பு. செந்நெலின்காடு - செந்நெற்பயிர் நெருக்கம்.

7. வைத்த அடிகள் என்னும் பெயரெச்சத்தொடர்க்கு இடையில் வகரமெய் பிற்பதிப்புக்களில் இருக்கின்றது. கைதை - தாழை. கண்டல் - நீர்முள்ளி. கலையிலங்குங்கணத்தினம்:- கல்வி விளங்கும் மறையவர் கூட்டம்; மான்கூட்டம்.

முழுதிலங்கும் பெரும்பாருள் வாழும்முர ணிலங்கைக்கோன்
அழுதிரங்கச் சிரமுர மொடுங்கவ் வடர்த்தாங்கவன்
றொழுதிரங்கத் துயர்தீர்த் துகந்தார்க் கிடமாவது
கழுதும்புள்ளு மதிற்புறம தாருங்கடற் காழியே. 8

பூவினானும் விரிபோதின் மல்குந்திரு மகடனை
மேவினானும் வியந்தேத்த நீண்டா ரழலாய்நிறைந்
தோவியங்கே யவர்க்கருள் புரித்தவ் வொருவர்க்கிடங்
காவியங்கண் மடமங்கையர்சேர் கடற்காழியே. 9

உடைநவின்ரு ருடைவிட்டுழல்வா ரிருந்தவத்தார்
முடைநவின்றம் மொழியொழித்துகந்தம் முதல்வன்னிடம்
மடைநவின்ற புனற்கெண்டைபாயும் வயன்மலிதரக்
கடைநவின்றந் நெடுமாடமோங்குங் கடற்காழியே. 10

கருகுமுந்நீர் திரையோத மாருங் கடற்காழியுள்
உரகமாருஞ் சடையடிக டம்பா லுணர்ந்துறுதலாற்
பெருகமல்கும் புகழ்பேணுந் தொண்டர்க்கிசையார்தமிழ்
விரகன்சொன்ன விவைபாடி யாடக்கெடும் வினைகளே. 11

திருச்சிற்றம்பலம்

---

*8.* முரண் - வலி, மாறுபாடு. சிரம்உரம் - தலையும் மார்பும். உகந்தார் - உயர்ந்த சிவபிரான். கழுது - வண்டு பேயும் ஆம். புள் - பறவை.

*9.* விரிபோது - பூத்த தாமரைமலர். மேவினான் - விரும்பிய திருமால். ஓவி - நீங்கி. புரிந்த ஒருவர் என்னும் பெயரெச்சத் தொடரில் வகரம் விரித்தல் விகாரம்.

*10.* உடை நவின்ருர் - உடை செய்தார், உடுத்தார். தேரர், உடைவிட்டு உழன்ருர் - ஆடையின்றித் திரிந்தவர்; சமணர். முடை - நாற்றம்.

*11.* உரகம் - பாம்பு. அடிகள் தம்பால் - சிவபிரானிடத்தில். விரகன் - வல்லவன், அறிஞன்.

# 114 திருக்கேதாரம்

## 250 பதிகவரலாறு

திருக்காளத்தி மலையின் மிசை வீற்றிருந்து ஏழுலகும் உடைய தேனை, சண்பை ஆளும் புரவலனார் பருகி ஆர்ந்து, தமிழ்வழக்கு நிகழாத வடக்கிலும் குடக்கிலும் உள்ள தானந்தோறும் சென்று தமிழிசை பாடுஞ் செய்கை போல வடகயிலை வணங்கிப் பாடித் திருக்கேதாரம் தொழுது இசை திருந்தப் பாடி யருளியது இத்திருப்பதிகம்.

பண் - செவ்வழி

திருச்சிற்றம்பலம்

தொண்டரஞ்சு களிறும் மடக்கிச் சுரும்பார்மலர்
இண்டைகட்டி வழிபாடு செய்யு மிடமென்பரால்
வண்டுபாட மயிலால மான்கன்று துள்ளவ்வரி
கெண்டைபாயச் சுனைநீல மொட்டலருங் கேதாரமே. 1

பாதம்விண்ணோர் பலரும் பரவிப் பணிந்தேத்தவே
வேதநான்கும் பதினெட்டொ டாறும் விரித்தார்க்கிடம்
தாதுவிண்டம் மதுவுண்டு மிண்டிவரு வண்டினம்
கீதம்பாடம் மடமந்தி கேட்டுகளுங் கேதாரமே. 2

---

1. அஞ்சுகளிறும் - ஐம்புலங்களாகிய ஆண்யானைகளையும். 'ஐம்புலனும் அடக்கி ஞானம் புகலுடையோர் தம்உள்ளப் புண்டரிகத்துள் இருக்கும் புராணர்' 1. 132. 6 இண்டைகட்டி வழிபாடுசெய்தல் வடநாட்டிலும் உண்டுபோலும்! 'என்பரால்' என்றது, காணாது கேட்டுப் பாடியருளியதைக் குறித்தது.

2. விண்ணோர் பலரும் பாதம் பரவிப் பணிந்து ஏத்த விரித்தார்க்கு இடம் கேதாரம் என்க. வண்டினம் கீதம்பாட மந்திகள் கேட்டுத் துள்ளும்.

முந்திவந்து புரோதாய மூழ்கிம் முனிகள்பலர்
எந்தைபெம்மா னெனநின் றிறைஞ்சும் மிடமென்பரால்
மந்திபாயச் சரேலச் சொரிந்தும் முரிந்துக்கபூக்
கெந்தநாறக் கிளருஞ் சடையெந்தை கேதாரமே. 3

உள்ளமிக்கார் குதிரைம் முகத்தா ரொருகாலர்கள்
எள்கலில்லா விமையோர்கள் சேரும் மிடமென்பரால்
பிள்ளைதுள்ளிக் கிள்ளைபயில்வ கேட்டுப் பிரியாதுபோய்க்
கிள்ளையேனற் கதிர்கொணர்ந்து வாய்ப்பெய்யுங் கேதாரமே. 4

ஊழியூழி யுணர்வார்கள் வேதத்தினொண் பொருள்களால்
வாழியெந்தை யெனவந் திறைஞ்சும் மிடமென்பரால்
மேழிதாங்கி யுழுவார்கள் போலவ்விரை தேரிய
கேழல்பூழ்தி கிளைக்க மணிசிந்துங் கேதாரமே. 5

---

*3. புரோதாயம்:- புர + உதயம் = புரோதயம், புர:- கீழ்த்திசை உதயத்திற்கு முன்னர் எனலுமாம். 'நீராண்ட புரோதாயம் ஆடப்பெற்றேம்' புரோதயம் என்பது புரோதாயம் எனப் பிழையாய் நின்றது. சிவாலிங்கம், சடாட்சரம் ஆதீனம் ஆதிபன் ஆம்பா (கண்ணும்பா ஜகதாம்பா) முதலியவற்றில் நீண்டதுபோல உதயம் - உதாயம் என்று நீண்டது பிழைவழக்கு. புரா + உத் + ஆயம் எனின், (கதிரவன்) எழுமுன் என்க. 'தாயம்' என்பதை ணமுல் ப்ரத்யயாந்தமாகக் கொள்ளின் முன்னர்க்கொடுத்து என்றுரைக்க. முனிகள் பலர் இறைஞ்சும் இடம் கேதாரம். 'சரேல் எனச் சொரிந்து' என்றிருந்ததுபோலும்.*

*4. உள்ளம் மிக்கார் - தியாகபலம் மிகுந்தவர். குதிரை முகத்தார் - கின்னரர்.* स्यात्किन्नरः किंपुरुषस्तुरङ्गवदनो मयुः। *என்பது (அமரகோசம் முதற்காண்டம், சுலோகம், 74.) ஒருகாலர்கள்:- 'கொம்பைப் பிடித்தொருக்காலர்கள் இருக்கான் மலர்தூவி' 7, 78, 3. பிரமதகணத்தவருள் ஒருவகையர் என்னும் பவிடிய புராணக்கூற்று இங்குப் பொருந்துமோ?*

*5. ஊழிஊழி உணர்வார்கள். புழுதியின் மரூஉ பூழ்தி. (பொழுது - போழ்து), கிளைக்க - கிண்ட.*

நீறுபூசி நிலத்துண்டு நீர்மூழ்கிநீள்வரைதன்மேல்
தேறுசிந்தை யுடையார்கள் சேரும் மிடமென்பரால்
ஏறிமாவின் கனியும்பலாவின் னிருஞ்சுளைகளும்
கீறிநாளும் முசுக்கிளையோ டுண்டுகளுங் கேதாரமே. 6

மடந்தைபாகத் தடக்கிம் மறையோதி வானோர்தொழத்
தொடர்ந்தநம்மேல் வினைதீர்க்க நின்றார்க் கிடமென்பரால்
உடைந்தகாற்றுக் குயர்வேங்கை பூத்துதிரக்கல்லறைகண்மேல்
கிடந்தவேங்கை சினமாமுகஞ் செய்யுங் கேதாரமே. 7

அரவமுந்நீ ரணியிலங்கைக் கோனையருவரைதனால்
வெருவவூன்றி விரலா லடர்த்தார்க் கிடமென்பரால்
குரவங்கோங்கங் குளிர்பிண்டி ஞாழல் சுரபுன்னைமேல்
கிரமமாக வரிவண்டு பண்செய்யுங் கேதாரமே. 8

ஆழ்ந்துகாணா ருயர்ந்தெய்தகில்லா ரலமந்தவர்
தாழ்ந்துதந்தம் முடிசாய நின்றார்க் கிடமென்பரால்
வீழ்ந்துசெற்றுந் நிழற்கிறங்கும் வேழத்தின் வெண்மருப்பினைக்
கீழ்ந்துசிங்கங் குருகுண்ண முத்துதிருங் கேதாரமே. 9

---

6. தாபதரொழுக்கம் முதலீரடிகளில் குறிக்கப்பட்டது. தேறுசிந்தை - தெளிந்த உள்ளம். மாமரத்தில் ஏறிப் பழங்களையும் பலாவைக் கீறிச் சுளைகளையும் உண்டு திரிவன குரங்கினங்கள்.

7. சிவபிரான், மங்கைபங்கராகியும் வேதாகமங்களை அருளியும் உயிர்களின் வினைகளைத் தீர்க்கின்ற உண்மை முன்னீரடிகளில் உணர்த்தப்பட்டது. 'ஆரணம் ஆகமங்கள் அருளினால் உருவுகொண்டு காரணன் அருளானாகில் கதிப்பவர் இல்லை ஆகும்' என்பது சிவாகம வசநம். காற்றடிக்கப் பூத்த வேங்கைப் பூக்கள் கற்பாறைகளின்மேல் உதிர்ந்து கிடந்தன. வேங்கை கண்டு பிறிதொரு வேங்கை எனச் சினந்தது.

8. அரவம் - முழக்கம். வரை - மலை. குரவம் - குராமரம். பிண்டி - அசோகம். கிரமம் - முறை.

9. ஆழ்ந்துகாணார் - பன்றியுருக்கொண்டு மண் இடந்தும் காணாத திருமால். உயர்ந்து எய்தகில்லார் - அன்னப்புள் வடிவு

கடுக்கடின்று கழிமீன் கவர்வார்கண் மாசுடம்பினர்
இடுக்கணுய்ப்பா ரவரெய்த வொண்ணு விடமென்பரால்
அடுக்கநின்றவ் வறவுரைகள் கேட்டாங் கவர்வினைகளைக்
கெடுக்கநின்ற பெருமா னுறைகின்ற கேதாரமே. 10

வாய்ந்தசெந்நெல் விளைகழனி மல்குழ்வயற் காழியான்
ஏய்ந்தநீர்க்கோட் டிமையோ ருறைகின்ற கேதாரத்தை
ஆய்ந்துசொன்ன வருந்தமிழ்கள் பத்தும்இசை வல்லவர்
வேந்தராகி யுலகாண்டு வீடுகதி பெறுவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

கொண்டு விண்பறந்தும் காணுத அயன், தாழ்ந்து தம்தம் முடிசாய நின்றவர் சிவபிரான், சாய்ந்தவர் - அயனும் அரியும். சிங்கம் யானைமேல் வீழ்ந்து அழித்து மருப்பைப் பிளந்து உண்ணுகின்றுழி முத்துக்கள் உதிரும். குருகு - குட்டி.

10. கடுக்கள் தின்று-துவர்க்காய்கள் தின்று. கழிமீன்கள் கவர்வார்கள் என்றதில் அவர் புலைமை குறிக்கப்பட்டது. இடுக்கண் - (இடுங்குகண்) துன்பம்,

11. ஏய்ந்த நீர்க்கோட்டு இமையோர் உறைகின்ற கேதாரம் என்றதில், கேதாரத்தை வழிபடும் இமையவர் அவ்வாறு திங்களும் உறைகின்ற இடம் நீர்க்கோடு என்பது குறிக்கப் பட்டது. வீடுகதி - வீட்டிற்குரிய நெறி. வீடும் (பாசநீக்கம்) கதியும் (சிவப்பேறு) என உம்மைத் தொகையுமாம்.

---

கள்ளம் பொழில்நனி பள்ளித் தடங்கட மாக்கிஅஃதே
வெள்ளம் பணிசெய்த லாக்கிய வித்தகன் வெண்குருகுப்
புள்ளொண் தவளப் புரிசங்கொ டாலக் கயல்உகளத்
தள்ளந் தடம்புனற் சண்பையர்காதலன் சம்பந்தனே.

—திருச்சண்பை விருத்தம் 4

## 115 திருப்புகலூர்

### 251 பதிகவரலாறு

'ஓதாது ஞானமெல்லாம் உணர்ந்தார்' ஆகிய சண்பை வேந்தர், திருப்புகலூர்த் திருத்தொண்டரொடும் செம்மை முருகனூர் எதிர்கொள்ளத் திருக்கோயிலை எய்தி, உள்புகுந்து, தாழ்ந்து, விழுந்து, எழுந்து, நெக்குருகும் சிந்தையில் அன்பு பொங்கவும் கண்மலரில் நீரருவி செய்யவும் சார்த்திய தமிழ்த் தொடைமாலையுள் ஒன்று இத்திருப்பதிகம்.

பண் - செவ்வழி

திருச்சிற்றம்பலம்

வெங்கள்விம்மு குழலிளைய ராடவ்வெறி விரவுநீர்ப்
பொங்குசெங்கட் கருங்கயல்கள் பாயும் புகலூர்தனுள்
திங்கள்சூடித் திரிபுர மொரம்பா லெரியூட்டிய
எங்கள்பெம்மா னடிபரவ நாளும்மிடர் கழியுமே. 1

வாழ்ந்தநாளும் மினிவாழு நாளும்மிவை யறிதிரேல்
வீழ்ந்தநாளெம் பெருமானை யேத்தாவிதி யில்லிர்காள்
போழ்ந்ததிங்கட் புரிசடையி னன்றன் புகலூரையே
சூழ்ந்தவுள்ளம் முடையீர்க ளுங்கடுயர் தீருமே. 2

---

1. குழலில் மலரின் தேன் இருத்தலால், 'வெங்கள் விம்மு குழல்' எனப்பட்டது. செங்கட் கருங்கயல்; திரிபுரம் ஓரம்பு:- முரண்டொடை. நாளும் பரவ இடர்கழியும்.

2. உடம்பொடு உயிர்வாழ்வின் இறந்த காலத்தையும் அறிவீர்எனில்:- 'ஆர் அறிவார் சாநாளும் வாழ்நாளும்' 1. 41. 3. எம்பெருமானை ஏத்தாத நாள் வாழ்ந்த நாளாகா. 'நின் திரு வருளே பேசின் அல்லால் பேசாத நாளெல்லாம் பிறவாநாளே' 6. 47. 10. சூழ்ந்த - ஆராய்ந்த.

மடையினெய்தல் கருங்குவளை செய்யம் மலர்த்தாமரை
புடைகொள்செந்நெல் விளைகழனி மல்கும் புகலூர்தனுள்
தொடைகொள்கொன்றை புனைந்தானோர் பாகம் மதிசூடியை
அடையவல்லவ ரமருலக மாளப் பெறுவார்களே. 3

பூவுந்நீரும் பலியுஞ் சுமந்து புகலூரரையே
நாவினாலே நவின்றேத்த லோவார்செவித் துளைகளால்
யாவுங்கேளா ரவன்பெருமை யல்லா லடியார்கடாம்
ஓவுநாளு முணர்வொழிந்த நாளென்றுளங் கொள்ளவே. 4

அன்னங்கன்னிப் பெடைபுல்கி யொல்கியணி நடையவாய்ப்
பொன்னங்காஞ்சி மலர்ச்சின்ன மாலும் புகலூர்தனுள்
முன்னம்மூன்று மதிலெரித்த மூர்த்திதிறங் கருதுங்கால்
இன்னரென்னப் பெரிதரிய ரேத்தச் சிறிதெளியரே. 5

குலவராகக் குலமிலரு மாகக்குணம் புகழுங்கால்
உலகினல்ல கதிபெறுவ ரேனும்மல ரூறுதேன்
புலவமெல்லாம் வெறிகமழு மந்தண் புகலூர்தனுள்
நிலவமல்கு சடையடிகள் பாதந் நினைவார்களே. 6

---

3. தொடை - மாலை. அமருலகம்:- அமரருலகம் என்பது இவ்வாறு ஆளப்பட்டது. வன்மை பேற்றிற்குக்காரணம்.

4. பலி - நிவேதநம். ஓவார் - நீங்கார். அடியார்கள் அவன் பெருமை அல்லால் செவித்துளைகளால் யாதும் கேளார். ஓவார், ஓவும் நாள் உணர்வு ஒழிந்த நாள் என்க. 'ஓவும் நாள் உணர்வு அழியும் நாள்' 7. 48. 3.

5. புல்கி - தழுவி. ஒல்கி - ஒதுங்கி. இன்னர் என்னப் பெரிது அரியர்:- 'அவன் இவன் என்று யாவர்க்கும் அறிய வொண்ணுச் செம்பொன்' 6. 85. 3. 'இவன் இறைவன் என்று எழுதிக்காட்டொணுதே' 6. 97. 10.

6. குலவர் - உயர் குலத்திற் பிறந்தவர். ஆக:- இரண்டும் வியங்கோள். குணம் - இறைவனுக்குள்ள எண்குணங்கள், பொருள்சேர்புகழ்கள். நல்லகதி.- 'நல்லகதிக்கு யாதும் ஓர் குறைவு இலை' 3. 24. 1. புலவம் - புலால் நாற்றம் உடையவை. நிலவம் - பிறை.

ஆணும்பெண்ணும் மெனநிற்ப ரேனும்மர வாரமாப்
பூணுமேனும் புகலூர்தனக் கோர்பொரு ளாயினன்
ஊணுமூரா ரிடுபிச்சை யேற்றுண்டுடை கோவணம்
பேணுமேலும் பிரானென்ப ராலெம் பெருமானையே. 7

உய்யவேண்டில் லெழுபோத நெஞ்சேயுய ரிலங்கைக்கோன்
கைகளொல்கக் கருவரை யெடுத்தானை யோர்விரலினால்
செய்கைதோன்றச் சிதைத்தருள வல்லசிவன் மேயபூம்
பொய்கைசூழ்ந்த புகலூர் புகழப் பொருளாகுமே. 8

நேமியானும் முகநான் குடையந்நெறி யண்ணலும்
ஆமிதென்று தகைந்தேத்தப் போயாரழ லாயினன்
சாமிதாதை சரணாகு மென்றுதலை சாய்மினோ
பூமியெல்லாம் புகழ்செல்வ மல்கும் புகலூரையே. 9

வேர்த்தமெய்ய ருருவத் துடைவிட் டுழல்வார்களும்
போர்த்தகூறைப் போதிநீழ லாரும் புகலூர்தனுள்
தீர்த்தமெல்லாஞ் சடைக்கரந்த தேவன்றிறங் கருதுங்கால்
ஓர்த்துமெய்யென் றுணராது பாதந் தொழுதுய்ம்மினே. 10

---

*7. ஊணும் ஊரார் இடுகின்ற பிச்சையுண்டி. உடையும் கோவணம், பிச்சையைப்பேணும் (-விரும்பும்). கோவணத்தைப் பேணும். எம்பெருமானையே பிரான் என்பர்.*

*8. நெஞ்சே! உய்யவேண்டுவையாயின் எழு. போத:- புகுத என்பதன் மரூஉ. ஒல்க - தளர. புகழ்ந்தால் மெய்ப்பொருள் கிட்டும்.*

*9. நேமியான் - சக்கிராயுதம் ஏந்திய திருமால், நான்கு முகமுடைய நெறியண்ணல் எனமாறுக. ஆம் இது என்று தகைந்து - மேலிடம் ஆகும் கீழிடமாகும் இ(றைவனது இ)ந் நிலை என்று கூறுபடுத்தி. சாமி - முருகன். புகழ் செல்வம்:- வினைத்தொகை. உம்மைத் தொகையும் ஆம்.*

*10. கூறை - ஆடை. போதி - அரசமரம். தீர்த்தம் - கங்கை. கரந்த - மறைத்த. ஓர்த்து - ஆராய்ந்து.*

புந்தியார்ந்த பெரியோர்க ளேத்தும் புகலூர்தனுள்
வெந்தசாம்பற் பொடிப்பூச வல்லவிடை யூர்தியை
அந்தமில்லா வனலாட லானையணி ஞானசம்
பந்தன்சொன்ன தமிழ்பாடி யாடக்கெடும் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. புந்தி - அறிவு. அந்தம் - முடிவு, முடிவின்மை இறைவனுக்குரியது. 2. 117. 11. தமிழ் - இத்திருப்பதிகம் பாடி ஆடினால் பாவம் கெடும்.

---

ஆறதே றுஞ்சடை யான்அருள் மேவ அவனியர்க்கு
வீறதே றுந்தமி ழால்வழி கண்டவன் மென்கிளிமாந்
தேறல்கோ தித்தூ று சண்பகந் தாவிச் செழுங்கமுகின்
தாறதே றும்பொழிற் சண்பையர் காவலன் சம்பந்தனே.

—திருச்சண்பை விருத்தம் 5

அந்தமுந் தும்பிற வித்துயர் தீர அரனடிக்கே
பந்தமுந் துந்தமிழ் செய்த பராபரன் பைந்தடத்தேன்
வந்துமுந் திநந்த முத்தங் கொடுப்ப வயற்கயலே
சந்தமுந் தும்பொழிற் சண்பையர் காவலன் சம்பந்தனே.

—திருச்சண்பை விருத்தம் 6

புண்டலைக்குஞ்சரப் போர்வையர் கோயிற் புகஅடைக்கும்
ஒண்டலைத் தண்டமிழ்க்குண்டா சனியும்பர்ப் பம்பிமின்னுங்
கொண்டலைக்கண்டுவண்டாடப்பெடையொடுங்கொக்குறங்குந்
தண்டலைக் குண்டகழ்ச் சண்பையர் காவலன் சம்பந்தனே.

—திருச்சண்பை விருத்தம் 7

# 116 திருநாகைக்காரோணம்

## 252 பதிகவரலாறு

அவயந்தியைப் பணிந்த பாலறுவாயர், திருத்தொண்டர் குழாத்தொடும், கற்றவர் வாழ் கடல் நாகைக்காரோணத்துக் கண்ணுதலைக் கைதொழுது பாடிய சொற்றமிழ் மாலைகளுள் ஒன்று இத்திருப்பதிகம்.

பண் - செவ்வழி

திருச்சிற்றம்பலம்

கூனற்றிங்கட் குறுங்கண்ணி கான்றநெடு வெண்ணிலா
ஏனற்பூத்தம் மராங்கோதை யோடும் விராவுஞ்சடை
வானநாட னமரர்பெரு மாற்கிட மாவது
கானல்வேலி கழிசூழ் கடனாகைக் காரோணமே. 1

விலங்கலொன்று சிலையாமதின் மூன்றுடன் வீட்டினான்
இலங்குகண்டத் தெழிலாமை பூண்டாற் கிடமாவது
மலங்கியோங்கி வருவெண்டிரை மல்கிய மால்கடல்
கலங்கலோதங் கழிசூழ் கடனாகைக் காரோணமே. 2

வெறிகொளாருங் கடற்கைதை நெய்தல் விரிபூம்பொழில்
முறிகொண்ஞாழன் முடப்புன்னைமுல்லை முகைவெண்மலர்
நறைகொள்கொன்றை நயந்தோங்கு நாதற்கிடமாவது
கறைகொளோதங் கழிசூழ் கடனாகைக் காரோணமே. 3

---

*1. கூனல்திங்கட் குறுங்கண்ணி:- வளைந்த பிறையாகிய சிறியதலைமாலை. ஏனல் - தினை. மராங்கோதை - கடம்பலர் மாலை. 'வானநாடன்; அமரர் பெருமான்' 3. 118. 4. 7. 25. 2. 81. 1. 5. 39. 3.*

2. விலங்கல் - மேருமலை. ஆமை கழுத்திற் பூண்டான். மலங்கி - அலைந்து.

3. வெறி - மணம். கைதை - தாழை. முறி - தளிர். ஞாழல் - மரம், கோங்கு. நறை - தேன். கறை - கறுப்பு.

வண்டுபாட வளர்கொன்றை மாலைமதி யோடுடன்
கொண்டகோலங் குளிர்கங்கை தங்குங்குருள் குஞ்சியுள்
உண்டுபோலும் மெனவைத்து கந்தவொரு வற்கிடம்
கண்டல்வேலி கழிசூழ் கடனாகைக் காரோணமே. 4

வார்கொள்கோலம் முலைமங்கை நல்லார்மகிழ்ந் தேத்தவே
நீர்கொள்கோலச் சடைநெடு வெண்டிங்க ணிகழ்வெய்தவே
போர்கொள்சூலப் படைபுல்கு கையார்க்கிடமாவது
கார்கொளோதங் கழிசூழ் கடனாகைக் காரோணமே. 5

விடையதேறிவ் விடவர வசைத்த விகிர்தரவர்
படைகொள்பூதம் பலபாட வாடும்பரம ரவர்
உடைகொள் வேங்கை யுரிதோ லுடையார்க் கிடமாவது
கடைகொள் செல்வங் கழிசூழ் கடனாகைக் காரோணமே. 6

பொய்துவாழ்வார் மனம்பாழ் படுக்கும் மலர்ப்பூசனை
செய்துவாழ்வார் சிவன்சேவடிக்கே செலுஞ் சிந்தையார்
எய்தவாழ்வா ரெழினக்க ரெம்மாற் கிடமாவது
கைதல்வேலி கழிசூழ் கடனாகைக் காரோணமே. 7

---

4. மாலைமதி:- 'மாசில்வீணையும் மாலைமதியமும்' கோலம் - அழகு. சிவவேடம். குருள்குஞ்சி - குருண்டசடை, குருண்டவார் குழற்சடையுடைக்குழகன் 2. 105. 11.

5. வார் - கச்சு. நிகழ்வு - விளக்கம். கார்-மேகம். ஏத்தவும் எய்தவும் புல்குகையார்க்கு இடம் காரோணம் என்க. 'பரமரவர்' என்றும் பாடம்.

6. விடை ஏறி நச்சுப்பாம்பை அரைக்கச்சாகக்கட்டிய விகிர்தர். பூதங்கள் பாட ஆடும் பரமர்.

7. பொய்து வாழ்வு - பொள்ளலுடையதாகிய வாழ்வு. ஆர்-பொருந்திய. வாழ்வாரும் சிந்தையாரும் எய்த வாழ்வாராகிய நக்கர். பொய்து வாழ்வார் மனத்தைப் பாழ்படுக்கும் பூசனை என்றலும் பொருந்தும். பூசனை செய்து வாழ்வாரும் சிவன் சேவடிக்கே செலுஞ் சிந்தையாரும் எய்த வாழ்பவர் நக்கர். கைதல் (-தாழை) என்பது அருஞ்சொல். கைதல் சூழ்கழிக் கானல்' 3. 66. 2.

பத்திரட்டி திரடோ ளுடையான் முடிபத்திற
வத்திரட்டி விரலா லடர்த்தார்க் கிடமாவது
மைத்திரட்டிவ் வருவெண்டிரை மல்கிய மால்கடல்
கத்திரட்டுங் கழிசூழ் கடனாகைக் காரோணமே. 8

நல்லபோதி லுறைவானு மாலும் நடுக்கத்தினால்
அல்லராவ ரெனநின்ற பெம்மாற் கிடமாவது
மல்லலோங்கிவ் வருவெண்டிரை மல்கிய மால்கடல்
கல்லலோதங் கழிசூழ் கடனாகைக் காரோணமே. 9

உயர்ந்தபோதின் னுருவத் துடைவிட் டுழல்வார்களும்
பெயர்ந்தமண்டை யிடுபிண்ட மாவுண் டுழல்வார்களும்
நயந்துகாணா வகைநின்ற நாதர்க் கிடமாவது
கயங்கொளோதங் கழிசூழ் கடனாகைக் காரோணமே. 10

மல்குதண்பூம் புனல்வாய்ந் தொழுகும்வயற் காழியான்
நல்லகேள்வித் தமிழ்ஞான சம்பந்தனல்லார்கண்முன்
வல்லவாறே புனைந்தேத்துங் காரோணத்து வண்டமிழ்
சொல்லுவார்க்கும் மிவைகேட்பவர்க்குந்துயரில்லையே. 11

திருச்சிற்றம்பலம்

---

*8.* பத்து இரட்டிதோள் - இருபது தோள்கள். அத்து - சிவப்பு. மை திரட்டிவரு வெள் திரை எனப் பிரிக்க. கத்து - ஒலி.

*9.* இவர் சிவபெருமான் அல்லார் எனவும் இவரே சிவபரஞ்சுடர் ஆவார் எனவும் ஐயுற நின்ற பெருமான். மல்லல் - வளம், கல்லல் - (சகரர்) தோண்டுதல்.

*10.* சமணரும் தேரரும் இங்குக் குறிக்கப்பட்டவாறு காண்க. கயம் - ஆழம், நீர், பெருமை. 'பியர்ந்த' பி. பே.

*11.* திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருநாகைக் காரோணத்தில், நல்லோர்கள் முன்னர், இத்திருப்பதிகத்தைப் பாடியருளிய உண்மை குறிக்கப்பட்டது.

# 117 திருவிரும்பைமாகாளம்

## 254 பதிகவரலாறு

பிள்ளையார் திருவக்கரையை அணைந்து, முகங்களொடு திகழும் மூர்த்தியை வணங்கிச்சென்று, திருவிரும்பையுள்ளே மாகாளத்தைப் போற்றி அச்செக்கர் மேனியாரைப் பாடியருளியது இத்திருப்பதிகம்.

### பண் - செவ்வழி

திருச்சிற்றம்பலம்

மண்டுகங்கை சடையிற் கரந்தும் மதிசூடிமான்
கொண்டகையாற் புரமுன்றெரித்த குழகன்னிடம்
எண்டிசையும் புகழ்போய் விளங்கும் மிரும்பைதனுள்
வண்டுகீதம் முரல்பொழில் சுலாய்நின்ற மாகாளமே. 1

வேதவித்தாய் வெள்ளை நீறு பூசி வினையாயின
கோதுவித்தா நீறெழக் கொடிமா மதிலாயின
ஏதவித்தா யினதீர்க் கும்மிடம் மிரும்பைதனுள்
மாதவத்தோர் மறையோர் தொழநின்ற மாகாளமே. 2

---

1. கங்கைச்சடையன், பிறைசூடி, மானேந்தி, முப்புரமெரித்த முதல்வன். திசையெலாம் பரவிய புகழுடைய தலம். 'மான்' உமாதேவியுமாம். 'விற்ருங்கி யகரம் வேல்நெடுங்கண்ணி வியன்கரமே' (அப்பர்) 'இசையால் திசைபோயது', சுலாய் - சுற்றி. ஊர் இரும்பை; கோயில் மாகாளம்.

2. மாதவத்தோரும் மறையோரும் தொழ நின்ற சிறப்புடையது மாகாளம். சிவபிரான் வேதவித்து, வெண்ணீறுடி, வினையெலாம் நீறுபட அழித்தவன். கோதுவித்தா என்றது பிழை. கோதவித்தாய் என்றிருத்தல் வேண்டும். ஏதவித்து - குற்றத்திற்கு விதை.

வெந்தநீறும் மெலும்பும் மணிந்த விடையூர்தியான்
எந்தைபெம்மா னிடமெழில்கொள்சோலை யிரும்பைதனுள்
கந்தமாய பலவின் கனிகள் கமழும்பொழில்
மந்தியேறிக் கொணர்ந்துண் டுகள்கின்ற மாகாளமே. 3

நஞ்சுகண்டத் தடக்கிந் நடுங்கும் மலையான்மகள்
அஞ்சவேழ முரித்த பெருமா னமரும்மிடம்
எஞ்சலில்லாப் புகழ்போய் விளங்கும் மிரும்பைதனுள்
மஞ்சிலோங்கும் பொழில்சூழ்ந் தழகாய மாகாளமே. 4

பூசுமாசில் பொடியான் விடையான் பொருப்பான்மகள்
கூசவானை யுரித்தபெரு மான்குறை வெண்மதி
ஈசனெங்கள் ளிறைவன் னிடம்போ லிரும்பைதனுள்
மாசிலோர்கண் மலர்கொண் டணிகின்ற மாகாளமே. 5

குறைவதாய குளிர்திங்கள் சூடிக் குனித்தான்வினை
பறைவதாக்கும் பரமன் பகவன் பரந்தசடை
இறைவனெங்கள் பெருமா னிடம்போ லிரும்பைதனுள்
மறைகள் வல்லார் வணங்கித் தொழுகின்ற மாகாளமே. 6

---

3. பலவின்கனிகள் - பலாப்பழங்கள். பல இனிய கனிகள் எனலும் பொருந்தும். மந்திகள் கொண்டுவந்து உண்டு திரியும் மாகாளம்.

4. மலையான் - இமாசலராசன். வேழம் - யானை. எஞ்சல் - குறைதல். மஞ்சு - மேகம்.

5. பூசும்பொடி, மாசுஇல்பொடி, பொருப்பான் - இமாசல ராசன், தேவியார் கூசுமாறு ஆனையை உரித்தான். மாசு இலோர்கள் - மும்மலமாகிய குற்றம் இல்லாத சைவமறையோர் அடியார் முதலியோர்கள், பா. 2. 6. 10 பார்க்க.

6. குனித்தான் - கூத்தாடிய பிரான். பறைவது - அழிவது. பரமன் முன்னைப்பழம்பொருட்கும் முன்னைப்பழம்பொருள். பகவன் - சாட்குண்யன்.

பொங்குசெங்கண் ணரவும் மதியும் புரிபுன்சடைத்
தங்கவைத்த பெருமானென நின்றவர் தாழ்விடம்
எங்குமிச்சை யமர்ந்தா னிடம்போ லிரும்பைதனுள்
மங்குரேயும் பொழில்சூழ்ந் தழகாய மாகாளமே. 7

நட்டத்தோடு நரியாடு கானத்தெரி யாடுவான்
அட்டமூர்த்தி யழல்போ லுருவன் னழகாகவே
இட்டமாக விருக்கும் மிடம்போ லிரும்பைதனுள்
வட்டஞ்சூழ்ந்து பணிவார் பிணிதீர்க்கு மாகாளமே. 8

அட்டகாலன் றனைவவ் வினைவவ் வரக்கன்முடி
எட்டுமற்றும் மிருபத்திரண் டும்மிற வூன்றினன்
இட்டமாக விருப்பா னவன்போ லிரும்பைதனுள்
மட்டுவார்ந்த பொழில்சூழ்ந் தெழிலாரு மாகாளமே. 9

அரவமார்த்தன் றனலங்கை யேந்தி யடியும்முடி
பிரமன்மாலும் மறியாமை நின்ற பெரியோனிடம்
குரவமாரும் பொழிற்குயில்கள் சேரும் மிரும்பைதனுள்
மருவிவானோர் மறையோர் தொழுகின்ற மாகாளமே. 10

---

7. சடையில் பாம்பும் பிறையும் பகையின்றி வாழுவைத்த பெருமான். 'பொங்குசெங்கண்ணரவு' என்றதால், விளங்கும் பெருங்கோபம் சடையின்கண் தணிந்தது. தாழ்வு - எழுந் தருளுதல்.

8. நட்டம் - திருக்கூத்து. அட்டமூர்த்தி - எட்டுருவத்தன். மண், நீர், அனல், வளி, விண். இருசுடர், வேள்வித்தலைவன். இட்டம் - விருப்பம், வட்டம் சூழ்தல் - வலம் வரல்.

9. அட்ட - மார்க்கண்டேய முனிவரொடு போராடிய. எட்டும் இருபத்திரண்டும் - பத்துத்தலையும் இருபது கையுமாகிய முப்பதும். மட்டு - தேன்.

10. ஆர்த்து - கட்டி, அனல் - தீ. குரவம் - குராமரம். வானோரும் மறையோரும் தொழுகின்ற தலம்.

எந்தையெம்மா னிடமெழில் கொள்சோலை யிரும்பைதனுள்
மந்தமாய பொழில்சூழ்ந் தழகாரு மாகாளத்தில்
அந்தமில்லா வனலாடு வானையணி ஞானசம்
பந்தன்சொன்ன தமிழ்பாட வல்லார் பழிபோகுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

*11.* எழில்கொள்சோலை இரும்பை எனத் திருத்தலத்தையும் பொழில்சூழ்ந்து அழகு ஆரும் மாகாளம் எனத் திருக்கோயிலையும் குறித்ததால் அவ்விரண்டையும் சுற்றிக்கிடக்கும் சோலைவளம் குறிக்கப்பட்டது. (2. 115. 11) 'மந்தமாய பொழில்' 'மந்தமாரும்பொழில்' 2. 117. 11.

---

எண்டலைக் குந்தலை வன்கழல் சூடியென் உள்ளம்வெள்ளங்
கண்டலைப் பத்தன் கழல்தந்த வன்கதிர் முத்தம்நத்தம்
விண்டலைப் பத்தியி லோடும் விரவி மிளிர்பவளந்
தண்டலைக் குங்கடற் சண்பையர் காவலன் சம்பந்தனே.

—திருச்சண்பை விருத்தம் 8

ஆறுமண் டப்பண்டு செஞ்சொல் நடாத்தி யமண்முழுதும்
பாறுமண் டக்கண்ட சைவ சிகாமணி பைந்தடத்த
சேறுமண் டச்சங்கு செங்கயல் தேமாங் கனிசிதறிச்
சாறுமண் டும்வயற் சண்பையர் காவலன் சம்பந்தனே.

—திருச்சண்பை விருத்தம் 9

விடந்திளைக் கும்அர வல்குல்மென் கூந்தல் பெருமணத்தின்
வடந்திளைக் குங்கொங்கை புல்கிய மன்மதன் வண்கதலிக்
கடந்திளைத் துக்கமு நீர்புல்கி ஒல்கிக் கரும்புரிஞ்சித்
தடந்திளைக் கும்புனற் சண்பையர் காவலன் சம்பந்தனே.

—திருச்சண்பை விருத்தம் 10

# 118 திருத்திலதைப்பதி

## 254 பதிகவரலாறு

சொல் வேந்தரும் சண்பை நல்வேந்தரும் திருவீழிமிழலை பேணுபெருந்துறை ஆகிய சிவதலங்களை வழிபட்ட காலத்தில் திலதைப்பதியை அடைந்து நிலாமுற்றத்தில் இறைவனைப் பணிந்து பாடியது இத்திருப்பதிகம்.

பண் - செவ்வழி

திருச்சிற்றம்பலம்

பொடிகள்பூசிப் பலதொண்டர் கூடிப் புலர்காலையே
அடிகளாரத் தொழுதேத்த நின்ற வழகன்னிடம்
கொடிகளோங்கிக் குலவும் விழவார் திலதைப்பதி
வடிகொள்சோலை மலர் மணங்கமழும் மதிமுத்தமே. 1

தொண்டர்மிண்டிப் புகைவிம்மு சாந்துங்கமழ் துணையலும்
கொண்டுகண்டார் குறிப்புணர நின்ற குழகன்னிடம்
தெண்டிரைப்பூம் புனலரிசில் சூழ்ந்த திலதைப்பதி
வண்டுகெண்டுற் றிசைபயிலுஞ் சோலை மதிமுத்தமே 2

---

1. தலம்:- திலதைப்பதி, கோயில்:- மதிமுத்தம். அடியார்கள் பலர் வைகறையிலே நியமங்களை முடித்துத் திருநீற்றுப் பொலிவுடன் திருக்கோயில் வழிபாடு செய்த பண்டைய உண்மை நிகழ்ச்சி குறிக்கப்பட்டது. ஆரத்தொழுதல்:- 'தலையாரக் கும்பிட்டு' 'வாயாரப்பாடுந் தொண்டரினத்தகத் தான்' 'நாவார நம்பனையே பாடப் பெற்றோம்.' 'கையாரத் தொழுதருவி கண்ணாரச் சொரிந்தாலும்' என்பவை முதலிய வற்றால் செய்வன திருந்தவும் நிறையவும் செய்தல் வேண்டும் என்று வற்புறுத்தல் காண்க.

2. மிண்டி - நெருங்கி. முத்தம் - முற்றம்; மரூஉ. 'நிலா முற்றம்' 'சத்திமுற்றம்'. கண்டார் - தரிசனம் புரிந்த அடியவர். குறிப்பு - கருத்து. அரிசில் ஆற்றங்கரையில் உள்ளது இத்தலம்.

அடலுளேறுய்த் துகந்தா னடியா ரமரர்தொழக்
கடலுணஞ்ச மமுதாக வுண்ட கடவுள்ளிடம்
திடலடங்கச் செழுங்கழனி சூழ்ந்த திலதைப்பதி
மடலுள்வாழைக் கனிதேன் பிலிற்றும் மதிமுத்தமே. 3

கங்கைதிங்கள் வன்னிதுன் னெருக்கின்னெடு கூவிளம்
வெங்கணகம் விரிசடையில் வைத்த விகிர்தன்னிடம்
செங்கயல்பாய் புனலரிசில் சூழ்ந்த திலதைப்பதி
மங்குரேயும் பொழில்சூழ்ந் தழகார் மதிமுத்தமே. 4

புரவியேழும் மணிபூண் டியங்குங்கொடித் தேரினன்
பரவிநின்று வழிபாடு செய்யும்பர மேட்டியூர்
விரவிஞாழல் விரிகோங்கு வேங்கைசுர புன்னைகள்
மரவமவ்வன் மலருந் திலதைம் மதிமுத்தமே. 5

விண்ணர்வேதம் விரித்தோத வல்லா ரொருபாகமும்
பெண்ணரெண்ண ரெயில் செற்றுகந்த பெருமானிடம்
தெண்ணிலாவின் னொளிதீண்டு சோலைத் திலதைப்பதி
மண்ணுளார்வந் தருள்பேண நின்றம் மதிமுத்தமே. 6

---

**3. அடல் உள் ஏறு - வெற்றியை உள்ளு (கருது) கின்ற விடை, வலிமைக்கு ஒப்புறுத்த உள்ளுகின்ற விடையையும் ஆம். 'ஏறுபோற்பீடுநடை'. பிலிற்றும் - கொப்புளிக்கும்.**

**4. திருச்சடையில் உள்ளன என்று கங்கை முதலிய ஆறு கூறப்பட்டன. மங்குல், மேகம்.**

**5. சூரியன் கதிரில் உள்ள ஏழுநிறமும் ஏழு குதிரைகளாக உருவகிக்கப்பட்டன. மரவம் - குங்குமமரம். சூரியன் பூசித்த தலம் என்பது முற்பகுதியால் விளங்கும்.**

**6. விண்ணரும் வல்லாரும் பெண்ணரும் ஆகிய பெருமான்.**

ஆறுசூடி யடையார்புரஞ் செற்றவர் பொற்றொடி
கூறுசேரும் முருவர்க் கிடமாவது கூறுங்கால்
தேறலாரும் பொழில் சூழ்ந்தழகார் திலதைப்பதி
மாறிலாவண் புனலரிசில் சூழ்ந்த மதிமுத்தமே. 7

கடுத்துவந்த கனன்மேனி யினன்கரு வரைதனை
எடுத்தவன்றன் முடிதோ ளடர்ந்தார்க் கிடமாவது
புடைக்கொள்பூகத் திளம்பாளை புல்கும் மதுப்பாயவாய்
மடுத்துமந்தி யுகளுந் திலதைம் மதிமுத்தமே. 8

படங்கொள்நாகத் தணையானும் பைந்தா மரையின்மிசை
இடங்கொள்நால்வே தனுமேத்த நின்ற விறைவன்னிடம்
திடங்கொள்நாவி னிசைதொண்டர் பாடுந் திலதைப்பதி
மடங்கல்வந்து வழிபாடு செய்யும் மதிமுத்தமே. 9

புத்தர்தேரர் பொறியில் சமணர்களும் வீறிலாப்
பித்தர்சொன்னம் மொழிகேட்கி லாத பெருமானிடம்
பத்தர்சித்தர் பணிவுற் றிறைஞ்சுந் திலதைப்பதி
மத்தயானை வழிபாடு செய்யும் மதிமுத்தமே. 10

---

7. சூடி:- பெயர். அடையார் - பகைவர். செற்றவர் - அழித்தவர். 'பொற்றொடி' வேற்றுமைத் தொகை நிலைக் களத்துப் பிறந்த அன்மொழித் தொகை. தேறல் - தேன். பொற்றொடி நாயகி என்னும் தேவியார் திருப்பெயரில் தொடி என்பது கொடி என்றாயிற்றோ?

8. கனல் - தீ. பூகம் - பாக்கு மரம். மது - கள். மடுத்து - உண்டு.

9. மடங்கல்:- இயமன், இடி, சிங்கம் என்பவற்றுள் ஒன்று பூசித்த தலமாயிருந்தால்தான் மடங்கல் வந்து வழிபாடு செய்யும் மதிமுத்தம் என்றிருக்கலாம்.

10. பொறி - அறிவு. வீறு இல்லாத பித்தர். பத்தர் - அன்பர். சித்தர் - அறிஞர். யானை வழிபட்டதலம்.

மந்தமாரும் பொழில் சூழ்தில்லைதைம் மதிமுத்தமேற்
கந்தமாருங் கடற்காழி யுளான் றமிழ்ஞானசம்
பந்தன்மாலை பழிதீர நின்றேத்த வல்லார்கள்போய்ச்
சிந்தைசெய்வார் சிவன்சேவடி சேர்வது திண்ணமே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. மந்தம்:- 'மந்தமாய பொழில்' 2, 117, 11. கந்தம் - மணம், புலால் நாற்றம். 'பழிதீர நின்று மாலை ஏத்த'.

---

பாலித்த கொங்கு குவளைகள் எம்பொழில் கீழ்ப்பரந்து
வாலிப்ப வாறதே றுங்கழ னிச்சண்பை அந்தமுந்து
மேலிட்ட புண்டலைக் குஞ்சரத் தெண்டலைக் குந்தலைவன்
கோலிட்ட வாறு விடந்திளைக் கும்அர வல்குலையே.

—திருச்சண்பை விருத்தம் 11

திருச்சிற்றம்பலம்

# 119 திருநாகேச்சுரம்

## 255 பதிக வரலாறு

'திருஞானசம்பந்தர் திருக்குடமூக்கினை அணைந்து திருக்கீழ்க் கோட்டத்திருந்த வான் பொருளினை வணங்கி, காரோணத்தாரமுதைப் பணிந்தேத்தி, திருநாகேச்சுரத்து அமர்ந்த செங்கனகத் தனிக்குன்றைப்பாடி அம் **மாநாகம் அருச்சித்த மலர்க்கமலத்தாள்** வணங்கி நாளும் பரவிய வற்றுள் ஒன்று இத்திருப்பதிகம்.

### பண் - செவ்வழி

### திருச்சிற்றம்பலம்

தழைகொள்சந் தும்மகிலும் மயிற்பீலி யுஞ்சாதியின்
பழமுமுந்திப் புனல்பாய் பழங்காவிரித் தென்கரை
நழுவில்வானோர் தொழநல்கு சீர்மல்கு நாகேச்சரத்
தழகர்பாதந் தொழுதேத்த வல்லார்க் கழகாகுமே. 1

பெண்ணொர்பாகம் மடையச் சடையிற் புனல்பேணிய
வண்ணமான பெருமான் மருவும் மிட மண்ணுளார்
நண்ணிநாளுந் தொழுதேத்தி நன்கெய்து நாகேச்சரம்
கண்ணினாற் காணவல்லா ரவர்கண் ணுடையார்களே. 2

---

1. சந்து - அகில், பீலி, சாதிப்பழம் எல்லாம் காவிரி வெள்ளத்தால் கொள்ளப்பட்டவை, நழுவு. இல் - விலகுதல் இல்லாத. அழகராதலின் வணங்க வல்லார்க்கும் அழகு அருள்கின்றார்.

2. நன்கு - சிவபுண்ணியம் முதலிய நன்மைகள். கண்ணினால் என்றது காண்டற்குக் கடவுளையே பொருளாக் கொண்ட கண் என்று அதன் சிறப்புணர்த்த.

குறவர்கொல்லைப் புனங்கொள்ளை கொண்டும் மணிகுலவுநீர்
பறவையாலப் பரக்கும் பழங்காவிரித் தென்கரை
நறவநாறும் பொழில்சூழ்ந் தழகாய நாகேச்சுரத்
திறைவர்பாதந் தொழுதேத்த வல்லார்க்கிட ரில்லையே. 3

கூசநோக்காதுமுன் சொன்ன பொய்கொடு வினைகுற்றமும்
நாசமாக்கும் மனத்தார்கள் வந்தாடு நாகேச்சுரம்
தேசமாக்குந் திருக்கோயி லாக்கொண்ட செல்வன்கழல்
நேசமாக்குந் திறத்தா ரறத்தார் நெறிப்பாலரே. 4

வம்புநாறும் மலரும்மலைப் பண்டமுங் கொண்டுநீர்
பைம்பொன்வாரிக் கொழிக்கும் பழங்காவிரித் தென்கரை
நம்பனூரு மமர்கின்ற நாகேச்சுர நண்ணுவார்
உம்பர்வானோர் தொழச் சென்றுடனாவது முண்மையே. 5

காளமேகந் நிறக்கால னோடந்தகன் கருடனும்
நீளமாய்நின் றெய்தகாமனும் பட்டன நினைவுறின்
நாளுநாத னமர்கின்ற நாகேச்சுர நண்ணுவார்
கோளுநாளுந் தீயவேனு நன்காங் குறிக்கொண்மினே. 6

---

3. ஆல - அசைய. அழகாய நாகேச்சுரம். நாகேச்சுரத்து அழகர் (பா. 1.)என்றவற்றால் தலமும் மூர்த்தியும் அழகுடைமை உணர்க.

4. கூசச்சொன்னபொய், நோக்காது சொன்னபொய். பொய்யும் வினையும் குற்றமும் நாசம் ஆக்கும் மனத்தார்கள். ஆடுதல் - தீர்த்தமாடுதல். நேசம் - அன்பு. அறத்தார் - சிவ தருமமுடையவர். நெறிப்பாலர் - வீட்டுநெறிக்கண் ஒழுகுபவர்.

5. உம்பரும் வானோரும். உடனாவது - அத்துவிதமுறுவது. ஒன்றாய் வேறாய் உடனாதல். அஃது ஈண்டு ஆன்மாச் சிவனுடனாதலை உணர்த்திற்று.

6. காளம் - கருமை, காலன் அந்தகன் என்னும் இருவரும் வெவ்வேறு ஆவர், கருடன் பட்டது:- இத்தலத்தில் ஐந்தலைப் பாம்பின் பணிகொண்டு கருடனைச் செற்ற வரலாறு குறித்தது. அடுத்த குறிப்பிற் காண்க. 'மாநாகம் அருச்சித்த மலர்க் கமலத்தாள்' (பெரிய. 2310). கோள்களும் நாள்களும் தீயன எனினும் நல்லன ஆகும்.

வேயுதிர்முத் தொடுமத்த யானை மருப்பும்விராய்ப்
பாய்புனல்வந் தலைக்கும் பழங்காவிரித் தென்கரை
ஞாயிறுந்திங் களுங்கூடி வந்தாடு நாகேச்சுரம்
மேயவன்றன் னடிபோற்றி யென்பார் வினைவீடுமே. 7

இலங்கைவேந்தன் சிரம்பத்தி ரட்டியெழிற் றோள்களும்
மலங்கிவீழம் மலையா லடர்த்தா னிடமல்கிய
நலங்கொள்சிந்தை யவர்நாடொறு நண்ணு நாகேச்சுரம்
வலங்கொள்சிந்தை யுடையா ரிடராயின மாயுமே. 8

கரியமாலும் மயனும் மடியும்முடி காண்பொணு
எரியதாகிந் நிமிர்ந்தா னமரும்மிட மீண்டுகா
விரியினீர்வந் தலைக்குங் கரைமேவு நாகேச்சுரம்
பிரிவிலாதவ் வடியார்கள் வானிற் பிரியார்களே. 9

தட்டிடுக்கி யுறிதூக்கிய கையினர் சாக்கியர்
கட்டுரைக்கும் மொழிகொள்ளலும் வெள்ளிலங் காட்டிடை
நட்டிருட்கண் ணடமாடிய நாத னாகேச்சுர
மட்டிருக்கும் மலரிட் டடிவீழ்வது வாய்மையே. 10

---

*7.* நாயிறு - சூரியன். சூரிய சந்திரர் வழிபட்ட தலம். 'சந்திரனொடு சூரியர் தாம் உடன் வந்து சீர்வழிபாடுகள் செய்தபின் ஐந்தலையரவின் பணிகொண்டருள்மைந்தர்போல் மணி நாகேச்சுரவரே' 5. 52. 4. வீடும் - அழியும்.

*8.* வீழ அடர்த்தான், சிந்தைக்கு நலம் தியாகபலம், வலம்-திருக்கோயிலைச் சூழ்தல்.

*9.* காண்பு - காட்சிக்கு. காவிரியினீர் கரையை அலைக்கும் நாகேச்சுரத்தைப் பிரியாதவர் சிவலோகத்தைப் பிரியார்.

*10.* கட்டுரைக்கும் மொழிகொள்ளலும் - கட்டிச் சொல்லும் சொற்களைக் கொள்ளாதேயுங்கள். கொள்ளல் என்னும் முன்னிலை ஒருமை ஏவல் வினையுடன் உம்மைசேர்த்துப் பன்மையேவல் வினையாக்கியவாறுணர்க. வெள்ளில் - பிணப்பாடை. நடு + இருள் = நட்டிருள்.

கந்தநாறும் புனற்காவிரித் தென்கரைக் கண்ணுதல்
நந்திசேருந் திருநாகேச் சுரத்தின் மேன்ஞானசம்
பந்தனுவிற் பனுவல் லிவைபத்தும் வல்லார்கள்போய்
எந்தையீசன் னிருக்கும் முலகெய்த வல்லார்களே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. கந்தம் - மணம். கண்ணுதல் நந்தி - சிவபிரான். உலகு - சிவலோகம்.

---

என்றும் அடியவர் உள்ளத் திருப்பன இவ்வுலகோர்
நன்று மலர்கொடு தூவித் துதிப்பன நல்லசங்கத்
தோன்றும் புலவர்கள் யாப்புக் குரியன ஒண்கலியைப்
பொன்றுங் கவுணியன் சைவ சிகாமணி பொன்னடியே.

—திருமும்மணிக்கோவை

பதிகம் பலபாடி நீடிய பிள்ளை பரசுதரற்
கதிகம் அணுக்கன் அமணர்க்குக் காலன் அவதரித்த
மதியந் தவழ்மாட மாளிகைக் காழிஎன் றுல்வணங்கார்
ஓதியம் பணைபோல் விழுவர்அந் தோசில ஊமர்களே.

—திருமும்மணிக்கோவை

நினையா தரவெய்தி மேகலை நெக்கு வளைசரிவாள்
தனையாவ வென்றின் றருளுதி யேதடஞ் சாலிவயற்
கனையா வரும்மேதி கன்றுக் கிரங்கித்தன் கால்வழிபால்
நனையா வருங்காழி மேவிய சீர்ஞான சம்பந்தனே.

—திருமும்மணிக்கோவை

# 120 திருமூக்கீச்சரம்

## 256 பதிகவரலாறு

'கற்குடி மாமலைமேல் எழுந்த கனகக் கொழுந்தினைப் போற்றி நற்றமிழ்மாலை புனைந்தருளிய ஞானசம்பந்தர், புலன் களைந்தும் செற்றவரது திருமூக்கீச்சரம் பணிந்து பாடியது இத்திருப்பதிகம்.

### பண் - செவ்வழி

### திருச்சிற்றம்பலம்

சாந்தம்வெண்ணீ றெனப்பூசி வெள்ளஞ்சடை வைத்தவர்
காந்தளாரும் விரலேழை யொடாடிய காரணம்
ஆய்ந்துகொண்டாங் கறியந் நிறைந்தாரவ ரார்கொலோ
வேந்தன்மூக்கீச் சரத்தடிகள் செய்கின்றதோர் மெய்ம்மையே. 1

வெண்டலையோர் கலனாப் பலிதேர்ந்து விரிசடைக்
கொண்டலாரும் புனல்சேர்த் துமையாளொடுங் கூட்டமா
விண்டவர்தம் மதிலெய்தபின் வேனில்வேள் வெந்தெழக்
கண்டவர் மூக்கீச்சரத் தெம்மடிகள் செய்கன்மமே. 2

---

1. வெண்ணீறு சாந்தம் எனப்பூசி 'சாந்தம் ஈதுஎன்று எம்பெருமான் அணிந்த நீறு' 1. 52. 7. காந்தள் ஆரும் விரல் - காந்தளை ஒத்த கைவிரல்கள். ஏழை - உமாதேவியார். கடவுள் நிறைவு ஆய்ந்து கொண்டறியத்தக்கது. கோச்செங்கட் சோழநாயனார் கட்டுவித்த மாடக்கோயில் ஆதலின் வேந்தன் மூக்கீச்சரம் எனப்பட்டது. இப்பதிகத்தில் வரலாறுபற்றிய உண்மைகளைக் காண்க.

2. கொண்டல் - கொள்ளுதல். காற்று, மேகம் எனல் இங்குப் பொருந்தாது. வேனில்வேள் - மன்மதன்.

மருவலார்தம் மதிலெய்ததுவும் மான்மதலையை
உருவிலாரவ் வெரியூட்டியதும் முலகுண்டதால்
செருவிலாரும் புலிசெங்கய லானையினன்செய்த
பொருவின்மூக்கீச்சரத் தெம்மடிகள் செயும்பூசலே. 3

அன்னமன்னந் நடைச்சாய லாளோ டழுகெய்தவே
மின்னையன்ன சடைக்கங்கை யாண்மேவிய காரணம்
தென்னன்கோழி யெழில்வஞ்சியு மோங்கு செங்கோலினன்
மன்னன் மூக்கீச்சரத் தடிகள் செய்கின்ற தோர்மாயமே. 4

விடமுனரவ் வழல்வாய தோர்பாம்பரை வீக்கியே
நடமுனரவ் வழலாடுவர் பேயொடு நள்ளிருள்
வடமனீடு புகழ்ப்பூழியன் றென்னவன் கோழிமன்
அடன்மன்மூக்கீச் சரத்தடிகள் செய்கின்ற தோரச்சமே. 5

---

3. மால்மதலை - மன்மதன். உருவில் ஆர - வடிவத்தில் நிறைய. புலிசெங்கயல் ஆனை :- சோழபாண்டிய சேரர்க்குரிய மூன்றும் மூவேறுயிர்களாயும் முறையே மும்மண்டலத்திலும் உள்ளனவாயும் இருத்தல் அறிக. புலிவிற் கெண்டை என்பதில் வானவரம்பனுதலின், வானிற்றூேற்றும் வில்லைக் கொண்டனர். "தென்னவனுயுலகாண்ட செங்கணுர்க்கு அடியேன்" மூக்கீச்சரத்தில் மூவேந்தர் திருப்பணியும் உண்டு போலும்.

4. சாயலாள்-உமையம்மையார். தென்னன்-தென்பாண்டி நாட்டான். செங்கோல் ஏனையிரண்டு மண்டலத்திலும் ஓங்கும் பெருமை நாயனுருக்கு உண்டு என்று உணர்த்துகின்றதால் மும்மண்டலத்தும் ஓங்கும் செங்கோல் என்க. தென்னன் என்பது பாண்டி மண்டலத்துக்கு ஆவதால் ஆகுபெயர்.

5. நஞ்சுடைய பாம்பை அரையில்கட்டிப் பேயொடு நள்ளிருளில் தீயில் நடமாடுவர். வடமன்நீடுபுகழ் - வடக்கில் மிக நீடிய கீர்த்தி. பூழியன் - பாண்டியன். கோழிமன் - உறையூர்க்கிறைவன். அடல்மன் - போர்வேந்தன்.

வெந்தநீறு மெய்யிற் பூசுவராடுவர் வீங்கிருள்
வந்தெனரவ் வளைகொள்வது மிங்கொரு மாயமாம்
அந்தண்மா மானதன்னேரியன் செம்பிய னுக்கிய
எந்தைமூக்கீச் சரத்தடிகள் செய்கின்றதோ ரேதமே. 6

அரையிலாருங் கலையில்லவ னுனொடு பெண்ணுமாய்ப்
உரையிலாரவ் வழலாடுவ ரொன்றலர் காண்மினே
விரவலார்தம் மதின்மூன் றுடன்வெவ்வழ லாக்கினன்
அரையன்மூக்கீச் சரத்தடிகள் செய்கின்றதோ ரச்சமே. 7

ஈர்க்குநீர்ச்செஞ் சடைக்கேற்றதுங் கூற்றை யுதைத்ததும்
கூர்க்குநன்மூ விலைவேல்வல னேந்திய கொள்கையும்
ஆர்க்கும்வாயா னரக்கன் னுரத்தை நெரித்தவ்வடல்
மூர்க்கன்மூக்கீச் சரத்தடிகள் செய்யாநின்ற மொய்ம்பதே. 8

நீருளாரும் மலர்மே லுறைவா னெடுமாலுமாய்ச்
சீருளாருங் கழறேட மெய்த்தீத் திரளாயினன்
சீரிலங் கொளிர்தென்னவன் செம்பியன் வில்லவன்
சேருமூக்கீச் சரத்தடிகள் செய்கின்றதோர் செம்மையே. 9

---

*6. மெய்யில் நீறு பூசுவர், இருளில் ஆடுவர், இங்குவந்து என்வளை கொள்வதும் ஒரு மாயமாம். இத்திருக்கோயில் மூவேந்தரும் வழிபடப்பட்டது என்பதை 3. 9. பாடல்களாலும் அறிக. மானதன்-பகைவரது மானத்தை அழிப்பவன்,மானத்தை உடையவன். நேரியன் என்பவை சோழனையே குறித்தன.*

*7. அரையில் ஆரும் கலையில்லவன் - இடையிற் பொருந்தும் உடையில்லாதவன், திகம்பரன். பெண்ணுமாய் ஆணுமாகி, (பெரிய, தில்லைவாழ்). ஒன்றலர்காண் - பலபலவேடமாகும் பரன், விரவலார் - பகைவர். அரையன் - கோச்செங்கட் சோழ நாயனார்.*

*8. ஈர்க்கும் - இழுக்கும். கூர்க்கும் - கூராக இருக்கும். ஆர்க்கும் - ஆரவாரம் செய்யும்.*

*9. மெய்த்தீத்திரள்:- ஞானத்திரளாய் நின்ற பெருமான் 1-69-3 தென்னவன் - பாண்டியன். வில்லவன் - சேரன் செம்பியன் - சோழன்.*

வெண்புலான்மார்பிடு துகிலினர் வெற்றரையுழல்பவர்
உண்பினலே யுரைப்பார் மொழி யூனமதாக்கினன்
ஒண்புலால்வேன் மிகவல்லவ னேங்கெழிற் கிள்ளிசேர்
பண்பின்முக்கீச் சரத்தடிகள் செய்கின்றதோர் பச்சையே. 10

மல்லையார்மும் முடிமன்னர் மூக்கீச்சரத் தடிகளைச்
செல்வராக நினையும்படி சேர்த்திய செந்தமிழ்
நல்லராய்வாழ் பவர்காழியுண் ஞான சம்பந்தன
சொல்லவல்லா ரவர்வானுல காளவும் வல்லரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*10.* துகில் - ஆடை. வெற்றரை:- ஆடையில்லாமை குறித்தது. உண்பினலே - உண்டபிறகு. மல் - வலிமை.

*11.* மும்முடி மன்னர் - முடிவேந்தர் மூவர். ஞானசம்பந்தன என்று இத்திருப்பாடல்களைக் குறித்தருளினர். சொல்லவும் வல்லார். ஆளவும்வல்லார்.

---

ஞானந் திரளையி லேயுண் டனைஎன்று நாடறியச்
சோனந் தருகுழ லார்சொல் லிடாமுன் சுரும்புகட்குப்
பானந் தருபங் கயத்தார் கொடுபடைச் சால்வழியே
கூனந் துருள்வயல் சூழ்காழி மேவிய கொற்றவனே.

—திருமும்மணிக்கோவை

தாமரை மாதவி சேறிய நான்முகன் தண்பதிபோல்
காமரு சீர்வளர் காழிநன் ஞடன் கவித்திறத்து
நாமரு மாதவர் போல்அழ கீந்துநல் வில்லிபின்னே
நீர்மரு வாத சுரத்தெங்ஙன் ஏகும்மென் னேரிழையே.

—திருமும்மணிக்கோவை

## 121 திருப்பாதிரிப்புலியூர்

### 257 பதிகவரலாறு

செல்வமல்கிய தில்லை மூதூரில் திருநடம் பணிந்து, திருத்தினைநகர் பாடித் திருமாணிகுழியை அணைந்து ஏத்தி, திருப்பாதிரிப்புலியூரை உற்று, முன்னம் மாமுடக்கால் முயற்கு அருள்செய்த வண்ணத்தை மொழிந்து ஏத்திப்பாடிய திருப்பதிகம்.

**பண் - செவ்வழி**

திருச்சிற்றம்பலம்

முன்னநின்ற முடக்கான் முயற்கருள் செய்துநீள்
புன்னைநின்று கமழ் பாதிரிப் புலியூருளான்
தன்னைநின்று வணங்குந் தனைத்தவ மில்லிகள்
பின்னைநின்ற பிணி யாக்கையைப் பெறுவார்களே. 1

கொள்ளிநக்க பகுவாய பேய்கள் குழைந்தாடவே
முள்ளிலவம் முதுகாட் டுறையும் முதல்வனிடம்
புள்ளினங்கள் பயிலும் பாதிரிப் புலியூர் தனை
உள்ள நம்மேல் வினையாயின வொழியுங்களே. 2

மருளினல்லார் வழிபாடு செய்யும் மழுவாளர்மேல்
பொருளினல்லார் பயில் பாதிரிப் புலியூருளான்
வெருளின்மானின் பிணை நோக்கல்செய்து வெறிசெய்தபின்
அருளியாகத் திடைவைத் ததுவும் மழகாகவே. 3

---

1. முடக்கால் முயற்கு அருள்செய்து:- இத்தலத்தில் முற்காலத்தில் முடங்கிய காலொடு முயலாகும் சாபம்பெற்ற மங்கணமுனிவர் அச்சாபம் நீங்கப்பெற்ற வரலாற்றைக் குறிப்பது. சிவபிரானை வழிபடும் தவம் வாய்க்கப்பெறாதவர்கள் பிணியுடைய உடம்பொடு வருந்துவர்.

2. முதல்வனது திருப்பாதிரிப்புலியூரை நினைத்து வழிபட்டு வினைகளை ஒழியுங்கள். (நுணுகுங்கள் பா. 8.)

3. மருள் இல் நல்லார் - மயக்கமற்றஞானிகள். மேல் பொருள் இல்நல்லார் - தனக்குமேல் ஒரு பொருள் இல்லாத சிவனார். அம்மையப்பரான உண்மை குறித்தது.

போதினாலும் புகையாலு முய்த்தே யடியார் கடாம்
போதினாலே வழிபாடு செய்யப் புலியூர் தனுள்
ஆதிநாலும் மவலம் மிலாதவடி கண்மறை
ஓதிநாளும் மிடும்பிச்சை யேற்றுண் டுணப்பாலதே. 4

ஆகநல்லா ரமுதாக்க வுண்டா னழலைந்தலை
நாகநல்லார் பரவந்நயந் தங்கரை யார்த்தவன்
போகநல்லார் பயிலும் பாதிரிப் புலியூர் தனுள்
பாகநல்லா ளொடுநின்ற வெம்பர மேட்டியே. 5

மதியமொய்த்த கதிர்போ லொளிம்மணற் கானல்வாய்ப்
புதியமுத்தந் திகழ் பாதிரிப் புலியூரெனும்
பதியில்வைக்கப் படுமெந்தை தன்பழந் தொண்டர்கள்
குதியுங்கொள்வர் விதியுஞ் செய்வர் குழகாகவே. 6

கொங்கரவப் படுவண் டறைகுளிர் கானல்வாய்ச்
சங்கரவப் பறையின் னொலியவை சார்ந்தெழப்
பொங்கரவம் முயர் பாதிரிப் புலியூர்தனுள்
அங்கரவம் மரையில் லசைத்தானை யடைமினே. 7

---

4. போது - புஷ்பம். போதினால் - விதித்த காலங்களில். நாலும் - நான்கும். தொங்கும். பிச்சைக்குச் செல்லும்போதும் வேதம் ஓதிய உண்மையுணர்க. உண்டு உணப்பாலது என்பதை ஆராய்தல் வேண்டும்.

5. உமாதேவியார் அமுதாக்கிக் கொடுக்க நஞ்சை யுண்டான். நல்லோர் பரவ நச்சு வெப்பத்தையுடைய ஐந்தலைப் பாம்பை விரும்பி அரையிற்கட்டியவன். போகமாதர் பயிலும் புலியூர்.

6. மணல்நிலாப்போல் ஒளிர்கின்றது. பழந்தொண்டர்கள் அழகாக ஆனந்தக்கூத்தும் ஆகமவிதியும் செய்வர்.

7. பூந்தாதுகளில் ஒலிசெய்யும் வண்டுகள். சங்கொலி, பறையின் ஒலி. பாம்பரை யார்த்த பரமனை அடையுங்கள்.

வீக்கமெழும் மிலங்கைக் கிறை விலங்கல்லிடை
ஊக்கமொழிந் தலறவ் விரலிறை யூன்றினுன்
பூக்கமழும் புனற் பாதிரிப் புலியூர்தனே
நோக்கமெலிந் தணுகா வினை நுணுகுங்களே. 8

அன்னந்தாவும் மணியார் பொழின் மணியார்புன்னை
பொன்னந்தாது சொரி பாதிரிப் புலியூர்தனுள்
முன்னந்தாவி யடிமூன் றளந்தவன் ளுன்முகன்
தன்னந்தாளுற் றுணராத தோர் தவநீதியே. 9

உரிந்தகூறை யுருவத்தொடு தெருவத்திடைத்
திரிந்துதின்னுஞ் சிறுநோன்பரும் பெருந்தேரரும்
எரிந்துசொன்னவ் வுரைகொள்ளாதே யெடுத்தேத்துமின்
புரிந்தவெண்ணீற் றண்ணல் பாதிரிப் புலியூரையே. 10

அந்தணல்லா ரகன் காழியுண் ஞானசம்
பந்தனல்லார் பயில் பாதிரிப் புலியூர் தனுள்
சந்தமாலைத் தமிழ்பத்திவை தரித்தார்கண்மேல்
வந்துதீயவ் வடையாமை யால்வினை மாயுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

3. வீக்கம் - பெருமை. விலங்கல் - கைலை, இறை - சிறிது. நோக்க - நோக்குதலால் - வினைமெலிந்து. அணுகா நுணுகுங் கள் (ஒழியுங்கள் பா 2.)

9. புன்னை பொன்போலும் தாதுக்களைச்சொரியும் உண்மை - திருமுறையில் முதற்பாட்டில் உணர்த்தப் பட்டது. முன்னம்...அளந்தவன் - திருவிக்கிரமன். தன்னம் - அற்பம். திருவடியாக் கொள்ளின் இனம்பற்றித் திருமுடியும் கொள்ளப்படும்.

10. உரிந்த...நோன்பர் - ஆடையின்றித் தெருவில் திரிந்து தின்னும் அற்பவிரதத்தையுடையவர் என்னும் சமணர். எரிந்து சொன்ன உரை .- ''எரிவினுற்சொன்ஞர்''

11. அம்தண்நல்லார் - அந்தணர். நல்லார் - பெண்டிர். சந்தம் - பண்ணிசை. தீமை உடையவை சேராமையால் வினைகள் ஒழியும்.

# 122 திருப்புகலி

## 258 பதிகவரலாறு

137 ஆவது பதிகத் தலைப்பிற் காண்க.

பண் - செவ்வழி

திருச்சிற்றம்பலம்

விடையதேறி வெறியக் கரவார்த்த விமலனூர்
படையதாகப் பரசு தரித்தார்க் கிடமாவது
கொடையிலோவார் குலமும் முயர்ந்தம் மறையோர்கடாம்
புடைகொள்வேள்விப் புகையும்பருலாவும் **புகலியே**. 1

வேலைதன்னின் மிருநஞ்சினை யுண்டிருள் கண்டனூர்
ஞாலமெங்கும் பலிகொண் டுழல்வார் நகராவது
சாலநல்லார் பயிலும் மறைகேட்டுப் பதங்களைச்
சோலைமேவுங் கிளித்தான் சொற்பயிலும் புகலியே. 2

---

1. ஆர்த்த - கட்டிய. விமலனூர் - இயல்பாகவே பாசங்கள் இல்லாதவர். அநாதிமலமுத்தர். பரசு - மழு. புடை - பக்கம். வேள்வி - யாகம். உம்பர் - ஆகாயம். கலை நிலவிய புலவர்களிடர்களைதரு கொடை பயில்பவர். (1. 20. 3.) புகலி - புகலடைந்த காரணம் பற்றிய பெயர் 'அமரர் புகலால் மலிந்தபூம் புகலிமேவிய புண்ணியனே'. 1. 63. 3.)

2. வேலை - பாற்கடல். உண்டு என்னும் வினையெச்சம் இருள் என்னும் வினைப்பகுதிகொண்டது. இருள்கண்டனூர் - இருண்ட திருக்கழுத்தினையுடையவர். ஞாலம் - பூமி, உலகம். நாலம் என்பதன் மரூஉ. உழல்வார் - திரிபவர். நல்லார் சாலப்பயிலும் மறை என்க. சால நல்லார் என்றே கொள்ளலுமாம். கிளிகள் நல்லார் பயிலும் மறை(யைக்) கேட்டுப் பதங்களைச் சொற்பயிலும் என்க. 'கிளித்தான்' என்பது, 'வேற்றுமையல்வழி' (தொல். தொகைமரபு. 16) என்னுஞ் சூத்திரத்தின்படி வல்லெழுத்து மிக்கது.'

வண்டுவாழுங் குழன்மங்கையோர் கூறுகந்தார்மதித்
துண்டமேவுஞ் சுடர்த்தொல் சடையார்க் கிடமாவது
கெண்டைபாயு மடுவில் லுயர்கேதகை மாதவி
புண்டரீகம் மலர்ப்பொய்கை நிலாவும் புகலியே. 3

திரியுமூன்று புரமும் மெரித்துத் திகழ்வானவர்க்
கரியபெம்மா னரவக் குழையார்க் கிடமாவது
பெரியமாடத் துயருங் கொடியின் மிடைவால்வெயிற்
புரிவிலாத தடம்பூம் பொழில்சூழ் தண்புகலியே. 4

ஏவிலாருஞ் சிலைப்பார்த் தனுக்கின் னருள்செய்தவர்
நாவினுண்மூக் கரிவித்த நம்பர்க் கிடமாவது
மாவிலாருங் கனிவார் கிடங்கில் விழவாளைபோய்ப்
பூவிலாரும் புனற்பொய்கையில் வைகும் புகலியே. 5

---

3. மங்கை - உமாதேவியார். அவர் குழலில் வண்டுகள் வாழும் என்றது சாதியடை. மதித்துண்டம் - பிறை. 'திங்கட் பிளவு.' சுடர்ச்சடை, தொல்சடை என்க. தொல்சடை என்னும் பண்புதொகுமொழி, சுடர் என்னும் அடைகொண்டதாதலின், சுடரை (-ஒளியை) உடைய தொல்சடை எனவிரிக்க. தொல்சடை என்பதைப் பிரித்துப் புணர்ச்சி விதி கூறலாகாது என்பதை, 'ஐம்பாலறியும் பண்பு தொகுமொழியும் ... ... ... தொழில் தொகுமொழியும் ... ... பிறவும்' ... ... மருவின் பாத்திய, புணரியல் நிலையிடை உணரத்தோன்று' என்ற தொல்காப்பியச் சூத்திரத்தால் (எழுத்து. 482) உணர்க. கேதகை - தாழை. மாதவி - குருக்கத்திக்கொடி. புண்டரீகம் - தாமரை. பொய்கை - மாநுடராக்காத நீர்நிலை (சிந்தாமணி. 337.)

4. 'அளவறுப்பதற்கு அரியவன் இமையவர்க்கு' (திருவாசகம். 37) அரவக்குழையார் - சர்ப்ப குண்டலம் அணிந்தவர். மிடைவால் - நெருக்கத்தால், வெயில் புரிவு இலாத - வெயிலைச் செய்தலின்றி நிழலைச் செய்தலுடைய. தட - பெரிய. பூம் பொழில் - மலர்க்கா.

5. நாவினுள் - நாமகள். மூக்கு அரிவித்த நம்பர் - மூக்கினை அரியச்செய்த சிவபிரானுர், தக்கயாக சங்காரத்தில்

தக்கன்வேள்வி தகர்த்த தலைவன் றையலாளொடும்
ஒக்கவேயெம் முரவோ னுறையும் மிடமாவது
கொக்குவாழை பலவின் கொழுந்தண் கனிகொன்றைகள்
புக்கவாசப் புன்னை பொன்றிரள் காட்டும்புகலியே. 6

* * * * 7

தொலைவிலாத வரக்கன் னுரத்தைத் தொலைவித்தவன்
தலையுந்தோளுந் நெரித்த சதுரர்க் கிடமாவது
கலையின்மேவும் மனத்தோ ரிரப்போர்க்குக் கரப்பிலார்
பொலியுமந்தண் பொழில் சூழ்ந்தழ காரும்புகலியே. 8

கிண்டுபுக்கார் பறந்தே யுயர்ந்தார் கேழலன்னமாய்க்
காண்டுமென்றார் கழல்பணிய நின்றார்க் கிடமாவது
நீண்டநாரை யிரையாரல் வாரநிறை செறுவினிற்
பூண்டுமிக்கவ் வயல்காட்டு மந்தண் புகலியதே. 9

---

வீரபத்திரர் அரிந்தார். சுருதியான் தலையும் நாமகள் மூக்கும் ... இறுத்த அவர்கட்கு அருளும் பிரமனூர்' (3. 118. 5) நம்பர் - உயிர்களின் விருப்பிற்குரியர், விருப்பாயிருப்பவர். மாவில் ஆரும் கனி - மாமரத்தில் நிறைந்த பழங்கள். வார்கிடங்கில் - நீண்ட அகழியில். விழ - விழலால். வாளைபோய்ப் பொய்கையில் வைகும் என்க.

6. தக்கன் - தக்ஷன். தகர்த்த - அழித்த. தையலாள் - உமாதேவியார். கொக்கு - மாமரம். புன்னைகள் பொன் போலப் பூக்கும். திரள் என்பது இங்குத் திரட்சி என்னும் பொருளதாயிற்று.

8. தொலைவு - தோல்வி. உரத்தை - வலியை. மார்பை எனலுமாம். தொலைவித்து - ஒழித்து, அவன் தலையும் தோளும் நெரித்த சதுரர் என்க. சதுரர்க்கு - மூவர்க்கும் மேலாய முதல்வர். கலை - வேதாகம புராணேதிகாசாதி கலைகள். மனத்தோர் - உள்ளத்தையுடைய அந்தணர், கரப்பு இலார் - மறைத்தலில்லாமல் ஈந்துவப்பவர். கரப்பு - மறைப்பு. பொலியும் - விளங்கும். அம் - அழகு. (அழகு) ஆரும் - நிறையும்.

9. கிண்டு-(நிலத்தைப்) பிளந்து. திருமால் செயல். கேழல் - பன்றி. காண்டும் - காண்போம், பறந்துயர்ந்தார்.

தடுக்குடுத்துத் தலையைப் பறிப்பாரொடு சாக்கியர்
இடுக்கணுய்ப்பா ரிறைஞ்சாத வெம்மாற் கிடமாவது
மடுப்படுக்குஞ் சுருதிப்பொருள் வல்லவர் வானுளோர்
அடுத்தடுத்துப் புகுந்தீண்டு மந்தண் புகலியதே. 10

எய்தவொண்ணு விறைவன் னுறைகின்ற புகலியைக்
கைதவமில்லாக் கவுணியன் ஞான சம்பந்தன்சீர்
செய்தபத்துமிவை செப்பவல்லார் சிவலோகத்தில்
எய்திநல்ல விமையோர்க ளேத்த விருப்பார்களே. 11

திருச்சிற்றம்பலம்

---

பிரான் திருவடிகளை. பணிய - பணிந்து வழிபட. நின்றூர்க்கு - நின்ற சிவபெருமானுக்கு, நாரைக்கு இரையாகிய ஆரல் மீன்கள் ஒழுகியோட, நிறைந்த செறு. செறு - சேறு. மிக்க வயல் என்பது சந்தம் நோக்கி விரித்தல் விகாரமுற்றது.

10. பறிப்பார் - சமணர். உய்ப்பார் - செலுத்துவார், உண்டாக்குவார் என்றவாறு. இறைஞ்சாத - தலைவணங்காத. வணங்கப்பெருமை எம்மானது. மடுப்படுக்கும் - (வைகறையில் நீர்) மடுவில் குளிக்கும். சுருதிப்பொருள் - வேதார்த்தம். வல்லவர் - வல்ல அந்தணர். மடுப்பு அடுக்கும் எனப் பிரித்து, உட்கொள்ளுதலைப் பொருந்தும் என்று கொண்டு, சுருதிப் பொருளையுட்கொண்டு என்க. வான் உளோர்-தேவர். பூதேவரும் மாதேவரும் அடுத்து அடுத்துப் புகுந்து ஈண்டும் புகலி.

11. எய்த ஒண்ணுத இறைவன் - பாசஞானத்தாலும் பசு ஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரன்! (சித்தியார் சூ. 9) "இமையோர் கூட்டம் எய்துமாறு அறியாத எந்தாய்" (திருவாசகம். திருச்சதகம். 24.) உறைகின்ற - திருக்கோயில்கொண்டு (கடல் கொண்ட கடை நாளிலும்) அடியார்க்கு அருளற்பொருட்டு எழுந்தருளியுள்ள. கைதவம் - வஞ்சகம். நல்ல இமையோர்கள் - சிவலோகத்தை அடையச் சிவபுண்ணியம் செய்த நன்மையையுடைய தேவர்கள். ஏத்த - எடுத்துப் புகழ்ந்து வழிபட, இருப்பார்களே - பேரின்பம் நுகர்ந்து அழியாதிருந்து விளங்கும் சாலோகமான பத முத்தியடைந்தாரேயாவர்.

---

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம் இருபத்தைந்தாவது குருமகாசந்நிதானம் **ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்** அருளாணையின்வண்ணம் **இரண்டாவது திருமுறைக்கு,** ஆதீனப்புலவர் சித்தாந்தரத்நாகரம் முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் எழுதிய குறிப்புரை முற்றிற்று.

## இரண்டாவது திருமுறை

# பாட்டு முதற்குறிப்பகராதி



உ

குருபாதம்

# ஆதீன வெளியீடுகள்

| எண் | | வருஷம் |
|---|---|---|
| 1 | குருஞானசம்பந்த சுவாமிகள் தாலாட்டு சமூகமாலை முதலியன | 1924 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1944 |
| 2 | நித்திய கன்மநெறி (மூலம்) | 1927 |
| 3 | திருமுல்லைவாயிற்புராணம் | ,, |
| 4 | திரிபதார்த்தரூபாதி தசகாரிய அகவல் | ,, |
| 5 | சித்தாந்தநிச்சயம் | 1928 |
| 6 | சம்பிரதாயதீபம் | ,, |
| 7 | வருணாச்சிரம சந்திரிகை (வடமொழி) | 1930 |
| 8 | சிகாரத்தினமாலை | ,, |
| 9 | திருப்பதிகமும் பஞ்சரத்தினமும் | ,, |
| 10 | தசமணிமாலை | ,, |
| 11 | ஞானசம்பந்த குருராயவட்டகமும் சந்திரகலாமாலையும் | ,, |
| 12 | திருவையாற்றுப் புராணம் | ,, |
| 13 | சிவானந்தபோதசாரம் | 1931 |
| 14 | சோடசகலாப் பிராசாத ஷட்கம் | ,, |
| 15 | சைவசந்யாச பத்ததி (வடமொழி) | 1932 |
| 16 | சிவபோகசாரமும், சொக்கநாத வெண்பாவும் ஆங்கிலத்துடன் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1936 |
| | ,, (மூன்றாம் பதிப்பு) | 1950 |
| | ,, (நான்காம் பதிப்பு) | 1953 |
| 17 | சிவப்பிரகாசக்கட்டளை ஆங்கிலத்துடன் | 1932 |
| | (இரண்டாம் பதிப்பு) | 1939 |

| எண் | | வருஷம் |
|---|---|---|
| 18 | 23-வது மகாசந்நிதானத்தின்மீது பலர் பாடிய தோத்திரப் பாடல்கள் | 1933 |
| 19 | திருத்துருத்திப் புராணம் மூலமும் வசனமும் | ,, |
| 20 | ஞானசரிதை | 1934 |
| 21 | முத்திநிச்சயம் சிற்றுரையுடன் | ,, |
| 22 | அறிவானந்த சமுத்திரம் | 1935 |
| 23 | பண்டாரமும்மணிக்கோவை குறிப்புரையுடன் | 1937 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1953 |
| 24 | இந்துமத பாலபாடம் | 1937 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1949 |
| | ,, (மூன்றாம் பதிப்பு) | 1953 |
| 25 | சிதம்பரச் செய்யுட்கோவை உரையுடன் | 1937 |
| 26 | திருவையாற்றுத் தலமகிமைச் சுருக்கம் | ,, |
| 27 | கிளிவிடுதூது | 1938 |
| 28 | திருமூலைப்பால் சிறப்பு | 1939 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1941 |
| 29 | பதி பசு பாசத்தொகை | 1940 |
| 30 | ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிகர் நான்மணிமாலை | ,, |
| 31 | திருபுவனத் தலமகிமைச் சுருக்கம் | ,, |
| 32 | கீர்த்தித் திருவகவல் | 1941 |
| 33 | ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள் வரலாறும் பாசுரங்களும் | ,, |
| 34 | வைத்தீசுவரன்கோயில் தேவாரம் திருப்புகழ் | ,, |
| 35 | திருத்தொண்டத் தொகையும் அசபாநடனப் பதிகமும் | ,, |
| 36 | குங்குலியக்கலய நாயனார் அன்பின்திறம் | ,, |
| 37 | திருக்கடவூர்த் தேவாரம் திருப்புகழ் | ,, |
| 38 | திருவையாற்றுத் தேவாரம் திருப்புகழ் | ,, |
| 39 | புள்ளிருக்குவேளூர்ப் புராணம் | ,, |
| 40 | சித்தாந்த சைவ வினாவிடை | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1953 |
| 41 | நால்வர் சரித்திரமும் அற்புதத் தேவாரத் திரட்டும் | 1941 |

| எண் | | வருஷம் |
|---|---|---|
| 42 | ஆச்சாள்புரத் தலவரலாறு | 1941 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1943 |
| 43 | திருவையாற்றுத் தலவரலாறு | 1941 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1943 |
| | ,, (மூன்றாம் பதிப்பு) | 1948 |
| 44 | சுப்பிரமணியர் திருவவதாரமும் கந்தர்கலிவெண்பாவும் | 1941 |
| 45 | தருமபுர ஆதீனம் மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு | ,, |
| 46 | சிவபூஜாவிதி | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1953 |
| 47 | சைவானுட்டானவிதி | 1941 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1953 |
| 48 | திருக்கடவூர் உலா குறிப்புரையுடன் | 1941 |
| 49 | திருப்பாடல்கள் | 1942 |
| 50 | விநாயகர் அகவல்கள் | ,, |
| 51 | சீகாழித் தலவரலாறு | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1950 |
| 52 | மெய்கண்ட சாத்திரம் மூலம் | 1942 |
| 53 | திருக்கற்குடித் தலவரலாறு | 1943 |
| 54 | நீதிநெறிவிளக்கம் உரைவளத்துடன் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1949 |
| 55 | திருவாரூர் நான்மணிமாலை மூலமும் வசனமும் | 1943 |
| 56 | சகலகலாவல்லிமாலை உரையுடன் | ,, |
| 57 | கந்தரனுபூதி | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1945 |
| 58 | குத்தாலத் தலவரலாறு | 1943 |
| 59 | திருக்குறுக்கைத் தலவரலாறு | ,, |
| 60 | திருபுவனம் தலவரலாறு | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1948 |
| 61 | திருக்கடவூர்த் தலவரலாறு | 1943 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1954 |
| 62 | புள்ளிருக்குவேளூர்த் தலவரலாறு | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1949 |

| எண் | | வருஷம் |
|---|---|---|
| 63 | திருப்பனந்தாள் தலவரலாறு | 1943 |
| 64 | 24-வது மகாசந்நிதானம் பத்தாண்டு ஆட்சிமலர் | ,, |
| 65 | அப்பர் சுவாமிகள் புராணம் C. K. S. விரிவுரையுடன் | 1944 |
| 66 | மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு திருமுறைத் திருநாள் நிகழ்ச்சிகள் | ,, |
| 67 | சிவஞானபோதச் சூத்திரக் கட்டுரை | ,, |
| 68 | ஞானசம்பந்தர் வழங்கிய ஞானவுரை | 1945 |
| 69 | சிவப்பிரகாசம் ஆங்கில மொழிபெயர்ப்புடன் | ,, |
| 70 | தருமபுர ஆதீன நூல்நிலையப் புத்தகப்பட்டி | ,, |
| 71 | புள்ளிருக்குவேளூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1946 |
| 72 | பஞ்சாவரணதோத்திரங்கள் | 1945 |
| 73 | சிதம்பரத்துத் திருப்பதிகங்கள் | ,, |
| 74 | தக்ஷிணாமூர்த்தி திருவருட்பா | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | ,, |
| 75 | திருவேட்களத் திருப்பதிகங்கள் | ,, |
| 76 | திருநெல்வாயில் திருப்பதிகம் | ,, |
| 77 | திருக்கழிப்பாலைத் திருப்பதிகங்கள் | ,, |
| 78 | திருநாரையூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 79 | தருமபுர ஆதீன ஆவணிமூலத் திருநாள் | ,, |
| 80 | ஆச்சாள்புரத் திருப்பதிகம் | ,, |
| 81 | திருமயேந்திரப்பள்ளித் திருப்பதிகம் | ,, |
| 82 | திருத்துருத்தித் திருப்பதிகங்கள் | ,, |
| | (இரண்டாம் பதிப்பு) | 1946 |
| 83 | திருமங்கலக்குடித் திருப்பதிகங்கள் | 1945 |
| 84 | திருக்கோளிலித் திருப்பதிகங்கள் | ,, |
| 85 | திருக்கடவூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1946 |
| 86 | சிவஞானபோதம் ஆங்கிலமொழிபெயர்ப்புடன் | 1945 |
| 87 | சோமவார விரதம் | |
| 88 | திருநீறு — முதற்பதிப்பு | ,, |
| 89 | உருத்திராக்கம் — இரண்டாம் பதிப்பு | 1949 |
| 90 | ஐந்தெழுத்து — மூன்றாம் பதிப்பு | 1953 |

| எண் | | வருஷம் |
|---|---|---|
| 91 | கந்தர்சட்டி விரதச்சிறப்பு திருமுருகாற்றுப்படையுடன் | 1946 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1949 |
| 92 | திருவருட்பயன் ஆங்கில மொழிபெயர்ப்புடன் | 1946 |
| 93 | தென்திருமுல்லைவாயில் திருப்பதிகம் | ,, |
| 94 | ஸ்ரீ ஆண்டாள் திருப்பாவை | 1946 |
| 95 | திருக்கலிக்காமூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 96 | தருமபுர ஆதீனப் பாடசாலைகளின் நிர்ணயவிதிகள் | ,, |
| 97 | திருநெல்வேலித் திருப்பதிகம் | ,, |
| 98 | திலகவதியார் (உரைநடை) | ,, |
| 99 | சீகாழித் திருப்பதிகங்கள் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1948 |
| 100 | திருக்கோலக்கா திருப்பதிகம் | 1946 |
| 101 | திருக்குருக்காவூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 102 | திருச்சாய்க்காட்டுத் திருப்பதிகம் | ,, |
| 103 | திருப்பல்லவனீச்சரத் திருப்பதிகம் | ,, |
| 104 | திருவெண்காட்டுத் திருப்பதிகங்கள் | ,, |
| 105 | கீழைத்திருக்காட்டுப்பள்ளித் திருப்பதிகம் | ,, |
| 106 | சித்தாந்தத்திரயம் ஆங்கிலமொழிபெயர்ப்புடன் | ,, |
| 107 | ஸ்ரீகண்டன் ஓர் சிறு நாடகம் | ,, |
| 108 | திருமுலைப்பால் திருவிழாச் சிறப்பு | ,, |
| 109 | முத்திநிச்சயப்பேருரை என்னும் வெள்ளியம்பலவாணமாபாடியம் | 1947 |
| 110 | மிருகேந்திரம் தமிழ் மொழிபெயர்ப்புடன் | 1946 |
| 111 | நடராஜ சதக | ,, |
| 112 | உண்மைவிளக்கம் ஆங்கிலமொழிபெயர்ப்புடன் | ,, |
| 113 | திருக்கண்ணார்கோயில் திருப்பதிகம் | ,, |
| 114 | சுவாமிநாதசுவாமி தோத்திரங்கள் | ,, |
| 115 | திருநள்ளாற்றுத் திருப்பதிகங்கள் | ,, |
| 116 | திருக்கடைமுடித் திருப்பதிகம் | ,, |
| 117 | திருப்பறியலூர் திருப்பதிகம் | ,, |

| எண் | | வருஷம் |
|---|---|---|
| 118 | திருவிளநகர்த் திருப்பதிகங்கள் | 1946 |
| 119 | திருமின்றியூர்த் திருப்பதிகம் | ,, |
| 120 | திருஆக்கூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 121 | திருக்கடவூர்மயானத் திருப்பதிகங்கள் | ,, |
| 122 | மாயூரத் திருப்பதிகங்கள் | ,, |
| 123 | திருநீடூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 124 | திருப்புன்கூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 125 | திருஅன்னியூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 126 | திருத்தருமபுரத் திருப்பதிகம் | ,, |
| 127 | ஆலயவழிபாடு: தோத்திரங்களுடன் | ,, |
| 128 | திருவேள்விக்குடித் திருப்பதிகங்கள் | 1947 |
| 129 | திருஎதிர்கொள்பாடித் திருப்பதிகம் | ,, |
| 130 | திருமயிலாப்பூர்த் திருப்பதிகம் | ,, |
| 131 | திருஒற்றியூர்த் திருப்பதிகம் | ,, |
| 132 | திருஞானசம்பந்தர் புராணம் முதல் நூறுபாடல்கள் C. K. S. விரிவுரையுடன் | ,, |
| 133 | திருமணஞ்சேரித் திருப்பதிகங்கள் | |
| 134 | இருபா இருபஃது ஆங்கில மொழிபெயர்ப்புடன் | ,, |
| 135 | திருக்குறுக்கைத் திருப்பதிகம் | ,, |
| 136 | தருமபுர ஆதீனப் பாடசாலை ஆறுவது ஆண்டு அறிக்கை | ,, |
| 137 | திருக்கருப்பறியலூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 138 | 25-வது மகாசந்நிதானம் முதலாண்டு ஆட்சி அறிக்கை | ,, |
| 139 | திருக்குரக்குக்காத் திருப்பதிகம் | ,, |
| 140 | திருஅஞ்சைக்களத் திருப்பதிகம் | ,, |
| 141 | திருப்பழமண்ணிப்படிக்கரைத் திருப்பதிகம் | 1947 |
| 142 | திருவாழ்கொளிப்புத்தூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 143 | திருஓமாம்புலியூர்த் திருப்பதிகம் | ,, |
| 144 | சிவபோகசாரம் விரிவுரையுடனும் ஆங்கில மொழிபெயர்ப்புடனும் | ,, |
| 145 | திருக்கானாட்டுமுள்ளூர்த் திருப்பதிகம் | ,, |

| எண் | | வருஷம் |
|---|---|---|
| 146 | துள்ளிவருகுது வேல் | 1947 |
| 147 | திருக்கடம்பூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 148 | திருஅவிநாசித் திருப்பதிகம் | ,, |
| 149 | திருமுருகன்பூண்டித் திருப்பதிகம் | ,, |
| 150 | திருவெம்பாவைத் திருப்பதிகம் விளக்கத்துடன் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1951 |
| 151 | திருவலஞ்சுழித் திருப்பதிகங்கள் | ,, |
| 152 | 25-வது மகாசந்நிதானம் இரண்டாவதாண்டு ஆட்சி அறிக்கை | 1948 |
| 153 | திருப்பந்தணைநல்லூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 154 | திருக்கஞ்சனூர்த் திருப்பதிகம் | ,, |
| 155 | திருக்கோடிக்காத் திருப்பதிகங்கள் | ,, |
| 156 | திருவாப்பாடித் திருப்பதிகம் | ,, |
| 157 | சிவஞான சித்தியார் சுபக்கம் ஆங்கில மொழிபெயர்ப்புடன் | ,, |
| 158 | அபிராமி அந்தாதி விரிவுரையுடன் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1953 |
| 159 | திருச்சேய்ஞ்ஞலூர்த் திருப்பதிகம் | 1948 |
| 160 | தருமபுர ஆதீனப் பண்டாரசாத்திரம் முதல் தொகுதி | ,, |
| 161 | நல்வழி | 1948 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1953 |
| 162 | சுவாமிநாதன் பிரபாவம் | 1948 |
| 163 | திருந்துதேவன்குடித் திருப்பதிகம் | ,, |
| 164 | இன்பம் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | ,, |
| | ,, (மூன்றாம் பதிப்பு) | 1953 |
| 165 | அறுபத்துமூவர் | 1948 |
| 166 | திருவியலூர்த் திருப்பதிகம் | ,, |
| 167 | மெய்கண்ட நூற்பொருட் சிறப்பு | ,, |
| 168 | திருக்கொட்டையூர்த் திருப்பதிகம் | ,, |
| 169 | திருஇன்னம்பர் திருப்பதிகம் | ,, |
| 170 | பழநி ஸ்ரீ தண்டாயுதபாணி தோத்திரங்கள் | ,, |

